## பன்னீராயிரப்படி

அநந்தரம், இத்தோஷந்தோடே யிருக்கச்செயதே அதுநெஞ்சிற்படாதபடி அவன்ப்ரகாசிப்பித்த விலக்ஷணவிக்ரஹத்தை யநுபவிக்கப்பெறறே னென்கிறார்.

புறம்-புறம்பொருதலே. அற-தெரியாதபடி. கட்டிக்கொண்டு-பந்தித்துக்கொண்டு. இரு-புண்யபாபரூபமானவிருவகையையுமுடைய. வல்-ப்ரபலமான. வினையார்-கர்மத்தினர். குமைக்கும்-பீடிக்கைக்குஸ்த்தலமாய். முறைமுறை-தேவாதிக்ரமவிசிஷ்டமான. ஆக்கை-சரீரத்திலே. புகல்-பஹுப்ரகாரமானப்ரவேசத்தை. ஒழிய-தவிரும்படியாக. நிறம்-தர்சநீயமானவேஷத்தை. உடை-உடைத்தாய். நால்-நாலுவ்கையாய். தடம்-சுற்றுடைத்தான. தோள்-தோள்களேயும். செய்ய-சிவந்த. வாய்-திருப்பவளத்தையும். செய்ய-சிவந்த. தாமரை-தாமரைபோன்ற. கண்-கண்களேயும். அறம்-ரக்ஷணதர்மத்தில். முயல்-உத்யுக்தமான. ஆழி-திருவாழியையுடைத்தாகையாலே. அம்-பேரழகுடைய கை - திருக்கையையுமுடைத்தாய். கரு-ஶ்யாமளமான. மேனி-வடிவையுடைய. அம்மான்றன்னை - சேஷியானவனே. கண்டுகொண்டொழிந்தேன்-என்னிழவெல்லாம்தீரும்படி அபரோக்ஷிந்த்தநுபவித்துவிட்டேன்.

ஆந்தரமான விக்ரஹாநுபவப்ரீதி "இச்சரீரஸம்பந்தம்எமக்கில்லை" என்கிறப்ரதிபத்தியைப் பிறப்பித்ததென்றுகருத்து.... . . . ... . . .. . .. ...."

## ஈடு - ஆறும்பாட்டு

"போரவைத்தாயபுறமே" என்று-இவர்நொந்தவாறே, "இவருடையவிழவை மறப்பித்துவாராகில் நடததவேணும" என்றுபார்த்துத்தன் வடிவழகைக்காட்ட, அவ்வடிவழகைக் கண்டவாறே தமமுடம்பைமறந்து ப்ரீதராய், கண்டுகொண்டேனென்கிறார். இவரை மெய்ம்மறக்கப் பண்ணிற்றவன்வடிவு.

( புறமறககட்டிகொண்டு ) பிணைத்தவிடமறிந்து இவனுலவிழ்த்துக்கொள்ள வொண்ணாதபடியாக, புசங்தோற்றுதபடி உள்முடியாக முடிந்து. [ ஜைமாயாது-ரத்யயா ] ( மமமாயாதுரத்யயா ) சர்வசக்தியான நான்பிணைத்தபிணை யொருவராலவிழ்கக வொண்ணாதென்றனிறே. ( இருவல்வினையாரித்யாதி ) இருவகைப்பட்ட மஹாபாபம்தகாக்கும். ( வினையாரொன்கிறது-அவறறுல நெருக்குண்கிறபடியைக்கண்டு சொல்லிற்றுதல் ; அவைதாம் பலவகையாகையாலே-பஹுவசநமாதல் ) ( குமைக்கும்முறைமுறையாக்கை ) புண்யத்துககென்று தேவசரீரத்தைப்ரவேசியா, பாபத்துககென்று திர்யகாதிசரீரத்தைப்ரவேசியா, உபயத்தாலுமென்று மநுஷ்யசரீரத்தை ப்ரவேசியாப் படும்பாட்டுக்கொரு முடிவில்லையிறே. திறந்துகிடந்த வாசல்தோறும்நுழைந்து திரியும்பதார்த்தம்போலே, கர்மாநுகுணமாக தேவாதிசரீரங்கள்தோறும் ப்ரவேசித்துத் திரியும். ( புகலொழிய ) புகுகைதவிர. ஜ்ஞாநாநந்த லக்ஷணமானவஸ்துவிறே உபசயாத்மகமாய் அஸ்த்திரமான சரீரத்திலேயகப்பட்டு நோவுபடுகிறது, அதுதவிர. ( கண்டுகொண்டொழிந்தேன் ) உத்தேஶ்யவஸ்

துவைக் கண்டநுபவிக்கப்பெற்றேன். சரீரப்ரவேசம் தவிர்ந்தேன். ( நிற முடையித்யாதி ) " ஸவ-ஜூஷண-ஜூஷாஹ-ா: " ( சர்வபூஷண பூஷார்ஹா: ) என்கிறபடியே ஆபரணத்துக் காபரணமாய், நாலாய், சுற் றுடைத்தான திருத்தோள்களை யுடையனாய் ; " ஸவிலாஸஸ்மிதாதாரம் பிஹ்ராணம்முகபங்கஜம் " ( ஸவிலாஸஸ்மிதாதாரம்பிப்ராணம்முகபங் கஜம் ) என்கிறபடியே – " முறுவலெடுத்தகலம் " என்னும்படி திருமு கத்தைச் செவ்விபெறுத்தாநின்றுள்ள ஸ்மிதத்தையும், இழவுமறக்கும்ப டி குளிரக்கடாக்ஷிக்கிற திருக்கண்களையுமுடையனாய் ; தன்னிலுமாஸ்ரி த ரக்ஷணமாகிற பரமதர்மத்திலே முயலாநின்றுள்ள திருவாழியையு டைய அழகியதிருக்கையையும், அதுக்குத்தப்பிலும் தப்பவொண்ணாத குளிர்ந்தவடிவழகையும், " இதெல்லாமெனக்கு " என்றநுபவிக்கும்படி யான . ப்ராப்தியையுமுடையவனை-காணப்பெற்றேன். " நீலதோயதமத்ய ஸ்த்தா " ( நீலதோயதமத்யஸ்த்தா ) என்கிறபடியே ஹ்ருதயத்திலேயி ருக்கிறபடி. முன்பிவ்வுடம்பவ்வுடம்பை மறப்பித்தாப்போலே, இப்போ தவ்வுடம்பிவ்வுடம்பை மறப்பித்தது......................................

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு ( புறமறவித்யாதி ) " நிறமுடைநாற்றடந்தோள் " இத்யா தியாலே-வடிவழகைக்காட்டுகையாலே ( இவருடையவிழவை மறப்பித்தித்யாதி ) யர்த்தசித்தம். வடிவழகையென்றது - " நிறமுடை " இத்யாதியைப்பற்ற. காட்ட வென்றது - "கண்டுகொண்டு" என்கையாலே அர்த்தஸித்தம். உடம்பைமறந்தென் றது - தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தை யநுஸந்தித்தபடியாக வந்ததுஃகத்தைம றந்தென்றபடி. ஈடுபாடு (இவனையித்யாதி) மெய்யென்றது-சாடு; ஶரீரமும், சத்ய மும். மெய்மறக்கப்பண்ணிற்று-ஶரீரமடியாகவந்த துஃகத்தை மறக்கப்பண்ணிற்று.

சப்தார்த்தம் (புச்சம்தோற்றுதபடியித்யாதி) " புறம் " (புச்சம்) அப்படிய ழித்துக்கொள்ளவொண்ணாதோவென்ன (மமமாயேத்யாதி) உக்தப்ரமாணத்துக் கர்த்தம் (சர்வஶக்தியானவித்யாதி) "வினையார்" என்றபஹுவசநம் - நிந்தாயாம். " குமைக்கும் " என்றது - * ஆக்கைக்கு விசேஷணமாகையாலே, பாதிக்கைக்குவி ஷயமானவென்றபடி. தகர்க்கும் - பாதிக்கும். இருவல்வினையும் தகர்க்கிறதோவெ ன்ன (புண்யத்துக்கென்னுவித்யாதி) "முறைமுறை" என்றதுக்குபாவம் ( திறந்தி த்யாதி ) பதார்த்தம் - ஶவா. ஆக்கை - ஶரீரம். புகலொழிய - புகுகைதவிர. தே ஹாதிஶரீரபரிக்ரஹம் சுகரூபமன்றோ; தவிருகிறதென்னென்ன (ஜ்ஞாநாநந்தேத்யா தி) உபசயம் - வ்ருத்தி. இது-ஷட்பாவவிகாரங்களுக்கு முபலக்ஷணம்.

"கண்டுகொண்டொழிந்தேன்" என்றது - முழுச்சொல்லாய், கண்டேனெ ன்றபடி. இவ்விடத்திலே, நிறமென்று - அழகு. சர்வபூஷணபூஷார்ஹா:-சர்வபூஷ ணங்களிபூஷயிதுமர்ஹா: என்றபடி. " தடம் " (சுற்றுடைமை) அதாவது - வர்த்துல மாய். " ஸ்மிதாதாரம் " ( ஸ்மிதாதாரம் ) என்றதுக்கர்த்தம் ( முறுவலெடுத்தகல மென்று) " ப்ரலம்பபாஹுமாயாமதுங்கோரஸ்கம் ஸவிலாஸ ஸ்மிதாதாரம்பிப்ராணம்முகபங்கஜம் " ( ப்ரலம்பபாஹுமாயாமதுங்கோரஸ்

ஸ்த்தலமுந்நஸம் । ஸவிலாஸஸ்மிதாதாரம்பிப்ராணம்முகபங்கஜம் ) இதிபஞ்சமேம் ஸே ஸப்ததமே. " செய்யவாய் " என்கையாலே - முறுவலைலக்ஷிக்கிறது. "ஸ்மிதா தாரம்" (ஸ்மிதாதாரம்) என்கையாலே-போக்யதையில்வந்தால் ஸ்மிதமேபோக்ய மாய், அதுக்காதாரமாயிருக்கிறது முகமென்றபடி. இழவு - கீழ்ப்பாட்டைக்கடா க்ஷித்து. * அறவென்று - மிருதிக்கும், தர்மத்துக்கும் வாசகமாகையாலே, உபயத் தையும் தந்த்ரேணவருளிச்செய்கிறார் ( தன்னிலுமித்யாதி ) ஆனலிவர்கண்டாரோ வென்ன ( நீலதோயதேத்யாதி ) " ஆக்கைபுகலொழிய " என்றது - ஶரீரநிவ்ருத்தி யைப்பற்றவோவென்ன (முன்பித்யாதி)

இருவல்வினையார் - புறமறக்கட்டிக்கொண்டு - குமைக்கும் - ஆக்கையிலே- முறைமுறை - புகலொழிய - நிறமுடையென்றுதொடங்கி, கண்டுகொண்டொழிந் தேனித்யந்வயः ......... ...... ....... ............... .. ........... ............

# ஏழாம்பாட்டு.

அம்மானாழிப்பிரானவனெவ்விடத்தான்யானார்
ரெம்மாபாவியர்க்குமிவிதிவாய்க்கின்றுவாய்க்குங்கண்டீர்
கைம்மாதுன்பொழித்தாயென்றுகைதலைபூசலிட்டே
மெய்ம்மாலாயொழிந்தேனெம்பிரானுமென்மேலானே.

## ஆறாயிரப்படி.

( அம்மான் ) ஸர்வேச்வரத்தாலு மத்யந்தநிஹீநனாய், கைம்மா துன்பொழித்தாயென்று பொய்யேதொழுதலற்றுகையாகிற ப்ராதிகூல் யயுக்தனுமா யிருந்தவென்னை, ஸர்வப்ரகாரேணாபி நிரஸ்தஸமாப்யதிகனா யிருந்தநான் தன்னுடைய நிரவதிககாருண்யத்தாலே ஸ்வவிஷய நிரதிச யா க்ருத்ரிமபக்தியுக்தனுக்கிந்தாலும் நிரதிசயாபிநிவேசயுக்தனாய்க்கொ ண்டு என்னுள்ளேவந்து புகுந்தருளினானென்கிறார் ......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தன்க்ருபாதிசயத்தாலே, எத்தனையேனும் நிக்ருஷ்டர்க்கும் ஸ்வவிஷயத்தி லாசையைப்பிறப்பித்துத் தானும்விரும்புமென்று, ஸ்வலாபமுகத்தா லே யருளிச்செய்கிறார்.

ஆழி-கையுந்திருவாழியுமாய். பிரான்-ஆஶ்ரிதரை யநுபவிப்பிக்கும் மஹோ பகாரகனான. அம்மான் - நிருபாதிகஸ்வாமியான. அவன் - அவன். எவ்விடத்தான்- அபரிச்சின்நஜ்ஞாநரான ஸூரிகளுமளவிட்டநுபவிக்கவொண்ணாதபடி யென்நிலத்தி லேநிற்கிறான். யான் - இவ்விஷயத்திலே க்ருத்ரிமோக்த்யாதிகளைப்பண்ணும் நிக்ரு ஷ்டனானநான். ஆர் - எவ்வளவாயிருப்பானொருவன். இப்படியிருக்க, கைம்மா - உ ன்திருவடிகளிலே ஆராதநத்திலே உத்யுக்தமான ஆனையினுடைய ஜந்மாத்யபகர்ஷ ம்பாராதே. துன்பு-க்லேஶத்தை. ஒழித்தாய்-போக்கினவனே. என்று-என்று. கை- கை. தலை-தலையிலேயாம்படி. பூசலிட்டே-ப்ரசித்தமாகக்கூப்பிட்டே. மெய்ம்மால்-

பாரமார்த்திகப்ரேமத்தையுடையேன். ஆயொழிந்தேன்-ஆய்விட்டேன். எம் - என்த ண்மைபாராதேயிப்படிதிருத்தின. பிரான்-உபகாரகனானவனும். என்மேலான்-என் பக்கலிலே யபிநிவிஷ்டனானவன். ஆதலால், எ - எத்தனையேனும். மாபாவியர்க்கும்-மஹாபாபிகளாயிருப்பார்க்கும். விதி - தப்பவொண்ணாதபகவத்க்ருபாரூபவிதியான து. வாய்க்கின்று-பலோந்முகமாமளவில். வாய்க்குங்கண்டீர் - பலித்தேவிடுங்கிடிகோள்..........................................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அவன்க்ருபையாலே தாம்பெற்றபேற்றைக்கண்டு விஸ்மிதராய், பகவத்க்ருபை நடையாடாநிற்க, சிலர்க்கு "நானயோக்யன்" என்றிழக்க வேண்டாகிடிகோளென்கிறார்.

(அம்மான்) சர்வேஸ்வரன். (ஆழிப்பிரான்) கையுந்திருவாழியுமானவழகை நித்யசூரிகளுக்குக் காட்சிகொடுத்துக் கொண்டிருக்குமவன். (அவனெவ்விடத்தான்) அவனெவ்வளவிலுள்ளார் பரிமாறுமவன்.

(யானார்) நித்யசம்சாரிகளுக்கு மிவ்வருகாயிருந்தேன்நான். பிள்ளையமுதனார், "அம்மானாழிப்பிரான்" என்றுமேலேகாட்டி, "யானார்" என்றுகுறையச்சொல்லிக்காட்டுவர்.

(எம்மாபாவியர்க்குமித்யாதி) எல்லாவழியாலும் மஹாபாபத்தைப்பண்ணினவர்கள்பக்கலிலும் பகவத்க்ருபைபெருகபபுக்கால் தடையில்லைகிடிகோள். பகவத்க்ருபை பெருகப்புக்கால் "கரையிலேநின்றோம்" என்னத்தப்பவிரகில்லை.

நீர்கிட்டினபடியென்னென்னில் (கைம்மாவித்யாதி) ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களொன்றுமின்றிக்கே யிருக்கிற ஆனையானது பூர்வஜந்மவாசனையாலே, முட்பாய்ந்தவாறே "அம்மே" என்பானைப்போலே, நோவுபட்டவாறே திருவடிகளைஸ்மரிக்க, சர்வாதிகனான தன்மேன்மைபாராதே மடுவின்கரையிலே அரைகுலையத் தலைகுலையவந்து ரக்ஷித்தநீர்மையையநுசந்தித்து, "இதொருவுபகாரமிருக்கும்படியே!" என்று அந்தவுபகாரஸ்ம்ருதியாலே ஸ்நேஹிகள்சொல்லும்பாசுரத்தை பாவபந்தமில்லாத நான்சொன்னேன். (கைதலைபூசலிட்டே) தலையிலேகையைவைத்து, வாயாலேகூப்பிட்டென்னுதல்; மாறாதே அஞ்சலிபண்ணி யென்னுதல். தலையிலேவைத்த கைமாறாதேயென்றுமாம். ஆனைக்குதவினது தங்களுக்குதவிற்றென்றிருக்கும் பரசம்ருத்த்யேகப்ரயோஜநர், அந்தவுபகாரத்துக்குத்தோற்று உபகாரஸ்ம்ருதியாலே அஞ்சலிபண்ணிச்சொல்லும்பாசுரத்தை, அஹ்ருதயமாகச்சொல்லி அதுநெஞ்சிலே யூற்றிருந்துபொய்ம்மால்போய் மெய்ம்மாலாய்விழுந்தது. அவனும்மளவில்செய்ததென்னென்ன (எம்பிரானுமென்மேலானே) (நான்மெய்சொன்னவன்றோடு பொய்சொன்னவன்றோடுவாசியற) என்றுமொக்க மெய்ம்மா

மேலுக்கவதாரிகை (அவனித்யாதி) "எம்பிரானுமென்மேலானே" என்றது க்குபாவம் (என்றுமொக்கவித்யாதி) சப்தார்த்தம் (எனக்கித்யாதி) "என்மேலான்" என்றத்தை - ஹேதுவாகக்கொண்டு, "எம்மாபாவியர்க்கும்" இத்யாதியையுபஸம்ஹரிக்கிறார் (இதிருந்தபடியாலித்யாதி) இது என்பக்கல் ப்ராவண்யம்.

அம்மானித்யாரப்ய, யானுர், கைம்மாதுன்பொழித்தா யித்யாரப்ய, என்மேலானே, ஆகையாலே - எம்மாபாவியர்க்கு மித்யாரப்யாந்வய: .,.........

# எட்டாம்பாட்டு.

மேலாத்தேவாகளுநிலததேவருமேவித்தொழு
மாலார்வந்தினநாளடியேன்மனத்தேமன்னினார்
சேலேய்கண்ணியருமபெருஞ்செல்வமுநன்மக்களு
மேலாத்தாய்தந்தையுமவரேயினியாவாரே.

## ஆறாயிரப்படி.

(மேலாததேவர்களும) நித்யஸித்தபுருஷர்களாலும், கர்மபூமியிலே வர்த்தமாநராய் ப்ரக்ருதி ஸம்ஸ்ருஷ்டராயிருந்துவைத்து ஸ்வாநுபவைகபோகரான திவ்யபுருஷர்களாலு மபிவந்த்யமானனை வெம்பெருமான் இன்னாளடியேன் மனத்தேமன்னினான். இனி சர்வகாலமு மெனக்கு, சேலேய்கண்ணியரும் பெரும்செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய்தந்தையும் மற்றுமெல்லாமாவா னவனென்கிறா.......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உபயவிபூதிநாதனை மேன்மையையுடையவ னென்னெஞ்சில் வந்துபுகுந்து தன் சர்வவிதபந்துத்வத்தையு மநுபவிப்பியாநின்றானென்கிறார்.

மேலாம் - சர்வப்ரகாரோத்க்ருஷ்டரான. தேவர்களும் - சூரிகளும். நிலம்-இவ்விபூதியில். தேவரும் - பகவத்ஜ்ஞாநப்ரேமாதிகளாலே யுஜ்ஜ்வலஸ்வபாவரான பாகவதரும். மேவி - அநந்யப்ரயோஜநத்வாதிகளாலே யொருநீராகப்பொருந்தி. தொழும் - அநுபவிக்கும்படியான. மாலார் - சர்வாதிகரானவர். தம்முடையமேன்மைநிற்கச்செய்தே, இனநாள்-இப்போது. வந்து-என்பக்கலிலேயபிமுகராய்வந்து. அடியேன்-சாவகாலமும் தமக்குசேஷபூதனை வென்னுடையசம்பந்தமேபற்றாசாக. மனத்தே-நெஞ்சுக்குள்ளே. மன்னினார்-ப்ரதிஷ்டிதரானார். இனி-இனிமேற்பட்டு. ஔபாதிகபந்துக்கள்போலன்றியே, சேலேய்கண்ணியரும் - விலக்ஷணத்ருஷ்டிகளானஸ்த்ரீகளும். பெரும்-அதிசயிதமான. செல்வமும்-ஐஶ்வர்யமும். நல் - குணதிகரான. மக்களும்-புத்ரர்களும். மேலாம்-ப்ரியஹிதங்களால்மேற்பட்ட. தாய்தந்தையும்-மாதாபிதாக்களும். அவரே-அவரே. ஆவார்-ஆகிநிற்பர்.

இவ்வோ[illegible]ஷயசித்திகளாற்பிறக்கும்ப்ரீதி, தம்மையநுபவித்துப்பிறக்கும்படி யாகாநின்றதொ[illegible]ருகருத்து.............................................

## ஈடு - எட்டாம்பாட்டு.

உபயவிபூதிநாதனானவன் என்பக்கலிலே மேல்விழுந்து என்னை விடாதே ஹ்ருதயத்திலே புகுந்திருந்தான; நானுமினி நித்யசூரிகளைப் போலே நித்யசம்சாரத்தைவிட்டு, அவனையே யெல்லாவுறவுமுறையுமாகப்பற்றப்பார்த்தேனென்கிறார.

(மேலாத்தேவர்களும்) நித்யசூரிகளும். (நிலத்தேவரும்) பூசுரரான ஸ்ரீவைஷ்ணவாகளும். (மேவித்தொழும்மாலார்) இளையபெருமாளும், இடக்கைவலக்கையறியாத குரங்குகளுமொக்க வடிமைசெய்தாப்போலே, இரண்டுவிபூதியிலுள்ளாரு மொருமிடறாகசசேர்ந் தடிமைசெய்யும் சர்வாதிகனானவன். (வந்து) தானிருந்தவிடத்தே நான் செல்லப்ராப்தமாயிருக்க, நானிருந்தவிடத்திலேதானேவந்து. (இனநாள்) இப்போது. பூர்வக்ஷணத்திலறியாதிருக்க, இங்ஙனே விடிந்துகொண்டு நிற்கக்கண்டேன். இப்படிவருகைக்கடி யென்னென்னில் (அடியேன்) விடவொண்ணாத ப்ராப்தியையிட்டுவந்தான். வந்துசெய்ததென்னென்னில் (மனத்தேமன்னினார்) "மனத்துள்ளான் மாகடல்நீருள்ளான் மலராள் தனத்துள்ளான்" என்கிறபடியே-பரமயோகிகள் நெஞ்சிலும் திருப்பாற்கடலிலும் பெரியபிராட்டியார் திருமுலைத்தடத்திலு மிருக்கக்கடவவன், நித்யசம்சாரியாய்ப்போந்த வென்னெஞ்சிலே ஸ்த்தாவரப்ரதிஷ்டையாயிருந்தான்.

இனி நீர்செய்யப்பார்த்த தென்னென்ன; இனி யெனக்கொரு செயலுண்டோ இவனையொழியவென்கிறார் (சேலேயித்யாதி) தங்கள்நோக்காலே துவக்கவல்ல ஸ்த்ரீகளும், திரவநிகரம்பத்தும், குணாதிகரான புத்ரர்களும், தந்தாமையழிய மாறியாகிலும் ப்ரஜையைநோக்கும் மாதாபிதாக்களுமெல்லாம இனி அவரே எனககாகப் பற்றப்பார்த்தேனென்கிறார். (அவரோயினியாவாரோ) க்லேஶகரமான வவ்வோசம்பந்தங்களாலே க்லேஶப்படவேண்டா. "மாதாபிதா" "ஸுஹ்ருத்தாவஸ" (அஹம்தாவத்) ..........................................................

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (மேலாத்தேவர்களுமித்யாதி) உபயவிபூதிநாதனென்றது- "மேலாத்தேவர்கள்" இத்யாதியைப்பற்ற. (என்பக்கலிலே- புகுந்திருந்தான்) என்றது - "அடியேன்மனத்தேமன்னினார்" என்றத்தைப்பற்ற. நானுமினி நித்யசூரிகளைப்போலே நித்யசம்சாரத்தைவிட்டென்றது - அர்த்தசித்தம். "சேலேய்கண்ணியரும்" இத்யாதியைப்பற்ற (அவனையேயெல்லாவுறவித்யாதி) உறவுமுறை - ப்ராப்தஸம்பந்தம்.

மேலாத்தேவர்களும் - மேலானதேவர்களும். மேவி-அந்யோந்யம் ஸஹ்ருதயராய். மால் – பெருமை. நித்யசூரிகளோடொக்க சம்சாரிகளும் தொழுதமைக்கு த்ருஷ்டாந்தம் (இளையபெருமாளு மித்யாதி) கீழிரண்டுபதத்தையுங்கூட்டிசப்

தார்த்தம் ( இரண்டுவிபூதியித்யாதி ) "இனநாள்" என்றத்தை - க்ஷணபரமாக்கி, (இப்போதென்கிறார்) இதுக்குபாவம் (பூர்வக்ஷணத்திலித்யாதி) (மனத்துள்ளான்) இத்யாதிக்கர்த்தம் (பரமயோகிகளித்யாதி) "மனத்தேமன்னினார்" என்றதுக்குச ப்தார்த்தம் ( நித்யசம்சாரியித்யாதி ) "மனத்துள்ளான்" இத்யாதிபாசுரம், மூன் ருந்திருவந்தாதி மூன்றாம்பாட்டு.

"சேலேய்கண்ணியரும்" இத்யாதிவிசேஷணத்துக்குபாவம் - த்யாகத்தினு டைய தௌர்கட்யம் சொல்லுகை. சேல்-மத்ஸ்யம். ஏய்கை-ஒப்பு. துவக்கவல்ல- ஈடுபடுத்தவல்ல. புத்ராதிகளை யழியமாறிஜீவிக்கும் மாதாபிதாக்களை வ்யாவர்த்தி க்கிறது (மேலாத்தாய்தந்தையென்று) ஆவார் - ஆகிறவர்கள்; இதுக்குபாவம் ( எல் லாமென்றது) பலிதம் எனக்காகவித்யாதி) "அவரோ" என்கிற வவதாரணார்த்தம் (க்லேசகரமானவித்யாதி) அவனுடைய சர்வவிதபந்துத்வத்திலே ப்ரமாணம் ( மா தாபிதேத்யாதி) "[grantha]" (மாதா பிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத் ) இத்யாதிசுபாலோபநிஷதி. இப்படியிரு ந்தபேருண்டோவென்ன ( அஹம்தாவதித்யாதி ) "[grantha]" (அஹம்தாவந்மஹாராஜேபித்ருத்வம்நோபலக்ஷயே । ப்ராதாபர்த்தாசபந்துஸ்சபி தாசமமராகவ꞉)

அடிதொடங்கி, தந்தையும் - ஆவார் - இனி - அவரோ இத்யந்வய꞉. தந்தையு ம் - இனி, (அவரோ-ஆவாரோ) அவரோயாகாநிறபரொன்றுமையிலர்த்தம் .............



## ஒன்பதாம்பாட்டு.

ஆவாராரா துணையென்றலைநீர்க்கடலுளழுந்து
நாவாய்போற்பிறவிக்கடலுணின்றுநான்றுளங்கத்
தேவார்கோலத்தொடுந்திருச்சக்கரம்சங்கினொடு
மாவாவென்றருள்செய்தடியேனொடுமானனே.

### ஆறாயிரப்படி.

( ஆவாரரா ) ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள்ளே யதிதயநீயனும்படிநின்று நான்நடுங்க, எம்பெருமான் தன்னுடைய நிரவதிககாருண்யத்தாலே யாவாவென்ற ருள்செய்து, தன்னுடைய சர்வலோகேஶ்வரத்வ சூசகமான நிரவதிக சௌந்தர்யத்தோடும் திருவாழி திருச்சங்குதொடக்கமாகவுள்ள திவ்யா யுதங்களோடுங் கூடவந்து, அவர்களோடுகலந்தருளுமாபோலே அடி யேனோடும் கலந்தருளினானென்கிறார்.................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படிசர்வவித பந்துவானவவன் தன்னசாதாரணவிக்ரஹத் தோடேகூட என்னோடேகலந்தானென்கிறார்.

துணை-துணை. ஆவார்-ஆவார். ஆர்-ஆர். என்று-எனறுசொல்லி. அலை-அலைகிற. நீர்-நீரையுடைததான. கடலுள்-கடலிலே. அழுந்தும்-அழுந்துகிற. நாவாய்போல்-நாவாய்போலே. பிறவிக்கடலுள்-சம்சாரசமுத்ரமத்யத்திலே. நின்று-நின்று. நான்-கரையேறிக்கொள்ளமாட்டாதநான். துளங்க-நடுங்க. அவ்விழவிலே, தேவு-திவ்ய சௌந்தர்யாதிகளால். ஆர்-பூர்ணமான-கோலத்தொடும்-வடிவோடும். திருச்சக்கரம்சங்கினொடும்-அவ்வடிவுக்குசோபாவஹமான திவ்யாயுதங்களோடுங்கூட. ஆஆ என்று-ஐயோ ஐயோ என்று. அருள்செய்து-க்ருபைபண்ணி. அடியேனொடும்-தன்னுடைமையானவென்னுடனே. ஆனான்-கூடினான்.

கீழ், "விதி" என்றுசொல்லிப்போந்தத்தை இங்கே "அருள்" என்றுவெளியாக்கினாராயிற்று. தேவு-அழகு; திவ்யமாய், அப்ராக்ருதமென்றபடி...............*

## ௯ - ஒன்பதாம்பாட்டு.

பலசொல்லியென்; நான்சம்சாரத்தில் பட்ட க்லேஶமெல்லாந் தீரும்படி தன்க்ருபையாலே அப்ராக்ருதமான வடிவோடேவந்து கலந்தானென்கிறார்.

( ஆவாராராதுணையென்று ) துணையாவாராரொன்று ( அலைநீரித்யாதி ) க்ஷுபிதமானகடலுககுள்ளே யழுந்துகிற நாவாய்போலே, சம்சாரார்ணவத்திலேநின்று நான்நடுங்க. நாவாய்போலென்கிறவிடத்தில்-[illegible]ய்மாத்ரத்தை நினைத்தபோது, ஆவாரார் துணையென்றவிடம்-கரையில்நின்றார் வார்த்தையாககடவது. அதுக்குக்கருத்து-நோவுபடாநிற்க வுணர்த்தியற்றிருந்தபடி. அன்றிககே, * மஞசாஃக்ரோஶந்திபோலே தத்ரஸ்த்தரான புருஷர்களைச சொல்லிற்றாகவுமாம. நடுங்குகையாவது - அசைந்துவருகை. இந்நடுககத்தி லவன்செய்ததென்னென்னில் ( தேவாரித்யாதி ) ( தேவு-அழகு; திவ்யமாய், அப்ராக்ருதமென்றபடி. ) அப்ராக்ருத திவ்யசம்ஸ்த்தாநத்தோடும, அவ்வடிவுக்குசசேர்ந்த திவ்யாயுதங்களோடுங்கூடவந்து, ஐயோ ஐயோ என்றென்பககலிலே க்ருபையைப்பண்ணி, என்னோடேவந்துகலந்தான்.

ஆளவந்தாரருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி - "( திருச்சக்கரம்சங்கினொடும்-அடியேனொடுமானான் என்று ) கையிலாழ்வார்களோடு பொருந்தினாப்போலே என்னோடேவந்து கலந்தானென்கிறார்" என்று. அத்தையெம்பெருமானார்கேட்டருளி, "இங்ஙனேயாகவடுக்கும் - 'கூராராழிவெண்சங்கேந்தி-வாராய்' என்றாயிற்றி [illegible]ராசைப்பட்டிருப்பது, ஆசைப்பட்டபடியே திவ்யாயுதங்களோடேவந்து கலந்தானென்கிறார்" என்றருளிசசெய்தருளும்படி. இவர்தாம் பூவேளைக்காரரைப்போலே, இவைகாணாதபோது கைமேலேமுடிவாரொருவரிறே. ( அருள்செய்தடியேனொடுமானானே ) * கேசவன்றமர்தொடங்கி, லோபத்தாலே, க்ருபையை-விதிசப்தத்தாலே சொல்லிப்போந்தவ

ர், இப்பாட்டிலே "அருள்" என்றுவெளியிடுகிறார். (அடியேனொடு மானன்) ஸ்வரூபாநுரூபமாக சேஷியாயேவந்துகலந்தான்............

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு, (ஆவாராரித்யாதி) நாலாம்பாட்டும் அஞ்சாம்பாட்டும் தவிரக்கீழ்ப்பாட்டெல்லாம்-தமமோடேகலந்தமை சொல்லுகையாலே (பலசொல்லியென்னென்றது) "பிறவிக்கடலுள்நின்றுநான்துளங்க" என்றத்தைப்பற்ற (நான்சம்சாரத்திலித்யாதி) திரும்படியென்றது-அர்த்தசித்தம். தன்க்ருபையாலேயென்றது - "அருளசெயது" என்றத்தைப்பற்ற, "தேவார்கோலம்" என்றத்தைப்பற்ற (அப்ராக்ருதேத்யாதி) கலந்தானென்றது - "அடியேனொடுமானன்" என்றத்தைப்பறற.

"அலைநீர்க்கடலுள்" என்றதுக்கர்த்தம் (க்ஷுபிதமான கடலுக்குள்ளேயென்று) அழுநதுகிற-அமிழாநிறகிற. "நாவாய்போல்" என்கிறபதத்துக்கு - மௌமாத்ரமாக சித்தவத்கரித்து, அசேதநமான நாவாய்க்கு, "துணையாவாரார" என்னும்நினைவு கூடுமோவென்ன (நாவாய்போலித்யாதி) நாவாயைத்ருஷ்டாந்தமாக்கினதுக்குபாவம் (அதுக்கித்யாதி) அதுக்குக்கருத்தென்றது - கரையிலுள்ளார் "இதுக்குரக்ஷகரார்" என்றுநோவுபடவேண்டும்படி அசேதநமான நாவாய் போலென்றதுக்குக் கருத்தென்றபடி. கரையிலே நின்றார்வார்த்தையாம் பக்ஷத்தில்-தன்னுடையவவஸ்த்தையைத தான்சொல்லமாட்டேனெனறுகருத்து. நாவாயிலிருக்கிற மநுஷ்யரைச்சொல்லும்போது-தமக்குஜ்ஞாநமுண்டாய் "நமக்குபாயமாரோ" என்றுதுஃகப்படுகிறானென்றுகருத்து. முந்தினபக்ஷத்தில், அசேதநத்துக்குத் துளக்கமேதென்ன (நடுங்குகையித்யாதி) மற்றைப்பக்ஷத்தில், மாநஸசலநத்தைச்சொல்லுகிறது.

எம்பெருமானார் நிர்வாஹத்திலே நோக்காகவருளிச்செய்கிறார் (அப்ராக்ருதேத்யாதி) "தேவு-கோலத்தொடும்-ஆர்-திருச்சக்கரம் சங்கினொடும்வந்து, ஆவாவென்றருள் செய்தடியேனொடுமானன" என்றந்வயித்து (அப்ராக்ருத) இத்யாதிக்குசப்தார்த்தம் கண்டுகொள்வது. "கோலம்" என்றதுக்கர்த்தம் (சம்ஸ்த்தாநமென்று) "ஆர்" என்றதுக்கர்த்தம் (சேர்ந்தவென்று) வந்தென்றது-அத்யாஹாரலப்யம்.

ஆளவந்தார் நிர்வாஹத்தில் சப்தநிர்வாஹம் - (தேவார்கோலத்தொடும்) அதாவது-அப்ராக்ருதமாயழகிதான திருமேனியோடே; (திருச்சக்கரத்தொடும் சங்கினொடும்-அடியேனொடுமானன்) அதாவது-திருவாழியோடும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடும் பொருநதினாற்போலே, அபராக்ருதவிக்ரஹத்தோடே யென்னோடேவந்துகலநதானென்று. "அடியேனொடும்" என்றசப்தத்தாலே-கையிலாழ்வார்களோடு சேர்ந்தாப்போலே யென்னோடேசேர்ந்தானென்றபடி.

(அத்தை) "திருச்சக்கரம்சங்கினொடும்" என்றத்தை-த்ருஷ்டாந்தமாகயோஜித்தவாளவந்தார் நிர்வாஹத்தை. எம்பெருமானார் நிர்வாஹத்தில், "அடியேனொடும்" என்றசப்தத்துக்கு-அதிஹேயனை யென்னோடுமென்றபடி. (ஆர்-திருச்சக்கரமென்றது) திருமேனிக்குத் தகுதியானவென்றபடி. ஆள்வந்தார் நிர்வாஹத்தில். ஆர்கோலம்-அழகியதிருமேனி; "கோலத்தொடும்" என்றசப்தம்-அது

ஷம் ; கோலத்தோடேயென்றபடி. எம்பெருமானுர் நிர்வாஹத்திலே ஹேத்வந்தரம் ( இவர்தாமித்யாதி ) பூவேளைக்காரராவது-ராஜாக்களுக்கு தத்தத்காலங்களிலே பூவிடாவிடில்குத்திக்கொண்டு முடியுமவர்கள். ( இவை-கைமேலே-காணுதபோது-முடிவாரொருவரிறே ) என்று ப்ரக்ருதார்த்தங் கண்டுகொள்வது ; கைமேலேமுடிவார்-யுத்தத்திலேமுடிவாரொன்று சாடுவுக்கர்த்தம். "அருள்செய்து" என்கிறவிடத்தில் விதிசப்தமில்லாமல் போவானென்னென்கிற சங்காபரிஹாரார்த்தம் புநஃப்ரதீக்க்ரஹணம் (அருள்செய்தித்யாதி) கேசவன்றமர் தொடங்கியென்றது-"மதுசூதனை" என்கிறபாட்டுத் தொடங்கியென்றபடி. தொடங்கியென்றது - "என்றுமொன்ருகி" "கையார்சக்கரம்" "அம்மானுழிப்பிரான்" என்கிறபாட்டுக்களைப்பற்ற. லோபத்தாலே - "க்ருபையைவெளியிடவொண்ணுது" என்கிறலோபத்தாலே. "அருள்செய்து" என்கிறல்யபந்தத்துக்கு - "அடியேனுடுமானுன்" என்கிறபதத்தோடேகவாக்யதை தோற்றுகைக்காக ( அருள்செய்தடியேனுடுமானுனே ) என்றுகீழேசொல்லிற்று ; இப்போது, "அடியேனுடுமானுன்" என்கிறமாத்ரத்துக்கு – "அடியேன" என்கிறதிணுலே ப்ரதிகோடித்வேநோபஸ்த்திதமாயிருக்கிறசேஷித்வ விசிஷ்டனுய்வந்து கலந்தானென்றர்த்தவிசேஷம் சொல்லுகைக்காக புநஃப்ரதீகக்ரஹணம் ( அடியேனுடுமானுனென்று )

உரையந்வயம் க்ரமத்திலே.... .... .... . ..........; . ....... ............

# பத்தாம்பாட்டு

ஆறுனுடையானென்றஃதேகொண்டுவந்துவந்து
தானேயின்னருள்செய்தென்னைமுற்றவுந்தானுனுன்
மீனுயாமையுமாய்நரசிங்கமுமாய்க்குறளாயக்
கானுரேனமுமாய்ககற்கியாமின்னங்கார்வண்ணனே.

## ஆருயிரப்படி.

( ஆறுனுடையானென்று ) தானென்னேடேபண்ணின சம்ஸ்லேஷத்தை யநுசந்தித்தவிததனையுமே கொண்டுகந்துவந்துதானே யின்னருள்செய்து, இதுக்கு முன்பென்னேடொன்றும் சம்ஸ்லேஷியாதானுய்க்கொண்டென்னை வேறுபடக்காணவொண்ணுததொருபடி சம்ஸ்லேஷித்து, இதுக்குமுன்பு தான்பண்ணியருளின சர்வதிவ்யாவதாரங்களையுமெனக்கு போக்யமாகக்காட்டியருளினுன். ஆதலால், இதற்குமுன்பு தான்பண்ணியருளின விந்தத்திருவவதாரங்களெல்லா மென்பக்கலுள்ள வநிவேசத்தாலே ; வேறுமெனக்காகப்பண்ண வெண்ணினதுக்கும் முவுண்டோவென்கிருர்.... ..........................

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி யசாதாரணவிக்ரஹ விசிஷ்டனுனவன் தன்னுடைய அவதாரங்களையு மநுபவிப்பித்துக்கொண்டு என்பக்கலிலேகலந்தானென்கிருர்.

ஜகத்ரக்ஷணார்த்தமாக, மீன்-மத்ஸ்யமும். ஆய், ஆமையும்-கூர்மமும். ஆய், நரசிங்கமும்-நரசிம்ஹமும். ஆய், குறள்-வாமநனும். ஆய், காணோனமும்-வநவராஹமும். ஆய்-ஆய். இன்னம்-இன்னமும். கற்கி-கல்கியும். ஆம்-ஆவதான. கார்-காளமேகம்போலேஶ்யாமளமான. வண்ணன்-அசாதாரணவிக்ரஹத்தையுடையவன். என்னை, ஆள்-அடிமையாக. உடையான்-உடையன். ஆனான்-ஆனான். என்று-என்கிற. அஃதே-அந்தஉக்திமாத்ரமே. கொண்டு-பற்றாசாகக்கொண்டு. உகந்து-அதிப்ரீதனாய். வந்து-வந்து. தானே-அபேக்ஷாநிரபேக்ஷமாகத்தானே. இன்-நிரதிசயபோக்யையான. அருள்-க்ருபையை. செய்து-பண்ணி. என்னை-என்னைப்பற்ற. தான்-தான். முற்றவும்- சகலாவதாரவிசிஷ்டனாய்க்கொண்டு. ஆனான்-சம்ஶ்லேஷித்தான்.

அவ்வவதாரவைலக்ஷண்யங்களை யநுபவிப்பித்தானென்றுகருத்து..........*

## ஈடு - பத்தாம்பாட்டு.

அவன் தன் க்ருபையாலே சப்தாதிவிஷய ப்ராவண்யத்தை யறுத்துத் தன்பக்கலிலே ருசியைப்பிறப்பித்த மஹோபகாரத்தை யநுஸந்தித்த க்ருதஜ்ஞதையே பற்றாசாகவந்து, என்னோடே நிரவதிகஸம்ஶ்லேஷத்தைப் பண்ணினானென்கிறார்.

. ( ஆனானுடையான் ) என்னை யடிமைகொள்வானானென்று, அறியாதே யிங்ஙனே யொருவார்த்தை சொன்னேன் ; இந்த வுக்திமாத்ரத்தையேகொண்டு. இப்படி சொல்லுகைக்கு தான் பண்ணின க்ருஷியையடைய மறந்தான், இந்தவுக்தியையே குவாலாகநினைத்தான். ( உகந்து ) பலபோக்தாவான நானன்றிகக, உகப்பும தன்னதேயாயிற்று. ( வந்து ) அதுவும மாறுடிற்று. ( தானேயின்னருள்செய்து ) நானர்த்தியாதிருக்கத் தானே தன்பேறாக க்ருபையைபபண்ணி. ( என்னைமுற்றவும்தானானான் ) உள்ளோடுபுறமபோடு வாசியறக்கலந்தானென்னுதல், எனக்கு சாவவிதபோக்யமானானென்னுதல். * ஆகமுற்றுமகத்தடக்கினான். ( மீனாயித்யாதி ) சர்வவிஸஜாதீயனானதான் ஜ்ஞாநப்ரதாநார்த்தமாக ஜலசரஸஜாதீயனானான், தாரணார்த்தமாகக் கூர்மரூபியானான், சடக்கென விரோதியைப்போக்குகைக்காக இரண்டுவடிவைசசேர்த்துக்கொண்டு வந்துபிறந்தான், கொடுத்து வளர்நதகையைக்கொண்டு அர்த்தியானான், சம்சாரார்ணவத்தில்நின்று மென்னையெடுக்கைக்கு வராஹரூபத்தைக் கொண்டான். ( கானோனம் ) காடடங்கக்கோலஞ்செய்தான். "ஸோ ஸயநுடிஂஙகாரணு்ழி" ( ஸோபயந்தண்டகாரண்யம் ) என்கிறபடியே காட்டடங்கமயிற்கழுத்துச் சாயலாக்கும்படியான வடிவையுடையவனென்னுதல், மநுஷ்யசஞ்சாரமில்லாத காடடிலேவர்த்திக்குமென்னுதல். ( கற்கியாமின்னம் ) என்காரியம் சமைந்தபின்பும், " சம்சாரத்தில்நின்றும்கால்வாங்குந்தனையு மிவர்க்கென்வருகிறதோ " என்றுகொண்டகுதைமாறுகிறிலன். மேல்வரும் விரோதத்தைப்போக்குகைக்கு மின்னம் கல்கியாகவிருக்கிறான். நான்கப்பகைக்குப் பிறந்தபிறவிகளோபாதியோ ...

ம் அவனென்னை ரக்ஷிக்கைக்காகப் பிறந்தபிறவி. நான்கர்மத்தாலேபிறந்த பிறவியடையத்தானு மநுக்ரஹத்தாலேபிறந்தான். ( கார்வண்ணனே ) வர்ஷுகவலாஹகம்போலே யிருக்கிறுனத்தனை. வர்ஷித்தாஞயிருக்கிறில ன். ( வண்ணம்-ஸ்வபாவம்.

மீஞுயென்றுதொடங்கி, என்னைமுற்றவும் தாஞுனென்றங்வ யம் )..........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( ஆஞுனித்யாதி ) அவன தன்க்ருபையாலே சப்தாதிவிஷ ய ப்ராவண்யத்தை யறுத்தென்றது - கீழிற்பாட்டைக்கடாக்ஷித்து. " ஆளுடையா ன்-ஆஞன் " என்றத்தைப்பற்ற ( தன்பக்கலிலேயித்யாதி, க்ருதஜ்ஞதையென்னும ளவும் ) பற்றுசாக-ஹேதுவாக. " என்னைமுற்றவுந்தாஞுன் " என்றத்தைப்பற்ற ( என்னேடேயித்யாதி )

என்னையென்றது-அர்த்தசித்தம். " ஆளுடையான்-ஆஞன்-என்று " என்றங் வயித்தர்த்தம் ( அடிமைகொள்வாஞுனென்றென்று ) ( அறியாதேயித்யாதி ) அர்த்தசித்தம். " அஃதேகொண்டு " என்றத்தைப்பற்ற (இநதவுக்திமாத்ரத்தையே கொண்டென்றது ) " அஃதே " என்கிறவவதாரணத்துக்குபாவம் ( இப்படிசொல் லுகைக்கித்யாதி ) க்ருஷியென்றது - " மீஞுயாமையுமாய் " என்கிறவவதாரங்க ளைப்பற்ற. " கொண்டு " என்றதுக்குபாவம் ( இந்தவுக்தியையித்யாதி ) குவால்-அதிகம். ( உகப்பும் ) என்கிறசப்தத்தாலே-க்ருஷியும் தன்னதென்றபடி. ( அது வும்மாருடிற்று ) உகப்புமாருடிஞப்போலேயென்றபடி.

" தானே " என்றவவதாரஞர்த்தம் ( நானர்த்தியாதிருக்கவித்யாதி ) "இ ன் " என்றதுக்கர்த்தம் ( தனபேறுகவென்றது ) " என்னைமுற்றவும்தாஞுன் " என்றதுக்கர்த்தத்ரயம். முந்தினவாத்தத்திலே, என்னையென்றது-என்னேடேயென் றபடியாய், முற்றவுமென்றது-எல்லாவிடத்திலுமென்றுய், உள்ளோடுபுறம்போடு வாசிய்றத்தானென்னேடு கலந்தானென்றபடி. த்விதீயார்த்தத்தில், என்னையென்ற து-எனக்கென்றபடியாய், முற்றவுமென்று-சர்வவிதபோக்யமுமென்றுய், தானென க்கு சர்வவிதபோக்யமுமாஞுனென்றபடி. த்ருதீயார்த்தம்-என்னைத்தனக்கு சர்வவி தபோக்யமுமாகக் கொண்டானென்று. அதுக்குப்ரமாணம் ( ஆகமுற்றுமித்யாதி ) இந்தப்ரமாணமே-மூன்றுமர்த்தஸூசகம்.

இந்தவுக்திமாத்ரத்தையேகொண்டு தன்பேறுக விரும்பக்கூடுமோவென்ன; என்னைப்பெறுகைக் கநாதிகால மெதிர்சூழல்புக்குத்திரிந்தபின்பு கிமுதவென்கிறுர் ( மீஞுயித்யாதி ) " ஜந்மகர்மசமேதிவ்யம் " ( ஜந்மகர்மசமேதிவ்யம் ) இத்யாதி ப்ரமாணங்களைப்பற்ற ( சர்வவிஸஜாதீயஞுனவென்றது ) ஜ்ஞாநப்ரதாநார்த்தமா க-வேதோபதேசமுகேந ப்ரஹ்மாவுக்கு ஜ்ஞாநப்ரதாநார்த்தமாக. " கானர் " எ ன்றதுக்கர்த்தத்வயம்.முந்தினது-காட்டிலே ஸ்வதேஜஸ்ஸாலேபரந்து வ்யாபித்தி ருக்கிறவேனமென்று ; இரண்டாவது-காட்டிலேபொருந்தி வர்த்திக்கிறவேனமெ ன்றபடி. ஆர்தல்-பொருந்துதல். சாட்வர்த்தந்தோன்றுகைக்காக (காடடங்கக்கோ லஞ்செய்தானென்றது ) கோலம்-அழகும், வ்ராஹமும். சாயல்-நிறம். கொண்டகு

தை-கொண்டவுத்யோகம. சப்தார்த்தம் ( மேல்வருமித்யாதி ) ( விரோதத்தைப போக்குகைக்கும் ) என்றசகாரம்-கீழே ( விரோதியைப்போக்குகைக்காக ) என்றத்தோடே சமுச்சயம. அநேகாவதார கதநத்துக்குஹ்ருதயம் ( நான்தப்புகைக்கித்யாதி ) இருவர் பிறவிக்கும் ஹேதுவேதென்ன ( நான்கர்மத்தாலேயித்யாதி ) "கார்வண்ணன்" என்கிறவிடததிலே, வண்ணமென்று-ஸ்வபாவமாதல், நிறமாதல் ; இரண்டும் ( வர்ஷுகவலாஹகம் ) எனறத்தைப்பறற, கார்-வர்ஷுகவலாஹகம், பவிதம் ( வர்ஷித்தாறயிருக்கிறிலனெனறது ) வாஷித்தமேகமபோலே யிருக்கிறில னித்யர்ததஃ.

மீறுயிதயாரபய, காரவண்ணன்-ஆளுடையான - ஆறுன்-என்றஃதேகொண்டித்யாரபய, முறறவுநதாமுறுனிதயநவயஃ.. ... . . ... .... .....................*



# பதினொன்றாம்பாட்டு.

காரவண்ணன்கண்ணபிரான்கமலததடஙகண்ணன்றன்னை
யோவளவொண்கழனிகருகூசசடகோபன்சொன்ன
சீரவண்ணவொண்டமிழ்களிவையாயிரத்துளிபபத்து
மாரவண்ணததாலுரைபபாரடிக்கீழ்ப்புகுவாரபொலிநதே.

## ஆறுயிரப்படி.

( காரவண்ணன் ) *நீலமேகநிபறய் * புண்டரீகதளாமலாயதேக்ஷணறு யாஸ்ரிதசுலபறுன வெமபெருமானைசசொன்ன வித்திருவாய்மொழியை யார்வண்ணததாலுரைபபார பகவசசேஷதைகரதிகளாய்க் கொண்டு அவன்றிருவடிகளின்கீழே புகப்பெறுவரொன்கிறார்..........

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாயமொழியை யப்யஸிக்கவல்லவர்கள் ஆவிர்ப்பூ வருபகுண ஸம்பதவிசிஷ்டராயக்கொண்டு க்ருஷ்ணன் றிருவடிகளை ப்ராபிப்பர்களென்று பலத்தை யருளிச்செயகிறார.

கண்ணன - க்ருஷ்ணறுயவநதவதரித்த. பிரான்- மஹோபகாரகறுய். ஆஸ்ரிதர்க்குபகரிக்கும், கார் - காளமேகம்போலேஸ்ரமஹரமான. வண்ணன்- வடிவையும். கமலம் - தாமரைபோலே. தடம் - பெருத்த. கண்ணன்றன்னை - கண்களையுமுடையவனை. ஏர் - ஏர்களின். வளம் - மிகுதியையுடைத்தாய். ஒண்- ஸ்லாக்யமான. கழனி - கழனியையுடைத்தான. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். சொன்ன - அருளிச்செய்த. சீர் - சீரும். வண்ணம் - சந்தமுமுடைத்தாய். ஒண் - அர்த்தப்ரகாஸகமாகையாலே நல்ல. தமிழ்கள் - த்ராமிடரூபமாயிருக்கிற. இவை - இவை. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியிலும். இப்பத்தும்-

இப்பத்தையும். ஆர்வணணத்தால - " கவயோதயந்தி " (கவயோதயந்தி) என்கி றபடியே அம்ருதபாநம் பண்ணுவாரைப்போலே. உரைப்பார் - சொல்ல வல்லவர் கள். பொலிந்து - ஆவிர்ப்பூதமான ஸ்வரூபகுணாபிவ்ருத்தியை யுடையராய்க்கொ ண்டு. அடிக்கீழ் - அந்த க்ருஷ்ணன்திருவடிகளை. புகுவார் - ப்ராபிப்பர்கள்.

ஆர்வண்ணத்தா லுரைப்பாரென்று - ஸ்வச்சந்தததாலே யுரைக்குமவர்களா ர், அவர்கள் அடிக்கீழ்ப்புகுவாரகளென்றுமாம்.

இது - கலித்துறை... ... .. .. . ................ ..............................

## ஈடு - பதினொன்றாம்பாட்டு

நிகமத்தில் – இப்பத்தை யப்யசிக்கவல்லார், நிரவதிக ஸ்ரீவைஷ் ணவஸ்ரீயையுடையராய் அவன் திருவடிக்கீழே புகப்பெறுவரென்கிறார்.

( கார்வண்ணன் ) காளமேகம்போலே ஶ்ரமஹரமானவடிவையு டையவன். ( கண்ணபிரான் ) க்ருஷ்ணனாய் வந்தவதரித்து அவ்வடிவை யென்னை யநுபவிப்பித்தவன். ( கமலத்தடங்கண்ணன்றன்னை ) உத்புல் லபுண்டரீக தடாகம்போலே குளிர்ந்து செவ்வியை யுடைத்தான திருக் கண்களையுடையவனை. வடிவெல்லாம் கண்ணாயிருக்கிறபடி. "திறமுடை நாற்றடந்தோள்" என்று – கீழே தமக்குக்காட்டி ஸமாதாநம்பண்ணின வடிவைச்சொன்னபடி. இவர் தேஹஸம்பந்தத்தை யநுசந்தித் தஞ்சின போது, ஶ்ரமஹரமான வடிவைக்காட்டித் தன்னை முழுக்கக்கொடுத்துத் திருக்கண்களாலே குளிரநோக்கி நின்றநிலை. ( ஏரவளவொண்கழனி ) ஏரினுடைய ஸம்ருத்தியையுடைத்தாய் அழகியதான வயலோடேகூடின திருநகரி. வளமென்று – மிகுதிக்கும, அழகுக்கும்பேர். இங்கு மிகுதி யைச சொல்லுகிறது. ( சீர்வண்ணவொண்டமிழ்கள் ) சீரிதான ப்ரகா ரத்தையுடைத்தான அழகிய தமிழென்னுதல், கவிககங்கமான சீரையும் வண்ணத்தையுமுடைய வழகிய தமிழென்னுதல். சீரென்று – பாவிலே கதேசம். வண்ணம் – ஓசை. ( ஆர்வண்ணத்தால் ) பூரணமாகவென்னு தல். ஆர்தல் – பருகுதலாய், "தொண்டர்ககமுதுண்ண" என்கிறபடி யே பருகுவாரைப்போலே யென்னுதல் ; அபிநிவிஷ்டராயுரைப்பாரெ ன்கை. ( பொலிந்தே – அடிக்கீழ்ப்புகுவார் ) விஸ்ரம்பமாத்ரமேயாய் ருசியின்றிக்கே யிருக்கப்போய்ப்புகுகையன்றிக்கே, எம்பெருமானைப் போலே நாமுண்டு ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயோடே யிருந்து, பின்பு தாய்நிழலி லே யொதுங்குவாரைப்போலே அவன் திருவடிகளிலே புகப்பெறுவர்.*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( கார்வண்ணனித்யாதி ) " உரைப்பார் " என்றத்தைப்பற்ற ( அப் யசிக்கவல்லாரென்றது ) " பொலிந்து " என்றத்தைப்பற்ற ( நிரவதிகஸ்ரீவைஷ்

ணவஸ்ரீயையுடையராயென்றது ) "அடிக்கீழ்ப்புகுவார்" என்றத்தைப்பற்ற (அவ ன்றிருவடிக்கீழே யித்யாதி )

( வடிவென்றது ) "கார்வண்ணன்" என்றது - பஹுவ்ரீஹி யாகையாலே. கமலத்தடம் - கமலங்களையுடைத்தான தடாகம். "தடம்" என்றதுக்கு - விஸ்த்ரு தமென்றுக்கி, அர்த்தாந்தரம் ( வடிவெல்லாமித்யாதி ) அதாவது- கமலம்போலே யாய்ப் பெருத்த கண்ணையுடையவனென்றபடி. அத்ர - "[Grantha text]" ( க்ருபயாபரயாகரிஷ்ய மாணேஸகலாங்கம்கிலஸர்வதோக்ஷிநேத்ரே ) இத்யாதி ஸ்ரீரங்கராஜஸ்தவஶ்லோ கோநுஸந்தேய꞉. இப்போது வடிவழகையும் கண்ணழகையும் சொன்னதுக்கு பா வம் ( நிறமுடையித்யாதி ) கீழ்வாக்யவிவரணம் ( இவர் தேஹஸம்பந்தத்தை யித் யாதி ) முழுக்கக்கொடுத்தென்றது— "பிரான்" என்றத்தைப்பற்ற.

( திருநகரி ) ஆழ்வாரருளிச்செய்த வென்று கூட்டிககொள்வது.

சீரிதானப்ரகாரமென்றது - வக்த்ருப்ரபந்த ப்ரதிபாத்ய வைலக்ஷண்யங்க ளை. இரண்டாமர்த்தத்தில், சீர்களையும் வண்ணத்தையு முடைய வொண்டமிழென் கை. ( பாவிலேகதேசமென்றது ) எழுத்து, அசை, சீர், பந்தம், அடி, தொடை, நிளை, இத்தனையுங்கூடினது - ஒருபா ; இதிலேகதேசமென்றபடி. இவையாயிரத்து ளிப்பத்துமென்று கூட்டிக்கொள்வது.

( ஆர்வண்ணத்தால் ) ஆதரபூர்த்தி பரகாரத்தோடே யென்று த்விதீயார்த் தம். ( தொண்டர்க்கித்யாதி ) ஆஶ்ரிதர்க்கம்ருதபாநம்பண்ணுகைக்கு ஸூக்திமாலை களைச்சொன்னேனித்யர்த்த꞉. பருகுவாரைப்போலே யுரைக்கையாவ தேதென்ன ( அபிநிவிஷ்டராயித்யாதி ) பொலிந்து - இங்கே ஸ்ரீவைஷ்ணவஸ்ரீஸம்ருத்தராயிரு ந்து. "பொலிந்தே" என்றதுக்குபாவம் ( விஸ்ரம்பமித்யாதி ) விஸ்ரம்பமாத்ரமே யாயென்றது - "பேறுதப்பாது" என்று விஸ்வாஸமாத்ரமேயா யென்றபடி.

கண்ணபிரான் - கார்வண்ணன் - கமலத்தடம்தொடங்கி, உரைப்பார்- பொ லிந்தே - அடிக்கீழ்ப்புகுவா ரித்யந்வய꞉.........................................

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி

(கையார்சக்கரம்.)

[Grantha verse, 4 lines] (௩௧

( சக்ரஸ்ப்பாயத்கரத்வாத் ) கையார்சக்கரத்து-திருக்கைக்காபரணமாகை குப்போரும்படி யார்ந்தசந்நிவேஶத்தை யுடையனுன திருவாழியைதரிக்கையாலு ம்; ( ஸ்வஜநவஶதயா ) அவனென்னுகியொழிந்தான் - ஆஶ்ரிதரிட்டவழக்காய் நி கையாலும்; (ரக்ஷேணுத்யுக்தபாவாத்) வெள்ளத்தணைக்கிடந்தாய் - அவர்களுடை

ரக்ஷணத்திலே யுத்யுக்தனுய்க்கொண்டு திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தரு ளுகையாலும்; (பவ்யத்வாத்) கூவியருளாய்கண்ணனே - "அதுபொய்" என்னுதப டியவதரித்தநுஷ்டிக்கையாலும்; (ஸ்வாத்மதாநாத்) கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தையமுதை - ஆஸ்ரிதருக்கு ஸ்வாத்மாவை யநுபாவ்யமாகக்கொடு க்கையாலும்; (அமலதநுதயா) 'கருமேனியம்மான்றன்னையே - நிர்மலநீலகாத்ரனு கையாலும்; (ஸ்ரீகஜேந்த்ராவநாச்ச) கைம்மாதுன்பொழித்தாய் - ஜந்மவ்ருத்தாதிக ளாலே குறைந்திருக்கிற ஸ்ரீகஜேந்த்ராழ்வானை ரக்ஷித்தருளுகையாலும்; (நாநாபந் துத்வயோகாத்) சேலேய்கண்ணியருமித்யாதி - "த்வமேவமாதாசபிதாத்வமே வ" (த்வமேவமாதாசபிதாத்வமேவ) என்கிறபடியே, ஆஸ்ரிதருக்கு, அநுரூபைக ளான ஸ்த்ரீகளும் நிரவதிகமான சம்பத்தும் குணதிகரானபுத்ரர்களும் நிருபாதிக வத்ஸலரான மாதாபிதாக்களுமாகையாலும்; (விபதிஸகிதயா) ஆவாரார்துணையெ ன்றித்யாதி - ஆபத்தில் தோழனைப்போலேவந்துதவுமவனுகையாலும்; (வ்யாஜமா த்ராபிலாஷாத்) ஆனுனுடையானித்யாதி - ரக்ஷிக்கைக் கேதேனுமொருவ்யாஜமா த்ரத்தை யபேக்ஷிக்குமவனுகையாலும், எம்பெருமானை க்ருபாபரவசனுக, "கை யார்சக்கரம்" என்கிறதுஸூக்தத்திலே யவனுடையக்ருபைக்கு விஷயமாகையாலே க்ருதார்த்தரான காரிஸூநு நிஸ்சயித்தருளினுரென்கிறுர் .. ....................(௪௧)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

கையாரும்சக்கரத்தோன்காதலின்றிக்கேயிருக்கப்
பொய்யாகப்பேசும்புறனுரைகரு – மெய்யான
பேற்றையுபகரித்தபேரருளின்றன்மைதனைப
போற்றினனேமாறன்பொலிந்து. (௪௧)

(கையாரும்) இதில் - சம்சாரிகளையும் திருத்தும்படியாக சர்வேஸ்வரன்ப ண்ணின நிர்ஹேதுகவிஷயீகாரத்திலே வித்தராகிறபாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறுர். அதெங்ஙனேயென்னில்; ஸ்வப்ராப்தி சாதநங்களிலிறங்காமல் துர்வி ஷயங்களிலேமண்டி இவ்வர்த்தத்தையுணரவுமறியாதே அத்யந்தமுபேக்ஷ்யனுய் சம்சாரிகளிலந்யதமனுனவென்னை, இவையொன்றும் பாராமல் நிர்ஹேதுகமாகவ ங்கீகரித்துத் தன்றிருவடிகளிலே சேஷத்வத்தையுமறிவித்து கைங்கர்யத்தாலல்ல து செல்லாதபடிபண்ணி பிறரையுந்திருத்தும்படியான சதிரையுமுண்டாக்கி என்ப க்கலிலே வ்யாமுக்தனுயென்னோடேவந்து கலந்தானென்று ப்ரீதராகிற - * கையா ர்சக்கரத்தினர்த்தத்தை, "கையாரும்சக்கரத்தோன்" என்றுதொடங்கி யருளிச்செ ய்கிறுரென்கை.

( கையாரும் ) " கையார்சக்கரத்தென்கருமாணிக்கமே " என்றுதொடங்கி " விதிவாய்க்கின்றுகாப்பாரார் " என்னுமளவும் கடாக்ஷித்தருளிச்செய்தபடி. (கையாரும்சக்கரத்தோன்) திருக்கைநிறையும்படி திருவாழியைத்தரித்ததுவே நிரூபகமானவன். (காதலின்றிக்கேயிருக்க) ஸ்வவிஷயபக்தியின்றிக்கேயிருக்க. ( கையாரும்சக்கரத்தோன் காதலின்றிக்கேயிருக்கப் பொய்யாகப்பேசும் புறனுரைக்கு ) " பொன்னெடுஞ்சக்கரத்துன்னையே யவிவின்றியாதரிக்குமெனதாவியே " என்னும்படி தத்விஷயத்திலே ப்ரேமமுண்டாகவேண்டியிருக்க, இவ்வழகைக்கண்டிருக்கவும் ததநுகுணமான வக்ருத்ரிமப்ரேமமின்றிக்கே, க்ருத்ரிமப்ரேமத்தாலே இத்தைப்பேசி யநுபவிக்கிறபடியைக்கண்டு, போட்கனாயிருக்கிற மித்ரபாவத்தையேபார்த்து அந்த அஹ்ருதயமானவுக்திக்கு. பொய்யாகப்பேசும் புறனுரையாவது - " பொய்யேகைம்மைசொல்லிப் புறமேபுறமேயாடி " என்றும், " என்றென்றேசிலகூத்துச்சொல்ல " என்றும், "புறமேசிலமாயம்சொல்லி" என்றும், " உன்னையும்வஞ்சிக்கும்கள்ளமனம்" என்றுமிப்புடைகளிலேசொன்னவை. ஏவம்விதமான மித்ரபாவமாத்ரமான மித்யாஜல்பிதங்களுக்கு ( மெய்யானபேற்றையுபகரித்த ) யதாஜ்ஞாநமுடையார்பெறும் சத்யமானபேற்றை. அதாவது - " மெய்யேபெற்றொழிந்தேன், " " என்னாகியொழிந்தான், " " உன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன், " " முறைமுறையாக்கைபுகலொழியக்கண்டுகொண்டொழிந்தேன், " " எம்பிரானுமென்மேலானே, " " மாலார்வந்தினநாளடியேன்மனத்தேமன்னினார், " " அடியேனொடுமானனே, " " ஆனானுடையான் - என்னைமுற்றவுந்தானானான் " என்றும் பேசும்படியான விப்பேற்றையென்றபடி. இத்தையுபகரிக்கைக்கடியேதென்ன (பேரருளென்கிறது) அதாவது - " விதிவாய்க்கின்றுகாப்பாரார், " " எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்றுவாய்க்கும், " " ஆவாவென்றருள்செய்து, " " தானேயின்னருள்செய்து " என்றருளிச்செயதவையென்கை. '(பேரருளின்றன்மைதனைப்போற்றினனே மாறன்பொலிந்து) அதாவது - இரும்பைப்பொன்னாக்குமாபோலே, நித்யசம்சாரிகளுக்கும் நித்யஸூரிகள்பேற்றை யுபகரிக்கு மெம்பெருமானுடைய நிர்ஹேதுகக்ருபாப்ரவாஹத்தின் ஸ்வபாவத்தை ப்ரீதியாலே யருளிச்செய்தாராழ்வாரென்கை. "க்ருபயாபர்யபாலயத்" (க்ருபயாபர்யபாலயத்) என்னுமாபோலே ... (சக)

ஐந்தாம்பத்தில் - முதற்றிருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக திருவாய்மொழி - சக.—பாட்டு - சஙூ.



ஸ்ரீ

# திருவாய்மொழி

## ஐந்தாம்பத்து.

## இரண்டாந்திருவாய்மொழி.

பொலிகபொலிக - ப்ரவேஶம்.

### ஆறாயிரப்படி.

(பொலிக) * ஒன்றுந்தேவில் தமமுடைய வுபதேசத்தாலே வைஷ்ணவீக்ருதரான ஜநங்களைக்கண்டு நிரதிசயஹர்ஷயுக்தராய், அந்தஹர்ஷப்ரகாஷத்தாலே யவர்களைத்திருப்பல்லாண்டு பாடுகிறார்... ... .....

### பன்னீராயிரப்படி.

இரண்டாந்திருவாய்மொழியில், கீழே - பகவத்க்ருபாபாரவஶ்யத்தையநுசந்தித்து சந்துஷ்டரான வாழ்வாருடையப்ரீதியை யநுபவிக்கைக்கு, பகவத்குணாநுபவவித்தராய் சூரிசமரானபாகவதர்கள் சம்சாரததில் துரிதமெல்லாம்நீங்கும்படி ப்ரேமபரவசராய்த் திரண்டுவந்தபடியைக்கண்டு, "ஈஶ்வரனிவர்களையிட்டு ஜகத்தைத்திருத்தநினைத்தானாகக்கூடும்" என்றுதிருவுள்ளம்பற்றி; அவனுடையநிரதிசயமாஹாத்ம்யத்தையும், மாஹாத்ம்யப்ரகாஶகமான ஶ்ரிய:பதித்வாதிசிஹ்நத்தையும், ஆஶ்ரிதோபகாரகமானவிக்ரஹாதியோகத்தையும, உபகாரார்த்தமான சமுத்ரசாயித்வத்தையும், அதுகருமடியான ஸ்ரீவைகுண்டவாசத்தையும், ஆஶ்ரிதரக்ஷணார்த்தமான ஆயுதவத்தையையும், அவதாரதசையிலுண்டான அதிசயிதாதிக்யத்தையும், ஆதிக்யலக்ஷணமான ஸ்ரீவத்ஸசிஹ்நத்தையும், ஆஶ்ரிதவிஷயத்தி லப்ரச்யுதஸ்வபாவத்தையும், அதிஶயிதஶீலவத்தையையுமநுசந்தித்து, "இவ்வோஸ்வபாவங்களில் வித்தரானபாகவதரிஙகே சந்நிஹிதராகப்பெறுவதே!" என்று ஹ்ருஷ்டராய் மங்களாஶாஸநம்பண்ணி, இவர்களை யநுவர்த்தித்து சுத்தஸ்வபாவராய் இவர்களோடொக்க நீங்களும் பகவத்விஷயத்தை யநுபவிக்கப்பாருங்கோளென்று லௌகிகளைக்குறித் துபதேஶித்தருளுகிறார் .. ..... ........ ..... .....

### ஈடு.

இத்திருவாய்மொழியை ஆளவந்தாரருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி -" ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயைக்காண்கைக்காக நித்யசூரிகளிஙகேவர, அவர்களைக்கண்டு மங்களாசாஸநம்பண்ணுகிறார்" என்று. " * நண்ணாதார்முறுவலிப்பவிலே - சம்

சாரிகள்படுகிறக்லேசத்தையநுசந்தித்து, அதுக்குப்பரிஹாரமாக, * ஒன்றுந்தேவிலே – பகவத்பரத்வத்தை யுபபாதித்துத்திருத்த, அத்தாலே திருந்தி சம்சாரபரமபதவிபாகமற்று அங்குள்ளாரு மிங்கேவரலாம்படியிருக்கிற விருப்பைக்கண்டு மங்களாசாஸநம்பண்ணுகிறார்" என்று, இங்குள்ளார்பக்கலிலே பராதாந்யந்தோற்ற எமபெருமானாருளிசசெய்யும்படி. தாம் பகவத்பரத்வத்தையுபபாதிக்க அத்தாலே திருந்தின சாத்விகரடைய விஸ்த்ருதராயிருக்கிறபடியையும், ராஜஸராயும் தாமஸராயுமுள்ளார் அநவதாநத்தாலு மஜ்ஞாநத்தாலும் சஙகுசிதராயிருக்கிறபடியையும், சாத்விகர் பரிக்ரஹித்ததாகையாலே உத்தமதாமமான வைஷ்ணவதர்மமே ப்ரசித்தமாய்ப்போருகிறபடியையும், அதுக்கு விருத்ததர்மங்க ளபிபூதமாய்ப்போருகிறபடியையும், தேசகாலஙகள் அதிகாரிகளங்கங்களென்கிறவற்றுக்குண்டானநன்மைகள், " ஸவெஷாம்ஙிலயஊ-ா ணாஊ-ஞூமொவெஷவொவியிஃ " ( ஸர்வேஷாம்கிலதர்மாணுமுதத மோவைஷ்ணவோவிதிঃ ) என்கிறபடியே – பகவத்ஸபாஸத்தாலேயாயிருக்கிறபடியையும், அதில்லையாகில எல்லாநன்மைகளுமுண்டானாலும் அவையடையத்தண்ணிதாயிருக்கிறபடியையும்சொல்லி, தம்மாலேதிருந்தின ஸ்ரீவைஷ்ணவாகள் திருவடிகளிலேவிழுந்தும், திருந்துகைக்கு யோக்யதையுடையாரைத் திருத்தியும், திருந்தாதாரை யுபேக்ஷித்தும், இப்படி பாகவதசம்ருத்திக்கு மஙகளாசாஸநம் பண்ணுகிறார் .........*

## ஜீயர் அரும்பதம்.

பொலிகபொலிகப்ரவேஸ, இத்திருவாய்மொழிக்கு த்வேதாசங்கதி ( இத்திருவாய்மொழியை யித்யாதியாலும், நண்ணுதாரித்யாதியாலும் ) * ஒன்றுந்தேவுக்கு மித்திருவாய்மொழிகளும் நேரேசங்கதி; நடுவே * கையார்சக்கரம்-ப்ராஸங்கிகம். ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையென்றது - ஆழ்வாருபதேசத்தாலேதிருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களுடைய சம்ருத்தியையென்றபடி. நித்யசூரிகளிங்கேவரவென்றது - " தேவர்கள்தாமும்புகுந்து " " நேமிபிரான்றமர்போந்தார் " என்னுமவற்றைப்பற்ற. இங்குள்ளார்பக்கலிலே ப்ராதாந்யமாவது - மங்களாஸாஸநவிஷயத்வம்.

பாட்டுப்ரமேயங்களையுட்கொண்டுவிவரணம் ( தாம்பகவதித்யாதி ) சாத்த்விகரடையவென்றது - " கடல்வண்ணன்பூதங்கள் " என்றத்தைப்பற்ற. " மலியப்புகுந்து " என்றத்தைப்பற்ற (விஸ்த்ருதராயென்றது) (அநவதாநத்தாலும் அஜ்ஞாநத்தாலும் - ராஜஸராயும் தாமஸராயுமுள்ளார்) என்றங்வயிப்பது. சங்குசிதராயென்றது - "உள்ளீரேல்" என்றத்தைப்பற்ற. (சாத்த்விகர்பரிக்ரஹித்ததாகையாலே) என்றதுக்குமூலம் - " மேவித்தொழுமடியாரும் பகவரும்மிக்கதுலகே " என்றது. (உத்தமதர்மமானவைஷ்ணவதர்மமே) என்றவிடத்திலே - " [illegible]
[illegible]
[illegible]

வ்ருத்தம் பஹுவிதம் யாஸாம் நயா ஸ்வயம் நாதம் ஸஹஸ்ருதீ
ஞானி ஸ்வயம் தம் ஸ நம் ஹந் நம் நம் " ( த்ருஷ்டேபஹ்ருத்யபாவாதஸமி
திவிஷயேலாகவஸ்யாநுரோதாச்சாஸ்த்ரேணவாவஸேயேவிஹதிவிரஹிதேநாஸ்தி
கத்வப்ரஹாணாத் । நாதோபஜ்ஞம்ப்ரவ்ருத்தம் பஹுவிருபசிதம்யாமுநேய ப்ரபந்
தைஸ்த்ராதம்ஸம்யக்யதீந்த்ரைரிதமகிலதமஃகர்ஶநம்தர்ஶநம்நஃ ) என்கிறஶ்லோகம
நுசந்தேயம். வைஷ்ணவதர்மமேப்ரஸித்தமாயென்றது - " பெரியகிதயுகம்பற்றி "
என்றத்தைப்பற்ற. " திரியுங்கலியுகம்நீங்கி " என்றத்தைபபற்ற ( அதுக்குவிருத்தத
ர்மங்களித்யாதி ) " சமயத்தையெல்லாமெடுத்துக்களைவன " என்றத்தைப் பற்ற
வாதல். தேசகாலங்களென்றது - "மண்மேல், கலியும்கெடும்" என்றத்தைப்பற்ற.
இந்தவிரண்டும் - அதிகார்யங்கங்களுக்குமுபலக்ஷணம். பாகவதஸ்பர்ஶத்தாலேயெ
ன்னவேண்டியிருக்க, பகவத்ஸ்பர்ஶத்தாலேயென்றது - பாகவதர்களுக்கு பகவா
னோடுண்டான வவிநாபாவ சம்பந்தத்தைப்பற்றவென்றுகருத்து. (ஸர்வேஷாமிதி)
" ஸர்வேஷாமபி தர்மாணாமுத்தமோ வைஷ்ணவோ விதி: । ரக்ஷதே
பகவாந்விஷ்ணுர்பக்தாநாத்மஶரீரவத்" ( ஸர்வேஷாம்கிலதர்மாணாமுத்தமோவை
ஷ்ணவோவிதிஃ । ரக்ஷதேபகவாந்விஷ்ணுர்ப்பக்தாநாத்மஶரீரவத் ) இதிமோக்ஷதர்
மே. ஸர்வேஷாம்தர்மாணும் மதயேவைஷ்ணவோவிதிருத்தமஃ, பகவாந்விஷ்ணுர்
ப்பக்தாநாத்மஶரீரவதரக்ஷதே இத்யந்வயஃ; விதிஃ - தர்மஃ; இதுஉத்தமமானபடி
யென்னென்ன; ஸர்வேஶ்வரன் ஸ்ரீவைஷ்ணவர்களை " ஜ்ஞாநீத்வாத்மைவ மே
மதம் " ( ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம் ) என்று - தனக்குதாரமாகக்கொள்ளுகை
யாலே. பகவத்சம்பநதமுண்டானால் தேசகாலங்களுக்கு நன்மையுண்டென்றுசொ
ல்லுகையாலே, இந்தசம்பந்தமில்லாதபோது எல்லாம் வ்யர்த்தமாமென்றருளிச்
செய்தது - இத்திருவாய்மொழியிலே உக்தமன்றிக்கேயிருநதாலும், ப்ரதிகோடித
வேநார்த்தாத்சித்தம். "தொழுதுதொழுதுநின்றார்த்தும்" என்றத்தைப்பற்ற (திரு
வடிகளிலேவிழுந்தென்றது) திருத்தியும், உபேக்ஷித்துமென்றது - " தொழுதுய்மி
னீரோ, " " உய்யும்வகையில்லை " என்றத்தைப்பற்ற .... .. . . ................ .. . *

---

## இரண்டாந்திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

---

பொலிகபொலிகபொலிகபோயிற்றுவலலுயிர்சசாப
நலியுநரகமுநைந்தநமனுக்கிங்கியாதொன்றுமில்லை
கலியுங்கெடுங்கண்டுகொண்மின்கடல்வண்ணன்பூதங்கண்மண்மேன்
மலியப்புகுந்திசைபாடியாடியுழிதரக்கண்டோம்.

### ஆறுயிரப்படி.

ஸர்வாத்மாக்களுடைய ஸர்வபாபங்களும்போய், தத்பல பூமியா
ன நரகங்களும் தத்பல யாதநாரஹிதங்களாய், தத்பலாநுபவ ப்ரயோஜ
னனாயமனும் ஸ்வகர்த்தவ்யரஹிதனாய், இனிமேலும் ரௌரவாதிநரக

யாதநாஸ்பதமான வஸைவஷ்ணவஜந்துக்களுளவாகாதபடியாகவும், எம்பெருமானுடைய வபரிமித காம்பீர்யௌதார்யாதி கல்யாணகுணநுபவலப்தஸத்தாகரான ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்தஜகத்தெல்லாம் நிறையும்படி வந்து புகுந்து, எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுணவிபவசேஷ்டிதங்களைப் பாடி யாடி வர்த்திக்கக் காணப்பெற்றோம்; இந்த ஸம்ருத்தி நித்யஸித்தையாகவேணுமென்கிறார் ................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நிரவதிக மாஹாத்ம்யயுக்தனான ஸர்வேஶ்வரனாலே லப்தஸத்தாகரான பாகவதருடைய ஸம்ருத்தியைக்கண்டு மங்களாசாஸநம்பண்ணுகிறார்.

கடல் - ரத்நாகரமாய் தர்ஶநீயமான கடல்போலே. வண்ணன் - குணவைலக்ஷண்யத்தாலும ரூபவைலக்ஷண்யத்தாலும் அபரிச்சிந்நமாஹாத்ம்யனானஸர்வேஶ்வரனாலே. பூதங்கள் - லப்தஸ்வரூபஸத்தாகரான பாகவதரானவர்கள். மண்மேல் - பகவத்குணங்களுக்கு மேட்டுமடையானபூமியிலே. மலிய - ஸம்ருத்தமாம்படி. புகுந்து - வந்துபுகுந்து. பகவத்குணங்களை, இசை - இசையிலே. பாடி - பாடி. ஆடி - ஹர்ஷப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி. உழிதர - எங்கும்வ்யாபரிக்க. கண்டோம் - கண்டோம். ஆதலால், வல்லுயிர்ச்சாபம் - ஆத்மாவுக்குவந்தேறியாய் அநுபவவிநாஶ்யமாய் ப்ரபலமான அவித்யாதிரூபமானசாபமானது. போயிற்று - நஶித்துப்போயிற்று. அவித்யாகர்மாதிகள் போகையாலே, நலியும் - தத்பலமாய் நலியும். நரகமும் - நரகங்களும். நைந்த - சிதிலமாயிற்றின. ஆதலால், நமனுக்கு - தந்நிர்வாஹகனானயமனுக்கு. இங்கு - இந்தவிபூதியில். யாது - நிர்வாஹ்யமாயிருப்பதேதேனும். ஒன்றும் - ஒருஅம்ஶமும். இல்லை - இல்லை. கலியும்-இதுக்கெல்லாமடியான காலதோஷமும். கெடும் - நசியாநிற்கும். கண்டுகொண்மின் - “இது ‘கலௌ க்ருதயுகம் தஸ்ய’ (கலௌக்ருதயுகம்தஸ்ய) என்கிறபடியே கார்த்தயுகதர்மவ்ருத்திகளான பாகவதஸந்நிதியாலே வந்தது” என்னுமிடம ப்ரத்யக்ஷித்துக்கொள்ளுங்கோள். பொலிக பொலிக பொலிக - இது ஸம்ருத்தமாகவேணும், த்ரிராவ்ருத்தி - “ஶாந்திஶ்ஶாந்திஶ்ஶாந்தி:” (ஶாந்திஶ்ஶாந்திஶ்ஶாந்தி:) என்கிற ஶ்ருதிச்சாயையாலே.

பூதஶப்தம் நபும்ஸகமாகையாலே அஃறிணை....................................

## ஈடு - முதற்பாட்டு.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்தியைக் கண்டு மங்களாசாஸநம் பண்ணுகிறார்.

(பொலிகபொலிகபொலிக) ஸம்ருத்தமாகவேணும், ஸம்ருத்தமாகவேணும், ஸம்ருத்தமாகவேணும். “ஶாந்திஶ்ஶாந்திஶ்ஶாந்தி:” (ஶாந்திஶ்ஶாந்திஶ்ஶாந்தி:) என்று வைதிகமான மங்களாசாஸநங்கள் முக்கால் சொல்லக்கடவதாயிருக்குமிறே. [illegible]ற்படபகவத்ஸம்ருத்திக்கு மங்களாசாஸநம்பண்ணி, பின்னை பாகவ[illegible]ம்ருத்திக்கு மங்களாசாஸநம் பண்ணவேண்டாவோபெரியாழ்வா[illegible]போலே” என்ன; “அப்படியேயன்றோசெய்தது, * வீற்றிருந்தேழுலகிலே - பகவத்ஸம்ருத்திக்கு மங்க

ளாசாஸநம்பண்ணினார்கண்டீரோ ; பின்னை இதிலே – பாகவதஸம்ருத்தி க்கு மங்களாசாஸநம்பண்ணுகிறார்" என்று ஜீயரருளிச்செய்தார். பர மாசார்யரான இவரைப் பின்சென்று ரித்தனைகாணும் பெரியாழ்வாரும்.

( போயிற்றுவல்லுயிர்ச்சாபம ) உயிரினுடைய வலியசாபம்போ யிற்றது. சாபோப ஹதனைப்போலே அநுபவித்தாலல்லது நசியாமை யாலே, பாபத்தை – சாபமென்கிறது. ஆத்மாவைப் பற்றிக்கிடக்கிற அ வித்யாதிகள் போயிற்றது.

( நலியும்நரகமும்நைந்த ) கர்மாநுகூலமாக சேதநனைக்கொண் டுபோய் நலியக்கடவதான நரகங்களும் சிதிலமாயிற்றின. நரகாநுபவத் துக்காளில்லாமையாலே, நரகங்களும் கட்டிமேய்க்கை தவிர்ந்து கோப் புக்குலைந்தது.

அவ்விடங்களுக் கதிகாரிகளா யிருக்குமவர்கள் செய்ததென்னெ ன்னில் ( நமனுக்கிங்கியாதொன்றுமில்லை) யமனுமினிப்பரமபதத்திலே போ யாராயிலாராயு மத்தனை, தனக்கடைத்த விந்நிலத்தி லாராயலாவ தொன்றில்லை. ( யாதொன்றுமில்லை ) தர்மபுத்ரனுக்கு மொருகால்நரக தர்ஶநம்பண்ண வேண்டிற்றிறே, அதுக்குமாளில்லை.

இவையெல்லா முண்டாவது க்ருதயுகத்திலேயன்றோ, கலியுகத் திலே யுண்டாமோ பின்னையென்னில் (கலியும்கெடும்) அந்தக்கலிகால மும் நசித்துப்போம். கீழ்சொல்லிக்கொண்டு போந்தவற்றை – பூதகா லபரமாக்கி, கலியும்கெடுமென்ற வித்தை – பவிஷ்யத்தாக்கி நிர்வஹிக்க வுமாம். அன்றிக்கே; இவையுமெல்லாம் போயிற்றின, அதுவும் நசித்த தென்றே யிருக்க வமையுமென்று, இங்ஙனே ஏகரீதியாகசொல்லவுமா ம். கலிக்கடைத்தகாலமாயிருக்கச்செய்தே * கெடுமாவதென்னென்னில் (கண்டுகொண்மின்) அநுபவத்தாலே யறியுமதுக்குபதேசம்வேணுமோ.

நீர் " இதுநசிக்கும் " என்றுசொல்லுகிற தென்கொண்டென்னி ல் (கடல்வண்ணனித்யாதி) பாகவதஸஞ்சார மில்லாமையிறே இப்பொ ல்லாங்குண்டாகைக்கடி, அதுண்டானபின்பிது நிற்குமோ. " ந தத்ர ஸ ஞ்சரிஷ்யந்தி. " ( நதத்ரஸஞ்சரிஷ்யந்தி. ) ( கடல்வண்ணன்பூதங்கள் ) பூதங்களென்கிறது – ( " ஸத்தாயாம் " (பூஸத்தாயாம்) என்று தா துவாகையாலே, ) அவன் ஸத்தையே ஸத்தையா யறுகையாலே. அவ னுடைய ஶ்ரமஹரமான வடிவழகையநுஸந்தித்து அத்தாலே தங்கள்ஸ த்தையாம்படி யிருக்குமவர்கள். அவனழகிலே தோற்றிருப்பா ருள்ளது நித்யவிபூதியிலேயன்றோ வென்னில் ( மண்மேல் ) இங்கேயென்று படி யெடுத்துக்காட்டுகிறார். பகவதநுபவத்துக்கு மேட்டுமடையான சம்சா ரத்திலே, மருபூமியில் தண்ணீர்போலே எங்கேனு மொருவரிருவருண் டாமத்தனையன்றோவென்ன ( மலியப்புகுந்து ) " அடியார்கள்குழாங்க

ள" என்கிறபடியே, நெருங்கப்புகுந்து. ( இசைபாடியித்யாதி ) ப்ரீதி பரகர்ஷத்தாலே பாடுவது, உடம்பிருந்தவிடத்திலிராதே யாடுவதாய்க் கொண்டு, யமாதிகள் தலைமேலே யடியிட்டுச் சஞ்சரிக்கக்கண்டோம். உழிதருகை — நிர்ப்பயமாக வெங்கும சஞ்சரிக்கை.

( கடல்வண்ணனென்றுதொடங்கி, உழிதரக்கண்டோம்— ) போயிற்றுவல்லுயிர்ச்சாபம், நலியும் நரகமும்நைந்த, நமனுக்கிங் கியாதொன்றுமில்லை, கலியுங்கெடுங்கண்டுகொண்மின்—பொலிகபொலிகபொலிக*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (பொலிகபொலிகவித்யாதி) ஸ்ரீவைஷ்ணவஸம்ருத்தியையென்றது - "கடல்வண்ணன்பூதங்கள்" இத்யாதியைப்பற்ற. "பொலிகபொலிகபொலிக" என்றத்தைப்பற்ற ( மங்களாசாஸநம்பண்ணுகிறுரென்றது )

( பெரியாழ்வாரைப்போலேயென்ன ) நம்பிள்ளையென்று கூட்டிக்கொள்வது. ( வீற்றிருந்தேழுலகிலே ) "போற்றி" என்று - ( பகவத்ஸம்ருத்திக்கு மங்களாசாஸநம்பண்ணிஞர ) என்றபடி. பெரியாழ்வாரைப்போலே யென்று - பின்பவதரித்த பெரியாழ்வாரை பூர்விகரான நம்மாழ்வாருக்கு த்ருஷ்டாந்தமாகச் சொல்லக்கூடுமோவென்ன; அங்ஙனல்ல, பெரியாழ்வாரே நம்மாழ்வாரைப் பின்சென்ருரென்கிருர் ( பரமாசார்யரானவித்யாதி )

பாபத்துக்கு - * ஶாபஶப்தவாச்யத்வங்கூடுமோவென்ன ; லக்ஷணயாகூடுமென்கைக்காக, ஶக்யஸம்பந்தத்தை யுபபாதிக்கிருர் (ஶாபோபஹதனாயித்யாதி); ஜாத்யேகவசநமாக்கி, *ஶாபத்துக்கு - அவித்யாதிகளாக வாத்தாந்தரமாதல், விவரணமாதல் ( ஆத்மாவையித்யாதி ) "உயிர் - வல் - சாபம் - போயிற்று" - ஆத்மாவைப்பற்றிக்கிடக்கிற வலிய வவித்யாகர்மாதிருப ஶாபமானது நஶித்துப்போயிற்றென்று ஶப்தார்த்தம.

"நரகம்" என்றத்தை - ஜாத்யேகவசநமாக்கி யருளிச்செய்கிருர் ( நரகங்களுமென்று ) பாபமபோனமாத்ரததாலே நரகங்களுக்கு ஸ்வரூபேண சைதில்யங்கூடுமோவென்ன ( நரகாநுபவத்துக் கித்யாதி ) கட்டிமேய்க்கை - பரிபாலநம். கோப்பு - கட்டு. ஶவரணை யென்றபடி.

"இங்கு" என்றதுக்கு ப்ரதிகோடித்வேநோபஸ்திதமானத்தை யருளிச்செய்கிருர் ( யமனுமித்யாதி ) ஶப்தார்த்தம் ( தனக்கித்யாதி ) ( அதுக்கும் ) தர்மபுத்ரனைப்போலே யொருகால் நரகதர்ஶநம்பண்ணுகைக்கும்.

"கலியுங்கெடும்" என்றதுக்கு - பவிஷ்யத்கால பரமாகவும், பூதகாலபரமாகவும் யோஜநாத்வயம். பவிஷ்யத்காலபரமானபோது, "கெடும்" - ( போம் ) போகப்புகுகிறதென்றபடி. பூதகாலபரமானபோது, "கெடும்-" கெட்டதென்றபடி. ( ஏகரீதியாக ) "போயிற்று, நைந்த" என்கிற பதங்களோடே ஏகரீதியாக.

பாகவதசஞ்சார முண்டாஞல் பொல்லாங்குகள் போமோவென்ன ( பாகவதசஞ்சாரமித்யாதி ) "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே । நதத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதிதுர்பிக்ஷதஸ்கரா: ।" ( யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோமஹாபாகோமஹீயதே । நதத்ரஸஞ்சரிஷ்யந்தி வ்யாதிதுர்பிக்ஷ

தஸ்கராஃ. ) வ்யாதிதுர்ப்பிக்ஷதஸ்கராஃ என்றது - திருமந்த்ரத்தில் த்ருதீயபதோக்தமான பகவதேகபோகத்வ விரோதியான விஷய ப்ராவண்யத்தையும், மத்யம பதோக்தமான பகவதேகோபாயத்வ விரோதியான ஸ்வரக்ஷணேஸ்வாந்வயமடியாகவருகிற உபாயதுர்ப்பிக்ஷத்தையும், ப்ரதமபதோக்தமான பகவதநந்யார்ஹசேஷத்வவிரோதியான வாத்மாபஹாரமாகிற தஸ்கரத்தையும் சொல்லுகிறது. யத்வா, நாட்டில் விளைகிற வ்யாத்யாதிகளைச் சொல்லவுமாம். இங்கே- " மஹாத்மாக்களுண்டாயிருக்கச்செய்தே வ்யாதிதுர்ப்பிக்ஷதஸ்கரங்களுண்டாகைக்கடியெது " என்ன, "அபூஜ்யயத்ர பூஜ்யந்தே பூஜ்யயத்ராவமாநிதாஃ। தத்ரத்ரீணிவிவர்த்தந்தே துர்ப்பிக்ஷம்மரணம்பயம் " ( அபூஜ்யாயத்ரபூஜ்யந்தே பூஜ்யாயத்ராவமாநிதாஃ । தத்ரத்ரீணிவிவர்த்தந்தே துர்ப்பிக்ஷம்மரணம்பயம் ) என்றருளிச்செய்வர். " பூதங்கள் " என்கிறவிடத்திலே - " பூஸத்தாயாம் " ( பூஸத்தாயாம் ) என்றதிலே நோக்கு. படி - பூமி, மாதிரியும். " மண்மேல் " என்றத்தையுங் கூட்டிக்கொண்டு "மலியப்புகுந்து" என்றதுக்கவதாரிகை (பகவதநுபவத்துக்கித்யாதி)

கடல்வண்ணன் பூதங்கள் தொடங்கி, கண்டோம், போயிற்று வல்லுயிர்ச்சாபந்தொடங்கி, கண்டுகொண்மின், பொலிகபொலிகபொலிக வித்யந்வயஃ....... *

-------

# இரண்டாம்பாட்டு.

கண்டோங்கண்டோங்கண்டோங்கண்ணுக்கினியனகண்டோந்
தொண்டீரெல்லீரும்வாரீர்தொழுதுதொழுதுநின்றார்த்தும்
வண்டார்தண்ணந்துழாயான்மாதவன்பூதங்கண்மண்மேற்
பண்டான்பாடிநின்றாடிப்பரந்துதிரிகின்றனவே.

## ஆறாயிரப்படி.

(கண்டோம) கண்டோம் கண்டோம் கண்டோம், கண்ணுக்கினியனகண்டோம், தொண்டீரெல்லீரும்வாரீர், தொழுதுதொழுது நின்றார்த்தும். அதென்னென்னில்; வண்டார்தண்ணந்துழாயான் மாதவன்பூதங்கள் மண்மேல் பண்டான்பாடி நின்றாடிப்பரந்து திரிகின்றனவென்கிறார்.......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரத்வப்ரகாசகமான ஸ்ரீயஃபதித்வாதிகளையுடைய சர்வேஸ்வரன்குணங்களிலே வித்தரானபாகவதரைக்கண்டுகந்து, மங்களாசாஸநம்பண்ணவாருங்கோளென்று அநுகூலவர்க்கத்தைக்கூட்டிக்கொள்ளுகிறார்.

வண்டு - வண்டுகளாலே. ஆர் - பூர்ணமாய். தண்அம் - செவ்வியையுடைத்தான. துழாயான் - திருத்துழாய்மாலையையுடையனாய். மா - அவ்வழகையநுபவிக்கிறலக்ஷ்மிக்கு. தவன்-வல்லபனான சர்வேஸ்வரனுக்கு. பூதங்கள்-சேஷபூதரானவர்

கள். மண்மேல்-இந்தபோக்யதைக்கு நிலவரில்லாத பூமியின்மேலே, அநுபவபரவ ஶராய்க்கொண்டு, பண்தான்-பண்மிகும்படி. நின்று-நின்று. பாடி-பாடி. ஆடி-ப்ரேமபாரவஶ்யத்தாலேயாடி, பரந்து-எங்கும்பரந்து. திரிகின்றன-வ்யாபரியாநின்றார்கள். கண்ணுக்கு-நங்கண்ணுக்கு. இனியன-போக்யமானசம்ருத்திகளை. கண்டோம்-காணப்பெற்றோம். கண்டோம் கண்டோம் கண்டோம்-ஒருகால்கண்டுவிடுகையன்றியே, "ஸஹஸ்ரஶ:" (அஹமஸ்நாதஃ) என்று த்ரிராவ்ருத்திபோலே, நிரந்தராநுபவம்பண்ணப்பெற்றோம். தொழுதுதொழுது - இந்தப்ரீதிபரவசராய்க்கொண்டு நிரந்தராநுவ்ருத்திபண்ணி. நின்று-நின்று. ஆர்த்தும் - ஸஹர்ஷகோலாஹலம்பண்ணுவோம். தொண்டீர்-பகவத்பாகவதவிஷயத்தில் அநுகூலரானவர்களே. இப்போகத்தையிழவாதே, எல்லீரும்-எல்லாரும். வாரீர் - வாருங்கோள்..............*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

இவ்வைஷ்ணவ சம்ருத்தியை யநுபவிக்கைக்கு அநுகூலரெல்லாரும் வாருங்கோளென்கிறார்.

(கண்டோமித்யாதி) காணப்பெற்றோம். ப்ரீதிப்ரகர்ஷத்தாலே-பலகாலும்சொல்லுகிறார்.

(கண்ணுக்கினியனகண்டோம்) "கொடுவுலகங்காட்டேல்" என்று- அபாகவதரைக்கண்டவின்னாப்புத்தீர, பாகவதசமுதாயத்தைக்காணப்பெற்றோம்.

(தொண்டீரெல்லீருமவாரீர்) பாகவதவிஷயத்தில் சபலராய், "பேராளன்பேரோதும பெரியோரையொருகாலும் பிரிகிலேன்" என்றிருப்பாரடையத்திரளுங்கோள.

"வாருங்கோள்" என்கிறதென்ன ப்ரயோஜநத்துக்கென்னில் (தொழுதுதொழுதுநின்றார்த்தும்) ப்ரயோஜநத்துக்கு ப்ரயோஜநம்தேடவேணுமோ, கைமேலேப்ரயோஜநமன்றோ. வீப்ஸையாலே அதுதானேப்ரயோஜநமாயிருக்கிறது. ஆர்த்தும் – ஆர்த்துக்கொள்வோம். சஹர்ஷகோலாஹலம்பண்ணுவோம்.

(வண்டாரித்யாதி) வண்டுகள்மாறாதபடியான செவ்வித்துழாய் மாலையையுடையனாய், ஶ்ரிய:பதியாகையாலேவந்த வேற்றத்தையுடையனாயிருக்கிறவனுடைய ஶ்ரிய:பதித்வத்திலுமொப்பனையிலும் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள், "ஒண்டொடியாள்திருமகளும்நீயுமே" என்னும்தேசமொழிய, விருத்தமானபூமியிலே, பரப்போரிதாராயன்றிக்கே தங்கள் ப்ரீதிக்குப்போக்குவிட்டு, பண்மிகும்படிநின்று தாங்களேபாடி, அதிருந்தவிடத்திலிருக்கவொட்டாமையாலே யாடி, பரந்துதிரிகின்றன.

கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியனகண்டோம், தொண்டீரெல்லீரும்வாரீர் தொழுதுதொழுது நின்றார்த்தும்..........*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு ( கண்டோமித்யாதி ) இவ்வைஷ்ணவசம்ருத்தியையெ ன்றது - "மாதவன்பூதங்கள்" இத்யாதியைப்பற்ற. "தொண்டீரெல்லீரும்வாரீர்" என்றத்தைப்பற்ற (அநுபவிக்கைக்கித்யாதி)

இனியன - இனியவஸ்துக்களை. (கொடுவுலகங்காட்டேல்) க்லேசோத்தரமா ன ஜகத்தையெனக்குக்காட்டாதொழியவேணும். இன்னாப்பு-வெறுப்பு. பாகவதஸ முதாயமென்றது - "இனியன" என்றபஹுவசநத்தைப்பற்ற.

"தொண்டீர்" என்று - பாகவதபக்தரை விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( பாக வதவிஷயத்தில் சபலராயென்று ) (பேராளனித்யாதி) சர்வாதிகனுடைய திருநா மங்களை சங்கீர்த்தநம்பண்ணுகிற மஹான்களை க்ஷணகாலமும் பிரியக்ஷமனல்லே னித்யர்த்தః.

(என்னப்ரயோஜநத்துக்கென்னில்) என்றதுக்குத்தரம் - "தொழுது" என் று. அதாவது - வேறொருப்ரயோஜநார்த்தமாக வன்றழைக்கிறது, உத்தேஸ்யரான பாகவதர்களைத்தொழுகைக்காகவென்றபடி. ஆனால், பாகவதர்களைத்தொழுகை தா னுமொரு ப்ரயோஜநத்துக்காகவாகவுங்கூடுமே, அதுக்காகவோ வழைக்கிறதென் னில்; அதுக்குத்தரம் - "தொழுது தொழுது" என்கிறவீப்ஸை. இந்தவீப்ஸைக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் ( ப்ரயோஜநத்துக்கித்யாதி ) கைமேலேயென்றது- சாடு; அஞ்சலியும், ஹஸ்தகதமும். "ஆர்த்தும்" என்றதுக்கர்த்தம் ( ஸஹர்ஷகோ லாஹலமித்யாதி ) 71569

(வண்டார்) ஆர்தல் - பொருந்துதலாகையாலே ( மாருதபடியானவென்ற து ) "பண்டான்பாடி" என்றதுக்குபாவம் ( பரப்ரோரிதராயித்யாதி ) (பண்டான்) தானென்றது-தாமென்றபடியாய், தாங்களேபண்பாடியென்றுபொருள்.

வண்டார்தண்ணந்துழாயானென்றுதொடங்கி (கண்டோம் கண்டோம்) இ த்யாதிக்கு முன்னேகூட்டிக்கொள்வது; (ஆர்த்தும்) இத்யந்வய இதிசேஷః ......*



## மூன்றாம்பாட்டு.

திரியுங்கலியுகநீங்கித்தேவர்கடாமுமபுகுந்து
பெரியகிதயுகம்பற்றிபபேரின்பவெள்ளம்பெருகக
கரியமுகில்வண்ணனெம்மான்கடல்வண்ணன்பூதங்கண்மண்மே
லிரியப்புகுந்திசைபாடியெங்குமிடங்கொண்டனவே.

## ஆறாயிரப்படி.

( திரியும் ) வைஷ்ணவதர்ம விபர்யயஹேதுவான கலியுகம்நீங்கி, ஸர்வகாலமும் கலியுகாத்ய வ்யவஹிதமாய்க்கொண்டு கேவல க்ருதயுக மேயாய்ச் செல்லும்படியாகவும், * அயர்வறுமமரர்களும் புகுந்து பேரி ன்பவெள்ளம் பெருகும்படியாகவும், கரியமுகில்வண்ண னெம்மான்கட ல்வண்ணன் பூதங்கள் மண்மேலிரியப்புகுந்து இசைபாடி யெங்குமிடங்

கொண்டன - இவர்களைத் தொழுது தொழுது நின்றார்த்தும், தொண் டரோல்லீரும வாரீரொன்கிறார்...........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமான வடிவையுடையனான ஸர்வேஸ்வரனுடைய ஸௌந்தர்யாதிகளில் வித்தரான பாகவதர், இந்த விபூதிஸூரிகளுக்கும் நிலமாம்ப டி ஸர்வப்ரதேசத்திலும் அவஷ்டம்பித்தார்களென்கிறார்.

திரியும் - *சேதநருடைய ஸ்வபாவங்களதரோத்தரமாம்படியான, கலியுக ம் - கலியுகம். நீங்கி - கடகசுப்போய். தேவர்கள் - அஸ்கலிதஜ்ஞாநௌஜ்ஜ்வல்யத் தையுடைய ஸூரிகளும். தாமும - ஸ்வயமேவ. புகுந்து - ப்ரவேஸித்து. பெரிய-யு காந்தரவிச்சேதமில்லாதபடி யேகாகாரமாய்வளர்ந்த. கிதயுகம் - க்ருதயுகமானது. பற்றி - கைக்கொண்டு. பேரின்பவெள்ளம் - பகவதநுபவஜநிதமான அபரிச்சிந்நா நந்தஸாகரம். பெருக - மேன்மேலும் பெருகும்படியாக. கரிய - ஶ்யாமளமான. முகில் - மேகம்போலே அநுபாவ்யமான. வண்ணன் - வடிவை யுடையனாய்க்கொ ண்டு. எமமான் - எனக்கு ஸ்வாமியாய். கடல்வண்ணன் - அநவதிககுண ஸாகரனா ன ஸர்வேஸ்வரனுடைய. பூதங்கள் - ஸ்வபாவங்களிலே வித்தரான பாகவதர். ம ண்மேல் - இப்பூமியிலே. இரிய - ப்ரீதிகோலாஹலம் பிறக்கும்படி. புகுந்து - ப்ர வேசித்து. ஹர்ஷத்தாலே, இசை - கீதங்களை. பாடி - பாடிக்கொண்டு. எங்கும்-ஸ ர்வப்ரதேஶங்களும். இடம் - தங்களுக்கிடமாம்படி. கொண்டன - கைக்கொண்டா ர்கள்.

தொழுது தொழுது நின்றார்த்தும் - வாரீரொனறநவயம் ......................*

## ஈடு - மூன்றாம்பாட்டு

நித்யசூரிகளுககும் புகுந்து பரிமாறலாம்படி சம்ஸாரமடைய ஸ்ரீவைஷ்ணவாகளேயாயிற்றென்கிறார்.

( திரியும்கலியுகம்நீங்கி ) " ஹவிஷ்ய தஂ்யரொ தூஂ " ( பவிஷ் யத்யதரோத்தரம் ) என்கிறபடியே பதார்த்த ஸ்வபாவங்கள் மாறும்ப டியான கலிகாலமானது கழிந்தது. கத்வரஸ்வபாவமான காலமென்று மாம். ( தேவர்கள்தாமும்புகுந்து ) இவ்வருகிலாக்கரான விந்த்ராதிகள ன்றிக்கே, அவாகள் கந்தமும் பொறுக்கமாட்டாதே சர்த்திபண்ணும் நித்யசூரிகளுமகப்பட " இவ்விடம சமசாரம்" என்று பாராதேபுகு ந்து. ( பெரியகிதயுகம்பற்றி ) கலிகாலாதிகளால் வ்யவஹிதமல்லாத ஒ ருபோகியான க்ருதயுகத்தையுடைத்தாய். அன்றிக்கே, ஆப்பான் "ஆதி ஸ்ருஷ்டியில் க்ருதயுகத்தைக்காண்சொல்லுகிறது" என்பராம். ( பேரி ன்பவெள்ளம்பெருக) * அந்தமில்பேரின்பவெள்ளமிங்கேயுண்டாம்படி. ( பெரியகிதயுகம்பற்றிப்பேரின்பவெள்ளம்பெருக ) ஆதி க்ருதயுகத்தை ப்பற்றி நடுவுள்ள காலதோஷங்கள் தெரியாதபடி பேரின்பவெள்ளம் பெருகிற்று. " கிண்ணகமித்தைப்பற்றிப் பெருகிற்று " என்னக்கடவதி றே. ( பற்றி ) கலியைப்போகப்பற்றி, க்ருதயுகத்தைப் புகுரப்பற்றியெ

ன்றுமாம். ( கரியவித்யாதி ) "மேகஸ்யாமம்" ( மேகஸ்யாமம் ) என்கிற வடிவைக்காட்டி யென்னை யெழுதிக்கொண்டாப்போலே யெழுதிக்கொள்ளும்ஸ்ரமஹரமானவடிவிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள். ( மண்மேலிரியப்புகுந்து ) பெரிய வாரவாரத்தோடே சஞ்சரிக்கலாவது நித்யவிபூதியிலேயிறே. சம்ஸாரத்திலே ஆரவாரத்தோடே புகுந்து. ( இசைபாடி ) பகவதநுபவஜநித ப்ரீதியாலேபாடி. ( எங்குமிடங்கொண்டனவே) எங்கும் தங்களுக்கு ஸ்த்தாநமாகக் கொண்டாாகள். பாஹ்ய குத்ருஷ்டிகளுக் கிடமில்லாதபடி சிஷ்யர்களும் ப்ரசிஷ்யாகளுமாய்வ்யாபித்தார்கள். "ப்ராகாரம்வாநரீக்ருதம்" (ப்ராகாரம்வாநரீக்ருதம) என்கிறபடியே ப்ரதிகூலாக்கிடமில்லாதபடி யாயிற்று................... *

## ஜீயர் அருளிச் செய்த அரும்பதம்.

மூன்றுமபாட்டு. ( திரியுமித்யாதி ) நித்யஸூரிகளுக்கும் புகுந்தென்றது - "தேவர்கள்தாமும்புகுந்து" என்றத்தைப்பற்ற. "எங்குமிடங்கொண்டன" என்றத்தைப்பற்ற ( சம்ஸாரமித்யாதி )

"திரியும்" என்றதுக்கு - "பால்திரிந்தது" என்றுப்போலே, பதார்த்தஸ்வபாவங்கள் மாறும் கலியுகமென்கிற மூந்தினவர்த்ததை ப்ரமாணபூர்வகமாகவருளிச்செய்கிறார் ( பவிஷ்யதீத்யாதி ) மஹாபாரதே மோக்ஷதர்மே த்விசத்வாரிம்ஸே பகவான், "ததஃகலியுகேப்ராப்தே தசார்த்தே யுகபர்யயே। புத்தோநாமமுநிர்ப்பூத்வா மோஹயிஷ்யாமிமாநவான்" ( ததஃகலியுகேப்ராப்தேசதார்த்தேயுகபர்யயே। புத்தோநாமமுநிர்ப்பூதவாமோஹயிஷ்யாமிமாநவான் ) இத்யாரப்ய, "விப்ராஸ்ஸம்ஸாதிதாஸ்தஸ்மிந் பவிஷ்யந்தி கலௌயுகே। அல்பதோயாஸ்ததோமேகா அல்பஸஸ்யாவஸுந்தரா। அல்பக்ஷீராஸ்ததோகாவ அல்பவீர்யாஸ்சப்ராஹ்மணாஃ। நிவ்ருத்தயஜ்ஞாஸ்ஸ்வாத்யாயபிண்டோதகவிவர்ஜிதாஃ। அநத்யாயேஷ்வதீயந்தே ப்ராஹ்மணாஸ்ஸௌசவர்ஜிதாஃ। அக்நிஹோத்ராஸ்ச ஸீதந்தி குருபூஜா ப்ரணஸ்யதி। ப்ராஹ்மணாஸ்ஸர்வயஜ்ஞேஷு ப்ரசரந்தி நதக்ஷிணாஃ। தத்பூஜாஃப்ரளயம்யாந்தி காலதர்மேண சோதிதாஃ। நஸ்ருண்வந்தி பிதுஃபுத்ரா நஸ்நுஷா நஸஹோதராஃ। நப்ருத்யா நகளத்ராணி பவிஷ்யத்யதரோத்தரம்" ( விப்ராஸ்ஸமுத்ஸாதிதாஸ்யந்திமயிபுத்தத்வமாகதே। அல்பதோயாஸ்ததோமேகா அல்பஸஸ்யாவஸுந்தரா। அல்பக்ஷீராஸ்ததோகாவ அல்பவீர்யாஸ்சப்ராஹ்மணாஃ। நிவ்ருத்தயஜ்ஞாஸ் ஸ்வாத்யாயபிண்டோதகவிவர்ஜிதாஃ। அநத்யாயேஷ்வதீயந்தே ப்ராஹ்மணாஸ்ஸௌசவர்ஜிதாஃ। அக்நிஹோத்ராஸ்சஸீதந்திகுருபூஜாப்ரணஸ்யதி। ப்ராஹ்மணாஸ்ஸர்வயஜ்ஞேஷுப்ரசரந்திநதக்ஷிணாஃ। தத்பூஜாஃப்ரளயம்யாந்தி காலதர்மேணசோதிதாஃ। நஸ்ருண்வந்திபிதுஃபுத்ரா நஸ்நுஷாநஸஹோதராஃ। நப்ருத்யாநகளத்ராணி பவிஷ்யத்யதரோத்தரம் ) இதி. கத்வரமாவது-போவதுவருவதாகை. "தாமும்" என்ற சப்தத்துக்கு பாவம் ( இவ்வருகிலித்யாதி ) . "தாமும்" என்ற சப்தம்-ப்ராதாந்யத்திலேயாய், அப்படி ப்ரஸித்தரானவர்களுமென்றபடி. ஆக்கரான - ஸ்ருஜ்ய

ரான. ( சர்த்திபண்ணும் ) என்றது - ஹேயதையைப்பற்ற. புகுந்து - புகுரலாம் படி. "பெரியகிதயுகம்" என்றதுக்கர்த்தத்வயம். மூந்தினது ( கலிகாலாதிகளா லித்யாதி ) கலிகாலாதிகளாலென்றது- கலித்ரேதாத்வாபரங்களாலென்றபடி. க்ருதயுகத்தையுடைத்தாயென்றது - உடையராயென்றபடி. "பற்றி" என்றதுக்கர்த்தம் ( உடைத்தாயென்றது ) யுகாந்தரவ்யவஹிதமல்லாத - க்ருதயுகமென்றுசொன்னது-"பெரிய" என்று தைர்க்யம சொன்னதுக்குத் தாத்பர்யம். "பற்றி" என்கிறவிது - * பூதங்களுக்கு விசேஷணம். ( வ்யவஹிதமல்லாத - க்ருதயுகமென்றது) அபூதமென்று கருத்து. இந்த முதல்பக்ஷத்திலே யந்வயம் ; தேவர்கள் தாமும்புகுரலாம்படியாகவும் - பேரின்பவெள்ளம் பெருகலாம்படியாகவும் - திரியும் கலியுகம்நீங்கி - பெரியகிதயுகத்தையுடையரான - கரியமுகில்வண்ண னெம்மான் கடல்வண்ணன்பூதங்கள் மண்மே லிரியப் புகுந் திசைபாடி யெங்கு மிடங்கொண்டன வென்று.

"பெரியகிதயுகம்" என்றதுக் கிரண்டாமர்த்தம் ( அன்றிக்கே ஆப்பானித்யாதி ) இப்போது, பெரியவென்று-ஶ்லாக்யமாய், யுகாந்தர ஸம்ஸர்க்க தோஷமின்றிக்கே ஶ்லாக்யமான ஆதிஸ்ருஷ்டியில் க்ருதயுகமென்றபடி. இப்போது,"பற்றி" என்றது - தொடங்கியென்றபடி. இந்தபக்ஷத்திலந்வயம் ; திரியும் கலியுகம்நீங்கி- பெரியகிதயுகநதொடங்கிப் பேரின்பவெள்ளம் பெருகலாம்படியாகவும் - தேவர்கள்தாமும் புகுரலாம்படியாகவும் - கரியமுகில்வண்ண னென்று தொடங்கி மேலெல்லாம் யதாக்ரமம். தாத்பர்யம் ( அந்தமிலித்யாதி ) ஆப்பான் நிர்வாஹத்திலே, கீழையுங்கூட்டி ஸப்தார்த்தம் ( ஆதிக்ருதயுகத்தையித்யாதி ) த்விதீயார்த்தத்தில், "பற்றி" என்றால் - தொடங்கியென்று காட்டுமோவென்ன ( கிண்ணகமித்யாதி ) "கலியுகம்நீங்கி" என்றத்தையுங்கூட்டி, "பற்றி" என்றதுக்குமூன்றுமாத்தம் (கலியைப்போகப்பற்றியித்யாதி) போகப்பற்றி யென்றது - போயென்றபடியாய், "கலியுகம்நீங்கி" என்றததை விவரிக்கிறது. புகுரப்பற்றி யென்றது - வந்தென்றபடி. அதாவது - கலியுகம்போய் க்ருதயுகமவந்தென்று மூன்றுமர்த்தம். ஆக; "பற்றி" என்றதுக்கு - உடையராயென்றும், தொடங்கியென்றும், வந்தென்று மர்த்தத்ரயங்கண்டுகொள்வது. ( போகப்பற்றி, புகுரப்பற்றியென்று ) முழுச்சொல்லு.

ஶ்ரமஹரத்வம் - ஶ்யாமத்வம். திருமேனிக்கு த்ருஷ்டாந்தம் சொல்லுகிறவிடத்திலே மேகமாஜுலும் ஸமுத்ரமாஜுலுமொன்றேயமைந்திருக்க, "முகில்வண்ணன்" என்றும், "கடல்வண்ணன்" என்று மிரண்டையும் சொல்லுவானென்னென்கிற ஶங்கையிலே ; மூந்தினத்தை - த்ருஷ்டாந்தமாக்கி யருளிச்செய்கிறார் (மேகஶ்யாமமித்யாதி) (எழுதிக்கொள்ளும்) அவாகளை யெழுதிக்கொள்ளுமென்றபடி. இரிய - ஆரவாரித்து. "மண்மேல்" என்றதுக்குபாவம் ( பெரியவாரவாரத்தோடேயித்யாதி ) ஸப்தார்த்தம ( ஸமஸாரத்திலேயித்யாதி ) "எங்கும்" என்றதுக்கு பாவம் (பாஹ்யேத்யாதி) "கொண்டன" என்ற பஹுவசநத்துக்குத் தாத்பர்யம் ( ஶிஷ்யர்களுமித்யாதி ) வயாபித்ததுக்கு த்ருஷ்டாந்தம் ( ப்ராகாரமித்யாதி ) "कृत्स्नं हि कपिभिर्व्याप्तं प्राकारपरिखान्तरम्। ददृशू राक्षसा दीनाः प्राकारं वानरीकृतम्॥" (க்ருத்ஸ்நம்ஹிகபிபிர்வ்யாப்தம் ப்ராகாரபரிகாந்தரம் । தத்ருஶூராக்ஷஸாதீநாः ப்ராகாரம்வாநரீக்ருதம்) இதி யுத்தகாண்டே. "मेघश्यामं महाबाहुं स्थिरसत्त्वं दृढव्रतम्। कदा द्रक्ष्यामहे रामं जगतश्शोकनाशनम्॥" ( மேகஶ்யாமம்மஹாபாஹும்ஸ்திரஸத்த்வம் த்

ருடவ்ரதம் ( கதாத்ரக்ஷ்யாம்ஹேராமம் ஜகதஶ்ஶோகநாஶநம் ) இத்யயோத்யாகாண்டே பௌரஜநமநோரதஃ.

எங்குமிடங்கொண்டன - தொழுதுதொழுதுநின்றார்த்தும் - தொண்டீரொல்லீரும் வாரீரென்று கீழ்ப்பாட்டோடே யந்வயம்.................................*



# நான்காம்பாட்டு.

இடங்கொள்சமயத்தையெல்லாமெடுத்துக்களைவனபோலே
தடங்கடற்பள்ளிப்பெருமான்றன்னுடைப்பூதங்களேயாய்க்
கிடந்துமிருந்துமெழுந்துங்கீதம்பலபலபாடி
நடந்தும்பறந்துங்குனித்துநாடகஞ்செய்கின்றனவே.

## ஆறுயிரப்படி.

( இடங்கொள் ) சர்வஜகத்தையு மாக்ரமித்துக்கொண்டிருக்கிற வேதபாஹ்ய சமயங்களையெல்லா மெடுத்துக்களைவனபோலே, ஜகத்தெல்லாம் தடங்கடல் பள்ளிப்பெருமான் றன்னுடைப்பூதங்களேயாய், பரமபுருஷநிரவதிக கல்யாணகுணாம்ருதபாநத்தாலே மத்தராய்க்கிடந்துமிருந்துமெழுந்தும் கீதம்பலபலபாடிநடந்தும் பறந்தும் குனித்துமிங்ஙனே தர்ஶநீயமான சேஷ்டிதங்களைப்பண்ணாநின்றார் – இவர்களைத்தொழுதுதொழுது நின்றார்த்தும், தொண்டீரொல்லீரும் வாரீரென்கிறார். ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதோபகாரகனான அர்ணவசாயியினுடைய குணத்திலே வித்தரானவர்கள், பாஹ்யஸமயங்களை யுத்பாடநம்பண்ணுவாரைப்போலே அநேகவிதமான ஹர்ஷசேஷ்டிதங்களைச்செய்யாநின்றார்களென்கிறார்.

இடங்கொள்-வைதிகஸங்கோசம்பிறக்கும்படி சர்வப்ரதேசத்திலுமவஷ்டம்பிக்கக்கடவதான. சமயத்தை - பௌத்தார்ஹதாதிபாஹ்யசமயங்களை. எல்லாம்-எல்லாம்-ஸவாசநமாக. எடுத்து-உத்பாடநம்பண்ணி. களைவனபோலே - போகடுவாரைப்போலே. தடம்-விஸ்தீர்ணமான. கடல்-கடலிலே. பள்ளி - ஆஶ்ரிதார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிற. பெருமான்றன்னுடை-சர்வாதிகன் குணங்களிலேயீடுபட்ட. பூதங்களே-பாகவதர்கள் தாங்களே. ஆய்-லோகமெல்லாமாய். அவ்வோப்ரதேசங்களிலே, கிடந்தும்-கிடந்தும். இருந்தும் - இருந்தும். எழுந்தும்-நின்றும். பகவத்குணசேஷ்டித ப்ரகாஶகங்களான, பலபல-பலபல. கீதம்-கீதங்களை. பாடி-பாடிக்கொண்டு. நடந்தும்-தர்ஶநீயமாம்படிசஞ்சரித்தும். பறந்தும்-ஹர்ஷத்தாலே தரையிலே கால்படாதபடிமேற்கிளம்பியும். குனித்தும்-ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணியும். இப்படி, நாடகம் - நாடகங்கள். செய்கின்றன-செய்யாநின்றார்கள்.

இப்பாட்டும் - மேலோடேயந்விதம். ..........................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

அவிசால்யமான பாஹ்யசமயங்களை வேரோடேயறுப்பாரைப் போலே எங்கும் வைஷ்ணவர்களேயாய், பகவத்குணாநுபவஜநிதஹர்ஷத்தாலே களித்துத்திரியாநின்றாகளென்கிறார்.

(இடங்கொளித்யாதி) பயிர்தேயும்படிகளை வளருமாபோலே, சாத்விகரொதுங்கும்படி வளருகிற பாஹ்யசமயங்களையெல்லாம் பறித்துப்பொகடுவாரைப்போலே. "போலே" யென்பானென்னென்னில்; சாத்விகர்க்கு "பிறரைநலியவேணும்" என்றொரு அபிசந்தியில்லையிறே; நெற்செய்யபபுற்றேயுமாபோலே, இவர்களுண்டானால் அவைதன்னடையேதேயுமத்தனை. (தடங்கடல்பள்ளிப்பெருமான்) * தானுந்தோளும்முடிகளும்பரப்பிக கண்வளர்ந்தருளுகைக்கீடான பரப்பையுடைத்தான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற அழகையநுசந்தித்து, "பாலாழிநீகிடக்கும பண்பையாங்கேட்டேயும் காலாழும்நெஞ்சழியும்கண்சுழலும்" என்று, அதிலே யீடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேயாய். (கிடந்துமித்யாதி) தங்களுக்கிஷ்ட சர்வசேஷ்டித விஷயமாம்படி பூமியைக்கைக்கொண்டு, ஓரோப்ரதேசங்களிலேகிடந்தும், ஓரோப்ரதேசங்களிலேயிருந்தும், ஓரோவிடங்களிலேநின்றும், பகவதநுபவஜநிதஹர்ஷத்தாலே பலபலபாட்டுக்களைப்பாடியும், மநோஹாரியாம்படியுலாவியும், கால்தரையிலேபாவாதபடி ஸஸம்பரமந்ருத்தம்பண்ணியும். (நாடகஞ்செய்கின்றனவே) இவாகள்வ்யாபார மிவர்க்குவல்லாராடினாப்போலேயிருக்கை. "எமபெருமானாருடையஸ்த்திதி கமநசயநாதிகளை நாம் கொண்டாடுமாபோலேயும், ஆளவந்தார்நடையை ராஜாகொண்டாடினைப்போலேயு மிவர்கொண்டாடுகிறபடி" என்றருளிசசெய்வர். இங்கும்கீழே அந்வயம் ......................................................*

## ஜீயர்அரும்பதம்.

நாலாம்பாட்டு (இடங்கொளித்யாதி) "இடங்கொள்" இத்யாதியைப்பற்ற (அவிசால்யமானவித்யாதி)

தேயும்படி - க்ஷயிக்கும்படி. களைகை-போக்குகை. ஸ்ரீவைஷ்ணவர்கள் பாஹ்யநிரஸநம்பண்ணார்களோ, "களைவனபோலே" என்பானென்னென்ன (போலேயித்யாதி) நெற்செய்ய - பிணையடிக்க. புற்றேயும் - களங்களிலிருக்கிறபுல்தேயும். "தடங்கடல்பள்ளிப்பெருமான்றன்னுடைப்பூதங்கள்" என்கிற ஸமபிவ்யாஹாரத்தாலே - "பாலாழி" என்கிறபாட்டினர்த்தமுபஸ்த்திதமாக அத்தையும்கூட்டிபாவம் (தானுமித்யாதி) "பாலாழி" இத்யாதிக்கர்த்தம் அஸக்ருல்லிகிதம்.

இவர்கள் வ்யாபாரத்தை "நாடகம்" என்கிறதென்னென்ன (இவர்கள்வ்யாபாரமித்யாதி) வல்லார் - கூத்துவல்லார். "அவர்களுடையஸ்த்திதிகமநாதிகளிவர்க்காகர்ஷகங்கள்" என்றதுக்கு த்ருஷ்டாந்தங்கள் (எம்பெருமானாரித்யாதி) (அருளிச்செய்வர்) நஞ்சீயரிதிசேஷ:.

நாடகம்செய்கின்றன - நின்றார்த்தும் - வாரீரென்று கீழோடேயந்வயம் *

# ஐந்தாம்பாட்டு.

செய்கின்றதென்கண்ணுக்கொன்றேயொக்கின்றதிவ்வுலகத்து
வைகுந்தன்பூதங்களேயாய்மாயத்தினாலெங்குமன்னி
யையமொன்றில்லையரக்கரசுரர்பிறந்தீருள்ளீரே
லுய்யும்வகையில்லைதொண்டரூழிபேர்த்திடுங்கொன்றே.

## ஆறாயிரப்படி.

( செய்கின்றது ) என்கண்ணுக்கொன்று செய்கிறப்போலே யி ராநின்றது. என்னென்னில் ; இந்தலோகத்திலெங்கு மாஶ்சர்யமாம்படி வைகுந்தன் பூதங்களேயாய், எங்கு மவர்களே மன்னுகையாலே அவை ஷ்ணவரான வுங்களுக்கு உய்யும்வகையின்றியே, அதத்விஷயப்ரவணரான நீங்களெல்லாரு முபஸம்ஹ்ருதராய், ஸ்ருஷ்டிபேருமாபோலே யிருந்தது ; இது நிஸ்ஸம்ஶயமென்கிறார்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரதிகூலரான அசுர ராக்ஷஸ ப்ரக்ருதிகளைக் குறித்து ; ஸ்ரீவைகுண்ட நாதனுடைய குணாநுஸந்தாந வித்தரான பாகவதர் உங்களை நிரஸித்துப் பொகடுவர்கள், உங்களுக்குஜ்ஜீவிக்க விரகில்லையென்கிறார்.

செய்கின்றது - இவர்கள் செய்கிற வ்யாபாரம். என்கண்ணுக்கு - என்கண்ணுக்கு. ஒன்றேயொக்கின்றது - அதிசயிதமாயிருப்பதொன்றுபோலேயிராநின்றது. ஏதென்னில், இவ்வுலகத்து - ப்ரதிகூலப்ரசுரமான இந்தலோகத்திலே. வைகுந்தன் - பரமபதநிலயனுடைய. பூதங்களே - குணாநுபவவித்தரானபாகவதர்தாங்களே. ஆய் - ஆய். மாயத்தினால் - ஆஶ்சர்யவ்ருத்திகளாலே. எங்கும் - ஸர்வப்ரதேசத்திலும். மன்னி - நிரந்தரவாஸம்பண்ணி. அரக்கரசுரர் - ராக்ஷஸியாயும் ஆஸுரியாயுமுள்ள ப்ரக்ருதிகளோடே. பிறந்தீர் - பிறந்தவர்கள். உள்ளீரேல் - உண்டாகில். தொண்டர் - இதரவிஷய சபலரானவர்களே. கொன்று - உங்களைநிரஸித்து. கலி, க்ருதயுகமாம்படி, ஊழி - காலத்தை. பேர்த்திடும்-பேதிக்கும்படியாயிராநின்றது. ஆதலாலுங்களுக்கு, உய்யும் - உஜ்ஜீவிக்கும். வகை - ப்ரகாரம். இல்லை - இல்லை. இதில், ஐயம் - ஸந்தேஹம். ஒன்று - ஒன்றும். இல்லை - இல்லை....................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ஸ்ரீவைஷ்ணவர்கள் அசுரராக்ஷஸரான வுங்களையும்முடித்து யுகத்தையும் பேர்ப்பர்களென்கிறார்.

( செய்கின்றதித்யாதி ) செய்கிறபடி பார்த்தேனுக்கு, என்கண்ணுக்கொன்றுபோலே யிராநின்றது.

என்போலே யிராநின்றதென்றால் ; பகவத்குணங்களுக்கு மேட்டிமடையான சம்ஸாரத்திலே, நித்யவிபூதியி லிருப்புக்குத் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேயாய். ( மாயத்தினாலெங்குமன்னி ) " மாயா

வய‍ரநஂஜ ரநஂ" ( மாயாவயுநம்ஜ்ஞாநம் ) என்கிறபடியே, இச்சாபர்யாயமான ஜ்ஞாநத்தாலே. இச்சையாலே யெங்கும் புகுந்திருந்து.

( ஐயமொன்றில்லை ) "இங்கேயிருந்தே அவ்விருப்புக்குத் தோற்றிருப்பர்கள்" என்றதிலொரு ஸம்ஶயமில்லை. "பேர்த்திடும்" என்னுமதிலொரு ஸம்ஶயமில்லையென்றுமாம்.

( அரக்கரித்யாதி ) ராக்ஷசராயும் ஆஸுரப்ரக்ருதிகளாயு மிருப்பார் மநுஷ்யசரீரத்தை யேறிட்டுக்கொண்டு, ஸ்ரீவாநரஸேநையின் நடுவே சுகஸாரணர்கள் புகுந்தாப்போலே புகுரப்பார்த்தாருண்டாகி லுங்களுக்குஜ்ஜீவிக்க விரகில்லை. "வாழாட்பட்டுநின்றீருள்ளீரேல்" என்று-தேடவேண்டாதே, எல்லாரும் வாழாட்பட்டு, அரக்கரசுரர்பிறந்தீருள்ளீரேலென்று - தேடவேண்டும்படியாயிற்று * ஒன்றுந்தேவுங்கேட்டு சம்ஸாரம் திருந்தினபடி.

( தொண்டர் ) "ஸேவாஶ்வவ்ருத்திஃ" ( ஸேவாஶ்வவ்ருத்திஃ ) என்கிற இதரவிஷயங்களிலே தொண்டுபட்டிருக்கிறவுங்களை கல்பந்தானே ஹிம்ஸித்துக்கொண்டு தானும் பேருமென்னுதல் ; அன்றிக்கே, வைகுந்தன் பூதங்கள் உங்களையும்கொன் றூழியையும் பேர்ப்பரென்றுமாம்.

( அரக்கரசுரர் – தொண்டர் – பிறந்தீருள்ளீரேல் உய்யும்வகையில்லை, வைகுந்தன்பூதங்கள் – கொன்று – ஊழிபேர்த்திடும் – ஐயமொன்றில்லை. இதுவாக்யார்த்தத்துக்குச் சேரும். )..........................*

## ஜீயர் அரும்பதம்

அஞ்சாம்பாட்டு (செய்கின்றதித்யாதி) ஸ்ரீவைஷ்ணவர்களென்றது -" வைகுந்தன்பூதங்கள் " என்றத்தைப்பற்ற. அசுரராக்ஷஸரான வுங்களையும் முடித்தென்றது -" அரக்கரசுரர்பிறந்திருள்ளீரேல் உய்யும்வகையில்லைகொன்றே " என்றத்தைப்பற்ற. யுகத்தையும்பேர்ப்பர்களென்றது -" ஊழிபேர்த்திடும் " என்றத்தைப்பற்ற. யுகத்தை-கலியுகத்தை.

( செய்கிறபடி ) ஸ்ரீவைஷ்ணவர்கள்செய்கிறபடி. பார்த்தேனுக்கென் கண்ணுக்கென்றது- பார்த்திருக்கிற வென்னுடைய கண்ணுக்கென்றபடி. ஸ்ரீராமாயணத்தில் " ஸிக்தஸ்ய - அநகூடாஃ " ( ஸித்தஸ்ய - அந்நகூடாஃ ) என்கிறவிடத்திலே- ஸித்தமாயிருக்கிற வந்நத்தினுடைய கூடங்களென்று, அந்நசப்தத்துக்குஷப்தஷஷ்டியாக வர்த்தம் சொன்னாப்போலே, இங்கேயுங் கண்டுகொள்வது. யத்வா, "பண்டேனமாய்" என்கிற பாட்டிலே " கண்டேனுக்கு " என்கிற பாசுரத்துக்கர்த்தம் - கண்டமாத்ரத்திலே யென்று சொன்னாப்போலே, ( பார்த்தேனுக்கு ) என்கிறதுக்கும்-பார்த்தமாத்ரத்திலே யென்றர்த்தங்கண்டுகொள்வது. ஒன்றுபோலேயிராநின்றதென்றது - " ஒன்றேயொக்கின்றது " என்றத்தைப்பற்ற.

( என்போலேயிராநின்றதென்னுல்) என்றதுக்கு - "ஊழிபேர்த்திடும்" என்றத்தோடேயந்வயம், "ஊழிபேர்த்திடும்" என்றதுக்கு - ஊழியையும்பேர்ப்பர்க

ள்போலே யிராநின்றார்களென் றர்த்தமானபோது, ( என்போலேயிராநின்றதென்றால் ) என்றது - என்போலேயிரா நின்றார்க ளென்றாலென்றபடி. ( என்போலேயிராநின்றதென்றால் ) என்றவநந்தரம், ஸ்ரீவைஷ்ணவர்கள் உங்களையுங் கொன்று யுகத்தையும் பேர்ப்பர்கள்போலேயிராநின்றதென்று கண்டுகொள்வது. நித்யவிபூதியிலிருப்பென்றது - "வைகுந்தன" என்றத்தைப்பற்ற. ( இச்சாபர்யாயம் ) என்றதுக்கு நிகண்டு ( மாயேத்யாதி ) இச்சையாலே- "எங்கும் வ்யாபித்துத்திருத்தவேணும்" என்கிற விச்சையாலே.

ஐயம் - சம்ஶயம். "இவ்வுலகத்துவைகுந்தன்பூதங்கள்" இத்யாதிபதங்களைக்கூட்டிக்கொண்டு, "ஓர் - ஐயம் - இல்லை" என்றந்வயித்து ஶப்தார்த்தம் ( இங்கேயித்யாதி )

அஸுரராக்ஷஸர்கள் ஸந்நிஹிதராயிருக்கிறார்களோ "அரக்கரசுரர்பிறந்தீர்" என்கைக்கென்ன ( ராக்ஷஸராயுமித்யாதி ) ராக்ஷஸராயும - ராக்ஷஸப்ரக்ருதிகளாயும். "உள்ளீரேல்" என்று யதிசப்தார்த்த கடிதமாகச்சொல்லுவானென், அத்தனை அபூர்வமோவென்ன ( வாழாளித்யாதி ) நிரதிசய ஸுகரூபமான வடிமைபட்டு நின்றபேருண்டாகிலித்யர்த்த꞉. திருப்பல்லாண்டு.

தொண்டு - இதரவிஷயசாபல்யமென்றர்த்தம் ( ஸேவேதயாதி ) "ஊழி"- ( கல்பம் ) கலியுகம்.

செய்கின்றதென கண்ணுக்கென்று தொடங்கி, எங்கும் மன்னினார்கள், ஐயமொன்றில்லை, தொண்டரான - அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரோவுய்யும்வகையில்லை, ஊழியானது - உங்களையுங்கொன்று - தானும்பேர்த்திடு மென்று ப்ரதமயோஜனைக்கந்வயம். செய்கின்றதென்கண்ணுக்கென்று தொடங்கி, எங்கும்மன்னினார்கள், ஐயமொன்றில்லை, தொண்டரான - அரக்கரசுரர் தொடங்கி, உய்யும்வகையில்லை, உங்களையுங்கொன்று - ஊழியையும் போத்திடுமென் றிரண்டாம்யோஜனைக் கந்வயம். அர்த்தபேதமொழிய வந்வயத்திலதிவபேதமில்லை.............................*

# ஆறாம்பாட்டு.

கொன்றுயிருண்ணும்விசாதிபகைபசிதீயனவெல்லா
நின்றிவ்வுலகிற்கடிவானேமிபபிரான்றமாபோநதார்
நன்றிசைபாடியுந்துள்ளியாடியுஞாலமபரந்தார
சென்றுதொழுதுய்ம்மின்றொண்டீர்சிந்தையைசசெந்நிறுத்தியே.

## ஆறாயிரப்படி.

( கொன்று ) ஸர்வாத்மாக்களுடைய ஸர்வபாதா பரிஹாரார்த்தமாக ஶங்கசக்ரகதா ஶார்ங்காதி திவ்யாயுதோபேத பரமபுருஷ கைங்கர்யைக ஸ்வரூபரான ஸ்ரீவைஷ்ணவஜநங்க ளிந்தலோகத்திலே போந்து, நன்றிசைபாடியும் துள்ளியாடியும் ஞாலம்பரந்தார். நீங்களுமிந்தத்தேவதைகளைவிட்டு அநந்ய ப்ரயோஜநராய்க்கொண் டெம்பெருமானை யாஶ்ரயித் துஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.....................................*

## பன்னீராயிரப்படி

அநந்தரம், ஸாம்ஸாரிக ஸகலக்லேசமுந் தீரும்படி ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான திருவாழியையுடைய ஸர்வேஶ்வரனுக்கு அடியாரானவர்கள் ஜகத்தெங்கும் பரந்தார்கள், அவர்களை யாஶ்ரயித்துஜ்ஜீவியுங்கோளென்று கீழ்ச்சொன்னவர்களை நோக்கி யருளிச்செய்கிறார்.

கொன்று - சரீரத்தைமுடித்து. உயிர் - ப்ராணனை. உண்ணும்-க்ரஸிக்கக்கடவ. விசாதி - வ்யாதியும். பகை - பகையும். பசி - பசியுமுதலான. தீயன - க்ரூரஸ்வபாவங்கள். எல்லாம் - எல்லாவற்றையும். இ - இந்த. உலகில் - லோகத்திலே. நின்று - நின்று. கடிவான் - கடிகைக்காக. நேமி - சக்ராயுதனுன. பிரான்-ஸர்வேஶ்வரனுடைய. தமர் - அடியாராய்க்கொண்டு. போந்தார் - போந்தவர்கள். நன்று-விலக்ஷணமான. இசை - இசைகளை. பாடியும் - பாடியும். துள்ளி-ஸஸம்ப்ரமமாகக் கிளர்ந்து. ஆடியும் - ஆடியும். ஞாலம் - பூமியெங்கும். பரந்தார் - பரந்தார்கள். தொண்டீர் - தேவதாந்தரங்களையும் விஷயாந்தரங்களையு முத்தேஶ்யமாகவும் போக்யமாகவும் நினைத்து சபலரானவர்களே. சிந்தையை - உங்களந்யபரமான நெஞ்சை. ப்ராப்தமான பாகவதவிஷயத்திலே, செம் - செவ்விதாக. நிறுத்தி - நிறுத்தி. சென்று - அவர்கள் பரிஸரத்திலே சென்று. தொழுது - சேஷத்வாநுரூபவ்ருத்தியைப்பண்ணி. உய்மின் - பிழைக்கும்படி பாருங்கோள்..............................*

## ஈடு - ஆரும்பாட்டு.

சகல துக்கங்களையும் போக்குகைக்காக ஸ்ரீவைஷ்ணவர்கள் லோகமடங்கப்பரந்தார்கள், அவர்களோடே நீங்களுமவனை யாஶ்ரயித்துஜ்ஜீவியுங்கோளென்கிறார்.

( கொன்றுயிரித்யாதி ) தேஹவிஶ்லேஷத்தைப்பிறப்பித்து ப்ராணங்களை யபஹரிக்கக்கடவதான வ்யாதி. அன்றிக்கே, ப்ராணனை விஶ்லேஷிப்பித்து சரீரத்தை முடிக்கும் வ்யாதியென்னுதல். உயிரொன்று-இப்போது, சரீரம். அப்படி செய்யும் பகையும் பசியும். இப்படி பிரித்துச்சொல்லுகிறதென்; தண்ணியவையெல்லாம். ( நின்றிவ்வுலகில்கடிவான் ) விடாதேநின்று போக்குகைக்காக. ( நேமிப்பிரான்றமர்போந்தார் ) கையுந்திருவாழியுமான வழகிலே தோற்றிருக்குமவர்கள் வந்தார்கள்.

போந்தநேமிப்பிரான்றமர் ( நன்றித்யாதி ) நன்றானவிசைபாடியும், ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணியும், இப்படி பூமியடையப்பரந்தார்கள்.

( சென்றுதொழுதுய்மின் ) அவர்கள்பாடே சென்று அவர்களைத்தொழுதுஜ்ஜீவித்துப் போங்கோளென்னுதல்; அவர்களோடே சென்று சர்வேஶ்வரனை யாஶ்ரயித் துஜ்ஜீவித்துப் போங்கோளென்னுதல்.

( தொண்டீர் ) அப்ராப்தவிஷயத்தில் தொண்டுபட்டிருக்கிறநீங்கள். திருந்துகைக்கு யோக்யதையுடைய நீங்கள். அதுசெய்யுமிடத்தில் ( சிந்தையைச்செந்நிறுத்தியே ) தொழுதவநந்தரம் “ [illegible] ” ( தேஹிமேததாமிதே ) என்னாதே தொழுங்கோள்..............*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( கொன்றுயிரித்யாதி ) ஸகலதுஃகங்களையுமென்றது - "கொன்று" இத்யாதியைப்பற்ற. போக்குகைக்காகவென்றது- "கடிவான்" என்றத்தைப்பற்ற. ஸ்ரீவைஷ்ணவர்க ளென்றது - "நேமிப்பிரான்றமர்" என்றதுக்கு எம்பெருமானார் நிர்வாஹத்தைப்பற்ற. லோகமடங்கப்பரந்தார்களென்றது - "ஞாலம்பரந்தார்" என்றத்தைப்பற்ற. "சென்றுதொழுதுய்மின்" இத்யாதியைப்பற்ற (அவர்களோடேயித்யாதி)

முந்தினவர்த்தத்துக்கு, உயிரொன்று - ப்ராணன், கொன்றென்றதுக்கு - தேஹத்தையென்றத்யாஹரிப்பது. த்விதீயார்த்தத்துக்கு, உயிரொன்று - சரீரம், ப்ராணனையென்றத்யாஹரிப்பது. முந்தினவர்த்தத்திலே - கொல்லுகைக்குமுண்கைக்கும் ப்ராணங்கள் விஷயம்; த்விதீயார்த்தத்துக்கு - சரீரம்விஷயம். இப்போது - இரண்டாமர்த்தம் சொல்லுகிறபோது. "கொன்றுயிருண்ணும்" என்றத்தை - * பகை பசிக்கும்விசேஷணமாக்கி யருளிச்செய்கிறார் ( அப்படியித்யாதி ) தண்ணியவையெல்லாமென்றது - "தீயனவெல்லாம்" என்றத்தைப்பற்ற. "விசாதிபகைபசி" என்றத்தை - "வ்யாதிதுர்ப்பிக்ஷதஸ்கராஃ" ( வ்யாதிதுர்ப்பிக்ஷதஸ்கராஃ ) என்றத்தோடே யோஜித்து மருளிச்செய்வர். ( விடாதே ) என்கிறதுக்குக்கீழே - இவ்வுலகிலென்றந்வயித்துக்கொள்வது. விடாதேயென்றது - அர்த்தஸித்தம். ( நேமிப்பிரான்றமர் ) ஆளவந்தார் நிர்வாஹத்திலே, நித்யஸூரிகள்; எம்பெருமானார் நிர்வாஹத்திலே, ஸ்ரீவைஷ்ணவர்கள்.

( போந்தநேமிப்பிரான்றமர் ) செய்ததென்னென்னிலென்றத்யாஹரிப்பது. போந்த - வந்த.

திருமாலையாண்டான் நிர்வாஹம் ( அவர்கள்பாடேயித்யாதி ) அவர்கள்- நித்யஸூரிகள். பாடே சென்று - ஸமீபத்திலே போய். எம்பெருமானார் நிர்வாஹம் ( அவர்களோடேசென்றித்யாதி ) விவரணம் ( திருந்துகைக்கித்யாதி ) அதாவது- அப்ராப்த விஷயத்திலேயாகிலும் சேஷத்வத்துக் கிசைகையாலே, திருந்துகைக்கு யோக்யதையுடைய நீங்களென்றபடி. அது - ஆஶ்ரயணம். செந்நிறுத்தி - செவ்வையாகநிறுத்தி. சிந்தைக்குச்செவ்வையாவது - அநந்ய ப்ரயோஜநதை யென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( தொழுதவித்யாதி )

தொண்டீர், கொன்றுயிருண்ணுமென்று தொடங்கி, தீயனவெல்லாம் - இவ்வுலகில் - நின்று - கடிவான் நேமிப்பிரான் றமர் போந்தார்; போந்த நேமிப்பிரான்றமர், நன்றிசைபாடியுந்தொடங்கி, பரந்தார்; அவர்களோடேசென்று - சிந்தையைச்செந்நிறுத்தி - தொழுதுய்மினித்யந்வயஃ.................................*

## ஏழாம்பாட்டு.

நிறுத்திநும்முள்ளத்துக்கொள்ளுந்தெய்வங்களும்மையுய்யக்கொண்
மறுத்துமவனோடேகண்டீர்மார்க்கண்டேயனுங்கரியே
கறுத்தமனமொன்றும்வேண்டாகண்ணனல்லாற்றெய்வமில்லை
யிறுப்பதெல்லாமவன்மூர்த்தியாயவர்க்கேயிறுமினே.

## ஆருயிரப்படி.

(நிறுத்தி) மற்று, நாங்களாஶ்ரயிக்கிற ப்ரஹ்மருத்ராதிதேவதைகளெங்களுக்கு ரக்ஷகராகமாட்டாரோவென்னில்; உங்களாலே ஸமாஶ்ரிதைகளானதேவதைகள், உங்களை யெம்பெருமான் ரக்ஷிக்குமிடத்தில் புருஷகாரமாமத்தனை; இப்பொருளில் மார்க்கண்டேயனும்சாக்ஷி. ஆகையால், நாராயணனேசர்வேஶ்வரன், இதிலொன்றும்சம்ஶயிக்கவேண்டா. ஆதலாலவனை யாஶ்ரயியுங்கோள். அக்நீந்த்ராதிதேவதைகளையும் ஆராத்யதயா சாஸ்த்ரங்கள் ப்ரதிபாதியாநின்றனவிறேயென்னில்; அப்படியன்று சாஸ்த்ரங்களில் சொல்லுகிறது. எங்ஙனேயென்னில்; அக்நீந்த்ராதி ஸமஸ்ததேவதாந்தர்யாமித யாஶரீரிபூதனான பரமபுருஷனே சர்வகர்மஸமாராத்யனென்றது. ஆனபின்பு, நித்யநைமித்திககாம்யரூப சர்வகர்மங்களாலும் அக்நீந்த்ராதி சமஸ்ததேவதாந்தர்யாமியான பரமபுருஷனை யாஶ்ரயியுங்கோளென்கிறார்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தேவதாந்தரபரரானாரைக்குறித்து; அவனையொழிய விவர்களுக்கு ரக்ஷணசக்தியில்லை, சர்வசுலபனான க்ருஷ்ணனே பரதேவதை, ஆனபின்பு, தேவதாந்தரவிஷயமான நித்யநைமித்திகாதிதர்மங்களை, அவர்களுடைய பகவச்சரீரத்வ புத்தியைப்பண்ணி யநுஷ்டிக்கும்படி பாருங்கோளென்கிறார்.

நும்-உங்கள். உள்ளத்து-நெஞ்சுக்குள்ளே. நிறுத்தி - சுபாஶ்ரயமல்லாமையாலேவலியப்பிடித்துநிறுத்தி. கொள்ளும்-கொள்ளும். தெய்வங்கள் - தெய்வங்கள். உம்மை-உங்களை. உய்யக்கொளும்-உஜ்ஜீவிப்பித்துக்கொள்வதும். அவனோடே-தங்களுக்கும் பலப்ரதத்வசக்திகொடுத்தவன்றன்னோடே. மறுத்து - மீண்டுசென்று கிட்டிக்கிடீர். இது, மார்க்கண்டேயனும்-மார்க்கண்டேயனும். கரி-சாக்ஷியாக. கண்டீர்-கண்டிகோள். ஆகையாலே, கறுத்த - இதரதேவதாபரத்வப்ரதிபத்திபண்ணும்படிமலிநமான. மனம்-நெஞ்சு. ஒன்றும்-ஒருபடியாலும். வேண்டா - வேண்டுவதில்லை. "யோயோயாம்யாம்தநும்பக்த:" (யோயோயாம்யாம்தநும்பக்த:) என்கிறபடியே, கண்ணனல்லால்-தேவதாந்தரங்களுக்கு சரீரியானக்ருஷ்ணனையொழிய. தெய்வம்-பரதேவதை. இல்லை-இல்லை. ஆனபின்பு, இறுப்பது-சாஸ்த்ரீயமாய் கர்த்தவ்யமான நித்யநைமித்திகங்களை. எல்லாம்-எல்லாம். அவன்-அந்தக்ருஷ்ணனுக்கு. மூர்த்தியாயவர்க்கே - ஶரீரங்களான அந்ததேவதைகளை விஷயீகரித்து. இறுமின் - * ஸர்வயஜ்ஞாநாம்போக்தாவான அந்தக்ருஷ்ணன் பர்யந்தமாக சமர்ப்பியுங்கோள்.

இதிலே - பரகவதோத்கர்ஷஹேதுவான பாரம்யம்சொல்லிற்றாயிற்று ... *

## ஈடு - ஏழாம்பாட்டு.

நாங்கள் நெடுநாள் தேவதைகளுக்குப் பச்சையிட்டாஶ்ரயித்துப்போந்தோம், அதின்முடிவுகண்டு பின்னை பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணுகிறோமென்ன; நீங்களாஶ்ரயிக்கிற தேவதைகள் உங்களை ரக்ஷிப்பதும்

அவன்பக்கலிலேகொண்டுசென்று காட்டிக்கொடுத்தாயிற்று, ஆனபின்பு, அவனையே யாஶ்ரயிக்கப்பெறிலழகிது; அதுவும்மாட்டிகோளாகில், நீங்களவர்களுக்கிடுகிறவற்றை "இவர்களவனுக்குத் தநுபூதர், இவர்கள் முகத்தாலே நாம் பகவத்ஸமாராதநம்பண்ணுகிறோம்" என்று புத்திபண்ணியாகிலுமிடப்பாருங்கோளென்கிறார்.

(நிறுத்தி) த்யேயவஸ்துவைஸ்த்திதிப்பிக்கையும் த்யாநம்பண்ணுகிறவனுக்கே பாரமாயிற்று. ஆஶ்ரயிக்கிற விவனெடுத்துநிறுத்த, நிற்கிறவையிறேயவை. (நும்முள்ளத்துக்கொள்ளும்தெய்வங்கள்) உந்தாமுடைய ஹ்ருதயங்களிலேகொள்ளுகிற தேவதைகள். (உள்ளத்துக்கொள்ளும்) "ப்ரம்பேசிலரறிவிலபஹூஸிப்பர்கள்" என்று தாங்களறிந்ததாகவுபாஸிக்குமத்தனை. (உம்மையுய்யக்கொள்) உந்தாமை யுஜ்ஜீவிப்பித்துக்கொண்டார்களாகிறபடி. (மறுத்துமித்யாதி) நீங்கள் "அவனிலுமிவர்களாஶ்ரயணீயர்" என்றுபற்ற, இவர்கள் உங்களையவன்பக்கலிலேகொண்டுபோய்க்கிடிகோள் ரக்ஷிப்பது. என்றும் ரக்ஷணதர்மம்கிடப்பதவன்பக்கலிலே, "நஹிபாலநஸாமர்த்யம்ருதேஸர்வேஶ்வரம்ஹரிம்" (நஹிபாலநஸாமர்த்யம்ருதேஸர்வேஶ்வரம்ஹரிம்) என்கிறபடியே.

வேறுசிலரை யாஶ்ரயிக்க, அவன் பலப்ரதனுகையாவதென்னென்ன (மார்க்கண்டேயனும்கரியே) கரியென்று – சாக்ஷிக்குப்பேர். இவ்வர்த்தத்துக்குசாக்ஷி ஸ்ரீமார்க்கண்டேயன். அவன் நெடுநாள் தேவனையாஶ்ரயிக்க, அவனைப்பார்த்து, "நெடுநாள் நீநம்மையாஶ்ரயித்தாய், இவ்வாஶ்ரயணம் பாழேபோகவொண்ணுது, உன்னோடென்னோடுவாசியில்லை, உனக்கொருபுகல்காட்டித்தரப்போரு" என்று சர்வேஶ்வரன்பக்கலிலேகொண்டுசென்று, அவனபேக்ஷிதத்தைத் தலைக்கட்டிக்கொடுத்தான்; ஆனபின்பு, இதில்சாக்ஷி அவனே.

(கறுத்தமனமொன்றும்வேண்டா) க்ஷுத்ரதேவதைகள்பக்கலிலே பரத்வப்ரதிபத்திபண்ணியிருக்கும் தண்ணியநெஞ்சுங்களுக்குவேண்டா.

(கண்ணனல்லால் தெய்வமில்லை) "ஸர்வேதேவாதேவகீபுத்ரஏவ" (ஸர்வேதேவாதேவகீபுத்ரஏவ) என்கிறபடியே, அவனுக்கு ப்ரகாரமாயல்லது ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு தேவதையில்லை; "யோயோயாம்யாம்தநும்பக்தஃ" (யோயோயாம்யாம்தநும்பக்தஃ) என்கிறபடியே–அவனுக்குத் தநுபூதராயுளராகிலாமித்தனை,

(இருப்பதித்யாதி) ஆனபின்பு, நீங்களவ்வவதேவதைகளுக்குக் கொடுக்கும் சமாராதநத்ரவ்யங்களையெல்லாம் "இவர்களவனுக்கு ஶரீரபூதர்" என்றுபுத்திபண்ணி, அவர்களுக்குக்கொடுக்கப்பாருங்கோள். இருப்பதெல்லாம் – "தேவதாந்தராய" என்றுதோற்றுகிற நித்யநைமித்

திக கர்மங்களையெல்லாம். அவன்மூர்த்தியாயவர்க்கே-அவனுக்கு ஶரீர பூதரான வவர்களுக்கே. "அந்தராத்மாஸர்வேஶ்வரன்" என்று புத்தி பண்ணி தத்ஸமாராதநபுத்த்யாபண்ணுங்கோள்........................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (நிறுத்தியித்யாதி) "அவனோடேகண்டீர்" என்கையாலே உத்தரப்ரத்யுத்தரமாக வருளிச்செய்கிறார் (நாங்களித்யாதி) இந்தசங்காபரிஹாரம் "ஓடியோடி" என்கிறபாட்டிலும்சொல்லிற்றேயென்னில்; அங்கே-அவர்களையாஶ்ரயித்தால் பலமில்லையென்றது, இங்கு-தேவதைகளீஶ்வரன்பக்கலிலே கொடுபோய்ச்சேர்ப்பர்களென்கிறதாகையாலே புநருக்தியில்லை. "நிறுத்தி" இத்யாதியைப் பற்ற (நீங்களாஶ்ரயிக்கிறவித்யாதி) அவனையேயாஶ்ரயிக்கப்பெறி லழகிதென்றது - கீழ்ப்பாட்டில் "சென்றுதொழுதுய்ம்மின்" என்றத்தைக்கடாக்ஷித்து. இடுகிறவற்றையென்றது - "இறுப்பதெல்லாம்" என்றத்தைப்பற்ற. அவனுக்குத்தநுபூதரொன்றது - "அவன்மூர்த்தியாய்" என்றத்தைப்பற்ற. இடப்பாருங்கோளென்றது- "இறுமின்" என்றத்தைப்பற்ற.

இவன் ஸ்த்திதிப்பிக்கவேணுமோ, ஸ்வயமாகநிற்கமாட்டார்களோவென்ன (த்யேயவஸ்துவையித்யாதி) விவரணம் (ஆஶ்ரயிக்கிறவித்யாதி) (அடுத்து) என்று பாடமானபோது - பலாத்கரித்தென்றபடி. நிறுத்த-ஸ்த்திதிப்பிக்க. "உள்ளத்து" என்றதுக்குபாவம் (புறம்பேயித்யாதி) உய்யக்கொள்-ரக்ஷிப்பது. மறுத்தும்-பின்னையும். ரக்ஷணதர்மமந்ததேவதைகளுக்கில்லையோவென்ன (என்றுமித்யாதி) உக்தார்த்தத்துக்குப்ரமாணம் (நஹீத்யாதி) இதம் ப்ரமாணம் பூர்வமேவலிகிதம்.

அதெப்படியென்ன (அவன்நெடுநாளித்யாதி) (சர்வேஶ்வரன்பக்கலிலே) இத்யாதிக்குப்ரமாணம் - "[grantha script] ॥ [grantha script]" (அஹம் தேஜநகோவத்ஸஹ்ருஷீகேஶஃபிதாகுருஃ ॥ ஆயுஃப்ரதாதாபௌராணஃகிமர்த்தம்நோபஸர்ப்பஸே) இத்யாதிகள்கண்டுகொள்வது. ருத்ரனையுபாஸித்த மார்க்கண்டேயனுக்கு ஆயுஃப்ரதாதா நாராயணனென்கையாலே - அவன்கொடுப்பித்ததுசித்தம்.

"கண்ணனல்லால் - இல்லை" என்று - தேவதாந்தரங்களினுடைய ஸ்வரூபநிஷேதம்பண்ணுகிறாரோவென்ன (ஸர்வேதேவாஇத்யாதி) "[grantha script] ॥ [grantha script]" (ஜ்யோதீம்ஷிஶுக்ராணிசயாநிலோகேத்ரயோலோகாலோகபாலாஸ்த்ரயீச ॥ த்ரயோக்நயஶ்சாஹுதயஶ்சபஞ்சஸர்வேதேவாதேவகீபுத்ரஏவ) இதிபாரதேபீஷ்மஃ. தேவதைகள் தத்பரதந்த்ரைகளென்றதுக்கு ப்ரமாணாந்தரம் (யோயஇத்யாதி) "[grantha script] ॥ [grantha script]" (யோயோயாம்யாம்தநும்பக்தஶ்ஶ்ரத்தயார்ச்சிதுமிச்சதி ॥ தஸ்ய தஸ்யாசலாம்ஶ்ரத்தாம்தாமேவவிததாம்யஹம்) இதிகீதாயாம் ஸப்தமே.

இறுப்பது-கொடுப்பது.

நம்முள்ளத்து - நிறுத்தி. கொள்ளும்தெய்வங்களுமும்மை யுய்யக்கொள்- மறுத்துமவனோடேகண்டீர், மார்க்கண்டேயனுங்கரியே இத்யாரப்யாந்வய:. அவனோடே-அவன்பக்கலிலே; கொண்டுபோய் இத்யத்யாஹார:. அவன்மூர்த்தியாயவர்க்கே-அவனுக்கு சரீரபூதரானவர்களுக்கே........................................*

---

# எட்டாம்பாட்டு

இறுக்குமிறையிறுத்துண்ணவெவ்வுலகுக்குந்தன்மூர்த்தி
நிறுத்தினான்றெய்வங்களாகவத்தெய்வநாயகன்றானே
மறுத்திருமார்வனவன்றன்பூதங்கள்கீதங்கள்பாடி
வெறுப்பின்றிஞாலத்துமிக்கார்மேவித்தொழுதுய்ம்மினீரே.

## ஆறாயிரப்படி.

(இறுக்கும்) கேவலேந்த்ராதிகளையே ஸ்வகர்மங்களாலே சமாராதித்து ஸ்வாபிலஷிதபுத்ரபஸ்வாதிபலங்களை யவர்கள்பக்கலிலேபெற்றன்றோ எல்லாரும் புஜிக்கிறதென்னில்;

இந்த்ராதிகளை யெல்லாரும் ஸ்வாதிகாராநுகுணகர்மங்களாலே யாராதித்து ஸ்வாபிலஷிதங்களைப்பெற்றநுபவிக்கும்படி அந்தசர்வேஸ்வரனான பரமபுருஷன்றானே ஸ்வஶரீரபூதரான அந்தவிந்த்ராதிகளை, சர்வகர்மசமாராத்யராய் சமாராதகாபிலஷித பலப்ரதாந சமர்த்தராம்படி பண்ணியருளினான்; ஆகலாலவனே சர்வேஸ்வரன். இப்படி சர்வேஸ்வரனாகையாலும், பகவதேகபோகரான ஸ்ரீவைஷ்ணவர்களாலே இந்த லோகம் பூர்ணமாகையாலும், நீங்களு மெம்பெருமானையே அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆஶ்ரயித்துஜ்ஜீவியுங்கோளென்கிறார்... ......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி சர்வதேவதாநாயகனாய் * ஸ்ரீவத்ஸவக்ஷாவான க்ருஷ்ணனுடைய சேஷபூதரானவர்கள் லோகத்திலேயதிகராய் வர்த்தியாநின்றார்கள், அவர்களை யாஶ்ரயித்துஜ்ஜீவியுங்கோளென்கிறார்.

இறுக்கும் - கர்த்தவ்யமாய். இறை - கடமையான நித்யநைமித்திகங்களை. இறுத்து - சமர்ப்பித்து. உண்ண - உஜ்ஜீவிக்கைக்காக. எவ்வுலகுக்கும் - நாநாருசிகளான சமஸ்தலோகத்துக்கும். தன் - தன்னுடைய. மூர்த்தி - சரீரபேதங்களை. தெய்வங்களாக - தத்தத்கர்மாராத்யதேவதைகளாக. நிறுத்தினான் - நிறுத்தினவன். அத்தெய்வநாயகன்றானே - சர்வதேவதாநாயகனானக்ருஷ்ணன்றானே. ஆகையால், மறு - அந்தசர்வாதிகத்வஸூசகமான ஸ்ரீவத்ஸத்தை. திருமார்வன் - திருமார்பிலுடையனை. அவன்றன் - அவனுக்கு. பூதங்கள் - சேஷபூதரானபாகவதர்கள். கீதங்கள் - நாநாகீதங்களை. பாடி - பாடி. ஞாலத்து - சாம்சாரிகதோஷத்தாலுண்

டானை. வெறுப்பு - விஷாதம். இன்றி - இல்லாதபடி. மிக்கார் - சர்வோத்க்ருஷ்டராய் வர்த்தியாநின்றார்கள். நீர் - நீங்கள். மேவி - அவர்களைக்கிட்டி. தொழுது - தொழுது. உய்மின் - உஜ்ஜீவியுங்கோள் ...............................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

ராஜஸராயும் தாமஸராயுமுள்ள சேதநர் குணாநுகுணமாக ஆஸ்ரயிக்கலாம்படி யிதரதேவதைகளை லோகமடங்கப்பரப்பிவைத்தான்; அவனுடைய அசாதாரணவிக்ரஹத்திலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் லோகமடங்கப்பரந்தார்கள். அவர்களைப்போலே நீங்களு மவனை யாஸ்ரயிக்கப்பாருங்கோள்.

(இறுக்குமித்யாதி) செய்தபயிருக்குக்கடமையிறுக்குமாபோலே, உந்தாமுடைய புண்யபாபாநுரூபமாக அவ்வவதேவதைகளுக்குக் கொடுக்கும் த்ரவ்யங்களைக்கொடுத்து ஜீவிக்கைக்காக, எல்லாலோகங்களிலும், தனக்குத் தநுபூதரான தேவதைகளை நிறுத்தினான், இவ்வருகுள்ளாரோடு அத்தேவதைகளோடு வாசியற எல்லார்க்குமொக்க நியாமகனாயிருக்கிறதானே. ராஜாக்கள் ஊர்தோறும் கூறுசெய்வார்களை வைக்குமாபோலே.

(மறுத்திருமார்வன்) ஸ்ரீவத்ஸத்தையும் பிராட்டியையுமுடைய மார்வனென்னுதல், ஸ்ரீவத்ஸத்தையுடைத்தான திருமார்வையுடையவனென்னுதல். (அவனித்யாதி) அவனுடைய அஸாதாரணவிக்ரஹத்திலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள், ப்ரீதிப்ரகர்ஷத்தாலே கீதங்களைப்பாடி, "சம்சாரத்திலேவர்த்திக்கவேண்டாநின்றதே!" என்கிறவெறுப்பின்றிக்கே பூமியெங்கும்பரந்தார்கள்.

(மேவித்தொழுதுய்மினீரோ) ஆனபின்பு நீங்களவர்களைச்சென்றாஸ்ரயித்துஜ்ஜீவியுங்கோளென்றுதல், அந்த ஸத்வநிஷ்டரானவர்களோடொக்க நீங்களு மநந்யப்ரயோஜநராய் சர்வேஸ்வரனை யாஸ்ரயித்துஜ்ஜீவித்துப்போங்கோளென்னுதல்...........................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (இறுக்குமித்யாதி) கீழ்ச்சொன்னபடியே, பலப்ரதாநசக்தருமன்றிக்கே, பகவத்ப்ரகாரமான வாகாரத்தாலே யொழிய ஸ்வத ஏவாநுபாஸ்யருமாயிருக்க, இந்த தேவதைகளை ஈஸ்வரான்றான் ஸ்ருஷ்டிப்பானென்னென்ன (ராஜஸராயுமித்யாதி) (சேதநர்குணாநுகுணமாக) இத்யாதிக்கு - "யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ப்ரேதாந் பூதகணாம்ஸ்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா:"

(யக்ஷரக்ஷாம்ஸிராஜஸா:। ப்ரேதாந் பூதகணாம்ஸ்சாந்யே யஜந்தேதாமஸாஜநா:) இத்யாதியிலே நோக்கு. (பரப்பிவைத்தான்) என்றவநந்தரம், ஆகையாலேயென்று கூட்டிக்கொள்வது. "மறுத்திருமார்வன்" இத்யாதியைப்பற்ற (அஸாதாரணேத்யாதி) "மேவித்தொழுதுய்மினீர்" என்றத்தைப்பற்ற (அவர்களைப்போலேயித்யாதி)

"இறுக்குமிறையிறுத்து" என்று - நித்ய நைமித்திகாதி ரூபேண வவர்களை யாராதிக்கையைச் சொல்லுகிறது. கடமை - ருணமும், வரியும். (புண்யபாபாநு ரூபமாகவென்றது) புண்யவ்ருத்திக்கும் பாபக்ஷயத்துக்குமாக வென்றபடி யென்னுதல்; அன்றிக்கே, தேவதாந்தர ஸமாஶ்ரயண ஹேதுவான புண்யபாபாநுகுண மாகவென்னுதல். "அத்தெய்வநாயகன்" என்றதுக்குபாவம் (இவ்வருகுள்ளாரித்யாதி) "நிறுத்தினான்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் (ராஜாக்களித்யாதி) கூறு செய்வார்கள் - தாங்யாதிகளை விபஜிக்குமதிகாரிகள். மணியக்காரரையென்றபடி.

மூந்தினவர்த்தத்தில், திருவென்று - பிராட்டி. த்விதீயார்த்தத்தில், திருவென்கிறது - * மார்வுக்கு விசேஷணம். திருமார்வ னென்றபடி. கீழேயுங்கூட்டி "பூதங்கள்" இத்யாதிக்கு சப்தார்த்தம் (அவனுடையவித்யாதி) வேண்டாநின்றதே - வேண்டியிருந்ததே. வெறுப்பு - குத்ஸை.

"மேவி" என்று - கிட்டியென்னுதல், அநந்ய ப்ரயோஜநரா யென்னுதல். தொழுகை - பாகவதவிஷயமாதல், பகவத்விஷயமாதல்.

அத்தெய்வநாயகன்றானே - இறுக்குமென்றுதொடங்கி, தன்மூர்த்தியை-தெய்வங்களாக - நிறுத்தினான்; ஆகையாலே அவர்களைவிட்டு - மறுத்திருவென்றுதொடங்கியந்வயம். (திருமார்வனவன்றன்பூதங்கள்) திருமார்பையுடையனானவனுக்கு சேஷபூதரானவர்களென்றபடி. "கடல்வண்ணன்பூதங்கள்" இத்யாதி ஸ்தலங்களிலும் - கடல்வண்ணனுடைய பூதங்களென்று ஷஷ்டீதத்புருஷனாகக்கண்டு கொள்வது.......................................................................................*

## ஒன்பதாம்பாட்டு.

மேவித்தொழுதுய்மினீர்கள்வேதப்புனிதவிருக்கை
நாவிற்கொண்டச்சுதன்றன்னை ஞானவிதிபிழையாமே
பூவிற்புகையும்விளக்குஞ்சாந்தமுநீருமலிந்து
மேவித்தொழுமடியாரும்பகவருமிக்கதுலகே.

### ஆறாயிரப்படி.

(மேவித்தொழுது) பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதி ப்ரதிபாதகமாய் பரிசுத்தமான ருக்குக்களைச்சொல்லிக்கொண்டு பக்திமார்க்கம்தப்பாமே புஷ்பதூபதீபாநுலேபந ஸலிலாத்யுபகரணங்களாலே யநந்யப்ரயோஜநராய்க்கொண்டெம்பெருமானுக் கடிமைசெய்கிற பரிஜநங்களும், பரமபுருஷகுணசேஷ்டிதாநுபவைகபோகரான திவ்யஜநங்களுமேயாயிற்றிந்தலோகம்; நீங்களுமப்படியே யநந்யப்ரயோஜநராய்க்கொண்டு எம்பெருமானுக் கடிமைசெய்துஜ்ஜீவியுங்கோளென்கிறார்...................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதரைக்கைவிடாத அப்ரச்யுதஸ்வபாவனுடைய கைங்கர்ய நிஷ்டராலும் குணநிஷ்டராலும் லோகம்மிகுந்தது, அவர்களை யாஶ்ரயித்துஜ்ஜீவியுங்கோளென்கிறார்.

வேதம் - வேதத்தில். புனிதம் - ஸ்வரூபகுணாதி ப்ரதிபாதகமாகையாலே பரமபாவநங்களான. இருக்கை-ஸ்ரீபுருஷஸூக்தநாராயணாநுவாகாதி ருக்விசேஷங்களை. நாவில்-நாவிலே. கொண்டு-உச்சரித்துக்கொண்டு. ஞானவிதி- பக்திரூபஜ்ஞாந விதாநம்பண்ணுகிற சாஸ்த்ரமர்யாதை. பிழையாமே-தப்பாதபடி. ஆராதநோபகரணமான, பூவில்-புஷ்பத்தோடுகூடின. புகையும் - தூபமும். விளக்கும் - தீபமும். சாந்தமும்-சாத்துப்படியும். நீரும்-திருமஞ்சனமும். மலிந்து - பூர்ணமாகவுடையராய்க்கொண்டு. அச்சுதன்றன்னை-அப்ரச்யுதஸ்வபாவனான சர்வேஶ்வரனை. மேவி-அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு. தொழும் - சேஷவ்ருத்திமுகத்தாலே ஆஶ்ரயிக்கும். அடியாரும்-சேஷபூதரையும். பகவரும்-அவனுடைய ஜ்ஞாநஶக்த்யாதிகுணாநுசந்தாநவித்தரான முநிகளையும். மிக்கது-மிகவுடைத்தாயிற்று. உலகு - லோகம். ஆனபின்பு, மேவி-அவர்களைக்கிட்டி. தொழுது-தொழுது. நீர் - நீங்கள். உய்மின்கள் - உஜ்ஜீவியுங்கோள் ........................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

பகவத்குணநிஷ்டரும் கைங்கர்யநிஷ்டருமான ஸ்ரீவைஷ்ணவர்கள் பூமியெங்கும்பரந்தார்கள், நீங்களுமவர்களோடொக்க அநந்யப்ரயோஜநரா யாஶ்ரயியுங்கோளென்கிறார்.

(மேவியித்யாதி) அநந்யப்ரயோஜநராய்க்கொண் டாஶ்ரயித்துஜ்ஜீவிக்கப்பாருங்கோள். (வேதப்புனிதவிருக்கை நாவிற்கொண்டு) வேதத்திலவன் விபூதிவிஷயமாகப் பரக்குமவற்றையன்றிக்கே, அசாதாரண விக்ரஹத்திலும் குணங்களிலும் ஸ்வரூபத்திலுமாகப் பரந்திருக்கிற ஸ்ரீபுருஷ ஸூக்தாதிகளை நாக்கிலேகொண்டு. ( அச்சுதன்றன்னை ) இவர்கள்நாவிலேகொண்டு அஹ்ருதயமாகச்சொன்னலத்தை சஹ்ருதயமாகக் கொண்டு " ந க்ஷ்ஜெயம் " ( நத்யஜேயம் ) என்னுமவன். (ஞானவிதிபிழையாமே) ஞானமென்கிறது - ஜ்ஞாநவிசேஷமானபக்தியை. பக்திபலாத்க்ருதமான க்ரியைகளிலொன்றும் தப்பாமே. ( பூவிலித்யாதி ) பூவோடேகூடினபுகை தொடக்கமான சமாராதநோபகரணங்களை மிகுத்துக்கொண்டு அவனைவிடாதே நின்று அடிமைசெய்யுமவர்களும், குணாநுசந்தாநத்துக் கவ்வருகொன்றுக்கு க்ஷமரன்றிக்கேயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களும், மிக்கதுலோகம். (தொடர்ந்தடிமைசெய்யும்) இளையபெருமாளையும், ( கிடந்தவிடத்தேகிடந்து குணாநுபவம்பண்ணும் ) ஸ்ரீபரதாழ்வானையும்போலே யிருப்பாரேயாயிற்று லோகமடைய; நீங்களும் மேவித்தொழுதுய்மின் ........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( மேவியித்யாதி ) பகவத்குணநிஷ்டருமென்றது - " பகவரும் " என்றத்தைப்பற்ற. கைங்கர்யநிஷ்டருமென்றது - " அடியாரும் " என்றத்தைப்பற்ற. பூமியெங்கும்பரந்தார்களென்றது - " மிக்கதுலகு " என்றத்தைப்பற்ற. " மேவித்தொழுது " இத்யாதியைப்பற்ற ( அநந்யப்ரயோஜநராயித்யாதி )

புனிதவிருக்கை - பவித்ரமான ருக்குக்களை. பவித்ரத்வம் - அஸாதாரண விக்ரஹாதி ப்ரதிபாதகமானவற்றுக்கே யென்றுகருத்து. மேலே "ஞானவிதி" என்று - ஜ்ஞாநவிசேஷமான பக்தியைச் சொல்லுகையாலே, "நாவிற்கொண்டு" என்று - அஹ்ருதயமாகச்சொல்லுகை அடியார்க்கும் பகவர்க்கும்விருத்தமாகையாலே, "வேதப்புனிதவிருக்கைநாவிற்கொண்டு" என்றத்தை - "அச்சுதன்றன்னை - மேவித்தொழுதுய்மினீர்கள்" என்று உபதேசவிஷயமாயிருக்கிறவர்களுக்கு சேஷமாக வந்வயிப்பது.

கீழேயுங்கூட்டி, * அச்சுதசப்தத்துக்கு - நச்யாவயதீத்யச்யுதஃ என்கிற வ்யுத்பத்தியிலே நோக்காகவர்த்தம் (இவர்கள்நாவிலேயித்யாதி) "ஹகிஸ்ஜ்ஞாநவிசேஷஃ" (பக்திச்சஜ்ஞாநவிசேஷஃ) என்றத்தைப்பற்ற (ஜ்ஞாநவிசேஷமான வித்யாதி) விதீயத இதிவிதிஃ என்கிற வ்யுத்பத்தியிலே நோக்காகவர்த்தம் (பக்திபலாத்க்ருதேத்யாதி) அதாவது - விதீயத இதிவிதிஃ என்று - ஆராதநரூபமான கர்மங்களைச்சொல்லுகிறதென்றபடி. "பூவில்" என்றது - த்ருதீயையாய், (பூவோடே) என்றபடி. பகவர் - பகவான்கள். ஜ்ஞாநாதிகரித்யர்த்தஃ. அவர்களாகிறார் - குணநிஷ்டர். மிக்கது - ஸம்ருத்தமாயிற்று. (லோகம் - மிக்கது) என்றந்வயம். இளையபெருமாள் கைங்கர்யநிஷ்டர், ஸ்ரீபரதாழ்வான் குணநிஷ்டர்.

ஞானவிதிபிழையாமே யென்று தொடங்கி, மேவித்தொழுமடியாரும்பகவரும் - உலகு - மிக்கது; அவர்களோடொக்க- வேதப்புனிதவிருக்கை நாவிற்கொண்டச்சுதன்றன்னை - மேவித்தொழுதுய்மினீர்க ளித்யந்வயஃ. கீழிற்பாட்டுக்களிற்போலே, இப்பாட்டிலும் - ஸ்ரீவைஷ்ணவர்களைத் தொழுதென்றபக்ஷத்திலே; வேதப்புனிதவிருக்கை நாவிற்கொண்டு - ஞானவிதிபிழையாமே பூவிற்புகையுந் தொடங்கி, அச்சுதன்றன்னை - மேவித்தொழுமடியாரும் பகவரும் - மிக்கதுலகு; அவர்களை - மேவித்தொழுதுய்மினீர்களென்றந்வயம்.........................................*

---

# பத்தாம்பாட்டு.

மிக்கவுலகுகடோறுமேவிக்கண்ணன்றிருமூர்த்தி
நக்கபிரானோடயனுமிந்திரனுமுதலாகத்
தொக்கவமரர்குழாங்களெங்கும்பரந்தனதொண்டீர்.
ரொக்கத்தொழுகிற்றிராகிற்கலியுகமொன்றுமில்லையே.

## ஆறாயிரப்படி.

(மிக்க) சதுர்முகபசுபதிஸதமகப்ரப்ருதி சமஸ்ததேவநிகரங்களும் பரமபுருஷஸமாச்ரயணத்தாலே லப்தலோகாதிபத்யரானார்கள்; ஆனபின்பு நீங்களு மவர்களைப்போலே எம்பெருமானை யாச்ரயிக்கவல்லீகோளாகில், இக்கலியுகமொன்று மில்லையென்கிறார்... ... ...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி - சர்வாதிகனான சர்வேச்வரனுக்கு சேஷபூதரானபாகவதருடைய ஆச்ரயணீயதையை ப்ரதிபாதித்து, இப்பாட்டில் - ப்ரயோஜநாந்தர

ர்த்தமாக தேவதாந்தரங்களை யாஶ்ரயிப்பாரைக்குறித்து; அவனை யாஶ்ரயித்து தேவதைகள் அபிலஷிதபதங்கள்பெற்றவோபாதி நீங்களு மவனையாஶ்ரயிப்புதிக ளாகில், உங்களுடைய புத்திபேதஹேதுவான காலதோஷமில்லையென்கிறார்.

நக்கன்-நக்நனை. பிரானோடு-ஈஶ்வரனோடேகூட. அயனும்- ப்ரஹ்மாவும். இந்திரனும்-இந்த்ரனும். முதலாக-முதலாக. தொக்க - திரண்ட. அமரர்குழாங்கள்-தேவத்தாசமூஹங்களானவை. கண்ணன் - சர்வாபாஶ்ரயபூதனனக்ருஷ்ணனுடை ய. திரு-ஸ்ரீமத்தான. மூர்த்தி-விக்ரஹத்தை. மேவி-ஆஶ்ரயித்து. மிக்க - போக்ய போகோபகரணதிகளால் ஸம்ருத்தமான. உலகுகள்தோறும் - லோகங்கள்தோறு ம். எங்கும் - சர்வத்ர. பரந்தன - விஸ்தீர்ணமான சம்பத்தையுடையரானார்கள். தொண்டீர் - இதரபுருஷார்த்தசபலரானவர்களே. ஒக்க-நீங்களுமவர்களோடொக் க. தொழ - அவனையேதொழ. கிற்றிராகில்-வல்லிகோளாகில். கலியுகம்- உங்களுக் குத் தேவதாந்தரப்ராவண்யரூபபுத்யபகர்ஷஹேதுவான கலியுகதோஷம். ஒன்று ம்-ஒன்றும். இல்லை-இல்லை.

கலியுகத்தில் பகவதர்ச்சநவிமுகராம்படி * பாஷண்டோபஹதராயிறே ஜந ங்களிருப்பதென்றுகருத்து.......................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

நீங்களாஶ்ரயிக்கிற தேவதைகள் செய்கிறவித்தை நீங்களும்செய் திகோளாகில், யுகப்ரயுக்தமான தோஷங்களும் போமென்கிறார்.

( மிக்கவித்யாதி ) விஸ்த்ருதமான லோகங்களெங்கும் க்ருஷ்ண னுடைய அசாதாரணவிக்ரஹத்தை சுபாஶ்ரயமாகப்பற்றி. ( நக்கனித் யாதி ) ருத்ரனோடே ப்ரஹ்மாவு மிந்த்ரனு மிவர்கள் தொடக்கமாகத் தி ரண்ட தேவதாசமூஹங்களெங்குமொக்கப்பரந்து விபூதிவிஸ்தாரத்தை யுடையரானார்கள்.

அப்ராப்த விஷயத்தே தொண்டுபட்டுத் திரிகிற நீங்கள் அவர்க ளோடொக்க சர்வேஶ்வர சமாஶ்ரயணம்பண்ணப்பெறில், உங்கள்தோ ஷம்போகையேயன்றிக்கே யுகப்ரயுக்ததோஷமும்போமென்கிறார்......*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( மிக்கவித்யாதி ) "நக்கபிரானோடு" என்று தொடங்கி, "அமரர்குழாங்கள் - கண்ணன்திருமூர்த்தி - மேவி" என்றத்தைப்பற்ற ( நீங்களா ஶ்ரயிக்கிறவித்யாதி ) நீங்களும் செய்திகோளாகிலென்றது - "ஒக்கத்தொழகிற்றி ராகில்" என்றத்தைப்பற்ற. "கலியுகமொன்றுமில்லை" என்றத்தைப்பற்ற (யுகப்ர யுக்தமானவித்யாதி )

"கண்ணன்திருமூர்த்தி - மேவி" என்றந்வயிப்பது. மேவுகை - சுபாஶ்ரய த்வேநபற்றுகை. "தொக்க" - ( திரண்ட ) பஹுவசநத்தோடேகூட்டி "எங்கும் பரந்தன" என்றதுக்கு விவரணம் (விபூதிவிஸ்தாரத்தையுடையரானார்களென்று)

"தொண்டீரொக்க" இத்யாதியைப்பற்ற (அப்ராப்தேத்யாதி) தொண்டு பட்டு - அடிமைப்பட்டு. ( உங்கள்தோஷம்போகையே ) இத்யாதிக்குக்கருத்து-நீங்

கள் பாகவதர்களானால் உங்கள் ஸஞ்சாரத்தாலே யுகப்ரயுக்ததோஷமும் போமென்கை. யுகப்ரயுக்ததோஷம் - கலியுகப்ரயுக்ததோஷம்.

தொண்டர், நக்கபிரானென்று தொடங்கி, குழாங்கள் - கண்ணன்றிருமூர்த்தி - மேவி - மிக்கவுலருகள்தோறும் - எங்கும்பரந்தன ; ஆகையாலே நீங்களும் - ஒக்கத்தொழுகிற்றிராகில் கலியுகமொன்றுமில்லை இத்யந்வய:......................*

# பதினொன்றாம்பாட்டு.

கலியுகமொன்றுமின்றிக்கேதன்னடியார்க்கருள்செய்யும்
மலியுஞ்சுடரொளிமூர்த்திமாயப்பிரான்கண்ணன்றன்னைக்
கலிவயற்றென்னன்குருகூர்க்காரிமாறன்சடகோப
னொலிபுகழாயிரத்திப்பத்துள்ளத்தைமாசறுக்குமே.

## ஆறாயிரப்படி.

( கலியுகம் ) ஸ்வாப்ரிதரபேக்ஷித்தால் கலியுகத்தையே க்ருதயுகமாக்கியருளும் ஸ்வபாவனாயிருந்த வெம்பெருமானைச் சொன்ன இத்திருவாய்மொழி, வைஷ்ணவத்வவிரோதி ஸகலவிரோதங்களையும்போக்குமென்கிறார்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழி, அப்யஸித்தவர்கள் நெஞ்சில் சகலமாலிந்யமு மறுக்குமென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

தன் - தனக்கு. அடியார்க்கு - அஸாதாரணசேஷபூதரானவர்களுக்கு. கலியுகம் - கலியுகதோஷம். ஒன்றும் - ஒன்றும். இன்றிக்கே - தட்டாதபடி. ஸ்வவிஷயஜ்ஞாநப்ரேமவ்ருத்திகளை, அருள் - தன்னருளாலே. செய்யும் - கொடுக்கையாலே. மலியும் - அபிவ்ருத்தமான. சுடர் - ப்ரகாசத்தையுடைத்தான. ஒளிமூர்த்தி - தேஜோமய திவ்யவிக்ரஹத்தை யுடையனாய். மாயம் - ஆஶ்சர்ய குணசேஷ்டிதங்களை. பிரான் - அவர்களை யநுபவிப்பிக்குமுபகாரகனை. கண்ணன்றன்னை - க்ருஷ்ணனைப்பற்ற. கலி - ஸம்ருத்தமான. வயல் - வயலையுடைத்தாய். தென் - தெற்குத்திக்குக்கு. நன் - ஶ்லாக்யமான. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகராய். காரி - ஜநகவைலக்ஷண்யத்தையும். மாறன் - குலவைலக்ஷண்யத்தையுமுடையரான. சடகோபன் - ஆழ்வாருடையதாய். ஒலி - ஸுப்ரஸித்தமான. புகழ் - பகவத்குணப்ரதையையுடைத்தான. ஆயிரத்து - ஆயிரந்திருவாய்மொழியில். இப்பத்து - இப்பத்தும். உள்ளத்தை - அப்யஸித்தவர்கள் நெஞ்சை. மாசு - பாகவதஸாம்ய ப்ரதிபத்திருபமாயும், அதுக்கடியான பகவதுத்கர்ஷாதிஶங்காருபமாயும், தேவதாந்தரபரத்வப்ரதிபத்திருபமாயும், ப்ரயோஜநாந்தர ப்ராவண்யருபமாயுமுள்ள மாசு. அறுக்கும் - அறும்படிபண்ணும்.

இது - அறுசீராசிரியவிருத்தம்.............................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழி கற்றார்க்குத் தேவதாந்தரங்கள்ப க்கலுண்டான பரத்வசங்கையும், எம்பெருமான்பக்கல் ப்ரயோஜநாந்த ரபரதையுமான மாநஸதோஷம் போமென்கிறார்.

( கலியுகமொன்றுமின்றிக்கே ) "கலௌ க்ருதயுகம் தஸ்ய" ( கலௌக்ருதயுகம்தஸ்ய ) என்கிறபடியே, கலிதோஷங்களொன்றும்வாரா தபடியாகத் தன்னடியார்க்கருள்செய்யும். நாட்டுக்கிட்ட வஃக மல்லவி றே அந்தஃபுரத்துக்கிடுவது. ( மலியும்சுடரொளிமூர்த்தி ) அருள்செய் யாதொழிந்தாலும் விடவொண்ணாதவடிவழகு. சுடரொன்றும், ஒளியெ ன்றும் - பர்யாயமாய், இரண்டாலும் - மிகுதியைச்சொல்லுகிறது. மலி தல் - நிறைதலாய், மிக்கதேஜஸ்ஸாலே நிறைந்த வடிவென்றபடி. ( மா யமித்யாதி ) ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடைய க்ருஷ்ணனையா யிற்றுக் கவிபாடிற்று. ( கலிவயலித்யாதி ) கலியென்று - மிடுக்குக்கும், ஆரவாரத்துக்கும்பேர். இவற்றால் - ஶ்ரஸாரத்தைச்சொல்லுதல்; நடுவ து, அறுப்பது, உழுவதாய்ச்செல்லுகிற ஆரவாரத்தைச் சொல்லுதல். இப்படிப்பட்ட வயலையுடைத்தாயிருந்துள்ள திருநகரியிலாழ்வாரருளிச் செய்த, ப்ரஸித்தமான புகழையுடைத்தான ஆயிரத்திலும், இந்தப்பத் தும்; தேவதாந்தரங்கள்பக்கல் பரத்வஶங்கைபண்ணுதல், ஸ்ரீவைஷ்ண வர்கள்பக்கல் ஸஜாதீயபுத்திபண்ணுதல், "அபாகவதஸஹவாஸம்நன்று" என்றிருத்தல், ப்ரயோஜநாந்தரங்களையபேக்ஷித்தல் செய்கையாகிற மா நஸதோஷங்களைப் போக்கும்.........................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (கலியுகமித்யாதி ) "இப்பத்துள்ளத்தைமாசறுக்கும்" என்றத்தை ப்பற்ற ( இத்திருவாய்மொழிகற்றார்க்கித்யாதி )

கலியில்லாமல் போமோவென்ன ( கலாவித்யாதி ) "கலௌ க்ருதயுகம் தஸ்ய கலிஸ்தஸ்ய க்ருதே யுகே । யஸ்ய சேதஸி கோவிந்தோ ஹ்ருதயே யஸ்ய நாச்யுத:." ( கலௌக்ருதயுகம்தஸ்யகலிஸ்தஸ்யக்ருதேயுகே । யஸ்யசே தஸிகோவிந்தோ ஹ்ருதயேயஸ்யநாச்யுத:. ) ஸர்வர்க்கும் கலியுகமாயிருக்க, அடி யார்க் கந்ததோஷ மொன்றும் வாராதபடி யருள்செய்யும்படி யெப்படி யென்ன ( நாட்டுக்கித்யாதி ) அஃகம் - அர்க்கம். மூல்யதநமித்யர்த்த:. சுடரொளி - மிக்க தேஜஸ்ஸென்றர்த்தமாயிருக்க, "மலியும்" என்றபதம் வ்யர்த்தமன்றோ வென்ன ( மலிதலித்யாதி ) அப்போது, "சுடரொளி - மலியும் - மூர்த்தி" என்றந்வயம். "பிரான்" என்றது - குணசேஷ்டிதங்களை யாஶ்ரிதர்க் கநுபவிப்பிக்கு முபகாரக னென்றபடி.

மிடுக்கு - ஶ்ரஸாரம்.

( அருளிச்செய்தவென்று ) அர்த்தஸித்தம். ஒலி - சப்தம். அதாவது - ப்ர ஶம்ஸையாய், ப்ரஸித்தியைக்காட்டுகிறது.

பரத்வஶங்கையும், ஸஜாதீயபுத்தியும், "அபாகவதஸஹவாசம்நன்று" என்றிருக்கையும், ப்ரயோஜநாந்தரத்தை யபேக்ஷித்தல் செய்கையுமாகிற மாநஸதோஷங்களைப்போக்குமென்றது - "கண்ணனல்லால்தெய்வமில்லை," "தொழுதுதொழுதுநின்றார்த்தும்," "ஊழிபேர்த்திடும்கொன்றே," "சிந்தையைச் செந்நிறுத்தியே" இத்யாதிப்பதங்க ளித்திருவாய்மொழியிலே யிருக்கையாலே யென்று கண்டுகொள்வது. மாசென்று - அழுக்காய், அத்தாலே தோஷம் சொல்லுகிறது.

கலிவயலென்றுதொடங்கி, சடகோபன் - கலியுகமொன்றுமித்யாரப்ய, அருள்செய்யும் - சுடரொளி - மலியும் - மூர்த்தி மாயப்பிரான் கண்ணன் றன்னை, சொன்ன - ஒலிபுகழித்யாரப்யாந்வய꞉. சொன்னவென்று - அத்யாஹார்யம். சடகோபனொலிபுகழாயிரமென்றதுக்கு - "ஆழ்வாருடையதாய் ஸுப்ரஸித்தமான பகவத்குணப்ரதையையுடைத்தான வாயிரம்" என்றுரையில் சப்தார்த்தம். உள்ளத்தைமாசறுக்கும் - நெஞ்சைமாசறும்படிபண்ணும்.

"கறுத்தமனமொன்றும் வேண்டா" என்று - * ப்ரணவோக்தாநந்யார்ஹ சேஷத்வத்தையும், "அவர்களை, சென்றுதொழுதுய்மின்" என்று - * நமஸ்ஸினர்த்தமான ததீயசேஷத்வத்தையும், "சிந்தையைச்செந்நிறுத்தி" என்று - * த்ருதீயபதஸித்தமான வைஶ்வர்ய கைவல்ய வ்யாவ்ருத்தமான புருஷார்த்தத்தையும் சொல்லுகையாலே, "மாசறுக்கும்" என்கிறவிடத்திலே - பதத்ரயார்த்தமும்சொல்லுகிறது..............................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( பொலிகபொலிகபொலிக )

பாதோதிப்ரௌடகாந்தை꞉ ஸரஸதுலஸிகாலங்க்ருதைர் தாத்ரு
பாவைர் வைகுண்டவேச சக்ரப்ரஹரணவசிதா தைவதஸ்தாபநா
ட்யை꞉ । ஶ்ரீநாதஸ்யாவநேஶோ பஹுநியமந ஸர்வஶேஷித்வபாவைர் நி
த்யாஸக்தைஸ் தத்வஸக்தைர் அதிவபுஷம் ஸம்ப்ராஹ க்ருஷ்ணம் ஶடாரி꞉.  (௩௰)

( பாதோதிப்ரௌடகாந்தை꞉ ) கடல்வண்ணன் பூதங்கள் - கடல்போலே ஶ்ரமஹரமான திருமேனிகாந்தியிலும்; ( ஸரஸதுலஸிகாலங்க்ருதை꞉ ) வண்டார்தண்ணந்துழாயான் மாதவன்பூதங்கள் - மதுஸ்யந்தியான திருத்துழாய்மாலையலங்காரத்திலும்; ( தாத்ருபாவை ) கரியமுகில்வண்ண னெம்மான் - வர்ஷுக வலாஹகம்போலே யெல்லார்க்கு முபகரிக்குமௌதார்யத்திலும்; ( வைகுண்டத்வேச) சகாரத்தாலே - அதுக்கும் ஸந்நிஹிதமான க்ஷீராப்திஶாயித்வம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது. தடங்கடற்பள்ளிப்பெருமான், வைகுந்தன்பூதங்களேயாய் - திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறத்திலும், திருநாட்டிலே சூரிகளோடே யெழுந்தருளியிருக்கிறவிருப்பிலும்; ( சக்ரப்ரஹரண ) நேமிப்பிரான் றமர்போந்தார் - கையுந்திருவாழியுமானவழகிலும்; ( வஶிதா ) மறுத்துமவனோடே கண்டீரித்யாதி - சர்வேஶ்வரத்வத்திலும்; (தேவதாஸ்த்தாபநாதை꞉) நிறுத்தினான்தெய்வங்களாகவத்தெ

ய்வநாயகன்ருனே - சகலதேவதைகளையும் தத்தத்பதங்களிலே ஸ்த்தாபிக்கிறத்திலு ம்; ஆதிசப்தத்தாலே - ப்ரளயஉபதித்வம் ஸங்க்ருஹீதம். (ஸ்வாநாமச்யாவநே) நா விற்கொண்டச்சுதன்றன்னை - ஆஸ்ரிதனை "நதந்த்ஜெயம்" (நத்யஜேயம்) என் ஞெருகாலும் கைவிடாததிலும்; (ஸகலநியமநே, ஸர்வகர்மேஜ்யபாவே) மேவி க்கண்ணன்றிருமூர்த்தி நக்கபிரானோ டயனுமிந்திரனும்முதலாக - சர்வரையும் நிய மிக்கிறதிலும், எல்லாருடைய கர்மங்களாலு மாராதிக்கப்படுமதிலு மீடுபட்டிருக் கிற ஸ்ரீவைஷ்ணவர்களாலே, எம்பெருமான் லோகத்தில் துரிதங்களை யெல்லாம் சமிப்பியாநிற்கிருனென்று - "பொலிகபொலிக" என்கிறதஸகத்திலே யாழ்வார ருளிச்செய்தாரென்கிருர்........................................................(ருo)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

பொலிகபொலிகவென்றுபூமகள்கோன்ருெண்டர்
மலிவுதனைக்கண்டுகந்துவாழ்த்தி - யுலகில்
திருந்தாதார்தம்மைத்திருத்தியமாறன்சொல்
மருந்தாகப்போகுமனமாசு. (சஉ)

(பொலிகபொலிக) * ஒன்றுந்தேவில் - தாம்திருத்த, திருந்தின ஸ்ரீவைஷ் ணவர்களுக்கு மங்களாசாஸநம்பண்ணியும், திருந்தாதாரைத்திருத்தியும் செல்லுகி றபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருரி நில். அதெங்ஙனேயென்னில்; கீழ், * ஒ ன்றுந்தேவிலே - தாம்பண்ணின பரோபதேசத்தைக்கேட்டு, ஸம்ஸார பரமபத வி பாகமறும்படி நாடாகத்திருந்தின பாகவத ஸம்ருத்தியைக் கண்டு ஹ்ருஷ்டராய், தாம் திருத்தத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மங்களாசாஸநம்பண்ணியும், தி ருந்துகைக்கு யோக்யதை யுடையாரை யுபதேசித்துத் திருத்தியும், திருந்தாதாரை யுபேக்ஷித்தும் செல்லுகிற * பொலிகபொலிகவிலர்த்தத்தை - "பொலிகபொலிக" என்று தொடங்கி யருளிச்செய்கிருரென்கை.

(பொலிகபொலிகவென்று பூமகள்கோன்ருெண்டர்மலிவுதனைக்கண்டுகந் துவாழ்த்தி) "ஜயதந்த்திபலோராமோலக்ஷ்மணஸ்சமஹாபலஃ। ராஜாஜயதி ஸுக்ரீவோராகவேணாபிபாலிதஃ" (ஜயத்யதிபலோராமோலக்ஷ்மண ஸ்சமஹாபலஃ। ராஜாஜயதிஸுக்ரீவோராகவேணுபிபாலிதஃ) என்னும்படி, பூமக ள் கோன்ருெண்டர் மலிவுதனைக் கண்டுகந்து - பொலிகபொலிகவென்று-வாழ்த்தி. பூமகள் கோன்ருெண்டர் மலிவாவது - "கடல்வண்ணன்பூதங்கள் மண்மேல்மலி யப்புகுந்து" என்றும், "மாதவன்பூதங்கள் மண்மேல்பண்டான்பாடிநின்ருடி" என்றும், "கடல்வண்ணன்பூதங்கள்மண்மேலிரியப்புகுந்து" என்றும், "தடங்கட ல்பள்ளிப்பெருமான் தன்னுடைப்பூதங்களேயாய்" என்றும், "இவ்வுலகத்து வை குந்தன்பூதங்களேயாய்" என்றும், "பகைபசிதீயனவெல்லாம்நின்றிவ்வுலகில்கடி வான் நேமிப்பிரான்றமர்போந்தார், ஞாலம்பரந்தார்" என்றும், "மேவித்தொழு மடியாரும் பகவரும்மிக்கதுலகே" என்றுமிப்படி - நித்யசித்தர் ஸ்வேதத்வீபவா ஸிகள்முதலான திருமாலடியாரெங்கும் திரண்டஸம்ருத்தி. நித்யசித்தர்க்கும் ஸ்வே வேதத்வீபவாஸிகளுக்கும் சமானராய்த் திருத்தத்திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களை

ன்றுமாம். (கண்டு) "தமர்கள்கூட்டம் - நாளும்வாய்க்கநங்கட்கு" என்னும்படி யான தங்கண்களாலேகண்டு. (உகந்து) "கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியனகண்டோம்" என்று ஹ்ருஷ்டராய். (வாழ்த்தி) அந்தஸம்ருத்திக்கு "பொலிகபொலிக" என்று மங்களாஶாஸநம்பண்ணி. (உலகில்திருந்தாதார் தம்மைத்திருத்தியமாறன்சொல் மருந்தாகப்போகும்மனமாசு) * ஒன்றுந்தேவினுபதேஶத்திலுந்திருந்தாதே யொதுங்கியிருந்தவர்களைக்குறித்து, "கண்ணனல்லால் தெய்வமில்லை" என்றும், "எவ்வுலகுக்குந்தன்மூர்த்திநிறுத்தினான் தெய்வங்களாகவத்தெய்வநாயகன்றானே" என்றும, "ஒக்கத்தொழுகிற்றிராகில் கலியுகமொன்றுமில்லையே" என்றுமிப்படி - பரத்வோபதேசம்பண்ணித்திருத்தியும், அதிலும் திருந்தாதவர்களைக்குறித்து, "அரக்கரசுராபிறந்திருள்ளீரோ லுய்யும்வகையில்லைதொண்டீ ரூழிபேர்த்திடுங்கொன்றே" என்று - தேடித்தடவிப்பிடித்து ப்ரத்யவாயபுரஸ்ஸரமாகத்திருத்தியும்சொல்லுகிற ஆழ்வார் ஸ்ரீஸூக்த்யௌஷதமடியாக மநோமாலிந்யம் நிவ்ருத்தமாம். ஸ்ரீவைஷ்ணவஸாஜாத்யபுத்தியும், தேவதாந்தரங்களிடத்தில் பரத்வபுத்தியுமிறே - மநோமாலிந்யமாவது; "மனனகமலமறக்கழுவி" என்றிறேயருளிச்செய்தது. "விஷய்ருசுபலங்கள் கைக்கூடினவர் அடிமைபுக்காரையுமாட்செய்வாரையுங்காண, லோகத்விபாந்தரங்களினின்றும்போந்த தேவர்குழாங்களைக்கண்டுகொப்பிட்டு; ப்ரஹ்லாதவிபீஷணர் சொற்கேளாதவரக்கரசுரர்போல் வாரைத்தடவிப்பிடித்து, தேசகாலதோஷம்போக எங்குமிடங்கொண்டவர்களை மேவித்தொழுதுஜ்ஜீவியுங்கோள், நீங்கள் நிறுத்துகிறவர்களை தேவதைகளாக நிறுத்தினவனை மேவிப்பரவுமவரோடொக்கத் தொழில்யுகதோஷமில்லையாம் என்று விஷ்ணுபக்திபராக்கி" என்றிறேயருளிச்செய்தது .......................... (சஉ)

ஐந்தாம்பத்தில் – இரண்டாந்திருவாய்மொழி முற்றிற்று.



ஆக திருவாயமொழி - சஉ.—பாட்டு - சசுச.





ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஐந்தாம்பத்து.

## மூன்றாந்திருவாய்மொழி.

மாசறுசோதி – ப்ரவேஶம்.

### ஆறாயிரப்படி.

(மாசறுசோதி) இப்படி யாஶ்ரித வாத்ஸல்யாத் யநவதிக கல்யாணகுணவிபூஷிதனாயிருந்த வெம்பெருமானோடே ஸம்ஶ்லேஷிக்க வாசைப்பட்டுப் பெறாதே சிரகால மவஸந்நையாயிருந்தா ளொருபிராட்டி, தன்னுடைய வ்யஸநத்தைப் பொறுக்கமாட்டாமையாலே "மடலூர்ந்தாகிலுமவனோடேஸம்ஶ்லேஷிக்கவேணும" என்று மநோரதித்து மடலூருகையிலே வ்யவஸிதையாயிருந்தவிடத்தில், இவளுடையதோழியானவள் "நீயாசைப்படுகைக்கீடான ஸௌந்தர்யாதி கல்யாணகுணங்க ளவனுக்குண்டோ, உண்டானால்தானவனை யுத்திஶ்யமடலூருகையுக்தமோ, இவ்வூரொல்லா முன்னைப்பழிசொல்லாதோ" என்ன;.................*

### பன்னீராயிரப்படி.

மூன்றாந்திருவாய்மொழியில், கீழநுஸந்தித்த பாகவதோத்கர்ஷ ஹேதுவான பகவதுத்கர்ஷத்தையும், குணவிக்ரஹாதி வைலக்ஷண்யத்தையு மநுஸந்தித்து, அவனுடைய ஆலோகாலாபாதி முகத்தாலே ஸம்ஶ்லேஷிததநுபவிக்கைக் காசைப்பட்டு அது கிடையாமையாலே, ஆஶாஜநகமான ; ஆபிரூப்யாதிசயத்தையும், அவயவ விசேஷவைலக்ஷண்யத்தையும, ப்ரதிபந்தக நிவர்த்தகமான பாலசேஷ்டிதத்தையும், அபிநிவேசவர்த்தகத்வத்தையும், அநந்யார்ஹதாபாதகத்வத்தையும், ஆகர்ஷகத்வ ஸ்வபாவ யோகத்தையும், ஆஸத்திஹேதுவ்வான அர்ணவஶாயித்வாதிகளையும், அகிலவிரோதிநிவர்த்தநத்தி லநாயாஸத்தையும், உத்துங்கதேச வாஸித்வத்தையும், அஸாதாரண சிஹ்நயோகத்தையு மநுஸந்தித்து, ஏவம் விசிஷ்டனான ஸர்வேஶ்வரன் விஷயத்தில் தமக்குப்பிறந்த வபிநிவேசாதிசயத்தாலே, "இரண்டுதலைக்கு மநநுரூபமான ஸ்வப்ரவ்ருத்திவிசேஷத்தாலேயாகிலும் ப்ராபிக்கக்கடவோம்" என்கிற த்வராதிசயத்தால் தமக்குப் பிறந்த வ்யவஸாயவிசேஷத்தை அந்யாபதேசமுகத்தாலே; நாயகனான வீஶ்வரனோடு கலந்து பிரிந்தாளொருநாயகி தத்ப்ராப்த்யபிநிவேச த்வரையாலே, தன்குடிப்பிறப்புக்கும் பெண்மைக்கு மநநுரூபமாம்படி "அவனுடைய மெய்ப்பாட்டை யழித்து மடலூர்ந்தும் பெறக்கடவோம்" என்கிற வறுதிப்பாட்டைப் பாங்கிக்குரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.......*

௩டு.

"மலியும்சுடரொளிமூர்த்திமாயப்பிரான்கண்ணன்றன்னை" என்று – வடிவழகையும் குணங்களையும் சௌலப்யத்தையு மநுஸந்தித்து; இப்படி சுலபனுமாய், ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடையனுமாய், அவையில்லையேயாகிலும் விடவொண்ணாத வடிவழகையு முடையனான விவனை பாஹ்ய சம்ஶ்லேஷாபேக்ஷை பிறந் தணைக்கக் கோலிக் கையைநீட்ட, அகப்படாதே கைகழிந்து நிற்க, அத்தாலே கலங்கி மடலெடுக்கையிலே யுபக்ரமிக்கிறார். மடலெடுக்கையாவது – போர்சுட்டுப் பொரிகொறிக்கையோபாதி. "அநீதிசெய்யாதே கொள்ளுங்கோள்" என்று பிறரைத்திருத்தினவர், "நீர்செயயப்பார்க்கிறவிது அநீதி, அத்தைத்தவிரும்" என்று பிறர் திருத்தவும் திருந்தாதபடியானார். பிறரை பகவத்விஷயத்திலே ப்ரவணராக்குகைக்குத் திருத்துகிற விவரை, "பகவத்ப்ராவண்யமாகாது" என்று திருத்தப்பார்த்தால் திருந்தாரிறே.

அன்றிக்கே, * ஏறுளுமிறையோனில் – அவனுக் குறுப்பல்லாத நானு மென்னுடைமையும் வேண்டாவென்று அலாபத்தாலே கூப்பிடும் தம்மோடொக்கக் கூப்பிடுகைக்குத் துணைதேடி லோகவ்ருத்தாந்தத்தை யநுசந்தித்தவிடத்து, தாம் பகவத் விஷயத்திலே ப்ரவணராயிருக்குமா போலே அவர்க ளிதரவிஷயங்களிலே ப்ரவணரா யிருக்கிறபடியைக்கண்டு, அவர்களநர்த்தத்துக்கு நொந்து அவர்களுக்கு பகவத்பரத்வத்தை யுபபாதித்துத்திருத்தி, "இவர்களிலே யொருவனுயிருக்கிறவென்னை, இவர்களையும் திருத்தும்படி யாக்குவதே சர்வேஶ்வரன்" என்று அவன் தமக்குப்பண்ணின வுபகாரத்தை ஸ்மரித்து, தாம் திருத்தத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மங்களாசாஸநம்பண்ணி, இப்படி பரஹிதத்துக்கு வேண்டுவதெல்லாம் செய்து கையொழிந்தபின்பு பழைய தம்மிழவே தலையெடுத்து, "வழியல்லாவழியேயாகிலும் கிட்டுமத்தனை" என்னும்படியான விடாய் பிறந்து மடலெடுக்கையிலே யொருப்பட்டுச் செல்லுகிறது – இந்தத்திருவாய்மொழி. ஓரோவிஷயங்களிலே ஓரொருத்தர்க்கு சங்கமுண்டானால் அவ்விஷயங்கள் கிடையாவிட்டால் "அவையிப்போதே பெறவேணும்" என்னும்படியான த்வராபிறந்தால், பின்னையவை யிருந்தவிடங்களிலே புகைசூழ்ந்து புறப்படவேண்டும்படியாயிருப்பதொரு சாஹஸத்தைப்பண்ணிப் புறப்படவிடுவித்து முகத்திலே விழிப்பாரைப்போலே, "அத்தலைக்குப் பழியை விளைத்தாகிலும் முகத்திலேவிழிக்குமத்தனை" என்று சாஹஸத்திலே யொருப்பட்டு, தமக்கிவ்வளவாகப் பிறந்த தசையை யந்யாபதேசத்தாலே பேசுகிறார்.

"அபிமத விஷயத்தைப் பிரிந்தாற்றமாட்டாதார் மடலெடுக்கக்கடவர்கள்" என்றொன்றுண்டு தமிழர்சொல்லிப்போருவது. அதாவது– "துல்யஶீலவயோவ்ருத்தாம்" (துல்யஶீலவ்யோவ்ருத்தாம்) என்று

சீலத்தாலும் வயஸ்ஸாலும் அபிஜநத்தாலும் வடிவழகாலும் சம்பத்தாலும் குறைவற்றிருப்பன இரண்டு விஷயமாய், அதுதன்னில் "அறிவு, நிறைவு, ஓர்ப்பு, கடைப்பிடி" என்றுப்போலே சொல்லுகிற நாயகலக்ஷணங்கள் நாயகனுக்குமுண்டாய், "நாண், மடம், அச்சம், பயிர்ப்பு" என்றுப்போலே சொல்லுகிற நாயகியுடையலக்ஷணங்கள் நாயகிக்கு முண்டாய், இப்படி இரண்டுதலையும் குறைவற்று இவர்கள் தாங்கள் ப்ராப்தயௌவநருமாயிருக்க; இவர்களைப் புறம்புகூட்டுவாரின்றிக்கேயிருக்க, யாத்ருச்சிகமாக அவனும் "வேட்டைக்கு" என்று புறப்பட்டு, இவளும் "பூக்கொய்துவிளையாட" என்று உத்யாநத்திலே புறப்பட, அவ்விடத்திலே தைவயோகத்தாலே யிருவர்க்கும் கண்கலவியுண்டாய், சிலரடியாகவந்த சம்ஶ்லேஷமல்லாமையாலே பிரிவோடே வ்யாப்தமாகப் பிரிந்து, குணதிகவிஷயமாகையாலே யிரண்டுதலைக்குமாற்றாமைவிஞ்சி, ஒருதலையை யொழிய வொருதலைக்குச் செல்லாமைபிறந்து, இரண்டு தலையையுமழித்தாகிலும் பெறப்பார்க்கை. மடலூருகையாவதுதான்—அபிமதவிஷயத்தைப் பிரிந்தவாற்றாமையாலே அவ்விஷயத்தை யொருபடத்திலேயெழுதி, வைத்தகண்வாங்காதே யத்தைப் பார்த்துக்கொண்டு, பனைமடலைக் குதிரையாகக்கொண்டு, பிரிந்தபோதுதொடங்கி கண்டபோகோபகரணங்களெல்லா மக்நிகல்பமாய்த்தோற்ற, ஊணுமுறக்கமு மின்றிக்கே, உடம்பில்துளிநீறிட்டுக்கொள்ளாதே, மயிரை விரித்துக்கொண்டு திரியாநின்றால், இத்தர்மஹாநியைக்கண்ட க்ஷத்ரியாதிகள் "கெட்டேன், இவனுக்கொருவிஷயத்திலே இத்தனை பாவபந்தமுண்டாகாதே" என்று, அவர்க ளவ்விஷயத்திலே கூட்டுதல்; இல்லையாகில், இதுவே ஹேதுவாக இரண்டுதலையிலுள்ள பந்துக்களும் கைவிட, அலக்குப்போர்போலே யொருவர்க்கொருவர் புகலாய் அங்ஙனேகூடுதல், தோழிமார் கூட்டுதல், ஆற்றாமைகூட்டுதல், அந்தவிஷயந்தான் குணதிகவிஷயமாயிருக்குமாகில் பழிக்கஞ்சிக்கூடுதல், இவையித்தனையுமில்லையாகில் முடிந்து பிழைத்தல்செய்கையாவதொரு சாஹஸப்ரவ்ருத்தி விசேஷமாயிற்று. இதுதன்னை [ கடலன்னகாமத்தராகிலுமாதர் । மடலூரார்மற்றையார்மேல் என்று ] ஆஶ்ரயத்தளவல்லாதபடி ஆற்றாமைகளைபுரண்டாலும் ஸ்த்ரீகள் மடலூரக்கடவர்களன்று; நாயகன் தன்னாற்றாமையாலே மடலெடுத்துலகின்மேல் வைத்துச் சொல்லுதல், ( உலகின்மேல்வைத்துச் சொல்லுகையாவது- ஸ்வாபிப்ராயத்தை யறிவியாமல் "ஒருவன்மடலூரப்போகிறான்" என்று அந்யாபதேசேசசொல்லுகை. ) "நான்வரைப்பாயப்புகாநின்றேன், மடலெடுக்கப்புகாநின்றேன்" என்று தோழிக்குவந்தறிவித்தால், அவள் கூட்டிற்றிலளாகில் பின்பவனிதுசெய்யக்கடவன்; இத்தனையல்லது ஸ்த்ரீகள் மடலெடுக்கக் கடவரல்லர்கள் என்று இங்ஙனே யொருமர்யாதை கட்டினார்கள்தமிழர்; இங்கங்ஙனன்றிக்கே, பிராட்டிதான் மடலெடுத்ததாகவிராநின்றது, தமிழர் "ஸ்த்ரீகள்மடலூரக்க

டவரல்லர்" என்றுசொன்னவிது பின்னைச்சேரும்படியென்னென்னில்; அவர்கள் ஒருதலையிலேதானத்தை யிசைந்தார்களே, அப்படியிசைகைக் கடியாற்றாமையே, அதிரண்டுதலைக்கு மொத்தபின்பு ஒருதலையிலொது க்குவாரார். வரம்பழியவாகிலும் முகங்காட்டிவைத்துக்கொண்டு தரிக்க வேண்டும்படியா யிருப்பதொரு விஷயம் புறம்பில்லையே; இங்ஙனேயிரு ப்பார் சிலரைக் கல்பித்துக்கொண்டார்களித்தனையிறே. இதுக்கொருமர் யாதை கட்டுகையாவது-ஆசைக்கொருவரம்பிட்டார்களாமித்தனையிறே; அப்போது பின்னை ராஜாஜ்ஞைக்கு நிற்கவேணும், இல்லையாகில்வேலி யடைத்தால் நிற்கவேணும், ஆகையாலவர்கள் ப்ரேமஸ்வபாவமறிந்தில ர்களாமித்தனை.

இவர்தாம் * வளவேழுலகிலே - நாமவனோடே கலக்கையாகிறவி து அவனுக்கவத்யாவஹம், நம்பேற்றுக்காக அவனோடேகலந்து அவனு க்கவத்யத்தை விளைப்பதிற்காட்டில் நாமகன்று முடிந்தாகிலு மத்தலைக்க திசயத்தைப்பண்ண வமையுமென் றிருக்குமத்தோடும் சேராது; இனி * ஏழுளுமிறையோனிலே - அவனுக் குறுப்பல்லாத வாத்மாத்மீயங்கள் நசித்துப்போக வமையுமென்று சொன்னவத்தோடும் சேராது; ஆக, வீதராகராயிருப்பார் செய்வதுமொன்றல்ல, இவர் தம் ஸ்வரூபத்தோடு ம் சேராது, ஜ்ஞாநாதிகரா யிருப்பார் செய்வது மொன்றல்ல, ஆனலிதி ருந்தபடியென்னென்னில்; இவற்றுக்கெல்லாம் பரிஹாரம், பட்டர் தி ருமட லருளிச்செய்கிறபோ தருளிச்செய் தருளினர், இங்குத்தைக்கும் வேண்டுவதுசொல்லவேணுமிறே. ஜ்ஞாநாதிகராயிருப்பார் ஜநககுலத்தி லுள்ளார்க்குமேலில்லையிறே; அக்குடியிலே பிறந்த பிராட்டியானவள், "[Grantha]" (யாநஶக்யாபுராத்ரஷ்டும்) என்கிற படியே, பெருமாள் காட்டுக்கெழுந்தருளுகிறபோது "மன்னனிராமன் பின்வைதேகியென்றுரைக்கு மன்னநடையவணங்குநடந்திலளே" என் கிறபடியே - அவர்பின்னே பிராட்டி புறப்பட்டுப்போகையாலே சிஷ்டா சாரமுண்டாயிருந்தது; இனித்தான் * மயர்வறமதிநல மருளப்பெற்ற விவரநுஷ்டிக்கையாலே இதுதானே ப்ரமாணமாகத் தட்டில்லையிறே, "[Grantha]" (யத்யதாசரதிஶ்ரேஷ்டః) என்றும், "[Grantha]" (ஸயத்ப்ரமாணம்குருதே) என்றும் ஸத்துக்க ளுடைய அநுஷ்டாநத்தை ப்ரமாணமாகக் கொள்ளக்கடவதிறே. ஆனு லும் காமத்தை நிஷேதியாநின்றதேயென்னில்; அப்ராப்த விஷயத்தில் காமத்தையிறே நிஷேதித்தது, அவை நிலைநில்லாமையாலே; பகவத்வி ஷயத்தில் காமத்தை "[Grantha]" (நிதித்யாஸிதவ்யః) என் று விதியாநின்றதிறே. வேதாந்தவிஹிதையான பக்தியையிறே - இங்கு, காமமென்கிறது. * வளவேழுலகில் - நாம்கிட்டுகை யவனுக் கவத்யமெ ன்றகன்றவிவர், அத்தலையையழித்து முகங்காட்டுவித்துக்கொள்ளப் பா

ர்க்கிறவிது இவர் ஸ்வரூபத்தோடு சேருமோ என்னவும்வேண்டா ; அங்
கலங்கினைத்தது மத்தலைக் கவத்ய பரிஹாரத்துக்காகவிறே; தமக்காற்று
மை கரைபுரண்டிருந்தது, "தன்னையாசைப்பட்டார்பெறுதேமுடிய, மு
கங்காட்டாதேயிருந்தான்" என்கிற அவத்யத்தை பரிஹரிக்கைக்குச்செ
ய்கிறாராகையாலே ( இதுவுமிவர்ஸ்வரூபத்தோடேசேரும் ) அங்ககன்
றது ஜ்ஞாநகார்யம், இங்குமேல்விழுகிறது பக்திகார்யம். இத்தனைகலங்
கப்பண்ணிற் றில்லையாகில் அத்தலையில் வைலக்ஷண்யத்துக்கு நமஸ்கா
ரம். இவர்தா மிப்படி கலங்கிற்றிலராகில் இவருடைய ப்ரேமத்துக்கு ந
மஸ்காரம். * அவனருளிற்றும் மதிநலமிறே, அதுப்படுத்துகிறபாடிறேயி
தெல்லாம் ; மதியின்கார்யமது, நலத்தின்கார்யமிது. (௫) இனித் தான் சித்
தோபாயத்தை ஸ்வீகரித்து அது பலியாவிட்டால் ஸ்வரூபத்தை யந்ய
தாகரிக்குமித்தனையிறே ; அவன் ஸ்வரூபமந்யதாகரித்தால் இத்தலைசொ
ல்லவேண்டாவிறே. "இத்தலையில் கர்த்தவ்யமில்லையாகில் அவனுக்கச
க்தியில்லையாகில் நடுவுவிளம்பத்துக்கு ஹேதுவென்" என்று தோற்று
மிறே. (௬) ஆற்றாமையையு மாவிஷ்கரித்து அம்பும் தொடுக்கவேண்டும்படி
யான விஷயத்தை யன்றே யிவர்பற்றிற்று. இவர் தமக்கு "மடலெடுக்க
க்கடவேன்" என்று துணிந்ததுணிவுக்கு மேற்பட வநுஷ்டிக்கவேண்டு
வதில்லையாயிற்று குணாதிகவிஷயமாகையாலே. கடலைப் பெருமாள் சர
ணம்புக்கவிடத்தில் தானாக வந்து முகங் காட்டாமையாலே நாலுமூன்ற
ம்பைவிட் டெம்பிலே பாதிவெந்தபின்பிறே வந்து முகங்காட்டிற்று ; இ
ங்கு அதெல்லாம் வேண்டாமையாலே, "சாபமாநய" ( சாபமாநய )
என்கிறவோபாதி, "மடலூருவேன்" என்றச்சமுறுத்தி முகங்காட்டுவி
த்துக்கொள்ளப் பார்க்கிறார். தம்முடைய ஸ்வரூபத்தில் கலக்க மதுவர்
த்தியாநிற்கச்செய்தேயும், அவனுடைய குணஜ்ஞாநத்தில் கலக்கமின்றி
க்கே யிருக்கிறதுகாணுமிவர்க்கு. * ஏறாளுமிறையோனில் – அவனுக்கு
றுப்பல்லாத நானுமென்னுடைமையும் வேண்டா என்றுமுடித்துக்கொ
ள்ளப் பார்த்தவிடத்தில், அதுதம்மையதன்றிக்கே, அவனுளனாக விதழி
யாததாயிருந்தது ; இனி "அத்தலையேபிடித்து (அழிப்போம்" என்று,)
வேர்ப்பற்றோடே யழிக்கப்பார்க்கிறார் ; உண்டாம்போது மத்தலையாலே
யுண்டாய், இல்லையாம்போது மொன்றாகவில்லையாம்படியிறே வஸ்துஸ்
வரூபந்தானிருப்பது. "உயிரினாற்குறைவிலம்" என்றாரங்கு, இங்கு –
உயிர்க்குயிரினால் குறைவிலம் என்கிறார். * ஏறாளுமிறையோனில்–அவ
னுக்குறுப்பல்லாத நானுமென்னுடைமையும் வேண்டாவென்றார், இதி
ல்–என்க்குறுப்பல்லாதவவனு மவனுடைமையும் வேண்டாவென்கிறார்.
"ராவணன் மாயாசிரஸ்ஸைக்காட்டினபோது, இதரஸ்த்ரீகள் அஹ்ருத
யமாக அழுமாபோலே தன்னாற்றாமையாலே கூப்பிட்டு, இவ்வார்த்தை
கேட்டபோதே முடியாதிருப்பாளனென்" என்று பட்டரைச் சிலர்கேட்க
"ஜ்ஞாநாஜ்ஞாநங்களன்று ஜீவநநிமித்தம், அத்தலையில் ஸத்தையாயிற்
று ; அதுக்கழிவில்லாமையாலே யிருந்தாள்" என்றருளிச்செய்தார்.

இப்படி அத்தலையை யழித்தாகிலும் முகங்காட்டுவித்துக் கொள்ளவேண்டும்படி தமக்குப் பிறந்த தசாவிசேஷத்தை; எம்பெருமானோடே கலந்து பிரிந்தாளொரு பிராட்டி ஆற்றாமைமீதூர்ந் திருக்கச்செய்தே இவள் தரித்திருந்த விருப்பைக்கண்டு, தோழியானவள், "முன்புத்தையளவுகளன்றிக்கே யிவள் தேறியிருந்தாள், அவன் வாராதிருக்கஇவளுக்கித்தனை தேற்றமுண்டாம்போது, சாஹஸங்களிலேதுணிந்தாளாகவேணும்" என்றுபார்த்து, "நீசெய்யநினைக்கிறவிது உன்தலைமைக்குமவன்தலைமைக்கும், உன்மதிப்புக்கும், (அவன்மதிப்புக்கும்) உன்பிறப்புக்கு முன்னுடைய மர்யாதைகளுக்கும் போராதுகிடாய்" என்ன; "என்ஸ்வரூபத்தை யழித்தாகிலும் (அவன்ஸ்வரூபத்தையழித்தும்) மடலெடுக்கை தவிரேன்" என்று துணிந்த துணிவைத் தோழிக்கறிவிக்க; இத்தைக்கேட்டருசி, சர்வேஶ்வரன், இருந்தவிடத்தி லிருக்கமாட்டாமைவந்து முகங்காட்டித் தானும் சத்தைபெற்று இவளையும் தரிப்பித்தானைத்தலைக்கட்டுகிறது. இவர் மடலிலே துணிந்தால் கடுகவந்துமுகங்காட்டிப் பிழைக்கில் பிழைக்குமித்தனைபோக்கி, இல்லையாகில் சத்தைகிடக்கவிரகில்லையிறே யவனுக்கு; ப்ரஹ்மாஸ்த்ரத்துக்குத் தப்பவொண்ணாதிறே யவனுக்கு. இதுக்குமுன்பு, "அவனாலேபேறு" என்றுபோந்தாரோயாகிலும், ப்ராப்யமான கைங்கர்யத்துக்கு பூர்வகாலீநமா யிருப்பன பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளென்று சிலவுண்டிறே, அவை தவிரவொண்ணாதிறே. இனி, பக்திமானுக்கும் பக்தியுண்டு; ப்ரபந்நனுக்கும் பக்தியுண்டு, ருசியையொழிய ப்ரபத்தி பண்ணக்கூடாதே. பக்திமானுடையபக்தி, வைதமாய்வருமது; ப்ரபந்நனுடையபக்தி, ருசிகார்யமாயிருக்கும். பக்திமானுக்கு சாதநரூபமாயிருக்கும், இவனுக்கு தேஹயாத்ராசேஷமாயிருக்கும். பக்திமானுக்கு பலப்ரதத்தையில்லாதபோது தவிரலாயிருக்கும், ப்ரபந்நனுக்கு ஸ்வரூப ப்ரயுக்தமாய் வருமதாகையாலேயொருகாலும் தவிராதாயிருக்கும்......................................*

## ஜீயர் அரும்பதம்.

மாசறுசோதி ப்ரவேசே, கீழே - தாம் திருத்தத்திருந்தின ஸ்ரீவைஷ்ணவஸம்ருத்திக்கு மங்களாஶாஸநம் பண்ணினவர்க்கு, இத்திருவாய்மொழியிலே - மடலெடுக்கும்படியான வாற்றாமைவருகைக்கடியேதென்ன; கீழ்த்திருவாய்மொழியோடேஸங்கதி (மலியும்சுடரொளியித்யாதி) உக்தகுணத்ரயத்தையு மவரோஹக்ரமத்தாலே விவரிக்கிறார் (இப்படி சுலபனுமாயித்யாதி) அவரோஹக்ரமமாகவருளிச்செய்தது - இம்மூன்றிலும், "[illegible]" (பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிறவடிவழகே ஆகர்ஷகமென்னுமிடந்தோற்றுகைக்காகவும், "[illegible]" (ரூபமிச்சந்திகந்யகா:) என்கிறபடியே "மாசறுசோதி" என்று - ப்ரதமம் வடிவழகையருளிச்செய்கையாலே, வடிவழகிலே பர்யவஸிப்பிக்கைக்காகவும். (கலங்கி) என்றவநந்தரம், ஒருபிராட்டி தசையை ப்ராப்தராயென்று கூட்டிக்கொள்வது. "மடலூர்தும்" என்றத்தை, பற்ற (மடலெடுக்கையிலேயித்யாதி) அதப்ரோஷணாதிகள் பண்ணாதேமடலெடுக்

கிறதென்னென்ன (மடலெடுக்கையாவதித்யாதி) தூதப்ரேஷணத்தைப்பற்ற நி ஷித்தமாய் அவற்றிலும் கார்யகரமாகையாலே மடலெடுக்கிறுனென்று கருத்து. தூதப்ரேஷணாதிகள்போலன்றிக்கே ஸாஹஸப்ரவ்ருத்தியுமாய், அல்பபலமுமாயிரு க்குமென்றதுக்கு த்ருஷ்டாந்தம் (போர்சுட்டென்றுதொடங்கி) "தத்தஸ்யஸ த்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றிருக்கிறவிவர் அநீதியிலேப்ர வர்த்திக்கிற தென்னென்ன, ஸ்வாபதேஶத்திலே பரிஹாரம் (பிறனையித்யாதி)

* ஏறாளுமிறையோனோடே சங்கதியாக சங்கத்யந்தரம் (அன்றிக்கேயித்யா தி) கீழ்த்திருவாய்மொழியோடேசங்கதி யருளிச்செய்த்துக்குக்கருத்து -"மலியு ம்சுடரொளிமூர்த்தி, மாயப்பிரான், கண்ணன்றன்னை" என்கிற மூன்றுவிசேஷண த்தையும், "மாசறுசோதி, ஆசறுசீலனை, ஆதிமூர்த்தியை" என்கிறபதங்களாலே யநுபாஷிக்கையாலே. * ஏறாளுமிறையோனோடே யருளிச்செய்த்துக்குக்கருத்து- "நாடி, எனைநாளையும்," "முன்செய்யமாமையிழந்து" இத்யாதிகளைக்கடாக்ஷித் து. (தம்மோடொக்கவித்யாதி) * நண்ணுதாரில் ப்ரமேயம். (அவர்களுக்கித்யா தி) * ஒன்றுந்தேவில் ப்ரமேயம். (இவர்களிலேயித்யாதி) * கையார்சக்கரத்தில் ப்ரமேயம். (தாம்திருத்தவித்யாதி) * பொலிகவில் ப்ரமேயம். கையொழிந்தபி ன்பு - திருத்துகிறகார்யமானபின்பு. பழையதம்மிழவேயென்றது - * ஏறாளுமிறை யோனிலிழவேயென்றபடி. வழியல்லாவழியேயாகிலுமென்றது - அத்தலையாலே பெறுகையன்றிக்கே சாதநாநுஷ்டாநத்தைப்பண்ணியாகிலுமென்றபடி.. மடலெ டுக்குமதுஸாஹஸப்ரவ்ருத்தி விசேஷமென்னுமதுக்கு - "மடலெடுக்கையாவது" இத்யாதிவாக்யத்திலே யொருத்ருஷ்டாந்தமருளிச்செய்து, த்ருஷ்டாந்தாந்தரம் (ஒரோவிஷயங்களிலேயித்யாதி) அவை-விஷயங்கள். ஒரு சாஹஸத்தைப்பண்ணி யென்றது - அக்நிப்ரக்ஷேபத்தைப்பண்ணியென்றபடி. முகத்திலேவிழிக்குமத்தனை யென்றது - "தூமுறுவல் தொண்டைவாய்ப்பிரானை" என்கிறவிடத்தைக்கடாக்ஷி த்து.

உல்லோகமாகச் செல்லப்போகாதே, மடலெடுக்கை சாஸ்த்ரஸித்தமோ வென்ன (அபிமதவிஷயத்தையித்யாதி) சமயஸித்தமென்றபடி. "பிரிந்தாற்றமா ட்டாதார்" என்கைக்கு, பிரிவு ஸம்ஶ்லேஷபூர்வகமன்றோ; அந்த ஸம்ஶ்லேஷம்வ ருகைக்கு ஹேதுவேது, பிரிவுவருவானென், பிரிந்தாலாற்றாமைவருகைக்குத்தான் ஹேதுவேதென்ன (அதாவதித்யாதி) யாத்ருச்சிகஸம்ஶ்லேஷமாகையாலே பிரிவு விளைந்தது, குணாதிகவிஷயமாகையாலே யாற்றாமைவிளைந்ததென்றபடி. "துல்ய ஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் । ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா" (துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷ ணாம் । ராகவோர்ஹதிவைதேஹீம்தஞ்சேயமஸிதேக்ஷணா) இதிஸுந்தரகாண்டே ஸீதாம்த்ருஷ்ட்வாஹநுமான். இந்தஶ்லோகத்திலே, "லக்ஷணாம்" (லக்ஷணம்) என்கையாலே - (வடிவழகாலும் ஸம்பத்தாலும்) என்றது ஸித்தம். கீழே - ஸம்ஸ் க்ருதலக்ஷணமருளிச்செய்து, த்ராவிடலக்ஷணமருளிச்செய்கிறார் (அறிவுநிறைவித் யாதி) அறிவு - ஸமீசீநஜ்ஞாநம். நிறைவு - ஐஶ்வர்யாதிபூர்த்தி. ஓர்ப்பு - நிரூபண ஸாமர்த்யம். கடைப்பிடி - ஒருவிஷயத்தை ஸ்வீகரித்தால் யாவதாயுஷம் விடாமலி ருக்கை. நாண் - லஜ்ஜை. மடம் - மடப்பம். மடப்பமாவது - ஸ்த்ரீத்வமும், பவ்ய தையும். அச்சம் - பீருதை. பயிர்ப்பு - பிடித்ததுவிடாமலிருக்கை. பிரிவில் வைவர் ண்யமென்றுமாம். ஸ்வாபதேஶத்திலே, வேட்டைக்குப்புறப்படுகையாவது - ஹிர ண்யராவணாதி நிரஸநார்த்தமாகவவதரிக்கை; பூக்கொய்து விளையாடுகையாவது-

"அற்பசாரங்களவைசுவைத்தகன்று" என்கிறபடியே விஷயப்ரவணனுகை; உத்யாநமாவது - "பெய்தகாவு" என்கிறலீலாவிபூதி; தைவயோகத்தாலே யிருவர்க்கும் கண்கலவியுண்டாயென்றது - யாத்ருச்சிகஸுக்ருதமடியாக பகவத்கடாக்ஷம் பிறக்கை; தோழிமாராவார் - "தூர்த்தரோடிசைந்த" என்கிறபடியே விஷயப்ராவண்யஸஹகாரிகள். கண்கலவி - காந்தர்வவிவாஹம். சிலரடியாகவந்த ஸம்ஶ்லேஷமல்லாமையாலேயென்றது - "நாஸௌபுருஷகாரேண" (நாஸௌபுருஷகாரேண) இத்யாதியைப்பற்ற. பிரிவோடே வ்யாப்தமாக - பிரிவோடேதலைக்கட்ட. ஸ்வாபதேஶத்திலே, இதுக்குக்கருத்து - ஸ்வாதந்த்ர்யமடியாகவே கடாக்ஷிக்கையாலே, அந்தக்கடாக்ஷம் அவன்ஸ்வாதந்த்ர்யத்தாலே, இந்தச்சேதநன் நினைத்தபோதாக பலவ்யாப்தமாகாதொழிகையென்று. குணுதிகவிஷயமாகையாலே-பரஸ்பரம் குணுதிகவிஷயமாகையாலே. (இரண்டுதலைக்குமென்றுதொடங்கி, செல்லாமைபிறந்து) என்றதுக்கு - ஆற்றாமைவிஞ்சுகை யிரண்டுதலைக்கும் சமமானாலும், செல்லாமை யொருதலைக்கே விஞ்சியிருக்குமென்று தாத்பர்யம். ஒருதலைக்கத்தனைசெல்லாமை யில்லாமைக்குஸூசகம் - "பழிக்கஞ்சிக்கூடுதல்" இத்யாதிவாக்யம்.

இனி, மடலெடுக்கும் லக்ஷணமேதென்ன; தத்ப்ரகாரத்தையும் அதுதான் கார்யகரமாம் ப்ரகாரத்தையும் தமிழருடைய சமாதியாலேகாட்டுகிறார் (மடலூருகையாவதுதானித்யாதி) படம்-பலகை. பனைமடல்-பனைமட்டை. (குதிரையாகக்கொண்டு) என்றதுக்கு - (திரியாநின்றால்) என்றத்தோடேயந்வயம். (போகோபகரணங்களெல்லா மக்நிகல்பமாய்) என்றவிடத்திலே - "சாந்தமும்பூணும்," "திரிகின்றதுவடமாருதம்," "யாநி ரமணீயாநி," (யாநிஸ்மரமணீயாநி,) "ஏஷ புஷ்பவஹோவாயு:" (ஏஷபுஷ்பவஹோவாயுঃ) இத்யாத்யநுசந்தேயம். (ஊணுமுறக்கமுமின்றிக்கே) என்றவிடத்திலே - "நெடிதுயிர்க்குமுண்டறியாள்" இத்யாதியும், "உண்ணுநாளில்லையுறக்கமுந்தானில்லை" இத்யாதியுமநுசந்தேயம். உண்டாகாதேயென்றது - முழுச்சொல்லாய், உண்டாயிற்றதேயென்றபடி. பந்துக்கள் கைவிடுகையாவது - "இவளெங்களைவிட்டுக்கடவாதிருக்கவேண்டியிருக்க, சிலசெயல்களைச்செய்யாநின்றாள்; இதுநங்குடிக்குச்சேராது" என்று அவர்கள் கைவிடவென்றபடி. அலக்குப்போராவது - சேவகரீட்டிகளை யொன்றோடொன் றெதிர்த்துவைக்கை. (தோழிமார்கூட்டுதல்) என்றவிடத்திலே-சித்ரலேகாவ்ருத்தாந்தத்தைநினைப்பது. ஆற்றாமைகூட்டுதலென்றது - மடலெடுக்கிறவனுக்குண்டானவாற்றாமை மடலெடுக்கப்படுகிற விஷயத்துக்குமுண்டாகை. (ஆற்றாமைகூட்டுதல்) என்றவிடத்திலே- "த்வத்பாதபங்கஜபரிக்ரஹ" (த்வத்பாதபங்கஜபரிக்ரஹ) இத்யாதியில் வ்ருத்தாந்தத்தைநினைப்பது. அந்தவிஷயம் - நாயகனத்தனைசெல்லாமையில்லாத அந்தவிஷயம். பழிக்கஞ்சிக்கூடுதலென்றது - "நமக்காகவிவன் முடியாநின்றான்" என்கிறபழிக்கஞ்சிக்கூடுதலென்றபடி.

இம்மடலெடுக்கைதான் தமிழருடைய சித்தாந்தாநுகுணமாக ஸ்த்ரீகளுக்குச்சேராதென்று சங்கித்துப்பரிஹரிக்கிறார் (இதுதன்னைக்கடலன்னவித்யாதி) இக்குறளுக்கர்த்தம் (ஆஶ்ரயத்தளவல்லாதவென்றுதொடங்கி, அல்லர்களென்று என்னுமளவாக) மற்றையார்மேலேயென்று கூட்டிக்கொண்டு, அநந்தரம் (ஸ்த்ரீகள் மடலூர) இத்யாதியநுஸந்திப்பது. கடலன்ன-சமுத்ரஸத்ருஶமான, காமத்தராகிலும் - காமத்தையுடையவராகிலும், மாதர்-ஸ்த்ரீகள், மடலூரார்-மடலெடார்கள், மற்றையார்மேல் - நாயகன்மேலேயென்று சப்தார்த்தம். பின்னை, ஆர்தான்மடலூரக்கடவர்களென்ன (நாயகனித்யாதி) மடலெடுத்து-மடலெடுக்கைக்காக. உலகின்

மேல்வைத்துச்சொல்லுகையாவது - "நாயகியைப்பிரிந்தார்மடலெடுப்பர்களோ" என்றாப்போலே லோகத்தின்மேலேவைத்து ப்ரஸங்கிக்கை. (வனாபாயப்புகாநின்றேன்) ப்ருகுபதநம்பண்ணப்புகாநின்றேன். இதிங்கேசேரும்படியெங்ஙனேயென்று சங்கிக்கிறார் (இங்கித்யாதி) பிராட்டி-இத்திருவாய்மொழியில்நாயகி. புருஷர்கள் மடலூருகைக்கெந்தஹேதுவோ, அந்தஹேதுவே ஸ்த்ரீகளுக்குமுண்டாகையாலே ஸ்த்ரீகள் மடலூரத்தட்டில்லையென்று பரிஹரிக்கிறார் (அவர்களித்யாதி) (ஒருதலையிலொதுக்குவாரார்) என்கிறவிடத்திலே - "𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌣𑌾𑌂 𑌦𑍍𑌵𑌿𑌗𑍁𑌣 𑌆𑌹𑌾𑌰𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚𑌾𑌪𑌿 𑌚𑌤𑍁𑌰𑍍𑌗𑍁𑌣𑌾। 𑌸𑌾𑌹𑌸𑌂 𑌷𑌡𑍍𑌗𑍁𑌣𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑌾𑌮𑌶𑍍𑌚𑌾𑌷𑍍𑌟𑌗𑍁𑌣𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍" (ஸ்த்ரீணாம்த்விகுணஆஹாரஃபுத்திஸ்சாபிசதுர்குணா । ஸாஹஸம்ஷட்குணம்ப்ரோக்தம்காமஸ்சாஷ்டகுணோபவேத் ) என்கிறஸ்லோக மநுஸந்தேயம். கீழ்-தமிழர்மர்யாதாப்ரயுக்தஸங்கையை அநப்யுபகம்யவாதத்தாலே பரிஹரித்து; அப்யுபகம்ய, அவர்கள் "இல்லை" என்றதுக்குக்கருத்தின்னதென்கிறார் (வரம்பழியவித்யாதி) அன்றிக்கே, பெண்மடல் லோகத்திற்கண்டோமில்லையென்ன (வரம்பழியவித்யாதி) ஆதல். வரம்பாவது - ஸ்த்ரீத்வாபிமாநாதிகள். (விஷயம்புறம்பில்லையே) ஈஸ்வரனைப்போலே இதிசேஷஃ-ஈஸ்வரனையொழியப் புறம்பில்லையென்றபடி. ஆகையாலேயிவள் பகவத்விஷயத்தில் மடலூருகைக்குத்தட்டில்லை. புறம்புவிஷயமுண்டாய், வாஸவதத்தாதிகள் மடலெடுக்கிறதாயிருக்கிறதேயென்ன (இங்ஙனேயித்யாதி) இப்படிகல்பித்துக்கொள்ளுகையாலே, அர்த்தஸ்த்திதியைப் பார்த்தால் ஆண்மடலுமில்லை, பெண்மடலுமில்லையென்னுகருத்து. "ஒருதலையிலொதுக்குவாரார்" என்ற முந்தினபரிஹாரவிவரணம் (இதுக்கொருவித்யாதி) ப்ரேமஸ்வபாவமறியாமையிறே யிவ்வ்யவஸ்தைகட்டினதுக்கு நிபந்தநமென்றுகருத்து. அப்போது - ராகப்ராப்தமன்றிக்கே, "புருஷர்களேமடலெடுக்கக்கடவர்கள்" என்று வைதமாகக்கல்பித்தபோதென்றபடி. (வேலியடைத்தால் நிற்கவேணும்) என்றவநந்தரம், இப்படிநில்லாமல் ஸ்த்ரீகள் ப்ரவர்த்திக்கையாலே யாற்றுமையிரண்டுதலைக்கும் ஸமமாகையாலே, ஸ்த்ரீகள் மடலூரத்தட்டில்லையென்று கொள்வது.

கீழே - மடலெடுக்கை அந்யாபதேஸஸமாதிக்குச்சேராதென்று சங்கித்துபரிஹரித்து, ஸ்வாபதேஸத்திலுமிதுசேராதென்றுசங்கித்து பரிஹரிக்கிறார் (இவர்தாமென்றுதொடங்கி, இதிலெனக்குறுப்பல்லாத வவனும்வனுடைமையும் வேண்டாவென்கிறானென்கிற வாக்யமளவாக) (ஆகவீதராகராயிருப்பார்) என்றவிடத்திலே, (ஆக) என்றவநந்தரம், (இவர்தம்ஸ்வரூபத்தோடும்சேராது) என்றத்தையநுஸந்திப்பது. (ஸ்வரூபத்தோடுமென்றது) "வளவேழுலகிலே" இத்யாதிவாக்யத்தாலும், "இனியாருளுமிறையோனிலே" இத்யாதிவாக்யத்தாலும்சொன்ன சேஷத்வபாரதந்த்ர்ய விஸிஷ்டஸ்வரூபத்தோடுமென்றபடி. (வீதராகேத்யாதி) காமம்வீதராகர்க்கு நிஷித்ததயா த்யாஜ்யமாகையாலே செய்வதொன்றல்லவென்றபடி. ஜ்ஞாநாதிகர் - சிஷ்டர்கள். ஆனால் - இப்படியானால்.

அருளிச்செய்கிறபோது -'அர்த்தமருளிச்செய்கிறபோது. இங்குத்தைக்கும்-* மாசறுசோதிக்கும். வேண்டுவது - வேண்டினபரிஹாரங்கள். சங்காத்ரயத்தையுமவரோஹக்ரமத்தாலே பரிஹரிக்கிறாராகத் திருவுள்ளம்பற்றி, அதில், "ஸிஷ்டாநுஷ்டாநமில்லை" என்றஸங்கைக்கு, ஸிஷ்டாநுஷ்டாநமுண்டென்று பரிஹரிக்கிறார் (ஜ்ஞாநாதிகராயித்யாதி) (யாநஸ்மாகேதி) "𑌯𑌾𑌨𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌸𑍁𑌚𑌰𑌿𑌤𑌾

[illegible] (யாஸ்யாபுராத்ரஷ்டும் பூதைராகாஸகைரபி। தாமத்யஸீதாம்ப ஸீயந்திராஜமார்க்கதாஜநா:) இத்யயோத்யாகாண்டே ப்ரயாணகாலே. பெரிய திருமடலில் (மன்னனிராமனித்யாதி) ராஜாவானசக்ரவர்த்திதிருமகன்பின்னே, வைதேஹியென்று சொல்லப்படுகிறவளாய் அன்னம்போன்ற நடையையுடைய ளாய் அப்ராக்ருதஸ்வபாவையான பிராட்டிபோயிற்றிலளோவித்யர்த்த:. இவருக் கொருசிஷ்டாசாரம்வேணுமோ, இவருடையவாசாரமேநமக்கு ப்ரமாணதமமன் றோவென்கிறார் (இனித்தானித்யாதி) ஜ்ஞாநாதிகர்செய்தது ப்ரமாணமென்றத்தை க்காட்டுகிறார் (யத்யதித்யாதி) "[illegible]" (யத்யதாசரதி ஸ்ரேஷ்ட்டஸ்தத்ததேவேதரோஜந:। ஸயத்ப்ரமாணம்குருதேலோக ஸ்ததநுவர்த் ததே) இதி கீதாஸூக்தேரிதி.

"வீதராகராய்" இத்யாதி த்விதீயஸங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் (ஆனாலுமித்யாதி) (நிஷேதியாநின்றதே) என்கிறவிடத்திலே - "[illegible]" (ஸாந்தோதாந்தஉபரதஸ்திதிக்ஷு:) "[illegible]" (காமிநோவர்ணயந்காமாத்) இத்யாதியைக்கண்டுகொள் வது. (அப்ராப்தேதி) பகவத்வ்யதிரிக்தவிஷயங்கள் அப்ராப்தங்களாகையாலு மஸ்த்திரங்களாகையாலும், தத்விஷயத்தில் காமத்தையிறே நிஷேதித்ததென்றப டி. "இதரவிஷயத்தில் காமமாகாது, பகவத்விஷயத்தில் காமமாம்" என்னுமது க்குநியாமகமேதென்ன (பகவத்விஷயத்திலித்யாதி) "[illegible]" (நிதித்யாஸிதவ்ய:) என்று பக்தியையன்றோ விதிக்கிறதென்ன (வேதாந்தவிஹி தையித்யாதி)

"இவர்தம் ஸ்வரூபத்தோடும்சேராது" என்ற ப்ரதமஸங்கையையநுவதித் து, ஷட்விதமாக பரிஹரிக்கிறதாகத் திருவுள்ளம்பற்றி; ப்ரதமம், மடலெடுக்கை அதிசயாதாயகமென்று பரிஹரிக்கிறார் (வளவேழுலகிலித்யாதி) இவர் ஸ்வரூபத் தோடு - அத்தலைக்கதிசயாதாயகமான ஸ்வரூபத்தோடு. (செய்கிறராகையாலே) என்ற ஹேதுவுக்கு - (என்னவும்வேண்டா) என்றத்தோடே யந்வயம். த்விதீயப ரிஹாரம் (அங்ககன்றதித்யாதி) இத்தால் - பக்திகார்யமான கலக்கத்தாலே, ஸ்வ ரூபவிருத்தமானாலும் தவிரப்போகாதென்றபடி. ஆக, முந்தினபரிஹாரம் - அநப்யு பகமேந; இரண்டாவது - அப்யுபகமேந. இப்படி யத்தலைக் கவத்யத்தை விளைத்தா கிலும் கிட்டப்பார்க்கிறவிது கலக்கத்தாலேயிறே, அப்படி கலங்குகைக்கு ஹேது வேதென்ன (இத்தனையித்யாதி) கலங்கப்பண்ணிற்றில்லையாகில் - அதிமாத்ரப்ரா வண்யத்தை விளைத்ததில்லையாகில். வைலக்ஷண்யத்துக்கு நமஸ்காரம்- வைலக்ஷண் யத்துக்கவத்யம். ஹேத்வந்தரம் (இவர்தாமித்யாதி) கலங்கிற்றிலராகில் - அதிமா த்ர ப்ரேமயுக்தரல்லராகில். ப்ரேமத்துக்கு நமஸ்காரமென்றது - அல்லாதார் ப்ரே மத்திற்காட்டிலிவர் ப்ரேமத்துக்கு வாசியில்லாமையாலே, ப்ரேமத்துக் கவத்யமெ ன்றபடி. அதாவது - ஈஸ்வரவைலக்ஷண்யத்தாலும், தாம் ப்ரேமஸ்வபாவ ராகை யாலும் கலங்கினாரென்றபடி. "வளவேழுலகிலகன்றது ஜ்ஞாநகார்யம், இது பக்தி கார்யம்" என்கைக்கு, இவர்க்கு ஜ்ஞாநபக்திகளுண்டோவென்ன (அவனருளிற்று யித்யாதி) "அங்ககன்றது ஜ்ஞாநகார்யம்" இத்யாதி வாக்யவிவரணம் (மதியின் கார்யமித்யாதி) "வளவேழுலகில் ஸ்வரூபத்துக்குச்சேராது" என்ற ஸங்கைக்கு

த்ருதீயபரிஹாரம் (இனித்தானித்யாதி) "தத்தஸ்யஸத்ருஸம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஸம்பவேத்) என்றிராதே, இப்படி அந்யதா கரிக்கலாமோவென்ன (அவன் ஸ்வரூபமித்யாதி) அவன் ஸ்வரூபம் - ரக்ஷகத்வஸ்வரூபம். அவன்ரக்ஷகத்வஸ்வரூபமிப்போதந்யதாகரித்ததென்கைக்கு நியாமக மேதென்ன (இத்தலையிலித்யாதி) ஆக, மடலெடுக்கையை அப்யுபகம்ய பரிஹரித்தார் - கீழெல்லாம்; இதெல்லாம்வேண்டுவதிவர் தாம் மடலெடுத்தாலன்றோ, "ஊர்ந்தும்" என்கையாலே - மடலெடுக்கவேயில்லையே யென்று அநப்யுபகம்ய வாதத்தாலே நாலாம் பரிஹாரம் (ஆற்றாமையையுமித்யாதி) இவ்வாக்யத்தை - (இவர்தமக்குமடலெடுக்க) இத்யாதி வாக்யாநந்தர மநுஸந்தித்துக் கொள்வது. குணாதிக விஷயமானால் உத்யோகமாத்ரமே போருமோவென்ன (கடலையித்யாதி) "சாபமாநயஸௌமித்ரே ஸராம்ஸ்சாஸீவிஷோபமாந் । ஸாகரம்ஸோஷயிஷ்யாமி பத்ப்யாம்யாந்துப்லவங்கமா:" (சாபமாநயஸௌமித்ரேஸராம்ஸ்சாஸீவிஷோபமாந் । ஸாகரம்ஸோஷயிஷ்யாமிபத்ப்யாம்யாந்துப்லவங்கமா:) இதி யுத்தகாண்டே ஸமுத்ரம் ப்ரதிராம:. மடலெடுக்கும்படி கலங்குகிறதசையிலே "குணாதிகன்" என்று குணஜ்ஞாநமுண்டாகக் கூடுமோவென்ன (தம்முடையவித்யாதி)

கீழே "இனி ஏறாளுமிறையோனிலே" இத்யாதி வாக்யத்தாற் சொன்ன ஸங்கையை பரிஹரிக்கிறார் (ஏறாளுமித்யாதி) இது - அஞ்சாம்பரிஹாரம். அதாவது - அத்தலையில் விநியோகத்துக்குறுப்பல்லாத ஸ்வஸத்தா நாஸத்துக் குடலாக வவனை யழிக்கப்பார்க்கிறாராகையாலே, பராதிசயகரத்வரூபமான ஸ்வரூபத்துக்கு விரோதமில்லையே யென்று கருத்து. (அத்தலையேபிடித்து வேர்ப்பற்றோடேயழிக்கவென்றது) அவனுக்கு நிரூபகமான ரக்ஷணதர்மமிவர் மடலெடுத்தாலழியுமாகையாலே, நிரூபகத்தையொழிய நிரூப்யஸித்தியில்லையென்னுமத்தைப்பற்ற. அவனை யழித்தால் ஸ்வஸத்தை யழியுமோவென்ன (உண்டாம்போதுமித்யாதி) ஒன்றாக - ஒன்றும். "ஏறாளுமிறையோனில்" இத்யாதிவாக்யத்தை முகபேதந விவரிக்கிறார் (உயிரிலுமித்யாதி) "இனி ஏறாளுமிறையோனிலே" இத்யாதி ஸங்கைக்கு அப்யுபகமவாதேந பரிஹாராந்தரம் (ஏறாளுமித்யாதி) இது - ஆறாம்பரிஹாரம். அதாவது - ஸ்வரூபவிருத்தமானாலும், ஆற்றாமையின் முறுகுதலாலே ஸ்வரூபத்தை யதிக்ரமித்து அவனை யழிக்கப்பார்க்கிறாரென்றபடி. இத்தால் - * ஏறாளுமிறையோனிற்காட்டில் இதுக்காற்றாமை யதிகமென்று கருத்து. "உண்டாம்போதுமத்தலையாலேயுண்டாய்" என்கைக்கு, அவன் ஸத்தையடியாக வித்தலையில் ஸத்தையுண்டானமை யெங்கேகண்டோமென்ன; ஸம்வாதம் (ராவணனித்யாதி) (கூப்பிட்டு) என்ற வநந்தரம், ஸத்தையோடே யிருந்தா ளென்று கூட்டிக்கொள்வது. (முடியாதிருப்பானென்) என்றதுக்கு - அவர் ஜீவித்திருந்தமையை தபோவிசேஷத்தாலே யறிகையாலே முடியாதிருந்தாளோவென்று தாத்பர்யம். ஜீவநநிமித்தம் - ஜீவிக்கைக்கும் முடிகைக்கும் நிமித்தம். ஸத்தையாயிற்று - ஸத்தாதத்ராஹித்யங்களாயிற்று. யத்வா, (ஜ்ஞாநாஜ்ஞாநங்களன்று ஜீவநநிமித்தம்) என்கிறவிடத்திலே - "அவர் ஜீவித்திருக்கிறார்" என்கிற ஜ்ஞாநம் ஜீவநநிமித்தமன்றென்றிவ்வளவே யிவ்விடத்துக்கபேக்ஷிதம். அஜ்ஞாநத்தையுங் கூட்டிச் சொன்னது - த்ருஷ்டாந்தார்த்தமென்னுதல். அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே "எதிர்த்தலையுண்டு" என்கிற ஜ்ஞாநமில்லாமையாலே, ஜ்ஞாநம் ஜீவநநிமித்தமன்றென்று தாத்பர்யம்.

ஆக, பராஸங்கைகளுக்கு ஸமாதாநங்களைபபண்ணி, இத்திருவாய்மொழியில் ப்ரமேயத்தையருளிச்செய்கிறார் (இப்படியித்யாதி) (தஸாவிசேஷத்தை)

வரனுக்கறிவிக்கவேணுமென்று பார்த்தென்று கூட்டிக்கொள்வது. மீதூர்ந்து - மேலேவ்யாபித்து. தேற்றம் - தெளிவு. " யாமடலூர்ந்தும், யாமடமின்றி " இத்யாதியைப்பற்ற (உன்தலைமைக்குமென்றது) தலைமை-வைலக்ஷண்யம். "ஆதிமூர்த்தி" என்றத்தைப்பற்ற ( அவன்தலைமைக்குமென்றது ) " என்னைநிறைகொண்டான் " என்றத்தைப்பற்ற ( உன்மதிப்புக்குமென்றது ) " குதிரியாய்மடலூர்தும் " என்றத்தைப்பற்ற (உன்பிறப்புக்குமித்யாதி) " என்னைநிறைகொண்டான் " என்றத்தைப்பற்ற ( உன்னுடையமர்யாதைகளுக்கும்போராதென்று ) " யாமடலூர்ந்தும் " என்றத்தைப்பற்ற ( என்ஸ்வரூபத்தையழித்தாகிலுமென்றது ) ( தோழிக்கறிவிக்கவென்றதுக்கு ) தோழிக்கறிவிக்கிற வ்யாஜத்தாலே ஈச்வரனுக்கறிவிக்கவென்றத்யாஹரிப்பது. " இரைக்கும்கருங்கடல்வண்ணன் " என்றத்தைப்பற்ற ( முகங்காட்டித்தானும் ஸத்தைபெற்றென்றது ) முகங்காட்டாவிடில் இவளுக்குஸத்தையில்லையாமதொழிய, அவனுக்கு ஸத்தையில்லையாமோவென்ன ( இவர்மடலிலேயித்யாதி ) அதாவது - ப்ரமப்ரணயியாகையாலே, இவளைதரிப்பியாவிடிலவனுக்கும் ஸத்தைகிடவாதென்றபடி. விரகில்லாமையெப்படியென்ன ( ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கித்யாதி ) ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு - அத்தைப்போலே துர்லங்க்யமானதுக்கு.

இத்திருவாய்மொழியில், " மடல் " என்றுசொல்லுகிறது - ஸ்வாபதேசத்திலே, பக்தியையிறே; இதுபின்னை யவனையே யுபாயமாகப்பற்றியிருக்கிற விவர்க்குண்டாகலாமோவென்ன ( இதுக்குமுன்பித்யாதி ) அதாவது - ஸாதநபக்தியன்று, ஸாத்யபக்தியிவரதென்றபடி. இவர்தாமார்த்தப்ரபந்நராகையாலே, ப்ரபத்தேꞏபூர்வபாவித்வேநவும் பக்தியுண்டென்கிறுர் ( இனிபக்திமானுக்குமித்யாதி ) இனிமேல்-பக்திப்ரபத்திநிஷ்டர்களுடைய பக்திதாரதம்யத்தையருளிச்செய்கிறுர் ( பக்திமானுடையவித்யாதியால் ) (வைதமாய்) " நிதித்யாஸிதவ்ய꞉ " ( நிதித்யாஸிதவ்ய꞉ ) என்கிறவிதிமூலமாய். ருசிகார்யமாயிருக்கும் - ராகப்ராப்தமாயிருக்கும். விவரணம் (பக்திமானுக்கித்யாதிவாக்யத்வயமும்) அதாவது - வைதமாகையாலே யவனுக்கு சாதநரூபமாயிருக்கும், தேஹயாத்ராசேஷமாகையாலே யிவனுக்குருசிகார்யமாயிருக்குமென்றபடி. ஆக, ஸ்வயம்ப்ரயோஜநத்வத்தால் வந்தவேற்றத்தையருளிச்செய்து, நித்யத்வத்தாலுமேற்றமுண்டென்கிறுர் ( பக்திமானுக்கு பலஶரத்தையித்யாதி ) அதாவது - ஸாதநரூபமாயிருக்கையாலே பக்தனுக்குத்தவிரலாயிருக்கும், ப்ரபந்நனுக்கு அநுபவகைங்கர்யரூப தேஹயாத்ராசேஷமாயிருக்கிற வாகாரத்தாலே கிஞ்சித்காராச்ரயமான சேஷத்வரூபஸ்வரூபப்ரயுக்தமாய் வருமதாகையாலே தவிராததாயிருக்குமென்றபடி... ...................... .................*

## மூன்றுந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

மாசறுசோதியென்செய்யவாய்மணிக்குன்றத்தை
யாசறுசீலனையாதிமூர்த்தியைநாடியே
பாசறவெய்தியறிவிழந்தெனைநாளைய
மேசறுமூரவர்கவ்வைதோழியென்செய்யுமே.

## ஆருயிரப்படி.

நிரதிசயநிர்மலஜ்யோதிஸ்ஸௌந்தர்ய ஸௌஶீல்யாத்யஸங்க்யே ய கல்யாணகுணகணமஹோததியாயிருந்த பரமபுருஷனை யாசைப்பட் டுப்பெருதே அறிவழிந்தெத்தனைகாலமுண்டு தோழீ; ஆனபின்பு, எனக் கொருயுக்தாயுக்ததை யுண்டோ, என்னையேசுகைபிலே தீர்ந்திருக்கிற ஊரவர்கவ்வைதானிப்படி யறிவழிந்திருக்கிற வென்னை யெத்தைச்செய் வதென்று தோழியைக்குறித்துச் சொல்லுகிருள் ......................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், இவளுடைய வ்யவஸாயமறிந்ததோழி விலக்கவுத்யோகித் து, " ஊரார்பழிசொல்வார்காண் " என்ன; அவனுடைய ஆபிரூப்யாதிகளிலே யக ப்பட்டுக்கலங்கினவென்னை ஊர்ப்பழியென்செய்யுமென்கிருள்.

மாசு - அழுக்கு. அறு - அற்ற. சோதி - தேஜஸ்ஸையுடைத்தாய். செய்ய- சிவந்த. வாய் - வாயையுடைத்தான. என்மணிக்குன்றத்தை - மாணிக்கமலைபோ லேயெனக்குபோக்யனுனவனை. ப்ரணயித்வத்தால்வந்த தாழ்ச்சியாலே, ஆசு - கு ற்றம். அறு - அற்ற. சீலனை - சீலத்தையுடையனை. ஆதி - தான்முற்பாடனுய்வந்த நுபவிப்பித்த. மூர்த்தியை - ஸ்வாமியானவனை. நாடியே - நிரந்தரமாகத்தேடி. பாசு - மேனியிற்பசுமை. அறவெய்தி - அழிந்து. அறிவு - அறிவும். இழந்து - இழந் து. எனைநாளையம் - எத்தனைகாலத்தோம். தோழி - தோழீ. ஏசு - ஏசுதலிலே. அறு ம் - அறுதிப்பட்ட. ஊரவர் - ஊரவரது. கவ்வை - ஆரவாரம். என் - எத்தை. செ ய்யும் - செய்வது.

பாசறவு - நிறமழிவு. பாசென்று - ஸ்நேஹமாய், அத்தைமிகவெய்தியென் றுமாம். ஏசுதல் - பழித்தல். கவ்வை - அலர் ......................................*

## ஈடு - முதற்பாட்டு.

" ஸௌந்தர்யத்தாலும் சீலத்தாலும் மதிப்பாலும் பழிப்பற்ற தொருவிஷயமாயிற்று அது, நீசெய்யப்புகுகிறவிது அவ்விஷயத்துக்கு ப்பழிப்பைவிளைக்கப்புகுகிருய்கிடாய் " என்றுதோழிசொல்ல; நானவ் விஷயத்துக்குப் பழிப்புண்டாக்கப்புகுகிறேனல்லேன், பழிப்பறுக்கப்பு குகிறேன்காணென்கிருள்.

(மாசறுசோதி) கலந்துபிரிந்தவள் ஆற்றுமையின்றிக்கே மர்யா தைகளை நோக்கிக்கொண்டிருக்கையாகிறது அத்தலைக்கவத்யம்போலே காணும்; பிரிந்தாலிப்படிபண்ணுதவன்றுமாசிறே ஸௌந்தர்யத்துக்கு. நானென்னுடையமர்யாதைகளைக்குலைத்தாகிலு மவன்முகத்திலேவிழிக் கைதவிரேனென்கிருள்; வடிவதுவாயிருக்க, எங்ஙனே நான்மடலெடா தொழியும்படி. கெடுவாய், அவ்வடிவுஹேயப்ரத்யநீகங்காண், நான்மட லெடாதிருக்கை அவ்வடிவுக்கு ஹேயத்தையுண்டாக்குகைகாண். " அவ னவ்வடிவ்வயுகந்தார்க்குக்கொடான் " என்னும் பழியைத்துடைக்கக்கா

ண் நான்பார்க்கிறது; “ஃபக்தாநாம்” (பக்தாநாம்) என்கிறவுடம்பை “தனக்கு” என்றிருக்கையாகிறவிது அவ்வடிவுக்குமாசிறே. (மாசறு சோதி) “மடலெடுக்கைமாசு” என்றிருக்கிறாள்தோழி; “மடலெடா தொழிகைமாசு” என்றிருக்கிறாளிவள், வ்யதிரேகத்திலிப்படியாற்ற மைவிளையாதாகில் நாம்காண்கிறவிஷயங்களோபாதியாமே. வடிவிலேயணைந்தவளாகையாலே முற்படவடிவிலேமண்டுகிறாள். (மாசறுசோதி) நாம்மடலெடுக்கநினைத்தவளவிலே மாசற்றுவருகிறபடி பாராயென்கிறாள். மேல், “ஆசறுசீலனை” என்னாநிற்கச்செய்தே, வடிவழகைச்சொல்லுகிறது - குணத்திலும் விக்ரஹமாகர்ஷகமாயிருக்கையாலே. (என் செய்யவாய்) [அவாக்யநாதர] [அவாக்யநாதர:] என்று அவிக்ருதமாயிருக்கக்கடவதத்வம், என்னோடேகலந்து அத்தால்வந்த ப்ரீதிக்குப்போக்குவிட்டு ஸ்மிதம்பண்ணி விகாரித்ரவ்யம்போலே விக்ருதனாகாநிற்க, நானவனைப்பிரிந்து அவிக்ருதையாயிருக்கவோ. ஒருவார்த்தை சொல்லக்கடவதன்றிக்கே, முகம்பார்த்து வார்த்தைசொல்லுகைக்குத் தன்னோடொப்பதொரு தத்வாந்தரமில்லாமையாலே அநாதரித்திருக்குமவனிறே. “கர்மநிபந்தநமானவிகாரமில்லை” என்றவித்தனைபோக்கி, ஆஶ்ரிதசம்ஶ்லேஷவிஶ்லேஷங்களால்வரும் விகாரமில்லையென்னில் ஒருசேதநனோடுகலந்ததன்றிக்கேயொழியுமிறே. அவன்கலந்தபோதுபண்ணின ஸ்மிதமன்றோ என்னை அவ்யவஹிதமான வுபாயத்திலேமூட்டிற்று. சம்சாரிமுக்தனானால் அவனுக்குப்பிறக்கும் ஹர்ஷம்போலேகாணும் இத்தலையைப்பெற்று அவன் ஸ்மிதம்பண்ணிநின்றநிலை. (என்செய்யவாயித்யாதி) இவளுடனேகலந்தத்தாலுண்டான ப்ரீதியாலே ஸ்மிதம்பண்ணி வடிவிலேவேறுபாடுதோற்ற நின்றநிலையாயிற்று இவளைக்கையும் மடலுமாம்படி தொட்டுவிட்டது. (பண்டுமொருஸ்மிதமிறே யூர்ப்பூசலை விளைத்தது) வாய்க்கரையிலேநின்று மடலெடுக்கிறாளிறே; கழுத்துக்கு மேலேயிறே யிவள்மடலெடுக்கப்பார்க்கிறது. (மணிக்குன்றத்தை) கழுத்துக்குமேலேயன்றிக்கே மெய்யேமடலெடுக்கப் பண்ணிற்றென்கிறாள். என்னோடுவந்துகலந்தத்தாலே வடிவில் வைவர்ண்யம்போய்ப்புகர்த்துக் குளிர்ந்து (வளர்ந்து) நிலைபெற்றபடியும், பிரிவை ப்ரசங்கித்துக் கால் வாங்கமாட்டாதே நின்றநிலையுங்காணென்னை மடலிலேதுணியப்பண்ணிற்று. மாணிக்கமலைபோலே போக்யனானவனை. (ஆசறுசீலனை) வெறும் வடிவழகுகண்டன்றுகாண் நான்துவக்குண்டது, அகவாயில்சீலத்தையும் கண்டுகாணென்கிறாள். ஆசு - குற்றம். குற்றமற்றசீலத்தையுடையவனை. அவன்கலக்கிறபோது என்பேறாகக்கலந்தானாகிலன்றோநானும் பிரிவில் என்பேற்றுக்கு வேண்டுமத்தைச்செய்திருக்கலாவது; அம்மேன்மையுடையவனிப்படிதாழநின்று என்னைப்பெற்றவிது பெறாப்பேறாகத் தான் நினைத்திருக்க, நானவனைப்பிரிந்துவைத்து, “வரில்பொகடேன், கெடில்தேடேன்” என்றுநினைத்திருக்கலாமோ. அவன்தன்குணம் பரி

ஹரித்துப்போக, என்னைப்பழி பரிஹரித்திருக்கச்சொல்லுகிறாயோ. (ஆ திமூர்த்தியை) "ஒருகுடியிலே பிறந்தவுனக்கு, அவன்தானே வரவிரு க்குமதொழிய நீபதறுகிறவிது உன்மதிப்பையறுத்துக்கொள்ளப்பார்க்கி றாய்கிடாய்" என்ன; நான்மதிப்பை யறுத்துக்கொள்ளப்பார்க்கிறேனல் லேன், மதிப்பையுண்டாக்கிக்கொள்ளப் பார்க்கிறேனென்கிறாள்; "கார ணம் த்யேய:" (காரணம்துத்யேய:) என்று சாஸ்த்ரங்களொருமி ட்டுசெய்கிறவிஷயத்தையன்றோ நானாசைப்பட்டது, இவ்விஷயத்தை யாசைப்பட்டுப்பெறாதேமுடிந்தாலும் அதுதானே மதிப்பாம்படி யான விஷயமன்றோ. வ்யாக்யாநம்பண்ணுவதற்குமுன்பேயு மொருபொருளரு ண்டிதுக்கருளிச்செய்வது – "பூர்வஜ" (பூர்வஜ) என்கிறபடியே நம்மோட்டைக்கலவிக்கவன் முற்பாடனாகச்செய்தே, பிரிவிலாற்றாமைக் கு நான்பிற்பாடையாகவோ. "ஆனாலும், 'அபிமதவிஷயத்தைப்பிரிந்தா ள், அநந்தரம் மடலூர்ந்தாள்' என்றுமே, 'சிலநாளாற்றாமையோடே பாடாற்றிக்கிடந்தாள், பின்பு தன்னால்பொறுக்கவொண்ணாமையானவள வானவாறே மடலெடுத்தாள்' என்னும்வார்த்தை படைக்கவேணுங்கா ண்" என்ன (நாடியேபாசறவெய்தி) இன்றோ, நானெத்தனைகாலமுண் டு இப்படிக்லேசப்படுகிறது. அவனித்தலையைப்பெறுகைக்குப் பட்ட தெல்லாம் போராதோ நானவனைப்பிரிந்துபட்டது. காலமெல்லாம்தே டிக்காணப்பெறாதே துஃகப்பட்டுத்திரிந்த தத்தனையாகாதேதான்; சிறை க்கூடத்திலேபிறந்து அங்கேவளருமாபோலே. விஶ்லேஷத்தாலே உங் நேயமித்தனைகாணும் ஸம்ஶ்லேஷம். பகவத்தத்வமுள்ளவிடமெங்கும் புக்குத்தேடிக் காணப்பெறாமைநசையற்று, பின்பாகாதேமடலெடுத்த து. (பாசறவெய்தி) துஃகத்தையுடையேனாய். பாசறவு – துஃகம். பாசு என்று-பசுமையாய், அதறுகையாவது – வைவர்ண்யமாய், வைவர்ண்ய த்தைபஜித்தென்னுதல்; அன்றிக்கே, பாசென்று – பாசமாய், அதாவது– பற்றாய், பந்துக்கள்பக்கல் சங்கமற்றென்னுதல். (பாசறவெய்தி) ஸ்நே ஹமுடைய அவன்பக்கலிலே யெய்தியென்னுதல். எல்லாம்செய்தாலு மி தறிவுடையார் செய்வதொன்றல்லவென்ன (அறிவிழந்தெனைநாளையம்) அறிவுகுடிபோய் எத்தனையோர்காலத்தோம். * மயர்வறமதிநலமருளப் பெற்றவன்றே போயிற்றில்லையோ நம்முடையவறிவு. திர்யக்கின்காலி லேவிழுந்து தூதுவிட்டவன்று, அது "ஜ்ஞாநகார்யம்" என்றிருந்தா யோ இன்றிருந்து கற்பிக்கைக்கு; அன்றே * மதியெல்லாமுள்கலங்கிற்றி ல்லையோ. தன்பக்கலிலேகைவைத்தால் மற்றொன்றறியாதபடிபண்ணும் விஷயமிறே, "பேரின்பமெல்லாந்துறந்தார் தொழுதாரத்தோள்" என்னக்கடவதிறே. "கோபஜநம்ஸ்மரந்" (கோபஜநம்ஸ்மரந்) என் று-ப்ராப்திசமயத்தி லிவ்வருகுள்ளவற்றை நினையாதப்படி பண்ணுகை யேயன்றிக்கே, ஜ்ஞாநம்பிறந்தசமயமே பிடித்து மிவ்வருகுள்ளவற்றைநி

ளையாமே பண்ணவல்லவிஷயமன்றோ. தன்னையநுசந்தித்து லோகயாத்ரையையுமநுசந்திக்கும்படியோ அவன்படி.

நீயெல்லாம்சொன்னாலும் பழிக்கஞ்சவேணுங்காணென்ன ( ஏசறுமித்யாதி ) நமக்குமடலெடுக்கை குற்றமாகிலன்றோ அவர்களுக்கும் பழிசொல்லுகை குற்றமாவது. அறிவுடையார்க்கு வரக்கடவதானபழி, அதுவாஸனையோடே குடிபோனநமக்கு வாராதுகாண்; இதுக்கஞ்சவேண்டா. இதுக்குமூன்றுபடியாக வருளிச்செய்வர் -“ இவனையொருபழிசொன்னோமாய் விடவல்லோமே ” என்று அதிலேயற்றிருக்கிற வென்னுதல்; ஏசுகையிலேதுணிந்திருக்கிற. அன்றிக்கே, “ பகவத்விஷயத்திலே கைவைத்திருக்கிறவர்களுக்கொரு பழிசொன்னோமாய் விடவல்லோமே ” என்று துஃகப்பட்டிருக்கிறவென்னுதல். ஏசற்றிருக்கிற நமக்கு. அதாவது – ஏசுமெல்லைகடந்தவென்னுதல். (ஊரவர்கவ்வை) பகவத்விஷயத்திலேகைவைத்தார் “ இதுபழி ” என்னிலன்றோ பழியாவது; இதுக்குப்புறம்பாய் நின்றவர்கள்சொல்லுமது நமக்குப்பழியோ. (தோழி) சமாநசுகதுஃகையானவுனக்கு, “ இதுபழி ” என்றுதோற்றிலன்றோ எனக்குமீளவேண்டுவது. ( என்செய்யுமே ) ஏசறுமெல்லையிலே நிற்கிற வெனக்கு, இதேசாம்படியிருப்பார்சொல்லும் வார்த்தைகொண்டு காரியமென். ஊரார்பழிபுகழாமெல்லையிலேயன்றோ நாம்நிற்கிறது; அவர்கள்சொல்லுகிறவிது நமக்கவத்யமோ, தாரகமாமித்தனையன்றோ. “ அலரொழிலாருயிர்நிற்கும் ” என்னக்கடவதிறே. “ அலர் தூற்றிற்றதுமுதலாக்கொண்டவென்காதல் ” என்கிறபடியே, அவர்கள்பழி தாரகமாகவன்றோ மடலெடுக்கவிருக்கிறது..........................................*

## ஜீயர் அரும்பதம்

முதற்பாட்டு ( மாசறுவித்யாதி ) மடலெடுக்கைக்குறுப்பாக நாயகிசொல்லுகிற “ மாசறுசோதி ” இத்யாதிவிசேஷணங்கள் - “மடலெடுக்கவொண்ணாது” என்று நிஷேதிக்கிறதோழிக்கு மர்த்தஸ்வபாவத்தாலே ஹேதுத்வேந விவக்ஷிதங்களென்கிறார் ( சௌந்தர்யத்தாலுமித்யாதி ) “ ஆதிமூர்த்தியை ” என்னுமளவும்கடாக்ஷித்து ( சௌந்தர்யத்தாலும் சீலத்தாலும் மதிப்பாலுமென்றது ) மதிப்பாவது - காரணத்வப்ரயுக்தமானமேன்மை. ( நீசெய்யப்புகுகிறவிது ) நீசெய்யப்புகுகிறவித்தால். பழிப்பு - அவத்யம். மடலெடுத்தால் சௌந்தர்யத்துக்குப் பழிப்புண்டாகையாவது - “ நாயகனானவன் நாயகிபக்கலிலே பரமப்ரணயியாகையாலே, ‘ [illegible] ’ ( காமாநாம்மண்டநஸ்ரீர்வ்ரஜஜுஸபலதாம்வல்லபாலோகநே ) என்கிறகணக்கிலே தன்சௌந்தர்யத்தைத் தானே மேல்விழுந்து ப்ரணயிநியானவளுக் கநுபவிப்பிக்க வேண்டியிருக்க, அது செய்யாதே, ப்ரணயிநி மடலெடுக்கும்படி தாழ்த்தபோதே ஸௌந்தர்யம் நிஷ்பலமன்றோ” என்று நாட்டார் சொல்லுகிறவழியாலே அவத்யமாகையென்றபடி. சீலத்துக்குப் பழிப்புண்டாகையாவது - “நாயகனானவன்நாயகிவிஷயத்திலே தலை தடுமாறு நிற்கவேண்டியிருக்க, இவள் மடலெடுக்கும்படி யுபேக்ஷிக்

கையாலே, தலை தடுமாருப் பரிமாறுகிற சீலகுணமு மவனுக்கு ஸங்குசிதம்" என்று நாட்டார் சொல்லுகிறவழியாலே அவத்யமுண்டாகை. மதிப்புக்குப் பழிப்புண்டாகையாவது - "தன்னை யாசைப்பட்டு மடலெடுக்கும்படி யொருவிஷயமிப்படி நோவுபடாநிற்கிறவளவிலு முபேக்ஷித்தபோதே, ஸ்வவிஷய ப்ராவண்யாதி ஸித்த்யர்த்தமாக ஸர்வ வஸ்துக்களையு முண்டாக்கும்படியான வவன் மேன்மை யென்னன்புது" என்று நாட்டார் சொல்லுகிறவழியாலே அவத்யமுண்டாகை.

பழிப்பறுக்கப் புகுகிறேனென்றது - "மாசறு, ஆசறு" என்று விசேஷிக்கையாலே ஸித்தம். மடலெடுத்தால் ஸௌந்தர்யத்துக்குப் பழிப்பறும் ப்ரகாரமாவது - "இப்படி ஸர்வப்ரகார விலக்ஷணையான விவளுங்கூட மடலெடுத்தபோதே யவனுடைய ஸௌந்தர்ய மபரிச்சிந்நமன்றோ" என்று நாட்டார் சொல்லுகிறவழியாலேயென்றும்; சீலத்துக்குப் பழிப்பறும் ப்ரகாரமாவது- நான் "மடலெடுக்க" என்றுபக்ரமித்தபோதே அவன் வந்து முகங்காட்டுகை நிஸ்சிதமாகையாலே "தன்னையாசைப்பட்டு மடலெடுக்க வொருப்பட்டபோதே, தன்பெருமைபாராதேவந்து முகங்காட்டுவதே! இவன் சீலமிருந்தபடியென்" என்று நாட்டார் சொல்லுகிறவழியாலேயென்றும்; மதிப்புக்குப் பழிப்பறுகையாவது - "* நாரீணுமுத்தமையானவிவள் மடலெடுக்கும்போதே ஸர்வாதிகவஸ்துவேயாகவேணும்" என்று நாட்டார்சொல்லுகிற வழியாலேயென்றும் தாத்பர்யம்.

"மாசறுசோதி" என்றதுக்கு - மடலெடுக்கையாலே மாசறுசோதி யென்று அபரபாவித்வேநவும், மாசறுசோதியாகையாலே மடலெடுக்கிறேனென்று பூர்வபாவித்வேநவும், இரண்டுதாத்பர்யம். அதில் முந்தினதாத்பர்யத்தில், மடலெடுக்கையாலே மாசறுசோதியென்று விவக்ஷித்தபோதே - மடலெடாதொழிகை சோதிக்குமாசென்று வ்யதிரேகமுகத்தாலே பலிதத்தை வ்யாக்யாதா வருளிச்செய்கிருர் (கலந்துபிரிந்தவளித்யாதி) ஆற்ருமையின்றிக்கே - மடலெடுக்கும்படியான வாற்ருமையின்றிக்கே. மர்யாதைகளை - ஸ்த்ரீத்வ மர்யாதைகளை. நோக்கிக்கொண்டிருக்கையாகிறது- "நோக்கிக்கொண்டிருக்கவேணும்" என்று மடலெடா திருக்கையாகிறது. அத்தலைக்கு - ஸௌந்தர்யவிசிஷ்டமான வத்தலைக்கு. அவத்யம் - ஸௌந்தர்யஹாநி. மர்யாதைகளை நோக்கிக்கொண்டிருந்தால் அத்தலைக் கவத்ய மாகவேணுமோவென்ன (பிரிந்தாலித்யாதி) இப்படி பண்ணுதவன்று - இப்படி மடலெடுக்கப்பண்ணுதவன்று. பூர்வபாவியான விரண்டாம் தாத்பர்யத்தை யருளிச்செய்கிருர் (நானென்னுடையவித்யாதி வாக்யத்வயத்தாலே) "தவிரேன்" என்கைக்கு ஹேதுவேதென்ன (வடிவித்யாதி) வடிவு - வடிவில் ஸௌந்தர்யம். அபரபாவியான முந்தினதாத்பர்யத்திலே, "சோதி" என்று - ஸௌந்தர்யமென் றருளிச்செய்து, சோதியென்று - விக்ரஹமாய், இதுக்கு மாசின்னதென்று காட்டுவாராக வடிகொண்டெழுந்திருக்கிருர் (கெடுவாயித்யாதிவாக்யத்வயத்தாலே) கெடுவாயென்றது- வார்த்தைப்பாடு. மடலெடுத்தால் வடிவுக்கு ப்ரத்யுத அதிசயமொழிய, ஹேயமன்றுகாணென்கிருள் (அவனவ்வடிவையித்யாதி) உகந்தார்க்குக் கொடாதொழிகையவத்யமோவென்ன (பக்தாநாமித்யாதி) "மடலெடுக்கவொண்ணுது" என்று நிஷேதிக்கிற தோழியைக்குறித்து, "மடலெடாதிரேன்" என்றுசொல்லுகிறநாயகி, "மாசறுசோதி" என்றபோதே - மடலெடாதொழிகை மாசென்று நாயகிக்குவிவக்ஷிதமென்று தோற்றுகையாலும்; நிஷேதிக்கிற தோழிக்கும் "மடலெடுக்கைமாசு" என்று விவக்ஷிதமென்று தோற்றுகையாலும், இரண்டையுமருளிச்செய்கிருர் (மடலெடுக்கையித்யாதி) மடலெடா தொழிகை மாசானபடி யெப்படி யென்ன

(வ்யதிரேகத்திலித்யாதி) "ஆசறுசீலனை" என்றகுணத்தை முற்படச் சொல்லாதே, வடிவைச்சொல்லுவானென்னென்ன (வடிவிலேயித்யாதி) (வடிவிலேயணைந்தவள்) என்கிறவிடத்திலே - "ரூபமிச்சந்திகந்யகாஃ" (ரூபமிச்சந்திகந்யகாஃ) என்றத்தைக்கண்டுகொள்வது. மண்டுகை - ஈடுபடுகை. "மாசறு" என்றவர்த்தமானார்த்தம் (நாம்மடலெடுக்கவித்யாதி) மாசற்று வருகிறபடி பாராயென்றது - "அதிவிலக்ஷணையான விவளிப்படி மடலெடுத்தபோதே யவனபரிமித ஸௌந்தர்யயுக்தனன்றே" என்று நாட்டார் கொண்டாடிச் சொல்லுகிறத்தைப் பற்ற. அவன் முன்னேயில்லாதிருக்க, பாராயென்று - காட்டக்கூடுமோவென்ன; லௌகிகர் கொண்டாடுகையாலே, அத்தைக்கேட்டு, "பாராய்" என்று சொல்லுகையாலே விரோதமில்லை. வடிவை முற்படச் சொன்னதுக்கு தாத்பர்யாந்தரம் (மேலாசறுவித்யாதி)

(அவாக்யநாதரஇதி) சாந்தோக்யே. வாகஃ - உக்திஃ, ஸோஸ்யாஸ்தீதிவாகீ, ஸ்நபவதீத்யவாகீ; தத்ரஹேதுஃ (அநாதரஇதி) ஆதராபாவஃ. ஸச ஆதர்த்தவ்யாபாவப்ரயுக்தஃ. சிவப்புத்தோற்றுவது ஸ்மிதத்தாலே யாகையாலே (ஸ்மிதம்பண்ணி) என்கிறார். "அவாக்யநாதரஃ" (அவாக்யநாதரஃ) என்கிற ச்ருதிக் கர்த்தம் (ஒருவார்த்தையித்யாதி) ஹேதுபூர்வகமாக வநாதரஸப்தார்த்தம் (முகம்பார்த்தித்யாதி) ஆனால், "அவிகாராய" (அவிகாராய) என்றத்தோடு விரோதியாதோவென்ன (கர்மநிபந்தநமித்யாதி) விச்லேஷதசையிலே ஸ்மிதங்கூடுமோவென்ன (அவன்கலந்தவித்யாதி) அவ்யவஹிதமான வுபாயத்திலே - மடலெடுக்கையிலே. கீழே "விகாரித்ரவ்யம்போலே விக்ருதனுகாநிற்க" என்றத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாக விவரிக்கிறார் (சம்ஸாரியித்யாதி) சேதநனை விகாரித்ரவ்யமென்றது - ஸ்வபாவாந்யதா பாவமுண்டாகையாலே. "மணிக்குன்றத்தை" என்றத்தையுங்கூட்டி புநஃ ப்ரதீகக்ரஹண பூர்வகமாக பாவம் (என்செய்யவாயித்யாதி) (இவளுடனேயித்யாதி) தொட்டுவிட்டது - ஈடுபடுத்திற்று. சாடு (வாய்க்கரையிலே யித்யாதிவாக்யத்வயமும்) வாய்க்கரை - ஸீமாஸந்தியென்று சாடு. ப்ரக்ருதம் - திருப்பவளம். நின்று - ஈடுபட்டுநின்று. (கழுத்துக்குமேலேயிறே) கழுத்துக்குமேலான திருப்பவளத்திலேயிறேயென்று ப்ரக்ருதம்; அஹ்ருதயமாகவென்று சாடு. (கழுத்துக்குமேலேயன்றிக்கேயித்யாதியும்) சாடு. திருப்பவளமாத்ரமன்றிக்கேயென்று - ப்ரக்ருதம்; அஹ்ருதயமாகவன்றிக்கே யென்று - சாடு. மெய்யே - சரீரமே, ஸத்யமாகவென்றும். "மணிக்குன்றத்தை" என்றதுக்கு பாவம் (என்னோடேயித்யாதி) வைவர்ண்யம்போனு லொழிய புகர்த்திருக்கை கூடாமையாலே, புகர்த்திருந்தபோதே- (வைவர்ண்யம்போய்) என்றதுஸித்தம். புகர்த்துக்குளிர்ந்தென்றது - "மணி" என்றத்தைப்பற்ற. "குன்றம்" என்றத்தைப் பற்ற (நிலைபெற்றபடியுமித்யாதி)

தாத்பர்யம் (வெறும்வடிவழகித்யாதி) சீலம் - ஸௌசீல்யம். சப்தார்த்தம் (ஆசித்யாதி) சீலத்துக்குக் குற்றமாவது - பரார்த்தமாக ஸம்ச்லேஷிக்கை. தன்பேறாகஸம்ச்லேஷிக்கை - குற்றமற்றிருக்கை. இது சொல்லுகிறதுக்கு பாவம் (அவன்கலக்கிறபோதித்யாதி) யத்வா, சீலத்துக்குக் குற்றமில்லாமையேதென்ன (அவன்கலக்கிறபோதித்யாதி) என்னுதல். என்பேற்றுக்கு வேண்டுமத்தைச்செய்திருக்கலாவதென்றது - என்னுடைய ஸ்த்ரீத்வமாகிற பரமலாபத்தைப் பெறுகைக்குறுப்பாக மடலெடாதிருக்கலாவதென்றபடி. மேல் "ஆதிமூர்த்தி" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (அம்மேன்மையுடையவனித்யாதி) "ஆசறு" என்றத்தால் பு

விதம் ( அவன் தன்குணமித்யாதி ) கீழே, வரில்பொகடேன் கெடில்தேடேனென்றது - வந்தால்விட்டுவிடேன் கெட்டால் தேடானென்றபடி. ( குணம்பரிஹரித்து ) தன் பேருகக்கலந்து சிலகுணத்துக்கவத்யம் வாராமல் பரிஹரித்தென்றபடி.

"ஆதி" என்றதுக்கர்த்தத்வயம். முந்தினது - ஜகத்காரணமென்று; த்விதீயம் - தம்முடைய ப்ராவண்யத்துக்கடியென்று. * மூர்த்திசப்தம் -ஸ்வாமிவாசகம். முந்தினவர்த்தம் ( ஒருகுடியிலே யித்யாதி ) ஒருகுடி - அத்விதீயமான குடி. மதிப்பு - ஆதிக்யம். மதிப்பை யுண்டாக்கிக்கொள்ளும் ப்ரகாரமேதென்ன ( காரணந்த்வித்யாதி ) "ஆதி" என்றதினிரண்டாமர்த்தம் (வ்யாக்யாநமித்யாதி) வ்யாக்யாநம் - ஒன்பதினுயிரப்படி. அன்றிக்கே, வ்யாக்யாநம் பண்ணுவதற்குமுன் பென்றது - ப்ராஸங்கிகமாகப் பாட்டுக்கு தாத்பர்யமருளிச்செய்யும்போ தென்றபடி. அந்தப்பொருள்தானேதென்ன ( பூர்வஜேத்யாதி ) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ நமஸ்தே விஶ்வபாவந। நமஸ்தேஸ்து ஹ்ருஷீகேஶ மஹாபுருஷ பூர்வஜ" ( ஜிதந்தேபுண்டரீகாக்ஷ நமஸ்தேவிஶ்வபாவந । நமஸ்தேஸ்துஹ்ருஷீகேஶ மஹாபுருஷபூர்வஜ. ) ஜிதந்தேபுண்டரீகாக்ஷ என்று - ப்ரணவோக்தசேஷத்வமும், நமஸ்தே என்று - நமஶ்ஶப்தோக்த பாரதந்த்ர்யமும்; விஶ்வபாவந என்று - நாராயணசப்தோக்தகாரணத்வமும், நமஸ்தேஸ்து என்று - கைங்கர்யப்ரார்த்தனையும், ஹ்ருஷீகேச என்று - கைங்கர்யத்தில் ஸ்வார்த்ததாநிவ்ருத்தியும் சொல்லுகிறது; விஶ்வபாவந என்று - ஜகத்காரணத்வம் சொல்லியிருக்க, பின்னையும் ( பூர்வஜ ) என்னும்போது - யஸ்மாத்பூர்வம்ஜாயதேஜகத் ஸபூர்வஜ: என்று காரணத்வம்சொல்லுகையன்றிக்கே, சேதநோஜ்ஜீவநத்துக்கு முற்பாடனாய் க்ருஷிபண்ணுமவனென்றேயாகவேணுமென்றபடி. ( விஶ்வபாவந என்று ) விஶ்வத்தை பவிப்பிக்குமவன்- உண்டாக்குமவன். ஜகத்காரணமென்றபடி.

பாடாற்றி - பொறுத்து. "எனைநாளையம்" என்னுமளவுக்கும்பாவம் ( இன்றேவித்யாதி ) விவரணமாதல், "ஆதிமூர்த்தி" என்றதி னிரண்டாமர்த்தத்தைக்கடாக்ஷித்தாதல் ( அவனித்யாதி ) பட்டதெல்லாம் - பட்டகாலமெல்லாம். "எனைநாளையம் - நாடியே - பாசறவெய்தி" என்றந்வயித்துபாவம் (காலமெல்லாமித்யாதி) சர்வகாலமும் து:கப்பட்டமைக்கு த்ருஷ்டாந்தம் ( சிறைக்கூடத்திலேயித்யாதி) இத்தால்-வ்யஸநாதிசயத்தாலே, சர்வகாலமும் து:கப்பட்டதாய்த்தோற்றுகிறதென்றுகருத்து. சம்ஶ்லேஷமொருகாலு மில்லையோ வென்ன ( விஶ்லேஷத்தாலேயித்யாதி ) உந்நேயம்-அநுமேயம் அவதாரணத்தோடேகூட்டி "நாடி" என்றதுக்குபாவம் (பகவத்தத்த்வமித்யாதி) பரத்வாதிகளெங்கும் புக்கென்றபடி. "பாசறவெய்தி" என்றதுக்குநாலர்த்தம். அதாவது, பாசறவு - து:கமும், வைவர்ண்யமும்; எய்தி-ப்ராபித்து. மூன்றுமர்த்தம்; பாசு-சங்கம், அறவு - நிவ்ருத்தி, பந்துவிஷயாஸக்திநிவ்ருத்தியையடைந்தென்றபடி. நாலாமர்த்தம்; பாசத்தை - ஸ்நேஹத்தை, அற-மிகவும், எய்தி என்றுகண்டுகொள்வது.

எத்தனையோர்காலத்தோம் - எத்தனைகாலங்களையுடையோமானோம். அப்படி அநேககாலமுண்டோவென்ன ( மயர்வறவித்யாதி ) போனமைக்கு நியாமகமேதென்ன (திர்யக்கினித்யாதி) தூதுவிட்டவென்றது - * அஞ்சிறையமடநாராயிலே. கற்பிக்கைக்கு - "மடலெடுக்கவேண்டா" என்று கற்பிக்கைக்கு. தூதுவிட்டது அஜ்ஞாநகார்யமென்றது அவ்விடந்தன்னிலே ஸ்புடமென்கிறார் ( அன்றேமதியெல்லாமித்யாதி) மதிகலங்கினால் "ஆசறுசீலனையாதிமூர்த்தியை" என்னும்படியென்

னென்ன (தன்பக்கலிலேயித்யாதி) இத்தால் - லௌகிகஜ்ஞாநமில்லையென்றவித்த னைபோக்கி, பகவத்விஷய ஜ்ஞாநமில்லையென்கிறதன்றென்றுகருத்து. உக்தத்துக்கு ப்ரமாணம் ( பேரின்பமித்யாதி ) அந்தவழகியதோளைத்தொழுதவர்கள், ஓரோம னையிடத்திற்பிறந்தவர்கள் பிறந்துப்ராபிக்கும் நிரதிசயசுகமெல்லாவற்றையும் பரி த்யஜித்தவர்களாவர் கிடிகோளித்யர்த்தஃ. தோளழகுதானே மற்றுள்ளவின்பங்க ளைத்துறக்கும்படிபண்ணுமென்கை. இரண்டாந்திருவந்தாதி நாற்பத்திரண்டாம்பா ட்டு, "நினைப்பன்" இத்யாதி. வ்யதிரிக்தவிஷயஜ்ஞாநாபாவம் ப்ராப்த்யவஸ்த்தை யிலேயன்றேவென்ன ( நோபஜநமித்யாதி ) அப்படிவிலக்ஷணவிஷயமோவென்ன ( தன்னையித்யாதி ) அவன்படி-அவன்வைலக்ஷண்யம்.

"ஏசறும்" என்றதுக்கு மூன்றர்த்தம் - ஏசுகையிலே துணிந்திருக்கிற வெ ன்று மூந்தினது; ஏசறுமென்று - முழுச்சொல்லாய், துஃகப்பட்டிருக்கிறவென் றி ரண்டாவது; ஏசறுகை - துஃகப்படுகை. ஏசுகையை - லௌகிகர் சொல்லுகிற நிந் தையை, அற்றிருக்கிற - கடந்திருக்கிற வென்று மூன்றாவது; இப்போது, தனக்கு விசேஷணம். அதாவது - ஊரார்பழி புகழாம்படி யிருக்கிற நமக்கென்றபடி. மூந் தினவர்த்தத்திலே நோக்காக பாவம் ( நமக்கித்யாதி ) மூன்றாமர்த்தத்திலேநோக் காக பாவம் ( அறிவுடையார்க்கித்யாதி ) பழிசொல்லுகை குற்றமாவதென்றது - "ஏசுகையிலேயற்றிருக்கிறவூரவர்" என்றத்தைப்பற்ற. பூர்வவாக்யவிவரணம் ( ஏ சுகையிலே துணிந்திருக்கிறவென்றது ) இரண்டாமர்த்தம், ஏசுகை- துஃகப்படுகை யென்றாக்கி, அத்தை ஸஹேதுகமாகவருளிச்செய்கிறார் (அன்றிக்கேபகவத்விஷயத் திலேயித்யாதி ) ஏசுமெல்லையைக்கடந்திருக்கையாவது-ஏசுகையை கணியாமலிருக் கையென்றபடி. "ஊரவர்" என்றதுக்குபாவம் ( பகவத்விஷயத்திலே யித்யாதி ) "என்செய்யும்" என்றதுக்கு - புகழாமென்று தாத்பர்யம். மூன்றாமர்த்தத்தையுப ஜீவிததுக்கொண்டு, "ஊரவர்கவ்வை - என்செய்யும்" என்றதுக்குபாவம் ( ஏசறு மெல்லையிலேயித்யாதி ) இது - மடல். விவரணம் ( ஊராரித்யாதி ) "என்செய் யும்" என்றஸ்வரத்துக்கு - வ்யதிரேகத்திலே நோக்காக தாத்பர்யாந்தரம் ( அவ ர்கள்சொல்லுகிறவித்யாதி ) "பழிதாரகம்" என்னுமதுக்கு ப்ரமாணம் (அலொழி வித்யாதி ) அலொழில் - அபவாதமுதிக்கில், ஆருயிர்நிற்கும் - பூர்ணப்ராணன் நிற் குமித்யர்த்தஃ. ( அலர்தூற்றிற்றது முதலாக்கொண்ட வென்காதல் ) பழியைத்தூற் றினவது ஹேதுவாகக்கொண்டவென்காதலித்யர்த்தஃ.

மாசறுசோதிதொடங்கி, எனைநாளையம், தோழி - ஏசறுமூரவர்கவ்வை - எ ன்செய்யுமித்யந்வயஃ..........................................................*

---

# இரண்டாம்பாட்டு.

என்செய்யுமூரவர்கவ்வைதோழியினிநம்மை
என்செய்யதாமரைக்கண்ணனென்னைநிறைகொண்டான்
முன்செய்யமாமையிழந்துமேனிமெலிவெய்தி
யென்செய்யவாயுங்கருங்கண்ணும்பயப்பூர்ந்தவே.

* [illegible]ரப்படி.

( என்செய்யும் ) எம்பெருமான்தன்னுடைய, அதிசீதளமாய் ஸர்வசத்வமநோஹரமா யருணகமலசத்ருசமான வழகியதிருக்கண்களைக்

காட்டி யென்னைத்தோற்பித்துப்போனான் ; அவனைசம்ஸ்லேஷிக்கப்பெறாமையாலே, தத்ஸம்ஸ்லேஷஜநிதமான வௌஜ்ஜ்வல்யமுமிழந்து, மேனிமெலிவெய்தி, தத்ஸம்ப்லேஷத்தால் புதுக்கணித்த வென்செய்யவாயும் கருங்கண்ணும் பயப்பூர்ந்த ; இனிநம்மை யென்செய்யுமூரவர் கவ்வைதோழீயென்கிறாள்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவன்கண்ணழகாலே யென்சர்வஸ்வத்தையு மபஹரித்து என்வைலக்ஷண்யமடங்க வழிந்திருக்க, ஊராரொன்செய்வதென்கிறாள்.

செய்ய-சிவந்த. தாமரை-தாமரைபோன்ற. கண்ணன்-கண்ணழகையுடையனாய்க்கொண்டு. என்-எனக்குபவ்யனானவன். என்னை-என்னை. நிறைகொண்டான்-பூர்த்யபஹாரம்பண்ணினான். ஸ்த்ரீத்வபூர்த்திபோனபடியாலே, முன்-முன்புதோற்றுகிற. செய்ய-விலக்ஷணமான. மாமை-மாமைநிறமும். இழந்து-இழந்து. மேனி-அதுக்காஶ்ரயமானசரீரமும். மெலிவு-மெலிவு. எய்தி-எய்தி. அவன்செய்யவாயும்செய்யதாமரைக்கண்ணும் குறியழியாதிருக்க, என்-என். செய்யவாயும்-செய்யவாயும். கருங்கண்ணும்-கருங்கண்ணும். பயப்பு-ஒருவெளுப்பாம்படியானவைவர்ண்யம். ஊர்ந்த-பரந்தன. தோழி-தோழீ. இனி-இனி. நம்மை-நம்மை. ஊரவர்கவ்வை-ஊரவர்கவ்வை. என்செய்யும்-என்செய்யும்.

நம்மையென்று-சமதுஃகையான தோழியையும் கூட்டிக்கொள்ளுகிறாள்....*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

“ கீழிற்றிருவாய்மொழியில்நின்று மித்திருவாய்மொழிக்குப் புகுருகைக்கு வழியிரண்டாயிருக்கும் ; * சீலமில்லாச்சிறியனிலே-கூப்பிட்டார் ; கூப்பிடச்செய்தேயும் வந்துமுகங்காட்டாமையாலே, அவனுக்குறுப்பல்லாத வாத்மாத்மீயங்களெனக்கு வேண்டாவென்றார் ; இப்படியொழியப்பேறிழவு புறம்பேயாயிருக்கிற சம்சாரிகள்படியைக்கண்டுவெறுத்தார்; ‘ஈப்ஶ்வரனும்கைவாங்கினவிவர்களை நான்திருத்துவேன்’ என்று, பகவத்பரத்வத்தை யுபபாதித்துத்திருத்தினார்; ‘இவர்களிலேயொருவனாயிருக்கிறவெனக்கு இவ்வர்சியுண்டாவதே’ என்று, பகவத்க்ருபையைக்கொண்டாடினார் ; தாந்திருத்தத்திருந்தின ஸ்ரீவைஷ்ணவசம்ருத்திக்கு மங்களாசாசநம்பண்ணினார் ; தொடங்கினகார்யம் தலைக்கட்டினவாறே பழையவிழவே தலையெடுத்து, தம்மாற்றாமையாலே மடலூர்ந்தாகிலும் பெறப்பார்க்கிறாரொன்னுதல். அன்றிக்கே, கீழே, ‘மலியுஞ்சுடரொளிமூர்த்தி’ என்று-வடிவழகை யநுசந்தித்து, அநந்தரம் பாஹ்யசம்ஶ்லேஷாபேக்ஷைபிறந்து அப்போதே பெறாமையாலே, வழியல்லாவழியேமடலூர்ந்தாகிலும் பெறப்பார்க்கிறாரொன்னுதல்.

( மாசறுசோதியித்யாதி ) ( மடலெடுத்தாகிலும் பெறவேண்டும்படி பழிப்பற்றவடிவழகை யுடையனாய், என்னோட்டைக்கலவியால்வந்தப்ரீதிதோற்ற ஸ்மிதம்பண்ணி, அந்தக்கலவியாலே வேறுபட்டுள்ள வடி

வையுடையனாய், என்னோடேகலக்கிறவிடத்துத் தன்பேறாகக்கலந்தவனு மாய், மடலெடுத்துப்பெறாதே முடிந்தாலும் 'இந்தவிஷயத்தை யாசைப் பட்டன்றோ மடலெடுத்தது' என்று அதுதன்னைப்பீடாகச் சொல்லலா ம்படி மதிப்பனுமாயுள்ளவனை.) ( என்செய்யவாய்-மாசறுசோதி-மணி க்குன்றத்தை ) என்றந்வயமிருப்பது, 'இனிவிசேஷணந்தோறு மொரு பொருள்சொல்லவேணும்' என்னுமத்தாலேசொன்னோம்" என்றருளிச் செய்வர். (( நாடியேயித்யாதி ) நெடுநாள் தேடிதுஃகப்பட்டு, அறிவுகு டிபோனார் செய்யுமத்தைச்செய்கிற தெத்தனைகாலமுண்டு, 'இவ்விஷய த்திலே கைவைத்தார்க்கொரு பழிசொன்னோமாகவேணும்' என்று அதி லேதுணிந்திருக்கிற )

ஊரவர்சொல்லும் பழிநமக்கென் செய்யப்புகுகிறதென்று நின்ற து-கீழ் ; இரண்டாம்பாட்டு-இதென்னவார்த்தை சொன்னாயானாய், எல் லாம்செய்தாலும் பழிபரிஹரிக்கவேணுங்காணென்ன ; நான் "பழிபரி ஹரிக்கவேண்டா" என்றேனல்லேன், பழிபரிஹரிக்கு மெல்லைகடந்தது காணென்கிறாள்.

( என்செய்யுமூரவர்கவ்வைதோழியினிநம்மையென்று ) தன்வ டிவைக்காட்டுகிறாள். இந்த இனிக்குப்பொருள் சொல்லுகிறதாயிற்று - பாட்டில் மேலிற்குறையும். என்செய்ய தாமரைக்கண்ணனென்றுதொட ங்கி, என்செய்யவாயும் கருங்கண்ணும்பயப்பூர்ந்த - என்செய்யுமூரவர் கவ்வைதோழி இனிநம்மையென்றந்வயம். இனியென்னையென்னாதே, நம்மையென்கிறாள்-வாயாலே "மடலூரக்கடவதல்ல" என்றுநிஷேதி யா நிற்கச்செய்தேயும், உடம்புவெளுக்கின்றமை யவளுக்கு மொத்திருக் கையாலே. "தோழிமாருமெம்மின் முன்னவனுக்கு மாய்வராலோ" எ ன்னக்கடவதிறே. "எனக்கவன்வேணும்," "இவளுக்கவன்வேணும்" என்னுமிதுவேயாயிற்றுவாசி. இவளிலும் தோழிமார்க்காற்றாமை விஞ்சி யிருக்கும் ; அதுக்கடி-நாயகனைப்பிரிகையாலுண்டான வாற்றாமையிறே யிவளுக்குள்ளது, இவள்நோவுபடக்காண்கையாலும், இவளுமவனுமாய் ச் சேரவிருக்குமது காணப்பெறாமையாலும் தோழிக்கிரட்டித்திருக்குமி றே. [ ததாஸீதித்யாதி ] "பெருமாளும் பிராட்டியுமானவிருப்பிலே பிரி வுவிளைந்தது" என்று இளையபெருமாள் மஹாராஜர்க்கறிவிக்க ; அவ் வார்த்தை செவிப்படப்பட, பெருமாள் திருமேனியில் வைவர்ண்ய மிவ ருடம்பிலே மாறிற்றாயிற்று. [ ௬௪-ஸ்ரூ-நிஷ்ப்ரபஃ ] ( அத்யர்த்தம்-நிஷ்ப் ரபஃஎன்று ) பிராட்டியைப் பிரிகையாலுண்டான வாற்றாமையிறே பெ ருமாளுக்குள்ளது, இவர்தம்முடைய வாற்றாமையைக் காண்கையாலும், பிராட்டியும் தாமுமாகச்சேரவிருக்கக் காணப்பெறாமையாலு மிவர்க்கவ் வுளவன்றிக்கே மிக்கிருக்குமிறே. அபிதேயவசநமாயிற்று-அர்த்தசப்தம். அத்யர்த்தமாவது-அபிதேயமல்லவென்கிறது. ( வாசாமகோசரமென்ற

படி ) ( தோழிஇனிநம்மை ) என்கிருள் - " ஏகம்துஃகம்ஸுகஞ்சநௌ " ( ஏகம்துஃகம்ஸுகஞ்சநௌ ) என்கிறப்ராப்தியை முன்னிட்டுக் கொண்டு. " பழி " என்று பரிஹரிக்கப்பார்க்கிறவள் தன்னையும் பழி சொல்லுகிருளிறே, " ஏகம்துஃகம்ஸுகஞ்சநௌ " ( ஏகம்துஃகம்ஸுகஞ்சநௌ ) என்றிருக்குமது அவளுக்குமுண்டாகையாலே.

பழிக்கஞ்சவேண்டாமைக்கு நமக்கிப்போதுவந்ததென்னென்ன ( என்செய்யதாமரைக்கண்ணனென்னை நிறைகொண்டான் ) " என்னுடைய வாத்மாத்மீயங்களடைய நீயிட்டவழக்கன்றே " என்கிற அகவாயில் தண்ணளிதோற்றும்படி வாத்ஸல்யத்தாலே குதறிசிவந்த தாமரை போன்ற திருக்கண்களாலே குளிரநோக்கி, " நானுமென்னுடைமையு முன்னது " என்றுசொல்லுவாரைப்போலே வந்தித்தலையை சர்வஸ்வாபஹாரம் பண்ணிக்கொண்டு போனான். எனக்குபகரிப்பாரைப்போலேயிருக்கநோக்கி, என்னை உரிகூறை கொண்டுபோனான். சொலவொன்றும் செயலொன்றுமாயிருந்தது ; " நாதுசெய்கண்களகொண்டொன்றுபேசி " என்னக்கடவதிறே. ( என்னைநிறைகொண்டான் ) அவனுடைய புருஷோத்தமத்வத்துக்குப் புண்டரீகாக்ஷத்வ மெல்லையாயிருக்குமாபோலேயாயிற்று இவள்ஸ்த்ரீத்வத்துக்கு நிறையெல்லையாயிருக்கும்படி. அவன் புருஷோத்தமனானாப்போலேயாயிற்று, இவள் * நாரீணாமுத்தமையாயிருக்கும்படி. (என்) பிரிவோடேயிருந்து மடலூர்ந்து பழிவிளையாகிற்கச்செய்தேயும் " என்னுடையவன் " என்னலாம்படிகாணு மவன்கிட்டினுலிருக்குமபடி. (என்னைநிறைகொண்டான்) " நூருயிரம் புருஷோத்தமர்கள் கூடினுலும் தோற்றுப்போமிதுக்கு மேறபடசெய்யலாவதில்லை " என்ருயிறறு இவளுடைய ஸ்த்ரீத்வாபிமாநந்தானிருப்பது. ( என்செய்யதாமரைக்கண்ணனென்னை நிறைகொண்டான் ) தன்னுடைய பும்ஸ்த்வத்தையடைய அழியமாறி என்னுடைய ஸ்த்ரீத்வத்தைக்கொண்டான். தான்தோற்றுப்போலேகாணு மிவளைத்தோற்பித்தது. ( என்னை நிறைகொண்டான் ) கடலைத்தறைகண்டான். " என்னைநிறைகொண்டான் " என்றிவள்தான் தோழிக்குச்சொல்லுமபடியிறே பண்ணிற்று. தோழிதானுமிவள்வடிவிலே வேறுபாடுகொண்டு " உற்றநன்னோயிதுதேறினோம் " என்று இவளகப்பட்டபடி யறியுமத்தனைபோக்கி, இவள்தான்தோழிக்கும வாய்விடடுச்சொல்லாதபடியிறே ஸ்த்ரீத்வந்தானிருப்பது. " நைவமாகிஞ்சிதப்ரவீத் " ( நைவமாகிஞ்சிதப்ரவீத் ) என்னக் கடவதிறே. ( நிறைகொண்டான் ) நிறையாகிறது-அடக்கம். அகவாயிலோடுகிறவிது பிறர்க்குத்தெரியாதபடி மறைத்துக்கொண்டிருக்கையிறே. நானெனக்கோடுகிற தசையையுனக்கு வாய்விட்டுச் சொல்லும்படியுன்றோ பண்ணிற்று.

"நிறைகொண்டான்" என்கிறவிதினுடைய வ்யாக்யாநமாயிருக்கிறது-மேல். உன்னையவன் கொண்டதுதானேதென்ன; "நிறைகொண்டான்" என்கிறசொல்லுக்குள் ளடங்கினவை தன்னையெண்ணுகிறுள் (முன்செய்யமாமையிழந்து மேனிமெலிவெய்தியென் செய்யவாயும் கருங்கண்ணும் பயப்பூர்ந்த-என்செய்யு மூரவர்கவ்வை தோழியினிநம்மை) நீ "மடலூருவேன்" என்கிறவாயைப்புதைத்தால், என்வடிவு மடலெடுக்கிறவித்தை என்கொண்டுமறைப்பாய். (முன்னித்யாதி) இதுக்குமூன்றுபடியாக வருளிச்செய்தருளுவர்-தன்பக்கல் கைவைப்பதற்குமுன்னே-பிறந்தபோதே உண்டானநிறத்தை யிழந்தென்னுதல்; அன்றிக்கே, அல்லாதவிழவுகளுக்கு முன்னேநிறத்தை யிழந்தென்னுதல்; முன்புதோற்றினவற்றைப் பறித்துக்கொண்டு, பின்பிறேகிழிச்சீரை யறுத்துக்கொள்வது; அவன்றுறும் முந்தமவிரும்பிற றிந்நிறத்தைக்காணும்; அங்ஙனன்றிக்கே, முன்னே - காணக்காண நிறத்தையிழந்தென்னுதல். (செய்யமாமை) "செய்யமாமை" என்றும்சொல்லாநின்றது, "மணிமாமை" என்றுஞ்சொல்லாநின்றது; இரண்டாலும்-சிவப்பும், கறுப்புமல்ல விங்குச்சொல்லுகிறது; இரண்டிலுமொக்க வேறினப்ரயோஜநம்-ஸ்ப்ருஹணீயதையாயிற்று. (இழந்து) அவனோடுகலந்துபெற்ற நிறத்தைத் தநமாகநினைத்திருந்தபடியாலே- இழந்தென்கிறுள். (மேனிமெலிவெய்தி) இனி அவன்வந்தாலும் நிறம்வந்தாலும் தொங்குகைக் காம்ரயமில்லை; ஆம்ரயமுண்டாகிலிறே தொங்குவது. நீர்ப்பண்டம் போலே காணக்காணச் சருகாகாநின்றதாயிற்று. (என்செய்யவாயித்யாதி) அவயவியாகத் தேடுகிறேறே, அவயவங்கள்தோறும் வற்றிவருகிறபடிபாராயோ. (என்செய்யவாயும்கருங்கண்ணும்) இப்போதுதன்னுடைய அவயவங்களைத்தானே ப்ரமம்ஸிக்கிறுளல்லள்; அவன்வந்துகிட்டினபோது அவனுடைய ஸ்ரீஸஹஸ்ரநாமத்துக்கு விஷயமிவையேயாயிற்று. அத்தைச்செவியாலே கேட்டிருக்குமே, அத்தாலேசொல்லுகிறுள். தானிழந்தக்ரமம் சொல்லாநிற்கச்செய்தே, அவனுகந்தக்ரமம் தோற்றுநின்றதுகாணுமிவளுக்கு. (என்னித்யாதி) அவன்தனக்கித்தை சர்வஸ்வமுமாக நினைத்திருந்தபடியாலே, இவளும் "உன்னதென்னது" என்றெருதலைபற்றுகிறுள். ஸ்வஸ்வரூபமும் ப்ராப்யாந்தர்க்கதமாயிறே யுத்தேம்யமாவது. இங்ஙனன்றாகில், "த்வ்யக்ஷரஸ்துபவேந்ம்ருத்யு:" (த்வ்யக்ஷரஸ்துபவேம்ம்ருத்யு:) என்கிறவழியாலே பற்றுகிறுளன்றே. (என்செய்யவாயும்கருங்கண்ணும் பயப்பூர்ந்த) அவனுடையவாய்ப்புகுசோறுபறியுண்ணு நின்றதென்கிறுள். "செங்கனிவாய்நுகர்ந்தான்" "மணநோக்கமுண்டான்" என்னக்கடவதிறே. (செய்யவாயும்கருங்கண்ணும்பயப்பூர்ந்த) கடலும்மலையும் குடியிருப்புமான விடமெல்லாம் ப்ரளயகாலத்திலே கோதகமாமாபோலே, எங்குமொக்க வைவர்ண்யமே

யாயிற்று. ஒருவெளுப்பாயிற்று. விஷம்பரந்தாற்போலே காணக்காணவ ண்டவிட்டு வைவர்ண்யமானது பரப்புமாறிற்று.........................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( என்செய்யுமித்யாதி )

முதற்பாட்டுக்கு வ்யாக்யாநமருளிச்செய்தவநந்தரம் மத்யேயொரு ஸ்ரீவை ஷ்ணவ ரெழுந்தருளி, "ப்ரவேஸமும் பாட்டுமடியேனுக்கு ப்ரசாதிக்கவேணும்" என்ன, அவருக்காக வருளிச்செய்கிறார் (கீழ்த்திருவாய்மொழியில்நின்றுமித்யாதி) ( வேண்டாவென்றார் ) * ஏறாளுமிறையோனிலே. ( வெறுத்தார் ) * நண்ணாதாரி லே. ( திருத்தினார் ) * ஒன்றுந்தேவிலே. ( பகவத்க்ருபையைக்கொண்டாடினார் ) * கையார்சக்கரத்திலே. ( மங்களாசாஸநம்பண்ணினார் ) * பொலிகபொலிகவிலே. தொடங்கினகார்யம். சம்சாரிகளைத்திருத்துகை. பழையவிழவே - * ஏறாளுமிறை யோனிலிழவே. வழியல்லாவழி-ஸ்வயத்நம்.

"செய்யவாய்" என்று-அவயவசோபை, "மாசறுசோதி" என்று - சமு தாயசோபை, "மணிக்குன்றத்தை" என்றது-இரண்டுக்கு மாஸ்ரயமானவிக்ரஹ த்தை யென்னுமர்த்தவிசேஷம் தோற்றுகைக்காக வந்வயித்தது. அந்வயித்தால்போ ருமோ, கீழைப்போலேப்ரதிபத மர்த்தமருளிச்செய்ய வேண்டாவோவென்ன ( இ னிவிசேஷணமித்யாதி )

வ்ருத்தாநுவாத பூர்வகமாக விரண்டாம்பாட்டுக் கவதாரிகை ( ஊரவரித் யாதி ) எல்லாம்செய்தாலும்-ஆற்றாமைபாலே எத்தனைகாலம்பாடாற்றியிருந்தாலு ம். பரிஹரிக்குமெல்லை - "தத்தஸ்ய ஸத்ருஸம்பவேத்" ( தத்தஸ்யஸத்ருஸம்ப வேத் ) என்றிருக்கை.

"பரிஹரிக்குமெல்லைகடந்தது" என்றதென்கொண்டென்ன ( என்செய்யு மூரவரித்யாதி ) இனியென்று-தன்வடிவைக்காட்டுகிறாள் என்றபடி. "இனி" என் றால்-வடிவைக்காட்டினதாமோவென்ன ( இந்தவினிக்கித்யாதி ) அதாவது, மேலே சொல்லுகிற வைவர்ண்யாதிகளை - "இனி" என்றுபராமர்சிக்கிறதாகையாலே, அ ர்த்தாத், "இனி" என்று-வடிவைக்காட்டின தாகலாமென்றபடி. இனிக்கு - "இ னி" என்கிறதுக்கு. அந்வயப்ரதர்ஸந முகேநோக்தார்த்தம் விசதீகரோதி (என்செ ய்யதாமரைக்கண்ணனித்யாதி ) "நம்மை" என்றதுக்கு-ஆத்மநிபஹுவசநமாக்கி, ( தன்வடிவைக்காட்டுகிறாள் ) என்றார்கீழ் ; அங்ஙனன்றிக்கே, தோழியையுங் கூட் டிக்கொண்டு - "நம்மை" என்கிறாளென்று விவக்ஷித்து, நிஷேதிக்கிறவளைக் கூட் டிக்கொள்ளுவானென்னென்ன ( இனியென்னையித்யாதி ) இப்போது, தன்வடிவை யென்றது-தங்கள்வடிவையென்று கண்டுகொள்வது. நாயகிக்கொழிய தோழிக்கு டம்பு வெளுக்கக்கூடுமோவென்ன ( தோழிமாருமித்யாதி ) தோழிமாரும், ஈடுப டுகிற வெனக்குமுன்னே, "இவளுக்கவனுதவப் பெற்றதில்லை" என்று அவன்பொ ருட்டீடுபடாநிற்பர்களித்யர்த்தஃ. மாய்வர்-ஈடுபடாநிற்பர்கள். உடம்புவெளுக்கிற மை யிருவருக்கு மொத்திருந்தால் வாசியேதென்ன ( எனக்கித்யாதி ) ( எனக்கவ ன்வேணும் ) என்னும்நாயகி, ( இவளுக்கவன்வேணும் ) என்னும்தோழி என்று கூ ட்டிக்கொள்வது. "எம்மில்முன்" என்கிறவிடத்தில், "எம்மில்" என்கிறதுக்குபா வம் ( இவளிலுமித்யாதி ) விஞ்சியிருக்கைக்கடியேதென்ன ( அதுக்கடியித்யாதி ) தோழிமார்க்கிரட்டித் திருக்குமென்றதுக்குசம்வாதம் ( ததாசீதித்யாதி ) "வை

[illegible] " ( ஸம்ருத்வாவாநரேந்த்ராஸ்துலக்ஷ்மணேரேரிதம்வச: । ததாஸீந்நிஷ்ப்ரபோத்யர்த்தம் ராஹுக்ரஸ்தஇவாம்சுமாந் ) இதிசுந்தரகாண்டே பஞ்சத்ரிம்சே சீதாம்ப்ரதிஹநூமான், இச்லோகத்துக்கடியே தொடங்கியர்த்தம் ( பெருமாளும்பிராட்டியுமித்யாதி ) மாறிற்றாயிற்று-இங்குமுண்டாயிற்றென்றபடி. இவர்தம்முடைய-பெருமாளுடைய. தாமுமாக-பெருமாளுமாக. இவ்வர்த்தத்தை இச்சப்தம் வசிக்குமோவென் ( அபிதேயேத்யாதி ) அத்யர்த்தம்-வாசாமகோசரமாம்படி. வைவர்ண்யமாகிறவர்த்தம் வாக்குக்கவிஷயமாம்படியென்றபடி. இவ்விடத்தில், அதியென்கிறது-நஞர்த்தகம். அவளுடம்பு வெளுக்கிறது தனக்காகவென்றிவ ளெப்படியறிந்தாளென்ன ( தோழியினிநம்மையித்யாதி ) அதாவது-சமாநசுகதுக்கைக ளாகையாலே, உடம்புவெளுக்க ப்ராப்தியுண்டென்றப்டி. இப்படிசொல்லுகிறதின் கருத்தையருளிச்செய்கிறார் ( பழியென்றித்யாதி ) விவரணமாதல். " [illegible] । [illegible] " ( த்வம்வயஸ்யோஸிஹ்ருத்யோமேஹ்யேகம்துக்கம்ஸுகஞ்சநௌ । ஸுக்ரீவோராகவம்வாக்ய மித்யுவாசப்ரஹ்ருஷ்டவத் ) இதிகிஷ்கிந்தாகாண்டேபஞ்சமே.

" என்செய்யதாமரைக் கண்ணனென்னை நிறைகொண்டான் " என்றதுக்கு- " தானென்னுடையவன் " என்கிறவாகாரம் தோற்றும்படி கண்ணாலேகுளிரநோக்கியென்னை சர்வஸ்வாபஹாரம்பண்ணினானென்றர்த்தம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( என்னுடையவித்யாதி ) இந்தவர்த்தத்தில், " நிறை " என்கிறது-நிறையவென்றாய், எல்லாவற்றையுமென்றபடி. என்செய்யதாமரைக்கண்ணன்-என்னுடையசெய்யதாமரைக்கண்ணன். " செய்யதாமரைக்கண்ணன் " என்றது-இப்போது, வாத்சல்யகுணபரம். இத்தால் - " நானுன்னுடையவனன்றோ " என்று அவன்கண்ணாலேயறிவித்தமையைக்கொண்டு-என் என்கிறாளென்றபடி. குதறி-உல்பணமாய். கீழ்வாக்யவிவரணம் ( எனக்கித்யாதி ) இருக்கநோக்கி-இருக்கும்படிநோக்கி. ( உரிகூறைகொண்டு ) கூறையையுரிஞ்சிக்கொண்டு. கூறை-புடவை. இத்தாலவன் தௌராத்ம்யத்தை பலிப்பிக்கிறார் ( சொலவொன்றுமித்யாதி ) கண்ணாலேநோக்கின வித்தனையன்றோ, சொன்னதேபின்னையென்ன ( தூதுசெய்யித்யாதி ) தூதக்ருத்யத்தைப்பண்ணுகிற கண்களைக்கொண்டு ஸ்வாபிப்ராயத்தை ஸ்பஷ்டமாகச்சொல்லியித்யர்த்த:. " நிறை " என்றது-சாகல்யவாசியென்றும், " செய்யதாமரைக்கண்ணன் " என்றது-வாத்சல்யகுணபரமென்று மருளிச்செய்து ; " செய்யதாமரைக்கண்ணன் " என்றது-பரத்வபரமென்றர்த்தாந்தரம்விவக்ஷித்து, அத்தையேத்ருஷ்டாந்தமாக்கி, " நிறை " என்றதுக்கு-அடக்கமென்றர்த்தாந்தர மருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி புந:ப்ரதீகக்ரஹணம் ( என்னைநிறைகொண்டானென்று ) அத்தையுபபாதிக்கிறார் ( அவனுடையவித்யாதி ) இத்தால்-இவ்விலக்ஷணவஸ்துவையபஹரிக்கிறானுகையாலே, தன்வைலக்ஷண்யத்தைக்காட்டி அபஹரித்தானென்றுகருத்து. இப்போது, " என் " என்றது-செய்யதாமரைக்கண்ணனான வாகாரத்தையெனக்குக்காட்டியென்றபடி. கீழ்வாக்யவிவரணம் ( அவனித்யாதி ) ஆக, "என்" என்றதுக்கு-என்னுடையவென்றும், எனக்கென்றும் ; "செய்யதாமரைக்கண்ணன்" என்றது-வாத்சல்யகுணபரமென்றும், பரத்வபரமென்றும் ; " நிறை " என்றதுக்கு-சமஸ்தமுமென்றும், அடக்கமென்று மர்த்தத்வயம் கண்டுகொள்வது. விச்லே

ஷித்து நோவுபடுகிற சமயத்திலே "என்" என்றது; அவன்கலந்தபோது "நானுஞ் சுரக்கன்றே" என்றுகண்வழியாலே சொன்னதுகொண்டு. "என்" என்கிறாளென்று-கீழேயருளிச்செய்து ; அங்ஙனன்றிக்கே, அவன்கிட்டினபோது தாழநின்று பரிமாறினமையைப் பற்றச்சொல்லுகிறாளென்று தாத்பர்யாந்தரம் ( பிரிவோடேயித்யாதி ) சாமாந்யேந "நிறைகொண்டான்" என்றாலும்-தன்னுடைய நிறைகொண்டமை சித்திக்குமாயிருக்க, "என்னை" என்றுவிசேஷித்தூன்றிச் சொன்னதுக்கு பாவம் ( நூறாயிரமித்யாதி ) இத்தால்-அவனுடைய பும்ஸ்த்வத்தையு மதிக்ரமித்திருக்கு மிவளுடைய ஸ்த்ரீத்வமென்றுகருத்து. இப்படி அதிக்ரமித்திருக்குமாகில், நிறைகொள்ளக்கூடுமோவென்ன ; கீழிற்பதத்தையுங் கூட்டிபாவம் ( தன்னுடையவித்யாதி ) அதாவது-எனக்குத்தாழநின்று நிறைகொண்டானென்றுகருத்து. (அழியமாறி) அழித்து. விவரணம் ( தானித்யாதி ) தோற்றுப்போலேயென்றது - "ஆத்மாத்மீயங்கள் நீயிட்டவழக்கு" என்றத்தைப்பற்ற. "நூறாயிரம்" இத்யாதிவாக்யவிவரணம் ( கடலையித்யாதி ) து:காதிசயத்தாலே இப்படிசொல்லவுங்கூடுமே, இதுவாஸ்தவமென்றிவ ளறியும்படியெப்படியென்ன ( என்னைநிறைகொண்டானென்றித்யாதி ) இத்தால்-எத்தனை யாற்றாமையுண்டானாலு மிவ்வார்த்தைசொல்லாதவிவள் சொன்னபோதே, இதுவாஸ்தவமென்றுகருத்து. ஆனால்-இதுக்குமுன்புதோழிக்குத் தன்தசைசொல்லாளோவென்ன ( தோழிதானுமித்யாதி ) ( உற்றநன்னோயித்யாதி ) உள்ளுறப்பெற்ற ஶ்லாக்யமான நோயிதென்றறுதியிட்டோ மித்யர்த்த:. அப்படி அந்தரங்கர்க்கும் வாய்விட்டுச்சொல்லாதபடிபண்ணுமோ ஸ்த்ரீத்வமென்ன ( நைவமாகிஞ்சிதித்யாதி ) "[illegible]" ( அத்ருஷ்டபூர்வவ்யஸநா ராஜபுத்ரீயஶஸ்விநீ । தேந து:கேந ருததீ நைவமாகிஞ்சிதப்ரவீத் ) இத்யயோத்யாகாண்டே தசரதம்ப்ரதி ஸுமந்த்ர:. ஸ்த்ரீத்வமென்றதுக்கு சப்தநிர்வாஹம் ( நிறையாகிறதடக்கமித்யாதி ) "என்னைநிறைகொண்டானென்று" இத்யாதிவாக்யவிவரணம் ( நானெனக்கித்யாதி )

"நிறை" என்றதின் முந்தினவர்த்தத்திலேநோக்காக உத்தரபதாவதாரிகை ( நிறைகொண்டானென்கிறவிதினுடையவித்யாதி ) மற்றைப்பக்ஷத்தில், அடக்கம் போனபோதே யல்லாதவையும் போயிற்றென்கிறாளென்று உத்தரபதசங்கதி யாகக்கடவது. வ்யாக்யாநமாயிருக்கிறது - "சர்வஸ்வாபஹாரம் பண்ணிக்கொண்டுபோனான்" என்றதின் வ்யாக்யாநமாயிருக்கிறதென்றபடி. உத்தரப்ரத்யுத்தரரூபேண கீழ்வாக்யவிவரணம் (உன்னையவனித்யாதி) இப்படியந்வயித்ததுக்கு பாவமாதல், "மாமை" இத்யாதிக்கெல்லாம் பாவமாதல் (நீமடலூருவேனென்கிறவித்யாதி) புதைத்தால்-மூடினால். இதுக்கு-"முன்" என்றதுக்கு. மூன்றுபடியாவது-அவனோடே கலப்பதற்கு முன்னேயென்னுதல், மேனிமெலிவெய்துகை தொடக்கமான விழவுகளுக்குமுன்னேயென்னுதல், காணக்காண வென்னுதலென்று. முன்-முன்னே. மேனிமெலிவெய்துகை தொடக்கமான விழவுகளுக்குமுன்னே நிறமிழக்கைக்கு ஹேதுவேதென்ன ( முன்புதோற்றினவித்யாதி ) கிழிச்சீரை-சாளிகை. ஹேத்வந்தரம் ( அவன்றானுமித்யாதி ) அதாவது-தான்முந்தற விரும்பினதாகையாலே முற்படவபஹரித்தானென்றபடி. அவன்முந்தறநிறத்தை விரும்புகையாலேயன்றோ, அவனுக்குறுப்பல்லாத வாத்மாத்மீயங்களை வேண்டாவென்கிற - * ஏறாளுமிறையோனிலே, முந்தற "மணிமாமைகுறைவிலம்" என்றது. இது இருபத்துநாலாயிரத்திலேவ்யக்தம். * ஏறாளுமிறையோனிலே ( மணிமாமையென்றும் சொல்லாநின்றது ) இது

வ்யாஹ்ருதமன்றோவென்னில் என்றுசங்காவாக்யத்தைப் பூரித்துக்கொள்வது. இங்கு-இவ்வோவிடங்களிலே. போயென்றதே, "இழந்து" என்றதுக்குபாவம் (அவனோடித்யாதி)

(அவன்வந்தாலும் நிறம்வந்தாலும்) என்றதுக்குபாவம்-அவன்வந்தால் நிறம்வருமே. அந்தநிறத்துக் காரணமில்லையென்றபடி. "முன்-மேனிமெலிவெய்தி" என்று, முன் என்கிறபதத்தை இங்கேயுங்கூட்டிபாவம் (நீர்ப்பண்டமித்யாதி) நீர்ப்பண்டம்-ஜலமயபதார்த்தம்.

அவயவியாக-சரீரியாக. "செய்யவாயும் கருங்கண்ணும்" என்றுவிசேஷணமிட்டு-தன்னவயவங்களைத்தானே வர்ணிக்கலாமோவென்ன (இப்போதித்யாதி) அவனுடைய ஸ்ரீசஹஸ்ரநாமத்துக்கென்றது-அவன்பண்ணும் ஸ்தோத்ரத்துக்கென்றபடி. விஷயமென்றறியும்படி யெப்படியென்ன (அத்தைச்செவியாலேயித்யாதி) "செய்யமாமை, செய்யவாயும், கருங்கண்ணும்" என்கிறவர்ணனையால் பலித்தவர்த்தம் (தானிழந்தவித்யாதி) தானிழந்தக்ரமமாவது-மாமை, மேனி, செய்யவாய், கண், இவற்றை யிழந்தக்ரமம். "என்" என்று-மமகாரந்தோற்றச் சொல்லலாமோவென்ன (அவன்தனக்கித்யாதி) இத்தை-அவயவத்தை. சர்வஸ்வமுமாக நினைத்திருந்தபடியாலேயென்றது - "செங்கனிவாய்நுகர்ந்தானை" "மணநோக்கமுண்டான்" என்றத்தைப்பற்ற. உன்னதென்னதென்று-உன்னதாகையாலே யென்னதென்று. ஒருதலை-ததீயத்வாகாரம். இதுக்குஸ்வாபதேசம் (ஸ்வஸ்வரூபமுமித்யாதி) ப்ராப்யாந்தர்க்கதமாயிறே-ப்ராப்யபூதனுக் குபயுக்தமாயிறே. (ஸ்வஸ்வரூபமும்) இத்யாதிவாக்யத்துக்கு தாத்பர்யம்-ப்ராப்யபூதனான ஸர்வேச்வரனுடைய "மதீயம்" என்கிறவபிமாநாந்தர்ப்பூதமான வழியாலேயன்றோ வாத்மஸ்வரூபந்தானும் "ஸ்வேந ரூபேண" (ஸ்வேநரூபேண) இத்யாதிப்படியே ப்ராப்யமாயிற்று; ஆகையாலே, ஆத்மதர்மமான ஜ்ஞாநபக்த்யாதிகளு மவனுக்குறுப்பான வழியாலேயன்றோ வாதரிக்க ப்ராப்தமென்று. "த்வ்யக்ஷரஸ்து பவேந் ம்ருத்யுஸ் த்ர்யக்ஷரம் ப்ரஹ்மண: பதம் । மமேதி த்வ்யக்ஷரோ ம்ருத்யுர் நமமேதி ச சாச்வதம்" (த்வ்யக்ஷரஸ்துபவேந்ம்ருத்யுஸ்த்ர்யக்ஷரம்ப்ரஹ்மண:பதம் । மமேதித்வ்யக்ஷரோம்ருத்யுர்நமமேதிசசாச்வதம்) இதி பகவச்சாஸ்த்ரே. அல்லாத வவயவங்களுக்கும் வைவர்ண்யமொத்திருக்க, கண்ணையும் வாயையும் விசேஷிக்கிறதுக்குக்கருத்தென்னென்ன (அவனுடையவித்யாதி) "வாய்ப்புகுசோறு" என்றதுக்குப்ரமாணம் (செங்கனிவாயித்யாதி) சிவந்தகனிபோன்ற வாயைபுஜித்தவனை யித்யர்த்த:. (மணநோக்கமுண்டானை) பிராட்டியுடைய வழகியநோக்கை தாரகமாகவுடையவனே யித்யர்த்த:. முந்தினபாசுரம், திருமொழி மூன்றாம்பத்து ஏழாந்திருமொழி இரண்டாம்பாட்டு, "பண்டிவன்" இத்யாதி. பிந்தினபாசுரமும், எட்டாம்பத்து பத்தாந்திருமொழி முதற்பாட்டு, "வண்டார்" இத்யாதி. "முன்செய்யமாமை" இத்யாதியையுங்கூட்டிபாவம் (கடலுமித்யாதி) "பயப்பு" என்றத்தைப்பற்ற (ஒருவெளுப்பாயிற்றென்றது) வெளுப்பாயிற்றென்றது - வெள்ளமாயிற்றென்றுசாடு, வெளுத்ததென்று சஹஜார்த்தம். "ஊர்ந்த" என்றதுக்குபாவம் (விஷமித்யாதி) பறப்புமாறிற்று-இடமில்லாதபடி பரம்பிற்று.

அந்வய: பூர்வமேவோக்த:.......................................................*



# மூன்றாம்பாட்டு.

ஊர்ந்தசகடமுதைத்தபாதத்தன்பேய்முலை
சார்ந்துசுவைத்தசெவ்வாயனென்னைநிறைகொண்டான்
பேர்ந்தும்பெயர்ந்துமவனோடன்றியோர்சொல்லிலேன்
தீர்ந்தவென்றோழியென்செய்யுமூரவர்கவ்வையே.

## ஆறாயிரப்படி.

( ஊர்ந்தசகடம் ) "ஆகிலும் மடலூருகை நமக்குப் போராது" என்று தோழிசொல்ல; தன்னுடைய வதிதைவாதிமாநுஷ திவ்யசேஷ்டிதங்களாலு மழகாலு மென்னை நிறைகொண்டான்; ஆனபின்பு, பேர்ந்தும் பெயர்ந்து மவன்திறமல்லது மற்றேதேனும் சொல்லிலும் கேளேன். நானேதேனு மொன்றைச் சொன்னாலத்தைச் செய்கையிலே யெனக்கு முற்படவே துணிந்திருக்கக்கடவ நீ யென்னை ப்ரதிபந்திக்கலாமோ. நீ ப்ரதிபந்திக்கிறது "ஊரவாநம்மைப்பழிசொல்லுவர்" என்றிறே, அது தத்குணபராஜிதரான நம்மைச்செய்வதென்னென்கிறாள்............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய விரோதிநிவர்த்தகமான அதிபாலசேஷ்டிதத்திலே யகப்பட்டவென்னை யூரார்பழிசொல்லி யென் செய்யுமென்கிறாள்.

ஊர்ந்த-வலியநினைந்துவூர்ந்துவந்த. சகடம்-சகடத்தை. உதைத்த - * ஸ்தந்யார்த்தியாயழுதுநிமிர்ந்த அங்ய்யபரவ்யாபாரத்தாலே முறிந்துவிழும்படியுதைத்த. பாதத்தன்-திருவடிகளையுடையவனாய். அதுபகவந்தசையாம்படி அதிசைசவாவஸ்தையிலே, பேய்முலை-பேய்முலையை. சார்ந்து-தாயமுலையோபாதி நெஞ்சுபொருந்திச்செறிந்து. சுவைத்த - * ப்ராணஸஹிதமாகப்பசையறவுண்ட. செம்-சிவந்த. வாயன்-திருப்பவளத்தையுடையவன. இப்பருவமநிரம்பாச்செயலாலே, என்-என். நிறையை-நிரப்பத்தை. கொண்டான்-அபஹரித்தான. ஆகையாலே,பேர்ந்தும்பெயர்ந்தும்-மீண்டும்மீண்டும். அவனோடன்றி-அவனோடுசேர்ந்ததன்றி. ஓர்-வேறொரு. சொல்-வார்த்தையை. இலேன்-உடையேனல்லேன். என்-என்னோடொருநெஞ்சாம்படி. தீர்ந்த-அறுதியுடைய. தோழி-தோழீ. ஊரவர்-ஊரவருடைய. கவ்வை-அலர். என்-எத்தை. செய்யும்-செய்யும்.

அவன்கொண்டநிறையை மீளவழைக்குமோ, அவனையொழிய வேறேசிலரை நான்பெற்றிடப்பண்ணுமோவென்றுகருத்து... .................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

**"என்செய்யுமூரவர்கவ்வை" என்றாள்; "எல்லாம்செய்தாலும் பழி பரிஹரிக்கவேண்டாவோ" என்றிருக்குமிறேயிவள்; "இதுபழி" என்று பரிஹரிக்கவொண்ணாதபடி யெனக்கு ப்ராவண்யத்தைவிளைத்தவனன்குத்தான், "இதுபழி" என்று மீளாதபடி யிவ்விஷயத்திலேப்ராவ**

ணையாயிருக்கிற நானெவ்வளவிலே நிற்கிறேன், "இதுபழி" என்று சொல்லுவர்கள்தா னெவ்வளவிலே நிற்கிறார்கள், அவர்கள் சொல்லுகிறத்தைச் சொல்லுகிற தோழியான நீதானெவ்வளவிலே நிற்கிறா யென்கிறாள்.

( ஊர்ந்தசகடமுதைத்த பாதத்தன் ) இதுக்கு முன்பெல்லாம் ; சகடாசுர நிரஸநம்பண்ணினதும், பூதநா ஸ்தந்யபாநம் பண்ணி யவளை நிரஸித்ததும், " கம்ஸன்வரவிட்டவற்றைப்போக்கினது " என்றிருந்தாளவள் ; " எனக்குத் தன்பக்கலிலே ப்ராவண்யத்தை விளைக்கைக் காகச் செய்தான் " என்றிருக்கிறா ளாயிற்றிவள். பருவம்நிரம்பிப் ப்ரணயியாய் அதில் தேசிகனானபின்பு செய்தவையன்றோ இவளுக்குத் தன்பக்கலிலே ப்ராவண்யம் பிறக்கைக்குச்செய்தவையாவது, பால்யத்திலே செய்தவையிவளுக்குடலாம்படி யெங்ஙனே யென்னில் ; இவளுக்குத் தன்பக்கல் ப்ராவண்யத்தைவிளைக்கை அவனுக்கு சந்தாப்ரயுக்தமென்கை. " எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தாய் " என்று – அவற்றை யொழியவேயும் பின்பு பண்ணின வ்யாபாரங்களுமெல்லாம் தனக்காகப்பண்ணினான்என்றிருக்கிறாளாயிற்று. ( ஊர்ந்தசகடம் ) ஊருகிறசகடமல்ல ; அதுசெய்வதெல்லாம்செய்தற்றது, இவன் ஜீவநாத்ருஷ்டத்தாலே தப்பினவித்தனை. இரண்டுசகடத்தை யிரண்டருகுமிழுத்து நடுவே தொட்டிலையிட்டு வளர்த்திப்போனாள் தாயார் ; பாடிகாப்பாரோ களவுகாணுமாபோலே, காவலாகவைத்தசகடமே அசுராவேசத்தாலே யூர்ந்துவந்ததாயிற்று. அசேதநமான சகடத்திலே அசுரர்களாவேசித்து நலிவதாக வூர்ந்துவந்தவித்தனையிறே. ( உதைத்தபாதத்தன் ) அதுவும் செய்வதெல்லாம்செய்து, இவனுமகப்படுவதெல்லாமகப்பட்டு நின்றான் ; திருவடிகளினுடைய வவதாநத்தாலே தப்பினவித்தனை. இவனை யடிகாத்துத் திரிந்த வித்தனையிறே.

( உதைத்தபாதத்தன் ) முலைவரவுதாழ்த்துச் சீறி நிமிர்த்த திருவடிகளுக் கிலக்காய்த் துகளாய்ப்போனவித்தனையாயிற்று ; " 𑌸𑍍𑌤𑌨𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑍀 𑌪𑍍𑌰𑌰𑍁𑌰𑍋𑌦𑌹 " ( ஸ்தந்யார்த்திப்ரருரோதஹ ) நமக்குப்புகலானதிருவடிகள்தானே நம்ம நிஷ்டங்களையும் போக்கித் தருமாயிற்று. சகடாசுரநிரஸநம் பண்ணினவிது, பருவம் நிரம்பி கம்ஸவதம் பண்ணினத்தோடொக்கச்சொல்லலாம்படியிறே யிதுக்குமுன்பே பூதனையை நிரஸித்தசெயல். சகடம்வந்து கிட்டினபோது சிலராலே பரிஹரிக்கலாம் ; பூதனை தாய்வடிவுகொண்டுவந்து நலியப்புக்கால் பரிஹார மில்லையிறே, ஈன்றோ நஞ்சிட்டாற்போலே யிருப்பதொன்றிறே. ( பேய்முலையித்யாதி ) பிள்ளைகள் முலையுண்ணப்புக்கால் தாய்மார் முலைக்கீழே முழுசினவாறே பால்சுரக்கும், பின்னைப்பாலையுண்டு உபகாரஸ்ம்ருதியாலே முகத்தைப்பார்த்து ஸ்மிதம்பண்ணுமாயிற்று ; அப்படியே அவளும் தாயாய்

வந்து முலைகொடுக்கையாலே யிவனும் பிள்ளையாயே முலைக்கீழேமுழுசி முலையுண்டு, உபகாரஸ்ம்ருதியாலே முகத்தைப்பார்த்து அதரத்தில்பழு ப்புத்தோற்ற ஸ்மிதம்பண்ணியாயிற்று முலையுண்டது.

"மழலைமென்னகையிடையிடையருளாவாயிலேமுலையிருக்கவெ ன்முகத்தே" என்னக்கடவதிறே. "உயிரைவற்றவாங்கியுண்டவாயான்" என்கிறபடியே - முலைப்பாலோடேகூட விரங்கி உயிரையும் சுரக்கும்படி யாகவாயிற்று முலையுண்டது. (என்னைநிறைகொண்டான்) ஒரு வ்யா பாரத்தாலே யிரண்டு ஸ்த்ரீவதம்பண்ணினான். தன்னை யாசைப்பட்டாரி லுகவாதார்க்கே நன்றாயிற்று; அவளை நற்கொலையாகக்கொன்றான், என் னை யுயிர்க்கொலையாகக் கொன்றான். அவனுடைய வ்யாபாரங்களிலே யொன்று குறைதல், நானிழந்தவற்றிலே யொன்றுகுறையவிழத்தல்செ ய்யிலன்றோ நீ சொல்லுகிற ஹிதவசநம் கேட்கவல்லேனாவது.

ஆகில், இங்ஙனொத்த தசைகளுண்டானா லவ்விஷயத்தைமறந்து லோகயாத்ரையை யந்வேஷித்துப்புறம்பேதேனு மொன்றைக்கொண்டு போதுபோக்கி யிருக்கவேண்டாவோ, எல்லாம்செய்தாலு மிழக்கலாவ தொன்றோ நிறையென்ன (பேர்ந்தும்பெயர்ந்துமித்யாதி) மறக்கையாவ து ஸ்மரிக்கையிலே யொன்றாகவேணுமே நானுமிருக்கைக்கு. [ஏது செய்தால்மறக்கேன்] என்னக்கடவதிறே; நாட்டாரபிமத விஷயங்க ளோடு கலந்தபோது அவற்றைநினைத்து, பேரவிருந்தபோது அவற்றை மறந்திருப்பார்கள் கலந்தவிஷயத்தினுடையவும் பிரிந்தவிஷயத்தினுடை யவும் தண்மையாலே; இதுலோகத்தில் விஸஜாதீயமான விஷயமாகை யாலே, பிரிந்தபோது மறக்கலாயிருந்ததில்லை, இனிக்கூடித்தான் பார்ப் போமோ மறக்கலாமாகிலென்கிறாள். கூடினாலும் மறக்கலாமோவென் னில், அதுசெய்யலாமன்றாயிற்று பிரிந்தபோது மறக்கலாவதென்று வ்யதிரேகோக்தி. (பேர்ந்தும்பெயர்ந்தும்) போயும்வந்தும். (அவனோ டன்றியோர்சொல்லிலேன்) "அவனைமற, அவனைநினை" என்றே நீ சொல்லுவது, ஆகையாலே அவனையொழியவெனக்கு வேறொருசொல் லின்றிக்கே யிருந்தது.

இவளிப்படிசொன்னவாறே, நிஷேதிக்கிற தோழியுகந்தாள் - "நாமிவளையவனோடே சேர்க்கப்படும்பாடும், அப்படிசேர்ப்பித்தநாமே யிவளைமறப்பிக்க யத்நித்தாலும் மறவாதபடி யவகாஹிப்பதே" என்று கந்தாள்; இவள், நிஷேதிக்கிறவுக்தியைவிட்டு இவள்நெஞ்சைக்கண்டா ள் (தீர்ந்தவென்தோழி) தாய்மார்சொல்லுகிற ஹிதவசநத்தை நீயும் சொல்லுகையாலே, "நீயுமவர்களோடொக்க நிஷேதிக்கிறாய்" என்றி ருந்தேன், உன்நினைவிதுவாகப்பெறுவதே, நீயாம்படியேயிருந்தாய், வரவிரு என்கிறாள்; "ராவணன்வரவிட்டவள்" என்றுசங்கித்திருந் தவள், "பெருமாள்பக்கலினின்றும்வந்தவன்" என்றறிந்தபின்பு அவ

னைக்கொண்டாடினைப்போலே ; " [illegible] " ( அர்ஹஸேசகபிஸ்ரேஷ்ட்டமயாஸமபிபாஷிதும் ) " [illegible] " ( ஸகீபிஸ்ஸுகமாஸ்வ ) என்கிற அவர்கள்படியாயிருந்ததி நீயென்கிறாள். " [illegible] " ( ஸமாத்வாதஸுதத்ராஹம் ) என்கிறது முன்னோடே சொல்லலாயிருந்தது. அத்தோழி தானும், " பிறர்சொல்லுகிற ஹிதவசநமுமிவள் செவியிற்படும்படியோ இவள்தான்நின்றநிலை " என்றறிகைக்காகச் சொன்னாளித்தனையிறே. ஊரார்பழிக்கஞ்சியன்றோ நான்விலக்குகிறதென்ன ( என்செய்யுமித்யாதி) ஆகிலுனக்கு வார்த்தைசொல்ல வடுப்பதிப்படியேகாண், " நாட்டார்பழிசொல்லுவர்கள் " என்றுசொல்லாதே " என்னினைவிருந்தபடிஇது" என்றுசொல்லலாவதுண்டாகிற் சொல்லிக்காணாயென்கிறாள். ஊரார் பழிகொண்டு காரியமென், உன்னெஞ்சிற் குறையில்லாமையேயன்றோ எனக்குவேண்டுவதென்கிறாள்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. ( ஊர்ந்தசகடமித்யாதி ) கீழிற்பாட்டிலே - பழிபரிஹரிக்குமெல்லை கடந்ததென்று சொல்லியிருக்க, இப்பாட்டிலே மீளவும் " என்செய்யுமூரவர்கவ்வை " என்றதுக்கும; மடலூருகிற சமயத்திலே பழிசொல்லவேண்டியிருக்க, அவன் பண்ணினவுபகாரம் முதலானவற்றைச் சொல்லுகிறதுக்கு மநுகுணமாகவவதாரிகை ( என்செய்யுமூரவர்கவ்வை யென்றாளித்யாதி ) ( என்றாள் ) என்றவநந்தரம், கீழே, மீளவுமிப்பாட்டிலே " என்செய்யுமூரவர்கவ்வை " என்றுசொல்லுவானென்னென்ன என்றத்யாஹரிப்பது. பரிஹரிக்கிறார் ( எல்லாஞ்செய்தாலுமித்யாதி ) எல்லாமசெய்தாலும் - எத்தனையாற்றாமைபட்டாலும். இவள்- தோழி. பழிக்கிறசமயத்திலே யுபகாரங்களைச் சொல்லுகிறதுக்கு விரோதமில்லை, ப்ரத்யுத தன்னிடத்திலே யத்யந்த ப்ராவண்யத்தை ஜநிப்பிக்கிறதிலே ஹேதுக்களென்கிறார் ( இதுபழியென்றித்யாதி ) இது - "ஊர்ந்தசகடம்" இத்யாதியைப்பற்ற. அவனெங்குத்தான் - அவனெத்தனை யுபகாரங்களைப்பண்ணினான். "பேர்ந்தும்பியர்ந்தும்" இத்யாதியைப்பற்ற ( இதுபழியென்றுமீளாதபடியித்யாதி ) நானெவ்வளவிலே நிற்கிறேனென்றது - ஊரார்பழிபுகழாமெல்லையிலே நிற்கிறவென் னிலையெதென்றபடி. "ஊரவர்" என்றத்தைப்பற்ற ( இதுபழியென்றித்யாதி ) எவ்வளவிலே நிற்கிறார்களென்றது - பகவத்விஷயாவகாஹநத்தையே "தோஷம்" என்றுசொல்லுகிறவர்கள் நிற்கிறநிலையெதென்றபடி. "தீர்ந்தவென்தோழி" என்றத்தைப்பற்ற ( அவர்களித்யாதி ) நீதானெவ்வளவிலே நிற்கிறாயென்றது - ஸமாநஸுகதுஃகையான வுன்னிலையெதென்றபடி..

"ஊர்ந்த" என்றுதொடங்கி - அவன் வ்யாபாரங்களைச்சொல்லி, "என்னை நிறைகொண்டான்" என்றதுக்கு பாவம் ( இதுக்குமுன்பெல்லாமித்யாதி) இவள் இவ்வ்யாபாரங்களை "ஸ்வார்த்தம்" என்றபோதே - தோழியிதுக்கு ஹேது அந்ய[illegible]ர்வர்க நினைத்திருந்தமை அர்த்தாத்ஸித்தம். இதுக்கு முன்பெல்லாம்-நாயகிஸ்வா[illegible]மாகச்சொன்னதுக்கு முன்னெல்லாம். அவள் - தோழி. தடஸ்த்தபாவனைக்கைய

யநுவதித்து பரிஹரிக்கிறார் (பருவமித்யாதி) (இவளுக்குத்தன்பக்கல்) இத்யாதிவாக்யத்துக்கு - அவன் தன்ஸத்தையே நோக்கித் தந்ததே ஹேதுவாக ப்ரவணையாகிறுளாகையாலே பால்யாவஸ்த்தையில் வ்யாபாரங்களும் ப்ராவண்ய ஹேதுவாகலாமென்று கருத்து. ஸத்தாப்ரயுக்தம் - பால்ய யௌவநாத்யவஸ்த்தைகளென்கிற வாசியின்றிக்கே ஸ்வரூபப்ரயுக்தம். பலிதம் (என்னின்றவித்யாதி) அதாவது - அவதாரந்தொடங்கிப் பின்புண்டான வ்யாபாரங்களெல்லா மாச்ரித வசீகரணார்த்தமாயிருக்குமென்றபடி. அவற்றையொழியவேயும் - ஜங்மங்களை யொழியவேயும். (என்னின்றயோனியுமாய்ப்பிறந்தாய்) ரூபப்ரகார வ்யவஸ்திதங்களான ஸகலஜங்மங்களிலு மவதீர்ணனானவனே யித்யர்த்தஃ. திருவிருத்தம் முதற்பாட்டு, "பொய்ந்நின்ற" இத்யாதி.

"ஊர்ந்த" என்ற பூதநிர்த்தேசத்துக்கு பாவம் (ஊருகிறவித்யாதி) புறம்பேயிருக்கிற சகடமிவன் சயிக்கிறவுள்ளே யிருக்கைக்கு ஹேதுவேது, அதூருகைக்கு ப்ரஸக்தியேது, அசேதநமானவதுதானூரக் கூடுமோவென்ன (இரண்டுசகடத்தை யித்யாதி) வளர்த்திப்போனாள் - கண்வளர்த்திப்போனாள். பாடிகாப்பார் - க்ராமரக்ஷகர், தலையாரிகளென்றபடி. அசுரர்களதிலே யாவேசித்து வருகைக்கு ஹேதுவேதென்ன (அசேதநமானவித்யாதி) "தானனவேஷத்தோடே வரிலாராய்ச்சிப்படும்" என்று, தெரியாதபடி யிதிலே யாவேசித்து வந்தார்களென்றுகருத்து. "பாதத்தன்" என்று - பாதத்துக்கு நிரூபகத்வம் சொன்னதுக்குபாவம் (அதுவுமித்யாதி) (அடிகாத்தென்றது) சாடு; ப்ரதிபதம். "உதைத்த" என்று - ஏதத்கர்த்ருகமாயிருக்க, "திருவடிகளினுடையவவதாநத்தாலே" என்கிறபடியென்னென்ன (முலைவரவித்யாதி) இத்தால் - அபுத்திபூர்வக வ்யாபாரமென்றபடி. முலைவரவுதாழ்த்துச் சீறினதுக்கு ப்ரமாணம் (ஸ்தந்யார்த்தீத்யாதி) "கதாசிச்சகட...

... (கதாசிச்சகடஸ்யாதஸ்ஸயாநோமதுஸூதநஃ। சிக்ஷேபசரணாவூர்த்வம் ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ। தஸ்யபாதப்ரஹாரேணஶகடம்பரிவர்த்திதம்) இதிபஞ்சமேம்ஶே. திருவடிகளவனுடைய வநிஷ்டத்தைப் போக்கினமையைச்சொன்ன வித்தால் பலிதம் (நமக்கித்யாதி) நம்மநிஷ்டங்களையும் போக்கித்தரும் - நமக்கநிஷ்டங்களைப் போக்குகிறவனுடைய வநிஷ்டங்களைப் போக்கினவழியாலே நம்மநிஷ்டங்களையும் போக்கித் தருமென்றபடி.

மேலுக்கவதாரிகை (ஶகடாஸுரேத்யாதி) யத்வா, பூதநாநிரஸநம்முந்தினதாயிருக்க, அத்தை ஶகடாசுரநிரஸநாநந்தரம் சொல்லுவானென்னென்ன (ஶகடாஸுரேத்யாதி) என்னுதல். அதாவது - உத்தரோத்தராதிகபாதகங்களை நிரஸித்திடுபடுத்தினபடியாலே, ஶகடாபேக்ஷயாதிக பாதகமாயிருக்கிற பூதநா நிரஸநத்தைப் பின்பருளிச்செய்கிறானென்றபடி. பூதனை "அத்யந்தபாதகை" என்றுதோற்றியிருக்குமளவன்றிக்கே, அவளால்வந்த பாதகத்வ மபரிஹார்யமென்கிறார் (ஶகடமித்யாதி) ஈன்றாரே - பெற்றவர்களே. (ஈன்றாரேநஞ்சிட்டாற்போலே) என்கிற விடத்திலே- 'வித்யாவிநயாவாப்தி...' (வித்யயாவிநயாவாப்திஸ்ஸாசேதவிநயாவஹா। கிம்குர்மஃ கஸ்யவாப்ரூமோகரதாயாம் ஸ்வமாதரி" என்றதநுஸந்தேயம். முழுசினவாறே - முட்டினவாறே. "சார்ந்து"- (முழுசி) பழுப்பு - சிவப்பு, அம்ம

தம்பண்ணியுண்டதுக்கு ப்ரமாணம் ( மழலையித்யாதி ) இது பெருமாள் திருமொழி ஏழாந்திருமொழி யேழாம்பாட்டு, "குழகனே" இத்யாதி. ( மழலை ) இத்யாதிக்கர்த்தம் - வாயிலே முலையிருக்கச்செய்தே, முலை சுரக்கும்படியாக வென்முகத்திலே யிடையிடையிலே மழலைச் சிரிப்பாகச் சிரியாவென்று. "சுவைத்த" என்றதுக்கு ப்ரமாணம் ( உயிரைவற்றவித்யாதி ) ப்ராணனைப் பாலோடொக்க வற்றும்படியாக புஜித்தவாயையுடையவனித்யர்த்தஃ. திருமொழி * முற்றமூத்திலே.

"நிறை" என்று-அடக்கமாய், ஸ்த்ரீகளுக்கஸாதாரண தர்மமாகையாலே, அத்தைக்கொள்கை-ஸ்த்ரீத்வத்தை முடிக்கையென்றுபலிப்பது ; அத்தையருளிச் செய்கிறார் ( ஒருவ்யாபாரத்தாலேயித்யாதி ) ஒருவ்யாபாரத்தாலே-பேய்முலை சுவைக்கையாலே. "இரண்டு ஸ்த்ரீவதம்பண்ணினான்" என்கைக்கு, பூதனையை முடித்தாற்போலே தன்னைமுடிக்கவில்லையே ; அடக்கத்தைக்கொண்ட வளவன்றோ வென்ன ( தன்னையித்யாதி ) விவரணம் ( அவளையித்யாதி ) "ஊர்ந்தசகடம்" இத்யாதியையுங்கூட்டிக்கொண்டு, "நிறை" என்றதுக்கு-சாகல்யபரமாக வர்த்தாந்தரம் ( அவனுடையவித்யாதி )

இழக்கலாவதொன்றோ-இழக்கததக்கதோவென்றபடி. பேர்ந்தும் பெயர்ந்தும்-போயும்வந்தும். அதாவது-விஶ்லேஷித்தும் ஸம்ஶ்லேஷிததும் ; அவனோடன்றி யோர்சொல்லிலேன்-அவனோடு சம்பந்தியாம லொருவார்த்தையுடையேனல்லேனித்யர்த்தஃ. அதாவது-சம்ஶ்லேஷித்தபோதோடு விஶ்லேஷிததபோதோடு வாசியற வவனையொழிய வெனக்கொருவார்த்தை யில்லையென்றபடி. இத்தால்பலிதம் - சம்ஶ்லேஷதசையிலும் விஶ்லேஷதசையிலு மவனைமறக்கபபோகாதென்று, மறக்கச் சொல்லுகிறவளைக்குறித்து, "விஶ்லேஷதசையிலே மறக்கப்போகாது" என்னுமிவ்வளவே சொல்லவமைந்திருக்க, "பெயர்ந்தும்" என்று-சம்ஶ்லேஷதசையிலும் மறக்கப்போகாதென்று சொல்லப்ரசக்தியேதென்ன ; த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் ( மறக்கையாவதித்யாதி ) அதாவது, மறக்கையாகிறது-இதரவிஷய ஸ்மரணமாகையாலே, அநுபூதவிஷயததை மறக்கையும்-இதரவிஷயத்தை ஸ்மரிக்கையிலேயொன்றாகவேணும் ; அப்படி இதரவிஷய ஸ்மரணரூபமான விஸ்மரணம் சம்ஶ்லேஷதசையி லில்லாதவோபாதி, விஶ்லேஷதசையிலுமில்லையிறே ; அதுண்டாகவேணுமே நானறியிருக்கைக்கென்று - இவ்வாக்யத்துக்குக்கருத்து. அப்படிசம்ஶ்லேஷதசையிற்போலே விஶ்லேஷதசையிலும் மறக்கப்போகாதோவென்ன ; சம்வாதம் ( ஏதுசெய்தாலித்யாதி ) எத்தைச்செய்தால் மறக்கலாம் ; கூடினால்தான் மறக்கலாமோ, மறக்கலாமாகில் கூடித்தான்பார்ப்போமென்றபடி. திருமொழி ஒன்பதாம்பத்து மூன்றாந்திருமொழி மூன்றாம்பாட்டு. "விஶ்லேஷாவஸ்த்தையில் மறக்கப்போகாது" என்னாதே, "ஏதுசெய்தால்மறக்கேன்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (நாட்டாரொன்றுதொடங்கி, கூடித்தான்பார்ப்போமோ மறக்கலாமாகிலென்னுமளவும ) கலந்தவிஷயத்தினுடையவும் பிரிந்தவிஷயத்தி னுடையவுமென்றது-கலந்தவிஷயமென்றும் பிரிநதவிஷயமென்று மிரண்டில்லாமையாலே, கலந்து பிரிந்தவிஷயத்தினுடையவென்றபடி. தடஸ்த்தசங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் ( கூடினாலுமித்யாதி ) "பேர்ந்தும்பெயர்ந்தும்" இத்யாதிக்கு-விலக்ஷண விஷயமாகையாலே சம்ஶ்லேஷசமயத்திற்போலே விஶ்லேஷசமயத்திலும் மறக்கப்போகாதென்றொரு தாத்பர்யம் கீழேயருளிச்செய்து, சம்ஶ்லேஷதசையோடு விஶ்லேஷதசையோடுவாசியற நீயவனுக்கு ஸ்மாரிகையானவழியாலு மவனைமறக்கப்போகாதென்று தாத்பர்யாந்தரம் ( அவனைமறவித்யாதி ) அன்றிக்கே, "ஓர்

சொல்லிலேன் " என்னாதே, " அவனோடன்றி " என்று விசேஷித்ததுக்கு பாவமாதல். அதாவது - " கலவியிலவனோடின்னே, பிரிவிலவனைமற " என்றிறே நீசொல்லுவது ; " அவனைமற " என்றுசொன்னது மவனுக்குஸ்மாரகமா யிருக்குமென்றபடி.

விவரணம் ( நாமிவளையித்யாதி ) இவளை-நாயகியை. இவள்-நாயிகை. ( உக்தியைவிட்டிவள் நெஞ்சைக்கண்டாள் ) " அஹ்ருதயோக்தி " என்றுதோழிநெஞ்சையறிந்தாளென்றபடி. ( தீர்ந்தவென்தோழி ) என்கிறுளென்று கூட்டுவது. நீநீயாம்படியே யிருந்தாயென்றது-எனக்குநாயகன்விஷயத்தில் ப்ராவண்யமுனக்கபிமதமாம்படி யிருக்கையிறேஸ்வரூபம், ஆகையாலே நீநீயாம்படியே யிருந்தாயென்றபடி. வரவிரு-வந்திரு. முந்தற வெறுத்திருந்தவள், பின்பாநுகூல்யத்தை யறிந்து கொண்டாடினதுக்கு த்ருஷ்டாந்தம் ( ராவணனித்யாதி ) கொண்டாடினபடியைக் காட்டுகிருர் ( அர்ஹஸேசேத்யாதி ) " [illegible] " ( யத்யபிப்ரேஷிதஸ்தோராமேணவிதிதாத்மநா ) இத்யுத்தரார்த்தம், சுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதிஸீதா. " [illegible] " ( ஸமாத்வாதஸதத்ராஹம்ராகவஸ்யநிவேஸநே ı புஞ்ஜாநாமாநுஷாந்போகாந்ஸர்வகாமஸம்ருத்திநீ ) இதிசதத்ரைவ. " [illegible] " ( மயாஸமபிபாஷிதும்-அர்ஹஸே ) என்றதுக்குபாவம் (சகீபிரித்யாதி) அதாவது-பெருமாள் " தோழிமாரோடேயிரு " என்றருளிச்செய்த தோழிமாரோபாதியாயிருந்தாய் நீயென்றபடி. அவர்கள்படியாய்-தோழிமார்படியாய். " [illegible] " ( ஸம், அபி ) என்கிற உபசர்க்கார்த்தம் ( சமாத்வாதசேத்யாதி ) என்கிறதும்-என்கிறாஹஸ்யமும். உன்னோடே-திருவடியோடே. " தீர்ந்தவென்தோழி " என்னும்படியானவிவள் " பழிக்கஞ்சவேணும் " என்பாளென்னென்ன ( அத்தோழிதானமித்யாதி ) " தீர்ந்தவென்தோழி " என்றிவளிப்படி கொண்டாடினவாறே, " என்னைக்கொண்டாடுகிறதுகொண்டுகார்யமென், ஊரார்பழிசொல்லுகிறுர்களே " என்ன என்றிவ்வளவு மவதாரிகையாகக்கொண்டு, அவள்சொன்னதுக்குத்தரம் ( என்செய்யுமூரவர்கவ்வையென்று ) இதுக்கர்த்தம் - ஊரார்பழிகொண்டு கார்யமென்னென்று. " ஊரவர்கவ்வை-என்செய்யும் " என்கையாலேபலிதம் ( ஆகிலுனக்கித்யாதி ) இப்படியேகாண்-இப்படியோகாணித்யர்த்தஃ. தீர்ந்தவென்தோழி - என்னோடொருநெஞ்சாம்படி யறுதியுடையதோழி. கவ்வை-பழி. " [illegible] " ( ஸகீபிஸ்ஸஹகமாஸ்வ ) என்கிறதுக்காகரம் கண்டுகொள்வது.

ஊர்ந்தவித்யாரப்ய, தீர்ந்தவென்தோழி - ஊரவர்கவ்வை - என்செய்யு மித்யந்வயஃ.....................................................................................*

## நான்காம்பாட்டு.

ஊரவர்கவ்வையெருவிட்டன்னைசொன்னீர்படுத்
தீரநெல்வித்திமுளைத்தநெஞ்சப்பெருஞ்செயுட்
பேரமர்காதல்கடல்புரையவிளைவித்த
கார்மர்மேனிநங்கண்ணன்றேழிகடியனே.

## ஆறாயிரப்படி.

(ஊரவர்கவ்வை) "இப்படி தன்னைப்பிரிந் தத்யந்தமவஸந்நையா யிருக்கச்செய்தே, தன்னுடையலோபத்தாலே தன்னையுனக்குக்காட்டித் தாராதேயிருக்கிற வவனையாசைப்படுகிறதுதானென்" என்று தோழி சொல்ல; ப்ரதிபந்தகஶதஸஹஸ்ரங்களுளவாயிருக்கச்செய்தே, அவற் றையே வர்த்தகமாகக்கொண்டு தன்றிருவடிகளிலே நிரவதிகமான வபிநி வேஶத்தை யெனக்குவிளைவித்த காரமாமேனி நங்கண்ணனையே! தோ ழீ லுப்தனென்று சொலலுகிறதென்கிருள் ........... .................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தன்பக்கலிலே யபிநிவேசத்தைவளரும்படி க்ருஷிபண்ணின வுபகாரஶீலனை, அநுபகாரகனைப்போலே குறையச்சொல்லக்கடவையோவென்று; தன்னைமீட்கைக்காக அவனை யியற்பழித்ததோழியைக்குறித்துச் சொல்லுகிருள்.

ஊரவர்-ஊரார். கவ்வை-அலராகிற. எரு - எருவை. இடு-இட்டு. அன்னை-தாயாருடைய. சொல்-நிரந்தரஹிதவசநமாகிற. நீா-நீரை படுத்து-நிறுத்தி. ஈரம்-ஆசையாகிற. நெல்-நெல்லை. வித்தி-விதைத்து. முளைத்த - அநுமுளைத்த. நெஞ்சம்-நெஞ்சமாகிற. பெரும்-பெரிய. செய்யுள்-விளைநிலத்துக்குள்ளே. பேர்-மிகவும்பெருத்து. அமர்-ஊர்ப்பூசலையுடைத்தான. காதல் - அபிநிவேஶத்தை. கடல்புரைய-கடல்போலேஸம்ருத்தமாக. விளைவித்த-பலிக்கும்படிபண்ணின. கார்-வர்ஷுகவலாஹக ஸ்வபாவத்தை. அமர்-உடைத்தான. மேனி-திருமேனியையுடையனாய். நம்-நமக்குப வ்யனான. கண்ணன் - க்ருஷ்ணனை. தோழி - முன்பவன்குணத்தைச்சொல்லிமூட்டின தோழீ. கடியனே-இன்றவன், குறைசொல்லி யியறபழிக்கும்படி கடியனானனே.

பேரமர் - பெரியவமர்த்தியுமாம் .. ........ .. .. .. . .......................*

## ஈடு - நான்காம்பாட்டு.

"என்செய்யுமூரவாகவ்வை" என்றுள; ஊராாசொல்லும்பழி யேயாய், அவன்றான் நமக்குடலானனே அவர்கள்சொல்லுமபழிபொறுத்திருக்கைக்கு; ஆனபின்பு அவன்கடியன்காணென்றுள்; ஏதேனுமொன்றைச்சொல்லியாகிலும் மீட்கவேணுமே அவளுக்கு, "அவன்நிர்க்ருணன்காண்" என்ன; "கெடுவாய்நீசொல்லும வாாத்தையேயிது, அவன் நமக்கென்னகுறைசெய்தான்" என்ன, "ஊரவர்பழிசொலவிலும்மீளாதபடியான ப்ராவண்யமுண்டானவிடத்திலும் இத்தசையில்வந்து முகங்காட்டிற்றிலன்கண்டாயே" என்ன; அவனிப்போதுவந்து முகங்காட்டிற்றிலனாகிலும், தான் முகங்காட்டாதபோதும் தன்னையொழிய நமக்கு மற்றொன்றால் பொருந்தாதபடிபண்ணினனே!, அவன்செய்தபடி பொ ல்லாதோவென்கிருள்.

(ஊரவரித்யாதி) இதெல்லாம்செய்தாய்நீயோ. ப்ராதிகூல்யநிவ் ருத்தியுண்டானவன்றுதொடங்கி ஊரவர்பழிசொல்லத் தொடங்கினார்க

ள்காணும் [ விபீஷணஸ்துதர்மாத்மா ] [ விபீஷணஸ்துதர்மாத்மா ] என்றார்களிறே தங்களைவிட்டுப்போருவதற்குமுன்னே; இவனிக்குடியிலுள்ளார்படியல்லன், இவனுக்குவாசியுண்டு; அந்தவாசிதன்னைச்சொல்லுகிறது [தர்மாத்மாவென்று] "மறக்குடியறஞ்செய்யக்கெடும்" என்றதிறே; [ நதுராக்ஷஸசேஷ்டிதஃ ] [ நதுராக்ஷஸசேஷ்டிதஃ ] ஜாதிமாத்ரமே இவன்பக்கலுபஜீவிக்கலாவது. ஊரார்சொல்லுகிறபழியை இவளுடையப்ரேமத்துக்கெருவாகஇட்டான். ஊரார்பழிசொல்லிற்றிலர்களாகில், இவள்தானும் கைவாங்கியிருக்குங்காணும்; இவள் " மறப்பேன் " என்னுமன்றும், மறக்கவொண்ணாதபடி யூரார்ஸ்மாரககோடியிலே நிற்பர்களாயிற்று. (அன்னையித்யாதி) தாயாருமிதுக்குமுன்பெல்லாம், " என்மகள் " என்றேயிருந்தாள், ஊரார்பழிசொல்லப்புக்க பின்பாயிற்று இவளறிகிறது. அன்னைசொல்லுண்டு – தாயாருடையஹிதவசநம், அத்தைநீராகப்பாய்ச்சி. எருவாவது அடியிலே யொருகாலேயிட்டுவிடுவதிறே, நீர்மாறாமல் பாய்ச்சவேணுமே; ஊராரொருகால் பழிசொல்லிவிடுமித்தனையே, தாயாரகத்துக்குள்ளேயிருந் தெப்போது மொக்கஹிதஞ்சொல்லாநிற்குமிறே. (ஈரநெல்லித்யாதி) சங்கமாகிறநெல்லைவித்தி. இவள், சங்கமிருக்கும்படி வ்யுத்பத்திபண்ணிற்று மிவ்விஷயத்திலேயாயிற்று; "முலையோமுழுமுற்றும்போந்தில – பெருமான் மலையோதிருவேங்கடமென்று கற்கின்றவாசகமிவள்பரமே" என்று – பால்யாத்ப்ரப்ருதிவேறொன்றறியாள். புறம்பேசிலவிஷயங்களிலே சங்கமுண்டாய் விரக்திபிறக்கவேண்டாவாயிற்றிவளுக்கு. ஸ்வவிஷயஜ்ஞாநத்துக்குகாரகமான மூலசுக்ருதமுமவன்றானேயாயிற்று. (முளைத்த) எருவுமிட்டு நீரும்பாய்ச்சினாலும் முளைக்கும்போதும் அங்குரசக்தி யுண்டாம்போதும் அவனுண்டாக்கவேணுமே; [சரீராரோக்யமித்யாதி] சுகசாதநங்களையுஞ்சொல்லி, அவற்றுக்குப் பலமானசுகந்தன்னையும் தனித்துச்சொல்லி, இரண்டுக்குமவன்கடாக்ஷம்வேணுமென்றதிறே. சிறியத்தைப் பெரியது நலியுமாபோலே, ஒருவன்பண்ணின சுக்ருதத்தினுடையபலத்தை வேறொருவன்பறித்துக்கொள்ளாமே, அவன்றானேபுஜிக்கும்படி பண்ணும்போது மவன்கடாக்ஷம் வேணுமே. (நெஞ்சப்பெருஞ்செய்யுள்) சம்ச்லேஷவிச்லேஷங்களாலே புடைபடுத்தி, நித்யவிபூதியோபாதி பரப்புடைத்தாம்படி பெருக்கினையிற்று. நெஞ்சமாகிறபெரியசெய்யிலே. ஊராரலராகிற யெருவையிட்டு, தாயாருடைய நிரந்தரஹிதவசநமாகிறநீரைநிறுத்தி, ஆசையாகிறநெல்லை வித்திமுளைத்தநெஞ்சமாகிற பெரியவிளைநிலத்துக்குள்ளே. ( பேரமரித்யாதி ) ஊரார்சொல்லும்பழிக்கும் தாயாருடைய ஹிதவசநத்துக்கும் மீளாதபடியானகாதலாயிற்று. இங்கே " கடல்புரைய " என்றது, "கடலில்மிகப்பெரிதால்" என்றுநின்றது, "அதனில்பெரியவென்னவா" என்று–ஈச்வரன்றன்னை விளாக்கொலைகொள்ளும்படியான காதலென்றது; ஆக, * பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும் வரவினைத்துக்

கொண்ட காரியமிதுவாயிற்று. கைங்காயத்துக்குப் பூர்வக்ஷணவர்த்தியா யிருக்குமிறே பரமபக்தி; அதுண்டாகவேணுமிறே அவ்வருகுபோம்போது, அங்கேபோகக்கொண்டு அங்குள்ளாரதொருபடியாயிவரதொருபடியாயிருக்கவொண்ணாதே. முதலிலே * மயர்வறமதிநலமருளினது தன்னையே யிவ்வளவாகப்பெருககிறாயிற்று. பெரிதாய் அமர்ந்த காதலாயிற்று. தர்மயநுபந்தியானகாதல. அன்றிக்கே, பெரியஅமளைவிளைக்கக்கடவதானகாதல். ஊாபபூசலேவிளைத்தகாதலிறே. * காமவேள மன்னுஞ்சிலைவாய் மலர்வாளிகோத்தெய்கிறகாதலென்னுதல். (ஈரம்-சங்கம். காதல்-காமம்.) " ஈரம் " என்றதுக்கும், " காதல " என்றதுக்கும்வாசியென்னென்னில்; " ஸங்காத்ஸஞ்ஜாயதேகாமஃ " ( ஸங்காத்ஸஞ்ஜாயதேகாமஃ ) என்று-அதிலேயோரவஸ்த்தாவிசேஷமிறே; பூாவாவஸ்த்தையைப்பற்ற, மேல்பிறக்குமவஸ்த்தாவிசேஷந்தான் த்ரவ்யாந்தரமென்னலாயிறேயிருப்பது. ( காரமர்மேனி ) அடியிலே எருவுமிட்டு நீரும்பாயச்சிறுவும், மேல்வர்ஷியாதாகில் அப்பயிர் தலைகுளிர்ந்திராதிறே; வடிவாலேயாயிற்று வர்ஷித்தது. வாஷுகவலாஹகமபோலே ஶ்ரமஹரமானவடிவு. ( நங்கண்ணன் ) வெறும்வடிவிற்பசைகண்டகப்படுமவளன்று, அகவாயில்தண்ணளியுமுண்டாக வேணுமாயிற்று. கருஷ்ணனென்றால " பெண்களுக்குசேஷபூதன் " என்றுபரசித்தமிறே. வடிவையும்தந்து தன்னையும்நமக்குத்தந்தக்ருஷ்ணன். ( தோழி ) நீதானாராயிவ்வார்த்தைசொல்லுகிறாய். இவ்விஷயத்திலே இபபடிபொருந்தவிட்ட நீயேமீடகப்பாாத்தாலும மீளாதபடியான ப்ராவண்யமுண்டாமபடிபண்ணினாகில், இனி அவனென்செய்வான். இரண்டுமுனக்கேபணியோ. " நீர்மையுடையவன் " என்று பொருந்தவிடுகையுமுனககே பணியாய், "நிாககருணன்" என்றகற்றப்பார்க்கையுமுனக்கோபணியாயோ! இருப்பது. முன்பு நீர்மையுடையவனுகச்சொல்லப்பட்டவன், என்று பழிககுமபடி கடியனானானே.........*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (ஊரவரித்யாதி) " என்செய்யுமூரவர்கவ்வை " என்றுகீழ்ப்பாட்டிற்சொன்னவநந்தரம், " கடியனே " என்கிறபிரிநிலையாலே-அவன்கடியனல்லாமையைச்சொல்லுகைககு ப்ரஸக்தியெது; அது தோழிசொன்னதுகொண்டென்னில், " தீர்ந்தவென்தோழி " என்று - இவள்ப்ராவண்யம் கண்டுகக்குமவள் " கடியன் " என் றுசொல்லுகைக்கடியெது; அவன்முகங்காட்டாதிருக்க, " கடியனல்லன் " என்றுசொல்லக்கூடுமோ; கடியனல்லாமையை சாதிக்கிறவிவள், அவன்முகங்காட்டாதிருக்க, ஊரார்பழிமுதலானவற்றாலே தன்பக்கல் ப்ராவண்யத்தைவிளைத்த விவ்வளவுமாத்ரத்தைச்சொல்லுகிறதுக்குக்கருத்தெது; என்கிற சங்கைகளின்மேலே யருளிச்செய்கிறார் ( என்செய்யுமூரவர்கவ்வையென்றாளித்யாதி ) இவ்வாக்யத்தால் -" அவன்கடியனல்லாமையைச்சொல்லுகைக்கு ப்ரஸக்தியெது " என்கிற சங்கைபரிஹாருதம். ( ஏதேனுமொன்றை ) இத்யாதிவாக்யத்தாலே - " இவள்ப்ராவண்யுங்கண்டுகக்குமவள் ' கடியன் ' என்கைக்கடியெது " என்கிறசங்கை பரிஹாரு

தம். (அவன்நிர்க்க்ருணன்காணென்னவென்றது) "அவன்கடியன்காண்" என்றதின்நிகமநம். நிர்க்க்ருணனென்றது - "கடியன்" என்கிறத்தோடேபர்யாயம். (கெடுவாய்) இத்யாதிவாக்யத்தாலே- உத்தரப்ரத்யுத்தரமுகேந அந்தநிர்க்க்ருணதையை த்ருடீகரிக்கிறார். (அவனிப்போதுவந்து) இத்யாதிவாக்யத்தாலே - "அவன்முகங்காட்டாதிருக்கச்செய்தே 'கடியனல்லன்' என்றுசொல்லக்கூடுமோ, ப்ராவண்யத்தைவிளைத்த விவ்வளவுமாத்ரத்தைச்சொல்லுகிறவிதுக்குக்கருத்தெது" என்கிறசங்காத்வயமும் பரிஹ்ருதம். (ஏதேனுமொன்றை) இத்யாதிவாக்யத்துக்கு- தோழிக்கிவள் ப்ராவண்யம கண்டுகெக்குமதுண்டேயாகிலும், "இவளுடைய வதிமாத்ரப்ராவண்யம் ஸத்தையையுமழிக்குமோ" என்கிற வதிசங்கையாலே சொல்லக் கூடுமென்று கருத்து.

* ஊரவர்கவ்வைதொடங்கி, "கடல்புரையவிளைவித்த" என்னுமளவுக்கும் பாவம் (இதெல்லாமித்யாதி)

விளையாக ரூபித்த ஸங்கத்துக் கநந்தரபாவியான வூரவர்பழியை, விளைப்பதற்குமுன்னே யிடக்கடவ வெருவாக ரூபிக்கலாமோவென்ன (ப்ராதிகூல்யேத்யாதி) அதாவது - ஸங்கமுண்டானது கண்டு பழிசொல்லுகிறதன்று, அவன்பக்கலத்வேஷமுண்டானதுகொண்டே பழிசொல்லுகிறார்க ளென்றபடி. (ப்ராதிகூல்யநிவ்ருத்திமாத்ரத்திலே பழிசொன்னாருண்டோவென்ன (விபீஷணஸ்த்வித்யாதி) "ப்ரவ்ருத்தநித்ரஸ்ஸஹஸா கும்பகர்ணோ மஹாபல: । விபீஷணஸ்து தர்மாத்மா ந து ராக்ஷஸசேஷ்டித:" (ப்ரவ்ருத்தநித்ரஸ்ஸஹஸாகும்பகர்ணோமஹாபல: । விபீஷணஸ்துதர்மாத்மாநதுராக்ஷஸசேஷ்டித:) இத்யாரண்யகாண்டேராமம்ப்ரதிசூர்ப்பணகா. இங்கு, தர்மாத்மாவென்று - ஹிம்ஸாதி ப்ராதிகூல்யநிவ்ருத்திமாத்ரம் சொல்லுகிறது. அஸப்தார்த்தம் (இவனிக்குடியிலித்யாதி) "தர்மாத்மா-ஸநாதநதர்மமான பெருமானை யாத்மாவாகவுடையவன்" என்றும்சொல்லுவர்கள். தர்மாத்மாவென்றால்-அதுபழியோவென்ன (மறக்குடியித்யாதி) மறக்குடி-கிராதவம்ஸம். அறம்-தர்மம். ஸப்தார்த்தம் (ஊராரித்யாதி) பழியெருவானபடி யெங்ஙனேயென்ன; பயிரொருவிலே வேரூன்றுமாபோலே ப்ராவண்யவர்த்தகமாகையாலேயென்கிறார் (ஊரார்பழியித்யாதி) விவரணம் (இவள்மறப்பேணித்யாதி)

தாயறிந்தபின்பு ஊராரறியவேண்டியிருக்க, ஊரார்பழியைத் தாயாருடைய ஹிதவசநமாகிறநீர பாய்ச்சுமதுக்குப் பூர்வபாவியான வெருவாகரூபிக்கலாமோவென்ன (தாயாருமித்யாதி) என்மகளென்றே யிருந்தாளென்றது - "மாத்ருகுணமன்றோபுத்ரியதும், ஆனபின்பு, என்னைப்போலேயிவளும் மர்யாதாதிக்ரமம்பண்ணாள்" என்றேயிருந்தாளென்றபடி. ஸப்தார்த்தம் (அன்னைசொல்லுண்டித்யாதி) அன்னைசொல்லை யெருவாகவும். ஊரார்பழியை நீராகவும் ரூபியாதொழிவானென்னென்ன (எருவாவதித்யாதி) அதாவது-அர்த்தஸ்வபாவத்தைப்பற்ற விப்படியே ரூபிக்கவேணுமென்றபடி. ஏதத்விவரணம் (ஊரார்ரித்யாதி)

சாமாக்யேந "ஈரம்" என்றாற்போராதோ, இன்னவிஷயத்தி லீரமென்று விசேஷிக்கவேண்டாவோவென்ன (இவள்சங்கமித்யாதி) வ்யுத்பத்திபண்ணிற்றும்-பரிசீலநம்பண்ணிற்றும். "ஈரநெல்வித்திமுளைத்த" இத்யாதிகள் * காரமர்மேனிக்கு விசேஷணமாகையாலே - இவ்விஷயத்திலே வ்யுத்பத்திபண்ணினது ஸ்புடம். உக்தத்துக்குப்ரமாணம் (முலையோவித்யாதி) யௌவநஸூசகமான முலையானவை மிகவும்முழுக்கத்தோற்றினவில்லை, ஸ்வாமியானவனுடையம்மையோ இரு

வேங்கடமென்று சந்தைசொல்லுவாரைப்போலே பலகாலுமப்யஸிக்கிறபாசுர மிவ ளுக்கிலிலே கிடப்பதொன்றே இத்யர்த்த8. திருவிருத்தம் அறுபதாம்பாட்டு. இத் தாலல்லாதாரில் வ்யாவ்ருத்தி ( புறம்பேயித்யாதி ) பகவத்விஷயசங்கத்துக்கடி சுக்ருதமாயிருக்க, " ஈரநெல்வித்தி " என்று -அவனைஹேதுவாகச் சொல்லலாமோ வென்ன ( ஸ்வவிஷயேத்யாதி ) இவர்க்கு மூலசுக்ருதமு மவனேயென்றபடி.

மேலும் மேனுமெல்லாமவன் க்ருஷியையருளிச் செய்கையாலே, "முளைத்த" என்றது-முளைப்பித்தவென்றபடி. சாதநமுண்டானால் சாத்யம்தன்னடையே சித்தி யாதோ, இவன் முளைப்பிக்கவேணுமோவென்ன ( எருவுமித்யாதி ) அங்குரஶக்தி - அங்குரிப்பிக்கும்ஶக்தி. " சாதகசம்பத்தியுண்டானாலும் சாத்யசித்தியவனதீநை " என்றதுக்குப்ரமாணம் ( சரீராரோக்யமித்யாதி ) " ஶரீராரோக்யமைஶ்வர்யம் போகாம்ஶ்சைவாநுஷங்கிகாந் । ததாதித்யாயதாம்பும்ஸாமபவர்க்கப்ரதோஹரி: " ( ஶரீராரோக்யமைஶ்வர்யம் போகாம்ஶ்சைவாநுஷங்கி காந் । ததாதித்யாயதாம்பும்ஸாமபவர்க்கப்ரதோஹரி: ) இதிபாகவதே. " ஶரீராரோக்யமைஶ்வர்யமரிபக்ஷக்ஷயஸ்ஸுகம் । தேவித்வத்த்ருஷ்டித்ருஷ்டாநாம் புருஷாணாம் நதுர்லபம் " ( ஶரீராரோக்யமைஶ்வர்யமரிபக்ஷஜயஸ்ஸுகம்।தே வித்வத்த்ருஷ்டித்ருஷ்டாநாம்புருஷாணும்நதுர்லபம் ) இதிப்ரதமேம்ஶே நவமே லக்ஷ்மீம்ப்ரதீந்த்ர:. இதுக்கர்த்தம் ( சுகசாதநங்களையுமித்யாதி ) பிராட்டிக்கு ஶ்வரனுக்குமுண்டான வபேதத்தைப்பற்ற, பிராட்டிவிஷயமானவிஶ்ஶ்லோக மி வ்விடத்துக்கு சம்வாதமாகக் குறையில்லை. சரீராரோக்யமைஶ்வர்ய மரிபக்ஷஜய: என்று-சுகசாதநங்கள், சுகமென்று-தத்பலத்தைச் சொல்லுகிறது. " சுகத்துக்கும வன்வேணும் " என்கிறநிபந்தநமேதென்ன ( சிறியத்தையித்யாதி )

அணுவானநெஞ்சை " பெரும்செய் " என்னலாமோவென்ன ( ஸம்ஶ்லே ஷேத்யாதி ) புடைபடுத்தி - விஸ்தரிப்பித்து. ஸப்தார்த்தம் ( நெஞ்சமாகிறவித் யாதி )

" பேரமர்காதல் " -பெரியதாய்ப்பொருந்தின காதலென்று, விவக்ஷித்தர்த் தம் ( ஊராரித்யாதி ) " கடல்புரைய " என்றால், " கடலில்மிகப்பெரிதால் " இ த்யாதியோடு விரோதியாதோவென்ன ( இங்கேகடலித்யாதி ) இத்தால் - * பொ ய்ந்நின்ற ஞானந்தொடங்கி * முனியேநான்முகனளவு முத்தரோத்தரம் பக்தியபி வ்ருத்தமாக விளைகையாலே விரோதமில்லையென்றபடி. இவ்வளவும் - * அதனிற் பெரியவென்ன வாவென்னுமளவும், * முனியேநான்முக னளவுமென்றபடி. " கட ல்புரைய " என்றது-உபலக்ஷணமென்றுகருத்து. இதுவாயிற்று-இப்பக்தியாயிற்று. அவன்க்ருபையை சாதகமாகப்பற்றின விவர்க்குபக்தியை விளைக்கிறதெதுக்கென்ன ( கைங்கர்யத்துக்கித்யாதி ) ஹேத்வந்தரம் ( அதுண்டாகவித்யாதி ) அங்கேபோ ளுலது ஆவஶ்யகமோவென்ன ( அங்கேயித்யாதி ) போகக்கொண்டு-போனாலென் றபடி. இப்போது விளைத்ததேதென்ன ( முதலிலேயித்யாதி ) சப்தார்த்தம் ( பெரி தாயித்யாதி ) அமரை-யுத்தகார்யமான பூசலை. இதிரண்டாமர்த்தம். முந்தினவர்த் தத்துக்கு, அமர்ந்தகாதல் - 'தர்ம்யநுபந்தியானகாதல்) அப்படி இவள்காதலூர்ப் பூசலைவிளைக்குமோவென்ன ( ஊர்ப்பூசலையித்யாதி ) ஊர்ப்பூசல்-ஊரார்சொல்லு ம்பழி. அமரென்று-யுத்தமாய், யுத்தத்தை விளைக்கிறகாதலென்று விவக்ஷித்து, மூ ன்றுமர்த்தம் ( காமவேளித்யாதி ) காமத்தைவிளைக்கும் மந்மதன் தன்னுடைய பொருந்தின சிலையிடத்துப்புஷ்பபாணங்களைத்தொடுத்தெய்கிற வித்யர்த்த8. எய்கிற

காதலென்றது-யுத்தத்தை விளக்கிறகாதலென்றபடி. இதுபெரிய திருமடலிலே. ஆக, "அமர்" என்றதுக்கு-பொருந்தியிருக்கையும், யுத்தகார்யமான பூசலும், யுத்தமுமென் றர்த்தத்ரயம்.

ஜிஜ்ஞாஸாப்ரச்நத்தை யநுவதித்துப்பரிஹரிக்கிறார் (ஈரமென்றதுக்குமித்யாதி) ஈரம் - ஸங்கம். காதல்-காமம். ஸங்கத்தினுடையவவஸ்த்தை காதலானால், "ஸங்கம், காதல்" என்கிற வ்யவஹாரங்கூடுகிற வழியென்னென்ன (பூர்வாவஸ்த்தையை யித்யாதி) "த்யாயதோவிஷயாந்பும்ஸஸ் ஸங்கஸ்தேஷூபஜாயதே । ஸங்காத்ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோऽபிஜாயதே" (த்யாயதோவிஷயாந்பும்ஸஸ்ஸங்கஸ்தேஷூபஜாயதே| ஸங்காத்ஸம்ஜாயதேகாம:காமாத்க்ரோதோபிஜாயதே) இதி கீதாயாம் த்விதீயே.

காரமர் - மேகத்தோடொத்த. பயிர்தலைகுளிர்ந்து- பயிர்தலைசெழித்து. மேகத்ருஷ்டாந்தமாகத் திருமேனியைச்சொன்னதுக்கு பாவம் (வடிவாலேயித்யாதி) அகவாயிலதண்ணளியும் - மநஸ்ஸில்குளிர்த்தியும். "கண்ணன்" என்றால் - தண்ணளிதோற்றுமோவென்ன (க்ருஷ்ணனென்றலித்யாதி) "நம்-காரமர்மேனி, நம்-கண்ணன்" என்று கூட்டிபாவம் (வடிவையுமித்யாதி) (கீதாஞராய்) இத்யாதி வாக்யாநந்தரத்திலே (இரண்டுமுனக்கேபணியோ) இத்யாதிவாக்யத்தை யநுஸந்தித்து, அநந்தரம் "கடியன்" என்றதுக்குபாவமாக (இவ்விஷயத்திலே) இத்யாதிவாக்யமநுஸந்தேயம். (இனி - என்செய்வான்) இனியென்னசெய்யவேணும். விவரணம் (நீர்மையித்யாதி) "கடியனே" என்ற ஏகாரம் - பிரிநிலையாய், அன்றே யென்றபடி.

க்ரமேணாந்வய:...... .. ....... .... .. .. ..·............................ .......*

# ஐந்தாம்பாட்டு.

கடியன்கொடியனெடியமாலுலகங்கொண்ட
வடியனறிவருமேனிமாயத்தனாகிலும்
கொடியவென்னெஞ்சமவனென்றேகிடக்குமெல்லே
துடிகொளிடைமடத்தோழியன்னையென்செய்யுமே.

## ஆறாயிரப்படி.

(கடியன்) நீசொன்னபடியேயவன்லுப்தன், நிர்க்ருணன், துஷ்ப்ராபன், வஞ்சகன், துரவகமஸ்வரூப ஸ்வபாவசேஷ்டிதன், மற்றும் சதஸஹஸ்ரதோஷங்களையுடையவனாகிலும், கொடியவென்னெஞ்ச மவனென்றேகிடக்கும், என்னே! ஒருநெஞ்சினுடைய வபிநிவேசமேயிது வென்று பிராட்டியருளிச்செய்ய; தோழியானவள், "இப்படியபிநிவேசிக்கையீடோ, அன்னைமார்பொடியில்செய்வதென்" என்ன; பிராட்டியாலே தக்ஷராயிருக்கிறநம்மை யெத்தைச்செய்வதென்கிறாள்.......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீயியற்பழித்தபடியே குணஹீநனாகிலும், என்னெஞ்சு என்னை யநந்யார்ஹமாக்கினவவனை யொழியவறியாதென்கிறாள்.

கடியன் - ஸ்வகார்யத்தி லெதிர்த்தலைபாராமல் ஶீக்ரப்ரவ்ருத்திபண்ணும் கடுமையையுடையனாய். கொடியன் - அக்காரியம் தலைக்கட்டினால் புரிந்துபாராமற்போம் கொடியவனாய். நெடிய-போகப்புக்கால் விலக்கவரிதாம்படிபெரிய. மால்-மேன்மையையுடையனாய். உலகம்-லோகமடங்க, கொண்ட-தன்னதேயாம்படி யெதிர்த்தலைக்கொன்று மொட்டாமலநந்யார்ஹமாக்கி. அடியன் - காற்கடைக்கொள்ளும் வஞ்சகனாய். அறிவு -“ஸ்வச்சந், க்ருத்ரிமந்” ( ஸ்வச்சந், க்ருத்ரிமந் ) என்று விவேகிக்க. அரு-அரிதாம்படி. மேனி-அழகாலேமயக்கும். மாயத்தனாகிலும்-ஆஶ்சர்யத்தையுடையவனேயாகிலும். கொடிய-லோகமர்யாதையன்றியே, குற்றஞ்சொல்லிமீட்கவரிதாம்படிகொடிதான. என்-என். நெஞ்சம்-நெஞ்சானது. அவனே-கீழ்ச்சொன்னஸ்வபாவவிசேஷங்களை யுடையவவனேதஞ்சம்.என்று-என்று.கிடக்கும்-கிடவாநிற்கும். எல்லே-தான்முற்பாடனாய் மேல்விழுகையாலும், புறம்புள்ள வுறவில் பற்றறுக்கையாலும், அதிசயித வ்யாமோஹத்தாலும், அநந்யார்ஹமாம்படி தன்காற்கீழே யிட்டுக்கொள்ளுகையாலும், நம்மளவிற்பண்ணினவுபகாரம் பரிச்சேதிக்கவரிதான வடிவையுடைய வாஶ்சர்யபூதனாகையாலும், இக்குணங்களையுடையவனென்று நினைத்திராநின்றது; எல்லே இதொருநெஞ்சின் ஸ்வபாவமிருந்தபடியே. துடி-துடியினழகை. கொள்-கொள்வதான. இடை-இடையையும். மடம்-மடப்பத்தையுமுடைய. தோழி-தோழீ. நீயிந்த ப்ரணயதாரையில் வாசியறியு மாபிருப்யாத்மகுணங்களை யுடையையாயிருக்க, நிஷேதித்தது தாயார் நியமநத்துக்கஞ்சியிறே, அன்னை-அவள். என்-எத்தை. செய்யும்-செய்வது,

எல்லேயென்பது-என்னேயென்றாய், ஆஶ்சர்யமாதல். தோழியை, எல்லேயென்று-சம்போதித்ததாதல். மால்-பெருமையும், வ்யாமோஹமும்................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

நீ “அவனுக்குநீர்மையில்லை, நிர்க்ருணன்” என்றாயாகிலும், அச்சொலவுக்கொரு ப்ரயோஜநமில்லைகாண், நீயவனுக்கு குணஹாநி சொல்லுவது என்னைமீட்கைக்காகவிறே, அதுவும் நானவனைப்பற்றுகைக்குறுப்பாகச்சொன்னாயானவித்தனை என்கிறாள்.

(கடியனித்யாதி) அவனுக்குக்குணஹாநிசொல்லும்போதும் நானே சொல்லவேணுங்காண்; நீமூட்டிக்கடக்கநின்றாயித்தனைபோக்கி, அவனைக்கலந்துட்புகநின்ற வென்றனைத்தெரியுமோ வுனக்கவனை; ஆனபின்பு அவைதன்னையும் நான் சொல்லக்கேளென்கிறாள். ( கடியன் ) கூரியன். கடுமை - கூர்மை. ஸ்வகார்யபரன். தனக்கொரு கார்யமுண்டானால், எதிர்த்தலையிலளவுபாராதே மேல்விழுந்துவந்து கலக்குமவன். ( கொடியன் ) தான் மேல்விழுந்துவந்து கலக்கச்செய்தே “பிரியேன்” என்னவல்லன். சம்ஶ்லேஷத்தினுடைய மத்யத்திலே பிரிவைநினைத்தவனிச்செய்யமாட்டாததொன்றுண்டோ. [ பேதைநின்

ளைப்பிரியே னினியென்றகன்றான் ] கலக்கச்செய்தே மற்றொன்றை நி
னைக்கவல்லவனுக் கினிச்செய்யவரியதொன்றுண்டோ. ( நெடியமால் )
மாலென்று - பெருமை. நெடுமையால் நினைக்கிறது - அதின்மிகு
தியையாய், அறப்பெரியவன். இத்தால் - கைபுக்கிருக்கச்செய்தேயு
மளவிடவொண்ணாதபடி யிருக்குமவனென்கை. "பிரியநினைக்கிறான்"
என்றறியாநிற்கச்செய்தேயும் "சேண்குன்றம்சென்று பொருள்படைப்
பான்கற்றதிண்ணனவு" என்னவொண்ணாதபடியாயிருக்கை. மேல்விழு
ந்துவந்து கலவாநிற்கச்செய்தே பிரியநினைத்தால், அத்தையறியச்செய்
தேயும், "நீபிரியநினைத்தாய்" என்று மடிபிடித்துக் காற்கட்டிவிலக்க
வொண்ணாதபடியாயிருக்கை. ( உலகங்கொண்டவடியன் ) பிறருடைமை
யைத்தனக்காக்க நினைத்தால், பின்னையுமவர்களுக்கோரடியும் சேஷியாத
படிபண்ணுமவன். அவர்களைப்பின்னை பாதாளத்திலேதள்ளுமவன். * பா
தாளங்கலவிருக்கைகொடுக்குமவன். ஒன்றைக்கொள்ளப்பார்த்தால், அ
வர்களுக்கொன்றும் சேஷியாதபடிகொள்ளுந் திருவடிகளையுடையவன்.
( அறிவருமேனி ) கிட்டினால், "இத்தலைக்கு சர்வஸ்வத்தையும் தரநினை
க்கிறானோ, சர்வஸ்வாபஹாரம்பண்ணநினைக்கிறானோ" என்றறியவொ
ண்ணாதபடியான வடிவையுடையவன். "என்னுடைய ஆத்மாத்மீயங்க
ளடைய நீயிட்டவழக்கு" என்பாரைப்போலே சொல்லியாயிற்றித்தலை
யி லாத்மாத்மீயங்களையபஹரிப்பது. தன்னையும் தன்னுடைமையையு
மிவளிட்டவழக்காக்கி, பின்னையாயிற்றிவளைத்தனக்காக்கிற்று. ( மாயத்த
ன் ) "நானுமென்னுடைமையும் நீயிட்டவழக்கு" என்றவிவ்வுக்தியை
யநுசந்தித்து அதிலே நெஞ்சபஹ்ருதமாயிருக்க, அவ்வளவிலே கண்
ணிலே மணலைத்தூவியகலவல்லவன். ( ஆகிலும் ) நீசொல்லிச்சொல்ல
மாட்டாதவையும், சிசுபாலாதிகள் சொல்லமாட்டாதவையுமெல்லாம்
நான்சொல்லவல்லேனிறே அவைவிடுகைக் குறுப்பாகப்பெற்றேனாகில்.
(கொடியவென்னெஞ்சம்) உல்லோகமாய் லோகவிஸஜாதீயமானநெஞ்
சு. நாட்டாருக்கு, குணம்பற்றுகைக்குப்பற்றாசாய் தோஷம்விடுகைக்கு
டலாயிறேயிருப்பது; அங்ஙனன்றிக்கே, குணஹாநிதானே பற்றுகைக்
குடலாம்படியான வென்னெஞ்சம். (அவனென்றேகிடக்கும்) இதுக்கு
ப்பிள்ளான் பணிக்கும்படி - "இத்தோஷங்களவனினவன்றோ" என்று;
அவன்கடியனென்றால், அவன்கடுமையிப்போதே காணவேணும்; கொ
டியனென்றால், அவன்கொடுமையிப்போதே காணவேணும்; அவன் து
ஷ்ப்ராபனென்றால், அவன்துஷ்ப்ராபனைபடியை யிப்போதேகாணவே
ணும்; அவன் சர்வஸ்வாபஹாரியென்றால், அவன் சர்வஸ்வாபஹாரம்
பண்ண, நானிழந்திருக்கக்காணவேணும்; அவன் துர்ஜ்ஞேயனென்றால்,
அவன் துர்ஜ்ஞேயதை இப்போதே யறியவேணுமென்றாம். அன்றிக்கே,
( அவனென்றேகிடக்கும் ) என்னெஞ்சுக்கு மாயாவாதருசி உண்டாகி
லுமறியேன். அதாவது-விசேஷணம்ஶத்தில் தாத்பர்யமின்றிக்கே விசே

ஷயத்துக்கவ்வருகறிகிறதில்லே. இத்தால்—அவன்குணநிபந்தநமன்று அவனோட்டை சம்பந்தம, சத்தாப்ரயுக்தமென்கை.

(எல்லே) என்னே! இதோராபீசர்யமிருக்கும்படியே. அன்றிக்கே, " உன்னை மீட்கநினைத்த நான்சொன்னபடியன்றிக்கே யொழிந்தபின்பு, இனிநீநினைத்தபடிநினைந்திரு " என்றுபோகப்புக்காள்தோழி; இங்ஙனேவாராய் என்று அவளைக்கையைப்பிடித்தழைக்கிறுளென்றுமாம். இவளிப்படிசொன்னவாறே, " இதொருப்ரேமஸ்வபாவமிருந்தபடியென் " என்று அவளுக்கொரு விகாரம்பிறந்தது; அத்தைக்கண்டு ( துடிகொளிடைமடத்தோழி ) என்கிறுள். துடியோடொத்திருந்துள்ள இடையையும், ஆத்மகுணத்தையுமுடையதோழீ. உன்வடிவுக்கும் குணத்துக்கும் என்பக்கலுண்டான பாவபந்தத்துக்குமீடாக வார்த்தைசொல்லப்பாராய். நான் அதறியாமலும் வேண்டாமையும் சொல்லுகிறேனோ, தாய்சொல்லுமதுக்கஞ்சிக்காண் நானிப்படி சொல்லுகிறதென்ன ( அன்னையென்செய்யுமே) உன்சொல் கேளாதநான், இனித் தாய்சசொலலோ கேட்கப்புகுகிறது.

வாக்யார்த்தாநந்தரோ நினைப்பது – அநசூயை பிராட்டியைப்பார்த்து " ஸ்த்ரீகளுக்கு தைவம் பர்த்தாவேகாணும " என்ன, அநந்தரம் பிராட்டி லஜ்ஜித்துக் கவிழதலேயிடடிருந்தாள் ; " நானிவர்பக்கல் ப்ரவணையாயிருக்கிற விருப்புக்கடி – பெருமாள்பக்கலுண்டானகுணத்தாலே, என்றிறே நாட்டார் நினைத்திருப்பது, தைவயோகத்தாலே அவர்க்குக்குணமுண்டான *வித்தனை போக்கி, குணஹீநருமாய் விரூபருமானாலும் நானவரை விடமாட்டாதே யிருக்கு மிருப்பைக் காட்டலாயிற்றிறே அவரைக்குணங்களோடு வ்யதிரேகித்துவைக்கப்பெற்றதாகில்'' என்றுளிறே. ஒருவிஷயத்திலே பாவபந்தமுறைத்திருப்பார் வார்த்தையாயிற்றிது [வேம்பின்புழுவேம்பன்றியுண்ணுது ] குணாதிகவிஷயத்தில் சொல்லுகிற வார்த்தையாகில், "கரும்பின்புழுக்கரும்பன்றியுண்ணுது" என்னவேண்டாவோவென்னில் ; " அவனுக்கிந்நன்மைக ளில்லேயேயாகிலும் நானவனை விடமாட்டேன் " என்கிற பாவபந்தத்தி லுறைப்புத்தோற்றும்படி வ்யதிரேகித்துச் சொல்லுகிறதல்லது, குணாதிகவிஷயத்தி லிதுண்டாயிட்டன்றிறே. என்ஸ்வரூபத்தைப்பார்த்தால் நானுன்னைவிடமாட்டேன், நீ நீயன்றிக்கேயிருந்தாலும் என்னால் விடப்போகாது ......................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (கடியனித்யாதி) கீழே, "கடியனே" என்று அநப்யுபகம்யவாதத்தாலே நைர்க்ருண்யத்தை பரிஹரித்து, இங்கே, " கடியன் - ஆகிலும் " என்று - அப்யுபகம்யவாதத்தாலே பரிஹரிக்கிறுளென்கிறுர் ( நீயவனுக்கித்யாதி ) ப்ரயோஜநமில்லாமையைக்காட்டுகிறுர் ( நீயவனுக்குக்குணேத்யாதி )

"கடியன்" என்று -.தோழிசொன்னமாத்ரத்தை யநுவதியாதே, "கொடியன்" என்றுதொடங்கி - அநேககுணஹாநி சொன்னதுக்கு பாவம் (அவனுக்கித்யாதி) என்னைப்பற்ற நீயறிந்தபடியென்னென்ன (நீமூட்டியித்யாதி)

"ஸ்வகார்யபரன்" என்றதுக்குவிவரணம் (தனக்கித்யாதி) எதிர்த்தலையிலளவு - எதிர்த்தலையில் மார்த்தவம். "கடியன்" என்றத்தோடே, "கொடியன்" என்றதும் - ஏகார்த்தமாகிலும் - பிரியவருளிச்செய்ததுகொண்டு வெறுப்பிலே தாத்பர்யபேதம் (தான்மேல்விழுந்தித்யாதி) "பிரியேன்" என்றது குணமாமத்தனையொழிய, குணஹாநியன்றேயென்ன (ஸம்ஶ்லேஷத்தினுடையவித்யாதி) அதாவது - "பிரியேன்" என்றதும் பிரிவைநினைத்தாகையாலே, அது குணஹாநியாமித்தனையென்றபடி. அப்படி கலக்கிறபோது "பிரியேன்" என்று சொல்லுமோவென்ன (பேதைநின்னையித்யாதி) முக்தையான வுன்னை யினிப் பிரியேனென்று வ்யதிரேகமுகத்தாலே பிரிவை ப்ரஸங்கித்து அகன்றுனித்யர்த்தઃ. இது "ஏதுசெயதால்மறக்கேன்மனமே" என்கிறபாட்டிலே, பூர்வமேவலிகிதம். இப்பாசுரத்துக்கு பாவமாதல், "ஸம்ஶ்லேஷத்தினுடைய" இத்யாதி வாக்யவிவரணமாதல் (கலக்கச்செய்தேயித்யாதி) மற்றொன்றை - பிரிவை. (செய்யவரியதொன்றுண்டோ) என்றதுக்குக்கருத்து - முகங்காட்டாதே யிருந்து முடித்தேவிடுமென்று.

தாத்பர்யம் (இத்தாலித்யாதி) அளவிட-தன்மேன்மையைப் பரிச்சேதிக்க. அளவிடவொண்ணாமையை வ்யதிரேக த்ருஷ்டாந்தஸஹிதமாகக்காட்டுகிறார் (பிரியநினைக்கிறானித்யாதி) (உம்பர்நம்பும்சேண்குன்றம்) இத்யாதிக்கு - தேவர்கள்விரும்புமுயர்ந்த சிகரத்தைச்சென்று கிட்டி யழியாப்பொருள்படைக்கைக்கறுதியிட்டசிக்கெனவென்றறிந்தோ மித்யர்த்தઃ. திருவிருத்தம் "காண்கின்றனகளும்" இத்யாதி. "கடியன், கொடியன்" என்கிற பதத்வயத்திலர்த்தத்தை யநுஸந்தித்துக்கொண்டு கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (மேல்விழுந்தித்யாதி) அதாவது - ஸ்ரீவைஷ்ணவர்களைத் தலைமகளுகச் சொல்லுகிற - "காண்கின்றனகளும்" என்கிற பாட்டிலே, திருமலை யுத்தேஶ்யமாகப்போகிற ஸ்ரீவைஷ்ணவர்களை "போகவொண்ணாது" என்று நிஷேதித்தாப்போலே, பெருமதிப்பனாகையாலே நிஷேதிக்க வொண்ணாதென்று கருத்து. மடிபிடித்து - நிர்ப்பந்தித்து.

இது குணமாயிருக்க, குணஹாநிசொல்லுகிற ப்ரகரணத்துக் கநுகுணமாக பாவம் (பிறருடைமையையித்யாதி) பாதாளத்திலே தள்ளினானேவென்ன (பாதாளமித்யாதி) பெரியாழ்வார்திருமொழி. கலவிருக்கை - ஓலக்கமிருக்கை. இத்தால் ப்ரக்ருதத்துக்கநுகுணமாகபாவம் (ஒன்றையித்யாதி) தன்பக்கல் நிறந்தொடக்கமானவை யொன்றும் சேஷியாதபடி யபஹரிக்கையாலே இப்படி சொல்லுகிறாளென்றபடி.

அறிவருமேனி - அறியவரியஸ்வபாவத்தை யுடையவன். அர்த்தசரீரமென்றால் - அர்த்தஸ்வபாவமென்றாப்போலே, மேனியென்றதும்-ஸ்வபாவம். சப்தார்த்தம் (கிட்டினாலித்யாதி) இதென்கொண்டுசொல்லுகிறாளென்ன (என்னுடையவித்யாதி) விவரணம் (தன்னையுமித்யாதி) ஆகிலும் - ஈத்ருஶதோஷ முண்டானாலும். பலிதமாதல், "ஆகிலும் - அவனென்றே கிடக்கும்" என்று கூட்டி பாவமாதல் (நீசொல்லியித்யாதி) அவை - தோஷங்கள்.

(உல்லோகமாய்) உல்லோசமாகையாலே லோகவிலக்ஷணஜாதீயமான நெஞ்சென்றபடி. லோகவிலக்ஷணஜாதீயத்வ மெப்படியென்ன (நாட்டாரித்யாதி) பிள்ளான்

நிர்வாஹத்துக்கு, இத்தோஷங்கள், "அவனென்றேகிடக்கும்" - (அவனினவன் றோ) அவனுடையவைகளன்றோ வென்றீடுபட்டுக் கிடக்குமென்றபடி. அதாவது - குணமுபாதேய மாகைக்கிடானஹேது, தோஷத்துக்கு முண்டிறேயென்கிறபடி. ப்ராப்தஸேஷிகதத்வேந, விஸேஷணங்களான தோஷங்களுமுத்தேஸ்யமென்று கருத்து. ஈடுபடுகையை யுபபாதிக்கிறார் (அவன்கடியனென்றுலித்யாதி) என்றும் - என்றுமாம். இரண்டாம்பக்ஷத்தில், "கடியன்" இத்யாதிவிசேஷணம்ஸத்தில் தாத்பர்யமின்றிக்கே, அவனென்றேகிடக்கும்-விசேஷ்யத்துக் கவ்வருகறியாதே கிடக்குமென்றபடி. த்விதீயநிர்வாஹம் நஞ்ஜீயரது. மாயாவாதருசியாவது - மாயாவாதிகளைப்போலே விசேஷணம்சத்தை யாதரியாதே விசேஷ்யரூப ப்ரஹ்மஸ்வரூப மாத்ரத்தையாதரிக்கை. உண்டாகிலுமறியேன்-உண்டோவறியேன்.

"எல்லே" என்றது-ஆஸ்சர்யமென்னுதல், வாராயென்னுதல். இதுக்கர்த்தம் (இதோராஸ்சர்யமித்யாதி) இதோராஸ்சர்ய மிருக்கும்படியேயென்றது-தோஷமுண்டாயிருக்கவு மவனைவிடாதே யிருக்கையைப்பற்ற. இவளிப்படிசொன்னவாறே யென்றது - "அவனென்றேகிடக்கும்" என்றுசொன்னவாறே யென்னுதல், "எல்லே" என்று சொன்னவாறேயென்னுதல். ஒருவிகாரம்-சரீரத்திலேதுவட்சி. துடி - வாத்யவிசேஷம். "மடம்" - (ஆத்மகுணம்) அதாவது - பவ்யதை. தாத்பர்யாந்தரம் (உன்வடிவுக்குமித்யாதி) உன்வடிவுக்கும் - ப்ரணயகதைகளறியுமுன் வடிவுக்கும். அதாவது - நீயு முன் நாயகனோடே ஸம்ஸ்லேஷித்து அத்தாலே துவண்ட விடையையுடையையாயன்றோ விருக்கிறு யென்றபடி. குணத்துக்கும் - பிறர் நோவுகண்டால் "ஐயோ" என்றிரங்குகைக்கிடான தயாதிகுணத்துக்கும். "தோழி" என்றத்தைப்பற்ற (பாவபந்தத்துக்குமென்றது) நானதறியாமலும் வேண்டாமையுமென்றது - என்வடிவும் குணமுமறியாமலும், உன்பக்கல் ஸ்நேஹமில்லாமையுமென்றபடி.

வாக்யார்த்தாநந்தரோ நினைப்பதென்றது-மேலே, (அநசூயை) இத்யாதிவாக்யங்களாற் சொல்லப்போகிறவர்த்தங்களை, "நான்பற்றுகைக் குறுப்பாகச்சொன்னுயானவித்தனை" என்கிறவடியி லவதாரிகா வாக்யத்துக் கநந்தரோ யநுசந்திப்பதென்றபடி, அப்போதைக்கு, "குணஹாநியுண்டானாலும், அதுவிடுகைக் குறுப்பன்றிக்கே பற்றுகைக்குறுப்பு" என்னுமதுக்கு சம்வாதம் (அநசூயையித்யாதி) என்றுவாக்யசங்கதியாகக்கடவது. "[Grantha] தம்பதி:" (ஸ்த்ரீணுமார்யஸ்வபாவாநாம் பரமம்தைவதம்பதிঃ) என்றத்தைப் பற்ற (ஸ்த்ரீகளுக்கித்யாதி) இதுக்குக்கருத்து-நீரவரழகிலே தோற்றுவந்தீரித்தனைபோக்கி, "[Grantha]" (ப்ராப்தஸேஷி) என்றுவந்தீரன்றிறேயென்று. "[Grantha]" (ப்ரதிபூஜ்யவசோமந்தம்ப்ரவக்துமுபசக்ரமே) என்றத்தைப்பற்ற (லஜ்ஜித்துக்கவிழ்தலையிட்டென்றது) நாட்டார்நினைத்திருப்பது - நீநினைத்திருப்பது. அநசூயையப்படி நினைத்திருந்தமைக்கு நியாமகம் - "[Grantha]" (அவருத்தம்வநேராமம்திஷ்ட்யாத்வமநுகச்சஸி) என்றது; திஷ்ட்யா - பாக்யவசேந. பாக்யமாவது-ராமசௌந்தர்யம். பிராட்டியருளிச்செய்தவித்தால் - பெருமாள் பக்கல் தமக்குண்டானப்ராவண்யம் குணக்ருதமன்றிக்கே ஸ்வரூபப்ரயுக்தமென்றதாயிற்று. "[Grantha]" (மமார்யேவ்ருத்தவர்ஜிதঃ) என்றத்தைப்பற்ற (குணஹீநருமாய் விரூபருமானாலுமென்றது) "[Grantha]

ஶ்லாக்ய:" (கிம்புநர்யோகுணஶ்லாக்ய:) என்றதுக்குப்ரதிகோடித்வேந பாவம் (அவரைக்குணங்களோடித்யாதி) உத்தரத்திலே (குணஹீநருமாய் விரூபருமானலும்) என்கையாலே - ப்ரஶ்நத்திலும், இவரழகிலே தோற்றுவந்தாயென்னுமது ஸித்தமிறே.

ப்ராப்தவிஷயகதமானலும் குணஹாநி பற்றுகைக் குறுப்பாமோ வென்ன (ஒருவிஷயத்திலேயித்யாதி) இதுவென்றது - வக்ஷ்யமாணப்ரமாணத்தை. "குணஹாநிபற்றுகைக்குறுப்பு" என்னுமதுக்கு ப்ரமாணாந்தரம் (வேம்பினித்யாதி) வேம்புக்கிட்டுப்பிறந்த புழுவானது வேம்பன்றியுண்ணாது, அப்படியே சேஷபூதனான நான் பின்னுமுன்திருவடிகளல்லது வேறொன்றைக்கிட்டேனித்யர்த்த:. திருமொழி பதினோராம்பத்து *மாற்றமுளவில் ஏழாம்பாட்டு. தடஸ்த்தஶங்கையை யநுவதித்துப்பரிஹரிக்கிறார் (குணதிகேத்யாதி) இந்நன்மைகளில்லையேயாகிலுமென்றது-*கடன்மல்லைக்கிடந்த கரும்பான தான் வேம்பாயிருந்தானேயாகிலுமென்றபடி. வ்யதிரேகித்துச்சொல்லுகிறது - போக்யதையைமாறுடி விரஸமாகச் சொல்லுகிறது. "அடியேன் நான்" என்றதுக்கர்த்தம் (என்ஸ்வரூபத்தையித்யாதி) "உன்சேவடியன்றிநயவேன்" என்றதுக்கு வ்யதிரேகார்த்தம் (நீயன்றிக்கேயித்யாதி) நிரதிசயபோக்யனான நீ விரஸனாயிருந்தாலுமென்றபடி.

எல்லேதுடிகொளிடைமடத்தோழி, கடியனித்யாரப்ய, அவனென்றேகிடக்கும்; அன்னையென்செய்யுமித்யந்வய:. அயோத்யாகாண்டே, "த்யக்த்வா ஜ்ஞாதிஜநம் ஸீதே மாநம்ருத்திஞ்ச மாநிநி । அவருத்தம் வநே ராமம் திஷ்ட்யா த்வமநுகச்சஸி" (த்யக்த்வாஜ்ஞாதிஜநம்ஸீதேமாநம்ருத்திஞ்சமாநிநி । அவருத்தம்வநேராமம்திஷ்ட்யாத்வமநுகச்சஸி) இத்யாரப்ய, "ஸ்த்ரீணாமார்யஸ்வபாவாநாம் பரமம் தைவதம் பதி:" (ஸ்த்ரீணாமார்யஸ்வபாவாநாம்பரமம்தைவதம்பதி:) இத்யநஸூயயோக்தா ஸீதா தாம்ப்ரத்யாஹ, "ஸா த்வேவமுக்தா வைதேஹீ த்வநஸூயா நஸூயயா । ப்ரதிபூஜ்ய வசோ மந்தம் ப்ரவக்துமுபசக்ரமே । நைததாஶ்சர்யமார்யாயா யந்மாம் த்வமநுபாஷஸே । விதிதம் து மமாப்யேதத் யதா நார்யா: பதிர்குரு: । யத்யப்யேஷ பவேத்பர்த்தா மமார்யே வ்ருத்தவர்ஜித: । அத்வைதமுபசர்த்தவ்யஸ் ததாப்யேஷ மயா பவேத் । கிம் புநர்யோ குணஶ்லாக்யஸ் ஸாநுக்ரோஶோ ஜிதேந்த்ரிய:" (ஸாத்வேவமுக்தாவைதேஹீத்வநஸூயாநஸூயயா । ப்ரதிபூஜ்யவசோமந்தம்ப்ரவக்துமுபசக்ரமே । நைததாஶ்சர்யமார்யாயாயந்மாந்த்வமநுபாஷஸே । விதிதந்துமமாப்யேதத்யதாநார்யா:பதிர்க்குரு: । யத்யப்யேஷபவேத்பர்த்தாமமார்யேவ்ருத்தவர்ஜித: । அத்வைதமுபசர்த்தவ்யஸ்ததாப்யேஷமயாபவேத் । கிம்புநர்யோகுணஶ்லாக்யஸ்ஸாநுக்ரோஶோஜிதேந்த்ரிய:) இத்யாதி..........................................................*

## ஆறாம்பாட்டு.

அன்னையென்செய்யிலெனூரென்சொல்லிலென்றோழிமீர்
என்னையினியுமக்காசையில்லையகப்பட்டேன்
முன்னையமரர்முதல்வன்வண்டுவராபதி
மன்னன்மணிவண்ணன்வாசுதேவன்வலையுளே.

## ஆறாயிரப்படி.

( அன்னை ) ஸ்வபாவதஏவநிரஸ்த ஸமஸ்தஸாம்ஸாரிகஸ்வபாவராய் அஸ்கலிதஜ்ஞாநரான சேஷசேஷாசந வைநதேயாத்ய ஸங்க்யேய பரமஸூரிகளாலே யநவரதபரிசரிதசரணயுகளனாயிருந்துவைத்து, அதிக்ஷுத்ரமநுஷ்ய ஸஜாதீயதயாவதீர்ணனாய் வண்டுவராபதித்திருநகரியிலே யாப்ரிதபரமஸுலபனாய்க்கொண் டெழுந்தருளியிருந்த ஸ்ரீவஸுதேவர்திருமகனுடைய கல்யாணகுணங்களாகிற வலையுள்ளேயகப்பட்டேன்; இனியென்னை யன்னையென்செய்யிலென், ஊரென்சொல்லிலென்; தோழிமீர், என்னையினியுமக்காசையில்லையென்கிறாள் ..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய ஆகர்ஷகமான ஸ்வபாவங்களிலே யகப்பட்டேன், என்னை நீங்களாசையறவமையுமென்று, திரளவந்ததோழிமாரைக்குறித்துச் சொல்லுகிறாள்.

தோழிமீர்-சமாநசுகதுஃகைகளானதோழிமீர். முன்னை - ப்ரதமஜரான. அமரர்-நித்யஸூரிகளுக்கு. முதல்வன்-ப்ரதாநனானமேன்மையையுடையனாய். வண்-நிரதிசயசம்பத்தையுடைய. துவராபதி-ஸ்ரீமத்த்வாரகைக்கு. மன்னன் - நிர்வாஹகனானநீர்மையையுடையனாய். இரண்டுமில்லாதவன்றும்விடவொண்ணாத, மணி-நீலரத்நம்போலே தர்ஸநீயமான. வண்ணன் - ஆபிரூப்யத்தையுடையனாய். வாசுதேவன்-அழகில்லையாகிலும் விடவொண்ணாத அநுரூபமான ஆபிஜாத்யத்தையுடைய வசுதேவதநயனானவனுடைய. வலையுளே - இப்படிநாலுபாடும்கண்ணியான ஆகர்ஷகசேஷ்டிதரூபமான வலைக்குள்ளேதப்பவொண்ணாதபடி. அகப்பட்டேன் - அகப்பட்டேன். இனி-ஆனபின்பு. என்னை-மீட்கவரியவென்னைப்பற்ற. உமக்கு-மீட்கநினைத்திருக்கிறவுங்களுக்கு. ஆசை-விதேயையாகவாசைப்படவேண்டுவது. இல்லை - இல்லை. ஆகையாலே, அன்னை-தாயார். என்-எது. செய்யில்-செய்யில். என்-என். ஊர் - ஊரவர். என்-எது. சொல்லில்-சொல்லில். என்-என்.

அவள்செய்யும் ப்ரியத்தோடு அப்ரியத்தோடுவாசியில்லை, அவர்கள்சொல்லும்குணத்தோடு தோஷத்தோடு வாசியில்லையென்று கருத்து......................*

## ஈடு - ஆறும்பாட்டு.

கீழ், " அன்னையென்செய்யும் " என்று – " நீசெய்கிறவித்தைப்பொறுள்கிடாய் " என்ன; அவள் பொறுதேசெய்வதென்னென்னுமளவிலே நின்றது. இதில்-நீயிப்படி வ்யவஸிதையானபடியறிந்தால், அவள் ஜீவியாள்கிடாயென்ன; அவள்ஜீவிக்கிலென், முடியிலென்னென்கிறாள், (அன்னை யென்செய்யிலென்) அவள்ஜீவிக்கிலென், முடியிலென்னென்கிறாள். [ गुरवः किंकरिष्यन्ति ] [குரவஃகிங்கரிஷ்யந்தி] முடியாதேயிருப்பார்க்கன்றோ வித்து பரிஹரிக்கவேண்டுவது. கையற்றார்க்கிது கொண்டு காரியமென்.

(ஊரொன்சொல்லிலென்) " தாயாருடையநாசமொருதலையாகவும் மீளாதபடியாய், இவள் நாயகனுடைய ஸௌந்தர்யாதிகளிலே ப்ரவணையானாள் " என்று ஊரார்பழிசொல்லுவர்கள்கிடாயென்ன (ஊரொன்சொல்லிலென்) அவர்கள்பழிசொல்லிலென், குணகீர்த்தநம்பண்ணிலென். * "கொல்லை" என்னுதல், "குணமிக்கனள்" என்னுதல், இத்தனையன்றோ அவர்கள்பழிசொல்லுவது.

( தோழிமீரித்யாதி ) " தாயென்செய்யிலென், ஊரொன்சொல்லிலென் " என்று நீங்கள் மேல்விழுந்தென்னை யிவ்விஷயத்திலே ப்ரவணையாக்குகையன்றிக்கே, " தாய்பிழையாள், ஊரார்பழிசொல்லுவர்கள் " என்றித்தைப் பழியாகச்சொல்லுமளவானபின்புங்களது. (என்னை) "தாய்வாயிற்சொற்கேளாள் தன்னாயத்தோடணையாள்" என்கிறபடியே, "தாயார்பிழையாள், ஊரார்பழிசொல்லுவர்கள்" என்றால் மீளாதபடி யிவ்விஷயத்திலே ப்ரவணையாயிருக்கிற வென்னை. (இனி) உங்கள்சொல்லும்கேளாதபடி கைகழிந்தபின். (உமக்கு) " இதுபழி " என்று மீட்கப்பார்க்கிறவளவிலே நிற்கிறவுங்களுக்கு. (ஆசையில்லை) இனியென்பக்கலுங்களுக்கு நசையறவமையும். (தோழிமீர்) இதுக்குமுன்பெல்லாம், "தோழீ" என்று-உயிர்த்தோழியொருத்தியையும்பார்த்து வார்த்தைசொல்லிப்போந்தாள்; இப்போதிவளுடைய வ்யவசாயாதிசயத்தைக்கண்டவாறே, " ஆளொருவார்த்தைசொல்லியாகிலும் மீட்கவேணும் " என்று ஆயவெள்ளமெல்லாம்திரண்டது; அத்தாலே-தோழிமீரென்கிறாள்.

(அகப்பட்டேன்) " இப்போது 'ஹிதம்' என்கிறபுத்தியாலே ஒருவார்த்தைசொன்னோமேயாகிலும், ஊரார்க்கும் தாய்மார்க்குமிவ்வருகே யெங்களுக்கொரு வாசிநினைந்திருக்கவேண்டாவோவுனக்கு" என்ன; அதப்படியே, அதில்குறையில்லை; என்னைக்கடல்கொண்டது காணுங்கோள் நானென்செய்வேனென்கிறாள். (முன்னையித்யாதி) " சிறியார், பெரியார் " என்று வாசியின்றிக்கே எல்லாரையுமொக்க ஆழப்பண்ணுங்கடலிலேயன்றோ நானகப்பட்டது. [ரூபௌதார்யகுணை:] [ரூபௌதார்யகுணை:] ரூபமென்கிறது-வடிவழகை. ஔதார்யமென்கிறது-அத்தை எல்லார்க்கு மநுபவிக்கலாம்படி ஸர்வஸ்வதாநம்பண்ணிக்கொண்டிருக்கை. குணமாவது-கொள்ளுகிறவனிலும் தாம் தாழநின்றுகொடுக்கும் சீலம். தன்மேன்மைதோற்றவிருந்துகொடுக்குமன்றாள்பற்றாதிறே; அதுக்காகத்தாழநின்றாயிற்றுத் தன்னைக்கொடுப்பது. [பும்ஸாம்] [பும்ஸாம்] அந்தஸௌந்தர்யமும் ஔதார்யமும் சீலமும் வயிரவுருக்காயிற்று, அபலைகள்படுமத்தை வன்னெஞ்சரையும் படுத்தவற்றாயிற்று. அன்றியே, "ப்ரக்ருதிபுருஷர்கள்" என்றாப்போலேயாய், அசித்விலக்ஷணரெல்லாரையுமீடுபடுத்தவற்றென்னவுமாம். [த்ருஷ்டிசித்தாபஹாரிணம்] [த்ருஷ்டிசித்தாப்ஹாரிணம்] கண்ணுக்குமநஸ்ஸுக்குஹாரம்வேண்டாதே,

கண்ணைப்பின்செல்லுமத்தனைநெஞ்சு. தாய்வேறு, கன்றுவேறாக்கும்வி ஷயமிறே. (முன்னையமரர்) "யத்ருஷய꞉ப்ரதமஜாயெ புராணா꞉" (யத்ருஷய꞉ப்ரதமஜாயேபுராணா꞉) என்னும்படி இருக்கிறவர்கள். (முத ல்வன்) நித்யஸூரிகளுக்கும் சத்தாஹேதுவாயிருக்கிற மேன்மையுடைய வன். நித்யாநுபவம்பண்ணுவார்க்கும் நித்யஸ்ப்ருஹாவிஷயமானவிஷய த்திலேயன்றோ நானகப்பட்டது. (வண்டுவராபதிமன்னன்) முதன்மை தோற்ற வோலக்கங்கொடுத்துக்கொண்டிருக்கிற, துறையல்லாதத்திலே யோநானிழிந்தது; பெண்களுக்குடம்புகொடுத்திருக்கிற நம் துறையி லேயன்றோ நானிழிந்தது. "பதினாறாமாயிரவர் தேவிமார்பணிசெய்யத் துவரையென்னுமதில் நாயகராகி வீற்றிருந்தமணவாளர் மன்னுகோயி ல்" என்னக்கடவதிறே. (மன்னன்) மேன்மைதோற்ற வோலக்கங்கொ டுத்துக்கொண்டிருக்கிறவிடமே நன்றாய்விட்டது நீர்மைதோற்றவிருக்கி றவிடத்தில் விழுகிறபிரம்புகளிற்காட்டில். (மணிவண்ணன்) அவ்விரண் டுமில்லையேயாகிலும் விடவொண்ணாததாயிற்றுவடிவழகு. ப்ரணயிநிது வக்குண்பது வடிவழகிலேயிறே. (வாசுதேவன்) வடிவழகில்லையேயாகி லும் விடவொண்ணாதாயிற்றுக்குடிப்பிறப்பு. [ஸ்நுஷாதஶரதஸ்யாஹம்] [ஸ்நுஷாதஶரதஸ்யாஹம்] பிராட்டி, தனக்குப்பேற்றுக்குடலாகநினைத் திருப்பது "சக்ரவர்த்திமருமகள்" என்னுமித்தையேகாணும். [ஶத்ருஸைந்யப்ரதாபிந꞉] [ஶத்ருஸைந்யப்ரதாபிந꞉] எங்கள்மாமனாருண் டாகில் எனக்கிவ்விருப்பிருக்கவேணுமோ; சத்ருக்களும் ஜீவிக்க, ஜீவித் தவரோவவர். (முன்னையமரரித்யாதி) அவனுடைய நைர்க்க்ருண்யத் தோடு நீர்மையோடு, ஊராருடையபழியோடு புகழோடு வாசியற்றாப் போலே, அவன்மேன்மையோடு சௌலப்யத்தோடு வாசியறவிரண்டு மாகர்ஷகமாயிருக்கிறதாயிற்றிவர்க்கு. (வலையுள்-அகப்பட்டேன்) அப் பொது வானதிலன்றிக்கே, அவனென்னைக்குறித்து நோக்கினநோக்கிலு ம் ஸ்மிதத்திலுமன்றோ நானகப்பட்டது. ஆழ்வார் திருவரங்கப்பெருமா ளரையர்வலையாக அபிநயித்துப்பாடாநிற்க, திருக்கண்களைக்காட்டி யரு ளினாரெம்பெருமானார்; "கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறு" என்னக் கடவதிறே. அநுகூலம்போலேயிருந்து தப்பாதபடி யகப்படுத்திக்கொ ள்ளும்நோக்கிலே யகப்பட்டேன்.........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறாம்பாட்டு (அன்னையித்யாதி) கீழே "அன்னையென்செய்யுமே" என்ற தக்கும், "அன்னையென்செய்யிலென்" என்றதுக்கும் பேதந்தோற்றவருளிச்செ ய்கிறார் (கீழன்னையென்செய்யுமித்யாதி) இது - பதாவதாரிகை. தோழிமாரெல் லாரும்வந்து "நீயிப்படிசெய்யில் தாயார்முடியும், அத்தாலேயூரார்பழிசொல்லுவ ர்கள்கிடாய்" என்ன; க்ருஷ்ணனுடைய ஸ்மிதவீக்ஷணாதிகளிலே யகப்பட்டேன், எல்லார்க்குமென்பக்கல் நசையறவமையுமென்கிறாளென்று பாட்டுக்கவதாரிகைக

ண்டுகொள்வது. (என்னுமளவிலேநின்றது-கீழன்னையென்செய்யுமென்று) என்றந்வயிப்பது.

இப்படிசொன்னபேருண்டோவென்ன ( குரவஇத்யாதி ) "தாயார்ஜீவிக்கிலென்முடியிலென்" என்கிறதுக்கு "குரவஃகிம்கரிஷ்யந்தி" ( குரவஃகிம்கரிஷ்யந்தி ) என்கிறவிது ப்ரமாணமானபடியென்னென்ன; குரவஃகிம்கரிஷ்யந்தியென்று - குருக்களையதிலங்கித்தபோதே, அவர்கள் தங்கள் ப்ரவ்ருத்தியடியாகஜனித்தாலுமத்தையுமநாதரித்திருப்பர்களென்று இப்படி தாத்பர்யம் விவக்ஷிதமாகையாலே, இவ்விடத்துக்கு ப்ரமாணமாகக்குறையில்லை, "கிம்கரிஷ்யந்தி" ( கிம்கரிஷ்யந்தி ) என்றதுக்குபாவம் (முடியாதேயித்யாதி) "தக்தாநாம்" (தக்தாநாம்) என்றபூதார்த்தத்துக்குபாவம் ( கையற்றூர்க்கித்யாதி ) "வாசுதேவன்வலையுள் அகப்பட்டேன், அன்னையென்செய்யிலென்" என்றதுவும், "விரஹாக்நிநா - தக்தாநாம்நஃ - குரவஃகிம்கரிஷ்யந்தி" ( விரஹாக்நிநா - தக்தாநாம்நஃ- குரவஃகிம்கரிஷ்யந்தி ) என்றதுவும்-ஏகார்த்தம்.

பழிசொல்லிலென் என்னாதே, "என்சொல்லிலென்" என்றதுக்குபாவம் (அவர்களித்யாதி) இத்தால் - பழியோபாதியவர்கள் குணகீர்த்தநமு மநாதரணீயமென்றபடி. "என்சொல்லிலென்" என்றால் - ( பழிசொல்லிலென் குணகீர்த்தநம்பண்ணிலென் ) என்று காட்டுமோவென்ன; ப்ரமாணகதநமுகேந உக்தார்த்தவிவரணம் (கொல்லையித்யாதி) வரம்பழிந்தாளென்று கர்ஹிப்பர்களோ, அதிவிலக்ஷணவிஷயத்தைபறிந்து மேல்விழும்படியான குணதிஶயத்தை யுடையவளென்று கொண்டாடுவர்களோ வித்யர்த்தஃ.

(சொல்லுமளவானபின்புங்களது) சொல்லுமளவு - உங்களது - ஆனபின்பு என்றந்வயிப்பது. அநந்தரம், உங்களுக்கென்பக்கலாசையில்லையென்று கூட்டிக்கொள்வது. ( தாய்வாயிலித்யாதி ) தாயானவென்வார்த்தைகேளாள், தன்தோழிமாருடன்சேரா ளித்யர்த்தஃ. திருமொழி அஞ்சாம்பத்து அஞ்சாந்திருமொழி நாலாம்பாட்டு. கீழெல்லாம் "தோழி" என்று - ஒருத்தியைச்சொல்லி, இங்கே-பலரைச்சொல்லுவானென்னென்ன ( இதுக்குமுன்பித்யாதி ) ஆயவெள்ளம் - தோழிசமூஹம்.

( ஒருவாசிநினைத்திருக்கவேண்டாவோ ) என்றதுக்கு - மீட்கையிலே நசைபண்ணவேண்டா என்னலாமோ, அல்லாதாரில் ப்ரியவிஷயமான வெங்கள்வார்த்தைகேட்கவேண்டாவோவென்றுகருத்து. "வண்டுவராபதிமன்னன்" என்றத்தையுங்கூட்டிபாவம் ( சிறியாரித்யாதி ) "முன்னையமரர்" என்றத்தைப்பற்ற ( பெரியாரொன்றது) ஆழப்பண்ணும் - அமிழ்த்தும். இத்தால் - யோக்யதையுடையாரோடு யோக்யதையில்லாதாரோடு வாசியறவீடுபடுத்தும் விஷயமென்கை. அப்படியெல்லாரையு மாழப்பண்ணுமோவென்ன ( ரூபௌதார்யேத்யாதி ) "சந்த்ரகாந்தாநநம்ராமமதீவப்ரியதர்ஶநம் । ரூபௌதார்யகுணைஃபும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" ( சந்த்ரகாந்தாநநம்ராமமதீவப்ரியதர்ஶநம் । ரூபௌதார்யகுணைஃபும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம் ) இத்யயோத்யாகாண்டே. ஆள்பற்றுதிறே - ஆள்கிடையாதிறே. "பும்ஸாம்" (பும்ஸாம்) என்று - புமான்களைச்சொல்லுதல், அசித்வ்யாவ்ருத்தரான சேதநரெல்லாரையுஞ்சொல்லுதல். த்விதீயார்த்தமிவ்விடத்துக்கபேக்ஷிதம். "பும்ஸாம்" (பும்ஸாம்) என்று விசேஷிப்பானென்,

ஸ்த்ரீகளையீடுபடுத்தாதோவென்ன (அந்தசௌந்தர்யமுமித்யாதி) ( வயிரவுருக்கு ) வயிரத்தைப்போலே கடிநமானஹ்ருதயத்தையுமுருக்கும். வயிரம்-வஜ்ரம். பலித ம் (அபலைகளித்யாதி) வன்னெஞ்சர்-கடிநஹ்ருதயர். சாவேந்த்ரியங்களும் ப்ரதாந மானமநஸ்ஸைப் பின்செல்லுகையாலே, சித்தத்ருஷ்டப்யபஹாரிணமென்னவேண் டாவோவென்ன ( கண்ணுக்கித்யாதி ) அதுக்குஹேதுவேதென்ன ( தாய்வேறித் யாதி ) கரணங்களுக்கு ப்ரதாநமாகையாலே, மநஸ்ஸை - தாயென்றும், மற்றைக் கரணங்கள் மநஸ்ஸைப்பின்செல்லுகையாலே, அவற்றை-கன்றென்றும் சொல்லுகி றதென்றபடி. இவ்வர்த்தத்துக்கு - “ [illegible] ” (அபஹாரிணம்) என்கிற திலேநோக்கு. ஸ்ரீபரதாழ்வானையும் கைகேயியையும் வேறுக்கிற்றிறே.

புராணனென்றது - புராபிநவாஃஎன்றுய், பகவதநுபவத்தில் க்ஷணந்தோறும் புதியரென்றபடி. முதல்வனென்றது - நித்யஸூரிகளுக்க பூர்வபோக்யனாயிருந்து அவர்கள்சத்தையை நிர்வஹிக்குமென்னுதல்; முதல்வனென்றது - ஆதியென்றுய், ஆதீயதஇத்யாதிஃ என்கிற வ்யுத்பத்தியாலே, நித்யஸ்ப்ருஹாவிஷயமானவனென் னுதல்.

முன்னையமரர் முதல்வனாயிருந்துவைத்து, வண்டுவராபதியிலே மன்னனா யிருக்கிறானென்று விவக்ஷித்தர்த்தம (முதன்மைதோற்றவித்யாதி) பெண்களுக்கு டம்புகொடுக்கையாலே வந்தவேறுபாட்டையுடையனாயிருக்குமதுக்கு ப்ரமாணம் (பதினாறுமாயிரவரித்யாதி) துவரை-த்வாரகை. “ மன்னன் ” என்றது-பெண்களுக் குமுகங்கொடுத்துக்கொண்டிருக்கையால்வந்த வேறுபாட்டையுடையவனென்றப டி. வண்டுவராபதிமன்னன் - நிரவதிகசம்பத்தையுடைய த்வாரகைக்குப்பதியாய் ராஜாவான மேன்மையுடையவனென்னுதல்; வண்டுவரையாகிற, பதிக்கு-திவ்யதே சத்துக்கு மன்னனாயிருக்குமவனென்னுதல். வண்டுவராபதியிலே யிருக்கச்செய் தே மன்னனாயிருக்கிறானென்று வெறுப்பிலேயாக தாத்பர்யாந்தரம் ( மேன்மை தோற்றவித்யாதி )

அவ்விரண்டும் - “முன்னையமரர்முதல்வன், வண்டுவராபதிமன்னன்” என் றுசொன்னமுதன்மையும், நீர்மையும். அவைகளிலும்வடிவழகு ஆகர்ஷகமோவெ ன்ன (ப்ரணயிநியித்யாதி)

குடிப்பிறப்புவிடவொண்ணுதிருக்குமோவென்ன (ஸ்நுஷேத்யாதி) “ [illegible] ” (ப்ருதிவ்யாம்ராஜஸிம்ஹாநாம்முக்யஸ் யவிதிதாத்மநஃ | ஸ்நுஷாதஶரதஸ்யாஹம்ஶத்ருஸைந்யப்ரதாபிநஃ | இதிஸுந்தரகா ண்டே ஹநுமந்தம்ப்ரதிஸீதா. சம்பந்தாந்தரங்களைச்சொல்லாதே, சக்ரவர்த்திச ம்பந்தத்தையிட்டுச்சொல்லுகிறதுக்குபாவம் (பிராட்டியித்யாதி) தாத்பர்யம் ( எங் கள்மாமனாரித்யாதி)

தாத்பர்யாந்தரத்துக்காகமீளவும் ப்ரதீகோபாதாநம் ( முன்னையித்யாதி ) நீர்மையன்றே யீடுபடுத்துகைக்குடல், மேன்மைசொல்லுவானென்னென்ன (அவ னுடையவித்யாதி) “கடியன்கொடியன்” இத்யாதியையும், “ நங்கண்ணன்தோழிக டியனே ” இத்யாதியையும்பற்ற ( நைர்க்ருண்யத்தோடு நீர்மையோடென்றது ) “ ஊரொன்சொல்லிலென் ” என்றத்தைப்பற்ற ( ஊராருடையவித்யாதி ) (அப்பொ துவானதிலன்றிக்கே) சௌந்தர்யசௌலப்யாதிகளிலன்றிக்கே. அப்பொதுவான தென்றது - “ வண்டுவராபதிமன்னன் ” என்றத்தைப்பற்ற. “வலை” என்றால் ஸ்மித

விக்ஷணுதிகளைச்சொல்லுமோவென்ன ( ஆழ்வாரித்யாதி ) திருக்கண்களைக்காட்டியரு ளினது - ஸ்மிதத்துக்குமுபலக்ஷணம். எம்பெருமானுரைப்படிகாட்டுகைக்கு நியாமகமேதென்ன ( கமலக்கண்ணனென்னுமித்யாதி ) (கார்த்தண்கமலக்கண்ணனென்னும் நெடுங்கயிறுபடுத்து) மேகத்திலே ஶ்ரமஹரமான தாமரைபூத்தாற்போலேயிருக்கிறதிருக்கண்களாகிற நெடியபாஶத்திலே யகப்படுத்தியித்யர்த்தஃ, நாய்ச்சியார்திருமொழி பதினாலாந்திருமொழி நாலாம்பாட்டு. “என்னும்” எனறதுக்குபாவம் ( அநுகூலம்போலேயிருந்தென்றது ) “நெடுங்கயிறு” என்றதுக்குபாவம் ( தப்பாதபடியித்யாதி )

தோழிமீர், முன்னையமரரொன்றுதொடங்கி, வலையுள் - அகப்பட்டேன், அன்னையென்செய்யிலென், ஊரொன்சொல்லிலென், என்னையினியுமக்காசையில்லை இத்யந்வயஃ. பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து ஒன்பதாந்திருமொழி நாலாம்பாட்டு. “பதினாறுமாயிரவர்” இத்யாதி. பதினாறாயிரம் தேவிமார்கள் பரிசர்யைபண்ண, த்வாரகையென்று ப்ரஸித்தமாயிருந்துள்ள திருப்படைவீட்டிலே யவர்களுக்கு நாயகராய்க்கொண்டு தம்முடையவ்யாவ்ருத்திதோற்றவிருந்த மணவாளரென்றர்த்தம்........... ..................................... ...........................*



## ஏழாம்பாட்டு.



வலையுளகப்படுத்தென்னைநன்னெஞ்சங்கூவிக்கொண்
டலைகடற்பளளியம்மானையாழிப்பிரான்றன்னைக்
கலைகொளகலல்குற்றோழிநங்கண்களாற்கண்டு
தலையில்வணங்கவுமாங்கொலோதையலார்முன்பே.

### ஆறாயிரப்படி.

(வலையுள்) இப்படிதன்னிலைமையை மெய்யாகச்சொன்னபின்பு, “இனியிவளாலொருசெயலில்லை” என்றுகொண்டு இவளுடையவத்யவஸாயத்தைத்தோழியிசைந்தபின்பு, அவளைக்குறித்து; தன்னுடையஸ்வரூபரூபகுணசேஷ்டிதங்களாகிற வலையுள்ளே யென்னையகப்படுத்தி, என்னுடையநெஞ்சைக் கூவிக்கொண்டு, ஆரும்செல்லவொண்ணாதவொரு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஆழிப்பிரான்றன்னை, கலைகொளகலல்குல்தோழி, அவனுக்குக்குணஹாநிசொல்லுகிற விந்தத்தையலார்கண்ணெதிரே நங்கண்களால்கண்டு தலையில்வணங்கவுமாங்கொலோவென்கிறாள் ........................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரயணார்த்தமான க்ஷீரார்ணவசயநத்தையுடைய சர்வேஶ்வரனை நாட்டார்முன்பே நாம்கண்டாதரிக்கக்கூடுமோவென்று அந்தரங்கையான தோழியைக்குறித்துரைக்கிறாள்.

என்னை - என்னை. வலையுள் - தன்னுடைய ஆகர்ஷககுணசேஷ்டிதங்களிலே. அகப்படுத்து-அகப்படுத்தி. நல் - என்னிலும்தன்பக்கல்நலத்தையுடைய. நெஞ்சம்-நெஞ்சை. கூவிக்கொண்டு-அடியறுத்தழைத்துக்கொண்டவனாய். அந்தநெஞ்சு தன் பக்கலிலே ப்ரவணமாகைக்கடியாக, திரைக்குள்ளேகிடப்பானைப்போலே, அலை-அலைகிற. கடல்-கடலுக்குள்ளே. பள்ளி - ஏகாந்தமாகப்பள்ளிகொள்வானாய். எம்மானை-அக்கிடையழகைக்காட்டி யென்னையடிமைகொண்டஸ்வாமியாய். ஆழி-அவ்வழகைக்காத்தூட்டும் திருவாழியையுடைய. பிரான்றனை - மஹோபகாரகனானவனை. கலை-பரிவட்டவுடையழகை. கொள்-உடைத்தாய். அகல்-விஸ்தீர்ணமான. அல்குல்-அல்குலையுடைய. தோழி-தோழீ. இருவருமொக்க, நம்-நம். கண்களால் - கண்களாலே. கண்டு-கண்டு. தையலார்-பழிசொல்லுகிறதையலார். முன்பே - முன்பே. அவன்வர்தவுபகாரந்தோன்ற, தலையில் - தலையாலே. வணங்கவும் - வணங்கவும். ஆங்கொலோ-ஆகக்கூடுமோ ...................... ........ .. .... .. ..........*

## ஈடு-ஏழாம்பாட்டு.

அவன்குணஹாநிசொல்லுகிற ஸ்த்ரீகள் வாயடங்கும்படி நாமவனைவரக்கண்டு, அந்த உபகாரத்துக்காகத் தலையாலேவணங்கவல்லோமேயென்கிறாள்.

(வலையுளகப்படுத்தென்னையித்யாதி) என்னை, தப்பாதபடி ஸ்மிதவீக்ஷணாதிகளிலே யகப்படுத்தி. (நன்னெஞ்சமித்யாதி) தானென்றால், "நெஞ்சேயியற்றுவாயெம்மொடுநீகூடி" என்று-நான் பிற்பாடையாம்படியென்னிற்காட்டிலும் முற்படும்படியான நெஞ்சைத் தன்பக்கலிலே நொடித்துக்கொண்டு. (அலைகடலபள்ளியம்மானை) "ஸ்ரீமத்த்வாரகையிலேயிருக்கில், 'பெண்களுக்கோலக்கங்கொடுத்தவிடம்' என்று ப்ராப்தி சொல்லிக்கொண்டுவரும்" என்று எட்டவொண்ணாதநிலத்திலே பின்னையும்போய்ப்புக்கான். (அலைகடல்) பெண்பிறந்தார்களுக்கணுகிசிககவொண்ணாதபடி க்ஷுபிதமானகடலாயிற்று. (அலைகடற்பள்ளியம்மானை) மஹாதநம் கைப்பட்டவாறே கடலோடத்தொடங்கினான். (ஆழிப்பிரான்றன்னை) புகவொண்ணாதநிலத்திலே புக்கான்" என்று விடவொண்ணாதபடியாயிற்றுக் கையுந்திருவாழியுமான அழகு. கடலோடியாகிலும் பெறவேண்டியாயிற்றிருப்பது. (கலையித்யாதி) நல்லபரிவட்டத்தையுடைத்தான அகன்றநிதம்பப்ரதேசத்தையுடையதோழீ. உன்வடிவுபோலே அநுகூலமாயிருக்கவேண்டாவோ வுன்வார்த்தையும். அன்றிக்கே, அவள் மடியிலேகிடந்து சொல்லுகிறாளாகவுமாம். "தோழிமீரென்னையினியுமக்காசையில்லை" என்றாள்கீழே; "தோழிநங்கண்களாற்கண்டு" என்று சம்போதியாநின்றாளிங்கே, இதுதன்னில் சேர்த்தியென்னென்னில்; தாய்மார்சொல்லுகிறவார்த்தையை யிவர்களும்சொல்லுகையாலே, "என்னையினியுமக்காசையில்லை" என்றாள்; இதுவேயாயிருப்பாரைவிட்டு, "தீர்ந்தவென்தோழி" என்னலாம்படி நெஞ்சுகலந்தொரு நீராயிருக்கிற உயிர்த்தோழியைப்பார்த்து வார்த்தைசொல்லுகிறாள் (நங்கண்களா

ற்கண்டு) இப்போது இவள் ஹிதஞ்சொன்னளேயாகிலும், காணும்போது நாலுகண்ணாலேகாணும் காண்பது; அல்லது இரண்டுகண்ணாலுங்காணவேண்டாள். (தலையிலித்யாதி) "பிரிந்தவிடத்தில், தன்னுடையஸ்த்ரீத்வத்துக்குப்போரும்படி அவன்தானே வரப்பார்த்திருந்திலள், அவனும் வரவுதாழ்த்தான்" என்றுபழிசொல்லுகிற இவர்கள்முன்பேயவனும்வந்து, அந்தவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாகத் தலையாலே வணங்கப்பெறவல்லோமோ. இத்திருவாய்மொழியை ஆழ்வான் ராஜேந்த்ரசோழனில் சந்த்யாசதஸ்ஸிலே நிர்வஹியாநிற்க, ஆமருவிநிரைமேய்த்தான் நம்பியாரென்று நூறுவயஸ்ஸுபோந்திருப்பாரொருவர் நடுங்க நடுங்க வெழுந்திருந்துநின்று, "ஆழ்வான், தலைமகள் தலையாலேவணங்கப்பெறுமோ" என்ன, "பெறும், சிஷ்டாசாரமுண்டுகாணும்; ஸ்ரீஜநகராஜன் திருமகளநுஷ்டித்தாள்காணும் 'ஶிரஸாऽऽஸிவாதய' (ஶிரஸாசாபிவாதய) என்று. 'கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்தி தா ஜநகாதய:' (கர்மணைவஹிஸம்ஸித்திமாஸ்த்திதாஜநகாதய:) என்று ஜநககுலத்திலுள்ளார்க்கு மேலில்லையிறே ஆசாரத்துக்கு. [கௌஸல்யேத்யாதி] நாட்டில் ஸ்த்ரீகள் 'இங்கிருக்கும் நாளைக்கு நமக்குரக்ஷகனாய்ப் பின்பு நரகத்தில்புகாதபடி பரிஹரிக்கைக்கு மொருபிள்ளைவேணும்' என்று நோன்புநோற்றுப்பெறுவர்கள்; அங்ஙனன்றிக்கே, எங்கள் மாமியார் தந்நெஞ்சிலுண்டானவகலத்தாலே, 'லோகத்துக்காக ரக்ஷகனாகவல்லானொருபிள்ளையைப்பெறவேணும்' என்று நோன்புநோற்றுப்பெற்றார்; அவர்நினைவுதப்பவோ, அந்தலோகத்துக்குள் ளந்தர்ப்பூதையல்லேனோ நான். இனி, 'நாட்டில் ஸ்த்ரீகள் பர்த்தாக்கள் சமர்த்தரானபோது ஆதரித்தும், அசமர்த்தரானபோது உபேக்ஷித்தும் போரக்கடவர்களாயிருப்பதொன்றுண்டு; நீ சொல்லாவவஸ்த்தையிலு மவனையாதரித்துப்போருங்கிடீர், என்று அவரென்னைக்குறித்துச்சொல்லிவிட்டார்; நானுமப்படியே செய்துபோராநிற்க, கிண்ணகத்தில் குமிழிக்கீழே சாவிபோமாபோலே, தாமென்னுடையரக்ஷணத்தில் நெகிழநின்றது அவர்நினைவு சங்குசிதமாகவோ என்று சொன்னேனென்றுசொல்லு. [ தம்மமார்த்தே ஸம்ப்ருச்ச ] [ தம்மமார்த்தேஸம்ப்ருச்ச ] எங்களுடைய ரக்ஷணத்துக்கு நாங்கள் ப்ரார்த்தித்துப்பெறவேண்டுவதொன்றில்லையிறே அதுவுமவர் நினைவிலுண்டாகையாலே, இனி, க்ரமப்ராப்திபற்றாமையாலுள்ளதிறே யிப்போதுபடுகிறது. தாமுளராக வெங்களுடையரக்ஷணம் தப்பாதிறே; ஆனபின்பு, தம்முடையவுண்மையை ஆஶாஸிக்கையிறே யினியெங்களுக்குள்ளது, அங்குத்தைக்கொரு குறைகளில்லையேயென்று கேட்டேனென்றுசொல்லு. [ஶிரஸாऽऽஸிவாதய] [ஶிரஸாசாபிவாதய] நாட்டாரளவன்றிக்கே, தாம் விசேஷித்தெங்களைக்கைப்பிடிக்கையாலுண்டானவாசி நாங்கள்பெறுதபின்பு, நாட்டாரோபாதியாகிலும்பெறக் குறையில்லையிறே. இனிநாட்டார் பெறுவதுபெறப்பார்த்தால், அவர்கள் தம்பக்கல் செய்யுமத்தையும் செ

ய்யவேணுமிறே; ஆனபின்பு, நாங்களெங்கள் தலையாலே தந்திருவடிக ளிலேவணங்கினோமென்று நீயெனக்காக அவர்திருவடிகளிலேவிழு என் று மருளிச்செய்தாள்." "இதுதான் ப்ரணயரோஷம் தலையெடுத்துச் சொல்லுகிறவார்த்தையோ, அபேக்ஷைதோற்றச்சொல்லுகிறவார்த்தை யோ" என்ன; "கீழ்-திருவடிவந்தபோது ப்ரணயரோஷத்தாலேவந்த சிவிட்குத்தோற்றச்சொன்னவார்த்தைகளுடைய மாறும்படி குளிர அவ ன்வார்த்தைசொல்ல, அநந்தரம் திருவுள்ளத்திலே யொருப்ரஸாதம்பிற ந்து, ப்ராப்தியில்லாமையால்வந்த அகவாப்தியுங்கிடக்க வருளிச்செய் கிறபாசுரம்" என்றருளிச்செய்தார் ..................................*

## ஜீயர்அரும்பதம்.

ஏழாம்பாட்டு (வலையுளித்யாதி) "நங்கண்களால்கண்டு தலையில்வணங்கவு ம்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (அவன்குணஹாரியித்யாதி)

"வலையுளகப்படுத்து" என்றது - அநுவாதம். "உள்" என்றதுக்கர்த்தம் (தப்பாதபடியென்று) நெஞ்சுக்குநன்மையாவதேதென்ன (தானென்றலித்யாதி) தான் - ஈஸ்வரன். (முற்படும்படியான) என்றத்தோடேயந்வயம். (நெஞ்சேயியற் றுவாயெம்மொடுநீகூடி) என்னிலும் முற்பட்டுப்பதறுகிறநெஞ்சே, முற்பட்டுநிற் கிற நீபிற்பட்டவென்னோடேகூடிக்கார்யத்தைநடத்து இத்யர்த்தஃ. இது பெரியதிரு வந்தாதிமுதற்பாட்டு, "முயற்றி" இத்யாதி. கொடித்துக்கொண்டு - இங்கிதமாக வழைத்துக்கொண்டு.

கீழே "வண்டுவராபதிமன்னன்" என்றது, இங்கே "அலைகடல்பள்ளியம் மானை" என்றது, இதுக்குக்கருத்து (ஸ்ரீமதித்யாதி) பின்னையும்போய்ப்புக்கா னென்றது - "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய" (நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய) என்றத் தைநினைத்து. விசேஷணத்துக்குபாவம் (பெண்பிறந்தார்க்கித்யாதி) கவிசிக்க-அபே க்ஷிக்க. "நன்னெஞ்சம்கூவிக்கொண்டு" என்றத்தையுங்கூட்டிபாவாந்தரம் (மஹா தமித்யாதி) (கடலோடத்தொடங்கினான்) ஓடவர்த்தகத்துக்குத்தொடங்கினனெ ன்றுத்வநி; கடலோடியாகிலும் - சமுத்ரத்திலேவிழுந்தாகிலும். சாஹஸம்பண்ணி யாகிலும்.

கலையின்றிக்கேயிராதே; "கலைகொள்" என்றுவிசேஷிக்கிற தென்னென்ன (நல்லவித்யாதி) அதாவது - உடையழகாலே போக்யமாயிருக்கிற வாகாரத்தைப்ப ற்ற விசேஷிக்கிறதென்றபடி. அல்குலைவர்ணித்ததுக்குபாவம் (உன்வடிவித்யாதி) தாத்பர்யாந்தரம் (அன்றிக்கேயவள்மடியிலேயித்யாதி) அதாவது-அதின்மார்த்தவ த்தாலுண்டான சௌக்யத்தைக்கண்டு, "இதொருநிதம்பமிருந்தபடியே" என்று கொண்டாடுகிறாளென்றபடி. கீழே - உறவறச்சொல்லிவைத்து, பின்னையும் "தோ ழி" என்று சம்போதிக்கக்கூடுமோவென்று சங்கித்துபரிஹரிக்கிறார் (தோழிமீரித் யாதி) இதுவேயாயிருப்பாளா - தாய்மார் நினைவேநினைவாயிருப்பாளா.

ஹிதம்சொல்லுமதிவளுக்குண்டே; ஆனபின்பு, "நங்கண்களாற்கண்டு" என்று - அவளுக்கும். காட்சியிலே யந்வயமுண்டாகச்சொல்லக்கூடுமோவென்ன (இப்போதித்யாதி) அதாவது - ஹிதஞ்சொல்லுகை அஹ்ருதயமாய், நாயகவிஷய த்தி லிவளுக்குண்டான ப்ராவண்யமபிமதமாகையாலே காட்சியிலிவளுக்கு மந்வ யமுண்டாகச்சொல்லலாமென்றபடி. நாலுகண்ணாலேயென்கையாலே- புருஷகார

புரஸ்ஸரமாக சேவிக்கவேணுமென்று ஸ்வாபதேசம். இத்தால் - * வேதம்வல்லார் களை முன்னிட்டொழிய வவனைக்காணுமென்றபடி. இரண்டுகண்ணும் - கடைக்க ண்ணு மிடைக்கண்ணும். "தலையில்" என்று - பஞ்சமி. "தையலார்முன்பே- தலையில்வணங்கவுமாங்கொலோ" என்றநவயித்துபாவம் (பிரிந்தவிடத்திலித்யாதி)

தலைமகள்வணங்கலாமோ வென்கிறசங்கையிலே, ஆழ்வான் பரிஹாரத்தை யருளிச்செய்கிறார் (இத்திருவாய்மொழியையித்யாதி) தலைமகள் - உத்தமநாயகி. பிராட்டிசெய்தது சிஷ்டாசாரமோவென்ன (கர்மணைவஹித்யாதி) இந்தச்லோகத் துக்கடியேதொடங்கிஅர்த்தமருளிச்செய்கிறார் (கௌஸல்யேத்யாதி) "கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ । தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச ஶிரஸா சாபிவாதய" (கௌஸலயாலோகபர்த்தாரம்ஸுஷுவேயம்மநஸ் விநீதம்ம மார்த்தேஸுகம்ப்ருச்சஶிரஸாசாபிவாதய) இதிஸுந்தரகாண்டே ஷ்டத்ரிம்சேஹ நுமந்தம்ப்ரதிஸீதா. "மநஸ்விநீ-கௌஸல்யா லோகபர்த்தாரம்-யம்ஸுஷுவே" (மநஸ்விநீ - கௌஸல்யாலோகபர்த்தாரம் - யம்ஸுஷுவே) என்றநவயித்துபா வம் (நாட்டிலித்யாதி) "மநஸ்விநீ" (மநஸ்விநீ) என்கிறவிதிப்ரத்யயம்-பூமாவி லேயாகவிவக்ஷித்து, (நெஞ்சிலுண்டானவகலத்தாலேயென்றது) "மநஸ்விநீ" (மந ஸ்விநீ) என்றது-ஹேதுகர்ப்பவிசேஷணம். மநஸ்விநியாகையாலேயென்றபடி. அவ ர்நினைவுதப்பவோ - அவர்நினைவுதப்பலாமோ. "உம்மையொழிந்தலோகத்துக்கெல் லாம் பாத்தாவாகவேணும்" என்று நோன்புநோற்றுப்பெற்றாளொன்றாலோவென் ன; என்பக்கலவர் ஸ்நேஹித்திருக்கையாலே யதுகூடாதென்கிறாள் (இனிநாட்டிலி த்யாதி) நீரப்படிசெய்யாமையாலே யானுலோவென்ன (நானுமப்படியேயித்யாதி) கிண்ணகம் - ப்ரவாஹம். குமிழி - ப்ரவாஹோத்பத்திஸ்த்தாநம். என்னை யங்கேய ழைத்துக்கொள்ளவேணுமென்றுசொல்லாதே, "ஸுகம் ப்ருச்ச" (ஸுகம்ப் ருச்ச) என்பானென்னென்ன (எங்களுடையவித்யாதி) "ஶிரஸா சாபிவாதய" (ஶிரஸாசாபிவாதய) என்று - தன்பேற்றுக்குடலாக வஞ்சலிபண்ணுமதுசேருமோ வென்ன (இனிக்ரமப்ராப்தியித்யாதி) ஆஶாஸிக்கை - மங்களாஶாஸநம்பண்ணுகை. (எங்களுக்குள்ளது) என்றவநந்தரம், ஆகையாலேயென்றுகூட்டுவது. "ஶிரஸா" (ஶிரஸா) என்றசப்தத்துக்குபாவம் (நாட்டாரளவன்றிக்கேயித்யாதி) இத்தைவிவரிக்கிறது (இனிநாட்டார்பெறுவதித்யாதி) இத்தால் - பத்நீத்வப்ரயுக்த மான ப்ரணயரோஷத்தாலன்றிக்கே, "அஹம் ஶிஷ்யா தாஸீ ச" (அஹம்ஶி ஷ்யாசதாஸீச) என்கிறபடியே சேஷத்வாநுருணமாகச் சொன்னாளென்றபடி. "மநஸ்விநீ-கௌஸல்யா லோகபர்த்தாரம்-யம்ஸுஷுவே, தம் மமார்த்தே-ஶிர ஸாபிவாதய, ஸுகஞ்ச ப்ருச்ச" (மநஸ்விநீ - கௌஸல்யாலோகபர்த்தாரம்-ய ம்ஸுஷுவே, தம்மமார்த்தே - ஶிரஸாபிவாதய, ஸுகஞ்சப்ருச்ச) என்றந்வயம் விவக்ஷிதம்; இதுக்குநியாமகம் - "ஸுகம் ப்ருச்ச" (ஸுகம்ப்ருச்ச) என்றதுக் கருளிச்செய்தவர்த்தத்துக்கநந்தரம், "ஶிரஸா சாபிவாதய" (ஶிரஸாசாபிவா தய) என்றதுக்கிப்படி அர்த்தமருளிச்செய்கை யநுபபந்நமாகையால். "தலைமக ள் தலையாலேவணங்கும்" என்றதுக்கு - "தீவினைதீர்வரம் । வேண்டிநான்தொழு தென்று விளம்புவாய்" என்றுகம்பனும், "தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழு தெழுவாள்" என்று வள்ளுவனும்சொன்னத்தை ஸம்வாதமாகக்கண்டுகொள்வது. "ஶிரஸா சாபிவாதய" (ஶிரஸாசாபிவாதய) என்றது - ப்ரணயரோஷத்தாலே சொன்னதாகையாலே, இத்தை சிஷ்டாசாரமென்னலாமோவென்ன (இதுதானித்

யாதி ) இத்தால்-கேவலம் ப்ரணயரோஷமடியாகச்சொன்ன வார்த்தையல்லாமை யாலே சிஷ்டாசாரமென்று தாத்பர்யம்.

க்ரமேணுந்வயஃ............ ..................... .......... .....................*

# எட்டாம்பாட்டு

பேய்முலையுண்டுசகடம்பாய்ந்துமருதிடை
போய்முதல்சாய்த்துப்புள்வாய்பிளந்துகளிறட்ட
தூமுறுவற்றொண்டைவாய்ப்பிரானையெந்நாள்கொலோ
யாமுறுகின்றதுதோழியன்னையர்நாணவே.

## ஆறுயிரப்படி.

(பேய்முலை) பூதநாசகட யமளார்ஜுநகுவலயாபீட ப்ரப்ருத்யாச்ரிதவிரோதி நிரஸநைக ஸ்வபாவனாயிருந்தவனை "குணஹீநன்" என்றுசொல்லுகிறவன்னையர், "இவனையாகாதே ப்ரணயித்வ வாத்ஸல்யகாருண்யாதி குணரஹிதனென்றுசொல்லுவது" என்று லஜ்ஜித்துத்தலையெடுக்கமாட்டாதேயிருக்கும்படி, எந்நாள்கொலோ யாமுறுகின்றது தோழியென்கிறாள்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆச்ரிதவிரோதியையும் நிவர்த்திப்பிக்குமவனை நான்கிட்டுவதென்றோவென்கிறாள்.

பேய்-பேயின். முலை-முலையை. உண்டு-உண்டு. சகடம்-சகடத்தை. பாய்ந்து-பாய்ந்து. மருது-மருதின். இடை-நடுவே. போய்-போய். முதல்-வேர்பறித்து. சாய்த்து-விழவிட்டு. புள்-பகாசுரனாகிறபக்ஷியின். வாய்-வாயை. பிளந்து-பிளந்து. களிறு-குவலயாபீடத்தை. அட்ட - நிரஸித்தவனாய். விரோதிகளினுடைய பற்றுசறுதியாலே சாவஜ்ஞமாகஸ்மிதம்பண்ணுகையாலே, தூ - வெளுத்த. முறுவல் - முறுவலொளியையும். தொண்டை-தொண்டைப்பழம்போலேசிவந்த. வாய் - அதரசோபையையும். பிரானை - ஆச்ரிதர்களானகோபிமாரை அநுபவிப்பித்தவுபகாரகனை. தோழி-தோழீ. அன்னையர்-அவனைக்குற்றஞ்சொன்னஅன்னையர். நாண - லஜ்ஜிக்கும்படியாக. யாம்-நாம். உறுகின்றது - கிட்டுவது. எந்நாள்கொலோ - என்றோயிருக்கிறதோ.

நாம்கிட்டினவர்கள் நாணுமித்தனையென்றுகருத்து .......... ...........*

## ஈடு - எட்டாம்பாட்டு.

மஹோபகாரகனை "குணஹீநன்" என்றுசொல்லுகிறதாய்மார், "இவனையாகாதே நாம் குணஹீநனென்றது" என்று லஜ்ஜிக்கும்படியென்றோ நாமவனைக்காண்பதென்கிறாள். அவன்தன்சத்தையையுண்டாக்கி, நம் சத்தையைத்தந்தான்; நாமவன்சத்தையாலுண்டானபலம் பெறுவதென்றோவென்கிறாள்.

(பேய்முலைபித்யாதி) பூதனையால்வந்த வாபத்தைத்தப்பி; உணர்ந்துநோக்கவொண்ணுதபடி, ரக்ஷகமாகவைத்த சகடமசுராவேசத்தாலே யூர்ந்துவர, அத்தையநாயாஸேநமுறித்து; தவழ்ந்துபோகாநிற்க, நிர்விவரமாக வழியிலேநின்றமருதுகளின்நடுவேபோய். (முதல்சாய்த்து) தானவற்றைத்தப்பிப்போனவளவேயன்றிக்கே யவைதன்னை வேரோடேபறித்துவிழவிட்டெடன்னுதல்; அன்றிக்கே, குருந்தத்தைப்பறித்துப்பொகட்டெடன்னுதல். பகாசுரனைவாயைக்கிழித்து, குவலயாபீடத்தைமுடித்த. (தூமுறுவல்தொண்டைவாய்ப்பிரானை) ப்ரதிபந்தகமாய்வந்தவைதான் ப்ரபலமாயிருக்கச்செய்தேயும், தன் வீரத்துக்கவைபாத்தம்போராமையாலே ஸ்மிதம்பண்ணிநின்றபடி. தூய்தானதந்தபங்க்தியையும், தொண்டைபோன்றவதரத்தையு முடையவனை. வெண்முறுவலையும், சிவந்தவதரத்தையுமுடைய வுபகாரகனை. இப்போதவனையழிக்கநினைத்து மடலெடுக்கிருளாகில் அவன்பண்ணினவுபகாரத்தைச் சொல்லுவானென்னெனில்; இதிறே யிவள்தானவனையழிக்கநினைத்தபடி— அச்சமுறுத்திமுகங்காட்டுவித்துக்கொள்ளப்பார்க்கிற வித்தனைபோக்கி, அவனையழிக்கையுத்தேஶ்யமாய்ச்செய்கிறதன்றிறே. (பிரானை) " அவ்வுபகாரங்களெல்லாம் தனக்காகச்செய்தது " என்றிருக்கிருள். தமிழரதொருசங்கேதமுண்டு, அதாகிறது—" பூத்தருபுணர்ச்சி, புனல்தருபுணாச்சி, களிறுதருபுணர்ச்சி, என்று. பூத்தருபுணர்ச்சியாவது — இவள் ' உத்யாநவநத்திலே பூக்கொய்ய ' என்று புறப்பட்டுப்பூக்கொய்யாநிற்க, அருங்கொம்பிலெட்டாதேநின்றபூவை யிவளாசைப்பட்டால், அத்தை, தன்னைப்பேணுதே ஏறிப்பறித்துக்கொடுக்க, ' இவன்தன்னைப்பேணுதே நம்நினைவைத்தலைக்கட்டினன் ' என்று அதுக்குத்தன்னைக்கொடுக்கை. புனல்தருபுணர்ச்சியாவது-புதுப்புனலாடப்போய் நீரிலேயிழிந்து விளையாடாநிற்க, அமிழ்ந்தவதில்நின்றுமெடுத்தேறவிட்டதுக்காகத் தன்னைக்கொடுக்கை. களிறுதருபுணர்ச்சியாவது-வீதியிலேநின்று விளையாடாநிற்க, யானையின்கையிலே யகப்படப்புக, அதின்கையில்நின்றும் மீட்டதுக்குத்தன்னைக்கொடுக்கை " என்று மொருமர்யாதைகட்டினர்கள்; இவளைநோக்கினதுக்காக இவள் தன்னையவர்களுக்காக்கவிறேசொல்லிற்று; அவ்வளவன்றிக்கே, இவள்தலைமையிருந்தபடி — அவன்தன்னைத்தப்புவித்த வுபகாரத்துக் கைங்கர்யார்ஹமாக வெழுதிக்கொடுக்கிருள். அங்கோரோவுபகாரத்துக்கிறே அவ்வவர்க்காக்குவது, இங்கெல்லாவுபகாரங்களையும்பண்ணினல் அவனுக்காக்காதொழியவொண்ணுதிறே. (எங்கள்கொலோயாமுறுகின்றதுதோழி) அவன்தன்னையுளனுக்கிவைத்தான், இனிநாமவனைக்கிட்டுவதென்றே. (தோழி) " ஶோகஸ்யாஸ்யகதாபாரம் ராகவோதிகமிஷ்யதி " (ஶோகஸ்யாஸ்யகதாபாரம் ராகவோதிகமிஷ்யதி) என்றுபோலேகாணும் தோழிதானிருப்பது. இப்போதவனை ஸ்பர்ஶித்து நம்ப்ரயோஜநம்பெற வாசைப்படுகிறேமல்லோம் ( அன்னையர்நாணவே )

*" பிரிந்தவநந்தரமவன்தானே வருமளவுமாறியிருந்திலள், அவன்முன்வ ரவுதாழ்த்தான் " என்று இரண்டுதலைக்கும் பழிசொல்லுகிற தாய்மார் முன்பே; " நாமித்தலைமடலெடுக்குமளவாம்படி பிற்பாடராமேனுமாகா தே " என்று, "ஹ்ரீரேஷா ஹிமமதுலா" (ஹ்ரீரேஷாஹிமமதுலா) என்கிறபடியே அவன் லஜ்ஜித்துவந்துநிற்கிறபடியைக்கண்டு, " இவனை யோநாமிவ்வார்த்தைசொல்லிற்று " என்று அவர்கள் லஜ்ஜித்துக்கவிழ் தலையிடும்படியாக.............................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (பேய்முலையித்யாதி) " பேய்முலையுண்டு " இத்யாதியைப் பற்ற (மஹோபகாரகனையித்யாதி) "நாணவே" என்றத்தைப்பற்ற (லஜ்ஜிக்கும்ப டியென்றது) அவன் மஹோபகாரகனானபடியை விவரியாநின்றுகொண்டு, கீழ்வா க்யத்தைவிவரிக்கிறார் (அவன்தன்சத்தையித்யாதி) பலமாவது - * உறுகை. அதா வது - கிட்டுகை.

(உணர்ந்துநோக்கவொண்ணாதபடி ரக்ஷகமாகவைத்த) ரக்ஷகமாகவைத்த தாகையாலே யுணர்ந்துநோக்கப்போகாதென்றபடி. (அநாயாஸேந) ஒருமுக்தன் செய்தவ்யாபாரமாகையாலே, " பாய்ந்து " என்று - போரப்பொலியச்சொன்ன தித்தனைபோக்கி, வஸ்துதஃ அநாயாஸேநமுறித்தானென்றபடி. " மருது " என்ற ஏகவசநத்தைப்பற்ற (நிர்விவரமாகவென்றது) த்விதீயார்த்தத்துக்கு, " முதல் " என்று - பூண்டாய், அத்தாலே - குருந்தத்தைச்சொல்லுகிறது. குருந்தம் - குருக்க த்தி. (பகாஸுரனை) இத்யாதிக்கு - " புள்வாய்பிளந்துகளிறட்ட " என்று ப்ரதீகங் கண்டுகொள்வது.

பாத்தம் - பாத்ரம். விஷயமென்றபடி. " முறுவல் " என்றதுக்கு-ஸ்மிதமா கவர்த்தமருளிச்செய்து, தந்தபங்க்தியாகவர்த்தாந்தரம் (தூய்தானவித்யாதி) "மு றுவல்" என்று-தந்தத்தைச்சொன்னது, "தந்தமும்முறுவலும் தட்டமும்பல்லாம்" என்றத்தைப்பற்ற. ப்ரதமார்த்தவிவரணம் (வெண்முறுவலித்யாதி) இதிறேயென் றது-வக்ஷ்யமாணத்தை. " வக்ஷ்யமாணம் " என்றத்தை யுபபாதிக்கிறார் (அச்சமு றுத்தியித்யாதி) இத்தால் - அவனுபகாரங்களைச்சொல்லத் தட்டில்லையென்றுகருத் து. அவன்செய்தபடிகளைச்சொல்லி, " எந்நாள்கொலோயாமுறுகின்றது " என்ற துக்குபாவம் (அவ்வுபகாரங்களெல்லாமித்யாதி) தனக்காகச்செய்தது - எனக்கு த்தன்பக்கலிலே ப்ராவண்யம் விளைக்கைக்காகச்செய்தது. அவன்தன்னைநோக்கினத் தையே யிவள்தனக்குபகாரமாகச்சொல்லுகையாலே வ்யாவ்ருத்திகாட்டுகிறார் (த மிழரித்யாதி) புதுப்புனல்-நூதநப்ரவாஹம். இவளைநோக்கினதுக்காக - நாயகியான வள் தன்னைநோக்கினதுக்காக. இவள்-நாயகி, தலைமை - ஶ்லாக்யதை. இன்னமோ ராகாரத்தாலேவ்யாவ்ருத்தி (அங்கித்யாதி)

" யாம் " என்று - தோழியையுங்கூட்டிச்சொன்னதுக்குபாவம் (ஶோகஸ் யேத்யாதி) " ஶோகஸ்யாஸ்ய கதா பாரம் ராகவோதிகமிஷ்யதி। ப்லவமாந: பரிஶ்ராந்தோ ஹதநௌஸ்ஸாகரே யதா " (ஶோகஸ்யாஸ்யகதாபாரம்ரா கவோதிகமிஷ்யதி। ப்லவமாநபரிஶ்ராந்தோஹதநௌஸ்ஸாகரேயதா) இதிஸுந் தரகாண்டே ஸப்தத்ரிம்ஶே ஹநுமந்தம்ப்ரதிஸீதா. இத்தால்-ஸமதுஃகையாகையா லே யவளையுங்கூட்டிச்சொல்லுகிறாளென்றபடி. மேலுக்கவதாரிகை (இப்போதித்

யாதி ) "ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா | யதீத்ருஶைரஹம் விப்ரைருபஸ்த்தேயைருபஸ்த்திதஃ" ( ப்ரஸீதந்துபவந்தோமேஹ்ரீரேஷாஹிமமாதுலா । யதீத்ருஶைரஹம்விப்ரைருபஸ்த்தேயைருபஸ்த்திதஃ ) இத்யாரண்யகாண்டே ஶரபங்கோக்தம்.

பேய்முலையுண்டென்றுதொடங்கி, பிரானை - தோழி, அன்னையர்நாணவே-என்நாள்கொலோ யாமுறுகின்றதித்யந்வயஃ. ......... .. ...........................*

---

## ஒன்பதாம்பாட்டு.

நாணுநிறையுங்கவர்ந்தென்னைநன்னெஞ்சங் கூவிக்கொண்டு
சேணுயர்வானத்திருக்குந்தேவபிரான்றன்னை
யாணையென்றோழியுலகுதோறலர்தூற்றியாங்
கோணைகள்செய்துகுதிரியாய்மடலூர்துமே.

### ஆறாயிரப்படி.

(நாணும்) நாணும்நிறைவுங்கவர்ந்து என்னை நன்னெஞ்சங்கூவிக்கொண்டு, ஒருவர்க்கும் செல்லவொண்ணாத திருநாட்டிலே யெழுந்தருளியிருக்கிற தேவபிரான்றன்னை * அயர்வறுமமரர்களுங்கூடத் தேறாததொருபடி, தோழீ, ஆணை, அவனையுலகுதோறலர்தூற்றி, மற்றும்செய்யலாம் மிறுக்குக்களெல்லாம்செய்து குதிரியாய்மடலூர்துமென்கிறாள்*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னை சர்வஸ்வாபஹாரம்பண்ணி யெட்டாமலிருக்கிறவனை, சர்வலோகமும்பழிக்கும்படி மடலூரக்கடவேனென்று தோழிக்குத்தன்னெஞ்சை வெளியிடுகிறாள்.

என்னை-என்னை. நாணும்-லஜ்ஜையையும். நிறையும்-பூர்த்தியையும். கவர்ந்து-அபஹரித்து. நல்-ஸ்நேஹோத்தரமான. நெஞ்சம் -நெஞ்சையும். கூவிக்கொண்டு-அழைத்துக்கொண்டு. "விஶ்வத: ப்ருஷ்ட்டேஷு ஸர்வத: ப்ருஷ்ட்டேஷு" ( விஶ்வதஃப்ருஷ்ட்டேஷுஸர்வதஃப்ருஷ்ட்டேஷு ) என்கிறபடியே, சேணுயர்-மிகவுமுயர்ந்த. வானத்து - பரமாகாஶஶப்தவாச்யமான பரமபதத்திலே. இருக்கும் - இருப்பானாய். தேவர்-சூரிகளுக்கு. பிரான்றன்னை - இங்குப்பண்ணினப்ரவ்ருத்திகளை ப்ரகாஶிப்பிக்கும் சர்வாதிகனானவனை. என் - எனக்குவிதேயையான. தோழி - தோழீ. ஆணை-உன்னாணையே. உலகுதோறு-சர்வலோகங்களிலும். அலர்-பழி. தூற்றி-ப்ரஸித்தமாம்படிதூற்றி. ஆம்-என்னால்செய்யலாம். கோணைகள்-மிறுக்குக்களடங்க. செய்து-செய்து. குதிரி-ஒருவர்க்கடங்காத நாணமற்றபெண். ஆய்-ஆய்க்கொண்டு. மடல்-மடல். ஊர்தும்-ஊரக்கடவேன்.

குதிரி-நாணைப்பெண். கோணை-மிறுக்கு ......................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

நெஞ்சு விம்மல்பொருமலாகாநிற்கவும், தன் ஸ்த்ரீத்வத்தாலே யிதுக்குமுன்பு மறைத்துக்கொண்டுபோந்தாள்; இனி "அவனையழிக்கப்புகுகிற நாமார்க்குமறைப்பது" என்று அதுதன்னையே சொல்லுகிறாள்.

(நாணுநிறையுங்கவர்ந்து) சத்தாப்ரயுக்தமானத்தையுங்கொண்டான்,களவுகலந்தால் வருமத்தையுங்கொண்டான்.வாசல்விட்டுப்புறப்படக்கடவதல்லாத லஜ்ஜையையும்கைக்கொண்டு, அகவாயிலோட்டம் தாய்மார்க்கும்சொல்லக்கடவதன்றிக்கே யிருக்குமடக்கத்தையும்கைக்கொண்டு. (என்னை) அவையேநிரூபகமானவென்னை. (நன்னெஞ்சங்கூவிக்கொண்டு) பறித்துக்கொண்டநாணும் நிறையுந்தந்தாலு மிட்டுவைக்கைக்குக்கலமில்லாதபடி; அவற்றுக்காப்ரயமான, என்னிற்காட்டிலும் தன்பக்கல் பாவபந்தத்தி லூற்றமுடையநெஞ்சைத் தன்பக்கலிலே நொடித்துக்கொண்டு. "இவற்றைக்கொண்டின்னம் கடலிலேகிடக்கில், இவள் த்வரையிருந்தபடியால் திரைமேலேயடியிட்டுக் கையும்மடலுமாய்வந்து நிற்கவுங்கூடும்" என்றுபார்த்து, எட்டாநிலத்திலேபோயிருந்தானாயிற்று. (சேணுயர்வானத்திருக்கும்) சேணென்றும் - உயர்த்தி, உயரென்றும்-உயர்த்தி; இரண்டாலும்-மிக்க ஓக்கத்தையுடைத்தான, வானத்திலேயிருக்கும். அந்தரஜாதிகளான இந்த்ராதிகள் குடியிருப்பிலன்றிக்கே, பரமபதத்திலே. (தேவபிரான்றன்னை) இங்கேவந்துகொண்டுபோனநாணும் நிறையுமான ஒடுக்குமாட்டைப்பாரித்துக்கொண்டு, தன்வெற்றிகாட்டிக்கொண்டிருக்கிறபடி. "சம்சாரமண்டலத்திற்போய் நான்பெற்றுக்கொண்டுவந்தவையிவை" என்று தன்வெற்றிகாட்டிக்கொண்டிருக்கிற ஓலக்கம் முந்தற முன்னமதுவாகப்பெற்றோமிறே, ப்ரஹ்மாதிகளோலக்கம்போலே லாபாலாபாதிகளில்வரும் துடிப்பறியாத ஓலக்கமன்றிக்கே. வ்யதிரேகத்தால்வரும் வ்யஸநமறியார்களேயாகிலும், அந்வயத்தால்வரும் ரஸமறிவர்களிறேமுன்னம். (சேணுயர்வானத்திருக்கும் தேவபிரான்றன்னை) அவன்றானும், "ப்ரளயத்துக்கழியாதநிலம்" என்னுமித்தனையுமாயிற்று ஏற்றமாக அவ்விடத்துக்கு நினைத்திருப்பது; "விரஹப்ரளயமேறிப்பாயாதவிடமில்லை" என்றறியமாட்டுகிறிலன்; அறிந்தானாகில் கிடந்தவிடத்தேகிடக்குமே. (தன்னை) பார்கிடாய் அவ்வோலக்கமு மவனுமவ்விருப்புமென் கையிலே படப்புகுகிறபாடு; இருந்தவிடத்தே இருக்கவொட்டுவே னென்றிருக்கிறாயோ. இப்போதிங்ஙனே யொரு வாய்ப்பகட்டுச்சொல்லுகிறாயாகில், அதுசெய்து தலைக்கட்டவல்லையாகப்புகுகிறாயோவென்ன (ஆணை) இவளிப்போது அவனாணை இடுகிறாளோ, தோழியாணையிடுகிறாளோ? என்னில்; அழிக்கநினைக்கிறவனாணையிடாளே, இனித்தோழியாணையாமத்தனையிறே. இதுக்கு

ன்பட்டதோழியையொழிய, " வேறுபரதேவதையுண்டு " என்றிராளே யிவள்தான். " இது உக்திசாரமேயாய்ப்போகாமே, இவளித்தனையுஞ் செய்து தலைக்கட்டப்பெறுவதுகாண் " என்று தன்னினைவுதோற்றவிரு ந்தாள், " என்தோழி " என்று அவளையணைத்துக்கொள்ளுகிறாள். அன் றிக்கே, "இவளதுகூடப்புகாநின்றதோ" என்றிருந்தாளாய், அவளைப்பா ர்த்து, " ஆணையென் " என்கிறாளென்னுதல். அவன் என்சொல்வழியே வருமாகில், நீயென்கருத்திலே யொழுகுதியாகில், தாய்மார்தொடக்க மானார் வார்த்தைகொண்டு கார்யமில்லையாயிற்றபின்பு, இனித்தடையெ ன்னென்றுமாம். அவனிவள்வழியேவருகையாவ தென்னென்னில், சர் வாதிகனுகையாலே அழியவிடானே, இவள்தானேயிவள் கருத்திலேநட ப்பாளொருத்தியே. (ஆணையென்) தடையென். ஆணை-தடை. ( உலகு தோறலர்தூற்றி ) " அசாதாரணவிபூதியிலுள்ளார்தாம் பிறரறியும்படி யிரார்களிறே " என்றிருக்கைக்கு, அவ்வோலக்கத்திலேவந்தாலோ ! நா ன்சொல்லுவது; வழியடையப்படப்புகுகிறபாடுபார்கிடாய் என்கையி லே. லோகங்களெங்கும்புக்கழிக்கக்கடவேன். அலர்-பழி. என்னை ஊரா ர்பழிசொல்லும்படி பண்ணினுனாகில், தன்னை லோகமாகப்பழிசொல்லு ம்படிபண்ணுகிறேன். (ஆங்கோணைகள்செய்து) என்னுலான மிறுக்குக் களையெல்லாம் பண்ணக்கடவேன். கோணை - மிறுக்கு. அதாவது – நான் கையும் மடலுமாய்ப்புறப்பட்டவாறே, " நம்குணநிஷ்டர்படியிதுவன் றோ " என்று குணங்கொண்டாடி அதிலே செலவெழுதக்கடவன்; " அ ன்று, உன்னைப்பெறுகைக்கு சாதநாநுஷ்டாநம்பண்ணுகிறேன் " என் னக்கடவேன். நான்கையும் மடலுமாய்ச்சென்றவாறே அஞ்சி எதிரேபு றப்பட்டு நிற்கக்கடவன், அப்போதாக அவன்காலிலேகுனியக்கடவேன். " ஜணம்ப்ரவ்ருத்தமிவ " (ருணம்ப்ரவ்ருத்தமிவ) என்னும்படி தொட்டுவி டக்கடவேன், [ஸிரஸாயாசதஸ்தஸ்யவசநம்நக்ருதம்மயா] [ஶிரஸாயாச தஸ்தஸ்யவசநம்நக்ருதம்மயா] என்று புண்படும்படி பண்ணக்கடவேன். பிள்ளைதலையாலேயிரந்த காரியத்தை மறுத்துப்போந்தோமென்றாரிறே. நானித்தைச்செய்தால், அவர்தம்மனிச்சழியாமைக்காக, " தம்மோடு அசாதாரணபந்தமுடையார் தங்களாதரத்தாலே செய்யக்கடவதொன்ற ன்றோவிது " என்னக்கடவன்; " அதன்றிது, நான் சாதநாநுஷ்டாந ம்பண்ணுகிறேன் " என்னக்கடவேன். " நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டாஃ " (நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டாஃ) என்கிறவிதிலே செலவெழுதப்பார்ப்ப ரவர்; " அங்ஙனன்று, உன்னுடம்புபெறுகைக்காகச்செய்கிறேன் " என் னக்கடவேன். (குதிரியாய்) "குந்திரி" என்கிறவித்தை (குதிரி) என்கிற தாய், அதாகிறது – அடங்காஸ்த்ரீயாய், தடையில்லாப்பெண்ணென்ற படியாய், தடையுடையேனன்றிக்கே என்னுதல்; அன்றிக்கே, குதிரி எ ன்று செப்பாய்; ஸ்த்ரீகளுக்கு தநமாகிறது – நாணும்நிறையுமிறே, அதி ட்டுவைக்கும் கலமாகுமிறே சரீரம், அவைபோகையாலே கேவலசரீர

மாத்ரமேயாயென்னுதல். பனைமடலைக்குதிரையாகப்பண்ணிக் கையிலே கொள்ளக்கடவது, அத்தையுடையேனாயென்னுதல். ( மடலூர்துமே ) " செய்யக்கடவதாயிற்றபின்பு, இனி, ஒன்றைநினைத்தொன்றைச்சொல் லுகிறதென்" என்று பார்த்து அதுதன்னையே சொல்லுகிறாள் .. ......*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (நாணுநிறையுமித்யாதி) கீழெல்லாம் மறைத்துப்போந்த வள், இப்போது " மடலூர்தும் " என்பானென்னென்ன (நெஞ்சித்யாதி) விம்மல் பொருமல் - ஆற்றாமையால்வந்த மநோவிகாரம். அதுதன்னையே-மடல்தன்னையே.

கவர்ந்து-அபஹரித்து. நாணுக்கும் நிறைவுக்கும் பேதமேதென்ன (சத்தாப் ரயுக்தமித்யாதி) களவாகிறது - அகவாயிலோடுகிறத்தை மறைக்கையாய், அதுள் ளது.யௌவநத்திலேயாகையாலே, களவென்று - யௌவநத்தைச்சொல்லி, களவு கலந்தாலென்றது - யௌவநம் குடிபுகுந்தாலென்றபடி. கீழ்வாக்யத்வயத்தையும டைவே விவரிக்கிறார் ( வாசலித்யாதிவாக்யத்வயத்தாலே ) புறப்படக்கடவதல் லாத - புறப்படப்பண்ணக்கடவதல்லாத. " என்னை " - என்னுடைய. நொடித்துக் கொண்டு - இங்கிதமாகவழைத்துக்கொண்டு.

கீழே " அலைகடற்பள்ளியம்மான் " என்றுவைத்து, இங்கே " சேணுயர்வா னத்திருக்கும் " என்கிறதென்னென்ன (இவற்றைக்கொண்டித்யாதி) (மிக்கவோக் கம்) என்கிறவிசேஷணத்துக்கு வ்யாவ்ருத்தி ( அந்தராஜாதியித்யாதி ) இது-சாடு. அந்தரத்திலே - ஆகாசத்திலே சஞ்சரிக்கிற, ஜாதியென்றும்; நிஹீநஜாதியென்றும். " தேவபிரான் " என்றதுக்கு - நித்யசூரிகள்பக்கலிலே வெறுப்புத்தோன்றபாவம் ( இங்கேவந்தித்யாதி ) ஓடுக்குமாட்டை- முட்டுக்கோல்கொண்டபஹரித்ததநத்தை. " தன்னை " என்றதுக்குபாவம் ( தன்வெற்றிகாட்டிக்கொண்டென்றது ) " தேவபி ரான் " என்றதுக்கு - நித்யசூரிகள்பக்க லாதரந்தோன்றபாவாந்தரம் ( சம்சாரோ த்யாதி ) அன்றிக்கே, (இங்கேவந்து) இத்யாதிவாக்யம் - "இருக்கும்" என்றதுக்கு பாவமாய், சம்சாரோத்யாதிவாக்யம் - "தேவபிரான்" என்றதுக்குபாவமாதல், கீழ் வாக்யவிவரணமாதல். (சம்சாரமண்டலேத்யாதிவாக்யம்) ( ப்ரஹ்மாதிகள் ) இத் யாதிவாக்யாநந்தரோ அநுசந்தேயம். அதுவாக - அந்தநித்யசூரிக ளோலக்கமாக. அதுவாகப்பெற்றோமிறேயென்று-நித்யசூரிகளுடைய வோலக்கத்தைக்கொண்டா டுகைக்கு ஹேதுவேதென்ன (ப்ரஹ்மாதிகளித்யாதி) ஆதல். லாபத்தால்வரும் துடி ப்பாவது-ஈடுபாடு. துடிப்பு-ஈடுபாடும், க்லேசமும். லாபத்தால்வரும்துடிப்பொழி ய, அலாபத்தால்வரும் துடிப்பறிவர்களோவென்ன ( வ்யதிரேகத்தாலித்யாதி ) அ தாவது-அந்வயரஸமறிந்தபோதே, " இம்மகளைப்பெற்றதாயர் " இத்யாதிப்படியே வ்யதிரேகதுஃகமும் பொறுக்கமாட்டார்களென்றபடி. "சேணுயர்வானம்" என்றது க்கு, " இவற்றைக்கொண்டு " இத்யாதிவாக்யத்திலே-ஒருதாத்பர்யமருளிச்செய்து, தாத்பர்யாந்தரம் (அவன்றானுமித்யாதி) "அறியான்" என்றெப்படியறிவாயென்ன (அறிந்தானாகிலித்யாதி) "தேவபிரான்றன்னை" என்றதுக்கு - நித்யசூரிகள்பக்கலி லும் வெறுப்புத்தோன்றதாத்பர்யாந்தரம் (பார்கிடாயித்யாதி)

வாய்ப்பகட்டு - க்ருஹசௌர்யம். "ஆணை" என்றதுக்கர்த்தத்வயம் - ஆணை யாதல், தடையாதல். அழிக்கநினைக்கிறவன் - அழிக்கநினைக்கப்பட்டவன். ஆணையி டும்போதொருதேவதை யாணையிடவேண்டாவோவென்ன ( இதுக்குடன்பட்டவித்

யாதி ) ( தோற்றவிருந்தாள் ) என்றவநந்தரம், அத்தை யவள்முகவிகாஸத்தாலே யறிந்தென்றுகூட்டுவது. "என்" என்கிறபதத்தை - கீழேகூட்டுதல், மேலேகூட்டுதல். அதாவது - "என் - தோழீ" என்னுதல், "ஆணை - என்" என்னுதல், இவளது கூடப்புகாநின்றதோ - இவளுடையவுத்யோகம் கார்யபர்யவசாயியாகப்புகாநின்றதோ. என், தடையில்லையோவென்ன (அவனென்னித்யாதி) ஒழுகுவுதியாகில்-புகுவுதியாகில். தடஸ்த்தஶங்காபரிஹாரமுகேந பூர்வவாக்யவிவரணம் ( அவனிவளித்யாதி ) சர்வாதிகனென்றது - "தேவபிரான்" என்றத்தைப்பற்ற.

அலர்தூற்றி - அபவாதம்சொல்லி. தேவபிரானைப்பழிசொல்லுகிருளாகில், உலகுதோறலர்தூற்றுகிற தெதுக்கென்ன (அசாதாரணேத்யாதி) அதாவது - தோஷத்தையும் குணவதுபாதேயமாகக்கொள்ளுகிற வவ்விபூதியிலன்றிக்கே, குணத்தையும் தோஷமாகக்கொள்ளுகிற வுலகுதோறென்றபடி. தாம் பிறரறியும்படியிரார்களிறேயென்றது - இவள்செய்கிறநீதி தங்களுக்கநபிமதமாகிலும், பிறரறியாதபடி யடக்கிக்கொண்டிருப்பர்களிறே யென்றபடி. கீழ்வாக்யவிவரணம் (லோகங்களித்யாதி) அழிக்கக்கடவேன் - "குணுங்கன்" என்கிற பெருமையையென்றபடி. அதாவது-மிறுக்காவது. "கோணைகள்" என்கிற பஹுவசநதாத்பர்யம் (நான்கையும்மடலுமித்யாதிவாக்யத்வயம்) குணநிஷ்டர்படியிதுவன்றே - சௌந்தர்யாதி குணநிஷ்டர் க்ஷணகாலவிஶ்லேஷம் பொறுக்கமாட்டாதபடியிதுவன்றே. காலிலேகுனிந்தா லவனுக்கு மிறுக்காயிருக்குமோவென்ன (ருணம்ப்ரவ்ருத்தமித்யாதி) தொட்டுவிடுகை-ஈடுபடுத்துகையும், ப்ரஹரிக்கையும். ப்ரமாணாந்தரம் ( சிரஸேத்யாதி ) "[Grantha text]" ( கோவிந்தேதியதாக்ரந்தத்க்ருஷ்ணமாம் தூரவாஸிநம் । ருணம்ப்ரவ்ருத்தமிவமேஹ்ருதயாந்நாபஸர்ப்பதி ) இத்யுத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரம் ப்ரதிஸஞ்சயோக்தம் க்ருஷ்ணவசநம். "[Grantha text]" ( மாந்நிவர்த்தயிதும்யோஸௌசித்ரகூடமுபாகதஃ । ஶிரஸாயாசதஸ்தஸ்யவசநம்நக்ருதம்மயா ) இதியுத்தகாண்டே ராவணவதாநந்தரம்ராமஃ. இதுக்கர்த்தம் (பிள்ளையித்யாதி) காலிலேகுனிந்ததுக்கு மீஶ்வரன் செலவெழுதினபடியை த்விவிதமாகக்காட்டுகிறார் ( நானித்தைச்செய்தாலித்யாதியாலும், நித்யாஞ்சலிபுடா இத்யாதியாலும் ) "[Grantha text]" ( முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேதத்யச்ச்வேதத்வீபவாஸிநாம் । நித்யாஞ்சலிபுடாஹ்ருஷ்டாநம இத்யேவவாதிநஃ ) இத்தைச்செய்தால் - காலிலேகுனிந்தால். மனிச்சு-பௌருஷம். "[Grantha text]" ( நந்தவ்யஃபரமஶ்ஶேஷீஶேஷாநந்தாஈரிதாஃ । நந்த்ருநந்தவ்யபாவோயம்நப்ரயோஜநபூர்வகஃ ) என்றத்தைக்கடாக்ஷித்து ( அசாதாரணபந்தமுடையாரித்யாதி ) தங்களாதரத்தாலே "ஸ்வரூபப்ராப்தமன்றே" என்கிறதங்களாதரத்தாலே. நித்யாஞ்சலிபுடாஹ்ருஷ்டாஃ என்கிறவிதிலேயென்றது-ப்ராப்யத்வத்திலேயென்றபடி.

முந்தினவர்த்தத்துக்கு, குதிரி-குத்ஸிதஸ்த்ரீயாய், அடங்காப்பெண்ணென்றபடி; அன்றிக்கே, ஆபரணமிட்டுவைக்கும் செப்பென்னுதல்; குதிரையையுடையவளென்னுதல், "மடலூர்துமே" என்கிறவவதாரணார்த்தம் ( செய்யக்கடவதாயி

த்யாதி ) ஒன்றைநினைத்து - மடலைநினைத்து. ஒன்றைச்சொல்லுகிறதென் - "உலகு தோறலர்தூற்றி"என்றுசொல்லுகிறதென். அதுதன்னையே-மடலூருகைதன்னையே. க்ரமேணாந்வயஃ. .. ..........................................................*

# பத்தாம்பாட்டு.

யாமடலூர்ந்துமெம்மாழியங்கைப்பிரானுடைத்
தூமடற்றண்ணந்துழாய்மலர்கொண்டுசூடுவோம்
யாமடமின்றித்தெருவுதோறயற்றையலார்
நாமடங்காப்பழிதூற்றிநாடுமிரைக்கவே.

## ஆறுயிரப்படி.

(யாமடலூர்ந்தும்) யாமடமின்றித்தெருவுதோறயல் தையலார் நாவுங்கூடமடங்காதபழிகளைத்தூற்றி நாடுமிரைக்க யாம்மடலூர்ந்தாகிலும், எம்மாழியங்கைப்பிரானுடைத் தூமடல்தண்ணந்துழாய் மலர் கொண்டு சூடுவோமென்கிறாள் ..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசயபோக்யமான அசாதாரண சிஹ்நங்களையுடையவனை யெங்கும்பழிதூற்றி ஜகத்க்ஷோபம்பிறக்கும்படி மடலூர்ந்தேயாகிலு மவன்மாலையைச்சூடுவோமென்கிறாள்.

அத்யந்தாபிநிவேஶத்தாலே, யா-ஏதேனுமொருபடியாலும் ஸ்த்ரீத்வாநுரூபமான. மடம்-ஒடுக்கம். இன்றி-இன்றியே. லோகத்தளவில்பர்யவஸியாதே, தெருவுதோறு-தெருவுதோறும்புக்கு. அயல்-அயலாரான. தையலார்-ஸ்த்ரீகளானவர்கள். நா-நா. மடங்கா-ஓவாதேசொல்லும். பழி-பழியை. தூற்றி-தூற்றி. நாடும்-சகலஜகத்தும். இரைக்க-க்ஷுபிதமாய்க்கூப்பிடும்படி. யாம் - மடலூரத்தகாத ஸ்த்ரீத்வத்தையுடையநாம். மடல்-நமக்கீடல்லாதமடலை. ஊர்ந்தும்-ஊர்ந்தேயாகிலும், ஆழியங்கை-கையுந்திருவாழியுமானவழகையநுபவிப்பித்து. எம்-நம்மைவஶீகரித்த. பிரானுடை-உபகாரகனுடைய. தூ-செவ்வியாலேதூய்தான. மடல் - இதழையுடைய. தண்-ஶிரமஹரமாய். அம்-தர்ஶநீயமான. துழாய் - திருத்துழாய். மலர் - பூந்தாரை. கொண்டு - "பதிஸம்மாநிதாஸீதா" (பதிஸம்மாநிதாஸீதா) என்கிறகணக்கிலே கையில்மடல்வாங்குகைக்காக அவன்தரவாங்கி. சூடுவோம் - நந்தலையிலேசூடக்கடவோம்.

பன்மை - மடலூரத்துணிந்த கர்வோக்தி. யாமடமென்றது - ஏதேனுமொருமடப்பமுமென்றபடி..... .......................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

ஜகத்க்ஷோபம்பிறக்கும்படி மடலூர்ந்தாகிலும், நிரதிசயபோக்யனானவனைக் காணக்கடவேனென்கிறாள்.

(யாமடலூர்ந்தும்) செய்யக்கடவதல்லாதத்தைச்செய்தேயாகிலும். "தத்ஸ்யஸத்ருஸம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஸம்பவேத்) என்றிருக்கக்கடவநாம், மடலூர்ந்தேயாகிலும். இங்கு, மடலாகநினைக்கிறது; பெற்றன்றித்தரியாத உபேயவைலக்ஷண்யமும், அதுக்கடியான உபாயவைலக்ஷண்யாநுசந்தாநமும், "அவ்வுபாயந்தன்னாலேபேறு" என்கிறதுணிவும், வேறொன்றை உபாயமாகநினையாமையும், க்ரமப்ராப்திபற்றாதொழிகையும்-மடலாய்ச்செல்லுகிறது. "மடலூர்தும்" என்றாள்கிழ்; "இதுனக்குவார்த்தையல்ல; முதல்தன்னிலே ஸ்த்ரீகள் மடலூரக்கடவதல்லவாகவிலக்கிற்று; அதுக்குமேலே, நீயாகிறாய் 'நித்யம்ப்ராணஸமாஹிதா' (நித்யம்ப்ராணஸமாஹிதா) என்கிறபடியே, உன்னையழியமாறியும் அவனுக்குஹிதகாமையாயிருப்பாளொருத்தி; அவன்றான் உன்பக்கல் வருகைக்கு உன்னிற்காட்டில் த்வரித்திருக்கிறானொருவன்; க்ரமப்ராப்திபற்றாமல் படுகிறாயித்தனை, நீசாஹஸத்திலே ஒருப்படுகிறவிது உன்ஸ்வரூபத்தோடுசேராது" என்ன; அதுபார்க்கவொண்ணுதபடிகாண் எனக்கவன்பக்கலுண்டான ப்ராவண்யாதிசயமென்கிறாள் (யாமடலூர்ந்தும்) இப்படியிருக்கிற என்ஸ்வரூபத்தை ய்ழியமாறியாகிலும்பெறத்தவிரோன். (மடலூர்ந்தும்) இத்தைச்செய்தாகிலும். செய்யக்கடவதல்லாததுசெய்தாகிலும் பெறக்கடவேன். அஹமர்த்தத்தோடு சேராத செயலைச்செய்தேயாகிலும். ப்ரணவத்திலஹமர்த்தத்துக்கு வாசகஸப்தமிருக்கிறபடியாயிற்று - யாமென்கிறது. அத்தலையையிட்டிறே யிவனைநிரூபிப்பது. (எம்மாழியித்யாதி) நாராயணஸப்தார்த்தம். இவனையிட்டிறே அவனைநிரூபிப்பது. (எம்மித்யாதி) அவன்கையுந்திருவாழியும்போலேயன்றோ நான்கையும் மடலுமாய்ப்புறப்பட்டாலிருப்பது. நான் கையும் மடலுமாய்ப்புறப்பட்டால், அஞ்சி எதிரோவந்து தன்கையிலாபரணத்தைவாங்கி என்கையிலேயிட்டு, தன் தோளில் மாலையைவாங்கி என் தோளிலேயிட்டானாகில் குடியிருக்கிறான்; இல்லையாகில் எல்லாங்கூடவில்லையாகிறது. (தூமடல்) என்தோளில் மாலையைப்பாராய், நான்செவ்விமாலை சூடவேணுங்காண். விரஹத்தாலே தன்மார்பில் மாலைசருகாயிறேகிடக்கிறது, செவ்விமாலையுள்ள தவன்பக்கலிலேயிறே. ஒன்றைச் சொல்லுகிறாயாகில் செய்துதலைக்கட்டப்புகுகிறாயோ, உன் ஸ்த்ரீத்வமுன்னைக்காற்கட்டுங்காணென்ன (யாமடமின்றி) அதுவோ!; ஸ்த்ரீத்வமில்லாதார்செய்வதை முதலிலேசெய்யக்கடவோம். (தெருவுதோறு) "உலகுதோறலர்தூற்றி" என்றாளே கிழே; அங்ஙன் லோகமாகத்திரண்டத்திலே லோகத்துக்காக ஒருவார்த்தைசொல்லிவிடுவேனோ, தெருவுகள்தோறும்புக்கு, அறியாதாரொல்லாரு மறியும்படி அலர்தூற்றக்கடவேன். "க்ருஹார்ச்சனைகள், அர்ச்சகபராதீநம்" என்றொருமூலைகளிலே புக்கிருக்கவொட்டுவேனோ. அயல்தையலாருண்டு - அங்குள்ளவர்களான ஸ்த்ரீகள்; அவர்கள் நாப்புராளாதபடியான பழிகளையுமெல்லாம்சொல

ல். சிசுபாலாதிகள்வாயில் கேளாதவையுமெல்லாம் என்வாயிலேகேட்கவிறே புகுகிறான். அன்றிக்கே, அவர்கள் நா, மீளாதே உருவப்பழி சொன்னபடியே யிருக்கும்படியான பழிகளைத்தூற்றியென்றுமாம். அன்றிக்கே, நாம் தங்களுக்கடங்காதேமடல்கொண்டு புறப்பட்டபழிதூற்றியென்றுமாம். (நாடுமிரைக்கவே) அவனென்னுடைய ஊரவர்கவ்வைப ரிஹரித்திலனாகில், நான் தன்னைநாடாக இரைக்கும்படிபண்ணுகிறேன். ஜகத்க்ஷோபம்பிறக்கும்படிபண்ணுகிறேன். "ஒருத்தி ஒருவனைப்படுத்திற்றே!, ஒருவன்முகங்காட்டிற்றிலன்" என்னும்படிபண்ணுகிறேன். தத்வபரமானவாக்யங்களு முபாஸநபரமானவாக்யங்களு மெல்லாமழியவிறேபுகுகிறது; "ஒருவனுளனாகில், ஆசைப்பட்டவளிப்படிபடவிருக்குமோ, ஆனபின்பு நிரீஶ்வரங்காண்ஜகத்து" என்னும்படிபண்ணுகிறேன். அவனோடேகலந்த என்வார்த்தையொழிய, அடியில்லாதவேதஞ் சொன்னவார்த்தையைக்கேட்பர்களோ. ப்ரமேயஶ்ரேஷ்டமானத்தை அழித்தேன், இனி ப்ரமாணஶ்ரேஷ்டமானதுதானேநில்லாதிறே. "ஆசைப்பட்டார்க்குப்பலமிதுவானபின்பு இனி உபாஸநத்துக்குப் பலமில்லை" என்று கைவாங்கி ஜகத்தடைய நாஸ்திகராம்படிபண்ணுகிறேன். (நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும்) நாட்டார்சொல்லும்பழிதானே தாரகமிறே. "ஊரவர்கவ்வைஎரு" என்றாளே, அதிலேயிறே வேறான்றித்தரிப்பது.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (யாமடலித்யாதி) "நாடுமிரைக்க - யாமடலூர்ந்தும்" என்றத்தைக்கடாக்ஷித்து (ஜகத்க்ஷோபமித்யாதி) "எம்மாழி" இத்யாதியைப்பற்ற (நிரதிசயபோக்யனென்றது)

"ஊர்ந்தும்" என்கிற அபிஸந்தார்த்தம் (செய்யக்கடவதல்லாதவித்யாதி) "யாம்" என்றதுக்குபாவம் (தத்தஸ்யேத்யாதி) ஸ்வாபதேஶம் (இங்குமடலாகவித்யாதி) (இங்குமடலாகநினைக்கிறது) என்றவநந்தரம், எத்தையென்னிலென்று கூட்டுவது. மடலென்கிறது - க்ரமப்ராப்திபற்றாதொழிகையாகிற த்வரையையேயாகிலும், தத்தேதுக்களாகையாலே மற்றநாலையும் மடலென்கிறது. உபேயவைலக்ஷண்யம் - உபேயபூதனான ஈஶ்வரனுடைய சௌந்தர்யாதி நிபந்தநமானவைலக்ஷண்யம். அதுக்கடியான-பெற்றன்றித்தரியாமைக்கடியான. உபாயவைலக்ஷண்யம்-உபாயபூதனான ஈஶ்வரனுடைய சர்வஜ்ஞத்வ சர்வஶக்தித்வாதி நிபந்தநமானவைலக்ஷண்யம். துணிவு-ரக்ஷகாந்தரசூந்யமாக "ஈஶ்வரனாலேயேபேறு" என்கிறவத்யவஸாயம். வேறொன்றை - சித்தோபாயவ்யதிரிக்தமான வுபாயாந்தரங்களை. உபாயவைலக்ஷண்யாறு சந்தாநத்துக்கு த்வரா ஹேதுத்வமெப்படியென்னில்; ஜ்ஞாநஶக்த்யாதிவிஶிஷ்டனே யுபாயமாகையாலே விளம்பஹேதுவில்லையென்று த்வராஹேதுவாம். உபாயமவிளம்ப்யபலப்ரதமானாலும், தனக்கத்யவஸாயமில்லாவிட்டாலாறியிருக்கலாம்; அத்யவஸாயமுண்டானால் லாறியிருக்கப்போகாமையாலே துணிவும் த்வராஹேதுவென்றபடி. "மடலூர்ந்தும்" என்ற அபிஸந்தத்தாலே-"மடலூரவொண்ணாது" என்கிறநிஷேதம் ப்ரஸக்தமாகவேண்டுகையாலே, அந்தப்ரஸக்

தியைக்காட்டுகிறூர் ( மடலூர்துமென்றுள்கிழித்யாதி ) யத்வா, புநஸ்ச ஒருவைவஷ்ணவமொழுந்தருள, அடியேதொடங்கி 'ப்ரஸாதிக்கிறூர் ( மடலூர்துமென்றுளித்யாதி ) என்னுதல். (விலக்கிற்று) " கடலன்னகாமத்தராகிலும் " இத்யாதியாலேவிலக்கிற்று. உன்ஸ்வரூபத்தோடு - அவனுக்கதிசயகரமான உன்ஸ்வரூபத்தோடு. "மலர்கொண்டுசூடுவோம்" என்றத்தைக்கூட்டி, " யாம் " என்றதிலேநோக்காகபாவம் (இப்படியித்யாதி) என்ஸ்வரூபத்தை-ஸ்த்ரீத்வஸ்வரூபத்தை. இது - " யாம் " என்றபதத்துக்கு தாத்பர்யம். ஶப்தார்த்தம் ( இத்தைச்செய்தாகிலுமென்றது ) இத்தைநிஷித்தமான மடலூருகையை. " மலர்கொண்டுசூடுவோம் " என்றத்தைக்கூட்டி, " மடலூர்ந்தும் " என்றதிலேநோக்காகதாத்பர்யம் (செய்யக்கடவதித்யாதி) "யாமடலூர்ந்தும்" என்றதுக்கு ஸ்வாபதேஶத்திலேபாவம் ( அஹமர்த்தத்தோடித்யாதி ) அதாவது - ப்ரணவோக்தமான சேஷத்வஸ்வரூபத்துக்குச்சேராத ஸ்வப்ரவ்ருத்தியைச்செய்தேயாகிலுமென்றபடி. ப்ரணவத்திற்போலே இங்கு அஹமர்த்தவாசகமான சப்தமேதென்ன (ப்ரணவத்திலித்யாதி) ப்ரணவத்திலஹமர்த்தத்துக்கு - ப்ரணவோக்தசேஷத்வாஶ்ரயமான வஹமர்த்தத்துக்கு. " ஓங்காரோவிஷ்ணுவாசகஃ " ( ஓங்காரோவிஷ்ணுவாசகஃ ) என்று-ப்ரணவமீஶ்வரவாசகமன்றோவென்ன (அத்தலையையித்யாதி) அதாவது -"ராஜபுருஷன்" என்கிறவிடத்தில் - ராஜாவையிட்டு புருஷனை நிரூபித்தாப்போலே, ஈஶ்வரனையிட்டு இவனை நிரூபிக்கிறதாகையாலே, சப்தப்ராதாந்யத்தையிட்டுஜீவனைச்சொல்லுகிறதென்னலாமென்றபடி.

(நாராயணசப்தார்த்தம்) என்றதுக்கு தாத்பர்யமேதென்ன (இவனையித்யாதி) அதாவது-நாரங்களுக்கயநமென்று-சேதநனையிட்டு அவனைநிரூபித்தவோபாதி, இங்கும் " எம் " என்று-இத்தலையையிட்டு அவனைநிரூபிக்கிறதென்றபடி. " யாமடலூர்ந்தும் " என்றத்தையும்கடாக்ஷித்து, " ஆழியங்கைப்பிரான் " என்றதுக்குபாவம் (அவன்கையுமித்யாதி) கையுந்திருவாழியும்போலே-கையுந்திருவாழியுமாய்ப்புறப்பட்டாப்போலே. இவ்வாக்யத்துக்குபாவம் - அவன்கையுந்திருவாழியுமாய்ப்புறப்பட்டால் கார்யமமோகமாமாப்போலே, நான்கையும் மடலுமாய்ப்புறப்பட்டால் கார்யமமோகமாம்படியுமென்று. அன்றிக்கே, அவனுக்குப்போலே தேஜஸ்கரமென்றுமாம். " தூமடற்றண்ணந்துழாய் " இத்யாதியைக்கடாக்ஷித்து, " ஆழியங்கை " என்றதுக்குபாவாந்தரம் (நான் கையுமித்யாதி) அதாவது-தனக்கிடுகைக்காகத்திருவாழியைச்சொல்லுகிறுளென்றபடி. ஆபரணத்தை - திருவாழியை. அன்றிக்கே, " ஆழி " என்று - திருவாழிமோதிரமென்றுமாம். எல்லாங்கூட-உபயஸ்வரூபமும். தூமடல்-செவ்வியுடையதளம். " தூமடல் " என்கிறவிசேஷணத்துக்குபாவம் ( என்தோளிலித்யாதி ) தனக்குச்செவ்விமாலையில்லையோவென்ன ( விரஹத்தாலேயித்யாதி )

" மடலூர்ந்தும் " என்றத்தையுங்கூட்டிபாவம் ( அதுவோவித்யாதி ) அதுவோவென்றது-ஸ்த்ரீத்வமோ காற்கட்டுவதென்றபடி. ( முதலிலே - ஸ்த்ரீத்வமில்லாதார் ) என்றந்வயிப்பது. ஸ்த்ரீத்வமில்லாதார் - ஸ்வதந்த்ரர். கீழே, " உலகுதோறலர்தூற்றி " என்றுசொல்லியிருக்க, மீளவும் "தெருவுதோறலர்தூற்றி" என்றதுக்குபாவம் (உலகுதோறித்யாதி) அலர்தூற்ற-அ[illegible]வாதம்சொல்ல. "தெருவுதோறலர்தூற்றி" என்றதுக்கு ஸ்வாபதேஶம் (க்ருஹார்ச்சனைகளித்யாதி) அர்ச்சாவதாரப்ராவண்யத்தைப்போக்கி நாஸ்திகராம்படிபண்ணக்கடவனென்றபடி. அயற்றையலார் நாமடங்காப்பழிதூற்றி என்று ப்ரதீகம்கண்டுகொள்வது. நாப்புரளாதபடியான-சொல்லக்கூசும்படியான. " அயற்றையலார் " என்றதுக்கு ஸ்வாபதேஶம்

(சிசுபாலாதிகளித்யாதி) த்விதீயார்த்தத்துக்கு, "நாமடங்கா" என்றது - நாமீளா தேயென்றபடி. த்ருதீயார்த்தத்துக்கு - "நாம், அடங்கா" என்று பதச்சேதம். அடங்கா - அடங்காதே. தங்களுக்கு - அயற்றையலாரான தங்களுக்கு.

இரைக்க - கோஷிக்க. "நாமடங்கா" என்றதின் முந்தினவர்த்தத்வயத்துக்குச்சேர்பாவம் (அவனென்னுடையவித்யாதி) அதாவது - நானும்பழிதூற்றி, நாடுமிரைக்கும்படிபண்ணுகிறேனென்றபடி. "நாடுமிரைக்க" என்றதுக்குஸ்வாபதேசம் (தத்த்வபரமானவித்யாதி) தத்த்வபரமானவாக்யங்கள் - "நாராயணபரம் ப்ரஹ்ம" (நாராயணபரம்ப்ரஹ்ம) இத்யாதிவாக்யங்கள். உபாஸநபரமானவாக்யங்கள் - "நிதித்யாஸிதவ்ய:" (நிதித்யாஸிதவ்ய:) இத்யாதிகள். வாச்யபூதனில்லாமையாலே யழியவிறேபுகுகிறதென்றபடி. அழியும்படி யெப்படியென்ன (ஒருவனித்யாதி) வேதம்சொன்னத்தைவிட்டு நம்வார்த்தையைப்ரமாணமாகக்கொள்ளுவர்களோவென்ன (அவனோடேகலந்தவித்யாதி) வாக்யங்களையழிக்கப்போமோவென்ன (ப்ரமேயஸ்ரேஷ்ட்டமித்யாதி) அதாவது-அந்தரங்கையான்நானிப்படி ப்ரமேயமானவஸ்துவை யழிக்கையாலே, தத்ப்ரதிபாதகமான ப்ரமாணமப்ரமாணமாயேவிடுமென்றுகருத்து. உபாஸநபரவாக்யங்களை யழிக்கும்படியெப்படியென்ன (ஆசைப்பட்டார்க்கித்யாதி) "நாடுமிரைக்கவே" என்றதுக்கு - ஈஸ்வரவிஷயமாகப்பழிசொல்லுவர்களென்றுசொல்லி, நாயகிவிஷயமாகத் தாத்பர்யாந்தரம் (நாட்டாரித்யாதி) "நாடுமிரைக்கவே" என்றவவதாரணத்துக்கு பாவமாதல் (நாட்டாரித்யாதி) இவ்வாக்யத்துக்கு - "அயற்றையலார் நாமடங்காப்பழி யென்னைத்தூற்றவும், நாடுமென்னையிரைக்கவும், அதுவே தாரகமாக-மடலூர்ந்தும், என்றந்வயமுகேந தாத்பர்யமாகக்கண்டுகொள்வது. நாட்டார்பழி தாரகமோவென்ன (ஊரவரித்யாதி)

யாமடமின்றி - நாம் ஸ்த்ரீத்வாநுரூபமான வொடுக்கமின்றிக்கேயென்று சப்தார்த்தம். லஜ்ஜாஸூந்யராயென்றபடி. "ராமஸ்ய தயிதா பார்யா நித்யம் ப்ராணஸமா ஹிதா" (ராமஸ்யதயிதாபார்யாநித்யம்ப்ராணஸமாஹிதா) இத்யாதி ஸம்க்ஷேபே. உத்தரார்த்தபூர்வகம் பூர்வார்த்தத்தையநுசந்திக்கை யந்வயம்...*

## பதினொன்றாம்பாட்டு.

இரைக்குங்கருங்கடல்வண்ணன்கண்ணபிரான்றன்னை
விரைக்கொள்பொழிற்குருகூர்ச்சடகோபன்சொன்ன
நிரைக்கொளந்தாதியோராயிரத்துளிப்பத்து
முரைக்கவல்லார்க்குவைகுந்தமாகுந்தம்மூரெல்லாம்.

### ஆறுயிரப்படி.

(இரைக்கும்) ஓதங்கிளருகிறகடல்போலேயிருந்த திருமேனியையுடைய கண்ணபிரான்றன்னை விரைக்கொள்பொழில் குருகூர்ச்சடகோபன்சொல் நிரைக்கொளந்தாதியாயிரத்து ளிப்பத்துமுரைக்கவல்லார்க்கு; இத்திருவாய்மொழியைச்சொல்ல, தாங்களிருந்ததேசமே தங்களுக்குத்திருநாடென்கிறார்...........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யநுசந்திக்கவல்லவர்களிருந்ததேசமே பரமபதமாமென்று பலத்தையருளிச்செய்கிறுர்.

இரைக்கும் - அலையெறிந்திரைக்கிற. கருங்கடல் - கருங்கடல்போலே அபிவ்ருத்தமான. வண்ணன்-வடிவழகையுடையனுய். பிரான்-அவ்வழகை யாஸ்ரிதர்க்கநுபவிப்பிக்கும் ஸ்வபாவனுன. கண்ணன்றன்னை-க்ருஷ்ணனை. விரைக்கொள்-பரிமளோத்தரமான. பொழில்-பொழிலையுடைய. குருகூரவர் - திருநகரியிலுள்ளார்க்கு நிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொன்ன-அருளிச்செய்த. நிரை-எழுத்தும் அசையும் சீரும் தளையும் அடியும் தொடையும் பாவும் இனமும் இசையும் தாளமும் மற்றுமுள்ள சப்தாலங்காரமும். கொள்-உடையதாய். அந்தாதி - அந்தாதியாய். ஓர்-அத்விதீயமான. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியினுள்ளும். இப்பத்தும்-இவைபத்தையும். உரைக்கவல்லார்க்கு-சப்தமாத்ரோச்சாரணம் பண்ணுமவர்களுக்கு. தம்-தாந்தாங்களிருந்த. ஊரெல்லாம்-ஊரெல்லாம். வைகுந்தம் - பரமபதமென்னலாம்படி. ஆகும்-ஆநந்தாவஹமாயிருக்கும்.

இது-கலித்துறை.......................................................................*

## ஈடு - பதினென்ரும்பாட்டு.

நிகமத்தில் – இத்திருவாய்மொழி அப்யசிக்கவல்லாரிருந்த தேசத்தே அவன்தானேவந்து நித்யசம்ப்ஶ்லேஷம் பண்ணுமென்கிறுர்.

(இரைக்குங்கருங்கடல்வண்ணன்) அநந்தாழ்வான்பணித்தாகை நஞ்சீயர்வந்து பட்டருக்கு " 'வாவஜாநய' (சாபமாநய) என்றபோது கடல்கீழ்மண்கொண்டு மேல்மண்ணெறிந்தாற்போலேயாயிற்று, இவள் 'மடலூர்வன்' என்றதுணிவைக்கேட்டு அவன்தன் சர்வாதிகத்வங் கலங்கினபடி " என்றருளிச்செய்தார். வண்ணமென்றவிது – ஸ்வபாவபரமானபோதைக்காகிறது. (கடல்வண்ணன்) மடலூர்ந்தாகிலும் பெறவேண்டும்படியான வடிவழகைச்சொல்லுகிறது. ஓதங்கிளர்ந்தகடல்போலே ப்ரமஹரமானவடிவையுடையவன். (கண்ணபிரான்றன்னை) அவ்வடிவை, அவதரித்து எனக்குபகரித்தக்ருஷ்ணனை. வடிவழகிது, ஸ்வபாவமிது. (விரைக்கொள்பொழில்) இவர்கையும்மடலுமாய்ப் புறப்பட்டவாறே, ஊர்சஞ்சாதபரிமளமானபடி, " அவன்வரவணித்து " என்று. (நிரைக்கொளந்தாதி) இவர்முன்னடிதோற்றுதே மடலூரச்செய்தேயும், ப்ரபந்தமானது, எழுத்தும்சொல்லும் பொருளும் அடியும் தொடையும்பாவும் இசையும் தாளமும் அந்தாதியும் சேரவிழுந்தபடி. [ஶோக ஶ்லோகத்வமாகத꞉] [ஶோகப்ஶ்லோகத்வமாகத꞉] என்று சோகவேகத்தாலேசொல்லச்செய்தேயும், ப்ரஹ்மாவின்ப்ரஸாதத்தாலே சர்வலக்ஷணோபேதமானுப்போலே ; இவர்முன்னடிதோற்றுதபடி கலங்கிச்சொல்லச்செய்தேயும், பகவத்ப்ரஸாதமடியாகப்பிறந்த ப்ரபந்தமாகையாலே லக்ஷணங்கள் சேரவிழத்தட்டில்லையிறே. (உரைக்கவல்லார்க்கு) மடலெ

டுக்கவேண்டா, இப்பாசுரமாத்ரத்தைச்சொல்லவமையும். (வைகுந்தமா குந்தம்மூசொல்லாம்) அவர்களுக்குத்தேஶ்யபூமி பரமபதமாம். அன்றிக்கே, இவர்களுக்கு நாடறியமுடலெடுத்துக்கொண்டு புறப்படவேண்டாதே, இவர்களிருந்தவிடங்களிலே அவன் தானேவந்து நித்யசம்ஶ்லேஷத்தைப்பண்ணுகையாலே, அவர்களிருந்தவிடந்தானே பரமபதமாம். அவன்சந்நிதியுள்ளவிடம் ஸ்ரீவைகுண்டமாகக் குறையில்லையிறே. இப்பாசுரமாத்ரத்துக் கிதுகூடுமோவென்னவொண்ணாது; இதில்சொல்லுகிற பகவத்குணங்களைப்பார்த்தால், "இந்தஉக்திதானும்மிகை" என்னலாம்படியிருக்கும்; இதுகூடாதாகில், பரிபூர்ணசமாஶ்ரயணத்துக்கும் பலமில்லையாம்; இங்ஙனன்றாகில் புருஷோத்தமன் இதரஸஜாதீயனானானே.*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (இரைக்குமித்யாதி) "நிரைக்கொளந்தாதி" இத்யாதியைப்பற்ற (இத்திருவாய்மொழியித்யாதி)

வண்ணம்-ஸ்வபாவமாதல், வடிவாதல். கீழே "நாடுமிரைக்கவே-யாமடலூர்ந்தும்" என்றவநந்தரம், "இரைக்குங்கருங்கடல்வண்ணன்" என்றதுக்குக்கருத்தேதென்ன (அநந்தாழ்வானித்யாதி) அநந்தாழ்வான்நிர்வாஹத்திலே, வண்ணம்-ஸ்வபாவம். "கண்ணபிரான்" என்றது - க்ஷுபிதமானகடல்போலே கலங்கினஸ்வபாவத்தையுடையவனாய்வந்து கண்ணுக்குவிஷயமான வுபகாரகனென்றபடி. வந்து- திருநாராயணபுரத்தில்நின்றும்வந்து. ஆகிறது - அநந்தாழ்வான் நிர்வாஹமென்றபடி. "இரைக்கும்" என்றது - லக்ஷணயா, க்ஷுபிதமென்றபடி. பட்டர்நிர்வாஹம் (மடலூர்ந்தாகிலுமித்யாதி) வண்ணம்-வடிவு. இப்போது "இரைக்கும்" என்ற விசேஷணத்துக்குபாவம் (ஓதங்கிளர்ந்தவித்யாதி) ஓதம்-திரை. இந்தப்பக்ஷத்தில், "இரைக்கும்" இத்யாதிக்கு -வடிவழகிது, ஆஶ்ரிதபவ்யதாஸ்வபாவமிது, எங்ஙனே நான்மடலூராதொழிவதென்றபடி. "இரைக்கும்கருங்கடல்வண்ணன்" என்று - "மாசறுசோதி" என்றத்தைச்சொல்லுகிறது. "கண்ணபிரான்" என்று - "ஆசறுசீலனை" என்றத்தைச்சொல்லுகிறது. கீழ்ச்சொன்னபதத்வயார்த்தநிகமநம் (வடிவழகித்யாதி) (ஸ்வபாவமிது) என்றவநந்தரம், மடலூராதொழியப்போமோவென்றுகூட்டி நிர்வஹிப்பது.

நிர்வாஹகரான விவர்சோவுபடாநிற்க, ஊரில் சம்ருத்திக்கடியேதென்ன (இவரித்யாதி)

நிரைக்கொள் - லக்ஷணசம்ருத்தியையுடைத்தான். நிரையென்று - ஒழுங்காய், லக்ஷணசமூஹமென்றபடி. முன்னடிதோற்றாதே மடலூரச்செய்தேசொன்னது லக்ஷணோபேதமாகக்கூடுமோவென்ன (ஶோகஶ்ஶ்லோகத்வமித்யாதி) "ஸஶோ [illegible] ஶ்லோகத்வமாகத:" (ஸமாக்ஷரைஶ்சதுர்ப்பிர்யஃபாதைர்க்கீ

தோமஹார்ஷிணு । ஸோநவ்யாஹாரணுத்பூயஶ்ஶோகஸ்ஸ்லோகத்வமாகத: ) இதிபா ஸ்காண்டேத்விதீயே.

முந்தினவர்த்தத்துக்கு, “உரைக்கவல்லாரான-எல்லார்தமக்கும்-ஊர்-வைகு ந்தமாகும்” என்று சப்தநிர்வாஹமாதல்; ஊர்-உத்தேஶ்யபூமி. “வைகுந்தம்-எல் லாம்-தம்மூர்-ஆகும்” என்று சப்தநிர்வாஹமாதல். த்விதீயார்த்தத்துக்கு, “தம்மூ ரெல்லாம் - வைகுந்தமாகும்” என்று சப்தார்த்தநிர்வாஹம். இவர்களிருந்தவிடத் தை வைகுந்தமாகச்சொல்லலாமோவென்ன (அவன்ஸந்நிதியித்யாதி)

மடலெடுக்கவேண்டும்படி துர்லபமான பலமிப்பாசுரமாத்ரத்தால் பெற லாமோவென்ன (இப்பாசுரமித்யாதி) “ஸங்க்ஷோ தூஷிதோவிந்” (ஸப்தமாத் ராபிலாபி:) என்கையாலே, பலமுண்டென்றபடி. பகவத்குணங்களாவன - “ஆச றுசீலனே,” “வாசுதேவன்” இத்யாதிகளிற்சொல்லுகிறகுணங்கள். இது கூடாதாகி ல் - பகவத்குணதிக்யத்தாலே பலஸித்திகூடாதாகில். பரிபூர்ணசமாஶ்ரயணமாவ து-பரமபக்தியுக்தராயாஶ்ரயிக்கை. பலமில்லையாமென்றது-பலகௌரவத்தைப்பா ர்த்தால் பரிபூர்ணசமாஶ்ரயணமு மத்யந்தவிஸத்ருஶமாகையாலே, அதுக்கும் பல மில்லையென்றபடி. “அவன்றுனிவ்வளவை வ்யாஜமாக்கி மஹாபலத்தைக்கொடுக் கும்” என்று சொல்லலாமோவென்ன (இங்ஙனித்யாதி)

க்ரமேணாந்வய:.................................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( மாசறுசோதி. )

ஜ்யோதீரூபாங்ககத்வாத் ஸரஸிஜநயநாந் நிஷ்டவித்வம்ஸகத்வாத்
மேகௌகஶ்யாமலத்வாச் ச்ரிதஸரஸதயோத்க்ருஷ்டஸௌலப்யயோகாத் ரக்ஷா
யாம்ஸாவதாநாத் ஸ்வஸமதநுதயா ஸேவ்யகாலாக்ருதஸ்வாத்
ப்ராஹாத்யம் ஜநயதி மமவாநித்யவாஸீமராமீ: (எக)

( ஜ்யோதீரூபாங்ககத்வாத் ) மாசறுசோதி - நிர்மலதேஜோரூபமான திரு மேனியையுடைத்தாகையாலும்; ( ஸரஸிஜநயநாத் ) என் செய்யதாமரைக்கண்ணன்- ஸரஸிஜஸத்ருஶமானதிருக்கண்மலரை யுடையனாகையாலும்; ( அநிஷ்டவித்வம்ஸ கத்வாத் ) ஊர்ந்தசகடமித்யாதி - சகடாஸுராதி விரோதிநிரசநசீலனாகையாலு ம்; (மேகௌகஶ்யாமளத்வாத்) காரமர்மேனி - *நீலமேகநிபமானதிருநிறத்தையு டையனாகையாலும்; ( ஶ்ரிதஸரஸதயா ) என்னெஞ்சமவனென்றேகிடக்கும் - ஆஶ்ர ிதரிடத்திலே யத்யந்தசரசனாகையாலும்; ( உத்க்ருஷ்டஸௌலப்யயோகாத் ) வண்டுவராபதி மன்னன் - க்ருஷ்டணனாயவதரித்தருளி எல்லார்க்கும்சுலபனாகை யாலும்; ( ரக்ஷாயாம்ஸாவதாநாத் ) அலைகடற்பள்ளியம்மானை- ஜகத்ரக்ஷணசிந்தை

லேயவஹிதனுய்க்கொண்டு திருப்பாற்கடலிலேகண்வளருகையாலும், (ஸுபகதநுதயா) தாமுறுவல்தொண்டைவாய்ப்பிரானை-ஸஸ்மிதத்தாலும், தொண்டைபோன்ற திருவதரத்தாலும், சுபகமான திருமேனியையுடையனுகையாலும்; (ஸோபகார) தேவபிரான்றன்னை - உபகாரகனுகையாலும்; (அஸ்த்ரவத்த்வாத்) ஆழியங்கைப்பிரானுடை - திருவாழியாலேயலங்க்ருதமான திருக்கையையுடையனுகையாலு மெம்பெருமான் ஸ்வாஶ்ரிதர்க்கு " வழியல்லாவழியாலேயாகிலும் தன்னைப்பெறவேணும் " என்னுமதிப்ரேமத்தையுண்டாக்காநிற்கிருனென்று " மாசறுசோதி " என்கிறதசகத்திலே மாறனருளிச்செய்தானென்கிருர்.................. ... .........(ருக)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

மாசறுசோதிகண்ணன்வந்துகலவாமையா
லாசைமிகுந்துபழிக்கஞ்சாம — லேசறவே
மண்ணில்மடலூரமாறனெருமித்தா
னுண்ணடுங்கத்தான்பிறந்தவூர். (சஙு)

(மாசறுசோதிகண்ணன்) இதில் - கீழ் ப்ரஸ்துதமான வடிவழகையநுபவிக்கப்பெருமல் மடலெடுக்கிற பாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; இப்படிபிறரைத்திருத்தி அவர்களுக்கு மங்களாசாஸநம்பண்ணிக்கையொழிந்தபின்பு, " மலியும்சுடரொளிமூர்த்தி மாயப்பிரான்கண்ணன் " என்று அவன்சௌந்தர்யாதிகளை யநுசந்தித்து பழையதம்மிழவுதலையெடுத்து, " வழியல்லாவழியிலே யிழிந்திரண்டுதலையையுமழித்தாகிலு மவனேடேகலக்கக்கடவோம் " என்று ப்ராப்யருசிபாரவஶ்யத்தாலேமுன்னடிதோற்ருமல் கண்கலங்கிச்செல்லுகிறதம் தசாவிசேஷத்தை; அவனேடேகலந்துபிரிந்து ஆற்ருமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு "நாடாகப்பழிசொல்லும்படி அவனுக்கவத்யத்தைவிளைத்திரண்டுதலையையுமழிக்கக்கடவேன் " என்றுமடலூருகையிலே யொருப்பட்டுச்சொல்லுகிருளொருபிராட்டிபேச்சாலேயருளிச்செய்கிற- * மாசறுசோதியிலர்த்தத்தை " மாசறுசோதிகண்ணன் " இத்யாதியாலேயருளிச்செய்கிருரென்கை.

(மாசறுசோதிகண்ணன்வந்துகலவாமையாலாசைமிகுந்து) " மலியுஞ்சுடரொளிமூர்த்திமாயப்பிரான் கண்ணன் " என்றும் "என்செய்யவாய் - மாசறுசோதி - மணிக்குன்றம்" என்றும், "நங்கண்ணன்" என்றும் சொல்லும்படி அத்யாகர்ஷகமானவடிவையுடையக்ருஷ்ணன், தன்ஸ்வரூபத்துக்குச்சேரத்தானேமேல்விழுந்துவந்தநுபவிப்பியாமையாலே யபிநிவேஶமதிசயித்து. அதாவது - " பாசறவெய்தி" என்றும் " என்செய்யவாயும் கருங்கண்ணும் பயப்பூர்ந்த " என்றும், பேர்ந்தும்பெயர்ந்துமவனேடன்றி யோர்சொல்லிலேன்" என்றும் " காதல்கடல்புரையவி

ளைவித்த" என்றும் "கொடியவென்னெஞ்சமவனென்றேகிடக்கும்" என்றும் "மணிவண்ணன்வாசுதேவன் வலையுள் - அகப்பட்டேன்" என்றும் "தலையில்வணங்கவுமாங்கொலோ" என்றும் "எந்நாள்கொலோயாமுறுகின்றது" என்றுமருளிச்செய்தவையென்கை. இப்படியாசையதிசயிக்கையாலே (பழிக்கஞ்சாமல்) ஊரார், தாயார்தொடக்கமானார், இவள்மடலூரவொருப்படுகிறபடியைக்கண்டு, "இதுகுடிப்பழியாய்த்தலைக்கட்டும்" என்றுநிஷேதிக்க ஏவம்விதமான பழிக்குப்பணைக்குமவளாகையாலே யஞ்சாதே. அப்பழிச்சொல்லே தாரகமாக அதாவது - "𑌸𑍀𑌤𑍇 𑌦𑍁𑌃𑌖𑌮𑌤𑍋 𑌵𑌨𑌮𑍍" (ஸீதேதுஃகமதோவநம்) என்ற வசநத்தை நிஷேதித்து, "𑌅𑌗𑍍𑌰𑌤𑌸𑍍𑌤𑍇 𑌗𑌮𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿" (அக்ரதஸ்தேகமிஷ்யாமி) என்றும் "𑌯𑌾 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌾 𑌪𑍁𑌰𑌾 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌭𑍂𑌤𑍈𑌰𑌾𑌕𑌾𑌶𑌗𑍈𑌰𑌪𑌿 । 𑌤𑌾𑌮𑌦𑍍𑌯 𑌸𑍀𑌤𑌾𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌰𑌾𑌜𑌮𑌾𑌰𑍍𑌗𑌗𑌤𑌾 𑌜𑌨𑌾𑌃" (யாநஶக்யாபுராத்ரஷ்டும்பூதைராகாஶகைரபி। தாமத்யஸீதாம்பஶ்யந்திராஜமார்க்ககதாஜநாஃ) என்றும்சொல்லுகிறபடியே "ஊரவர்கவ்வைதோழியென்செய்யும்" என்றும், "என்செய்யுமூரவர்கவ்வைதோழி யினி நம்மை" என்றும் "தீர்ந்தவென்றோழியென்செய்யுமூரவர்கவ்வையே" என்றும் "ஊரவர்கவ்வையெருவிட்டன்னைசொன்னீர்படுத்து" என்றும் "அன்னையென்செய்யுமே" என்றும் "அன்னையென்செய்யிலென்னூரென் சொல்லிலென்தோழிமீர்" என்றும்அவர்கள்நிஷேதவசநங்களைபொருசரக்கறச்சொன்னவையென்கை. (பழிக்கஞ்சாமலேசறவே) அபவாதபீதியின்றிக்கேயேசுமெல்லைகடந்து. அன்றிக்கே, எல்லாரும் துஃகிக்கவென்றுமாம். அன்றிக்கே, (ஏசவே) என்றுபாடமாய் - பழிசொல்லவுஞ்சொல்லிஏசவென்றுகவுமாம். (மண்ணில்மடலூரமாறனொருமித்தா னுள்நடுங்கத்தான்பிறந்தவூர்) அதாவது - "குதிரியாய்மடலூர்துமே" "நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும்" என்றும் - ஜகத்க்ஷோபம்பிறக்கும்படி யிஜ்ஜகத்திலேமடலூர ஆழ்வாரொருப்பட்டார், தாமவதரித்தவூரிலுள்ளார் இஸ்ஸாஹஸப்ரவ்ருத்தியைக் கண்டு ஹ்ருதயம் கம்பிக்கும்படியாக. "இப்படியுத்யோகித்தவிதேதாய்விளைகிறதோ" என்று தாமுமவ்வூரிலவதரித்தவராகையாலே யிவரும் துளும்புகிறார்.....*

ஐந்தாம்பத்தில் - மூன்றாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௪௩.—பாட்டு - ௪௭௫.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஐந்தாம்பத்து.

## நான்காந்திருவாய்மொழி.

### ஊரெல்லாம் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(ஊரெல்லாந்துஞ்சி) இப்படி மடலூருகையிலே யத்யவஸித்திருந்த பிராட்டி மடலூரக்ஷமையல்லாதபடி யத்யந்தமவஸந்நையாய்....*

### பன்னீராயிரப்படி.

நாலாந்திருவாய்மொழியில், கீழ் - தம்முடைய வநுபவாபிநிவேஶத்தாலே ஸத்வரராய்க்கொண்டு ஸ்வரூபாநுரூபமானஸ்வப்ரவ்ருத்தியாலேயாகிலு மவனைப்பெறுவதாக வுத்யோகித்தவிவர், அநுபவயோக்யமானகாலம் ஸந்நிஹிதமாயிருக்கச்செய்தேயும் அவ னஸந்நிஹிதனாயிருக்கையாலே யத்யந்தார்த்தராய் ஒருப்ரவ்ருத்திக்ஷமரல்லாதபடி மிகவு மவஸந்நராய், விளம்பக்ஷமரல்லாமையாலே, இவ்வவஸ்த்தையிலே யவன்முகங்காட்டி ரக்ஷிக்கைக்குடலான; அகில ஜகத்ரக்ஷணார்த்தப்ரவ்ருத்தியையும், ஆபிருப்யப்ரகாஶகமான பவ்யதையையும், அநிஷ்டநிராஸகத்வத்தையும், அபீஷ்டலாபத்தாலே புதுக்கணித்த அவயவஶோபாதியாலுண்டான வத்யந்தத்ருப்தியையும், உபகாரகவிக்ரஹயோகத்தையும், ஸ்த்திரபரிகரகுணகணவத்தையையும், ஆகாங்க்ஷாஜநகமான அஸாதாரணசிஹ்நத்தையும், ஆஶ்ரிதார்த்தமாக ஆயுதமெடுத்துக் காரியங்கொள்ளுமாகாரத்தையும், அதிஶயிதைஶ்வர்யத்தையும், அநந்யார்ஹமாக்கு மபதாநவிசேஷத்தையு மநுஸந்தித்து; "ஏவம்விதஸ்வபாவனானஈஶ்வரனிவ்வவஸ்த்தையில்வந்து ஸம்ஶ்லேஷித்து ரக்ஷிக்கிறிலன், முடிகைக்கும் யோக்யதையில்லாதபடி பராதீநமான விவ்வாத்மாவைரக்ஷிக்கும்விரகென்" என்று, காலவிளம்பம்பொறாமல் ஆர்த்தராய்க்கூப்பிட்டப்ரகாரத்தை; அபிமதநாயகனான ஈஶ்வரனைப்பிரிந்தாற்றாமையாலே யிரவுநெடுமைக்கிரங்கிக்கூப்பிட்ட நாயகியாசுரத்தாலே யருளிச்செய்கிறார்..................................*

### ஈடு.

"நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும்" என்று - பெரியதொரு த்வராரஸமாயிறே கீழ்ச்சென்றது, மடலூரப்பெறுகைதான் அவனைப்பெறுகையோபாதிதேட்டமாம்படிபலஹாநிமிக்கது; இனித்தான்மடலூரும்போது அபிமதவிஷயத்தைப்படத்திலேயெழுதவேணுமே, அதுக்கவகாஶமில்லாதபடி "ஆழிகொண்டன்றிரவிமறைப்ப" என்கிறபடியே

ஆதித்யனைமறைத்தானாதல், தைவயோகத்தாலஸ்தமித்ததாதல் செய்து
ராத்ரியாய், அதுதான் சந்த்யாமாத்ரமன்றிக்கே சராசரங்களடங்கும்ப
டி மத்யராத்ரமாய்; பழிசொல்லுவாரோடு, அநுகூலராய் ஹிதஞ்சொ
ல்லி விலக்குவாரோடு வாசியற எல்லாருமொக்க வுறங்குகையாலே ஒ
ருவுசாத்துணையுமின்றிக்கே, இவ்வளவிலே, ப்ரளயாத்யாபத்துக்களிலே
யுதவும் ஸ்வபாவனுமாய் சர்வரக்ஷகனான புருஷோத்தமனுடையகுண
ங்களை யநுசந்திக்க, அவைதான்பிரிவிலே யநுசந்திக்கையாலே மிகவு
மாற்றாமைகருப்பாய், * வேண்யுத்க்ரதநாதிகளிலே பொருப்பட்டா
ரோபாதிமுடிந்து பிழைக்கவேண்டுமளவாய், அதுதன்னைப்பெறுகை ம
டலூரப்பெறுகையோபாதிதேட்டமாய்; (விட்டது) [ விஷஸ்ய தாதா ]
[விஷஸ்யதாதா] இத்தனைநற்சரக்குத்தருமுதாரனை யிவ்வூரில்கிடைக்கு
மோ. [மே] உண்டானால்தான் எனக்கிதுசம்பவிக்குமோ. [ஶஸ்த்ரஸ்யவா]
[ ஶஸ்த்ரஸ்யவா ] விஷம்போலே சிறிதுபோதுநின்று கொல்லுமதன்றி
யே கடுகமுடிக்கும் ஶஸ்த்ரத்தைத்தான்தருவாருண்டோ. [வேஶ்மநிராக்ஷ
ஸஸ்ய] [வேஶ்மநிராக்ஷஸஸ்ய] பிரித்துவைத்து உயிர்க்கொலையாகநினை
க்கிறவனுடையஊரிலே, நற்கொலைக்குப்பரிகரமானத்தைத்தான்தருவாரு
ண்டோ. இப்படிமுடிகை தேட்டமாப்படியிருக்கிறவளவிலே, " நாம்சர்
வரக்ஷகராகையாலே யெல்லாருடையரக்ஷணத்துக்குமாகத் திருப்பாற்க
டலிலேவந்துசாய்ந்தோம், உம்முடையரக்ஷணத்திலே உத்யுக்தராயிரு
ந்தோம், க்ரமப்ராப்திபற்றாமைப்பதறுகிறவித்தனை " என்கிறவித்தைஸ்
மரிப்பிக்க; அவன்சர்வரக்ஷகனாகில், நம்முடையரக்ஷணத்திலே யுத்யுக்
தனாகில், க்ரமப்ராப்திபற்றாமல் பதறுகிறோமித்தனை, நம்மோபாதியாலு
ள்ளரக்ஷணம் நமக்குஸித்தியாதோவென்று அவன்குணஜ்ஞாநத்தாலே
தரித்தாராய்ச்செல்லுகிறது. (கீழ்-நம்முடைய அநுபவாபிநிவேசத்தா
லே சத்வரராய்க்கொண்டு ஸ்வரூபாநுரூபமான ப்ரவ்ருத்தியிலேயாகி
லு மவனைப்பெறுவதாக வுத்யோகித்தவிவர், அநுபவயோக்யமானகால
ம் ஸந்நிஹிதமாயிருக்கச்செய்தேயு மவனஸந்நிஹிதனாகையாலே யத்யந்
தமார்த்தராயொரு ப்ரவ்ருத்திக்ஷமரல்லாதபடி மிகவுமவஸந்நராய்,விள
ம்பாக்ஷமராகையாலே, இவ்வவஸ்தையிலே யவன்வந்து ரக்ஷிக்கைக்கு
டலானகுணங்களை யார்த்தராய்க்கூப்பிட்டப்ரகாரத்தை, அபிமதநாயக
னை ஈப்ஸவரனைப்பிரிந்து ஆற்றாமையாலே யிரவுநெடுமைக்கிரங்கிக்கூ
ப்பிட்ட நாயகிபாசுரத்தாலே யருளிச்செய்கிறார்......................*

## ஜீயர் அரும்பதம்.

ஊரெல்லாம்துஞ்சிப்ரவேஶே, வர்த்திஷ்யமாணத்தோடே சங்கதிக்காக வ்
ருத்தகீர்த்தநம் (நாடுமி[illegible]க்கவேயித்யாதி) (கீழ்ச்சென்றது) என்றவநந்தரம், இப்
படி த்வராயதிஶயித்தால் பின்னை மடலூராதொழிவானென்னென்னிலென்று வா

க்யத்தைக்கூட்டி நிர்வஹிப்பது. மடலூராதொழிந்ததுக்கு ஹேத்வந்தரம் (இனித் தானித்யாதி) (ஆழிகொண்டித்யாதி) அரசர்கள் காத்துக்கொண்டுநின்றவன்று, திருவாழியைக்கொண்டு ஆதித்யனைமறைக்கவித்யர்த்தஃ. பெரியாழ்வார்திருமொழிநாலாம்பத்து முதற்றிருமொழி எட்டாம்பாட்டு, "நாழிகைகூறிட்டு" இத்யாதி. (ஆதித்யனைமறைத்தானுதல்) "இவள்மடலெடுத்தால் தனக்கவத்யமாம்" என்னுமத்தாலே ஆதித்யனைமறைத்தானுதல். * மாசறுசோதிப்ரவேஶத்திலே "அச்சமுறுத்தி முகங்காட்டுவித்துக்கொள்ளப்பார்க்கிறுர்" என்கையாலும், * மானேய்நோக்குப்ரவேஶத்திலே "அவனுக்கவத்யமென்று மடலெடுக்கைதவிர்ந்தாள்" என்றருளிச்செய்கையாலும்-மடலெடாமைக்கவையும் ஹேதுவாகக்கண்டுகொள்வது. "நள்ளிருளாய்" என்றத்தைப்பற்ற (மத்யராத்ரமாயென்றது) இருளென்று-ஸம்ஸாரமாகிறகாளராத்ரியைச்சொல்லுகிறது; விடிவாவது - பகவத்ஸம்ஶ்லேஷலாபம். "மத்யராத்ரமாய்" என்றதுக்குவிவக்ஷிதம் (பழிசொல்லுவாரோடித்யாதி) "ஊரெல்லாம்" என்றத்தைப்பற்ற (பழிசொல்லுவாரோடென்றது) "அன்னையருந்தோழியரும்" என்றத்தைப்பற்ற (அநுகூலராய்ஹிதஞ்சொல்லியித்யாதி) "பாரெல்லாமுண்ட" என்றத்தைப்பற்ற (ப்ரளயாத்யாபத்துக்களிலேயித்யாதி) "மண்ணளந்த" இத்யாதியைப்பற்ற (ஸர்வரக்ஷகனுனவித்யாதி) (குணங்களையநுஸந்திக்க) "குணம்பாடி-ஆவிகாத்திருப்பேனே" என்கிறபடியே குணங்களையநுஸந்திக்கவென்றபடி. (வேண்யுத்க்ரதநா[illegible]தி) ஆத்மசப்தேந-விஷபக்ஷணம். "மாயும்வகையறியேன்" என்றத்தைப்பற்ற (அதுதன்னைப்பெறுகையித்யாதி) அதுதன்னை-முடிகைதன்னை. "வேண்யுத்க்ரதநாதிகளிலே யொருப்பட்டாரோபாதி" என்கைக்கு, அப்படி பிராட்டி முடியத்தேடினுளோவென்ன (விஷஸ்யதாதேத்யாதி) "ஸாஜீவிதம் க்ஷிப்ரமஹம் த்யஜேயம் விஷேண ஶஸ்த்ரேண ஶிதேந வாபி । விஷஸ்ய தாதா நஹி மேஸ்தி கஶ்சித் ஶஸ்த்ரஸ்ய வா வேஶ்மநி ராக்ஷஸஸ்ய" (ஸாஜீவிதம்க்ஷிப்ரமஹம்த்யஜேயம்விஷேணஶஸ்த்ரேணஶிதேநவாபி । விஷஸ்யதாதா நஹிமேஸ்திகஶ்சிச்சஸ்த்ரஸ்யவாவேஶ்மநிராக்ஷஸஸ்ய) இதிஸுந்தரகாண்டேஷ்டாவிம்ஶஸர்க்கே. உண்டானுல்தானெனக்கிது ஸம்பவிக்குமோவென்றது - தாதாவுண்டாகிலும் பாபியானவெனக்குத்தாரானென்னுதல், எனக்குப்பலியாதென்னுதல். "மடலூரப்பெறுகை யோபாதிதேட்டமாய்" என்றவாக்யத்தோடே - (இப்படிமுடிகைதேட்டமாம்படியிருக்கிற) இத்யாதிவாக்யத்துக்கு ஸங்கதி. "யோகுசெய்தபெருமானை" என்றத்தைப்பற்ற (நாம்ஸர்வரக்ஷகராகையாலேயித்யாதி) (நம்மோபாதியாலுள்ள) என்றவிடத்திலே, ஓபாதியென்று - அம்ஶம். நம்முடைய அம்ஶத்துக்குண்டான ரக்ஷணமென்றபடி. ........................................ .....................*

---

## நான்காந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

ஊரெல்லாந்துஞ்சியுலகெல்லாநள்ளிருளாய்
நீரெல்லாந்தேறியோர்நீளிரவாய்நீண்டதாற்
பாரெல்லாமுண்டநம்பாம்பணையான்வாரானு
லாரெல்லேவல்வினையேனுவிகாப்பாரினியே.

## ஆருயிரப்படி.

சர்வஜந்துக்களும் ப்ரஸுப்தமாய் சர்வலோகமு மந்தகாரபரிபூரிதமாம்படி ஒருநீளிரவுவந்து எங்கும்முடிகிறதில்லை, இந்ததசையிலந்தப் பரமகாருணிகனான பாம்பணையான் வாராதொழிந்தான், இனிநானெங்ஙனே தரிக்கும்படியென்கிறாள். .......................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ஜகத்தெல்லாமிருளாம்படி ஏகராத்ரியாய்நீண்டது, சர்வரக்ஷகனான சர்வேஶ்வரன்வந்து ரக்ஷிக்கிறிலன், இனி யிவ்வாத்மாவை ரக்ஷிப்பாராரென்கிறாள்.

பழிசொல்லுமயலாரோடு, ஹிதஞ்சொல்லுந்தாய்மாரோடு, ஸமதுஃகைகளாயுசாத்துணையான தோழிமாரோடுவாசியற, ஒருமுகத்தில்தரியாதபடி, ஊர்-ஊராக. எல்லாம்-எல்லாரும். துஞ்சி-உறங்கி. புறம்பேயொருபதார்த்ததர்ஶநத்தாலே தரியாதபடி, உலகெல்லாம்-லோகமடைய. நள் - செறிந்த. இருளாய் - இருளாய். நீர்-நீரென்றுபேர்பெற்றவை. எல்லாம்-எல்லாம். தேறி-ஜலசரஸத்த்வங்களினுடையகோலாஹலமில்லாமையாலே அலையடங்கித்தெளிந்து. ஒருசப்தஶ்ரவணமில்லாதபடியாய், ஓர்-அஹோராத்ரவிபாகமற்று ஏகாகாரமாய். நீள் - வளர்ந்த. இரவாய்-ராத்ரியேயாய். நீண்டது - ஓரவதிகாணவொண்ணாதபடிநீண்டுவிட்டது. இவ்வளவில், பார்-ப்ரளயாபத்கதையானபூமியை. எல்லாம்-எல்லாம். உண்ட-வயிற்றிலேவைத்துரக்ஷித்தவனாய். பாம்பு-சேஷபூதனானதிருவநந்தாழ்வானை. அணையான் - படுக்கையாகக்கொண்டு வடிவுகொடுத்துரக்ஷிக்கையாலே. நம்-நமக்குத்தஞ்சமானவன். வாரான்-வந்துமுகங்காட்டிரக்ஷிக்கிறிலன். எல்லே-என்னே. இனி - ரக்ஷகனுதவாதபின்பு. வல்-அநுபவவிநாஶ்யமல்லாதவலிய. வினையேன்- பாபத்தையுடையேனானவென்னுடைய. ஆவி-ஆத்மாவை. காப்பார்-ரக்ஷிப்பார். ஆர்-ஆர்.

உறங்குகிற வூரார்காக்கவோ, ஓரிருள்விழுங்கின லோகம்காக்கவோ, ஜடமானஜலதத்த்வம்காக்கவோ, பாதகமான தீர்க்கராத்ரிகாக்கவோ வென்றுகருத்து. எல்லே-என்னேயென்று விஷாதஸூசகம்.......................................*

## ஈடு-முதற்பாட்டு.

ப்ரளயாபத்திலே வந்துதவினவனென்னை விரஹப்ரளயங்கோக்கவந்துதவாதபின்பு, இனி நான்ஜீவிக்கையென்றொரு பொருளுண்டோவென்று தன்ஜீவநத்திலே நசையறுகிறாள்.

(ஊரெல்லாந்துஞ்சி) ஊரவர்கவ்வை தாரகமாக மடலூரவிருந்தோம், இனி ஆர்பழிதாரகமாக நாம் மடலூர்வது. சிலருறங்கச் சிலருணர்ந்திருக்கையன்றிக்கே, எல்லாருமொக்க வுறங்கிற்று. திருவடிசெல்லுகிறக்ஷணத்திலே ராக்ஷஸிகளடையவுறங்கினப்போலே, பழிசொல்லுவாரடங்கவுறங்கிற்றாயிற்று. அன்றிக்கே, இவள்பிறந்தவூராகையாலே யிவள்தசையைக்கண்டுசோகித்து, கோரைசாய்ந்தாற்போலே யெல்லாருமொக்க வுறங்கினபடியைச்சொல்லிற்றாகவுமாம். நாகபாசத்திலன்றாறல் ஒருஸ்ரீஜாம்பவான்மஹாராஜர், திருவடிதொடக்கமானார் தாமுணர்

ந்திருந்தமையுண்டிறே; இங்கு அங்ஙனுமொருவரில்லையாயிற்று. ஆக, பழிசொல்லுவாரோடு ஹிதஞ்சொல்லுவாரோடு உசாத்துணையாவாரோடுவாசியற, எல்லாருமொக்கவுறங்கிற்றென்கை. இத்தால்சொல்லிற்றாயிற்று-பழிசொல்லியலைப்பாருங்கூட இல்லாதபடி யெல்லாருங்கூட வுறங்குகையாலே,சிலருடனுசாவிக்காலக்ஷேபம்பண்ணவொண்ணாதபடியான தசைபிறந்தபடி சொல்லுகிறது. ஊரெல்லாமுறங்கிற்றாகில், புறம்பே லோகத்திலேபோயாகிலு முசாத்துணையாவாருண்டாகில் பார்த்தாலோவென்ன (உலகெல்லாம்நள்ளிருளாய்) ப்ரளயங்கோத்தாற்போலே லோகமடைய இருளேயாயிற்று. நள்ளென்று - நடுவாதல், செறிவாதல. நடுவானவிருளென்னுதல், செறிவானவிருளென்னுதல். அன்றிக்கே, எல்லாப்பதார்த்தங்களினுடையவு மொலியடங்கிற்றல் ராத்ரிதனக்கென்ன வேயொருத்வநியுண்டு, அத்தைசசொல்லுகிறதாதல். ஆக, சக்ஷுர்விஷயமாவதொன்றுமில்லாதபடியாயிற்றென்கை. (நீரெல்லாம்தேறி) ஜலசரஸத்வங்களடைய ஆழவிழிந்து, அங்குள்ளத்வநியுமடங்கிற்று. ஊரெல்லாம்துஞ்சியென்கையாலே - சிலர்வார்த்தைகேட்டுப் போதுபோக்கு மதிலலையென்கை. உலகெல்லாமென்று - கண்ணுக்கிலக்காமதொன்றில்லாமையாலே ஒன்றைக்கண்டுபோதுபோக்குமதில்லை யென்கை. நீரெல்லாம்தேறியென்கையாலே-முதலிலே ப்ரவணேந்த்ரியத்துக்கு விஷயமில்லையென்கை. இவைதான் - ஸர்வேந்த்ரியவ்ருத்திகளுக்கு முபலக்ஷணமாயிருக்கிறது. பகலில்வந்தால் இந்த்ரியங்கள ஸ்வஸ்வவிஷயங்களிலே பல்லிபற்றுகையாலே ஆற்றாமை அரையாறுபட்டிருக்கும், ராத்ரியில் எல்லாவிந்த்ரியங்களுக்கும் பிரிந்தவிஷயமொன்றுமே யிலக்காகையாலே ஆற்றாமைகரைபுரண்டிருக்கும். (ஓர் நீளிரவாய்நீண்டதால்) பண்டும் ராத்ரிநெடுகாநிற்கசெய்தே பகலுமிரவுமாய்வருமிறே, பகல்விரவாதராத்ரியாய். (நீண்டதால்) மநுஷ்யர்களுடைய ராத்ரியிற்காட்டில் தேவர்களுடையராத்ரி நீண்டிருக்குமாறலு மதுக்கவதியுண்டு, அங்ஙனுமொரு அவதியில்லையாயிருந்தது.

(பாரெல்லாமுண்ட) ப்ரளயாபத்தில்தரம்வையாதே யெல்லாரையுமொக்கரக்ஷித்தவன். ப்ரளயாபத்தி லகப்பட்டாரெல்லார்க்குமுண்டான ஆபத்து இவளொருத்திக்குமுண்டுபோலேகாணும். ப்ரளயத்தில், சிலர்மடலெடுக்கப்புக்கு அதுவும்மாட்டாத தசையுண்டாயன்றிறே யுதவிற்று. தந்தாமால் பரிஹரித்துக்கொள்ளவொண்ணாதபடியான ஆபத்துவந்தாலுதவுமவன். (நம்பாம்பணையான்) உகந்தார்க்குடம்புகொடுக்குமவன். திருவநந்தாழ்வானைப்படுக்கையாகவுடையவன். ஆக, அஸ்ப்ருஷ்டசம்சாரகந்தர்படியுமில்லையாயிற்று, சம்சாரிகள் படியுமில்லையாயிற்றே! நமக்கென்கிறாள். நித்யசூரிகளை நித்யாநுபவம்பண்ணுவிக்கும்; சம்சாரிகளுக் கபேக்ஷையின்றிக்கே யிருக்கச்செய்தேயும், தானறிந்ததாக

ஆபந்நரானவாறேவந்து ஆபந்நிவாரணம்பண்ணும்,தன்னோட்டை சம்ப ந்தத்தாலே. (நம்) சம்ப்லேஷித்து, கூப்பிடுகைக்குவேண்டுவது கொடு த்தபடியாலே—நம்மென்கிறாள். (வாராநல்) வயிற்றிலேவைத்துரக்ஷிக்க வேண்டா, உடம்போடே யணையவேண்டா, வந்துமுகங்காட்ட வமையு ங்கிடீர். “ த்ருஷ்டஏவஹிநப்ரோகமபநேஷ்யதிராகவ: । தமஸ்ஸர்வஸ்யலோகஸ்யஸமுத்யந்நிவபாஸ்கர: ” ( த்ருஷ்டஏவஹிநப்ரோகமபநே ஷ்யதிராகவ: | தமஸ்ஸர்வஸ்யலோகஸ்யஸமுத்யந்நிவபாஸ்கர:. )

(இனி) இவ்வளவில். (ஆவிகாப்பார்-ஆர்) ப்ரளயாபத்திலகப்ப ட்டாரோபாதியாபந்நையாயிருக்கிற நான்ரக்ஷிக்கவோ, “ எம்மின்முன் னவனுக்குமாய்வராலோ ” என்கிறபடியே – “இவளுக்கவன்வேணும்” என்று என்பேற்றுக்கு எனக்குமுன்னே நோவுபடுகிறதோழிரக்ஷிக்க வோ, ஹிதஞ்சொல்லுகிறதாயார் ரக்ஷிக்கவோ, பழிசொல்லுகிறவூரார் ரக்ஷிக்கவோ. (எல்லே) ஆச்சர்யத்திலேயாதல், தோழியை சம்போதிக் கிறாளாதல். மேலே “ அன்னையரும்தோழியரும் ” என்று–அவர்களுமு றங்கினார்களென்றுநிற்கச்செய்தேயும், தன்னைப்பத்தே செப்பேடாக “இவ் வளவி லவளுணர்ந்திருக்க சம்பாவனையுண்டு” என்றுபார்த்து – எல்லே யென்கிறாள். (வல்வினையேன்) சர்வரக்ஷகனுமாய், உடம்போடணைந்தா ரைப்பிரியாதவனுமாயிருக்கிற அவன்வந்துதவாதபடியாயிருக்கிற மஹா பாபத்தைப்பண்ணினேன். ( வல்வினையேனாவி ) பிரிவேஹேதுவாக நா றேபிராயமாயிருக்கிற என்னுடைய ஆவியை. “ பிரிவுக்குச்சிளையாத வித்து இனிமுடியப்புகுகிறதோ ” என்றிருக்கிறாள். ரக்ஷகனானவன்வந்தி லன்,எனக்குமுன்னே தோழிநோவுபட்டுக்கிடந்தாள்,இனிப்பாதகர்ரக்ஷ கராகவோ.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு ( ஊரெல்லாமித்யாதி ) “ பாரெல்லாம் ” இத்யாதியைக்கடா க்ஷித்து (ப்ரளயாபத்திலேயித்யாதி)

ஊரெல்லாந்துஞ்சினால் தனக்குவந்ததேதென்ன (ஊரவரித்யாதி) “ எல்லா ம் ” என்றதுக்கர்த்தம் (சிலருறங்கவித்யாதி) ப்ரதிகூலரடைய வுறங்கினதுக்குத் ருஷ்டாந்தம் (திருவடியித்யாதி) அன்றிக்கே, “ ஊரெல்லாம் ” என்று - தாய்மார் தோழிமார் தடஸ்த்தரெல்லாரையும் சொல்லுகிறதென்று விவக்ஷித்து, எல்லாரு மொக்க அவிசேஷேண வுறங்கக்கூடுமோவென்ன (அன்றிக்கே யிவள்பிறந்தவித்யா தி) சோகமதிசயித்தா லுறங்கக்கூடாதாகையாலே, கோளைசாய்ந்தாற்போலேயெ ல்லாருமொக்க மோஹித்துக்கிடக்கிறபடியைச் சொல்லுகிறதென்று கருத்து. ஆக, ப்ரதிகூலரெல்லாமுறங்கியென்று முந்தினவர்த்தம், தாய்மார்தோழிமார் தடஸ்த் தரெல்லாருமுறங்கியென்று த்விதியார்த்தம். த்விதியார்த்தத்தில், “ எல்லாந்துஞ் சி ” என்றத்தாலே யொருவ்யாவ்ருத்தி யருளிச்செய்கிறார் (நாகப்பர்யேத்யாதி) நா கபாசத்தினன்று- ப்ரஹ்மாஸ்த்ரத்தினன்று. உக்தார்த்தத்வயநிகமநம் ( ஆகப்பழி யித்யாதி ) உசாவுகை-சொல்லுகை.

விவரணம் (நடுவானவித்யாதி) நடுவென்று-சாராம்சத்தைச்சொல்லுகிறது.

(சிலர்வார்த்தைகேட்டு) என்றவநந்தரம், அதுக்குத்தானும் ப்ரத்யுத்தரஞ் சொல்லி என்றுகூட்டுவது; இதுக்குநியாமகம் - " சிலருடனுசாவி " என்று கீழேய ருளிச்செய்கையாலே. இத்தால் - வாகிந்த்ரியத்துக்கு விஷயமில்லையென்றபடி. சர் வேந்த்ரியவ்ருத்திகளுக்கும்-சர்வேந்த்ரியவ்ருத்திவிஷயபதார்த்தங்களுக்கும். விஸ் லேஷதுஃகம் திவாராத்ரவிபாகமறச்சமாநமாயிருக்க, ராத்ரியில் துஃகமதிசயிக்கைக் குஹேதுவேதென்ன (பகலில்வந்தாலித்யாதி) பல்லிபற்றுகை-பாலிபாய்கை. பல்லி பற்றினாற்போலே ஸ்வஸ்வவிஷயங்களைவிடாதேபற்றுகை.

" ஓர் " என்றதுக்குபாவம் ( பண்டுமித்யாதி ) பண்டும் ராத்ரிநெடுகாநிற்க வென்றது - " சேட்பட்டயாமங்கள் " என்றத்தைப்பற்ற. பகலுமிரவுமாயென்ற து - "சுடர்கொளிராப்பகல்" என்றத்தைப்பற்ற. விரவாத-கூடாத. " நீளிரவாய் " என்னவமைந்திருக்க, " நீண்டதால் " என்றுவிசேஷித்ததுக்குபாவம் ( மநுஷ்யர்க ளுடையவித்யாதி )

" எல்லாம் " என்றதுக்குபாவம் (ப்ராளயாபத்திலித்யாதி) " ப்ஹு-ஞநா ரை.ந-பஹு[illegible] " ( பஹுஜநாமநுக்ரஹோங்யாய்யஃ ) என்று எல்லார்க் கும்வந்த வாபத்தைரக்ஷித்தோம், உமக்கொருவர்க்காகச் செய்யப்போமோவென் ன; இதுக்குப்பரிஹாரரூபேண வ்யாக்யாதாவினீடுபாடு (ப்ரளயாபத்திலகப்பட்டா ரித்யாதி ) " பார் " என்றவசேதநசமாதிக்குபாவம் ( ப்ரளயத்திலித்யாதி ) இத் தால்பலிதம் (தந்தாமாலித்யாதி இவ்விசேஷணத்வயத்துக்கும்பாவம் (ஆகவித்யா தி) அவர்கள்பக்கலிவன் செய்கிறதேதென்ன (நித்யசூரிகளையித்யாதி) இத்தசையி லும் முகங்காட்டாதிருக்க, "நம்" என்பானென்னென்ன (சம்ஸ்லேஷித்தித்யாதி) கூப்பிடுகைக்குவேண்டுவதென்றது - ப்ராவண்யம். முகங்காட்டினவாறே துஃகம் போமோவென்ன ( த்ருஷ்டஏவஹீத்யாதி ) " [illegible] [illegible] ( த்ருஷ் டஏவஹிநஸ்ஸோகமபநேஷ்யதிராகவஃ । தமஸ்ஸர்வஸ்யலோகஸ்யஸமுத்யந்நிவபா ஸ்கரஃ) இத்யயோத்யாகாண்டே சித்ரகூடம்ப்ரதிகச்சதாம்பௌராணாம்மநோரதஃ.

( எம்மின்முன்னவனுக்குமாய்வர் ) அவன்விஷயமாக வீடுபடுகிறவெனக்கு முன்னே, " இவளுக்கவனுதவப்பெறுகிறதில்லை " என்று அவன்பொருட்டீடுபடாநி ற்பர்களித்யர்த்தஃ. " அன்னையரும்தோழியரும்-துஞ்சுவரால் " என்றிருக்க, தோழி யை சம்போதிக்கக்கூடுமோவென்ன ( மேலேஅன்னையருமித்யாதி ) செப்பேடு-தா ம்ரஶாஸநம். "வல்வினையேன்" என்றதுக்குத்தாத்பர்யாந்தரம் (பிரிவேஹேதுவாக வித்யாதி ) வல்வினையேனுகையாலே ( நூறேபிராயமாயிருக்கிறவென்னுடைய ) எ ன்றபடி. "நூறேபிராயமாய்" என்று நிஶ்சயிக்கிறதெப்படியென்ன (பிரிவுக்கித்யா தி) சிளையாத-இளையாத. " இனி " என்றதுக்குபாவம் (ரக்ஷகனுன்வனித்யாதி) பா தகர் - பழிசொல்லுமவர்கள்.

ஊரெல்லாமென்றுதொடங்கி, வாராளுல், எல்லே, இனி - வல்வினையேனுவி காப்பார் - ஆர் என்றந்வயம்..........................................................*

# இரண்டாம்பாட்டு.

ஆவிகாப்பாரினியாராழ்கடன்மண்விண்மூடி
மாவிகாரமாயோர்வல்லிரவாய்நீண்டதாற்
காவிசேர்வண்ணனென்கண்ணனும்வாரானாற்
பாவியேனெஞ்சமேநீயும்பாங்கல்லையே.

## ஆறாயிரப்படி.

( ஆவிகாப்பார் ) ஆழ்கடல்மண்விண்மூடி மாவிகாரமாயோர் வல்லிரவாய்நீண்டது, காவிசேர்வண்ணன் என்கண்ணனும் வருகிறிலன், பாவியேன்நெஞ்சமே, நீயுமெனக்குத்துணையன்றியே போனாய், ஆவிகாப்பாரினியாரென்கிறாள் .........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தன்னுடைய ஆபிரூப்யத்தை ப்ரகாசிப்பித்து ஆஶ்ரிதபவ்யனான க்ருஷ்ணனும் வருகிறிலன்; நெஞ்சே, நீயும்விதேயமாயிருக்கிறில்லை, இனி ப்ராணரக்ஷணம்பண்ணுவாராரென்று நெஞ்சைக்குறித்துச் சொல்லுகிறாள்.

ஆழ்-ஆழ்ந்த. கடல்-கடலையும். மண்-பூமியையும். விண்-ஆகாசத்தையும். மூடி-மூடி. அவ்வளவில்நில்லாதே அகிலலோகத்தையும் விளாக்கொலைகொள்ளும்படி, மா-பெரிய. விகாரமாய்-விகாரத்தையுடைத்தாய்க்கொண்டு. வல்-அநேகமாதித்யர்களாலும் பேதிக்கவரிதான சிக்கெனவையுடைத்தான. ஓரிரவாய்-தமோமயராத்ரியேயாய். நீண்டது-முடிவறவளர்ந்தது. காவி-நெய்தலோடு. சேர்-சேர்ந்த. வண்ணன்-நிறத்தையுடையனாய். என்-அந்நிறமெனக்கு ஸ்வம்மாம்படிபவ்யனான. கண்ணனும்-க்ருஷ்ணனும். வாரான்-இவ்வளவில்வருகிறிலன். பாவியேன்-பவ்யனுமபவ்யனும்படியான பாபத்தையுடையேனானவென்னுடைய. நெஞ்சமே-நெஞ்சமே. அவனைப்போலே, நீயும்-நீயும். பாங்கல்லை-அநுகூலித்திருக்கிறில்லை. இனி-ரக்ஷகனானவவனுமுதவாதே, உசாத்துணையான நீயுமுதவாதபின்பு. ஆவி - ப்ராணனை. காப்பார்-காப்பார். ஆர்-ஆர்.

ஒருவருமில்லையென்றுகருத்து .........................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

இத்தசையில் க்ருஷ்ணனும் வருகிறிலன் ; என்னோட்டைசம்பந்தத்தாலே, அவனைப்போலே நெஞ்சேநீயும் பாங்கன்றிக்கே யொழிந்தாயென்கிறாள்.

(ஆவிகாப்பாரினியார்) உதவுமவனுதவிற்றிலன், நெஞ்சும்பாங்கன்றிக்கேயொழிந்தது, இனிரக்ஷகரார், கண்ணனும்வாரான்– நெஞ்சமே நீயும்பாங்கல்லை–ஆவிகாப்பாரினியார்.

( ஆழ்கடலித்யாதி ) வ்யாபகபதார்த்தங்களை வ்யாப்யங்களிலேயொன்றுமறைத்தது. அபரிச்சேத்யமானகடல், எல்லாப்பதார்த்தங்களுக்கு மிடங்கொடுக்கக்கடவபூமி, அதுக்குமவகாசப்ரதாநம்பண்ணுமாகாசம், இவற்றையடையமறைத்து. (மாவிகாரமாய்) பின்னையுமவ்வளவில் பர்யவஸிப்பதாயிருக்கிறதில்லை, மஹாவிகாரத்தையுடைத்தாய் நித்யவிபூதியையும் கணிசிக்கிறாப்போலேயிராநின்றது. வைஶ்வரூப்யங்காட்டி

ன சர்வசக்திசெய்வதெல்லாம் செய்யாநின்றது. (ஓர்வல்லிரவாய்) ராத்ரிக்கு மிருளுக்கும்வாசி புத்திபண்ணவியிராமையாலே-இருளை ராத்ரியென்கிறாள். (ஓர்வல்லிரவாய்) திருவாழியையிட்டுத்துணிக்கத்தவரிலும் வரவொண்ணாதபடி செறிந்திருக்கை. (நீண்டதால) ஒருமுடிவுகாணவொண்ணாது.

(காவிசேர்வண்ணன்) "ஹம்ஸநீலாபவத்ராஹூ" (புல்லேந்தீவரபத்ராபம்) என்கிறநிறத்தையுடையவன். இருளோடொருகோவையானநிறம்,* இருளன்னமாமேனியிறே. கறுப்புடுத்துவருவாரோபாதிவரலாங்கிடீர். (என்கண்ணன்) கம்ஸன் காவலாகவைத்த துஷ்ப்ரக்ருதிகள் கண்படாதபடி, இருளிலேவந்துதவினவன். * நள்ளிருட்கண்வந்த வெந்தைபெருமானாரிறே. (வாராநால்) தாமஸப்ரக்ருதிகளை நிரஸிக்கவருமவன், தமஸ்ஸுதன்னையே நிரஸிக்கவந்தாலாகாதோ. வந்தானாகிலப்போதே விடியுமேயிவளுக்கு, * பகற்கண்டேன் நாரணனைக்கண்டேனிறே.

(பாவியேன்நெஞ்சமே) உனக்குமவனோடொத்த ப்ராப்தியேயிறே. அவனுதவும் ஸ்வபாவனல்லாமையன்றே உதவாவிட்டது, என்னோட்டை சம்பந்தமிறே-என்மார்விலேயவனைக்கையிறே யவனுதவாதொழிகிறது, அதுனக்குமொக்குமிறே. (நீயும்பாங்கல்லையே) ஓராகாரத்தாலே சாஜாத்யமுண்டானாலே வேறோராகாரத்தாலே வ்யாவ்ருத்தியுண்டானாலாகாதோ, ஸ்வதந்த்ரனாய் பரதந்த்ரனான வனோடொபாதியாகவேணுமோ பாரதந்த்ர்யமே ஸ்வரூபமானநீயும். அவனுக்கு ப்ரணயித்வந்தவிர்ந்ததென்றால் ஸ்வாதந்த்ர்யமேஜீவிக்கும், உனக்கங்ஙனொன்றில்லையே. இருவர்பவ்யராயிருந்தால், அவர்களிலேயொருவனபவ்யனானகாட்டில் மற்றையவனு மபவ்யனாகவேணுமோ. "என்கண்ணனும்வாராநால்," "என்னெஞ்சமே" என்றெக்கச்சொல்லலாயிருக்கிறதிறே................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (ஆவிகாப்பாரித்யாதி) "ஆழ்கடல்" இத்யாதியைப்பற்ற (இத்தசையிலித்யாதி) நெஞ்சேநீயும் பாங்கன்றிக்கேயொழிந்தாயென்றது - அவனையநுசந்தித்து தரித்துக்கொண்டிருக்கைக்கு, நீயென்னதுமாயிருக்கிறாயில்லை; "என்னெஞ்சினாரு மங்கேயொழிந்தார்" என்று, நீயுமங்கேயொழிந்தாயென்றபடி.

அந்வயமுகேநதாத்பர்யம் (உதவுமவனித்யாதி) தாத்பர்யாநுகுணமாகப் பதாந்வயங்காட்டுகிறார் (கண்ணனுமித்யாதி)

வ்யாபகபதார்த்தங்களாவன - பூதங்கள். வ்யாப்யங்களிலேயொன்றென்றது-ப்ருதிவீகார்யத்வேந வ்யாப்யமான தமஸ்ஸென்றபடி. "தமஸ்ஸு தேஜஃகார்யம்" (தமஸ்ஸுதேஜஃகார்யம்) என்றும்சொல்லுவர்கள். வ்யாபகங்களளவை யென்ன (அபரிச்சேத்யமானவித்யாதி) "ஆழ்" என்றது-இவ்விடத்தில், அபரிச்சேத்யமென்றபடி. கனிசிக்கிறப்போலே-ஸ்வாதீநமாக்க வபேக்ஷிக்கிறப்போலே. வ்யாப்யமானது வ்யாபகங்களை வ்யாபித்ததுக்கு த்ருஷ்டாந்தம் (வைஶ்வரூப்யமித்

யாதி ) அதாவது-அர்ஜுநனுக்கு க்ருஷ்ணன் வைஶ்வரூப்யங்காட்டினபோது எங்கும் வ்யாபித்தாப்போலே; இதுவுமெங்கும் வ்யாபித்ததென்றபடி. இப்படிசெய்கிறஇருளாகையாலே, “ ஓர்வல்லிருள் ” என்னவேண்டாவோவென்ன ( ராத்ரிக்குமித்யாதி ) “ வல் ” என்றதுக்குபாவம் (திருவாழியையித்யாதி)

காவி-கருசெய்தல். “ஸௌந்தீவரபத்ராபம் சதுர்பாஹுமுதீக்ஷிதம் | ஶ்ரீவத்ஸவக்ஷஸம் ஜாதம் த்ருஷ்டவாநகதுந்துபி: ” ( புல்லேந்தீவரபத்ராபம் சதுர்ப்பாஹுமுதீக்ஷ்யதம் | ஶ்ரீவத்ஸவக்ஷஸஞ்ஜாதம்த்ருஷ்டாவாநகதுந்துபிः ) இதிபஞ்சமேம்ஶேத்ருதீயே. பலிதம் (இருளோடித்யாதி) இதுக்குப்ரமாணம் (இருளன்னவித்யாதி) இருளோடொத்த ஶ்லாக்யமானவடிவையுடையவிதியர்த்தः. பெரியதிருவந்தாதி இருபத்தாறும்பாட்டு, “யானுமென்னெஞ்சும்” இத்யாதி. இப்படிசொல்லுகிறதுக்குபாவம் (கறுப்புடுத்தித்யாதி) விஶ்லேஷித்தவனை “என்” என்கிறதென்னென்ன ( கம்ஸனித்யாதி ) அப்படி யிருளிலேவந்துதவினானோவென்ன (நள்ளிருட்கணித்யாதி) செறிந்தவிருளிலேவந்துதோன்றின வென்னுடையகுலநாதரானவரித்யர்த்தः. திருமொழி ஏழாம்பத்து அஞ்சாந்திருமொழி முதற்பாட்டு, “ தந்தைகாலில் ” இத்யாதி. தாமஸப்ரக்ருதிகள் - கம்ஸாதிகள். வந்தால்பலமேதென்ன (வந்தானுகில்த்யாதி) அதுக்குநியாமகமேதென்ன ( பகற்கண்டேனித்யாதி ) இரவுகலசாதபகலாய்ச்செல்லும்படியானதொரு நல்வடிவைக்கண்டேன், ஒருகாலத்திலும் போக்குவரத்தின்றிக்கேயிருக்கிற உபயவிபூதியுக்தனான நாராயணனாகிற வாதித்யனைக்கண்டேனித்யர்த்தः. அஜ்ஞாநம்நீங்கி யறிவுபிறந்து சவிபூதிகனானவெம்பெருமானைக்கண்டேனென்றுகருத்து. இரண்டாந்திருவந்தாதி எண்பத்தோராம்பாட்டு.

“ என்கண்ணன் ” “ பாவியேன்நெஞ்சம் ” என்றதுக்குபாவம் ( உனக்குமித்யாதி ) சம்பந்தமேதென்ன ( என்மார்விலேயித்யாதி ) கீழே, “ நீயும் ” என்ற சஶப்தத்துக்கு-சமுச்சயமாக வருளிச்செய்து, வ்யாவ்ருத்திபரமாகத் தாத்பர்யாந்தரம் ( ஓராகாரத்தாலேயித்யாதி ) அதாவது - மார்பிலேயணைத்தவாகாரத்தாலேயொத்திருந்தாலும், என்னை விஶ்லேஷியாதிருந்த வாகாரத்தாலே வ்யாவ்ருத்தமானாலாகாதோவென்றபடி. சஶப்தத்துக்குத் தாத்பர்யாந்தரம் ( ஸ்வதந்த்ரனாயித்யாதி ) பரதந்த்ரனானநான், ஸ்வதந்த்ரனாய் பரதந்த்ரனானவனைப்போலேயிருந்தால் வருமநர்த்தமேதென்ன (அவனுக்கித்யாதி) “ ஓராகாரத்தாலே ” இத்யாதிவாக்யவிவரணம் ( இருவரித்யாதி ) இருவரும் பயபொன்றதோவென்ன ( என்கண்ணனுமித்யாதி )

ஆழ்கடலித்யாரப்ய, நீயும்பாங்கல்லேம்ய, இனி-ஆவிகாப்பார்-ஆரித்யந்வயः...*

---

## மூன்றாம்பாட்டு.

---

நீயும்பாங்கல்லைகாணெஞ்சமேநீளிரவு
மோயும்பொழுதின்றியூழியாய்நீண்டதாற்
காயுங்கடுஞ்சிலையென்காகுத்தன்வாரானன்
மாயும்வகையறியேன்வல்வினையேன்பெண்பிறந்தே.

## ஆறுயிரப்படி

(நீயும்) மடநெஞ்சமே, நீயும்துணையன்றியே போனாய், நீளிரவும் ஓயும்பொழுதின்றி ஊழியாய்நீளாநின்றது, ப்ரதிகூலநிரஸநஸ்வபாவமான ஸ்ரீசார்ங்கத்திருவில்லையுடைய வென்காகுத்தன்வருகிறிலன், வாராதொழிந்தால்தான் முடியலாமிறே, "முடிவன்" என்றால் முடியவொண்ணாதபடி பாபத்தினால் பராதீநையாய்ப்பிறந்தேனென்கிறாள் ........*

## பன்னீராயிரப்படி

அநந்தரம், அநிஷ்டநிவர்த்தநசீலனான சக்ரவர்த்தி திருமகன் வருகிறிலன், பராதீநையாகையாலே முடியவிரகறிகிறிலேனென்று நெஞ்சைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

நெஞ்சமே-நெஞ்சமே. நீயும் - சர்வகார்யத்துக்கும் ப்ரதாநகாரணமானநீயும். பாங்கல்லை-விதேயமாயிருக்கிறிலை. நீள்-பண்டேநீண்டுவருகிற. இரவும்-ராத்ரியும். ஓயும்பொழுது-ஓயுங்காலம். இன்றி-இன்றியே. ஊழியாய்-கல்பமாய்க்கொண்டு. நீண்டது-வளர்ந்துவிட்டது. காயும் - ஆச்ரிதவிரோதிகளைச்சுட்டுப்பொகடுவதான. கடு-கடிய. சிலை-ஸ்ரீசார்ங்கத்தையுடையனான. என்காகுத்தன்-பரோபகாரசீலமான குடியிலேபிறந்த சக்ரவர்த்திதிருமகன். வாரான் - ஸ்ரீஜநகராஜன்திருமகளுக்குதவினாப்போலேவந்துதவுகிறிலன். வல்வினையேன்-அவனுதவாமைக்கடியான ப்ரபல பாபத்தையுடையநான். பெண்-முடியும்போதும் ஸ்வாதந்த்ர்யமில்லாதபெண்ணாய். பிறந்து-பிறந்து. மாயும்வகை-முடியும்ப்ரகாரம். அறியேன்-அறிகிறிலேன் .........*

## ஈடு - மூன்றாம்பாட்டு

சகலதுஃகங்களையும்போக்கும் ஸ்வபாவனான காகுத்ஸ்தனும் வருகிறிலன், பரதந்த்ரையாகையாலே முடியவும் விரகறிகிறிலே னென்கிறாள்.

(நீயும்பாங்கல்லைகாணெஞ்சமே) கங்கைக் கக்கரைப்பட்டவன்று இளையபெருமாளைப்பார்த்து, "பிள்ளாய், நீயும் படைவீடேறப்போ" என்றாரிறே, "வநவாஸமிவரையொழியவும் தலைக்கட்டலாம்" என்று ப்ரமித்து; அப்படியே யிவரும் தந்திருவுள்ளத்தைப்பார்த்து, "நீயும் பாங்கல்லைகாண்" என்கிறார். "மநவை" (மநஏவ) என்கிறபடியே-நெஞ்சைக்கொண்டேயிறே யெல்லாம்பெறவிருக்கிறது, ஆயிருக்கச்செய்தேயும், இன்னாப்பாலேசொல்லுகிறார்.

(நீளிரவித்யாதி) முதலிலே நெடிதான ராத்ரியானது; அதுக்குமேலே, ஒருமுடிவுகாணவொண்ணாதபடி யிராநின்றது. அடிகாணவொண்ணாதபடியுமாய், முடிவுக்குமோமொல்லைகாணவொண்ணாதபடி யிராநின்றது. முடிவுகாணவொண்ணாதிருக்கச்செய்தேயும் அடியற்றிருப்பனவுண்டிறே, இது அப்படியிருக்கிறதில்லை. (ஓயும்பொழுதின்றி) நின்றவீ

டத்தில் நின்றும் கால்வாங்கக்கடவதன்றிக்கே. (ஊழியாய்) "சாத்தன், கூத்தன்" என்றாற்போலே சிலபேராய், அவர்கள் தாங்கள் ஜீவிக்கப்புக்கவாறே சிறுபேர்தவிர்ந்து, "சோழக்கோனார், தொண்டமானார்" என்று பட்டப்பேர்பெற்று வாழுமாபோலே, ராத்ரியானதுபோய் "கல்பம்" என்னும்பேரை யுடைத்தாகாநின்றது. (நீண்டதால்) அதுதனக்கு மோரவஸாநமுண்டிறே, அதுவுமில்லையாயிற்றிதுக்கு.

(காயும்கடும்சிலையித்யாதி) ஒருத்தியுடைய நெடிதானராத்ரியைப் பரிஹரிக்கைக்காக வ்யாபரித்த வில்வலியையுடையவனும் வருகிறிலன். ப்ரதிபக்ஷத்தின்மேலே காயாநிற்பதாய், எதிரிகள்பக்கல் பெருமாள் கண்பார்க்கிலும் தான் கண்பாராதபடியான சிலையையுடையவன். அவனுடைய சாங்கமென்னளவிற்கண்டிலேன். (சாங்கமென்று – பக்ஷபாதத்துக்குப்பேர்) (என்காகுத்தன்) பிராட்டிக்குதவினதும் "தனக்குதவிற்று" என்றிருக்கிறான். "தயரதற்குமகன்றன்னையன்றி மற்றிலேன்தஞ்சம்" என்று நான் தஞ்சமாகநினைத்திருக்குமவனும் வருகிறிலன். [ சினத்தினாலித்யாதி ] பிராட்டியுடைய விரோதியைப்போக்கினது அவளுக்குக்காரியம் செய்தானாகநினைத்திருக்கையன்றிக்கே, தன்சினம் தீர்ந்தானாயிருக்குமவன். (காகுத்தன்) கீழே, "கண்ணனும்வாரானால்" என்றது; அபிஷிக்தக்ஷத்ரிய புத்ரரல்லாதார் தாம்தவிருகிறார்கள், முடிசூடிநோக்கும் குடியிலேபிறந்தவனுக்கு வரத்தட்டென். ககுத்ஸ்த்தகுலோத்பவனானவனும் வாராதொழிவதே. (வாரானால்) எதிரிகள் வரப்பொரவிருக்கையன்றிக்கே, தானே யெடுத்துவிட்டுச்சென்று பொருமவனும் வருகிறிலன். [ ஊஹியாதா ] [ அபியாதா ] எதிரிகள் வரப்பொரவிருக்கையன்றிக்கே, எடுத்துவிட்டுப்பொருகையும் தமக்கேபணியாயிருக்கும். [ஹ்ருஹ்ட த்ரவ] [ப்ரஹ்ர்த்தாச] தூசித்தலையில்நின்று, "முதல்வெட்டாரது" என்றால், அதில்முற்பாடும் தம்மதாயிருக்கும். [ஸௌநாயவிஶாரதஃ] [ஸேநாநயவிஶாரதஃ] தாம்போகாதே, தூசியுமணியும் பேரணியுமாகவகுத்துவிட்டால், ஒக்கநின்று பொருவித்தாற்போலேவென்று மீளும்படி படைகோக்கவல்லவர்.

(மாயும்வகையறியேன்) இவன்வாராமையறிந்தால் இனிமுடிகையிறே சுகம், முடியும்விரகறிகிறிலேன். (வல்வினையேன்) முடிகை சுகமாய்த்தேட்டமானால் அதுவும் கிடையாதபடியான பாபத்தைப்பண்ணினேன். பாபமானது விநாஶஹேதுவாகையன்றிக்கே, ஜீவிக்கைக்கு ஹேதுவாவதே. ஜீவிக்கை தேட்டமானபோது அரிதாம், முடிகை தேட்டமானபோது அரிதாம், ஏதேனுமாக அநிஷ்டாவஹம் பாபமாயித்தனையிறே. (பெண்பிறந்தே) பரதந்த்ரஜந்மத்திலே பிறந்தார்க்கு நினைத்தபோது முடியப்போமோ. பிறர்க்காக ஜீவிக்கவேண்டும் பரதந்த்ரஜந்மத்

திலே பிறக்கைக்கீடான மஹாபாபத்தைப்பண்ணினேன். "பாபாநா மாகாஸ்த்ரியஃ" (பாபாநாமாகரஸ்ஸ்த்ரியஃ) என்னக்கடவதிறே. [நசாஸ்யமாதா] [நசாஸ்யமாதா] பிராட்டி திருவடியைக்கண்டவநந்தரம், பெருமாள்பக்கல் ப்ரணயரோஷத்தாலே, "இவன் அவர்வரவிட்டஆள்" என்று சீறிச்சிலவார்த்தையருளிச்செய்ய; "தேவரீரெழுந்தருளியிருந்தவிடமறியாமலிருந்தாரித்தனையல்லது பாவபந்தத்தி லூற்றம்போராமையோ, அறிந்தபின்பு இனித்தாழ்த்தாராகிலன்றோ குற்றமாவது". என்று அச்சிவிட்டாறும்படி சிலவார்த்தை விண்ணப்பம்செய்து; பின்னையுந்தான், "அவரைப்பிரிந்து பத்துமாசமுண்டே, இவ்வளவும் முடியாமல் தரித்திருந்ததன்றோ தேவரும்" என்று தனக்குக்கருத்தென்னுமிடம் தோற்றவிருந்தான்; அதுவோ! உனக்குநினைவு, வாராய், நாட்டார்க்கு, மாதாவென்றும் பிதாவென்றும் ப்ராதாவென்றும் பந்துக்களென்றும் பலதலைத்திருக்கையாலே ஸ்நேஹமானதெங்கும் பாலிபாய்ந்திருக்கும்; பெருமாளங்ஙனன்றிக்கே, எல்லார்பக்கல்பண்ணும் ஸ்நேஹத்தையு மென்பக்கலிலே யொருமடையாகச்செய்து வைக்கையாலே, எல்லாம்செய்தாலும், கடலையணைசெய்து விரோதிவர்க்கத்தைக்கிழங்கெடுத்து "தண்ணீர் தண்ணீர்" என்றுவருகைதவிரார்; தாபார்த்தன் விடாய்ப்பட்டுப் பந்தலேறவரக்கொண்டு தண்ணீர்ச்சாலுருட்டிக்கிடந்தால் பிழையாதாப்போலே, அவரிப்படிவரக்கொண்டு நானின்றிக்கே யிருப்பனாகில் பின்னையவரைக்கிடையாதென்று, அவர்க்காக என்னைநோக்கிக்கொண்டிருந்தேன். அவரைக்கண்ட பிற்றைநாள் நானிருந்தேனாகிற்காண் நீயிவ்வார்த்தைசொல்லுவதென்றருளிறே. [தூத] முன்பு, "வாநர" என்றாற்போலே சொல்லிப்போந்தவள், இப்போது அவர்பக்கலுண்டான சிவிட்கிவ்வளவுமேறிப்பாய்ந்து, அவர்வரவிடவந்தவனன்றோ நீயுமென்றருளிறே. (வல்வினையேன்பெண்பிறந்தே - மாயும்வகையறியேன்) ஸ்வேச்சாதீநமான மரணமாம்போது ஆண்பிறந்தசக்ரவர்த்தி பீஷ்மாதிகளாகவேணுமாகாதே; ஜ்ஞாநவான்களாதல் ஸ்வதந்த்ரராதல் செய்யவேணும், அறிவிலிகளான பெண்பிறந்தார்க்கு நினைத்தபடி முடியப்போமோ.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (நீயுமித்யாதி) "காயும்கடும்சிலை" இத்யாதியைப்பற்ற (ஸகலேத்யாதி)

புநஶ்ச "நீயும்பாங்கல்லைகாண்" என்றதுக்கு ஸத்ருஷ்டாந்தமாகபாவம் (கங்கைக்கித்யாதி) பிள்ளாய்நீயும் படைவீடேறப்போவென்றாரிறே யென்றது - "அயோத்யாமிதாவிவத்வம்காலேப்ரவிஶலக்ஷ்மண| அயோத்யாமிதாவிவத்வம்காலே ப்ரவிஶலக்ஷ்மண" (அயோத்யாமிதஏவத்வம்காலேப்ரவிஶலக்ஷ்மண| அ

ஹமேகோகமிஷ்யாமி ஸீதயாஸஹதண்டகாந் ) என்றத்தைப்பற்ற. பாங்கல்லேகாண்-பாங்கன்றிக்கேயொழிந்தாய்காணென்றபடியாய், இத்தால் - உன்னைக்கொண்டு கார்யமில்லையென்றுபேக்ஷிக்கிறாளென்றபடி. "பாங்கல்லேகாண்" என்கிறதென், மநஸ்ஸையொழிய வொருகார்யமுண்டோவென்ன ( மநஏவேத்யாதி ) "मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः । बन्धाय विषयासङ्गि मुक्त्यै निर्विषयं मनः" ( மநஏவமநுஷ்யாணாம்காரணம்பந்தமோக்ஷயோ: । பந்தாய விஷயாஸங்கிமுக்த்யைநிர்விஷயம்மந: ) இதிஷஷ்டேம்ஶே ஸப்தமே. இன்னாப்பு-வெறுப்பு. பாங்கன்றிக்கே யொழிகையாவது - வேறொன்றையநுஸந்தித்து தரிக்கமாட்டாமை.

"நீள்" என்றும், "ஓயும்பொழுதின்றி" என்றும் விசேஷித்ததுக்குபாவம் (முதலிலேயித்யாதி) கீழ்வாக்யவிவரணம் (அடிகாணவித்யாதி) ஆனால், "ஓயும்பொழுதின்றி" என்று-முடிவில்லாமைசொன்னபோதே, அடிகாணவொண்ணாமையும்ஸித்தமன்றோ, "நீளிரவு" என்றுவிசேஷிக்கவேணுமோவென்ன ( முடிவுகாணவித்யாதி ) அதாவது - ப்ரத்வம் ஸாபாவத்துக்கு முடிவின்றிக்கேயிருக்கச்செய்தேயு மடியுண்டாயிருக்குமிறே, அத்தைப்பற்ற விசேஷிக்கிறதென்றபடி. அடியற்றிருப்பன-அடியுண்டாயிருப்பன. "நீளிரவு" என்று-அடிகாணவொண்ணாதென்றபோதே, முடிவுகாணவொண்ணாமையும் ஸித்தமன்றோ, "ஓயும்பொழுதின்றி" என்றுவிசேஷிக்கவேணுமோவென்ன; ப்ராகபாவவ்யாவ்ருத்த்யர்த்தம் விசேஷிக்கவேணுமென்று கண்டுகொள்வது. ஓய்கை-முடிகை. ராத்ரியானது - ராத்ரியென்கிறபேரானது. அதுதனக்கும்-அந்தக்கல்பந்தனக்கும்.

ஒருத்தியுடையநெடிதானராத்ரியென்றது - நெடிதானவிஶ்லேஷ வ்யஸநமென்றபடி. காயாநிற்பதாய்-தஹியாநிற்பதாய். கண்பார்க்கிலும் - தயைபண்ணிலும். சாங்கமென்றது-சார்ங்கம்; வில்லும், பக்ஷபாதமும். க்ருஷ்ணனன்றோ பெண்களுக்குத்தஞ்சம், பெருமாள் தஞ்சமாயிருப்பரோவென்ன; பெண்களுடையகார்யம் தன்பேறாகச்செய்யுமவராகையாலே தஞ்சமென்கிறாள் (சினத்தினாலித்யாதி) கோபத்தாலே, அழகியலங்கைக்கதிபனானராவணனை நிரசித்தமனத்துக்கினியானை யிதி பாசுரார்த்த:. எடுத்தபாசுரத்துக்குபாவம் (பிராட்டியுடையவித்யாதி) "காகுத்தன்" என்றதுக்குபாவம் (கீழேகண்ணனுமித்யாதி) ஶப்தார்த்தம் ( ககுத்ஸ்த்தேத்யாதி ) "வழியாய்நீண்டதால், காகுத்தனவாரானால்" என்றுகூட்டிபாவமாதல், தாத்பர்யாந்தரமாதல் (எதிரிகளித்யாதி) தானெடுத்துவிட்டுப்பொருமவனோவென்ன (அபியாதேத்யாதி) "अभियाता प्रहर्ता च सेनानयविशारदः । अप्रधृष्यश्च संग्रामे क्रुद्धैरपि सुरासुरैः" ( அபியாதா ப்ரஹர்த்தாசஸேநாநயவிஶாரத: । அப்ரத்ருஷ்யஶ்சஸம்க்ராமேக்ருத்தைரபிஸுராஸுரை: ) இத்யயோத்யாகாண்டே. பொர-யுத்தம்பண்ண. தூசி - யுத்தம். தூசியுமணியும்-தூசியிலணியும். அணி - இடவணி, வலவணி. பேரணி - பின்னணி. அன்றிக்கே, தூசியும் பின்னணியு மணியுமென்னுதல். தூசி-யுத்தமும், முன்னணியும். அணியாவது-வ்யூஹம்: வகுத்து-விபஜித்து.

கீழ்வாக்யவிவரணம் ( பாபமானதித்யாதி ) புண்யமே ஜீவநஹேதுவொழிய, பாபம் ஜீவநஹேதுவாமோவென்ன (ஜீவிக்கைதேட்டமானபோதித்யாதி) "வல்வினையேனுகையாலே - மாயும்வகையறியேன்" என்று கூட்டிபாவமருளிச்செய்து, "பெண்பிறந்தே - மாயும்வகையறியேன்" என்றுகூட்டிபாவம் ( பாரதந்த்ர

மத்திலேயித்யாதி ) " பெண்பிறந்தே-மாயும்வகையறியேன் - வல்வினையேன்" என் றுகூட்டி பாவார்த்தரம் ( பிறர்க்காகவித்யாதி ) அப்படி ஸ்த்ரீஜந்மம் பாபபலமோ வென்ன (பாபாநாமித்யாதி) அதாவது - பாபபலமாய் பாபஹேதுவுமாயிருக்குமெ ன்றபடி. " [illegible] " ( நாஸ்நாநாமாகரஃக்ரோதஃஆஸாபரிபவா கரஃ। வ்யாதிநாமாகரஸ்தோயம் பாபாநாமாகரஸ்ஸ்த்ரியஃ ) இதிமஹாபாரதே.

பரதந்த்ரஜந்மத்திலே பிறந்தார்க்கு நினைத்தபோதாக முடியப்போகாதெ ன்றதுக்கு ஸம்வாதம் (நசாஸ்யேத்யாதி) " [illegible] " ( நசாஸ்யமாதாநபிதாநசாந்யஸ்ஸ்நே ஹாத்விஸிஷ்டோஸ்திமயாஸமோவா । தாவத்த்யஹம்தூதஜிஜீவிஷேயம்யாவத்ப்ர வ்ருத்திம்ஸ்ருணுயாம்ப்ரியஸ்ய ) இதிஸுந்தரகாண்டே ஹநூமந்தம் ப்ரதிஸீதா. இந்தஸ்லோகத்திலே, " [illegible] " ( தாவத் - ஜிஜீவிஷேயம் ) என்று - ஜீவநாவதிசொன்னதுக்கநுகுணமாக ஸ்லோகாவதாரிகை ( பிராட்டியித் யாதி ) " [illegible] " ( நத்வாமிஹஸ்த்தாம்ஜாநீதேராமஃகமலலோசநஃ। தேநத்வாம்நாந யத்யாஸு ) என்கிற ஸ்லோகதாத்பர்யம் (தேவரீரித்யாதி) பின்னையுந்தானென்ற து - வார்த்தைப்பாடு. முழுச்சொல். பலதலைத்திருக்கையாலே - பஹுமுகமாகை யாலே. எல்லாம்செய்தாலுமென்றது-என்னைப்பிரிந்திவ்வளவும் தாழ்த்தாலுமென் றபடி. எத்தனைநாட்சென்றாகிலுமென்றுமாம். அவனைக்கண்டுபிற்றைநாளென்றது- அவருடைய வநாதரகர்ப்பமானவ்ருத்தியாலே யென்னையுபேக்ஷிக்கைக்குடலான வவருடைய மாநஸவ்யாபாரத்தையறிந்த பிற்றைநாளென்றபடி. ஜ்ஞாநவான்கள்- பீஷ்மாதிகள். ஸ்வதந்த்ரர்-சக்ரவர்த்தி. அறிவிலிகளான-அறிவிலிகளாய் பரதந்த்ர ர்களான வித்யர்த்தஃ.

நீளிரவித்யாரப்ய, வாராளுல், நெஞ்சமே, நீயும் பாங்கல்லைகாண், வல்வி னையேன் பெண்பிறந்தே-மாயும்வகையறியே னித்யந்வயஃ ........... ...............*

# நான்காம்பாட்டு.

பெண்பிறந்தாரெய்தும்பெருந்துயர்காண்கிலேனென்
றொண்சுடரோன்வாராதொளித்தானிம்மண்ணளந்த
கண்பெரியசெவ்வாயெங்காரேறுவாரானு
லெண்பெரியசிந்தைநோய்தீர்ப்பாராரொன்னையே;

## ஆறாயிரப்படி.

(பெண்பிறந்தார்) நான்படுகிற விந்தமஹாதுஃகத்தைக் காண்கை யில் முடிகையே நன்றென்றுபார்த்து ஆதித்யன்வாராதே, தன்னைக்கொ

ண்டிமுடிந்தான்; இந்ததசையில் தன்னுடைய காருண்ய ஸௌஶீல்ய ஸௌந்தர்யாதி குணங்களாலே யென்னைத்தோற்பித் தெனக்குப் பரம போக்யனாயிருந்தவன் வருகிறிலன், வாராதொழிந்தா லளவிறந்தசிந்தை நோய்தீர்ப்பா ராரொன்னையென்கிறாள்..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபேக்ஷித்தபூமியையளந்துகொண்ட ப்ரீதியாலே புதுக்கணித் தவவயவாதிசோபையாலே செருக்கனான த்ரிவிக்ரமன் வருகிறிலன், அபரிச்சிந்நமான வென்னுடைய சிந்தாரோகத்தைத்தீர்ப்பா ராரொன்கிறாள்.

பரதந்த்ரைகளாய் ம்ருதுஸ்வபாவைகளான, பெண்-பெண்ணாய். பிறந்தார்-பிறந்தார். எய்தும்-ப்ராபிக்கிற. பெருந்துயர்-துஸ்ஸஹமானமஹாதுஃகத்தை. காண்கிலேன்-காணமாட்டுகிறிலேன். என்று-என்று. ஒண்-உதயகாலத்திலே தர்ஶநீயமான. சுடரோன்-தேஜஸ்ஸையுடைய ஆதித்யன். "பீஷோதேதி ஸூர்யஃ" (பீஷோதேதிஸூர்யஃ) என்று ஈஶ்வராநுவிதாநம்பண்ணிவரும் காலத்திலும், வாராது-வாராதே. ஒளித்தான்-ஆராய்ந்தாலு மறியவொண்ணாதபடி யொளித்துப்போனான். இ-இந்த. மண் - பூமியை. அளந்த - தனக்கேயாம்படி யளந்துகொண்டப்ரீதியாலே. பெரிய-பரந்த. கண்-திருக்கண்களையும். செம்-சிவந்த. வாய் - திருவதரத்தையுமுடையனாய். எம்-அந்தபூமியைப்போலே இவ்வவயவசோபையாலே யெம்போல்வாரையு மநந்யார்ஹமாக்கி. அத்தாலே, கார் - காளமேகம்போலே ஶ்யாமளமான வடிவையுடையவனாய். ஏறு-நினைத்ததுமுடித்தப்ரீதியாலே ருஷபம்போலேசெருக்கனாயிருக்கிற த்ரிவிக்ரமன். வாரான்-வருகிறிலன். எண் - நினைவுக்கு. பெரிய-அவ்வருகேவிஞ்சி அவாங்மநஸகோசரமானபெரிய. சிந்தைநோய் - மநோரதவ்யாதியை. என்னை-என்னை. தீர்ப்பார்-தவிர்ப்பார். ஆர்-ஆர்..............................*

## ஈடு - நான்காம்பாட்டு.

கண்டார்க்குப்பொறுக்கவொண்ணாதபடி வ்யஸநம்செல்லாநிற்க, வரையாதேரக்ஷிக்கும் ஸ்ரீவாமநனும் வருகிறிலன், என்சிந்தாவ்யஸநத்தைப்போக்குவாராரொன்கிறாள்.

(பெண்பிறந்தாரித்யாதி) பரதந்த்ரஜந்மமாகையாலே முடியவும்பெறாதே, ம்ருதுஸ்வபாவைகளாகையாலே பிரிவும் பொறுக்கமாட்டாதேயிருக்கிற ஸ்த்ரீகளநுபவிக்கிற மஹாதுஃகத்தைக் காணமாட்டேனென்று. (ஒண்சுடரோன்வாராதொளித்தான்) சர்வரக்ஷகன்பொறுக்குமித்தனைபோக்கி, ரக்ஷணைகதேஶத்திலே யந்வயித்தவர்களுக்குப் பொறுக்கப்போமோ. புருஷோத்தமன் பொறுக்குமத்தனைபோக்கி, புருஷர்களால் பொறுக்கப்போமோ. தன்தோற்றரவிலே சகலக்லேஶமும் போம்படியான ப்ரகாஶத்தையுடையவனும் வாராதேமறைந்தான். வந்திலனென்னாதே, ஒளித்தானென்கிறது – "பீஷாஸ்மாத்வாதஃபவதே" (பீஷாஸ்மாத்வாதஃபவதே) இத்யாதியாலே பகவதாஜ்ஞையாலே முப்பதுவட்டம்வரவேணுமே; இங்ஙனேயிருக்கிறவன், "ஈஶ்வராஜ்ஞைமறுத்

தால் வேணுமாகில் தலையையறுத்துவைக்கு மித்தனையன்றோ, இக்கொடுமையென்கண்ணால் காணப்போகாது" என்று ஈஶ்வரபடர்தேடிவந்தாலும் காணாதபடியொளித்தான். "ஒளியவன்விசும்பியங்குந் தேரும்போயிற்று" என்னக்கடவதிறே. வரவுக்கு சூசகமும் காணவொண்ணாதபடி மறைந்தது; "ஸோபிரோ ணூர்நலக்ஷ்யதே," "சுழன்றிலங்கு வெங்கதிரோன் தேரோடும்போய்மறைந்தான்" என்னுமாபோலே.

(இம்மண்ணளந்த) இப்பூமிக்கென்னதுயருண்டாயளந்துகொண்டான். பூமிக்கு மஹாபலியாலுண்டான விடரளவோ எனக்கு ராத்ரியாலுண்டானவிடர். வரையாதேயெல்லாரையும் ரக்ஷிக்குமவன். ( கண்பெரியசெவ்வாயித்யாதி ) க்ருபையால் பெரியனாய் பூமியையளந்து, பூமியிலுள்ளார் விடாய்போம்படி குளிரக்கடாக்ஷித்து, அத்தாலுண்டான ப்ரீதிப்ரகர்ஷந்தோற்ற ஸ்மிதம்பண்ணுகையாலே சிவந்தஅதரத்தையுடையவனாய். (எம்) சர்வவிஷயமாகப்பண்ணும் ரக்ஷணத்தையே ஸ்வபாவமாகவுடையவனுமாய். (கார்) இவற்றைரக்ஷிக்கையால் தன்னிறம்பெற்றிருப்பானுமாய். (ஏறு) " அதுதன்பேறு " என்னுமிடந்தோற்றமே நாணித்திருக்குமவனும் வருகிறிலன். எம் என்று-சர்வரக்ஷகனுடைய ரக்ஷ்யவர்க்கத்திலே தானு மந்யதமையாகையாலே சொல்லுகிறாள். என் என்று பாடமானபோது - பண்டென்னோடே கலந்தத்தாலே தன்னிறம்பெற்றுமே நாணித்திருந்தவனென்கை. (வாராநால்) இரக்கவேண்டா, அளக்கவேண்டா, வடிவைக்காட்டவமையும். )

(எண்பெரியசிந்தைநோய்) " யஸ்யாமதம் தஸ்யமதம் " ( யஸ்யாமதம்தஸ்யமதம் ) என்கிறபடியே-வேதாந்தங்கள், நிலமன்றென்று மீண்டபகவத்விஷயத்தை, இத்தனைபோதும் பேசினார்; தம்முடைய சிந்தாவ்யதை * மயர்வறமதிநலமருளப்பெற்ற ஜ்ஞாநத்துக்கு மவிஷயமாயிராநின்றது. " எண்பெரியது " என்னுமித்தனை, " இவ்வளவு " என்னப்போகாது. பிரிந்தவிஷயத்துக்கநுரூபமாயிறே சிந்தாவ்யதைதானிருப்பது, அதுக்கோரவதியில்லையே. " ததப்ராப்திமஹாதுக்க " ( ததப்ராப்திமஹாதுஃக ) (சிந்தைநோய்தீர்ப்பாரார்) சிந்தாவ்யதைபோமித்தனையேவேண்டுவது, அவனைமறக்கவுமமையும். " ஏதுசெய்தால்மறக்கேன் " என்னுமவர்களிறேயிவர்கள்தான், அவனைமறக்கவுமாம் நினைக்கவுமாம், வ்யஸநம்போமித்தனையேவேண்டுவது. இப்போதுமறக்கவுமமையும் என்றது-மறக்கை யுத்தேஶ்யமாய்ச்சொன்னவார்த்தையன்றே; ஓடுகிற வ்யஸநாதிசயத்தைச்சொன்னபடியிறே. அலாபதசையில் ஸ்ம்ருதிதான் மிகவுமாற்றாமைக்குடலாயிருக்குமிறே, " கண்ணன்நாமமேகுழறிக்கொன்றீர், " " காட்டேன்மின்நும்முருவென்னுயிர்க்கதுகாலன் " என்னக்கடவதிறே. ( என்னையே ) இவ்வ்யக்தியொன்றுக்குமேயுள்ளதொரு

வ்யஸநமாயிற்று. நாட்டார் ஸ்மரித்து துஃகநிவ்ருத்திபண்ணிக்கொண்டு போகாநின்றார்களிறே, அதுசெய்யலாமிறே சாதநபுத்த்யா இழிந்தார்க்கு, "நிதித்யாஸிதவ்ய:" (நிதித்யாஸிதவ்ய:) என்று—ஸ்ம்ருதிதன்னையே விதியாநின்றதிறே; அவனுடையபடியிலேயிழிந்தார்க்கிறே விதுள்ளது.*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (பெண்பிறந்தாரித்யாதி) "ஒண்சுடரோன்வாராதொளித்தான்" என்றத்தைப்பற்ற (கண்டார்க்கித்யாதி) "இம்மண்ணளந்த" என்றத்தைப்பற்ற (வாராதேயித்யாதி) "எண்பெரியசிந்தைநோய்" இத்யாதியைப்பற்ற (என்சிந்தாவ்யஸநத்தையித்யாதி)

"இம்மண்ணளந்த" என்றத்தைப்பற்ற வ்யங்க்யமாக வெறுப்பிலேபாவம் (சர்வரக்ஷகனித்யாதி) "கண்பெரியசெவ்வாயெங்காரேறு" என்றத்தைப்பற்ற பாவம் (புருஷோத்தமனித்யாதி) இத்தால்தாத்பர்யம்-ரக்ஷணைகதேசத்திலே யன்வி தனுமாய் "ஒருசேதநமாத்ரம்" என்று சொல்லப்படுமவனுமான வாதித்யனுங்கூடப்பொறுக்கமாட்டாதேயிருக்க, சர்வரக்ஷகனுமாய் புருஷோத்தமனுமானவனித்தைப்பொறுத்திருப்பதேயென்று. * ஒண்மைக்குபாவம் (தன்தோற்றரவிலேயித்யாதி) முப்பதுவட்டம்-முப்பதுநாழிகைக்கொருவட்டம். தலையையறுத்துவைக்குமித்தனையன்றேவென்றது - ஒளித்திருக்கச்செய்தேயு மீஸ்வரபடர்வந்தாலிருக்குமத்யவஸாயத்தாலே. ஒளித்தானென்றது - ஒளித்தானென்கைக்காகவென்றபடியாய்; (வந்திலனென்னுதே ஒளித்தானென்கிறது) என்று கீழோடே யன்வயிப்பது. தானொளிக்கும்போது ரதாதி சிஹ்நங்களைவைத்துப்போமோவென்ன; அவற்றோடேயொளித்தானென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் (ஒளியவனித்யாதி) அதாவது - "சிஹ்நங்களைவைத்துப்போனால் மீளவுமிவற்றில் நசையாலே வரக்கூடும், அப்போதாகப்பெண்பிறந்தார் வ்யஸநங்காணவேண்டிவரும்" என்று அவற்றையுங்கொண்டு மறைந்தானென்றுகருத்து. ஒளியவனித்யாதிக்கு - ஆதித்யனுகாசத்திலே சஞ்சரிக்கிற தேரும்போயிற்றிதிசப்தார்த்த:. ஆதித்யனும்போனான், அவன் தேரும்போயிற்றென்றபடி. திருமொழி-எட்டாம்பத்து அஞ்சாந்திருமொழி இரண்டாம்பாட்டு, "மாரிமாக்கடல்" இத்யாதி. "ஒளித்தான்" என்றதுக்குபாவாந்தரம் (வரவுக்கித்யாதி) ஸூசகம்-ரதாதிகள். ஸூசகமும் காணவொண்ணாதபடி மறைந்ததுக்குப்ரமாணத்வயம் (ஸோபீத்யாதி) "ஏஷக்ருஷ்ணரதஸ்யோச்சைச்சக்ரரேணுர்நிரீக்ஷ்யதாம் | அரிபூதோஹரிர்யேநஸோபிரேணுர்நலக்ஷ்யதே" (ஏஷக்ருஷ்ணரதஸ்யோச்சைச்சக்ரரேணுர்நிரீக்ஷ்யதாம் | அரிபூதோ ஹரிர்யேநஸோபிரேணுர்நலக்ஷ்யதே) இதிபஞ்சமேம்சேஷ்டாதசேகோப்ய:. (சுழன்றிலங்கித்யாதி) சுழன்றுவருவானாய் ப்ரகாசத்தைப்பண்ணுகிற வாதித்யனானவன் தேரோடேபோய்மறைந்தானித்யர்த்த:. திருமொழி ஒன்பதாம்பத்து நாலாந்திருமொழி ஆறும்பாட்டு.

"இ" என்று விசேஷித்ததுக்குபாவம் (இப்பூமிக்கித்யாதி) அதுவென், மஹாபலியாலே துயரில்லையோவென்ன (பூமிக்கித்யாதி) "மண்ணளந்த" என்றதுக்குபாவம் (வாராதேயித்யாதி) "கண்" என்று - க்ருபையாய், க்ருபையாலே பெரியவனென்னுதல்; பெரியகண்ணை யுடையவனென்னுதல், இவ்விரண்டையும்

த்ரோணவருளிச்செய்கிறார் ( க்ருபையாலித்யாதி ) "எம்" என்றவஸ்மச்சப்தம்-ரக்ஷணப்ரஸித்தியைச் சொல்லுகிறதாய், அத்தால்பலிதம் (சர்வவிஷயமாகவித்யாதி) "கார், ஏறு" என்கிற விரண்டுபதங்களுக்கும் பாவம் (தன்னிறமித்யாதி)

எண்பெரிய-எண்ணுக்ககப்படாத. ( யஸ்யாமதமிதி ) யஸ்ய அமதமிதிமதம், தஸ்யமதம் ; யஸ்யமதமிதிமதம், ஸநவேதேத்யந்வய꞉. இத்தனைபோதும் பேசினுமொன்றது - "இம்மண்ணளந்த" இத்யாதியாலே பேசினுமொன்றபடி. அதுக்கு ஹேதுவேதென்ன ( பிரிந்தவிஷயத்துக்கித்யாதி ) அதுக்கு-சர்வப்ரகாரவிலக்ஷணமான பகவத்விஷயத்துக்கு. "விஷயாநுரூபமாயிருக்கும்வ்யதை" என்னுமதுக்கு ப்ரமாணம் ( ததப்ராப்தீத்யாதி ) " [illegible] " ( தச்சித்தவிமலாஹ்லாதக்ஷீணபுண்யசயாததா | ததப்ராப்திமஹாது꞉கவிலீநாசேஷபாதகா | சிந்தயந்தீ ) இத்யாதி, பஞ்சமேம்ஸேத்ரயோதஸே. சிந்தாவ்யதை மறந்தாலொழியத்திராதேயென்ன (சிந்தாவ்யதையித்யாதி) "மறக்கையுத்தேசியம்" என்றிருப்பார்களோவென்ன (ஏதுசெய்தாலித்யாதி) எத்தைச்செய்தால் மறக்கலாமித்யர்த்த꞉. திருமொழி. இதுக்குபாவம் (அவனைமறக்கவுமாமித்யாதி) வ்யாக்யாநத்திலிப்படியில்லாவிட்டாலு மிவ்விடத்திலிப்படி கொள்ளவேணும். "கூடுகையுத்தேசியம்" என்னுமதொழிய, "மறக்கையுத்தேசியம்" என்னலாமோவென்ன (இப்போதித்யாதி) இவ்வாக்யத்துக்கு விவரணமாகவுமாம்-(அவனைமறக்கவுமாம்) இத்யாதிவாக்யம். மறக்கை தேட்டமாகைக்கு, ஸ்ம்ருதிதானப்படி து꞉கரூபமாயிருக்குமோவென்ன (அலாபதசையிலித்யாதி) "அலாபதசையில் ஸ்ம்ருதியாற்றாமைக்குடல்" என்னுமதுக்குப்ரமாணம் (கண்ணனித்யாதி) க்ருஷ்ணனுடையதிருநாமத்தை அநக்ஷரமதுரமாகச்சொல்லி முடித்துவிட்டிகோள். காட்டாதேகிடிகோ ளுங்கள்வடிவை, என்ப்ராணனுக்கந்தவடிவு ம்ருத்யுவாயிருக்குமித்யர்த்த꞉. அவதாரணார்த்தம் (இவ்வயக்தியித்யாதி) அல்லாதார்க்கில்லையோவென்ன (நாட்டாரித்யாதி) தனக்குமப்படி செய்யவொண்ணாதோவென்ன (அதுசெய்யலாமிறேயித்யாதி) ஸ்ம்ருதிக்கு ஸாதநத்வமுண்டோவென்ன (ஸ்திதித்யாஸிதவ்யஇதி) (அதுசெய்யலாமிறே) இத்யாதிவாக்யசேஷம் (அவனுடையவித்யாதி) அதாவது-ப்ராப்யபுத்த்யா இழிந்தார்க்கு தரித்திருக்கப்போகாதென்றபடி. படியிலேயிழிந்தார்க்கு - விக்ரஹத்திலே யிழிந்தார்க்கு. விக்ரஹாநுபவம்பண்ணுமவர்களுக்கென்றபடி. இதுள்ளது - ஸ்ம்ருதி, வ்யஸநத்துக்குடலாமாகாரமுள்ளது.

க்ரமேணாந்வய꞉.......................................................................................*

# ஐந்தாம்பாட்டு.

ஆரொன்னையாராய்வாரன்னையருந்தோழியரு
நீரொன்னேயென்னுதேநீளிரவுந்துஞ்சுவராற்
காரன்னமேனிநங்கண்ணனும்வாரானாற்
பேரொன்னமாயாதால்வல்வினையேன்பின்னின்றே.

## ஆறாயிரப்படி.

( ஆரென்னை ) அன்னையருந்தோழியரும் நீரென்னேயென்னாதே நீளிரவுந்துஞ்சினார், ஆரென்னையாராய்வார்; ஸர்வாவஸ்தைகளிலுமெனக்குத் துணையாயிருக்கக்கடவ காரன்னமேனி நங்கண்ணனும் வருகிறிலன், வாராதொழிந்தால் இவ்வ்யஸநத்துக்காச்ரயமான வென்பேர்முடியப்பெறலாமிறே, நான்முடிந்தபின்பு மென்னுடையபேரானது முடிகிறதில்லையென்கிறாள்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உபகாரசீலமான வடிவையுடைய க்ருஷ்ணனும் வருகிறிலன், நான் நாமாவசேஷையானேன், என்னையாராய்வா ராரென்கிறாள்.

அன்னையரும்-பரிவராய்வந்தாராயும் தாய்மாரும். தோழியரும்-ஸௌஹார்த்தாலேயாராயும்தோழிமாரும். நீர் - இவள்நீர்மை. என்னே - ஏதாயிருக்கிறது. என்னாதே-என்றுநிரூபியாதே. நீள்-தீர்க்கையான. இரவும்-ராத்ரிமுழுக்க. துஞ்சுவர்-உறங்காநின்றார்கள். அவர்களாராயாதவளவிலு மாராயக்கடவனாய், காரன்ன-அதிசயிதோபகாரசீலமான காளமேகம்போலேயிருக்கிற. மேனி-திருமேனியையுடையனாய். நம்-நமக்குபவ்யனான. கண்ணனும்-க்ருஷ்ணனும். வாரான்-வந்தாராய்கிறிலன். வல்வினையேன்-ப்ராப்தராயாராய்வாரு மாராயாமைக்கீடான ப்ரபலபாபத்தையுடையேனானவெனக்கு. பின்-பின்பு. நின்று - நின்று. பேர் - நாமமாத்ரம். என்னை-என்னை. மாயாது - முடியவொட்டுகிறதில்லை. ஆனபின்பு, என்னை - என்னை. ஆராய்வார்-ஆராய்வார். ஆர்-ஆர்.

ஒருவருமில்லையென்றபடி. " அத்யந்தாவஸாதம்பிறந்தவளவிலு மின்னாள்கிடந்தாள் " என்கிற நாமமாத்ரமே ஸத்பாவஸூசகமென்று கருத்து. (வல்வினையேன்பின்னின்று - ஆரென்னையாராய்வார்) என்றந்வயிக்கவுமாம். நீரென்னேயென்னாதேயென்று-நீரென்செய்தீரென்னாதேயென்றுமாம்..............................*

## ஈடு-ஐந்தாம்பாட்டு.

ஆபத்திலுதவு மன்னையருந்தோழியரு மாராய்கிறிலர்கள், அவர்களுதவாதபோதுதவும் க்ருஷ்ணனும் வருகிறிலன், நான் ஸத்தாவசேஷையானேனென்கிறாள்.

(ஆரென்னையாராய்வார்) [ தாஸீநாம்ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹதுர்ப்பலா ] [ தாஸீநாம்ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹதுர்ப்பலா ] திருவடிசென்று ராக்ஷஸிகளை நலியப்புக; இவர்கள் ராவணன்சோறுண்டு அவனுக்குப் பரதந்த்ரைகளாகையாலே யென்னை நலிந்தார்களாகில், தங்களாலேவந்ததொன்றன்றாகில், அதுதனக்குநாமும் " பொறுத்தோம் " என்று, நேர்த்தரவுகொடுத்தபின்பு இனியிவற்றை நலிகிறதென்னென்ன; " ராவணனும்பட்டானாகில் நம்மைநெடுநாள் நலிந்துபோந்த இப்பெண்பயல்களை இப்போது பொறுக்கவேண்டுகிறதென் " என்ன [துர்ப்பலா] [துர்ப்பலா] " சிலர்நம்மைநலிந்தார்கள் " என்று நாமவர்

களை நலியப்புக்கால், அப்போதே அவர்கள் கண்குழிவுகாணமாட்டா தார் பின்புசெய்வதென் பொருமல். ராவணனும்பட்டு, பெருமாளும் விஜயிகளானபின்பு, இனியிதொழிய வேறொருதெளர்ப்பல்யமில்லையிறே. தன்னைநலிந்தராக்ஷஸிகளையும், நீங்களஞ்சாதே கொள்ளுங்கோள் என்று – “ ஹவெயம்ஶரணம்ஹிவஃ ” ( பவேயம்ஶரணம்ஹிவஃ ) என்னக்கடவ அவள், இப்போது, தன்னையாராய்வார் தேட்டமாய்-ஆசொன்னையாராய்வாரொன்கிறளிறே.

(அன்னையரும்தோழியரும்) என்தசையைக்கண்டு என்னோடொக்க வுறக்கந்துறந்தவர்களோடு, “ உறக்கம்துறக்கக்கடவதன்று ” என்று நிஷேதிக்குமவர்களோடு வாசியற வொக்கவெடுக்கும்படியாய் வந்துவிழுந்தது. என்னினைவே நினைவாயிருக்குமவர்களோடு, தங்களுக்கென்னவொருநினைவுண்டாய் நியமிக்கத்தக்கவர்களோடு வாசியற்றது. (அன்னையரும்தோழியரும் நீசொன்னேயென்னுதே நீளிரவும்துஞ்சுவரால்) “துஞ்சுவராலென்னுமிது – துஞ்சுதிராலென்னுமர்த்தம்பெற்றுக்கிடக்கிறது ” என்று சொல்லுவாருமுண்டு. அன்னையரும் தோழியருமான நீங்கள், என்னேயென்னுதே - என்பட்டாயென்னுதேயென்னுதல். அன்றிக்கே, அன்னையரும் தோழியரும், நீசொன்னேயென்னுதே – இதொருநீர்மையிருக்கும்படியே.! என்னே ! என்னுதே. அவன்தன்னைப் பொகட்டுப்போய் வேறுசிலவற்றுலே போதுபோக்கித் தன்னைநினையாதே யிருக்கச்செய்தேயும், தானவனையொழியப் போதுபோக்கமாட்டாதேயிருப்பதே!, இதொருநீர்மையே!, என்னே–இதென்ன ஆஶ்சர்யம், என்னுதே– இப்படி சொல்லாதே. “ நிறைநீரநீரவர் கேண்மைபிறைமதிப் ‌| பின்னீரபேதையார்நட்பு. ” ( நீளிரவும்துஞ்சுவரால் ) எனக்குறங்காமையே ஸ்வபாவமாம்படி, நெடிதான்ராத்ரியெல்லாம் அவர்களுக்குறங்குகையே ஸ்வபாவமாய்விட்டது.

( காரன்னமேனி ) ஒருநீர்ச்சாவியிலே யொருபாட்டம் வர்ஷித்தாற்போலே குளிரும்படியான வடிவையுடையவனுமாய், “ தாஸாமாவிரபூத் ” (தாஸாமாவிரபூத்) என்கிறபடியே முன்புதவிப்போந்தவனும் வருகிறிலன். [தாஸாமென்கிறது] அவர்கள் பூர்வாவஸ்த்தையைப் பற்றவிறே. ( நங்கண்ணனும்வாரானல் ) பெண்களுக்கேயுதவிப்போந்தவனும் வருகிறிலன்.

( பேசொன்னைமாயாதால் ) அவனோடொவ்வாநின்றதீ! பேரும். அவன்வருகிறிலன், இதுபோகிறதில்லை. நான் கார்யத்திலே முடிந்தேனுயிருக்கச்செய்தேயும் “ இன்னுள், இன்னுள் ” என்கிற இப்பேசொன்னை முடிந்தேனுகவொட்டுகிறதில்லை. ஆழ்வாருடையதிருநாமம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸத்தாஹேதுவானப்போலே யிவர்தமக்கும் ஸத்தாஹேது

வானபடி. அடியுடையபோராகையாலே சர்வர்க்கும் தாரகமாயிருக்குமே. இதினுடைய அடியுடைமையிறே யெல்லாரும் சிரஸாவஹிக்கிறது. (யே ரொன்னைமாயாதால்) சப்தாவசேஷையானேனென்றபடி. (வல்வினையே ன்) நான்முடியச்செய்தேயு மென்னைமுடிந்தேறுகாதபடி பண்ணும்படி யான பேறைப்படைக்கும்படியான மஹாபாபத்தைப்பண்ணினேன். (பி ன்னின்று) நான் முடியச்செய்தேயும் இப்பேரானது எனக்குப்பின்னு ம் நின்றுமுடிந்தேறுகவொட்டுகிறதில்லை. வருகிறபோதொக்கவந்தால், போகிறபோது மொக்கப்போகவேண்டாவோ. "[Grantha]" (நாமரூபேவ்யாகரவாணி,) "[Grantha]" (நாமரூபஞ்சபூதாநாம்) என்றொக்கச்சொல்லக்கடவதிறே. முற்படவந்தார்க்கு முற்படப்போகவேண்டியிருக்க, பிற்படவும்போகலாகாதோ ......*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (ஆரொன்னையித்யாதி) "அன்னையரும்தோழியரும்" இத்யாதியைப்பற்ற (ஆபத்திலுதவுமித்யாதி)

வ்யாக்யாதாவினீடுபாடு (தாஸீநாமென்றுதொடங்கி, ஆரொன்னையாராய் வாரொன்கிருளிறேயென்னுமளவும்) "[Grantha]" (ப்ராப்தவ்யந்துதஸாயோகம்மயைததிநிஸ்சிதம்। தாஸீநாம்ராவணஸ்யாஹம்மர்ஷயாமீஹதுர்ப்பலா) இதியுத்தகாண்டே ஹநூமந்தம்ப்ரதிஸீதா. "[Grantha]" (மர்ஷயாமி) என்றதுக்கர்த்தம் (அதுதனக்குநாமும் பொறுத்தோமென்று) நேர்த்தரவுகொடுத்தபின்பென்றது - "[Grantha]" (பவேயம்ஸரணம்ஹிவஃ) என்றத்தைப்பற்ற. நேர்த்தரவு-செல்லுச்சீட்டு. ராவணனும்பட்டானுகிலென்றதுக்கு-ராவணனாலே தேவரீருக்கு நலிவுவாராமலிருக்கைக்காக முன்பிவர்களை நலியாமல்விட்டதென்று தாத்பர்யம். (பொறுக்கவேண்டுகிறதென்னென்ன) நேர்த்தரவுகொடுத்துப் பொறுக்கவேண்டுகிறதென்னென்ன. கண்குழிவு - தைந்யம். "[Grantha]" (துர்ப்பலா) என்றால் - மநோதௌர்ப்பல்யமாகவேணுமோ, அசக்தியைச் சொன்னாலோவென்ன (ராவணனுமித்யாதி) இது - மநோதௌர்ப்பல்யம். ஆகவிப்படி (தன்னைநலிந்தராக்ஷஸிகளையும்) என்று கூட்டி நிர்வஹிப்பது. "[Grantha]" (தாஸீநாம்) என்றத்தை - த்விதீயையாக்கிக்கொள்வது. "[Grantha]" (ததஸ்ஸாஹ்ரீமதிபாலா பர்த்துர்விஜயஹர்ஷிதா। அவோசத்யதிதத்தத்யம்பவேயம்ஸரணம்ஹிவஃ) இதி ஸுந்தரகாண்டே.

"[Grantha]" (ஜஹௌநித்ராஞ்சதந்த்ரீஞ்ச) என்று - இளையபெருமாள் விட்டாப்போலே, உறக்கம்துறந்தவர்கள்-தோழிமார்; நிஷேதிக்குமவர்கள் - தாய்மார் கீழ்வாக்யவிவரணம் (என்னினைவேயித்யாதி) முந்தினவர்த்தத்துக்கு, அன்னையரும் தோழியருமான நீங்கள், என்னேயென்னாதே - என்பட்டாயென்னாதே, நீளிரவுந்துஞ்சுதிராலென்றபடி. துஞ்சுதிராலென்று-மத்யமபுருஷன். த்விதியார்த்தத்துக்கு, அன்னையரும் தோழியருமானவர்கள்; நீர் - இவ்வொருநீர்மை

யே, என்னே - இதொரு நல்லஸ்வபாவமிருக்கும்படியே, என்னுதே நீளிரவும் துஞ்சவொன்றபடி. துஞ்சவொன்று-ப்ரதமபுருஷன். முந்தினவர்த்தத்தில், "நீர்" என்றதுக்கு ஸ்வாரஸ்யமுண்டு. த்விதீயார்த்தத்துக்கு - "துஞ்சவரால்" என்றபரோக்ஷநிர்த்தேஸ ஸ்வாரஸ்யமுண்டு. விவரணம் (அவன்தன்னையித்யாதி) "நீர்" என்று-நீர்மையைச்சொல்லுமோவென்ன (நிறைநீரித்யாதி) நீரவர்கேண்மை - பிறைநிறைநீர, பேதையார் நட்புமதிப்பின் நீர்மையென்றந்வயம். இதுக்கர்த்தம் நல்லஸ்வபாவத்தையுடையவர்களோட்டை ஸ்நேஹம், பூர்வபக்ஷத்தில் ப்ரதமாசந்த்ரனுடைய நிறைகிறஸ்வபாவம்போன்றது; அறிவிலிகளோட்டை ஸ்நேஹம், பூர்ணசந்த்ரனுடைய பின்புண்டான ஸ்வபாவம்போன்றது. அதாவது-க்ஷயிஷ்ணுவென்றபடி. கேண்மையும், நட்பும் - ஸ்நேஹம். பேதையார்-அறிவிலிகள். நீர், நீர்மை - ஸ்வபாவம். பிறை-கலாமாத்ரசந்த்ரன். மதி - பூர்ணசந்த்ரன்.

"நம்" என்றதுக்கர்த்தம் (தாஸாமித்யாதி) "தாஸாமாவிரபூச்சௌரிஸ்ஸ்மயமாநமுகாம்புஜ: । பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீஸாக்ஷாந்மந்மதமந்மத: " (தாஸாமாவிரபூச்சௌரிஸ்ஸ்மயமாநமுகாம்புஜ: । பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீஸாக்ஷாந்மந்மதமந்மத: ) இதிஸ்ரீபாகவதே தஸமே. அவனுதவும்படியவர்களுக்கார்த்தியுண்டோவென்ன (தாஸாமென்கிறதித்யாதி)

அவனோடொக்கையாவதேதென்ன (அவன்வருகிறிலனித்யாதி) வருகிறிலன்-வாராமேபாதிக்கிறுன். இதுபோகிறதில்லை-போகாமேபாதிக்கிறது. இதுபோகாதேசெய்கிறதுதானேதென்ன (நான்கார்யத்திலேயித்யாதி) இன்னுள்-இப்படிப்பட்டவள். ஸ்வாபதேஸம் (ஆழ்வாருடையவித்யாதி) தம்முடையதிருநாமம், அல்லாதார்க்கொழிய தமக்கும் ஸத்தாஹேதுவாகைக்கு ஹேதுவேதென்ன (அடியுடையவித்யாதி) அடியுடையவென்று - பாக்யமுடையவென்றபடி. இதினுடைய - ஆழ்வார்திருநாமத்தினுடைய. தான்போனுல் பேர்நிற்கவொண்ணுதோவென்ன (வருகிறபோதித்யாதி) வருகிறபோதொக்கவந்ததோவென்ன (நாமரூபேஇத்யாதி) "பின்னின்றே" என்றதுக்குபாவம் (முற்படவித்யாதி)

அன்னையருமித்யாரப்ய, வாரானுல், வல்வினையேன் பின்னின்றே-பேறொன்னைமாயாதால், ஆறொன்னையாராய்வா ரித்யந்வய:................................*

# ஆறும்பாட்டு.

பின்னின்றகாதனேய்நெஞ்சம்பெரிதடுமான்
முன்னின்றிராவூழிகண்புதையமூடிற்றுன்
மன்னின்றசக்கரத்தெம்மாயவனும்வாரானு
லிந்நின்றநீளாவிகாப்பாராரிவ்விடத்தே.

## ஆறுயிரப்படி.

(பின்னின்ற) முடிந்தபின்பும் செல்லுகிற விப்ரலேஷ வ்யஸநமொன்றும் பொறுக்கலாயிருக்கிறதில்லை, இந்தராத்ரியான யுகமானது அவன்வரிலு மவனைக்காணவொண்ணுதபடி யென்கண்ணைமறைத்துக்

கொண்டு நில்லாநின்றது, இவ்வந்தகாரமெல்லாம் போம்படி நிரதிசயதீப்தியுக்தமான திருவாழியையேந்திக்கொண்டு அவன்வருகிறிலன், இந்த தசையி லிந்நின்ற நீளாவிகாப்பாராரொன்கிருள் ..........................*

## பன்னீராயிரப்படி·

அநந்தரம், அபிநிவேஶமும் ராத்ரியும் நலியாநிற்க, ஸ்த்திரமான ரக்ஷணோபகரணத்தையுடையவன் வருகிறிலன், என்னுடைய ஆத்மாவை ரக்ஷிப்பாராரொன்கிருள்.

பின்-பின்தொடர்ந்து. நின்ற-விடாமல்நடக்கிற. காதல் - அபிநிவேஶமாகிற. நோய்-நோயானது. நெஞ்சம்-தனக்குப்பிறப்பிடமானநெஞ்சை. பெரிது-மிகவும். அடும்-அழியாநின்றது. முன்-முன்னே. நின்று-நின்று. இரா-ராத்ரியாகிற. ஊழி - கல்பமானது. கண்-கண்ணனது. புதைய-புதையும்படி. மூடிற்று - மறைத்தது. இப்படி பின்னும் முன்னும் விரோதியானவளவில், மன்னின்ற-ஆஶ்ரிதருடைய வினையைக்கடிகைக்கு நித்யஸந்நிஹிதமான. சக்கரம் - திருவாழியையுடையனும். எம்மாயவனும்-ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களாலே தன்னை யென்போல்வார்க்கு ஸ்வம்மாக்கின க்ருஷ்ணனும். வாரான்-வருகிறிலன். நின்ற - நிரந்தரதுஃகாநுபவம்பண்ணுநின்றதும் அதுக்கிளையாதிருக்கிற. என்-என்னுடைய. நீள் - நித்யமான. இ-இந்த. ஆவி-ஆத்மவஸ்துவை. இவ்விடத்து-இவ்வவஸ்த்தையில். காப்பார்-ரக்ஷிப்பார். ஆர்-ஆர்.

இந்நின்றவென்று பாடமாய் - இந்தநித்யமான வாத்மவஸ்துவையென்றுமாம். நித்யத்வமும் துஃகாநுபவத்துக்குறுப்பாயிற்றென்று கருத்து... ... .........*

## ஈடு - ஆறும்பாட்டு·

விரஹவ்யஸநமும் செல்லாநிற்க, ராத்ரியுமாய் ரக்ஷகனானவனும் வாராதொழிந்தால் முடியப்பெறாத ப்ராணனை ரக்ஷிப்பாராரொன்கிருள்.

( பின்னின்றகாதல்நோய் ) புக்கவிடம்புக்கு வடிம்பிட்டுநலிகிற ப்ரேமவ்யாதியானது. இடைந்தொதுங்குகைக்கொரு நிழலில்லாதபடியிருக்கை. (நெஞ்சம்பெரிதடுமால்) நெஞ்சைமிகவும் நோவுபடுத்தாநின்றது. நெருப்பானது சுருணையைவேவப்பண்ணி, பின்னையிறே புறம்பே போய்ச்சுடுவது; அப்படியே, தான்கிடக்குமிடத்தை மிகவும் நலியாநின்றதாயிற்று.

( முன்னின்றித்யாதி ) ப்ரேமவ்யாதியும் ராத்ரியாகிற கல்பமும் தன்னிலே ஸங்கேதித்துவந்தாற்போலே யிராநின்றது. “ நான்பின்னிட்டுவருகிறேன், நீமுன்னேதப்பாமேசூழ்ந்துகொள்” என்று வருவானைப் போலேவந்தது. எதிரிகளெளியரானால் அவர்கையில் வில்லைப்பறிப்பது க்ஷேபிப்பதாய்க்கொண்டு பரிபவிப்பானைப்போலே, இத்தலையிலெளிமைகண்டு ராத்ரியாகிறவூழி, முன்னேநின்று கண்ணைமறையாநின்றது. * உட்கண்ணைக்காதல் மறையாநின்றது, கட்கண்ணைராத்ரிமறைத்தது. (கண்புதையமூடிற்றால்) க்ராஹகமுமாய் ப்ரகாஶகமுமாயிருக்கிற சக்ஷுரிந்த்ரியத்தை, க்ராஹ்யமான இருள்வந்து மூடாநின்றது. அன்றிக்கே,

இருளோடொத்த நிறத்தையுடையவன்வந்து முன்னேநின்றாலும் காண வொண்ணாதபடி, இராவாகிறஊழி,கண்ணை மறையாநின்றதென்னவுமாம்.

(மன்னின்றவித்யாதி) "எப்போதும் கைகழலாநேமியான்" என் கிறபடியே, ஆச்ரிதர்க்கு விரோதிகளுண்டானபோதாக ஆயுதமெடுக்க ப்பார்த்திராதே, எப்போதுமொக்கக் கையிலேவிடாதேகொண்டிருக்கு மாயிற்று. (எம்மாயவனும்) ப்ரகாசத்ரவ்யத்தையிட்டுத் தமஸ்ஸையழை க்கவல்ல ஆச்சர்யபூதன். நிவர்த்தகத்தையிட்டு நிவர்த்யத்தையழைக்கு மவனுக்கு, நிவர்த்தகத்தையிட்டு நிவர்த்யத்தை நிவர்த்திப்பிக்கத்தட் டுண்டோ. (வாரானால்) இங்கு ஸங்கல்பமழியவேண்டா, வருவதாகநினைக் கவமையும். "ஸம்஭வாம்யாத்மமாயயா" (ஸம்பவாம்யாத்மமாயயா) வரு வதாக இச்சிக்கவமையும். "ஆயுதமெடேன்" என்றாயுதமெடுக்கையும், ப்ரகாசத்ரவ்யத்தையிட்டுத் தமஸ்ஸைப் போக்கக்கடவதென்கிற மர்யா தையைக் குலைக்கையுமாகிற இவைவேண்டா, தான்வரவமையும்; நிவர்த் தக ஸ்வபாவத்தாலே நிவர்த்யம் தன்னடையேபோம்.

(இந்நின்றநீளாவிகாப்பாரார்) முடியவேண்டுமளவிலே நூறேபி ராயமாயிருக்கிற இவ்வாத்மவஸ்துவை முடித்துநோக்குவாரார். "அச்சேத்யோயமதாஹ்யோயம்" ( அச்சேத்யோயமதாஹ்யோயம் ) என்கிறவச நத்தைக்கொண்டு நின்று வழக்குப்பேசாநின்றதாயிற்று ஆத்மவஸ்து. இத்தைமுடித்து நம்மைநோக்குவா ராரென்கிறதென்று இப்படி முறுக ச்சொன்னதுதன்னை, ஒருதமிழன் இச்சப்தத்துக்குத் தாத்பர்யமாக இ ட்டுவைக்கிறான் "பிரிவிலும் முடியாத வென்னுயிர்ப்பகையைநீக்கி, என் னைநோக்குவாரார்" என்று. ( இவ்விடத்தே ) ஸர்வரக்ஷகனானவனுமுத வாத இவ்வவஸ்த்தையி லினிமுடிந்து பிழைக்கையிறே சுகம்...........*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு ( பின்னின்றவித்யாதி ) "பின்னின்ற" இத்யாதியைப்பற்ற (விரஹவ்யஸநமித்யாதி)

"பின்னின்ற" என்றது - போனவிடமெங்கும் பின்றொடர்ந்துநிற்கிறவென் னுதல், எனக்குப்பின்னேநின்றவென்னுதல். முந்தினது ( புக்கவிடமித்யாதி ) அதா வது-ஹிம்ஸிக்கைக்காகப்பின்னே யநுவிதாநம்பண்ணினவென்றபடி. த்விதீயார்த் தம் ( நான்பின்னிட்டுவருகிறேன் ) இத்யாதிவாக்யத்திலேகண்டுகொள்வது. வடிம் பிட்டு - அடிமேலடியிட்டு. "நின்ற" என்றதுக்குபாவம் ( இடைந்தித்யாதி ) இடை ந்து-விலங்கி. நோயானால் சரீரத்திலேபற்றிப் பின்பண்றோ நெஞ்சையடுவதென்ன (நெருப்பானதித்யாதி)

"பின்னின்றகாதல்" இத்யாதியையுங்கூட்டிபாவம் ( ப்ரேமவ்யாதியுமித்யா தி ) சங்கேதமெப்படியென்ன; விவரணம் ( நான்பின்னிட்டித்யாதி ) இப்போது, "பின்னின்ற" என்றதுக்கு - எனக்குப்பின்னேநின்றவென்று த்விதீயார்த்தங்கண் டுகொள்வது. க்ராஹகமான சக்ஷுரிந்த்ரியத்தை, க்ராஹ்யமானவிருள் மறைக்கும்

யடியென்னென்ன; ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிருர் (எதிரிகளித்யாதி) இத்தலையிலெளிமைகண்டு - நாயகனைப்பிரிந்து சோச்யையாயிருக்கிற படியைக்கண்டு. இருளுக்கும் ராத்ரிக்குமுண்டான ப்ரத்யாஸத்தியாலே ( ராத்ரியாகிறவூழியென்கிறது ) "நெஞ்சம்பெரிதடுமால், கண்புதையமூடிற்ருல்" என்றுகூட்டிபாவம் ( உட்கண்ணையித்யாதி) உட்கண்ணை - நெஞ்சென்னுமுட்கண்ணை. கண்புதைய-கண்மறைய. "கண்புதையமூடிற்ருல்" என்றதுக்கர்த்தத்வயம். முந்தினது (க்ரூரமுமாயித்யாதி) அதாவது-இதரவிஷயங்களைக்கண்டு தரிக்கவொண்ணுதபடி கண்ணைமறைத்ததென்றபடி. த்விதீயார்த்தம் (அன்றிக்கேயித்யாதி) அவன்வந்துமுன்னேநின்றுலும் தெரியாதபடி மறைத்ததென்றபடி.

(எப்போதும்கைகழலாநேமியான்) சர்வகாலமும் கைவிட்டுநீங்காத திருவாழியையுடையவனித்யர்த்தः. பெரியதிருவந்தாதி கடைசிப்பாட்டு, "இப்போதும்" இத்யாதி. "முன்னின்றசக்கரத்து - எம்மாயவன்" என்றுகூட்டிபாவம் ( ப்ரகாசத்ரவ்யத்தையித்யாதி) தமஸ்ஸையழைத்தது - ஜயத்ரதவதத்தினன்று. இத்தைச்சொல்லி, "வாராஞல்" என்றதுக்குபாவம் (நிவர்த்தகத்தையிட்டித்யாதி) மன்னின்ற-எப்போதும் பொருந்தியிருக்கிற. "மன்னின்றசக்கரத்தெம்மாயவன்" என்றதுக்கு - "ப்ரகாசத்ரவ்யத்தை" இத்யாதிவாக்யத்தாலே யொருபாவமருளிச்செய்து, பீஷ்மனை நிரஸிக்கைக்காக, "ஆயுதமெடேன்" என்றுவைத்து ஆயுதமெடுக்கு மாசர்யபூதனென்று விவக்ஷித்து, "வாராஞல்" என்றதுக்குபாவம் ( இங்குசங்கல்பமித்யாதி ) சங்கல்பமழியவேண்டா - சங்கல்பத்தையுமழித்து ஆயுதமெடுக்கையாகிற யத்நமும் வேண்டாவென்றபடி. நினைக்கவமையுமென்றது - வருகைக்குத் தன்னிச்சையேயொழிய வேறொரு ஆயாஸமில்லாமையாலே. "இச்சையடியாகவவன் வரும்" என்னுமதுக்குப்ரமாணம் ( ஸம்பவாம்யாத்மமாயயாவென்று ) "ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா" ( ப்ரக்ருதிம்ஸ்வாமதிஷ்டாயஸம்பவாம்யாத்மமாயயா ) இதிகீதாஸூசதுர்த்தே. "வருவதாகநினைக்கவமையும்" என்றதின்விவரணம் (வருவதாகவிச்சிக்கவமையுமென்றது) "மன்னின்றசக்கரம்" என்றதுக்குச்சொன்ன பாவத்வயத்தையும் நிக்மிக்கிருர் ( ஆயுதமெடேனென்றித்யாதி ) வரவமையுமோ, இருளைப்போக்கவேண்டாவோவென்ன ( நிவர்த்தகஸ்வபாவத்தாலேயித்யாதி )

"இவ்விடத்தே" என்றதுக்கர்த்தம் (முடியவேண்டுமித்யாதி) "இவ்விடத்தே" என்றது - இவ்வவஸ்த்தையிலேயென்ருய், (முடியவேண்டுமளவிலே) என்றபடி. நூறேபிராயமென்றது - "நீள்" என்றத்தைப்பற்ற. "நீளாவியாய்க்கொண்டு-நின்ற" என்றதின் பலிதம் (அச்சேத்யோயமித்யாதி ) "அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோசோஷ்ய ஏவ ச। நித்யஸ்ஸர்வகதஸ்ஸ்தாணுரசலோயம் ஸநாதநः" ( அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோசோஷ்யஏவச।நித்யஸ்ஸர்வகதஸ்ஸ்தாணுரசலோயம் ஸநாதநः ) இதிகீதாஸூத்விதீயே. "நீள்-நின்ற-இ-ஆவி" என்றந்வயிப்பது. நித்யமாய்நின்ற விவ்வாத்மவஸ்துவையென்றபடி. "நீளாவிகாப்பார்ரார்" என்னுமது - இத்தைமுடித்துநோக்குவாராரென்னு மர்த்தத்தைக்காட்டுமோவென்ன; நீளாவியைக்காக்கையாவது-முடித்துநோக்குகையென்றர்த்தாத்ஸித்தமென்றுவிவக்ஷித்து, இதுக்கு ஸம்வாதங்காட்டுகிருர் ( இத்தைமுடித்தித்யாதி ) உயிர்ப்பகை - ஜீவிக்கையாகிறசத்ரு. இப்படியாகிலு மாத்மாவைமுடிக்கத்தேடுகிறதென்னென்ன (ஸர்வரக்ஷகனித்யாதி) க்ரமேணுந்வயः..................*

# ஏழாம்பாட்டு.

காப்பாராரிவ்விடத்துக்கங்கிருளி னுண்டுளியாய்ச்
சேட்பாலதூழியாய்ச்செல்கின்றகங்குல்வாய்த்
தூப்பாலவெண்சங்குசக்கரத்தன்றோன்றானாற்
றீப்பாலவல்வினையேன்றெய்வங்காளென்செய்கேனோ.

## ஆறாயிரப்படி.

(காப்பாரார்) மஹாந்தகார வர்ஷோபேதையாய் முடிவில்லாத தொரு யுகமாய்க்கொண்டு செல்லாநின்றராத்ரியில், தூப்பாலவெண்சங்கு சக்கரத்தன்தோன்றாதொழிந்தான், காப்பாராரிவ்விடத்து, தீப்பால வல்வினையேன் தெய்வங்காள் என்செய்கேனென்று தன்னுடைய நிரவதிக வ்யஸநத்தாலே கூப்பிடுகிறாள்..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தர்ஶநாகாங்க்ஷாஜநகமான வஸாதாரண சிஹ்நத்தையுடைய சர்வேஶ்வரன் வந்துதோன்றுகிறிலன், இந்தமஹாந்தகாரமான ராத்ரியிலென்செய்கேனென்று, உறங்காததைவங்களைநோக்கிக் கூப்பிடுகிறாள்.

இவ்விடத்து - ரக்ஷகனுதவாத இந்தவவஸ்த்தையில். காப்பார் - ரக்ஷிப்பார். ஆர்-ஆர். கங்கு-எல்லைநிலமாகச்செறிந்த. இருள்-இருளையும். நுண் - நுண்ணிதான. துளி-பனித்துளியையும். ஆய்-உடைத்தாய். சேண்-அதிதூரமான. பாலது-ஸ்வபாவத்தையுடைய. ஊழியாய்-கல்பமாய்க்கொண்டு. செல்கின்ற-செல்லாநிற்கிற. கங்குல்வாய்-ராத்ரியிடத்து. தூ-அழுக்கற்ற. பால - ஸ்வபாவத்தையுடைத்தாய். வெண்-வெளுத்த. சங்கு-ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும். சக்கரத்தன்-திருவாழியையு முடையனானவன். தோன்றான் - "பன்னெடுஞ்சூழ்சுடர் நாயிற்றொடுபான்மதியேந்தி" என்கிறபடியே சந்த்ராதித்யர்களைக் கொண்டுவருமாபோலேவந்து தோன்றுகிறிலன். தீ-அக்நிபோலே. பால-தாஹகஸ்வபாவமாய். வல்-ப்ரபலமான. வினையேன் -பாபத்தையுடையேனானநான். தெய்வங்காள் - என்துக்கங்கண்டு இமைகொட்டாமல் பார்த்திருக்கிறதேவதைகாள். என்-எத்தை. செய்கேன்-செய்வேன்.

ரக்ஷ்யமானவென்றால் ரக்ஷித்துக்கொள்ளவொண்ணாதென்று கருத்து. கங்கு-எல்லைநிலம். தூய்மை-அழுக்கறுதி. பாலென்று-ஸ்வபாவம்........................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

ராத்ரியாகிறயுகம் செல்லாநிற்க அவன்வந்துதோற்றாமையாலே, அநிமிஷராகையாலே உறங்காத தைவங்களைக்குறித்து, நானென்செய்வேனென்கிறாள்.

(காப்பாராரிவ்விடத்து) ரக்ஷகனானவனுதவாதிருக்க, இவ்வளவில் பாதகரானார் ரக்ஷகராகவோ. ரக்ஷகனானவன் வரவுதாழ்த்தாலும் இ

ப்புத்தி பிறவாதிருக்கக்கடவ இவள் இப்போது "காப்பாரார்" என்று இவ்வார்த்தைசொல்லும்படிகாணும் பிறந்ததஶாவிசேஷம். [illegible] [ஶரைஸ்துஸங்குலாம்க்ருத்வாலங்காம்] திருவடி, பிராட்டியை, "பெருமாள்பாடேற இனியெழுந்தருளவமையாதோ" என்ன; ராக்ஷஸஸங்குலையானவித்தை ராமஶரஸங்குலையாக்கிக்காண் நாம்போவது, வேற்றுமனிஶர்முகத்திலே விழித்துப்போகவோ. [illegible] [பரபுரார்த்தநः] அவரோடேவிரோதித்து இதுக்குமுன்பு ஜீவித்துப்போந்தது மொருபடைவீடுண்டோ. [illegible] [மாம்நயேத்யதி] "[illegible]" (நயாமிபரமாம்கதிம்) என்கிறவர் இரண்டுவார்த்தைசொல்லுவரோ. [illegible] [காகுத்ஸ்தः] இந்த்ராதிகள் விரோதிகளையும்போக்குங்குடியிலே பிறந்தவர் ஸ்வகார்யத்தில்சோரநிற்பரோ. [illegible] [தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத்] அவர்க்கநுரூபமானவற்றைச்செய்து போகக்கடவநாம், நம்முடையவாற்றாமை பரிஹரிக்கைக்காக அவர்க்கு நிறக்கேடானவற்றைச்செய்யவோ. "ராமமஹிஷியை யொருராக்ஷசன்பிரிக்க, அவள் சபித்துப்போனாள்" என்னுதல், "ஒருகுரங்குமீட்டது" என்னுதல் செய்கையாகிறவிது, அவர்வில்வலிக்கு வசையாங்காண்; அவர்வம்சத்துக்குக் கொத்தையாங்காண். அவர்விஷயத்தில் ராவணன்செய்தத்தை நாமும்செய்யவோ. ராமதநத்தை "என்னது" என்றாரோடொப்பார்களிறே அவருடைய ரக்ஷணத்தைத் தந்தலையிலே பேறிட்டுக்கொள்ளுமவர்கள். ஏதேனும் பயஹேதுக்களுண்டானாலு மஞ்சாதேயிருக்கக்கடவ இவள் பிரிவாற்றாமைக்கஞ்சினபடியிறே யிவ்வார்த்தைசொல்லிற்று. [illegible] [கஜம்வேத்யாதி, நாஹாரயதிஸந்த்ராஸம்] ஸ்வரூபப்ராயுக்தமான ஸ்த்ரீத்வம்போயிற்று. [illegible] [பாஹூராமஸ்யஸம்ஶ்ரிதா] பயஹேதுக்களுக்கஞ்சுவர்களோ கணையத்துக்குள்ளேயிருப்பார். ஆனைத்திரள்கள் ஸிம்ஹத்திரள்களளவல்லவிறேயிது. (காப்பாராரிவ்விடத்து) "ரக்ஷ்யமிவை, ரக்ஷகனிவன்," என்று தெளிந்தறுதியிட்டு, "அம்ம" என்று அப்புத்தட்டியிருந்தவளிறே இப்போது "காப்பாரார்" என்கிறாள்; பிறந்தவாற்றாமையினதிசயம். அவனுடைய சர்வரக்ஷகத்வமோரச்சாயிறேயிருப்பது, இவர் அல்லிலேகிடந்து நோவுபடுகிறாரிறே. அவனுண்டாயிருக்க, மூதவிலே, க்லேஶமில்லையிறே யொருவர்க்கும்.

(கங்கிருளில்) கங்கென்று – எல்லையாய, எல்லையானவிருளென்னுதல்; (கங்கென்று) மருங்குலை – "மருங்கு" என்னுமாபோலே, கங்குலை – கங்கென்று குறைத்துக்கிடக்கிறதாய், கங்குலிலிருளென்னுதல். அப்போது, கங்குல்வாய் என்கிறவிடம் – "தஶராத்ரம், ஸப்தராத்ரம்"

என்ருல்-பத்துநாள், ஏழுநாளென்று காலபரமாகிறவோபாதி, இதுவும்-காலபரமாகிறது. (நுண்டுளியாய்) தடித்தவிருளும், நேரியதுளியுமாய். (சேட்பாலவித்யாதி) மிக்கநெடுமையை ஸ்வபாவமாகவுடைத்தான கல்பமாய்க்கொண்டுசெல்லுகிற, கங்குல்வாய்-ராத்ரியிடத்து. தமிழாசாரியனென்று தமிழர்க்கு அகஸ்த்யனேபாதியாயிருப்பானெருவன், "செல்கின்றநாளகத்து" என்று வ்யாக்யாநம்பண்ணிவைத்தான். (தூப்பாலவித்யாதி) இருளைப்போக்கும்போது சந்த்ராதித்யர்கள் சேரவுதித்தாற்போலேயிருக்கிற திவ்யாயுதங்களையுடையவன் வருகிறிலன். அந்தச்சந்த்ராதித்யர்கள் வேணுங்காணு மிவ்விருளைப்போக்கும்போது. "ஆங்கத்திகிரிசுடரொன்றும் வெண்சங்கம்வானில் பகருமதியென்றும்" என்றுசொல்லக்கடவதிறே. பண்டேயிவள்கைகண்டுவைத்தவையிறே யிவைதான். இருளோடேசீறுபாறு என்று போக்குவானெருவனும், இருளோடேகண்கலந்துநின்று போக்குவானெருவனுமாயிற்று. (தூப்பாலவெண்சங்கு) தூய்மையை ஸ்வபாவமாகவுடைத்தான வெண்சங்கு. அன்றிக்கே, பாலென்பது-இடமாய், குறைவற்றவிடத்தையுடைத்தாயிருக்கிற. "பெருமுழக்கு" என்னக்கடவதிறே, "ஸூபர்ணோதரநிஸ்ஸ்ருதத்வநி:" (ஸூபூர்ணோதரநிஸ்ஸ்ருதத்வநி:) என்னக்கடவதிறே. தூய்மையால் – குறைவறுதலைக்காட்டுமோவென்னில்; "அவனிவ்வர்த்தத்தில் தூயன்காண்" என்கையாகிறது – அதில்குறைவற்றிருக்குமென்கையிறே; லக்ஷணையிருக்கிறபடி. அன்றிக்கே, (வெண்சங்கு) இத்தாலும், தூய்மையாலும்-வெளுப்பின் மிகுதியைச்சொல்லுகிறதாகவுமாம்; அப்போது பதாந்தர வ்யவதாநத்தாலே அதுதான்யுக்தமல்ல.

(தீப்பாலவல்வினையேன்) தீயஸ்வபாவத்தையுடைத்தாய், போக்கப்போராதபடி கனவியபாபத்தைப்பண்ணினநான். அதாவது – ரக்ஷணத்திலேதீக்ஷித்து, ரக்ஷிக்கைக்கு ப்ராப்தனுய், அதுக்கென்னக்கருவி 'பிடித்திருக்கிறவனுங்கூட வுதவாதபடியானபாபமிறே. (தெய்வங்காளென்செய்கேனே) தெய்வங்களோடிவளுக்கொரு சாம்யமுண்டு; அவர்கள் பிறப்பே அநிமிஷர், இவள்தானே "உண்டோகண்கள்துஞ்சுதல்" என்றிருக்கும். இப்போதுதானிருளுக்கஞ்சியுமுறங்காள்; தன்தசையைக்கண்டதுக்கு அவர்களுறங்காதே யிருக்கிருர்களாகக்கொண்டு, அவர்களைத்தஞ்சமாகநினைத்துக்கேட்கிருள், சிறையுறவுபோலே. தோழிமாருங்கூட உறங்காநிற்கச்செய்தே அவர்களுறங்காதிருக்கையாலே, அவர்களிற்காட்டிலு மிவர்களையண்ணிய வுறவாக நினைத்துச்சொல்லுகிருள். "ஆயுமமருலகுந்துஞ்சிலும்" என்று-தாய்மாரோடொக்க வெடுக்கக்கடவதிறே தேவதைகளையும். ஆர்த்திமிக்கால் "அம்மே! என்செய்வேன்" என்ருற்போலே யிருக்கிறதுகாணும்.................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (காப்பாராரித்யாதி) "கங்கிருளினுண்டுளியாய்" இத்யாதியைப்பற்ற (ராத்ரியாகிறவித்யாதி)

"தூப்பாலவெண்சங்கு சக்கரத்தன்தோன்றுனல் - கங்கிருளினுண்டுளியாயென்றுதொடங்கி, இவ்விடத்து - காப்பாரார்" என்றந்வயித்து க்ஷேபந்தோன்ற பாவம் ( ரக்ஷகனுனவனித்யாதி ) ஈடுபடாதல், சர்வேஶ்வரன் ரக்ஷகனுயிருக்க "காப்பாரார்" என்னலாமோவென்கிற சங்கையிலேயாதல் ( ரக்ஷகனுனவன்வரவித்யாதி ) இப்புத்தி - ரக்ஷகராரொன்கிறபுத்தி. ரக்ஷகன் வரவுதாழ்த்தாலுமிப்புத்திபிறவாதே, "அவனேரக்ஷகன்" என்றத்யவஸித்திருந்தாளோவென்ன; இதுக்கு ப்ரமாணம் (ஶைாஸ்த்வித்யாதி) (இனியெழுந்தருளவமையாதோ) என்றவிடத்தில், இனியென்றதுக்குபாவம் - திருவடிப்ருஷ்டம் ஶமாத்ரமாய், "பெருமாள்பாடேறவாரும்" என்ன, "நீ யிருக்கிற விவ்வாகாரத்தாலே யெப்படிகொண்டுபோகிறுய்" என்ன, விஶ்வரூபத்தைக்காட்டி, "இனியெழுந்தருளவமையாதோ" என்ன வென்றபடி. "நயேத்யதி" (நயேத்யதி) என்கைக்கு, நயிப்பிக்கை நிஶ்சிதமோவென்ன (நயாமீத்யாதி) இது வராஹசரமஶ்லோகம். நயிக்கைதஸ்ய ஸத்ருஶமென்றபோதே - நாம்நம்மைநோக்குகை யவர்க்கவத்யமென்றுவிவக்ஷித்துபாவம் (அவர்க்கநுரூபமானவற்றையித்யாதி) நிறக்கேடாம் ப்ரகாரத்தைக்காட்டுகிறுர் (ராமமஹிஷியையித்யாதி) வசையாம்-கொத்தையாம். "காகுத்ஸ்த்த:" (காகுத்ஸ்த்த:) என்றத்தைக்கடாக்ஷித்துசாடு ( அவர்வம்சத்துக்கித்யாதி ) வம்சமென்று - மூங்கிலாய், தநுஸ்ஸைச்சொல்லுகிறது. "அவர்க்கநுரூபமான" இத்யாதிவாக்யவிவரணம் (அவர்விஷயத்திலித்யாதி) ராவணன்செயலோபாதி ஸ்வரக்ஷணாந்வயம் க்ரூரமோவென்ன (ராமதநத்தையித்யாதி) இவ்வார்த்தைசொல்லிற்று - "காப்பாரார்" என்கிறவிவ்வார்த்தைசொல்லிற்று. பயஹேதுக்களுண்டானுலும் பயப்படாதிருந்தாளோவென்ன ( கஜம்வேத்யாதி ) "கஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வ்யாக்ரம் வா வநமாஶ்ரிதா। நாஹாரயதி ஸந்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ஶ்ரிதா" ( கஜம்வாவீக்ஷ்யஸிம்ஹம்வாவ்யாக்ரம்வாவநமாஶ்ரிதா । நாஹாரயதிஸந்த்ராஸம் பாஹூராமஸ்யஸம்ஶ்ரிதா ) இத்யயோத்யாகாண்டே தஶரதம்ப்ரதிஸுமந்த்ர:. ஸ்த்ரீத்வம்போயிற்று - பீருத்வம்போயிற்று. "பரிகோபமா:" (பரிகோபமா:) என்றத்தைப்பற்ற (கணையத்துக்குள்ளேயென்றது) கணையம் - கோட்டை. அஞ்சாமைக்குஹேதுவேதென்ன (ஆனைத்திரள்களித்யாதி) இது-பாஹுபலம். "கஜம்,ஸிம்ஹம்" என்றது - ஜாத்யேகவசநம்.

இன்னமும், ப்ரணவத்தில் அகாரத்திலேசொல்லுகிற அவனுடையரக்ஷகத்வத்தையும், மகாரத்தில்சொல்லுகிற தன்னுடைய ரக்ஷ்யத்வத்தையு மநுசந்தித்து நிர்ப்பரையாயிருக்குமவள்கிடீர் கலங்கிறுளென்று ஸ்வாபதேஶத்திலே யருளிச்செய்கிறுர் (ரக்ஷ்யமிவையித்யாதி) (அம்மவென்று) சாடு. "அம்மா" என்று ஹர்ஷப்ரகாஶோக்தி; ஸ்வபாவார்த்தம்-அகாரவாச்யனுனவனுக்கு மகாரவாச்யனுனவாத்மாரக்ஷ்யமென்று. அப்புத்தட்டி-தொடைதட்டி; அநுசந்தித்தென்று ஸ்வபாவார்த்தம். அதிசயம்-அதிசயத்தாலே. (ஓரச்சாய்) ஏகரூபமாயென்றுசாடு; அச்சிலே யந்தர்ப்பூதமான அகாரப்ரதிபாத்யமாயிறேயென்று ஸ்வபாவார்த்தம். ( அல்லிலே ) ராத்ரியிலே யென்றுசாடு; ஹல்லான மகாரவாச்யஸ்வஸ்வரூபத்தை யநுசந்தித்து

கோவுபடுகிருளென்று ஸ்வபாவார்த்தம். அகாராதிகளை - அச்சென்றும், ஹகாராதிகளை - ஹல்லென்றும் சொல்லக்கடவதிறே. இத்தால் - அகாரவாச்யனை யநுசந்தித்து நிர்ப்பரனுயிருக்கவேண்டியிருக்க; மகாரவாச்யனுன வாத்மாவையநுசந்தித்து, “நம்மைநாமெங்கே ரக்ஷித்துக்கொள்ளப்போகிறோம்” என்று நோவுபடுகிருளிறேயென்றபடி. அவன் ரக்ஷகத்வத்தை யநுசந்தித்தால் க்லேசியாமலிருக்கக்கூடுமோவென்ன (அவனுண்டாயித்யாதி) (முதலிலே-அவனுண்டாயிருக்க) என்றங்வயிப்பது. முதலிலே - ப்ரணவத்திலே. அவனுண்டாயிருக்க-அகாரவாச்யனுனவவனுண்டாயிருக்க.

எல்லையானவென்றது - செறிந்தவென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, “கங்குல்வாய்” என்றத்தோடு புநருக்தமன்றோவென்ன (அப்போதித்யாதி) முந்தினவர்த்தத்தில் சப்தார்த்தம் (தடித்தவித்யாதி) த்விதீயார்த்தத்தில், “கங்குல்வாய்” என்றத்தை - திவசரூபகாலபரமாகச்சொன்னதுக்கு ஸம்வாதம் (தமிழாசாரியனித்யாதி)

மற்றைசந்த்ராதித்யர்களிவ்விருளைப்போக்கமாட்டார்களோவென்ன (அந்தவித்யாதி) “அந்தச்சந்த்ராதித்யர்கள்” என்கைக்கு, திவ்யாயுதங்களைச் சந்த்ராதித்யர்களாகச்சொன்ன விடமுண்டோவென்ன (ஆங்கத்திகிரியித்யாதி) அவனுடைய திருக்கையிலுண்டான வந்தத்திருவாழியை யாதித்யனென்றும், மற்றைத்திருக்கையிலேந்தின வெளுத்தநிறத்தையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யாகாசத்திலேவர்த்திக்கிற வொளியையுடைய சந்த்ரனென்றுமித்யர்த்த:. மூன்றுந்திருவந்தாதி அறுபத்தேழாம்பாட்டு, “ஆங்குமலரும்” இத்யாதி. இந்தச்சந்த்ராதித்யர்கள்வந்தா லிருள் போமோவென்ன (பண்டேயித்யாதி) கைகண்டென்றது-சாடு; கையிலேகண்டென்றும், அநுபவித்தென்றும். லோகத்தில் சந்த்ராதித்யர்களிருளைப்போக்கும் ப்ரகாரமேதென்ன (இருளோடேயித்யாதி) சீறுபாறென்றுபோக்குகிறவன் - ஆதித்யன். கண்கலந்துபோக்குகிறவன் - சந்த்ரன். முந்தினவர்த்தம்; தூய்மையென்றது-வெண்மையாய், வெண்மையே ஸ்வபாவமாகவுடைய வெண்சங்கென்று. அப்போது, வெண்சங்கென்று - சங்குக்கேருடம். த்விதீயார்த்தத்தில், வெண்சங்கென்றது-வெண்மையையுடையசங்கென்றபடி. இடமுடைமைசொன்னதுக்கு ப்ரயோஜநமேதென்ன (பெருமுழக்கித்யாதி) “[illegible]” (ஸபாஞ்சஜந்யோச்யுதவக்த்ரவாயுநாப்ரும்ஸம்பூர்ணோதரநிஸ்ஸ்ருதஸ்வந: | ஜகத்ஸபாதாளவியத்திகீஸ்வரம் ப்ரகம்பயாமாஸ யுகாத்யயேயதா) இதித்ரோணபர்வணி. லக்ஷணை - ஔபசாரிகப்ரயோகம். இத்தாலும் - “வெண்” என்கிறவிசேஷணத்தாலும். மூன்றுமர்த்தத்தில், இடமுடைத்தாய் மிக்கவெண்மையையுடைத்தான சங்கென்று சப்தநிர்வாஹம். பதாந்தரமாவது - “பால” என்கிறபதம்.

“சங்குசக்கரத்தன்” என்றத்தைப்பற்ற (அதாவது ரக்ஷணத்திலேயித்யாதி) கருவி-ஆயுதம். * உன்னித்து மற்றொருதெய்வந்தொழாதவிவள் “தெய்வங்காளென்செய்கேனோ” என்கிறதென்னென்ன; த்ரோதாபரிஹரிக்கிருர் (தெய்வங்களோடித்யாதி) (உண்டோகண்கள்துஞ்சுதல்) கண்ணுறக்கமுண்டோ. அதாவது-பகவதநுபவாபிநிவிஷ்டரானார்க்கு ஜ்ஞாநசங்கோசம்பிறக்க விரகில்லையென்றுகருத்து. த்வி

தீயபரிஹாரம் (தன்தசையையித்யாதி) (இப்போதுதான்) இத்யாதிவாக்யமும்-தீழு க்கேசேஷம். தோழிமாரைப்பற்ற விவர்கள் தஞ்சமாவகைக்கு ஹேதுவேதென்ன (தோழிமாருங்கூடவித்யாதி) தோழிமாரிலுங்காட்டிலிவர்க ளண்ணியவுறவோவெ ன்ன (ஆயுமித்யாதி) த்ருதீயபரிகாரம் (ஆர்த்திமிக்காலித்யாதி) அதாவது-தன்னி லேசோகித்துச்சொல்லுகிருளென்றபடி.

கங்கிருளிலித்யாரப்ய, என்செய்கேனே, இவ்விடத்து-காப்பாராரித்யர்வயஃ.*

---

# எட்டாம்பாட்டு.

---

தெய்வங்காளென்செய்கேனேரிரவேழூழியாய்
மெய்வந்துநின்றெனதாவிமெலிவிக்கும்
கைவந்தசக்கரத்தென்கண்ணனும்வாரானுற்
றைவந்ததண்டென்றல்வெஞ்சுடரிற்றுனடுமே.

## ஆறாயிரப்படி.

(தெய்வங்காள்) ஓரிரவேழூழியாய் வந்தெனதாவியை மெலிவிக் கும், கருதுமிடம்பொருதுகைந்நின்றசக்கரத்து என்கண்ணனும் வருகி றிலன், ஹேமந்தகாலத்தி லதிசீதளமான தென்றல் வெஞ்சுடரிற்றுனடு ம், தெய்வங்காள், என்செய்கேனென்கிருள் ..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதவிரோதி நிவர்த்தநத்தில் ஆயுதமெடுத்துக் காரியங்கொ ள்ளும் க்ருஷ்ணனும் வருகிறிலன், அதுக்குமேலே தென்றலும் நலியாநின்றது, என்செய்வேனென்று அந்ததைவங்களைப்பார்த்துச் சொல்லுகிருள்.

தெய்வங்காள்-உணர்த்தியோடேயிருக்கிறதைவங்காள். ஒரு ப்ரவ்ருத்திக்ஷ மையல்லாத நான் என்னுடையரக்ஷணத்தில், என்-எத்தை. செய்கேன் - செய்வது. ஓர்-ஒரு. இரவு-ராத்ரி. ஏழு-ஏழு. ஊழியாய்-கல்பமாய்க்கொண்டு. மெய் - புத்திபூர் வகமாக. வந்து-முன்னேவந்து. நின்று-நின்று. விரஹக்லிஷ்டமான, எனது - என் னுடைய. ஆவி-ப்ராணனை. மெலிவிக்கும்-க்ருஶமாக்காநிற்கும். கைவந்த-பகலே "இ ரவையழைக்க" என்னிலும் நினைவறிந்து காரியஞ்செய்யும்படி விதேயமான. சக்க ரம்-திருவாழியையுடைய. என், கண்ணனும்-க்ருஷ்ணன். வாரான் - அத்தைக்கொ ண்டு, இந்தராத்ரிபோம்படிவருகிறிலன். அவன்வாராததறிந்து, தைவந்த -நலியவ ருவாரைப்போலேதடவுகிற. தண்-குளிர்ந்த. தென்றல்-தென்றலானது. வெம்-வெ வ்விய. சுடரில்-அக்நியிற்காட்டிலும். அடும்-சுடாநின்றது.

அக்நிபோலவென்றுமாம். கைவருகை-நினைத்தபடி காரியங்கொள்ளலாகை. தைவருதல்-தடவுதல்..............................................................................*

## ஈடு-எட்டாம்பாட்டு.

ஏகராத்ரி அநேகயுகமாய் மிகவும் நலியாநின்றது, எம்பெருமா னும்வருகிறிலன், அதுக்குமேலே தென்றலும் நலியாநின்றதென்கிருள்.

(தெய்வங்காளென்செய்கேன்) மற்றுமுறங்காதிருப்பாருண்டாகி லிறே யவர்களைப்பார்த்துச்சொல்லுவது.

(ஓரிரவேழூழியாய்) கீழ், "ஊழியாய்" என்றவிடம்-ராத்ரிமாத்ரமாய்நின்று நலிந்ததென்னும்படி, இது அநேககல்பமாய் நலியாநின்றது. சௌபரி, போகத்துக்கநேகம் வடிவுகொண்டாப்போலே, இதுபாதிக்கைக்கநேகம் வடிவுகொள்ளாநின்றது. (மெய்வந்துநின்று) ராவணன் இடம்பார்த்துவந்தாப்போலே விரஹதசையறிந்து நலியாநின்றது. ஈஶ்வரன்மர்யாதை குலைக்கவொண்ணுமைவந்த மாத்ரமன்றிக்கே, தனக்கே ஆக்ரஹமுடையானைப்போலே மெய்யேமுன்னேவந்துநின்று. (எனதாவிமெலிவிக்கும்) போனவுயிரை மீளக்கொடுத்து நலியவற்றுயிற்று. "சென்றற்றது" என்னும்படியிருக்கிற வென்னுடைய ஆவியையுண்டாக்கி நலியாநின்றது; மோர்க்குழம்புகொடுத்துத்தேற்றி, விடுநகங்கட்டி நலிவாரைப்போலே.

(கைவந்தசக்கரத்து) இவ்வ்யஸநத்தைப் பரிஹரிக்கைக்குப்பரிகரமில்லாமல்தானிருக்கிறுனோ.அழையாதிருக்கச்செய்தேயும் நினைவறிந்து கையிலேவந்திருக்கும் திருவாழியையுடையவன். அறவிதேயமானபரிகரத்தை யுடையவனென்றபடி. பாவஜ்ஞுமாய்க் கார்யஞ்செய்யும் பரிகரத்தையுடையவன். [ ஸாவஜ்ஞேந ] [ பாவஜ்ஞேந ] ஸ்ரீபர்ணசாலைசமைக்கும்போது இளையபெருமாள்; ருஷிகளுக்கோலக்கங்கொடுத்திருக்குமிடம் பண்ணும்படியும், அக்நிசாலைசமைக்குமிடமும், இவையிறே பெருமாளருளிச்செய்வது; பிராட்டியுந்தாமு மேகாந்தமாகவிருக்கும்படிக ளிவருடன் தாமருளிச்செய்யாரோ, அவையடையக் கருத்தறிந்து செய்வாராயிற்று. அவர் * தூதுசெய்கண்கள்கொண் டொன்றுபேசினல், இவரும் செவிகண்ணுகக்கேட்டுச் சமைக்குமித்தனை. [க்ருதஜ்ஞேந] [க்ருதஜ்ஞேந] வருந்தியிவர் நினைவைப்பின்சென்றமாத்ரமன்றிக்கே ; அறுபதினுயிரமாண்டு மலடுநின்று பிள்ளைபெற்றசக்ரவர்த்தி, பெருமாளுக்குப் பொருந்துமிடம்பார்த்து மாளிகைசமைத்து முன்புசெய்துபோந்த கட்டளைகளறிந்து, அப்படியேசெய்தாராயிற்று. [யாஜ்ஞேந] [தர்மஜ்ஞேந] இது தான் "தம்பியாயிருந்து இப்படிசெய்தார்" என்று குணமாகையன்றிக்கே, "இதுகர்த்தவ்யம்" என்றுசெய்தார். "உஜ்ஜீவநஹேதுவான அநுஷ்ட்டேயதர்மமிது" என்று செய்தார். [க்ஷயாவுபுத்ரேண] [த்வயா புத்ரேண] போனஐயர்க்கு நிரயநிஸ்தாரகர் நீரேயிறே. "நாமுள்ளதனையு மிவருடையரக்ஷண மிப்படிசெல்லுகிறது, நமக்குப்பின்பிவர்க்குரக்ஷகரார், என்செய்யக்கடவது" என்று இதுவேயாயிற்று அவர்க்கெப்போதும் நெஞ்சாறல்; அவர்செய்யுமவற்றை நீர்செய்கையாலே அவர்க்கு துஃகநிவர்த்தகர்நீரேயிறே. [ யாத்மா ] [தர்மாத்மா] ஐயருமொருவரோ! தான் பரமதார்மிகர்கிடீர்; தாமிருந்தநாளும் நமக்குவேண்டும் ரக்ஷண

ங்கள்பண்ணி, தாம்போனநாளைக்கும் தண்ணீர்ப்பந்தல்வைப்பாரோபா தி யும்மைவைத்துப்போவதே!. [நஸம்வஜ்ரஹீதாஉ] [ நஸம்வ்ருத்தஃ பிதாமம ] நாம் ஐயனை யிழந்திலோமிறே, நீரிழந்தீராகிலித்தனையிறே. "ராமஸ்ய தக்ஷிணோபாஹு:" (ராமஸ்யதக்ஷிணோபாஹு:) என்கிறப டியே விதேயமாய்க்காரியஞ்செய்யும் பரிகரத்தையுடையவர். ( கண்ண ன் ) ஸ்ரீபீஷ்மரைத் தொடருகிறபோது கையிலேவந்திருந்ததிறேதிருவா ழி. ஸ்ரீபீஷ்மர் நெடும்போது பொருதபடியாலே அர்ஜுநனிளைத்தான், அவனிளைத்தவாறே சர்வேஸ்வரன் தன்ப்ரதிஜ்ஞையைமறந்தான், தேரி ல்நின்றும்குதித்துத் திருவாழியைக்கொண்டு தொடர்ந்தான், வந்துகொ ன்றருளீரென்கிறான் [ஏஹ்யேஹி ....] [ ஏஹ்யேஹீத்யாதி ] என்று மாணைமறுத்தாலும் சேதமில்லையீ ! இச்சிறிச்சிவந்தகண்ணழகை யநு பவிக்கப்பெற்றால். [...] [ப்ரஸஹ்ய] தேவர்க்கும் வீரத்துக்கும் தோலேன், என்கையி லாயுதத்தைப்பொகடச்சொல்லித் தலையையறுத் தருளீர். [...] [லோகநாத] வீரத்துக்குத்தோலேனாகிலும் முத ன்மைக்குத்தோற்பனிறே.(என்கண்ணன்) ஆஸ்ரிதர்க்காக ப்ரதிஜ்ஞையை அழியமாறுமவனிறே. ஆஸ்ரிதரிலே யொருவர்க்குச்செய்தது எல்லார்க் குமாயிருக்குமே."ஆஸ்ரிதர்க்காக ப்ரதிஜ்ஞையையழியமாறும்" என்னுமி து தஞ்சமாகவிறே யிவனைப்பற்றுகிறார் பற்றுகிறது. தனக்கென்னவும் சிலநியதமாயிருக்குமாகில் இவனைப்பற்றுவார்க்குப் பலமில்லை.

( தைவந்ததண்டென்றல் ) குளிர்ந்தகாலத்திலேவந்த குளிர்ந்த தென்றலென்னுதல்; தைவருகையாவது – தடவுகையாய், காந்தனுடை ய கரஸ்பர்ஶத்துக்கு ஸ்மாரகமாயிராநின்றதாயிற்றுக்குளிர்ந்ததென்றல். " தான்சென்று மண்மகளைத்தைவந்தான்" என்று ப்ரயோகித்தார்களி றே. ( வெஞ்சுடரிற்றானடுமே ) வெவ்வியசுடரிற்காட்டில் அடுமென்னு தல், சுடர்போலே நலியாநின்றதென்னுதல், லௌகிகாக்நியிற்காட்டில் நரகாக்நிக்குள்ள வாசிபோருமிறே பிரிந்தசமயத்தில், அநுகூலபதார்த் தத்துக்கு ......................................................................*

## ஜீயர் அரும்பதம்

எட்டாம்பாட்டு ( தெய்வங்காளித்யாதி ) " ஓரிரவேழூழியாய் " இத்யாதி யைப்பற்ற (ஏகராத்ரியித்யாதி)

மீளவும் "தெய்வங்காள்" என்கிறதென்னென்ன (மற்றுமித்யாதி)

அநேகக்கல்பமாய் நலிந்ததுக்கு த்ருஷ்டாந்தம் (சௌபரியித்யாதி) "வந்து நின்று" என்றதுக்குபாவம் (ராவணனித்யாதி) அதாவது - ராவணனிடம்பார்த்து வந்தாப்போலே, "விரஹதசை" என்றறிந்துவந்து நலியாநின்றதென்றபடி. "மெய் வந்து" என்றதுக்குபாவம் (ஈஸ்வரனித்யாதி) ஈஸ்வரன் மர்யாதை-ஈஸ்வரன்கட் டினமர்யாதை. "பேரொன்னைமாயாதால்" என்று-சென்றற்றதாகச்சொல்லியிருக்க, "மெலிவிக்கும்" என்கைக் காஸ்ரயமுண்டோவென்ன (போனவுயிரையித்யாதி)

"சக்கரத்து" என்றதுக்குபாவம் (இவ்வ்யஸநத்தையித்யாதி) "கைவந்த" என்றதுக்கு-பாவஜ்ஞமாய்க்கையிலேவந்தவென்னுதல்; "கைவந்த" என்று - முழுச்சொல்லாய், விதேயமானவென்னுதல். இவ்வர்த்தத்வயத்தையு மடைவேயருளிச்செய்கிறார் (அழையாதிருக்க) இத்யாதியாலும், (அறவிதேயமான) இத்யாதியாலும். முந்தினவர்த்தவிவரணம் (பாவஜ்ஞமாயித்யாதி) அப்படியவன் பரிகரத்தில் பாவஜ்ஞராய்க் கார்யம்செய்தபேருண்டோவென்ன (பாவஜ்ஞேநேத்யாதி) "[illegible]" (பாவஜ்ஞேநக்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேநசலக்ஷ்மண। த்வயாபுத்ரேணதர்மாத்மாந ஸம்வ்ருத்தஃபிதாமம) இத்யாரண்யகாண்டே லக்ஷ்மணநிர்மிதபர்ணஶாலாந்த்ருஷ்ட்வாதம்ப்ரதிஹ்ருஷ்டோராமஃ. அவரருளிச்செய்யாதிருக்க, பாவமறிந்துசெய்யும்படி யெப்படியென்ன (அவரித்யாதி) செவிகண்ணாக- கண்செவியாக. சேஷாவதாரத்வாத் என்றபடி. க்ருதம்ஜாநாதீதி-க்ருதஜ்ஞஃ என்றுவிவக்ஷித்துபாவம் (வருந்தியித்யாதி) விவரணம் (உஜ்ஜீவநேத்யாதி) சக்ரவர்த்திக்குநிரயமாவதேதென்ன (நாமுள்ளதனையுமித்யாதி) "கைவந்த" என்றதுக்கு - (அறவிதேயமான) இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கும் இளையபெருமாளை உதாஹரணமாகவருளிச்செய்கிறார் (ராமஸ்யேத்யாதி) அப்படி திருவாழிதான் [illegible] கைவந்த விடமுண்டோவென்ன (ஸ்ரீபீஷ்மனாயித்யாதி) "[illegible]" (புல்லாம்புஜபத்ரநேத்ர) என்றத்தைப்பற்ற (என்றுமித்யாதி) ஆணைமறுக்கையாவது - "ஆயுதமெடேன்" என்றக்ருஷ்ணனை எடுப்பித்து சேஷியினுடையப்ரதிஜ்ஞையையழிக்கை. சேதமில்லை. ஹாநியில்லை. "[illegible]" (அமர்ஷீதுர்ஜயோஜேதாவிக்ராந்தோபுத்திமான்பலீ। ராமஸ்யதக்ஷிணோபாஹுர்நித்யம்ப்ராணோபஹிஶ்சரஃ) இதியுத்தகாண்டே ராவணம்ப்ரதிஶுகஃ. "[illegible]" (ஏஹ்யேஹிபுல்லாம்புஜபத்ரநேத்ரநமோஸ்துதேதேவவராப்ரமேய।ப்ரஸஹ்யமாம்பாதயலோகநாத ரதோத்தமாதபூதஶரண்யஸங்க்யே) இதி பீஷ்மபர்வணி. "என்" என்றதுக்குபாவம் (ஆச்ரிதர்க்காகவித்யாதி) ஆச்ரிதர்க்காகச்செய்தால் தமக்கென்னென்ன (ஆச்ரிதரிலேயித்யாதி) ப்ரதிஜ்ஞாபரிபாலநமன்றோத்ஞசம், அத்தையழியமாறுமதுதஞ்சமோவென்ன (ஆச்ரிதர்க்காகவித்யாதி) ஆச்ரிதர்க்காகவென்றது - அர்ஜுநரக்ஷணார்த்தமாகவென்னுதல், பீஷ்மனை சத்யப்ரதிஜ்ஞனாக்குகைக்காகவென்னுதல். "[illegible]" (ஸ்வநிகமமபஹாய) இத்யாத்யநுஸந்தேயம். இப்படியிராவிட்டால் ஹாநியேதென்ன (தனக்கென்னவுமித்யாதி) சிலவென்றது - சத்யப்ரதிஜ்ஞாதிகள்.

"தைவந்த" என்றது-தைமாசத்திலேவந்தவென்னுதல், தடவிக்கொண்டுவந்தவென்னுதல். தைவருகை - தடவுகையாமோவென்ன; ப்ரயோகம் (தான்சென்றித்யாதி) சுடரென்னுதே, "வெஞ்சுடர்" என்றது - நரகாக்நியை. த்விதீயார்த்தத்துக்கு, "வெஞ்சுடரில்" என்று - உபமார்த்தேபஞ்சமீ. முந்தினவர்த்தத்தில், நரகாக்நியிலும் சுடுமோவென்ன (லௌகிகாக்நியித்யாதி) (வாசிபோருமிறே) என்றவர்த்தரம், நரகாக்நியிற்காட்டிலென்று கூட்டிக்கொள்வது.

க்ரமேணார்வயஃ..........................................................*

# ஒன்பதாம்பாட்டு.

---

வெஞ்சுடரிற்றுனடுமால்வீங்கிருளினுண்டுளியா
யஞ்சுடரவெய்யோனணிநெடுந்தேர்தோன்றுதாற்
செஞ்சுடர்த்தாமரைக்கட்செல்வனும்வாரானா
னெஞ்சிடர்தீர்ப்பாரினியார்நின்றுருகுகின்றேனே.

## ஆறாயிரப்படி.

(வெஞ்சுடரில்) வெஞ்சுடரிற்றுனடாநின்றது வீங்கிருளினுண்டு ளியாய்; அஞ்சுடரவெய்யோ னணிநெடுந்தேர் தோன்றுகிறதில்லை, செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனும்வருகிறிலன், இனி நெஞ்சிடர்தீர்ப் பாரார், முடியப்பெறுதே காலதத்த்வமெல்லாம் நின்றுருகாநின்றேனெ ன்கிறாள்..........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயிதாந்தகாரமான ராத்ரியானது நலியாநின்றது, ஆதித்ய ரதந்தோன்றுகிறதில்லை, இவ்வளவி லத்யபங்குரைஶ்வர்யவிஶிஷ்டனான புண்டரீகாக்ஷன்வருகிறிலன், சிதிலையாகிற வென்னுடைய மநோதுஃகத்தைப்போக்குவாரா ரென்கிறாள்.

வீங்கு-வீங்கிச்சதைத்த. இருள்-இருளையுடைத்தாய். நுண்-நுண்ணியதான. துளி-பனித்துளியை. ஆய் - உடைத்தாய்க்கொண்டு. ப்ரக்ருதமானராத்ரிதான், வெம்-வெவ்விய. சுடரில்-நெருப்பிற்காட்டில். அடும் - சுடாநின்றது. இவ்வளவில், தன் தோற்றரவாலே இருளைப்போக்கும், அம் - அழகிய. சுடர - சுடரையுடைய. வெய்யோன்-உஷ்ணபாநுவான ஆதித்யனுடையதான. அணி-அழகிய. நெடு-உத்துங்கமான. தேர்-தேரானது. தோன்றாது-தோன்றுகிறதில்லை. இவ்வளவில், செம்-அதிசயிதைஶ்வர்யஸூசகமாய்ச்சிவந்த. சுடர்-ஒளியையுடைய. தாமரை - தாமரைபோலேயிருக்கிற. கண்-கண்ணையுடையனான. செல்வனும்-ஸ்ரீமானும். வாரான்-வருகிறிலன். ஆகையாலே, நின்று-ஒருபடிப்படநின்று. உருகுகின்றேன்-உருகாநின்றேன். இனி-இனி. நெஞ்சிடர்-என்மநோதுஃகத்தை. தீர்ப்பார்-தீர்ப்பார். ஆர்-ஆர்.

• வீங்குதல்-தடித்தலாய், செறிதலைச்சொல்லுகிறது. நுண்டுளியாய் - நுண்ணியதுளியாய். தான்-வெஞ்சுடரில்-அடாநிற்குமென்றுமாம் ........................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ராத்ரியும்நலியாநின்றது, ஸூர்யோதயமும் "நமக்கு" என்றவாறே ப்ரார்த்யமாய்விட்டது, ரக்ஷகனானவனும் தோற்றுகிறிலன், என்மநோதுஃகத்தை யினிப்போக்குவா ராரென்கிறாள்.

( வெஞ்சுடரிலித்யாதி ) ராவணன் மாரீசஸஹாயனைக்கொண்டு வந்து தோற்றினைப்போலேயாயிற்று நுண்ணியதுளியோடே செறிந்த விருள்வந்து தோன்றினபடி. இரண்டும் போகத்துக் கேகாந்தமாயிருக்கு

மிறே. “ஒழுகுதுண்பனி” இத்யாதி - வர்ஷாவில் கைக்குள்ளேயடங்க வணைக்கவேணும். இருள்தானே போகவர்த்தகமிறே (வீங்கிருளினுண்டு ளியாய் - வெஞ்சுடரிற்றுனடுமால்) வளர்ந்தவிருளும், நுண்ணியபனி யும், வெவ்வியசுடரிற்காட்டில் அடாநின்றதென்னுதல், வெஞ்சுடர்போ லே அடாநின்றதென்னுதல். இவற்றில் ப்ரதாநமெதென்னில்; அதுவே ணுமோ, “பாதகங்களிரண்டுண்டு” என்னவமையாதோ. இனித்தான் இத்திருவாய்மொழிதன்னில்- ராத்ரி வ்யஸநமிறே சொல்லிப்போருகிற து; ஆனபின்பு, இருளுக்கே ப்ராதாந்யமாக வமையுமிறே.

(அஞ்சுடரித்யாதி) இளையபெருமாளகலநின்றுப்போலே யாயிற் றிது. தன்னுடையதோற்றரவிலே துஃகநிவ்ருத்திபுண்டாம்படியான அழ கியசுடரையுடைய ஆதித்யனும் வருகிறிலன். (தோன்றுதால்) ப்ரளயத் தி லல்பசேஷமாம்படி நீஞ்சி, “கரையைக்கிட்டினேமோ, கிட்டினே மோ!” என்று பார்ப்பாரைப்போலேகாணும், ராத்ரியெல்லாம்நோவுப ட்டு “விடிந்ததோ, விடிந்ததோ” என்றுபார்க்கிறபடி.

(செஞ்சுடரித்யாதி) “தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ” (தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ) என்று ஆதித் யமண்டலத்திலே யெழுந்தருளியிருக்கிறவனும் வருகிறிலன். ஆதித்ய னுடைய வரவுக்கு அருணோதயம்போலே யிருப்பதொன்றிறே, அவனு டையவரவுக்கு ஆதித்யனுடையதோற்றரவு. சிவந்தசுடரையுடைய தாம ரைபோன்ற கண்களையுடைய ஸ்ரீமானும்வருகிறிலன். ஆதித்யன்வந்தா லும் இருள்வரச் சம்பாவனையுண்டிறே, அஸ்தமியாத ஆதித்யனும் வரு கிறிலன். அவனுடையப்ரகாசமும் ப்ராதேசிகமாயிருக்குமிறே, உபயவி பூதிக்கும் ப்ரகாசத்தைப்பண்ணுமவனிறேயிவன். “பகற்கண்டேன் நார ணனைக்கண்டேன்” என்னக்கடவதிறே. (நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்) ஆந்தரமான தமஸ்ஸைப்போக்குவாரார். பாஹ்யமான தமஸ்ஸைப்போ க்குமவனிறேயவன்; ஆந்தரமான தமஸ்ஸாகிறது வயிரம்பற்றினவிடரி றே; அத்தைப்போக்கும்போது, நிலவனுமா யந்தரங்கனுமானவனே வேணுமே. “ஞானமாகிநாயிறுகி” என்னக்கடவதிறே. (நின்றுருகுகின் றேனே - நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்) விலக்ஷணவிஷயத்தில் விப்ரலே ஷம், உருகிற்றுப் தரிமிலோபம்பிறக்கவுமொட்டாது, தரிக்கவுமொட்டா து, முடியவுருகினபடியே நிற்குமித்தனை. “இன்னமொருகால் காணலா மோ” என்னும் நசைமுடியவொட்டாது, அப்போதை யிழவுஜீவிக்கவு மொட்டாது ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (வெஞ்சுடரிலித்யாதி) “வெஞ்சுடரில்” இத்யாதியைக் கடாக்ஷித்து (ராத்ரியுமித்யாதி) இருளுக்கும் ராத்ரிக்குமபேதத்தைவிவக்ஷித்து (ராத்ரியும் நலியாநின்றதென்றது)

"வெஞ்சுடரிற்றனடும்" இதி - அநுவாதஃ. போகவர்த்தமாகையாலே இருள் பாதகமாமத்தனையொழிய, துனிபாதகமாமோவென்ன (இரண்டுமித்யாதி) "துனி போகவர்த்தகம்" என்றதுக்குப்ரமாணம் (ஒழுகித்யாதி) (ஒழுகுறுண்பனிக்கொடுங்கியபேடையை யடங்கவஞ்சிறைகோலித் தழுவுநள்ளிருட்டனிமையிற் கடியதோர்கொடுவினையறியேனே) சொரிகிற நுண்ணியபனிக்கொடுங்கினபேடையைத் தன்சிறகுக்குள்ளேயடங்கும்படி யழகியசிறகையிட்டுத்தழுவும் நடுவிருளில்தனிமையில் கொடியதாயிருப்பதொரு கடுவினையறியேனித்யர்த்தஃ. திருமொழி எட்டாம்பத்து அஞ்சாந்திருமொழி எட்டாம்பாட்டு, "முழுதிவ்வையகம்" இத்யாதி. இதுக்குத்தாத்பர்யார்த்தம் (வர்ஷாவிலித்யாதி) (போகவர்த்தகமிறே) என்றவநந்தரம், அதுக்குமேலேயென்று கூட்டிக்கொள்வது. வீங்கிருளினுண்டுளியாய் - வளர்ந்தவிருளும் நுண்ணியதுளியுமாய்க்கூடிக்கொண்டித்யர்த்தஃ. இன்-சாரியைச்சொல். இரண்டாமர்த்தத்துக்கு, உபமார்த்தேபஞ்சமீ. இரண்டைச்சொல்லுகையாலே "இவற்றிலே ப்ரதாநமின்னது" என்கைக்காகத் தடஸ்த்தசங்கையை யநுவதித்துப்பரிஹரிக்கிறுர் (இவற்றிலித்யாதி) இனித்தானென்றது-வேணுமாகிலென்றபடி.

கீழே "ராவணன் மாரீசஸஹாயனுய்" இத்யாதிக்கநுகுணமாக வருளிச்செய்கிறுர் (இனிப்பெருமாளித்யாதி) இது - அணிநெடுந்தேர்தோன்றுதே யகலுகின்றது. ஆதித்யன் மறைந்ததென்னவுமாம். ரதாபேக்ஷயாஸூர்யனுக்கர்த்தஃ. ப்ராதாந்யமுண்டாகையாலே, தத்ப்ரதாநத்வேந "அஞ்சுடர" இத்யாதிக்குபாவம் (தன்னுடையவித்யாதி) வாராதென்னுதே, "தோன்றுதால்" என்றதுக்குவாக்யை (ப்ரஷயத்திலித்யாதி)

"அஞ்சுடரவெய்யோனணிநெடுந்தேர்தோன்றுதால்" என்றவநந்தரம், "செஞ்சுடர்த்தாமரைக்கட்செல்வனும்வாரானுல்" என்றதுக்குபாவம் (தஸ்யயதாகப்யாஸமித்யாதி) இயம்ஶ்ருதிஶ்சாந்தோக்யே. இத்தால்பலித்தபாவம் (ஆதித்யனுடையவித்யாதி) அதாவது-ஸ்வமண்டலவர்த்தியான ஸர்வேஶ்வரனுடைய வரவுக்கு ஸூசகமானவாகாரத்தாலே, ஆதித்யனுடையவரவும் ப்ரார்த்யமென்றுகருத்து. சப்தார்த்தம் (சிவந்தவித்யாதி) "அஞ்சுடரவெய்யோன்" இத்யாத்யநந்தரம், "செஞ்சுடர்த்தாமரைக்கண்" இத்யாதியைச்சொன்னதுக்கு-ஆதித்யனில் வ்யாவ்ருத்தியைப்பற்றச்சொல்லுகிறதென்று தாத்பர்யாந்தரம் (ஆதித்யன்வந்தாலுமித்யாதி) இன்னமாகாரத்தாலே வ்யாவ்ருத்தி (அவனுடையப்ரகாஶமித்யாதி) உபயவிபூதிக்கும் ப்ரகாசத்தைப்பண்ணுமோவென்ன (பகற்கண்டேனித்யாதி) அதாவது, "நாரணனைக்கண்டேன்" என்று - உபயவிபூதிநாதத்வத்தைச்சொல்லி, "பகற்கண்டேன்" என்கையாலே - உபயவிபூதிக்கும் ப்ரகாசகனென்றபடி.

"வாரானுல்" என்றத்தையுங்கூட்டிபாவம் (ஆந்தரமானவித்யாதி) ஆதித்யனித்தைப்போக்கானோவென்ன (பாஹ்யமானவித்யாதி) (நிலவனுமாய் அந்தரங்கனுமானவன்) அந்தரங்கனுகையாலே நிலவனென்றபடி. நிலவன்-தேசிகன். ஆந்தரமானவந்தகாரத்தை இவன்போக்கும் ப்ரகாரமேதென்ன (ஞானமாகியித்யாதி) அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கும் ஜ்ஞாநமுமாய், பாஹ்யாந்தகாரத்தைப்போக்குமாதித்யனுமாயிதிசப்தார்த்தஃ. திருச்சந்தவிருத்தம் நூற்றுப்பதினாலாம்பாட்டு, "ஞானமாய" இத்யாதி. இத்தால் - "ஞானமாகி" என்றதுக்கு - தான் ஜ்ஞாநஸ்வரூபனுகையாலே இவனுக்கு ஜ்ஞாநத்தையுண்டாக்கி, ஆந்தரமான வஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்குமென்றுகருத்து. வர்த்தமாநநிர்த்தேசத்துக்குபாவம் (விலக்ஷணேத்

யாதி) உருகுகிறதென், முடிந்துபிழைத்தாலோவென்ன (இன்னமுமொருகாலித்யாதி) என்னுதல்; "விலக்ஷணவிஷய" இத்யாதிவாக்யவிவரணமாதல்.

க்ரமேணாந்வய:................................................................*

———— ————

# பத்தாம்பாட்டு.

நின்றுருகுகின்றேனேபோலநெடுவானஞ்
சென்றுருகிநுண்டுளியாய்ச்செல்கின்றகங்குல்வா
யன்றொருகால்வையமளந்தபிரான்வாரானென்
றொன்றொருகாற்சொல்லாதுலகோவுறங்குமே.

## ஆறாயிரப்படி.

(நின்று) நின்றுருகுகின்றேனே போலநெடுவானம் சென்றுருகி நுண்டுளியாய்ச் செல்கின்றகங்குல்வாய், அன்றொருகால்வைய மளந்த பிரான்வாரானென்றாகிலும் அவன்றிறமாக ஒன்றொருகாற்சொல்லாது உலகோ வுறங்குமேயென்கிறாள்................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ராத்ரியிலே நானீடுபடாநிற்க, பூமியை யநந்யார்ஹமாக்கின மஹோபகாரகன் விஷயமாக ஒருவார்த்தைசொல்லாதே லோகமுறங்காநின்றதென்று கூப்பிடுகிறாள்.

நின்று-ஒருகாலொழியாமேநின்று. உருகுகின்றேனேபோல - உருகாநிற்கிற வென்னைப்போலே. நெடு-மஹாவகாசமான. வானம்-ஆகாசம். சென்று - க்ஷயித்துச்சென்று. உருகும்-உருகுகிற. நுண்-நுண்ணிய. துளி-துளிகளை. ஆய்-உடைத்தாய்க்கொண்டு. செல்கின்ற-இடைவிடாமல்செல்லுகிற. கங்குல்வாய் - இரவிடத்து. அன்று-மஹாபலியபஹரித்தவன்று. ஒருகால்-ஒருகாலத்திலே. வையம் - பூமியை. அளந்த-அளந்த. பிரான்-லோகோபகாரகன். வாரான்-இன்றுவருகிறானே. என்று - என்றாகிலும். ஒன்று-ஒருவார்த்தையை. ஒருகால்-ஒருகால். சொல்லாது - சொல்லாதே. உலகு-லோகம். உறங்கும் - உறங்காநிற்கும். ஓ - "ஓ! இதுவென்ன தட்டுத்தான்" என்று வெறுத்துரைத்தபடி. "வாராதொழிவதே" என்று வெறுத்துரைத்ததாகவுமாம்................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

இந்தராத்ரியிலென்னுடைய வ்யஸநத்தைக்கண்டுவைத்து அவன்றிறமாக வொருவார்த்தைசொல்லாதே லோகமாகவுறங்குவதே! யென்கிறாள்.

(நின்றித்யாதி) பரப்பையுடைத்தான, சகலபதார்த்தங்களுக்குமவகாசப்ரதமாயிருக்கும் மாகாசமானது, சென்றற்று நுண்ணியதுளியாய் இற்றுவிழாநின்றது - ஆனைப்போலேயென்றால் (நின்றுருகின்றே

னேபோல) ப்ரத்யக்ஷித்தத்தையிறே யுபமானமாகச்சொல்லுவது. (மஹாதத்த்வமான ஆகாசமழிகிறபடிக்கு வேறு த்ருஷ்டாந்தமில்லை, என் னேச்சொல்லுமித்தனை. அளவுடையாரெல்லாரு மழிகிறகாலமாகாதே.) "யஸ்யஸாஜநகாத்மஜா-அப்ரமேயம்ஹிதத்தேஜ:" (யஸ்யஸாஜநகாத்மஜா – அப்ரமேயம்ஹிதத்தேஜ:) என்று – பெரியவர்களுடையபெருமையும் தன்சம்பந்தத்தாலேயாம்படியிருக்குமவளிறே. "ஸ்ரிய:பதியாகையாலே சர்வாதிகன்" என்னக்கடவதிறே. இப்படிசெல்லுகிற இரவிடத்து. (அன்றொருகாலித்யாதி) "'பிரிவாற்றாமையிலும் ஜீவிக்கைக்குநிமித்தம் அவனுடைய அடிப்பாடு – வளையாதே யெல்லாரையுமொக்கரக்ஷித்தவன், தன்னாலேவந்த ஆற்றாமையைப் பரிஹரியாதிருக்குமோ' என்னுமதிறே, அதுவுமவனுக்கு, புழுக்குறித்த தெழுத்தானப்போலே காதாசித்கமாகவந்ததொன்று, அதவனுக்கு நியதஸ்வபாவமன்றுகாண்" என்றுசொல்லுகிறாளில்லை. (அன்றொருகால்) அன்றங்ஙனே யொருகால்செய்தானித்தனை, அவனுக்கு எற்றைக்கும் நியதமாயிருப்பதொரு ஸ்வபாவமன்றுகாணென்கிறாளில்லை. (பிரான்) என்னுநிற்கச்செய்தேயிறே (வாரான்) என்கிறது. "'லோகத்தையடைய அளந்துகொண்ட வுபகாரகனன்றோ' என்றுநினைக்கிறாயாகில், பெருக்காறு பெருகினாற்போலே அதங்ஙனேயொருகால் செய்துபோனவித்தனை, வாராமையேகாண் ஸ்வபாவம்" என்கிறாளில்லை. (ஒன்று) "வாரான்" என்னவேண்டா, "வரும்" என்னவுமமையும். "இன்னம்வரும்" என்னும் நசைகொண்டுஜீவிக்கவிருப்பார்க்கிறே "வரும்" என்றேசொல்லவேண்டுவது. "வரும்" என்னவுமாம், "வாரான்" என்னவுமாம். (ஒருகால்) ஒருகால்சொன்னால் பின்னையும் ஜீவிப்பார்க்கிறே யிருகால்மட்டுச்சொல்லவேண்டுவது. "அவனினிவாரான்" என்றறிந்தபோதே மூச்சடங்குமிறே. (உலகு ஓ! உறங்குமே) "அன்னையரும்தோழியரு முறங்காநின்றார்கள்" என்று இன்னாதானத்தை, லோகத்தையடைய இன்னாதாம்படிகாணும் அதுக்குப்பின்புபிறந்த தசாவிசேஷம். பிரிந்தவன்றொடொத்ததி! இந்தலோகம்...*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (நின்றுருகித்யாதி) "சென்றுருகி" இத்யாதியைப்பற்ற (இந்தராத்ரியிலித்யாதி) அவன்திறமாக-அவன்விஷயமாக. (ஒருவார்த்தை) எனக்கொருவார்த்தை.

"சென்று" என்றது - (சென்றற்று) என்றதாய், து:கித்தென்றபடி. தன்னையொழிய வேறுத்ருஷ்டாந்தமில்லையோவென்ன (ப்ரத்யக்ஷித்தத்தையித்யாதி) மஹாதத்த்வமான வாகாசத்துக்கு அணுவானதன்னை த்ருஷ்டாந்தமாகச்சொல்லலாமோவென்ன (யஸ்யஸேத்யாதி) "[illegible] யாம்வநே". (நத்வம்ஸமர்த்தஸ்தாம்ஹர்த்தும்ராமசாபாஸ்ரயாம்வநே) இத்யுத்தரார்த்தம். ஆரண்யகாண்டே ராவணம்ப்ரதிமாரீச:. உபபாதகம் (ஸ்ரிய:பதித்யாதி)

"வையமளந்தபிரான்" என்றதும், "வாரான்" என்றதும் - பரஸ்பரவிருத்த மாகையாலே, இவையித்தனையும் ஜீவநத்தில் நசையறுக்கைக்குடலான லோகோக்தியாகக்கூடாமையாலே, "வையமளந்தபிரான்" என்றத்தை-நாயகியினுடைய வபிப்ராயமாக்கி, "அன்றொருகால்" என்றபதத்தை யநுஸந்தித்துக்கொண்டு, "வாரான்" என்ற லௌகிகோக்திக்குபாவம் (பிரிவாற்றாமையிலுமென்றுதொடங்கி அதவனுக்குரியதஸ்வபாவமன்றுகாணென்று சொல்லுகிறாரில்லையென்னுமளவும்) அடிப்பாடு - திருவடிகளின்சாந்நித்யம்; அடிப்பாடு-ஆவகதியும். விவரணம் (வாரையாதேயித்யாதி) (என்னுமதிறே) என்றவநந்தரம், ஜீவிக்கைக்கு ஹேதுவென்றத் யாஹார்யம். குறித்தது - குறியிட்டது. இப்படிதொகுத்தருளிச்செய்த தாத்பர்யத்தைப்பதங்களிலே யேறிட்டுக்காட்டுகிறார் (அன்றொருகாலென்றுதொடங்கி, வாராமையேகாண் ஸ்வபாவமென்கிறாரில்லையென்னுமளவும்) எற்றைக்கும் - என்றைக்கும். "பிரான்" என்னுநிற்க, "வாரான்" என்னக்கூடுமோவென்கிற விரோதத்தையநுவதித்துப்பரிஹரிக்கிறார் (பிரானென்னாநிற்கவித்யாதி) விவரணம் (லோகத்தையித்யாதி) "வரும்" என்றுசொல்லுகையே யபேக்ஷிதமாயிருக்க, "வாரான்" என்றும், "ஒன்று" என்றும்-இரண்டையும் சொல்லுவானென்னென்கிறசங்கையிலே யருளிச்செய்கிறார் (இன்னம்வருமென்னுமித்யாதி) கீழே, "ஒன்று" என்றதுக்கு -(வருமென்னவுமமையும்) என்றர்த்தமருளிச்செய்து; அங்ஙனன்றிக்கே, (வாரானென்றொன்று) அதாவது-வாரானென்கிற ஒருவார்த்தையை யென்றர்த்தாந்தரத்தைவிவக்ஷித்து, "ஒருகால்" என்றதுக்கர்த்தமருளிச்செய்கிறார் (ஒருகாற்சொன்னாலித்யாரப்ய, மூச்சடங்குமிறே இத்யந்தேந) ஆப்தனையன்றோவெறுப்பது, லோகத்தைவெறுக்கிறதென்னென்ன (அன்னையரும்தோழியருமித்யாதி) "ஓ!" என்றதுக்குபாவம் (பிரிந்தவனோடித்யாதி) அதாவது-நிர்த்தயமாயிருக்கிறதென்றபடி.

நின்றுருகித்யாரப்ய, உலகு-உறங்கும், ஓ! இத்யந்வயஃ. நின்றுருகுகின்றேனேபோல-ஒருகாலுமொழியாமே நின்றுருகாநிற்கிறவென்னைப்போலே. நெடுவானம்சென்றுருகி நுண்டுளியாய்ச்செல்கின்றகங்குல்வாய் - பரப்பையுடையவாகாசம் துஃகித்துருகி நுண்ணியதுளிகளையுடைத்தாய்க்கொண்டு இடைவிடாமல்செல்லுகிற ராத்ரியிடத்து. சென்று - சென்றற்று; துஃகித்தென்னுதல், க்ஷயித்தென்னுதல். அன்று-மஹாபலியபஹரித்தவன்று. ஒருகால்-ஒருகாலத்திலே. (வாரானென்றொன்றொருகாற்சொல்லாது) வாரானென்றும் வருமென்று மொருகாற்சொல்லாதேயென்னுதல்; வாரானென்றொன்று - வாரானென்கிற வொருவார்த்தையை, ஒருகாற்சொல்லாதேயென்னுதலென்று சப்தார்த்தம் ........... ... ......................*



## பதினொன்றாம்பாட்டு.

உறங்குவான்போல்யோகுசெய்தபெருமானைச்
சிறந்தபொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்சொன்
னிறங்கிளர்ந்தவந்தாதியாயிரத்துளிப்பத்தா
லிறந்துபோய்வைகுந்தஞ்சேராவாறெங்ஙனேயோ.

## ஆறாயிரப்படி.

(உறங்குவான்) ஸ்வாத்மாநுபவஜநித நிரவதிகாநந்த மஹிமப்ரஸக்தஸ்தைமித்யத்தாலே நிஸ்தரங்கமஹார்ணவ ஸத்ருஶனை வெம்பெ

ருமானைச்சொல்லி யலற்றின இத்திருவாய்மொழியில்சொன்ன வார்த்தை யநுஸந்தித்தாரெங்ஙனே தரிக்கும்படி யென்கிறார்......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாகப்பரமபதப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

உறங்குவான்போல்-படுக்கைவாய்ப்புப்பெற்றுறங்குகிறவன்போலே. ஏகாந்தஸ்தலமான க்ஷீரார்ணவத்திலே, யோகு-ஜகத்ரக்ஷணசிந்தாயோகத்தை. செய்த-பண்ணிக்கிடக்கிற. பெருமானை-சர்வேஶ்வரனைப்பற்ற. சிறந்த - ஸம்ருத்தமான. பொழில்-பொழிலாலே. சூழ் - சூழப்பட்ட. குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொல்-அருளிச்செய்த, நிறம்-பண். கிளர்ந்த - மிஞ்சின. அந்தாதி-அந்தாதியான. ஆயிரத்துள்-ஆயிரத்துள். இப்பத்தால் - இப்பத்தால். இறந்து-சரீரவிஶ்லேஷம்பிறந்து. போய்-அர்ச்சிராதியாலேபோய். வைகுந்தம் - பரமபதத்தில். சேராவாறு-புகாதொழிவது. எங்ஙனே-எங்ஙனே.

அத்தேசத்திலேபுகுகை யறுதியென்றுகருத்து. நிறம்-பண். சந்தமாகவுமாம். இது-கலிவிருத்தம். நாலடித்தாழிசையாகவுமாம் .. .. . ........................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில, இவ்வாபாசுரங்கேட்டார், இவர்தசையை யநுசந்தித்தார் பிழையார்களென்கிறார். ( பரமபதசித்திசொல்லிற்று ) முடிந்தார் புகலிடமதுவாகையாலே சொன்னவித்தனை.

(உறங்குவான்போல் யோகுசெய்தபெருமானை) அவன்வரவுதாழ்க்கையாலே “நம்மைமறந்துறங்குகிறானோ” என்றுசொன்னவித்தனை, அவனுறங்குகிறிலன்; நமமுடையரக்ஷணசிந்தை பண்ணுகிறானித்தனை. “நித்ராவ்யாஜாமாஸ்யா” (நித்ராவ்யாஜகார்யயா) அங்யபரதையைத்தவிர்ந்து நம்முடையரக்ஷணசிந்தைபண்ணுகிறானித்தனையல்லது, மறந்துறங்குகிறானல்லன். மேலுஜ்ஜீவிபபிக்கவிருககிற சர்வேஶ்வரன், இவ்வளவிலே தன்படிகளை ஸ்மரிப்பித்தான். ( சிறந்தபொழில் ) அவன்ரக்ஷணசிந்தைபண்ணிக்கொண்டு கண்வளர்நதருளுகிறபடியை யநுசந்தித்து இவர் தரித்தவாறே, ஊருமதரிததது விரஹத்தில் “அபிவ்ருக்ஷா:” ( அபிவ்ருக்ஷா: ) என்றும, வரவணித்தானல் “அகாலபலிநோவ்ருக்ஷா:” ( அகாலபலிநோவ்ருக்ஷா: ) என்றும் சொல்லலாம்படியாயிறேயிருப்பது. (நிறங்கிளர்ந்தவந்தாதி) பண்ணிலேகிளர்ந்த அந்தாதி. ( இப்பத்தாலித்யாதி ) இப்பத்தையு மநுசந்தித்தவர்களுக்கு, பகவத்விரஹத்தி லிவரைப்போலே, “ பேரென்னைமாயாதால் ” என்றுமுடிவுதேட்டமாய் நோவுபடுமதுவேண்டா; இத்தையநுசந்தித்தவர்கள் பிழையார்கள். இப்பாசுரத்தைக்கேட்டுப் பிழைக்கமாட்டாதவர்கள்புகும்தேசம் பரமபதமாகையாலே சொன்னவித்தனை-இவ்விடம். இத்தாலொருபலஞ்சொல்லிற்றாக

வும்வேணுமிறே, இதென்சொல்லிற்றென்னில்; பகவத்விஷயத்தி லவ காஹித்தவர்களுடைய பாசுரம்கேட்டவர்களுக்கு, ப்ரக்ருதிவிப்லேஷா நந்தரம், அவர்கள் ப்ராப்யமாக நினைத்திருக்கும் தேசப்ராப்தி தப்பாதெ ன்கை. பகவத்ப்ரவணரானார் பாசுரங்கேட்டுப்பொறுக்கமாட்டாதே விடு பட்டு ப்ரக்ருதிவிப்லேஷம்பிறந்தவர்கள், அவர்களுக்குத்தேப்யமான தேசத்தைக் கிட்டாதொழியவிரகுண்டோ. ( இப்பத்தா லிறந்துபோய் வைகுந்தம்சேராவாறெங்ஙனேயோ ) " நீளிரவாய்நீண்டதால், " " ஒண் சுடரோன்வாராதொளித்தான் " என்று - இங்கேயிருந்து க்லேசப்படா தே, அஸ்தமியாத ஆதித்யனும் அஸ்தமியாதபகலுமானதேசத்திலே புக ப்பெறுவர்..............................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (உறங்குவானித்யாதி) " இப்பத்தாலிறந்துபோய் " இத்யாதியின் மூந்தினவர்த்தத்தைக்கடாக்ஷித்தயதாரிகை ( இவர்பாசுரமித்யாதி ) இவர்பாசுரங் கேட்டா ரிவர்தசையையநுசந்திப்பரோ, ஆகையாலே பிழையாரென்றபடி. ஆனால், பரமபதசித்தியைப் பலமாகச்சொல்லுவானேனென்னென்ன (முடிந்தாரித்யாதி)

இப்போது, " உறங்குவான்போல் " என்று - அவனுறங்காமையைச்சொல் லுகிறவிது, "பாம்பணையான்" என்று - தம்மைமறந்துறங்கினானாகச்சொன்னத்தோ டு விரோதியாதோவென்ன (அவன்வரவித்யாதி) விப்லேஷதுக்கதசையில், "உறங் குவான்போல்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (மேலுஞ்ஜீவிப்பிக்கவித்யாதி) (ஸ்ம ரிப்பித்தான்) ஆகையாலே சொல்லுகிறானென்றுகருத்து. இவ்வாக்யம் - (அவன்வர வு) இத்யாதிவாக்யத்துக்குமுன்னே யநுசந்தேயம்.

இவர்தரித்தவாறே ஊரும் தரித்ததுக்குத்ருஷ்டாந்தம் (விரஹத்திலித்யாதி) பண்ணிலேகிளர்ந்த - பண்ணிலேயென்ன.

இவ்விடம் - " வைகுந்தம்சேராவாறெங்ஙனேயோ " என்றவிடம். பரமபத ப்ராப்திசொன்னது - அப்ராதாந்யமென்றருளிச்செய்து ; அங்ஙனன்றிக்கே, முக்யப லமதுவாகையாலே சொல்லிற்றென்று அர்த்தாந்தரம் ( இத்தாலொருபலமித்யா தி) " எங்ஙனேயோ " என்றதுக்குபாவம் (பகவத்ப்ரவணராரித்யாதி) " வைகு ந்தம் " என்றதுக்குபாவம் ( நீளிரவாமித்யாதி ) அஸ்தமியாத வாதித்யனையுடைத் தாகையாலே யொருபோகியானபரமென்றபடி.

" அவிஷ்வக்ஷா: " ( அபிம்ருக்ஷா: ) இத்யாதி, பூர்வமேவலிகிதம். க்ரமே ணாந்வய:..............................................*

---

# த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( உறங்குவான் )

ஆ[illegible] ... (௩௨)

(ஆபத்பந்துத்வகீர்த்யா) பாரெல்லாமுண்டநம் பாம்பணையான் - ப்ரளயகாலத்திலே யெல்லாரையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தருளின ப்ரதையாலும்; (யதுகுலஜநநாத்) காவிசேர்வண்ணனென்கண்ணனும்- யதுகுலதிலகனாய்வந்தவதரிக்கையாலும்; ( தீரவீரத்வகீர்த்யா ) காயுங்கடுஞ்சிலையென்காகுத்தன்-சக்ரவர்த்திதிருமகனாய்ப்பிறந்து படைத்தமஹாவீரத்வகீர்த்தியாலும்; (லோகாநாம்விக்ரமாச்ச) இம்மண்ணளந்தகண்பெரியசெவ்வாய்-எல்லாலோகங்களையும் திருவடிகளாலேயளந்தருளுகையாலும்; (ஆச்ரிததுரிதஹ்ருதே:) காரன்னமேனிநங்கண்ணனும் - ஆச்ரிதருடைய வ்யஸநங்களையெல்லாம் ஹரிக்கையாலும்; (அத்புதைச்சேஷ்டிதைச்ச) எம்மாயவனும்வாரானால்-அத்யாச்சர்யசேஷ்டிதங்களாலும்; (சக்ராத்யஸ்த்ராந்விதத்வாத்) தூப்பாலவெண்சங்கு, கைவந்தசக்கரத்தென் - திருவாழிதிருச்சங்குகளை திவ்யாயுதமாக வுடையனாகையாலும்; ( கமலநயநதாஸம்பதா ) செஞ்சுடர்த்தாமரைக்கட்செல்வனும் - சிவந்ததாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்மலரையுடைத்தாகையாகிற சம்பத்தினாலும்; (வாமநத்வாத்) அன்றொருகால் வையமளந்தபிரான் - ஆச்ரிதார்த்தமாகத் தானிரந்துவருகையாலு மெம்பெருமான் திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்துகொண்டு ஜகத்ரக்ஷணத்திலே ஜாகரூகனாயிருக்கிறானென்று "ஊரெல்லாம்" என்கிற தசகத்திலே யாழ்வாராலே யுபபாதிக்கப்பட்டதென்கிறார்..............................................................(௩௨)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

ஊரநினைந்தமடலூரவுமொண்ணாதபடி
கூரிருள்சேர்கங்குலுடன்கூடிநின்று - பேராமல்
தீதுசெய்யமாறன்றிருவுளத்துச்சென்றதுய
ரோதுவதிங்கெங்ஙனேயோ (சுசு)

(ஊரநினைந்தமடலித்யாதி) இதில்-இரவுநெடுமையாலே நோவுபடுகிற நாயகிபாசுரத்தாலே பேசுகிறபடியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இப்படி "ஸ்வபரஸ்வரூபங்களை யந்யதாகரித்து வழியல்லாவழியிலேயிழிந்துமவனைப்பெறவேணும்" என்னும்படிமுடுக வடியிடுகிற ப்ராப்யத்வரையும்கலங்கி, ஸ்வயத்நரூபமான உபாயாந்தரங்களிலே மூளுகைக்குறுப்பான தெளிவையமுக்கிக்கிளருகிற வஜ்ஞாநமாகிற வல்லிருளாலே போக்கிடமற்றுத் தெகுடாடுகிறதந்தசையை; பிரிவாற்றளாய் மடலெடுக்கையிலே யுத்யோகித்தவளவிலே தைவயோகத்தாலே சூர்யனஸ்தமித்து மத்யராத்ரமாய் சப்தாதிகளில் நெஞ்சுபாலிபாயாமையாலே விச்லேஷவ்யஸந மொருமடைசெய்ய, காலமும்விடியாதொழிய, மடலெடுக்கைபோய் முடிகை தேட்டமானவளவி லதுவுங்கிடையாமல்; இப்படி யிரவுநெடுமையாலே ஈடுபட்டுப்பேசுகிற பிராட்டிபாசுரத்தாலே யருளிச்செய்கிற - * ஊரெல்லாந்துஞ்சியிலர்த்தத்தை, " ஊரநினைந்தமடல் " இத்யாதியாலே யருளிச்செய்கிறானென்கை.

(ஊரநினைந்தமடல்) " குதிரியாய்மடலூர்தும் " என்று ஊரநினைந்தமடல். (ஊரவுமொண்ணாதபடி) ஆதித்யனுமஸ்தமித்து, ப்ரியஞ்சொல்லுவார் ஹிதஞ்சொல்லுவார் பழிசொல்லுவாரெல்லாரு முறங்குகையாலும், இருள்வந்தமூடுகையாலும்

மடலூரவுங்கூடாதபடியாக. ( கூரிருள்சேர்கங்குலுடன் கூடிநின்றுபேராமல்தீது செய்ய ) அதுக்குமேலே, அத்யந்தாந்தகாரத்தோடே ராத்ரியானது கூட்டுப்படையோடேகூடிநின்று இட்டவடிபேராமல், தீதுசெய்ய - பொல்லாங்கையுண்டாக்க. அதாவது-ராவணமாயைக்கஞ்சி " ஸீதாயவெணஹ்ருதா யநம்ஸ்ஹ்ருஷீகூா " ( ஸீதாதவேண்யுத்க்ரதாம்க்ருஹீத்வா ) என்றும், " விஷஸ்யதாதா நஹிமெஸ்திகஸ்சிச்சஸ்த்ரஸ்யவாவெஸ்மநிராக்ஷஸஸ்ய " ( விஷஸ்யதாதாநஹிமேஸ்திகஸ்சிச்சஸ்த்ரஸ்யவாவேஸ்மநிராக்ஷஸஸ்ய ) என்றும் சொல்லுகிறபடியே; " ஊரெல்லாந்துஞ்சி யுலகெல்லாம்நள்ளிருளாய் நீரெல்லாந்தேறியோர் நீளிரவாய்நீண்டதால் " என்றும், " மாவிகாரமாயோர்வல்லிரவாய்நீண்டதால் " என்றும், " ஓயும்பொழுதின்றி யூழியாய்நீண்டதால் " என்றும், " ஒண்சுடரோன்வாராதொளித்தான் " என்றும், " முன்னின்றிராவூழி கண்புதையமூடிற்றால் " என்றும், " கங்கிருளினுண்டுளியாய்ச் சேட்பாலதூழியாய்ச் செல்கின்றகங்குல்வாய் " என்றும், "ஓரிரவேரூழியாய்" என்றும், "வீங்கிருளினுண்டுளியாய்" என்றும், "செல்கின்றகங்குல்வாய்" என்றுமிப்படி தமஸ்ஸோடேகூடின ராத்ரிபேராமல்நின்று துஃகத்தையுண்டாக்கவென்றபடி. இப்படியாகையாலே, (மாறன்திருவுளத்துச்சென்றதுயரோதுவதிங்கெங்ஙனேயோ) என்கிறார். மாறன்திருவுளத்துச்சென்றதுயராவது - " பாரெல்லாமுண்டநம்பாம்பணையான்வாரானால் ஆரெல்லேவல்வினையே னாவிகாப்பாரினியே " என்றும், " ஆவிகாப்பாரினியார் " என்றும், " நீயும்பாங்கல்லைகாண்நெஞ்சமே-மாயும்வகையறியேன் வல்வினையேன்பெண்பிறந்தே " என்றும், " எண்பெரியசிந்தைநோய் தீர்ப்பாராரென்னையே " என்றும், " பேரென்னைமாயாதால்வல்வினையேன் பின்னின்றே " என்றும், " இங்நின்றநீளாவிகாப்பாராரிவ்விடத்தே " என்றும், " தீப்பாலவல்வினையேன் தெய்வங்காளென்செய்கேனோ " என்றும், " எனதாவிமெலிவிக்கும் " என்றும், " நெஞ்சிடர்தீர்ப்பாரினியார் நின்றுருகுகின்றேனே " என்றுமருளிச்செய்தவையாயிற்று. ஆழ்வார் திருவுள்ளத்திலே யநுவர்த்தித்ததுஃகம். இதுதானவரோபேசிலல்லது அந்யர்க்குப்பேசிமுடியாதிறே, அதுதான் வாசாமகோசரமாயாயிற்றிருப்பது. ஆகையாலே பேசிமுடியாதந்தை யெங்ஙனேபேசுவதென்றீடுபடுகிறார். எங்ஙனேயோவென்று - வார்த்தைப்பாடாதல்......................(சச)

ஐந்தாம்பத்தில் - நாலாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - சச.—பாட்டு - சஅசு.





ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஐந்தாம்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

### எங்ஙனேயோ — ப்ரவேசங்கள்.

### ஆறாயிரப்படி.

(எங்ஙனேயோ) அநுபூதபரமபுருஷகுணைஸ்மரணத்துக்குங்கூட க்ஷமையல்லாதபடி ராத்ரியில் மதியெல்லாமுள்கலங்கி அத்யந்தமவஸந்நையாய், விடிந்தவாறே லப்தஸம்ஜ்ஞையாய், பண்டென்டநுபவித்த நம்பியுடைய திருநகரியினுடைய வழகையும், நம்பி தம்முடைய சௌந்தர்ய சௌகந்த்ய சௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யநவதிகாதிஶயா ஸங்க்யேய கல்யாணகுணங்களையும், திவ்யபூஷணதிவ்யாயுதஜநிதமான வழகையும் ஸ்மரித்து, அந்த ஸ்மரணஜநிதமான ப்ரீதியாலும், தத்ஸம்ஶ்லேஷாலாபநிபந்தநமான வப்ரீதியாலும் விஶிஷ்டையாய் தத்ஸம்ஶ்லேஷார்த்தமாகவிருந்து நோவுபடுகிற பிராட்டி, "பரமப்ரணயியான வெம்பெருமான்பக்கல் நீ உன்னுடைய அபிநிவேசந்தோற்றவிருத்தல், அந்தவிஶ்லேஷஜநிதமான அவஸாதந்தோற்றவிருத்தல், அவனெழுந்தருளியிருந்த திருக்குறுங்குடியிலே போகவுத்யோகித்தல்செய்யல், 'தன்னையுத்திஶ்ய விவளிப்பாடுபடாநிற்கசெய்தே வாராதொழிவதே, ஒருவனுடைய கொடுமையிருந்தபடியென்' என்றுகொண்டு இந்தலோகமவன்பக்கலிலே நைர்க்ருண்யாதிதோஷத்தை சங்கிக்கும், இதுவல்லது நங்குடிக்குப்பழியில்லை; ஆனபின்பு, அவன்றானே சம்ஶ்லேஷிக்கக்கண்டிருக்குமத்தனையல்லது இப்படி படுகையீடல்ல" என்று தன்னைப்பொடிந்து தனக்குமுகங்காட்டாதேயிருந்த தன்னுடைய வன்னைமாரைக்குறித்து; நம்பியுடைய, ஸ்வதஸ்ஸித்தமாயு மந்யோந்ய ஸம்ஸர்க்கஸித்தமாயும் சதாநுபூயமாநமாயிருக்கச்செய்தே அபூர்வவத்விஸ்மயமாததாநமுமாயிருந்த நிரவதிகதிவ்ய சௌந்தர்யமும், 'திவ்யாவயவதிவ்யபூஷண திவ்யாயுதங்களுமெல்லா மென்னெஞ்சுள்ளும்புகுந்து நிறைந்திருக்கிற விருப்பும், அவற்றி லென்னெஞ்சுவிழுந்து அவையல்லதறியாதே யிருக்கிறவிருப்பு முங்களுக்குத்தெரியாமையிறே நீங்களென்னைப் பொடிகிறதென்று சொல்லுகிறாள்..............................................

## பன்னீராயிரப்படி.

அஞ்சாந்திருவாயமொழியில், கீழ் "உறங்குவான்போல் யோகுசெய்தபெருமான்" என்று - அவனுடைய ஆஸ்ரிதஸம்ரக்ஷணசிந்தாயோகத்தை யநுசந்தித்து ஆஸ்வஸ்தராய், பூர்வாநுபூதமான, "நல்கியென்னைவிடான்" என்கிறபடியே-தம்மையொருகாலும் கைவிடாதநம்பியுடைய வடிவழகு ஸ்ம்ருதிவிஷயமாய் ஆந்தர ப்ரீதியை ஜநிப்பிக்க, பாஹ்யஸம்ஶ்லேஷாலாபத்தாலுண்டான ஆர்த்தியுமொக்க நடக்கச்செய்தே; நம்பியுடைய அஸாதாரண சிஹ்நாவயவ வைலக்ஷண்யத்தையும், அலங்காரசோபையையும், ஆஸ்ரிதரைக்காத்தூட்டின மாபுதபூர்த்தியையும், பரத்வ ப்ரகாசகமான பரிஷ்காரப்ரகாரத்தையும், அதிசயிதபோக்யமான முகாவயவசோபையையும், முகாவயவத்தோடுசேர்ந்த ரூபபுஜவைலக்ஷண்யத்தையும், தேஜோமயமாய் உத்துங்கமான திவ்யவிக்ரஹயோகத்தையும், சர்வாவயவ சௌந்தர்யத்தையும், அசங்க்யேயாபரணசோபாவிசிஷ்டமான அதிசயிதபோகயதையையும், அநந்யகோசரமாம்படி ஆந்தரமாக பரகாசிக்கிற அதிசயித தேஜோவிசிஷ்டமான ப்ராப்யவேஷத்தையு மநுசந்தித்து, இந்த ஆந்தராநுபவப்ரீதியோடே அலாபநிபந்தமான அப்ரீதியுமொக்க நடக்கையாலே யிவளையாஸ்வஸிப்பிப்பதாக வுத்யோகித்த சுஹ்ருத்துக்களையும் பரிவரையுங்குறித்து ஸ்வதசையை யாவிஷ்கரித்த ப்ரகாரத்தை; நாயகனைப்பிரிந்த காமினியானவள், தத்ஸௌந்தர்யாதி ஸ்மரணத்தாலும் தல்லாபார்த்தியாலும் ப்ரீத்யப்ரீதிஸமமாய் நடக்க, இவளாத்தியை மீட்கைக்காக நியமித்ததோழிமாரையும் தாய்மாரையுங்குறித்து, தானிவ்விஷயத்திலகப்பட்டபடியைச்சொல்லி அவர்களுக்கு மறுத்துரைத்தபடியாயிருக்கையாலே கழற்றெதிர்மறை என்கிற துறையாலே யருளிச்செய்கிறார்.................... .......*

## ஈடு.

* மாசறுசோதியிலே "நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும" என்று – மடலூரப்பாரித்தாள; பாரித்தபடியே தலைக்கடடப்பெருமையாலே "* ஊரெல்லாந்துஞ்சி யுலகெல்லாம்நள்ளிருளாய், முதலிலே மடலூருலகக்கு விஷயந்தானில்லாதபடி பழிசொல்லுவாருங்கூட வுறங்கிற்று" என்று வெறுத்தாள்; "அருசுடரவெய்யோ னணிநெடுந்தேர்தோன்றுதால்" என்று – ஆதித்யோதயத்துககு சூசகமுங்கூட இல்லையாயிற்றென்று வெறுத்தாள்; "நெஞ்சமே" "நம்பாங்கல்லைகாண்நெஞ்சமே" என்று–ஒன்றைஸ்மரித்து தரிக்கைக்கு விரகற்றதென்றும் வெறுத்தாள். * மாசறுசோதியில்–ப்ராப்யத்வரையாலே உபாயாத்யவசாயம் கலங்கினபடி, *ஊரெல்லாந்துஞ்சியில்–அத்த்வரையுங்கூடக்கலங்கினபடி. இதில்– "ரக்ஷகனவன்" என்னும்தெளிவும்செல்லாநிற்க, ப்ராப்யருசிநலிகிறபடி. இக்குறைகளெல்லாந்தீரும்படி போதும்விடியப்பெற்று; "அன்னையருந்தோழியரும்" என்கிறவிழவுதிர, உகப்பாரும் பொடிவாரும் ஹிதஞ்சொல்லுவாருமாகப்பெற்றது. அநந்தரம் பந்துவர்க்கமடையவுணர்ந்து "நீர்க்கவென்றேழி" என்று இவளுடைய துணிவுகண்டுகப்பாரும், "தோழீமீரென்னையினியுமக்காசையில்லை" என்னவேண்டும்படி ஹிதஞ்சொல்லி யலைப்பாருமாகப்பெற்றது; அவ்வழியாலே அவர்கள் தாங்க

ளிவ்விஷயத்துக்கு ஸ்மாரகராவார்களிறே. ஆதித்யனுமுதித்து, பதார்த்ததர்ஶநம்பண்ணப்பெறுகையாலே வ்யஸநமும் பாதிபாயப்பெற்றது. இவ்வள வாபீவாஸமுண்டானவாறே, நெஞ்சுஸ்மரித்து தரிக்கைக்கு ஸஹகாரியாயிற்று. இப்படி, ராத்ரி வ்யஸநம்போம்படி போதுவிடியப்பெறுகையாலே ஒருதரிப்புமுண்டாய், அவனையநுபவிக்கப்பெறாமையாலே ஆற்றாமைக்குமுடலாய் நோவுபட்டுச்செல்லாநிற்க, உணர்ந்தபந்துக்களுடைய, "நீயிப்படி யிவ்விஷயத்திலே யதிமாத்ரப்ரவணையாகிற விது உனக்குக்குடிப்பழி, உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குப்போராது, அவன் தலைமைக்கும்போராது" என்று ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்க, "இவர்கள் உகந்தருளினநிலங்களில் வாசியறியார்கள்" என்றிருந்தாளிவள், "நீங்கள்சிலர்காட்டக்கண்டிகோளல்லாமையாலே யிவ்விஷயத்தையுள்ளபடி யறிந்திலிகோள்; நானங்ஙனன்றிக்கே, அவன்றானே *மயர்வறமதிநலமருளித் தன்னைக்காட்டக்காண்கையாலே யுள்ளபடிகண்டேன்; ஆகையாலே, நம்பியுடையவடிவழகிலும் ஒப்பனையழகிலும் ஆபரணச்சேர்த்தியிலும் வேண்டற்பாட்டிலும், நானுங்கள் ஹிதவசநத்துக்கு மீளாதபடியகப்பட்டேன்" என்றிங்ஙனே தன்படிகளைச் சொல்லாநிற்கச்செய்தே; "ஸ்வயத்நத்தால் காண்பார்க்கறியவொண்ணாதபடியாகப் பெற்றோமிறே, இவ்வஸ்துதானுண்டாகப்பெற்றால் நாம் பெற்றபோது பெறுகிறோம், பிறரறியாதொழியப்பெற்றோமிறே" என்னும் ப்ரீதியோடே தலைக்கட்டுகிறது. ஆக, போதும்விடிந்து ஹிதஞ்சொல்லிபலைப்பாருமுண்டாகப்பெறுகையாலே ஒருதரிப்பும்,அதுதான் நினைத்தவிடிவாகப் பெறாமையாலே யொரு அப்ரீதியும்; அவனை ஸ்மரிக்கப்பெறுகையாலே யொருப்ரீதியும், அதுதானநுபவமாகப்பெறாமையாலே ஒரு அப்ரீதியும்; ஆதித்யனுதித்துப் பதார்த்ததர்ஶநம்பண்ணப்பெறுகையாலே ஒருப்ரீதியும், அதுதானவனைக்காணப்பெறாமையாலே ஒரு அப்ரீதியுமாய்; ப்ரீத்யப்ரீதி சமமாய்ச்செல்லுகிறது.

* ஏழையராவியும் – உருவெளிப்பாடாயிருக்கச்செய்தே, அதிலிதுக்குவாசி – அதில், "இணைக்கூற்றங்கொலோ" என்றும், "உய்விடமேழையர்க்குமசுரர்க்கு மரக்கர்கட்குமெவ்விடம்" என்றும்-பாதகத்வமுறைத்திருக்கும்; இதில் – கீழ்ப்பிறந்த துஃகநிவ்ருத்தியுண்டாம்படி ஸ்மரித்து தரிக்கவும்பெற்று, அதுதா னநுபவமாகப்பெறாமையாலே வந்த அப்ரீதியுமாய், இப்படி ப்ரீத்யப்ரீதிசமமாய்ச்செல்லுகிறது. ஜாபாலிபகவானும் வார்த்தைசொல்லி, ஸ்ரீவசிஷ்டபகவானு மிக்குடியில்போந்தபடிகளையுமெல்லாம்சொல்லி, "இனிமீண்டு திருவபிஷேகம்பண்ணவமையும்" என்ன, பெருமாள் "அங்ஙன்செய்வதில்லை" என்று முடியநின்றபடியைக்கண்டவாறே, பௌரஜநங்களெல்லா முகப்பதுஞ்செய்தார்கள் வெறுப்பதுஞ்செய்தார்கள்; "ரக்ஷகனைவன்தொடங்கினகார்யத்தி

லே இப்படிமுடியநின்றவிடம் நம்முடையரக்ஷணத்துக்குமுண்டிறே " என்றுகப்பதுஞ்செய்தார்கள், " அத்தாலேநாம்பெற்றதென், இப்போது பதினாலாண்டிழந்திருக்கவேண்டாநின்றதே " என்று வெறுப்பதுஞ் செய்தார்களிறே. திருவடிபிராட்டியைத் திருவடிதொழுதபோது, "நமக்குப்பராக்ரமிக்கைக்குக் கைம்முதலுண்டாகப்பெற்றோமிறே " என்றுகப்பதுஞ்செய்தான், " இவளவளைப்பிரிந்து இவ்விருப்பிருப்பதே " என்று வெறுப்பதுஞ்செய்தான். பிராட்டிதான் திருவடிவார்த்தையைக்கேட்டபோது. [ 𑌅𑌮𑍃𑌤𑌂 𑌵𑌿𑌷𑌸𑌂𑌸𑍃𑌷𑍍𑌟𑌂 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌵𑌾𑌨𑌰𑌭𑌾𑌷𑌿𑌤𑌂 ] [ அம்ருதம் விஷஸம்ஸ்ருஷ்டம் த்வயாவாநரபாஷிதம் ] என்று பெருமாளென்னைப் பிரிந்தவிடத்தில் என்னையல்லதறியானொன்றுசொன்ன தெனக்கு இனிதாயிருந்தது, அவர்பிரிவிலே தளராநின்றானென்று சொன்னபடியாலே வெறுப்பாயிருந்ததென்றாளிறே. அப்படியே இவர்க்கும் ப்ரீத்யப்ரீதி சமமாய்ச்செல்லுகிறது.....................................................*

## ஜீயர் அரும்பதம்.

எங்ஙனேயோப்ரவேசே, கீழில்துஃகமெல்லாமிதிலே தீர்ந்ததென்கைக்காக, கீழ்துஃகஹேதுமூன்றென்கிறார் (மாசறுசோதியித்யாதி வாக்யத்ரயத்தாலே) ( தலைக்கட்டப்பெறுமையாலே ) என்றவிடத்திலே - ( தலைக்கட்டப்பெறு ) தபடி ராத்ரியாயிருள்வந்து மூடிநின்ற (மையாலே) என்றத்யாஹார்யம். (மடலூருகைக்கு விஷயந்தானில்லாதபடி ) என்றதுக்கு - இவர்கள் பழிசொல்லுமது, அவ்விஷயத்துக்கு ஸ்மாரகமாய் அவ்வழியாலே மடலூருகைக்கு விஷயத்தைக்காட்டிக்கொடுக்குமதொன்றாகையாலே மடலூருகைக்கு விஷயமுண்டு; இவர்கள்பழிசொல்லாதேயுறங்குகையாலே மடலூருகைக்கு விஷயமில்லையென்று தாத்பர்யம். (ஒன்றைஸ்மரித்து தரிக்கைக்குவிரகற்றது) என்றதுக்குபாவம்-மநஸ்ஸவன்பக்கலிலே ப்ரவணமாகையாலே வேறொன்றைஸ்மரித்து தரிக்கைக்கு முடலன்றிக்கே, அலாபதசையாகையாலே யவனைஸ்மரித்து தரிக்கைக்குமுடலன்றிக்கே விரகற்றதென்று. ஆக, பழிசொல்லுவாருங்கூடவில்லாதபடி யுறங்குகையாலும், ஆதித்யோதயத்துக்கு ஸூசகமுமின்றிக்கே ராத்ரி வ்யசநமாகையாலும், நெஞ்சுபாங்கல்லாமையாலும் வெறுத்தாளென்று துஃகஹேதுமூன்று. ( வெறுத்தாள் ) என்கிறவாக்யத்துக்கு - " இக்குறைகளெல்லாம் " என்றவாக்யத்தோடேசங்கதி.

நடுவேஸ்வாபதேசம் (மாசறுசோதியிலித்யாதி) ( த்வரையுங்கூடக்கலங்கினபடி ) என்றதுக்கு தாத்பர்யம் - மடலெடாதொழிந்தது ராத்ரியிலிருளாலேயென்கிறவத்தால், மடலாகிறது - ப்ராப்யத்வரையாகையாலே, இந்த த்வராஜ்ஞாநம் சம்ஸ்ருதிகாளராத்ர்யநுஸந்தாநஜநித மஹாவ்யஸநத்தாலே தலைமடிந்து, சம்சாரதுஃகமேமேலிட்டதென்று. "நிறைந்தவன்பழி நங்குடிக்கிவளென்றன்னைகாணகொடாள்" என்று-தாயாரானவவஸ்த்தையும், தலைமகளானவவஸ்த்தையு மாழ்வார்தமக்கேயுள்ளதொரு அவஸ்த்தையாகையாலே, அத்தைப்பற்ற ( இதில்ரக்ஷகனித்யாதி) இதில் ரக்ஷகனவனென்னும் தெளிவும் செல்லாநிற்க ப்ராப்யருசி நலிகிறபடியென்றது - * மாசறுசோதியிலும் * ஊரெல்லாந்துஞ்சியிலும்போன வத்யவசாயமும் த்வரையு மிரண்டுமித்திருவாய்மொழியிலேயுண்டாய்ச்செல்லுகிறதென்றபடி.

கீழே * ஊரெல்லாந்துஞ்சியில் வ்யஸநத்துக்குச்சொன்ன ஹேதுக்கள்மூன்று மித்திருவாய்மொழியிலே போனபடியை யருளிச்செய்கிறார் (இக்குறைகளெல்லாமென்றுதொடங்கி, ஸஹகாரியாயிற்றென்னுமளவாக) உகப்பார்-உயிர்த்தோழி. பொடிவார்-தாய்மார். ஹிதஞ்சொல்லுவார் - மற்றைத்தோழிமார். “தோழிமார்களுமன்னையரும்முனிதிர்” என்று இதுக்குச்சந்தை. உகப்பாரார், பொடிவாரார், ஹிதஞ்சொல்லுவாராரென்ன; இத்தைவிவரிக்கிறார் (அநந்தரமித்யாதி) அநந்தரம்-போதுவிடிந்தவநந்தரம் ( துணிவுகண்டுகப்பாரும் ) என்றவநந்தரம், “எங்ஙனேயோவன்னைமீர்காளென்னைமுனிவதுநீர்” என்றுபொடிவாருமென்று கூட்டிக்கொள்வது. ஹிதஞ்சொல்லியலைப்பாருண்டாகை து:கஹேதுவன்றோ, அத்தையநுகூலமாகச்சொல்லுகிறதென்னென்ன (அவ்வழியாலேயித்யாதி) அவ்வழியாலே-பழிசொல்லுகிறவழியாலே. த்விதீய த்ருதீயவெறுப்புக்களும் தீர்ந்தமையைக்காட்டுகிறார் ( ஆதித்யனுமித்யாதியாலும், இவ்வளவாஶ்வாஸமித்யாதியாலும் ) பாலியாய்கை - நாநாமுகமாகப்பிரிந்துபோகை.

( இக்குறைகளெல்லாம் ) இத்யாதிவாக்ய நிகமநபூர்வகமாக வித்திருவாய்மொழியில் ப்ரமேயத்தை யருளிச்செய்கிறார் ( இப்படிராத்ரியித்யாதி ) குடிப்பழியென்றது - “நிறைந்தவன்பழி” என்றத்தைப்பற்ற. ஸ்த்ரீத்வத்துக்குப்போராதென்றது - “முன்னின்றாய்” என்றத்தைப்பற்ற. அவன்றலைமைக்கும் போராதென்றது - “சிறந்தகீர்த்தி” என்றத்தைப்பற்ற. “என்னெஞ்சினால் நோக்கிக்காணீர்” என்றத்தைப்பற்ற ( நீங்கள்சிலரித்யாதியும், நானங்ஙனன்றிக்கே யித்யாதியும் ) வடிவழகிலுமென்றது - “நீலமேனி” என்றத்தைப்பற்ற. ஒப்பனையழகிலுமென்றது- “பூந்தண்மாலைத்தண்டுழாயும்” என்றத்தைப்பற்ற. ஆபரணச்சேர்த்தியிலுமென்றது - “மின்னுநூலுங்குண்டலமும்” என்றத்தைப்பற்ற. வேண்டற்பாட்டிலுமென்றது - “பொன்முடியும்” என்றத்தைப்பற்ற. வேண்டற்பாடு-பெருமை. ஸ்வயத்நத்தால் காண்பார்க்கென்றது-“அறிவரியபிரானை” என்கிறபாட்டில் - தம்மைப்போலே பரிவில்லாமையாலே ஸ்வயத்நபரராகச்சொன்ன ஸித்தோபாயநிஷ்டரையாதல், “என்னெஞ்சினால்நோக்கிக்காணீர்” என்கிறபாட்டிற்சொன்ன வுபாஸகரையும் ஸ்வகத ஸ்வீகாரபரரையுமாதல். கீழ் வாக்யவிவரணம் ( இவ்வஸ்துதானித்யாதி )

அந்யாபதேசமாவது அப்ரீதிகர்ப்பமாகையாலே, கீழ் மூன்றுவகையாகச்சொன்னதரிப்பிலே அப்ரீதியுமுண்டென்று, இப்படி ப்ரீத்யப்ரீதிஸாம்யத்தை த்ரோதா தர்ஶிப்பிக்கிறார் ( ஆகப்போதித்யாதி ) தான் நினைத்தவிடிவாகப்பெறுமையாலேயென்றது - என்றபடி. அவனை ஸ்மரிக்கப்பெறுகையாலே - வ்ருத்தகீர்த்தநமுகத்தாலே ஸ்மரிக்கப்பெறுகையாலே.

இத்திருவாய்மொழியிலே “வந்தெங்குநின்றிடுமே” என்கிற ஸ்வாரஸ்யத்தாலே - உருவெளிப்பாடாயிருக்கிறதென்று விவக்ஷித்து, * ஏழையராவிக்குமிதுக்கும் வாசியருளிச்செய்கிறார் (ஏழையராவியுமித்யாதி) உருவெளிப்பாடாவது-ப்ரத்யக்ஷமாகத்தோற்றுகை. ( ப்ரீத்யப்ரீதிஸமமாய் ) உருவெளிப்பாடாய் ( செல்லுகிறது ) என்றத்யாஹார்யம். ஆழ்வார்க்கு * முனியேநான்முகனளவும் மாநஸாநுபவமாயிருக்க, உருவெளிப்பாட்டுக்கு வாசியென்னென்னில்; பூர்வாநுபூதரஸத்தை மறந்து ரஸாந்தரமாய்ச்செல்லுகை-மாநஸாநுபவம், அநுபூதரஸமநுவர்த்தியாநிற்கச்செய்தே ரஸாந்தராபேக்ஷைஜநிக்கை யுருவெளிப்பாடென்று பேதங்கண்டுகொள்வது. “வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பஶ்யாமி” ( வ்ருக்ஷேவ்ருக்ஷேசபஶ்யாமி ) என்றவிடத்தில் உருவெளிப்பாடு பயப்ரயுக்தம்; இங்கு ப்ராவண்யப்ரயுக்தம்.

ப்ரீத்யப்ரீதிருபவிருத்ததர்மத்வயத்துக் கேகதர்மியி லேகதைவஸமாவேஸம் கூடுமோவென்ன; உதாஹரணத்ரயம் (ஜாபாலீத்யாதி) அதுக்குஹேதுவேதென்ன (ரக்ஷகனுனவனித்யாதி) இவ்விடத்திலே - "ததத்புதம் ஸ்தைர்யமவேக்ஷ்ய ராகவே ஸமம் ஜநோ ஹர்ஷமவாப து:கித: । ந யாத்யயோத்யாமிதி து:கிதோऽபவத் ஸ்திதப்ரதிஜ்ஞத்வமவேக்ஷ்ய ஹர்ஷித:" (ததத்புதம்ஸ்தைர்யமவேக்ஷ்யராகவேஸமம்ஜநோஹர்ஷமவாபதுஃகிதஃ । நயாத்யயோத்யாமிதிதுஃகிதோபவத்ஸ்திரப்ரதிஜ்ஞத்வமவேக்ஷ்யஹர்ஷிதஃ) என்கிறஸ்லோக மநுஸந்தேயம், த்விதீயோதாஹரணம் (திருவடியித்யாதி) (வெறுப்பதும்செய்தான்) என்கிறவிடத்திலே - "இமாமஸிதகேஸாந்தாம் ஸதபத்ரநிபேக்ஷணாம் । ஸுகார்ஹாம் து:கிதாம் த்ருஷ்ட்வா மமாபி வ்யதிதம் மந:" (இமாமஸிதகேஸாந்தாம்ஸதபத்ரநிபேக்ஷணாம் । ஸுகார்ஹாம்துஃகிதாம்த்ருஷ்ட்வாமமாபிவ்யதிதம்மநஃ) என்றதநுஸந்தேயம். த்ருதீயோதாஹரணம் (பிராட்டியித்யாதி) நிகமிக்கிருர் (அப்படியேயித்யாதி) "அம்ருதம் விஷஸம்ஸ்ருஷ்டம் த்வயா வாநர பாஷிதம் । யச்ச நாந்யமநா ராமோ யச்ச ஸோகபராயண:" (அம்ருதம்விஷஸம்ஸ்ருஷ்டம் த்வயாவாநரபாஷிதம் । யச்சநாந்யமநாராமோயச்சஸோகபராயணஃ) இதிஸுந்தரகாண்டே ஹநுமந்தம் ப்ரதிஸீதா..........................................*

---

## ஐந்தாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

எங்ஙனேயோவன்னைமீர்காளென்னைமுனிவதுநீர்  
நங்கள்கோலத்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்  
சங்கினேடுநேமியோடுந்தாமரைக்கண்களோடுஞ்  
செங்கனிவாயொன்றினேடுஞ்செல்கின்றதென்னெஞ்சமே.

### ஆருயிரப்படி.

என்னுடையப்ராக்ருதியறிந்திருக்கிற தாய்மாரானநீங்கள், என்னுடைய வ்யவசாயத்துக்கடியான நம்பியுடைய வழகை யின்றைதாகாதே என்னைப்பொடிகிறபடி யெங்ஙனே, நமக்காக நிரதிஸய ஸௌந்தர்யத்தோடே திருக்குறுங்குடியிலே நின்றருளினநம்பியை நான்கண்டபின், சங்கு சக்கரங்களோடும் தாமரைபோன்ற திருக்கண்மலர்களோடும் சிவந்தகனிபோலேயிருக்கிற திருப்பவளமொன்ருேடும் மிகவும் பூணுநின்றதென்னுடைய வந்தஃகரணமென்கிருள்.........................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நம்பியுடைய வஸாதாரணசிஹ்நமான ஆழ்வார்களிலும், ப்ரதாநமான வவயவசோபையிலு மென்னெஞ்சு ஸக்தமாய் நடவாநின்றதென்கிருள்.

அன்னைமீர்காள் - அன்னைமீர்காள். நீர்-பெற்றநீங்கள். ஓ - ப்ரியஞ்செய்யார் தே. என்னை - நல்லதுகண்டுமேல்விழுந்தவென்னை. ஓ-உகக்கப்ராப்தமாயிருக்க. முனிவது-முனிகிறபடி. எங்ஙனே-எங்ஙனே. நங்கள் - நங்குடிக்கஸாதாரணபூதராய். கோலம்-தர்ஸநீயவேஷரான. திருக்குறுங்குடி-திருக்குறுங்குடியில். நம்பியை-கல்யாணகுணபரிபூர்ணரானநம்பியை. நான்-நான். கண்டபின் - அநுபவித்தபின்பு. அவருடைய ப்ராப்யபாவத்துக் கஸாதாரணசிஹ்நமான. சங்கிஞேடும்-ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடும். நேமியோடும்-திருவாழியோடும். தாமரை - தாமரைபோலேதர்ஸநீயமான. கண்களோடும்-திருக்கண்களோடும். செம்-சிவந்த. கனி-கனிபோலே. ஒன்று-அத்விதீயமாயிருக்கிற. வாயிஞேடும்-திருவதரத்தோடும். என்-என். நெஞ்சம்-நெஞ்சு. செல்கின்றது-சக்தமாய் நடவாநின்றது.

கோலம்-ஊருக்குவிசேஷணமுமாம்........ ....................................*

## ஈடு - முதற்பாட்டு.

திருக்கையிலாழ்வார்களோடேசேர்ந்த நம்பி திருமுகத்திலழகிலே, என்னந்தஃகரணம் மிகவும் ப்ரவணமாகாநின்றதென்கிருள்.

(எங்ஙனேயோவித்யாதி) ஹிதஞ்சொல்லத் தொடங்கினவாறே தந்தாமைமறக்குமித்தனையோ. ஒன்றைப்பரிஹரிக்கப்பார்த்தால் அதினுடையநிதாநமறிந்து பரிஹரிக்கவேண்டாவோ. என்னுடைய ப்ராவண்யத்தைப் பரிஹரிக்கப்பார்த்தால், எனக்கிவ்வளவான ப்ராவண்யத்தைவிளைத்த நம்பியுடையவழகையறிந்து அத்தையன்றேபொடிவது. என்னுடைய நிலைக்கும் உங்களுடைய ஹிதவசநத்துக்கு மென்னசேர்த்தியுண்டு. நம்பியுடைய வழகையறிந்தநுபவித்திருக்கிறநீங்கள், அதிலேதுவக்குண்டிருக்கிற வென்னை மீடகப்பார்க்கிறபடியெங்ஙனேயோ. (அன்னைமீர்காள்) இக்குலதர்மத்துக்கு நானேதேனும் தப்பநின்றதுண்டோ. "பேராளன்பேரோதும் பெரியோரை" என்றும், "யவரோலுமவர்" என்றும் நீங்கள்சொல்லும்வார்த்தைகேட்டு வளர்ந்தவளன்றோநான். தாந்தாம்செய்யுமத்தை வயிற்றிற்பிறந்தார்செய்தவாறே குற்றமாமித்தனையோ. புத்ரர்களாகவுமாம், சிஷ்யர்களாகவுமாம், பகவத்விஷயத்திலேயாழிவர நின்றவர்கள் ப்லாகநீயராமத்தனையன்றே. கூரத்தாழ்வார் ஓராளிலே நங்கையார் திருவடிசார்ந்தவாறே, "இன்னமுமொரு விவாஹம்பண்ணுவோமோ" என்றுவிசாரித்து, "இதுதான் க்ரமத்தாலேவந்து ஆழ்வானுக்கு விரோதமாய்த் தலைக்கட்டும்; இனித்தான், 'அநாஶ்ரமீ ந திஷ்டேத்' (அநாப்ரமீநதிஷ்டேத்) என்று சாஸ்த்ரஞ்சொல்லாநின்றது; இப்ஶாஸ்த்ரார்த்தத்தை யநுஷ்டிப்போமோ! பாகவதபரிசர்யையைப்பண்ணுவோமோ" என்று விமர்ஶியா, "அஸ்ஸாமாந்யதர்மத்திற்காட்டில் இவ்விசேஷதர்மமே ப்ரபலம்" என்று தவிர்ந்தார். (என்னை முனிவதுநீர்) என்னையுங்கள் சொற்கேளாதபடிபண்ணின நம்பியழகையன்றேமுனிவது. (என்னை) நம்பியுடையவழகிலே துவக்குண்டிருக்கி

றவென்னை இதுவே யாத்ரையாயிருக்கிறநீங்கள் விலக்குகிறபடியெங்ஙனேயே...

(நங்களித்யாதி) உங்களையறியாவிட்டால் அவ்விஷயத்தையு மறியாதொழியவேணுமோவென்கிறாள். (நங்கள்) இக்குடிக்காக முற்றூட்டுப்போலேகாணும் நம்பியுடையவழகு. சர்வேஶ்வரனைநோக்கி அநந்தவ்ரதம் நோற்றுப்பெற்றவர்களைப்போலன்றிக்கே, நம்பியை யாஶ்ரயித்தாயிற்றிவளைப்பெற்றது. "உடையநங்கையார் நம்பியையாஶ்ரயித்து ஆழ்வாரைத்திருவயிறுவாய்த்தார்" என்று ப்ரஸித்தமிறே. * நெடுங்காலமும்கண்ணனீள்மலர்ப்பாதம் பரவியிறேபெற்றது. கோலமென்கிறவிது-நகரத்துக்குவேண்டு மலங்காரங்களை யுடைத்தாயிருக்குமென்று, திருக்குறுங்குடிக்கு விசேஷணமாதல்; அன்றிக்கே, நம்பி தம்முடைய சௌந்தர்யத்தைச்சொல்லுதல். (நம்பியை) கல்யாணகுணங்களால் பூர்ணமானவிஷயத்திலே யகப்பட்டிருக்கிற வென்னை யெங்ஙனேமீட்கப்பார்க்கிறபடி. (நம்பியைநான்) அகப்படுத்துகைக்கு சௌந்தர்யசீலாதிகளாலத்தலை குறைவற்றிருக்கிறாப்போலே யாயிற்று அகப்படுகைக்குச்சாபலத்தா லித்தலைகுறைவற்றிருக்கிறபடி. (கண்டபின்) நீங்களு மிவ்விஷயத்தைக்கண்டன்றோ ஹிதஞ்சொல்லுகிறது. (கண்டபின்) கதேஜலே சேதுபந்தமன்றோ நீங்கள்செய்கிறது. காண்பதற்குமுன்னே மீட்டிகோளல்லிகோளே, இனிமீட்கப்போமோ. மீட்கப்போகாம லிப்போதுவந்த தென்னென்ன; கைமேலே ஒருமுகத்தாலே தானகப்பட்டபடியைச்சொல்லுகிறாள் (சங்கித்யாதி) நீங்கள் ஹிதஞ்சொல்லுவதுதான் நெஞ்சுடையார்க்கன்றோ. (சங்கினோடும்) "செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல்" என்கிறபடியே, ஶ்யாமமானதிருமேனிக்குப்பரபாகமான வெளுத்தநிறத்தையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடும்; இக்கைக்கிதாபரணமானல், வேறொன்றுவேண்டாதே தானே ஆபரணமாகப்போரும்படியிருக்கிற நேமியோடும். (தாமரைக்கண்களோடும்) கண்காணக்கைவிட்டுப்போயிற்றுக்காணும். விகாஸாதிகளாலே தாமரைபோலேயிருக்கிற திருக்கண்களோடும். (செங்கனிவாய்) கண்டபோது, நானுன்சரக்கன்றோ – "தவாஸ்மி" (தவாஸ்மி) என்றமுறுவலோடும். (ஒன்றினோடும்) சம்ஸாரயாத்ரையை முக்தன் மறக்குமோபாதி, இவ்வருகுண்டானவற்றோடு அவ்வருகுள்ளவற்றோடு வாசியற எல்லாவற்றையும் மறக்கப்பண்ணவற்றான திருவதரத்தோடும். அன்றிக்கே, ஜாதி, வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே, நெஞ்சு அழகுதோறும் செல்லாநின்றது. சர்வேஶ்வரனோடு சாம்யம்பெற்றதாகிலும் தெரிகிறதில்லை. அவன் வ்யாபியாநிற்கச்செய்தே ஆகாஶ வ்யாப்திபோலன்றிக்கே பதார்த்தங்கள்தோறும் பரிஸமாப்யவர்த்திக்குமாபோலே, இதுவுமழகுகள்தோறும் பரிஸமாப்யவர்த்தியாநின்றது. (செல்கின்றது) இன்னமும் தறைகண்டதில்லை, நாங்களுமெல்லாம் நம்பியுடையவழகை யநுபவித்திருக்கிறோ

மன்றே, எங்கள்சொல்லு மறுக்கலாகாதுகாணென்ன; உங்கள்சொல்லை மறுத்தேனேயாகிலும் நம்பியுடையதிருமுகம் மறுக்கவொண்ணுதேன் கிறுள். எங்களுக்கிப்படியிராதொழிவானென்னென்ன (என்னெஞ்சமே) உங்களைப்போலன்றிக்கே, அவன்றானேகாட்டப்பெறுகையாலே முழுக்க வநுபவித்தவென்னெஞ்சானது.

( எங்ஙனேயோவித்யாதி ) ஹேதுவானநம்பியுடைய வழலைப் பொடியாதே, என்னைப்பொடியக்கூடினபடி யெங்ஙனேயோ. ப்ராவண்யமே ஸ்வபாவமாம்படி வளர்த்துவைத்து, இப்போதாகப்பொடிகிறபடி யெங்ஙனேயோ. முன்பு நீங்கள் கற்பித்துப்போந்து, அதுபலிக்கப்புக்கவாறே பொடியுமத்தனையோ. ( கோலம் ) உங்கள் ஹிதவசநத்துக்கு மீளாதபடியான சௌந்தர்யத்தையுடையவர். (திருக்குறுங்குடிநம்பியை) பரத்வத்தில் முதன்மையிலேயோ அகப்பட்டதும்மீளுகைக்கு. ( நம்பியை ) குணத்திலபூர்த்தியுண்டாய்த் தான்மீளுகிறதோ. ( நான்கண்டபின் ) இவ்விஷயத்தில் சாபலமில்லாமல் மீளுகிறேனோ. ( சங்கினோடும் ) ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே விசேஷித்தொரு ப்ராப்தியுண்டுகாணு மிவளுக்கு, வாகம்ருதச்சுவடறிந்திருக்கையாலே; ஒருகலத்திலே ஜீவிப்பாரைப்போலே ..............................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு ( எங்ஙனேயோவித்யாதி ) உத்தரார்த்தத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( திருக்கையிலித்யாதி ) ( திருக்கையில் ) இத்யாதிக்குமுன்னே, தாய்மாரானபேர், " நீயிப்படிசெய்கிறது யுக்தமன்று " என்று நிஷேதிக்க அவர்களைக்குறித்தென்று கூட்டிக்கொள்வது.

" அன்னைமீர்காள் - முனிவது - எங்ஙனேயோ " என்று கூட்டிபாவம் (ஹிதஞ்சொல்லவித்யாதி) இந்தபாவத்துக்கு " அன்னைமீர்காள் " என்றதிலேநோக்கு, தந்தாமை - " பிரானிருந்தமைகாட்டிநீர் " என்று ப்ராவண்யஜநகைகளான தந்தாமையென்றபடி. " என்னைமுனிவது - எங்ஙனேயோ " என்றுகூட்டி, " என்னை " என்றதிலேநோக்காகபாவம் ( ஒன்றையித்யாதி ) விவரணம் ( என்னுடையவித்யாதி ) " என்னை-நீர்-முனிவது-எங்ஙனேயோ " என்று கூட்டிபாவம் ( என்னுடையநிலைக்கித்யாதி ) அதாவது - நான் அதிப்ரவணையாகையாலே, கரைமேலேநிற்கிறவுங்கள் வசனங்கொண்டு கார்யமில்லையென்றபடி. " நீர் - என்னைமுனிவது - எங்ஙனேயோ " என்றுகூட்டிபாவம் ( நம்பியுடையவித்யாதி ) ஆக, " நீர் " என்றதுக்கிரண்டுபாவம். இவ்வாக்யங்களெல்லாம் "நங்கள்" என்றதையும் கடாக்ஷித்து. " அன்னைமீர்காள், நம்பியைநான்கண்டபின் " என்றுகூட்டிபாவம் ( இக்குலதர்மத்துக்கித்யாதி ) அதாவது - பகவத்விஷயப்ராவண்ய மிக்குலதர்மமாகையாலே, நான்செய்ததில் தப்புண்டோவென்றபடி. பகவத்ப்ராவண்ய மிக்குலதர்மமோவென்ன (பேராளனித்யாதி) அதாவது-பாகவதனை ஶ்லாகிக்கையாலே சித்தமென்றபடி. இத்தால்பலிதம் ( தாந்தாமித்யாதி ) குற்றமாமித்தனையோ - குணமாமித்தனையன்றே. " முனிவது - எங்ஙனேயோ " என்றுகூட்டிபாவம் (புத்ரர்களித்யாதி) " பகவத்விஷயத்தி லவகாஹநங்கொண்டு புத்ரர்கள் ஶ்லாகநீயர் " என்றுமதுக்கு ஸம்வா

தம் (கூரத்தாழ்வாரித்யாதி) கூரத்தாழ்வார்-ஆழ்வான் திருத்தமப்பனார். "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑍀 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑍋 𑌵𑌾 𑌵𑌾𑌨𑌪𑍍𑌰𑌸𑍍𑌥𑍋𑌽𑌥 𑌭𑌿𑌕𑍍𑌷𑍁𑌕𑌃 । 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌮𑍀 𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑍇𑌤𑍍𑌤𑍁 𑌦𑌿𑌨𑌮𑍇𑌕𑌮𑌨𑌾𑌪𑌦𑌿" (ப்ரஹ்மசாரீக்ருஹஸ்தோவா வாநப்ரஸ்தோதபிக்ஷுக: அநாஶ்ரமீநதிஷ்டேத்துதிநமேகமநாபதி) இதிதர்மஶாஸ்த்ரே. ஸிம்ஹாவலோகநந்யாயேந, "ஒன்றைப் பரிஹரிக்கப்பார்த்தால்" இத்யாதிவாக்யவிவரணம் (என்னையுங்களித்யாதி) "நம்பியுடையவழகை" இத்யாதிவாக்யவிவரணம் (நம்பியுடையவழகிலேயித்யாதி)

உங்களை - கடகரானவுங்களை. "கோலத்திருக்குறுங்குடிநம்பியை" என்றத்தைப்பற்ற (அவ்விஷயத்தையுமென்றது) "நங்கள்" என்றதின் தாத்பர்யம் (இக்குடிக்காகவித்யாதி) முற்றூட்டு-ஏகபோகம். பூர்ணஹாரமென்று சப்தத்துக்கர்த்தம். இதுக்குநியாமகமேதென்ன (சர்வேஶ்வரனையித்யாதி) அநந்தவ்ரதம்நோற்றுப்பெற்றவர்கள் - தேவகீப்ரப்ருதிகள். ப்ரசித்திமாத்ரமன்றிக்கே இவருக்கிதுமுண்டென்கிறார் (நெடுங்காலமுமித்யாதி) அநேககாலமும் க்ருஷ்ணனுடைய நிரதிசயபோக்யமான திருவடித்தாமரைகளை யாஶ்ரயித்துப்பெற்றவித்யர்த்த:. திருவிருத்தத்தில், "கொடுங்காற்சிலையர்" இத்யாதி. "கண்ணன்குறுங்குடி" என்று-அங்குநிற்கிறவன் க்ருஷ்ணனுகையாலே, இதுப்ரமாணமாகக்குறையில்லை. "நம்பியை நான்கண்டபின் - என்னை - எங்ஙனே - முனிவது" என்றுகூட்டிபாவம் (கல்யாணகுணங்களாலித்யாதி) ஸமபிவ்யாஹாரதாத்பர்யம் (அகப்படுத்துகைக்கித்யாதி). "கண்ட" என்றதுக்குபாவம் (நீங்களுமித்யாதி) விஷயவைலக்ஷண்யத்தைக்கண்டிருந்தும் மீட்கப்பார்க்கிறது யுக்தமோவென்றபடி. "பின்" என்றதுக்குபாவம் (கதேஜலஇத்யாதி) விவரணம் (காண்பதற்கித்யாதி)

(கைமேலே, ஒருமுகத்தாலே) என்றது-சாடு. கைமேலே - திருக்கைகள்மேலேயிருக்கிற வாழ்வார்களுடையசேர்த்தி யழகிலேயென்று ஸ்வபாவார்த்தம்; ப்ரத்யக்ஷமாகவென்று சாட்வர்த்தம். (ஒருமுகத்தாலே) தாமரைக்கண்கள், செங்கனிவாய், இவைகளுடைய சௌந்தர்யத்தாலே இதிஸ்வபாவார்த்த:; ஏகமுகமாகவென்று சாட்வர்த்தம். "செல்கின்றதென்னெஞ்சம்" என்றத்தைப்பற்ற (நீங்களித்யாதி) (செங்கமலமித்யாதி) செந்தாமரையினுடைய அப்போதலர்ந்த செவ்வியமலரின்மேலே மதுபாநம்பண்ணுமன்னம்போலித்யர்த்த:. நாய்ச்சியார்திருமொழி "கருப்பூரம்நாறுமோ" என்கிறதிருமொழி ஏழாம்பாட்டு.

சாடு (கண்காணவித்யாதி) கண்காணவென்று-ப்ரத்யக்ஷமாகவென்றுசாடு, கண்களைக்காணவென்று ஸ்வபாவார்த்தம். கைவிட்டு - திருக்கைகளைவிட்டென்று ஸ்வபாவார்த்தம்; விட்டுப்போயிற்றென்றுசாடு, முறுவலோடும் - "தவாஸ்மி" (தவாஸ்மி) என்றபோதுண்டான முறுவலோடும். ஸ்மிதத்தாலல்லது அதரத்தில் பழுப்புத்தெரியாததுகொண்டு, (முறுவல்) என்று வ்யாக்யாநம்பண்ணிற்று. "ஒன்றினோடும்" என்றத்தை - * செங்கனிவாய்மாத்ரத்தோடே யந்வயித்துபாவம் (சம்ஸாரேத்யாதி) இவ்வருகுண்டானவை-சங்கும்நேமியும். அவ்வருகுள்ளவை-அதரத்துக்குமேலாயுள்ள தாமரைக்கண்கள். "ஒன்றினோடும்" என்றத்தை - * சங்குமுதலானவை யெல்லாவற்றிலும் ப்ரத்யேக மந்வயித்துபாவாந்தரம் (அன்றிக்கேஜாதியித்யாதி) அணுவானநெஞ்சுக்கு அழகுகள்தோறும் வ்யாப்திகூடுமோவென்ன (சர்வேஶ்வரனேடித்யாதி) சாம்யத்தை விவரிக்கிறார் (அவன்வ்யாபியாநிற்கவித்யாதி)

வர்த்தமானார்த்தம் (இன்னமும் தறைகண்டதில்லையென்று) "தாமரைக் கண்கள், செங்கனிவாய்" என்றதுக்கு ப்ரத்யேகம் தாத்பர்யமருளிச்செய்து, சமுதாயேந ரசோக்தியாகபாவம் (நாங்களுமெல்லாமித்யாதி)

புநஶ்ச ஒரு ஸ்ரீவைஷ்ணவர்க்கு ப்ரஸாதிக்கிறார் (எங்ஙனேயோவித்யாதி) "என்னைமுனிவது - எங்ஙனேயோ" என்று கூட்டிபாவம் (ஹேதுவானவித்யாதி) ஹேதுவான - ப்ராவண்யஹேதுவான.

"அன்னைமீர்காள் - நீர் - என்னைமுனிவது - எங்ஙனேயோ" என்று கூட்டி பாவம் (ப்ராவண்யமேயித்யாதி) கீழ்வாக்யவிவரணம் (முன்பித்யாதி) "நீர்" என்றதுக்குபாவமாதல். அல்லாதவற்றுக்குமுன்னே * சங்கைச்சொல்லுவானென்னென்ன (ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடேயித்யாதி)

நங்கள்கோலமித்யாரப்ய, என்னெஞ்சம் - செல்கின்றது, அன்னைமீர்காள், நீர்-என்னைமுனிவது-எங்ஙனேயோவித்யந்வயః.................................*

---

# இரண்டாம்பாட்டு.

என்னெஞ்சினால்நோக்கிக்காணீரென்னைமுனியாதே
தென்னன்சோலைத்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
மின்னுநூலுங்குண்டலமுமார்பிற்றிருமறுவு
மன்னுபூணுநான்குதோளும்வந்தெங்குநின்றிடுமே.

## ஆறாயிரப்படி.

(என்னெஞ்சினால்) "நம்பிதிருவழகை நாங்களநுபவித்தோமல்லோமோ, நாங்கள் பேசாதிருக்க நீயிங்ஙனேபடுகிறதென்" என்று அவர்கள்பொடிய; என்னைநீங்கள்பொடியாதே, உங்களுக்குக்காணவேணுமாகில் என்னைப்போலே ஸ்நேஹயுக்தமான நெஞ்சையுடையீராய்க்கொண்டநுசந்தித்தறியுங்கோள். தென்னாட்டுச்சோலைசூழ்ந்த திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின், மின்னாநின்றுள்ள திருயஜ்ஞோபவீதமும் திருக்குண்டலங்களும் திருமார்விற்றிருமறுவும் திருவுடம்போடுபொருந்தின திருவணிகலன்களும் திருத்தோளழகும் சுற்றும்வந்தென்னை நெருக்காநின்றன வென்கிறாள்.................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நம்பியுடைய வொப்பனையழகும் தோளும் சர்வதேசத்திலும்வந்துநின்றநுபவவிஷயமாகாநின்றதென்கிறாள்.

என்னை-என்னை. முனியாதே-நியமித்துவார்த்தைசொல்லாதே. என்னெஞ்சினால்-அநுபவித்தாலும் குறியழியாதவுங்கள் நெஞ்சுபோலன்றியே பாவயுக்தமான என்னெஞ்சாலே. நோக்கி-அநுபவித்து. காணீர்-பாரீகோள். தென் - தெற்குத்திக்கிலே. நன்-நன்றான. சோலை-சோலையையுடைத்தான. திருக்குறுங்குடி - திருக்குறுங்குடியில். நம்பியை-நம்பியை. அவனருளடியாக, நான்-நான், கண்டபின் - கண்டபி

ண்டு. மின்னும்-வடிவுக்குப்பரபாகமாய் ப்ரஹ்மவர்ச்சஸப்ரகாசகமான. நூலும்-தி ருயஜ்ஞோபவீதமும். குண்டலமும்-இருபாடுமிலங்குகிறதிருமகரகுண்டலங்களும். மார்பில்-விலக்ஷணமானதிருமார்பில். திரு-கழற்றுத ஆபரணமான. மறுவும்-ஸ்ரீவ த்ஸமும். மன்னு-எப்போதும்கழற்றுத. பூணும்-ஆபரணவர்க்கமும். சதுர்வர்க்கப்ர தமான, நான்கு-நாலு. தோளும்-திருத்தோள்களும். எங்கும்-நான்போனவிடமெங் கும். வந்து-வந்து. நின்றிடும்-நில்லாநின்றன.................................*

## ஈ௫ - இரண்டாம்பாட்டு.

நம்பியுடையதோளழகு மாபரணஸ்ரீயும் சர்வதோமுகமாகநின்று நலியாநின்றதென்கிறாள்.

( என்னெஞ்சினாலித்யாதி ) நாங்களும் நம்பியை யநுபவித்தே ஸ்த்ரீத்வங்கெடாமலிருக்கிறிலோமோவென்ன ( என்னெஞ்சினால் நோ க்கிக்காணீர் ) நீங்களென்னைப்பொடியாதே யுங்களையேபொடிந்துகொள் ளும்படி, என்னெஞ்சையிரவலாகவாங்கிப் பார்க்கவல்லிகோளோ. ((எ ன்னை)) " இவளையாகாதே நாமித்தனைசொல்லிற்று " என்று பின்னையு ங்களை நீங்களே பொடிந்துகொள்ளுவுதிகோள். (முனியாதே) " ' கண புரம் கைதொழும்பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப்பெறுவரோ,' என் னக்கடவதாயிருக்க, நம்வயிற்றிற்பிறந்த இதுவே ஹேதுவாக, இவள்நி ன்றநிலைபாராதே நாம்பொடிந்தோமித்தனையாகாதே " என்று பின்னையு முங்களை நீங்களே பொடிந்துகொள்ளுவுதிகோள். ( என்னெஞ்சினால் நோக்கிக்காணீர் ) [ ഭക്ത്യാ ശാസ്ത്രാദ്വേദ്മി ജനാർദ്ദനം ] [ பக்த்யாஶாஸ்த்ரா த்வேத்மிஜநார்த்தநம் ] என்கிறபடியே. சஞ்சயனைநோக்கி த்ருதராஷ்ட் ரன்; நீயும்நானுமொக்க ஶாஸ்த்ரவாஸநைகள் பண்ணிப்போந்தோம், இ ங்ஙனேயிருக்கச்செய்தே யெனக்குன்பக்கலிலேகேட் டறியவேண்டும்ப டி யுனக்கிவ்வர்த்தத்தில் வைஶத்யமுண்டானபடி யெங்ஙனேயென்ன; எனக்குவாசிகேளாய் [ മായാം ന സേവേ ] [மாயாம்நஸேவே] நான் வஞ் சநங்கள் செய்துபோரேன். ராஜாவானவனுக்கொரு தாழ்ச்சியும் தனக் கொரு உத்கர்ஷமும் சொல்லுகிறானைகையாலே - பத்ரம்தே என்கிறான். [ ന വൃഥാ ധർമമാചരേ ] [நவ்ருதாதர்மமாசரே] நானொருநாளும் சலதர் மங்களநுஷ்ட்டியேன். [ ശുദ്ധഭാവം ഗതഃ ] [ ஶுத்தபாவம்கதஃ ] நினைவு ம்சொலவும் செயலு மொருபடிப்பட்டிருப்பன். [ ഭക്ത്യാ ] [ பக்த்யா ] விரிபடைவேகற்று அவனையறிந்தவனல்லேன், பக்திஸஹக்ருத சாஸ்த்ர த்தாலே அவனை யறிந்தவனென்றானிறே. [ നാവിജ്ഞാനാവികേശവം ] [நாபிஜாநாவிகேஶவம்] என்று தந்தாமுக்கென்னவுமொரு கைம்முதலு டையார்க்கு அவனையறியப்போகாதென்றதிறே. அப்படியே நீங்களுமெ ன்னெஞ்சையுடையீராய்க்கொண்டறியப்பாருங்கோள்.

( தென்னனித்யாதி ) நம்பியுடையவடிவுக்கு ஆபரணம்போலே யாயிற்று ஊருக்குச்சோலை. தெற்குத்திக்கிலேயாய் நன்றானசோலையெ

ன்னுதல்; அன்றிக்கே, "தென்னன்கொண்டாடும்" என்னுமாபோலே யாதல். (நான்கண்டபின்) ஆபரணச்சேர்த்தியையும் சோலைவாசியையு மறிந்த நான் கண்டபின். (மின்னுநூலுமித்யாதி) மேகத்தில் மின்னி னாற்போலேயிருக்கிற திருயஜ்ஞோபவீதமும், (குண்டலமும்) பரந்த மின் ஓரிடத்திலே சுழித்தாற்போலேயிருக்கிற திருமகரகுண்டலமும், வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியிருக்கிற திருமார்பிலே கிடக்கிற ஸ்ரீவத்ஸமும், (மன்னுபூணும்) நாய்ச்சிமாரோடு கலக்கும் போதும் கழற்றவேண்டாதபடியிருக்கிற ஆபரணங்களும். அதாவது—அ த்யந்த சுகஸ்பர்ஸமாயிருக்கை. (நான்குதோளும்) ஆபரணத்துக்காபர ணமாய்க் கல்பகதருபணைத்தாற்போலேயிருக்கிறதிருத்தோள்கள்நாலும். "ஸர்வபூஷணபூஷார்ஹா:" (ஸர்வபூஷணபூஷார்ஹா:) என் கிறபடியே. (வந்தெங்கும்நின்றிடுமே) "உங்கள்ஹிதவசநத்தின்படியே செய்யவேணும" என்று நான் கடக்கநிற்கவும், அங்கேயும் பலவகையா கவாராநின்றது. * வ்ருக்ஷேவ்ருக்ஷேசபஸ்யாமிபோலே, உகப்பார்க்குமு கவாதார்க்கும் பலமொன்றாய்விட்டது. நானெங்கே யொதுங்குவேன், சொல்லிக்காணிகோள.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (என்னெஞ்சினாலித்யாதி) "மின்னுநூலும்" இத்யாதி யைக்கடாக்ஷித்து வ்யுத்க்ரமமாகவவதாரிகை (நம்பியுடையவித்யாதி) "எங்குமி ன்றிடும்" என்றது-உருவெளிப்பாடாகையாலே, அதுபாதகமானமையைப்பற்ற (ந லியாநின்றதென்கிறாளென்றது)

உன்னெஞ்சினால் கண்டவாசியேதென்ன (நீங்களென்னையித்யாதி) கீழ்வாக் யவிவரணம் (இவளையாகாதேயித்யாதி) "என்னைமுனியாதே" என்றதுக்கு-என்னைக் கொண்டாடும்படியென்றாய், அத்தால்பலித்தது - உங்களைமுனிந்துகொள்ளும்படி யென்றாக்கி, அத்தைப்ரமாணகதநமுகேந வருளிச்செய்கிறார் (கணபுரமித்யாதி) திருக்கண்ணபுரத்தைக் கைதொழுகிற பெண்பிள்ளையை, தன்வயிற்றிற்பிறந்தவள் என்றெண்ணப்பெறுவர்களோ; "தன்வயிறறிறபிறந்தாள்" என்கிறவர்த்தத்தைக் கொண்டு நியமிக்கப்பெறுவர்களோவென்றபடி. திருமொழி யெட்டாம்பத்து இர ண்டாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு, "முள்ளெயிறேந்தில" இத்யாதி. "என்னெஞ் சினால்நோக்கிக்காணீர்" என்கையாலே - உங்களுக்கு பக்தியில்லையென்றபடி. பக் தியினாலொழிய சாஸ்த்ரத்தாலே யவனையறியப்போகாதோவென்ன (பக்த்யாசா ஸ்த்ராதித்யாதி) இந்தஸ்லோகத்துக் கர்த்தமருளிச்செய்கைக்காக வவதாரிகை (சஞ்சயனையித்யாதி) பக்திஸஹக்ருத சாஸ்த்ரத்தாலன்றிக்கே, கேவலசாஸ்த்ரத்தா லறியப்போகாதோவென்ன; அறியப்போகாதென்னுமதுக்கு ப்ரமாணந்தாம் (கா பிஜாநாஸீத்யாதி) "[illegible]" (மாயாம்கவேவேபத்ரம் தேகவ்ருதாதர்மமாசரே। ஶாந்தபாவம்கதோபக்த்யா ஶாஸ்த்ராத்வேத்மிஜநார்த்த நம்) "[illegible]"

யூஷோ நாஸிஜா நாஸிகேஶவம் ” (வித்யாராஜந்நதேவித்யாமமவித்யாஸூய. தே। வித்யாஸூநஸ்தமோத்வஸ்தோநாபிஜாநாஸிகேஶவம்) இதிபார்தே த்ருதராஷ்ட்ரம் ப்ரதிஸஞ்சயஃ. இச்ச்லோகத்தில் “ராஜந்” என்றதுக்குபாவம் (தந்தாமுக்கென்னவித்யாதி) அதாவது-பக்திஸஹக்ருதமல்லாத கேவலசாஸ்த்ரம். பக்திஸஹகாரமில்லாதபோது சாஸ்த்ரஜ்ஞாநம்முடியாது, சாஸ்த்ரஜ்ஞாநமில்லாதபோது அவனை யறியப்போகாதென்று-இச்ச்லோகத்துக்குத் தாத்பர்யமாகையாலே, தந்தாமுக்கென்னவு மொருகைம்முதலுடையார்க்கு அவனை யறியப்போகாதென்றபடி. கைம்முதலாவது-பக்திஸஹக்ருதமல்லாத கேவலசாஸ்த்ரம். கீழ்வாக்யத்தில்-பக்தியினாலொழியவவனை யறியப்போகாதென்றத்தை ஸித்தவத்கரித்தபடியே, நீங்களுமென்னெஞ்சை யுடையாராய்க்கொண்டு அறியப்பாருங்கோ ளென்கிறார் (அப்படியேயித்யாதி)

“மின்னுநூலும்” இத்யாதியைக்கடாக்ஷித்துபாவம் (நம்பியுடையவித்யாதி) (தென்னன்கொண்டாடும்) தக்ஷிணதிக்குக்கு ப்ரதாநனான மலயத்வஜசக்ரவர்த்தியாலே கொண்டாடப்பட்டவென்றபடி. பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து இரண்டாந்திருமொழி ஏழாம்பாட்டு, “மன்னர்மறுக” இத்யாதி. கீழும்மேலும்கடாக்ஷித்து “நான்” என்றபதத்துக்குபாவம் (ஆபரணச்சேர்த்தியித்யாதி)

“மன்னு” என்றதுக்குபாவம் (நாய்ச்சிமாரோடித்யாதி) மன்னுபூணும்-நித்யமாகப்பொருந்தின வாபரணவர்க்கமும். “எப்போதும்கழற்றுத வாபரணவர்க்கமும்” என்றுமை. (அத்யந்த ஸௌகஸ்பர்ஶமாயிருக்கை) என்கிறவிடத்திலே-“ ஸௌ-வஹ்நிஸ்ரீ-தாம்ஸி ஸௌரஸௌகஸ்ருதயாம் ... [illegible] ” (ஸௌகஸ்பர்ஶைர் நித்யைஃகுஸுமஸுகுமாராங்கஸௌகதைஸ்ஸுஸௌகந்த்யைர் திவ்யாபரணகண திவ்யாயுதகணைஃ) இத்யாத்யநுஸந்தேயம். (ஸர்வபூஷணபூஷார்ஹாஃ) ஸர்வபூஷணங்களிபூஷயிதுமர்ஹாஃ என்றபடி. பலவகையாக - பஹுவகுப்பாக. “வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பஶ்யாமி” (வ்ருக்ஷேவ்ருக்ஷேசபஶ்யாமி) என்கிறவிடத்திலே - பயத்தினாலே தோன்றினபடி, இங்கு-ப்ராவண்யத்தாலே தோன்றினபடி. பலம் - பாதை. “வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பஶ்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம்। க்ருஹீததநுஷம் ராமம் பாஶஹஸ்தமிவாந்தகம்” (வ்ருக்ஷேவ்ருக்ஷேசபஶ்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம்। க்ருஹீததநுஷம்ராமம்பாஶஹஸ்தமிவாந்தகம்) இத்யாரண்யகாண்டே ராவணம்ப்ரதிமாரீசஃ.

தென்னன்சோலை இத்யாரப்ய, வந்தெங்கும்நின்றிடும், ஆகையால்-என்னை முனியாதே - என்னெஞ்சினால்நோக்கிக்காணீரித்யந்வயஃ. ஸ்வாபதேஶத்திலே, “அன்னைமீர்” என்று-உபாயாத்யவஸாயநிஷ்டரைச்சொல்லுகிறதாகையாலே, “அறிவரியபிரானை” என்கிறவிடத்திற்போலே த்வராநிஷ்டராய் மங்களாசாஸநபரரான தம்முடையநினைவாலே யவர்களை அஜ்ஞராகநினைத்து - “என்னெஞ்சினால் நோக்கிக்காணீர்” என்கிறாராதல்; இவ்வர்த்தம் - “அறிவரியபிரானை” என்கிறவிடத்திலே ஸ்பஷ்டம். அன்றிக்கே, “அறிவரியபிரானை” என்கிறபாட்டிலே-உபாயாத்யவஸாயநிஷ்டரைச்சொல்லி; இங்கே, “என்னெஞ்சினால்நோக்கிக்காணீர்” என்று - உபாஸகரையும் ஸ்வகதஸ்வீகாரபரரையும் சொல்லுகிறதாதல். ஆக, “அன்னைமீர்” என்றதுக்கு - “அறிவரியபிரானை” என்கிறவிடத்திலு மிவ்விடத்திலுமாக ஸ்வாபதேஶம் த்விவிதமாகக்கண்டுகொள்வது..................................*

( திவ்யலாஞ்சநங்களைக்கொண்டு சொன்னபத்தென்னவுமாம். ) இத்தை (அறியக்கற்றுவல்லார்)கற்றறியவல்லார். அறிந்துகற்கையாவது-"ஸ்ரீவைகுண்டத்திலே நித்யஸூரிகள் நடுவேயிருக்கிற விருப்பிலுங்காட்டில், திருக்குறுங்குடியில் நிற்கிறநிலையிலே குணாதிக்யமுள்ளது" என்னுமிடத்தையறிந்து அப்யஸிக்கவல்லவர்கள். வஸ்துவுக்கு குணத்தாலேயிறே உத்கர்ஷம்; அந்தகுணாதிக்யமெங்கேயுண்டு, அங்கேயிறேயேற்றம். (ஆழ்கடல்ஞாலத்துள்ளே-வைட்டணவர்) மருபூமியான சம்சாரத்திலேயிருக்கச்செய்தே நித்யஸூரிகளோடொக்கச் சொல்லலாம்படி யாவர்கள் உகந்தருளினநிலங்களில் வாசியறியுமவர்கள்..............................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (அறிவரியவித்யாதி) நாலாம்பாதத்தைக்கடாக்ஷித்து-அவதாரிகை.

தாம்பெறுதிருக்கவும், அறிவரியனுனமையைக்கொண்டு - "பிரான்" என்கிறதென்னென்ன (நாம்பெறுதலித்யாதி) ஸ்வயத்ந ஸாத்யனல்லாததுகொண்டு தனக்குலாபமேதென்ன (வஸ்துதானித்யாதி)இத்தால்-ஸ்வயத்நஸாத்யனன்றிக்கேயொழிந்தால் வஸ்து ஸத்பாவத்துக் கழிவில்லாமையாலே, நினைத்தபோ தநுபவிக்கலாமென்றபடி. இவர்களென்றது - தாய்மாராகச்சொல்லப்படுகிற வத்யவஸாயநிஷ்ட்டரை. மீளலாம்-மீட்கலாம். கைவிடாமலென்றது-சாடு; கையைவிடுகையும், விச்சேதிக்கையும். "ஆழியங்கையனையே" என்று - அவதரிக்கிறதென், " சங்கினோடும் நேமியோடும் " இத்யாதியாலே - மற்றையாழ்வார்களோட்டைச் சேர்த்தியழகையு மித்திருவாய்மொழியி லநுபவிக்கவில்லையோவென்ன ( கையுந்திருவாழியுமான வித்யாதி ) சேர்த்து - காதாசித்கமாகச்சேர்த்து. இதுக்குமுன்பெல்லாம் - இத்திருவாய்மொழிக்கு முன்பெல்லாமென்னுதல், இப்பாட்டுக்கு முன்பெல்லாமென்னுதல். உருவ - அவிச்சிந்நமாக.

புஷ்பங்களானவற்றை - புஷ்பங்கள்போலேயிருக்கிற ஸூக்தங்களை. பாட்டுக்கள் மாலையாயிருக்குமோவென்ன (அடிசூட்டலாகுமித்யாதி) அந்தாமம்-அடிசூட்டலாகுமென்று-அழகியமாலையை ஸமர்ப்பித்தா லெத்தனையுகப்புண்டு, அத்தனையுகப்புண் டித்திருவாய்மொழியை யநுசந்தித்தா லீச்வரனுக்கென்றபடி. இத்தால் - " அடிசூட்டலாகுமந்தாமம் " என்றதுக்கு-அவ்விடத்திலருளிச்செய்த வர்த்தமன்றிக்கே, இப்படியுமோரர்த்தம் விவக்ஷிதமென்று கண்டுகொள்வது. * நன்மைக்கர்த்தம் (இக்காதலித்யாதி)

(குறிகொளென்றது) குறியென்று-மெய்க்காட்டாய், ( அழகைமெய்க்காட்டுக்கொண்ட) என்றபடி. மெய்க்காட்டுக்கொண்ட- விசதமாகவறிவித்த. "குறி" என்று-ஆயுதாபரணரூப சிஹ்நமாய், அவற்றினுடையசேர்த்தியால்வந்த வழகைச்சொன்ன விப்பத்தென்றர்த்தாந்தரம் ( திவ்யாயுதங்களுமித்யாதி ) ஆக, " குறிகொள்-இவைபத்தும் " என்றதுக்கு - மெய்க்காட்டுக்கொண்ட விவைபத்துமென்றும், ஆயுதாதிலாஞ்சநங்களையுடைய விவைபத்தென்று மர்த்தத்வயம். இவைபத்தும் லாஞ்சநங்களை யுடைத்தாகையாவது-ப்ரதிபாத்யதயாவுடைத்தாகையென்றபடி. தத்ப்ரதிபாதக மித்யர்த்தঃ.

குணாதிக்யம் - சௌலப்யாதிகுணாதிக்யம். குணாதிக்யமேயோ உத்கர்ஷஹேது, மேன்மைவேண்டாவோவென்ன ( வஸ்துவுக்கித்யாதி ) அறியக்கற்றுவல்லார்-

ஜ்ஞாநப்ரகாசம்பிறக்கும்படி அப்யஸித்து அர்த்தாநுஸந்தாநம்பண்ண வல்லவர்க ளென்று சப்தார்த்தம். (கற்றறியவல்லார்) என்று வாக்யமிருந்ததாகில், அர்த்தாந் தரமாகக்கண்டுகொள்வது. க்ரமேணாந்வய:..........................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( எங்ஙனேயோவன்னைமீர்காள் )

ஶங்காத்யைர்யஜ்ஞஸூத்ராத்யபிரவிததாஶார்ங்கமுக்யைஸ்துள
ஸ்யாபிம்போஷ்டாத்யைஸ்ஸுநாஸாவ்ரததிநிரவதிஜ்யோதிரூர்ஜ
ஸ்விமூர்த்யா । நேத்ராப்ஜாத்யைரஶேஷாபரணஸுஷமயாஸ்வைஶ்ச
பக்தைர்மநோஜ்ஞோதாஸாநாம்ஸ்ம்ருதிவிஷயதயாஹாதிதேவோ
ஹ்யபாயி. (ருரு)

(ஶங்காத்யை:) சங்கினோடும் நேமியோடுமித்யாதி-ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலும் திருவாழியாலும் திருக்கண்மலர்களாலும் திருப்பவளத்தாலும்; ( யஜ்ஞஸூத்ராதி ப்ரபிச ) மின்னுநூலுமித்யாதி-மின்னாநிற்கிற திருயஜ்ஞோபவீதத்தாலும் திருக்குண்டலங்களாலும் ஸ்ரீவத்ஸத்தாலும் திருத்தோள்களாலும்; ( ததாஶார்ங்கமுக்யை: ) வென்றிவில்லுமித்யாதி - விஜயஹேதுவான சார்ங்ககதாஸி சங்கசக்ரங்களாலும்; (துளஸ்யா) பூந்தண்மாலைத்தண்டுழாயுமித்யாதி - தர்ஶநீயமாய் சீதளமுமான திருத்துழாய்மாலையாலும் தேஜிஷ்டமான திருவபிஷேகத்தாலும் திருமேனியாலும் அதுக்குப்பாங்காயிருக்கிற திருப்பீதாம்பரத்தாலும் அத்தோடேபொருந்தியிருக்கிற விடுநாணாலும்; (பிம்போஷ்டாத்யை:) தொக்கசோதியித்யாதி-தொண்டைபோன்ற திருவதரத்தாலும் நீண்டதிருப்புருவங்களாலும் திருக்கண்மலர்களாலும்; (ஸுநாஸாவ்ரததி) கோலநீள்கொடியித்யாதி - கோலநீள்கொடிமூக்காலும் திருக்கண்மலர்களாலும் திருப்பவளத்தாலும் திருத்தோள்களாலும்; ( நிரவதிஜ்யோதிரூர்ஜஸ்விமூர்த்யா ) நிறைந்தசோதியித்யாதி - நிரவதிகதேஜோமயமாய் ஸ்ப்ருஹணீயமான திவ்யமங்களவிக்ரஹத்தாலும்; (நேத்ராப்ஜாத்யை:) செய்யதாமரையித்யாதி - சிவந்ததாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்மலர்களாலும் நிதம்பத்தாலும் சிற்றிடையாலும் திருத்தோள்களாலும்; (அஶேஷாபரணஸுஷமயா) சென்னிநீள்முடியித்யாதி - திருவபிஷேகம்முதலான வநேகதிவ்யாபரணகாந்தியாலும்; (ஸ்வைஶ்சபக்தைர்மநோஜ்ஞ:) குழுமித்தேவர்குழாங்கள்கைதொழ- நித்யஸூரிசமூஹங்களாலும் தர்ஶநீயராய்க்கொண்டிருக்கிற திருக்குறுங்குடிநம்பி, விஶ்லேஷசமயத்திலு மாஶ்ரிதர்க்கு மறக்கவொண்ணாதபடி ப்ரகாசியாநிற்கிறானென்று- "எங்ஙனேயோ" என்கிறதஶகத்திலே யாழ்வாராலே யருளிச்செய்யப்பட்டதென்கிறார்.................................................*

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

எங்ஙனேநீர்முனிவதென்னையினிநம்பியழ
கிங்ஙனேதோன்றுகின்றதென்முன்னே — அங்ங

ஹுருவெளிப்பாடாவுரைத்ததமிழ்மாறன்
கருதுமவர்க்கின்பக்கடல். (௪௫)

(எங்ஙனே) இதில்-உருவெளிப்பாட்டாலே பேசுகிறபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; "உறங்குவான்போல் யோகுசெய்தபெருமான்" என்று - ரக்ஷகனுடைய குணஜ்ஞாநத்தாலே மீளவும் தெளிவுகுடிபுகுந்து, "நம்பியைத்தென்குறுங்குடிநின்ற" என்று முன்பநுபூதமான நம்பியுடைய வழகுநெஞ்சிலே ஒருபடிப்பட ப்ரகாசிக்கையாலும், யதாமநோரதமவ்வழகைக்கண்ணாற்கண்டநுபவிக்கப்பெறாமையாலும் ப்ரீத்யப்ரீதி சமமாய்ச்செல்லுகிறதந்தசையை, நாயகனோடேகலந்து பிரிந்து உருவெளிப்பாட்டாலே உருவநோவுபட்டுச்செல்லுகிற பிராட்டிபேச்சாலே யருளிச்செய்கிற - * எங்ஙனேயோவிலர்த்தத்தை "எங்ஙனேநீர்முனிவது" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

(எங்ஙனேநீர்முனிவதென்னை) இவ்வாற்றாமைக்கூற்றுவாயான நீங்களிவ்வபிநிவேசமுடைய வென்னைப்பொடிவதெங்ஙனே. "எங்ஙனேயோவன்னைமீர்காளென்னைமுனிவதுநீர்" என்றத்தைப்பின்சென்றபடி. (இனி - எங்ஙனேநீர்முனிவது) திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின் - இனிமுனியக்கூடுமோ, அதுக்குமுன்னேயன்றோ முனியவேண்டுவது. அதுக்குமேலே "𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌕𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑌨𑌂 𑌰𑌾𑌮𑌮𑌤𑍀𑌵 𑌪𑍍𑌰𑌿𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌂" (சந்த்ரகாந்தாநநம்ராமமதீவப்ரியதர்ஸநம்) என்னும்படி ருசிஜநகலாவண்யவிபவமானது "𑌅𑌸𑍌 𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍍𑌷𑌭𑌃 𑌰𑌾𑌮𑌃" (அஸௌபுருஷர்ஷபஃ-ராமஃ) என்னும்படி உருவெளிப்பாடாய் (நம்பியழகிங்ஙனேதோன்றுகின்றதென்முன்னே) குணவிக்ரஹ சௌந்தர்யாதிகளால் பூர்ணரான நம்பியுடைய ஆயுதாபரணாவயவ சோபைகளானது, அதுகண்டுகேக்கிற வென்முன்னே ப்ரத்யக்ஷமாகத்தோன்றாநின்றது. அதாவது - "சங்கினோடும் நேமியோடும்," "மின்னுநூலுங்குண்டலமும்," "வென்றிவில்லுந்தண்டும்வாளும்," "பூந்தண்மாலைத்தண்டுழாயும் பொன்முடியும்வடிவும்," "தொக்கசோதித்தொண்டைவாயும்," "கோலநீள்கொடிமூக்கும்," "நிறைந்தசோதிவெள்ளம்சூழ்ந்த நீண்டபொன்மேனியொடும்," "செய்யதாமரைக்கண்ணும்," "சென்னிநீண்முடியாதியாயவுலப்பிலணிகலத்தன்," "எழுவதோருருவென்னெஞ்சுள்ளெழும்" என்று. இப்படியடிதொடங்கி முடியளவுமநுபவித்த ப்ரகாரத்தை (அங்ஙனுருவெளிப்பாடாவுரைத்த) அப்படியே "உருவெளிப்பாடு" என்கிறதுறையிலே வைத்தருளிச்செய்த. (தமிழ்மாறன்) * த்ராவிட ப்ரஹ்மதர்ஸியான வாழ்வார். நம்பிவிஷயமாக * எங்ஙனேயோவையருளிச்செய்தவாழ்வாரென்றபடி. (கருதுமவர்க்கின்பக்கடல்) அபிநிவேசத்துடனநுபவிப்பார்க்கு ஆநந்தஸிந்துவாயிருப்பர். "சென்னிநீண்முடியாதியாய வுலப்பிலணிகலத்தன் கன்னல்பாலமுதாகிவந்தென்னெஞ்சங்கழியான்" என்று-ஆழ்வார்தமக்கவ்வாகார மினிதாயிருக்குமாபோலே, அவர்ஸம்பந்திகளானவர்களுக்கும் ஆழ்வாரப்படியிருப்பரென்றபடி........................................(௪௫)

ஐந்தாம்பத்தில் - ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௪௫.—பாட்டு - ௪௯௭.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

ஐந்தாம்பத்து.

## ஆறாந்திருவாய்மொழி.

### கடல்ஞாலம் - ப்ரவேஸங்கள்.

### ஆறாயிரப்படி.

( கடல்ஞாலம் ) இப்படி யெம்பெருமானைப்பிரிந்த வ்யஸநமே மிக்கு அந்த வ்யஸநாதிசயத்தாலே ஆத்மதாரணக்ஷமையன்றிக்கே யிருந்தபிராட்டி, ஆத்மதாரணார்த்தமாக " ஸ்ரீகோபிகளைப்போலே வண்டுவரைப்பெருமாளுடைய திவ்யசேஷ்டிதங்களையும், மற்றும் ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களையு மநுகரித்துதரிப்போம் " என்று அதிலேயொருப்பட, இவள்படியைக்கண்ட திருத்தாயார், " இவள்சொல்லுகிற பாசுரங்க ளாஸ்சர்யமாயிராநின்றன, இவள்பக்க லெம்பெருமானாவேசித்தானாகாதே, இவளுடைய வதிலோகமான ப்ரவ்ருத்திகள் 'இன்னபடி' என்றத்யவஸிக்க முடிகிறதில்லை " என்று, வினவவந்தவர்களைநோக்கிச் சொல்லுகிறாள்.........................................................*

### பன்னீராயிரப்படி.

ஆறாந்திருவாய்மொழியில், கீழ்-ஆந்தராநுபவப்ரீதி நடக்கச்செய்தே பாஹ்யஸம்ஸ்லேஷாலாபத்தாலே அப்ரீதியும்கலந்து நடந்தவிது, பாவநாப்ரகர்ஷத்தாலே அலாபநிபந்தநமான ஆர்த்தியேவிஞ்சும்படி அதிசயிதாபிநிவேஸம்பிறந்து, பகவத்தாதாத்ம்ய ப்ரதிபத்திபிறக்கும்படி பாவநைமுதிர; சர்வநிர்வாஹகனான சர்வேஸ்வரனுடைய ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களும், தத்ப்ரதிபாதகமான வித்யாஸ்த்தலங்களும், ஜகத்துக்குப்ரதாநகாரணபூதமான மஹாபூதங்களும், சகலக்ரியைகளும், ஜகத்விஷயரக்ஷணவ்யாபாரங்களும், அவதாரசேஷ்டிதங்களும், ஜகத்திலுண்டான ஸமஸ்தபந்துவர்க்கமும், ப்ரஹ்மாதிகளான தேவர்ஷிவர்க்கமும், புண்யபாபரூபகர்மங்களும், ஸ்வர்க்கநரகாதிரூபபலங்களும் நானிட்டவழக்கென்று, அநுகாரரூபோக்தியைப்பண்ணும்படி யிவர்க்கநந்யபாவநைபிறந்தபடிகண்ட பரிவரானவர்கள், ஜிஜ்ஞாஸுக்களான பார்ஸ்வஸ்த்தர்க்கு இவர்படியை யறிவித்தப்ரகாரத்தை; பிரிவாற்றாமையால்வந்த பாவநையாலே க்ருஷ்ணாநுகாரம்பண்ணின கோபிமாரைப்போலே, நாயகனான ஸர்வேஸ்வரனுடைய ப்ரகாரங்களை யநுகரிக்கிற நாயகியுடைய ப்ரவ்ருத்திவிசேஷங்களை நற்றாயானவள் வினவினார்க்குரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்..........................................................*

ஈடு.

கீழ்த்திருவாய்மொழியில் - ப்ரீத்யப்ரீதி சமமாயிறே சென்றது; இரண்டுமாய்க்கலந்து சென்றால் ப்ரீதியே தலையெடுக்கவுமாமிறே, பாக்யஹாநியாலே அப்ரீத்யம்சமே தலையெடுத்தது; கீழ் உருவெளிப்பாட்டாலே அவனை ஸ்மரித்துதரித்த அம்சமும்போய், அலாபத்தால்வரும் துவட்சியேயாயிற்று; இப்படி துவண்டவிவள் பிரிவாற்றாமையாலே அவனை யநுகரித்து தரிக்கப்பார்க்கிறாள். ஓரோ அர்த்தோபந்யாஸங்கள்பண்ணவிருப்பாரைப்போலே ஜ்ஞாநமுத்ரையுந்தானுமாய் கீதோபநிஷதாசார்யனைப்போலேயிருந்தாள்; இத்தைக்கண்ட திருத்தாயார், "இதுவேதேனும் மணிமந்த்ரௌஷதாதிகளாலேவந்த விகாரமோ" என்றுசங்கித்து, அங்ஙனொருபுடைகள் காணாமையாலே "அதல்ல" என்றறிந்தாள்; இனி, "அவனைப்பிரிகையாலேவந்த வாற்றாமையாலே அநுகரித்துதரிக்கிறாள்" என்று தெளியமாட்டிற்றிலள் தன்கலக்கத்தாலே; இவ்வளவிலேபுகுந்து "இதுதானென்" என்று வினவப்புகுந்த பந்துக்களைப்பார்த்து திருத்தாயார்; அவனோட்டை வசநவ்யக்திசாதர்ம்யத்தாலும் ஜ்ஞாநமுத்ராநிரீக்ஷணாதிகளிருந்தபடியாலும், சர்வேச்வர னிவள்பக்கலிலேயாவேசித்தானாகவேணுமென்று சொல்லுகிறாள், "அநுகரித்துதரிக்கிறாள்" என்றறியமாட்டாமையாலே. பிரிவாற்றாமையுண்டானால் அநுகரித்து தரிக்கக்கடவதிறே, க்ருஷ்ணனை யநுகரித்தார்களிறே திருவாய்ப்பாடியில் பெண்கள் [ [illegible] ] [ க்ருஷ்ணோஹமேஷலலிதம்வ்ரஜாம்யாலோக்யதாம்கதி: ] நான்க்ருஷ்ணன், இங்ஙனே நடக்கப்புகாநின்றேன் நடைச்சக்ரவத்துப்பிடிக்கவேண்டும்படியாக; கண்படைத்தாரடையக் கண்டுகொள்ளுங்கோளென்றாளிறே. [ [illegible] ] [ துஷ்டகாளீயதிஷ்ட்டாத்ர ] ஒருத்தி காளியனாய்க்கிடக்க, ஒருத்தி க்ருஷ்ணனாய் ஏறியாடினாளிறே. "ப்ரதிகூலனான காளியனானாலாகாதோ க்ருஷ்ணனாகத்தன்னை யநுகரிக்கிற பெண்ணின்கால் பொடிபடப்பெறில்" என்றிருந்தாள்; க்ருஷ்ணனானவள் தானும் இவளை "காளியன்" என்றேநினைத்துக் கண்ணற்றுத் துகைத்தாளிறே அநுகாரத்தில் மெய்ப்பாட்டாலே. அவர்களோரவதாரத்திலே யநுபவிக்கையாலே அங்குள்ளசேஷ்டிதங்களை யநுகரித்தார்கள், இவள் * மயர்வறமதிநல மருளப்பெற்றவளாகையாலே உபயவிபூதியுக்தனை யநுகரிக்கிறாள். இங்கு - கால், நடைதாராமையாலே யங்குப்போலே காயிகமானவநுகாரமல்ல, வாசிகமாத்ரத்தாலேயாயிற்று அநுகரிக்கிறது. ஆக, "பிறப்பே பாரதந்த்ரஜந்மத்திலே பிறந்தவள் பிறப்பே ஸ்வதந்த்ரனானவன் வார்த்தையும்சொல்லாநின்றாள், ஸ்த்ரீத்வத்துக் கெல்லையானவிவள் புருஷோத்தமன்சொல்லும் வார்த்தையையும் சொல்லாநின்றாள்; அறிவுக்குவிஷயம் வ்யவஸ்த்திதமாயிருக்க, சர்வஜ்ஞன்சொல்லும் வார்த்

தையைச்சொல்லாநின்ருள் " என்றுகொண்டு; இவள்செய்கிறபடிகளை த்திருத்தாயார், வினவப்புகுந்தவர்களுக்குச்சொல்லுகிருள்.

கீழ்த்திருவாய்மொழியில் – உருவெளிப்பாட்டாலே யநுபவித்தது விக்ரஹவைலக்ஷண்யத்தையிறே, அதுவேயிறே சுபாஶ்ரயம், ( தேஹாத்மாபிமாநம் முற்றிஞல் வேருென்றுதோற்ருதாப்போலே, ப்ரகாரியானவவனளவும் செல்லத்தன்னை யநுஸந்தித்த பாவநாப்ரகர்ஷத்தாலே அவன்தாஞகப்பேசுகிருள். ) அத்தையிறேபாவித்தது. பாவநாப்ரகர்ஷத்தாலே, " [illegible] " ( தத்பாவபாவமாபந்நஸ்ததாஸௌபரமாத்மநா । பவத்யயேதீ ) என்றும், " [illegible] " ( அஹம்மநுரபவம்ஸூர்யஶ்ச ) என்றும், " [illegible] " ( மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம் ) என்றும்–அவஞகபாவித்தால் பின்னையவன்சொல்லும்வார்த்தை சொல்லலாயிருக்குமிறே; அப்படியே, விபூத்யத்யாயத்தி லவன்சொன்னபடிகளை ப்ராகுர்யேண அநுகரிக்கிருள். அதர்வ ஶிரஸ்ஸிலே – ருத்ரன்தன் வைபவத்தைப்பரக்க நின்றுபேசிஞன், தனக்கடங்காதவைஶ்வர்யமாயிருந்தது, இவனிப்படிபேசுகைக்கடியென் என்று ஶ்ருதிதானேசங்கித்து, [[illegible]] [ ஸோந்தராதந்தரம்ப்ராவிஶத் ] என்று பரமாத்மப்ரவேஶத்தாலே சொன்ஞனென்றதிறே. அந்தபாவம்வந்தால் அப்படியே சொல்லலாயிருக்குமே. ஆக, "இப்படி பிரிவாற்ருமையாலே அவனையநுகரித்து தரிக்கிருள் " என்றறியமாட்டாதே, " சர்வேஶ்வரஞவேசித்தான்போலே யிராநின்றது " என்று, திருத்தாயார்வினவவந்தவர்களுக்குச் சொல்லுகிருள் ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

கடல்ஞாலம்ப்ரவேஶே, வ்ருத்தகுதநபூர்வகமாக வர்த்திஷ்யமாணஸங்கதி (கீழ்த்திருவாய்மொழியித்யாதி) (தலையெடுக்கவுமாமிறே) என்றவநந்தரம், அது செய்யாதேயென்றுகூட்டுவது. (தலையெடுத்தது) என்றவநந்தரம், ஆகையாலேயென்றுகூட்டுவது. அநுகாரப்ரகாரமேதென்ன (ஓரோவித்யாதி) இங்கு, அநுகாரமாவது-அவன்சொல்லும் வார்த்தையை யநுகரிக்கையென்று சாப்தமாயிருந்ததேயாகிலும், இந்தசப்தாநுகாரம் - தத்பூர்வபாவியான ஜ்ஞாநமுத்ராநிரீக்ஷணத்யநுகாரத்துக்கு முபலக்ஷணமென்றுவிவக்ஷிதம். அநுகரிக்கிருளென்று தெளியவொண்ணுதோவென்ன (இனியவனையித்யாதி) தெளியமாட்டாளென்றதுக்கு ஸ்வாபதேஶம்- * தனக்கும்தன்றன்மையறிவரியானைப்போலே, ஸ்வவைபவம் தமக்கும்தெரியாதென்றபடி. இது ஏழாம்பாட்டிலேவ்யக்தம். பந்துக்களையென்றது - "உற்றீர்கட்கு" என்றத்தைப்பற்ற. அவஞேட்டை வசநவ்யக்தி சாதர்ம்யத்தாலும்-அவனுடையவுக்திகளைச்சொல்லுகையால் வந்தசாதர்ம்யத்தாலும். வசநவ்யக்தி-வசநஶரீரம். வசநமென்றபடி.

அநுகரித்து தரிக்கவேணுமோவென்ன ( பிரிவாற்ருமையித்யாதி ). இதுக்கு தாஹரணம் (க்ருஷ்ணனையித்யாதி) " [illegible]

[illegible] " ( க்ருஷ்ணேநிபத்தஹ்ருதயாஇதமூசுஃபரஸ்பரம் । க்ருஷ்ணோஹமேஷலலிதம்வ்ரஜாம்யாலோக்யதாம்கதிஃ । அந்யாப்ரவீதிக்ருஷ்ணஸ்ய மமகீதிர்நிஶம்யதாம் । துஷ்டகாளீயதிஷ்ட்டாத்ர க்ருஷ்ணோஹமிதிசாபரா ) இத்யாதிபஞ்சமேம்ஶேகோப்யஃ. நடைச்சக்ரவத்துப்பிடிக்கையாவது - " நடைச்சக்ரவர்த்தி வந்தான் " என்றுவிருதுபிடிக்கை. விரோதியான காளியனுகலாமோவென்ன ( ப்ரதிகூலனுனவித்யாதி ) க்ருஷ்ணனுனவள் தானைக்கலாமோவென்ன (க்ருஷ்ணனுனவளித்யாதி) ஆனுலவர்களைப்போலே யோரவதாரத்தை யநுகரியாதே பரத்வத்தை யநுகரிப்பானென்னென்ன ( அவர்களித்யாதி ) உபயவிபூதியுக்தனையென்றது- " சூந்தல்மலர்மங்கைக்கும் " இத்யாதியைக்கடாக்ஷித்து. இன்னமுமோராகாரத்தாலே வ்யாவ்ருத்தி (இங்குகாலித்யாதி) " அவனேட்டை வசநவ்யக்தி " இத்யாதிவாக்யவிவரணம் (ஆகப்பிறப்பேயித்யாதி) கீழ்வாக்யவிவரணம் ( ஸ்த்ரீத்வத்துக்கித்யாதி ) விஷயம் வ்யவஸ்த்திதமாயிருக்க- "சர்வேஶ்வரனே சர்வநிர்வாஹகன்" என்றறிவுக்கு விஷயம் வ்யவஸ்த்திதமாயிருக்க. சர்வஜ்ஞன் சொல்லும்வார்த்தையாவது - " [illegible] " ( அஹம்க்ருத்ஸ்நஸ்யஜகதஃப்ரபவஃ ) இத்யாதிகள்.

ஸ்வாபதேஶம் (கீழ்த்திருவாய்மொழியிலித்யாதி) (உருவெளிப்பாட்டாலே யநுபவித்தது விக்ரஹவைலக்ஷண்யத்தையிறே) என்றவநந்தரத்திலே, (அதுவேயிறேசுபாஶ்ரயம்) என்கிறத்தைச்சொல்லி; அநந்தரம், இதில்-இந்த சுபாஶ்ரயமான விக்ரஹத்துக்குமுள்ளான ஸ்வரூபவைலக்ஷண்யத்தைச்சொல்லுகிறது என்றொரு வாக்ய மத்யாஹரித்து, ( அத்தையிறேபாவித்தது ) என்றுதொடங்கிச் சொல்லிக் கொள்வது. அதுவேயிறே - விக்ரஹமேயிறே. சுபாஶ்ரயம்-த்யேயவஸ்து. அத்தை-ஸ்வரூபத்தை. அத்தைபாவித்தா லவன்சொல்லும் வார்த்தையைச்சொல்லவேணுமோவென்ன; தேஹாத்மாபிமாநிக்கும் தேஹாத்மாபிமாநம் முற்றினுல் வேறொன்று தோற்ருதாப்போலே, ப்ரகாரியளவும்செல்லத் தன்னையநுசந்திக்கும்படி பாவநைமுற்றினுலவன்சொல்லும்வார்த்தையும் சொல்லலாமென்கிறுர் ( பாவநாப்ரகர்ஷத்தாலேயித்யாதி) " [illegible] " ( தத்பாவபாவமாபந்நஸ்ததாஸௌபரமாத்மநா । பவத்யபேதீபேதஶ்சதஸ்யாஜ்ஞாநக்ருதோபவேத்) இதி ஷஷ்ட்டேம்ஶே காண்டிக்யம் ப்ரதிகேஶி த்வஜஃ. " [illegible] " (தத்பாவபாவம்-தத்த்வமித்யர்த்தஃ, ததா - ஐக்யதஶாயாம், தஸ்யாஜ்ஞாநக்ருதோபவேத்-ப்ரஹ்மாஜ்ஞாநக்ருதோபவேத்) இதிபூர்வபக்ஷார்த்தஃ அஸ்யாம்யோஜநாயாம், த்விதீயபாவஶப்தோவ்யர்த்தஸ்ஸ்யாத். ஸித்தாந்தஸ்து, பாவஶப்தஃ - அபஹதபாப்மத்வாதி ஸ்வபாவபரஃ, தத்பாவ இவபாவோயஸ்யஸதத்பாவஃ, தத்பாவஸ்யபாவஃ தத்பாவபாவஃ-தத்பாவத்வம். பரமஸாம்யாபத்திமாபந்ந இத்யர்த்தஃ. ததா-முக்திதஶாயாம், அபேதீபவதி-பரமாத்மநைக ப்ரகாரோபவதீத்யர்த்தஃ. தேவாதிநாநாத்வபேதஶ்ச சேதநகர்மரூபா ஜ்ஞாநக்ருதோபவேதித்யர்த்த இதிபாஷ்யநிர்வாஹஃ. அன்றிக்கே, (பாவநாப்ரகர்ஷத்தாலே) என்கிறஶப்தஸ்வா

ரஸ்யத்தைப்பற்ற யோஜநாந்தரமுண்டு. அதாவது; பாவஶப்த꞉ - பாவநாபர꞉. அஸௌ-சேதந꞉, ஈஶ்வரவிஷயநிரந்தரத்யாநயுக்தத்வமாபந்ந꞉, ததா - பாவநாதஶாயாம், பரமாத்மநோபிந்நத்வே நாத்மாநம்நாநுஸந்ததாதி, பேதப்ரதீதிஶூந்யசேதநஸ்ய பாவநாரூபஜ்ஞாநாபாவக்ருதோபவேதிதி. "அவனுகபாவித்தா லவன்சொல்லும்வார்த்தையைச் சொல்லலாயிருக்கும்" என்னுமதுக்கு ப்ரமாணாந்தரங்களையருளிச்செய்கிருர் (அஹம்மநுரபவம், மத்தஸ்ஸர்வமித்யாதி) "[illegible]" (தத்தைதத்பஶ்யந்ருஷிர்வாமதேவ꞉ப்ரதிபேதே அஹம்மநுரபவம்ஸூர்யஶ்ச) இத்யாதி. "[illegible]" (மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்மயிஸர்வம்ஸநாதநே। அஹமேவாவ்யயோநந்த꞉பரமாத்மாத்மஸம்ஶ்ரய꞉) இதிப்ரதமேம்ஶே ஏகோநவிம்ஶே. "அவன்சொல்லும்வார்த்தையைச்சொல்லலாயிருக்கும்" என்னுமதுக்குப்ரமாணாந்தரம் (அதர்வஶிரஸ்ஸிலேயித்யாதி) "[illegible]" (தேவாஹவைஸ்வர்க்கம்லோகமகமம்ஸ்தேதேவாருத்ரமப்ருச்சந்கோபவாநிதிஸோப்ரவீத் அஹமேக꞉ப்ரதமமாஸம் வர்த்தாமிசபவிஷ்யாமிசநாந்ய꞉கஶ்சிந்மத்தோவ்யதிரிக்த இதிஸோந்தராதந்தரம்ப்ராவிஶத்திஶஶ்சாந்தரம்ப்ராவிஶத்) இத்யாதி. அயமர்த்த꞉ - தேவதாத்வேநஸாஜாத்யேபிப்ரபாவாதிஶயதர்ஶநேந ஸந்தேஹாத்தேவாஅப்ருச்சந் (கோபவாநிதீதி) கிமஸ்மதாதிவத்தேவதாமாத்ரம், உதபரமகாரணபூத இதிப்ரஶ்நாபிப்ராய꞉. அஹமேக ஆஸமிதி-காரணத்வமுக்த்வா, ப்ரதமமாஸம்வர்த்தாமிசபவிஷ்யாமிசேதி- ஸர்வாத்மபாவஉக்த꞉. அந்வயமுகேநோக்தம் ஸர்வாத்மபாவம் வ்யதிரேகேணோபபாதயதி (நாந்யஇதி) இதி꞉-ஹேதௌ. மத்வ்யதிரிக்தாபாவாதித்யர்த்த꞉. அயம்ஸர்வாத்மபாவ வ்யபதேஶ꞉கிம்பரமாத்மத்வாத் - உத பரமாத்மாத்மகத்வாதிதிஶங்காயாம்; ப்ரமாத்மப்ரவேஶ நிபந்தநஇத்யாஹ (ஸோந்தராதிதி) ஸ்வஸ்மிந் பரமாத்மாநுப்ரவேஶஸ்ய த்ருஷ்டாந்தாபிப்ராயேணோக்தம் (திஶஶ்சாந்தரமிதி) அத்ரஸர்வாத்மபாவமநுஸந்ததோருத்ரஸ்யபுத்திஸ்த்த꞉பரமாத்மா - ஸஇதிபராம்ருஶ்யதே. அந்தராத் - அந்நமயாதே ரந்தராந்மநோபுத்த்யஹங்காரரூபாந்த꞉கரணவர்க்காத், அந்தரம் - ஜீவாத்மாநம், ஸ꞉-பரமாத்மா, ப்ராவிஶத்; திக்சப்தோபலக்ஷ்யபாஹ்யாசேதநாநாமந்தரம்-ஜீவம், ஸ꞉-பரமாத்மா, ப்ராவிஶதிதிததநுப்ரவேஶ꞉கண்டோக்தஇதி. யத்வா, ஸஇதி-பரோக்ஷரூபேண ருத்ர ஏவோச்யதே. ஸ꞉-ருத்ர꞉, அந்தராத்-தேஹேந்த்ரியாதேரந்தராஜ்ஜீவாத், அந்தரம்-பரமாத்மாநம், ப்ராவிஶத்-"[illegible]" (ப்ரஹ்மாஹம்) இதிபாவநயா பரமாத்மாநம்ப்ரகர்ஷேணகச்சத் - ஏகீபூததுத்யர்த்தஇதிவா. ருத்ரன் தன்வைபவத்தைப்பரக்கநின்று பேசினுனென்றது - "[illegible]" (தேவாஹவைஸ்வர்க்கம்லோகமகமந்) இத்யாதியைப்பற்ற. ஆனுலும்தன்னைப்பெருக்கச்சொல்லலாமோவென்ன (அந்தபாவமித்யாதி) நிகமநம் (ஆகவிப்படியித்யாதி) ......................................*

---

# ஆறாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

கடன்ஞாலஞ்செய்தேனும்யானேயென்னுங் கடன்ஞாலமாவேனும் யானேயென்னுங், கடன்ஞாலங்கொண்டேனும்யானேயென்னுங் கடன் ஞாலங்கீண்டேனும்யானேயென்னுங், கடன்ஞாலமுண்டேனும்யானே யென்னுங் கடன்ஞாலத்தீசன்வந்தேறக்கொலோ, கடன்ஞாலத்தீர்க்கி வையென்சொல்லுகேன்கடன்ஞாலத்தென்மகள்கற்கின்றவே.

### ஆறாயிரப்படி.

கடலோடேகூடினஜகத்தை ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக ஸ்ருஷ்டித்தேனும் நானென்னும் இஜ்ஜகத்து மதாத்மகம், ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு பதார்த்தமில்லையென்னும் இத்தை மஹாபலியபஹரிக்க, நானளந்துகொண்டேனென்னும். ப்ரளயார்ணவத்திலேயழுந்தின வித்தை ஸஹாயநிரபேக்ஷமாக வெடுத்தேனும் நானென்னும். பூமிதான் "ப்ரளயம்வாராநின்றது" என்றறியாதிருக்க, நானேயறிந்து வயிற்றிலேவைத்துப்பரிஹரித்தேனென்னும். இவள்பக்கல் கடல்ஞாலத்தீசன்வந்தாவேசித்தானோ. இந்தப்பூமியிலேயிருந்துவைத்து என்மகள் மேன்மேலனச் சொல்லுகிறவிவற்றை லௌகிகரான வுங்களுக்குச்சொல்ல வுபாயமுண்டோவென்கிறாள்.......................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளெல்லாம் நானேசெய்தேனென்று சர்வேஶ்வராவிஷ்டையானுப்போலே சொல்லாநின்றாளென்கிறாள்.

கடல்-கடல்சூழ்ந்த. ஞாலம்-ஜகத்தை. ஸஹாயாந்தரநிரபேக்ஷமாக, செய்தேனும்-ஸ்ருஷ்டித்தேனும். யானே-நானே. என்னும்-என்னாநிற்கும். கடல்ஞாலமாவேனும்-இத்தைஸ்ருஷ்ட்யநந்தரம் அநுப்ரவேஶித்து "ஸச்ச த்யச்சாபவத்" (ஸச்சத்யச்சாபவத்) என்கிறபடியே தத்தச்சப்தவாச்யதயாததாத்மகனுய்நிற்பேனும். யானே-நானே. என்னும்-என்னும். கடல்ஞாலம்-இத்தை. கொண்டேனும்-மஹாபலி அபிமாநிக்க, அர்த்தியாயிரந்தளந்துகொண்டேனும். யானே-நானே. என்னும்-என்னும். அவாந்தரப்ரளயத்திலேவராஹவேஷத்தைக்கொண்டு, கடல்ஞாலம்-இத்தை. கீண்டேனும்-கீண்டெடுத்தேனும். யானேயென்னும்-யானேயென்னும். மஹாப்ரளயத்திலே "அத்தாசராசரக்ரஹணாத்" (அத்தாசராசரக்ரஹணாத்) என்கிறபடியே, கடல்ஞாலம்-இத்தை. உண்டேனும்-உபஸம்ஹரித்தேனும். யானே - நானே. என்னும்-என்னும். கடல்ஞாலத்தீசன் - ஸகலஜகந்நியந்தாவானசர்வேஶ்வரன். வந்து - வந்து. ஏற-இவளையாவேசிக்க. கொலோ - கூடுமோ. கடல்ஞாலத்தீர்க்கு-அவிசேஷஜ்ஞராய் ஸம்ஸாரவர்த்திகளானவுங்களுக்கு. கடல்ஞாலத்து - இத்தேஶத்திலேயிருந்துவைத்து. என்மகள் - அப்ராக்ருதஸ்வபாவையானவென்மகள். கற்கின்ற-அப்யஸிக்கிறனவாயுள்ள. இவை-இந்த அதிசயிதாகாரங்களை. என்-என்னை. சொல்லுகேன்-சொல்லுவேன்.

உண்டேனென்று - வடதளசாயிவ்யாபாரமாகவுமாம்..........................*

## ௫௫ - முதற்பாட்டு.

என்மகள், ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களெல்லாம் பண்ணி னேன் நான் என்றுநின்றாள்; எம்பெருமான் தன்பக்கலிலே யாவேஶித்துச்சொல்லுகிறாள்போலே யிராநின்றதென்கிறாள்.

(கடல்ஞாலமித்யாதி) * அஹம்க்ருத்ஸ்நஸ்யஜகதஃப்ரபவஃஎன்று நின்றாள். கடலோடுகூடினஜகத்திலே சகலபதார்த்தங்களும், கண்ணுக் கிடவொரு துரும்பில்லாதபடியழிந்து, "ஸதேவ" (ஸதேவ) என்கிற படியே-தனக்கென்னவொரு நாமரூபங்களில்லாதபடியழிந்தவன்று, இத்தையுண்டாக்கினேன் நானென்றுநின்றாள். ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்ட ப்ரஹ்மமேகாரணமாய், அதுதானே ஸ்த்தூலாவஸ்த்தையை பஜிக்கை யிறே கார்யமாகிறது. விஶிஷ்டமேகாரணமுமாய் கார்யமுமாயிருக்கை யாலே புறம்பொருகாரணமில்லாமையாலே, தானேயுபாதாநமும் நிமித்தமும் சஹகாரியுமாயிறேயிருப்பது. இப்படி த்ரிவிதகாரணமும்தானே யாய் இத்தையுண்டாக்கினேன் நானென்றுநின்றாள். அவதாரணத்தாலே - காரணாந்தரநிஷேதம்பண்ணினபடி.

(கடல்ஞாலமாவேனும்) "தத்ஸ்ருஷ்ட்வாததேவாநுப்ராவிஶத் ததநுப்ரவிஶ்ய ஸச்சத்யச்சாபவத்" (தத்ஸ்ருஷ்ட்வாததேவாநுப்ராவிஶ த்ததநுப்ரவிஶ்யஸச்சத்யச்சாபவத்) என்கிறபடியே இவற்றையுண்டாக்கி, இவற்றினுடைய வஸ்துத்வநாம பாக்த்வங்களுக்காக அநுப்ரவேஶித்து, இவற்றைச்சொல்லும் சப்தங்கள் தன்னளவும்வரும்படி இவையாய்நிற்கிறேன் நானென்றுநின்றாள். வாசகமாயாதல் போதகமாயாதலவனைக்காட்டக்கடவதிறே; தோற்றுகிறவித்தைச்சொல்லிக்கொண்டு அபர்யவஸாநவ்ருத்தியாலே அவனளவும்வருதல், இஸ்ஸங்காதந்தனக்கே வாசகமாயாதலிருக்குமிறே. [ஸச்சத்யச்சாபவத்] [ஸச்சத்யச்சாபவத்] என்கிறவிது ஸ்வரூபைக்யமல்ல, அநுப்ரவேஶக்ருதமென்னுமிடத்தைச் சொல்லிற்றிறே [ததநுப்ரவிஶ்ய] [ததநுப்ரவிஶ்ய] என்று.

(கடலித்யாதி) இவற்றைஸ்ருஷ்டித்து, "மேலுள்ளதுதானே நடக்கிறது" என்று விடுகையன்றிக்கே, இவற்றை யடியொத்திக்கொண்டுசென்று ரக்ஷிக்கும்படி. மஹாபலிபோல்வார், பருந்திருஞ்சிறைப்போலே இத்தையபஹரித்து "என்னது" என்னுமன்று, இத்தையெல்லைநடந்துமீட்டுக்கொண்டேன் நானென்றுநின்றாள். (யானே)." ஆசுரப்ரக்ருதிக ளிவன்முன்பு நில்லார்களிறே" என்னுமத்தாலே, "ராஜ்யத்தைவாங்கித்தரவேணும்" என்று அபேக்ஷித்தமாத்ரமேயிறே யிந்த்ரன்பக்கலுள்ளது; அவனுடைய ஔதார்யத்துக்கிடாகத் தன்னையர்த்தியாக்கி, அவன்தரும்விரகறிந்துவாங்கினான் தானேயிறே.

(கடலித்யாதி) ஆசுரப்ரக்ருதிகளாயிருப்பாரித்தை யழிக்கையன்றிக்கே, பூமிக்கு ரக்ஷகமாகவைத்தகடல்தானே யித்தையழிக்க, அண்டபித்தியிலேபுக்குச்சேர்ந்தவித்தை யிடந்தெடுத்தேனும் நானென்னுநின்ருள். அமிழ்ந்துகிடக்கிறபூமி, "என்னையெடுக்கவேணும்" என்றபேக்ஷித்தமையில்லையிறே; தானேயிறேசெய்தான்.

(உண்டேனும்) சிலரிருக்கச்சிலரழிகையன்றிக்கே, ஸ்ரஷ்டாக்களோடு ஸம்ஹர்த்தாக்களோடு வாசியற எல்லாரையுமொக்க ப்ரளயங்கொள்ளப்புக, இத்தையடைய வயிற்றிலேவைத்துரக்ஷித்தேன் நானென்னுநின்ருள். "அப்போது வேறுசிலர் ரக்ஷித்தார்கள்" என்கைக்குமற்றொருவருண்டாகைக்கு சம்பாவனையுமில்லை. (ஈசன்) சர்வஸ்ரஷ்டாவாய் சர்வாந்தர்யாமியாய் சர்வாபத்ஸகனான சர்வேஶ்வரன்வந்து ஆவேசித்தானோ, அறிகிறிலேன்.

"உன்னைக்கேட்டறுதியிடவந்தோம், நீயுமொக்க விசாரியாநின்ருயீ!, நாங்கள் பின்னை நிர்ணயிக்கும்படியென், ( நாங்கள்தெரியும்படியென், ) நாங்கள்தெளியும்படி நீயேசொல்லாய்" என்ன (கடல்ஞாலத்தீர்க்கு) "வைகுந்தத்தமரர்" என்னுமாபோலே, நித்யசம்சாரிகளாய், பகவத்விஷயம் புதியதுண்டறியாதே போருகிறவுங்களுக்கு நானெத்தைச்சொல்லுவேன். கொலோ என்றவிடம் – சம்சயோக்தியல்ல, காணுங்கோளென்று நிர்ணயித்துச்சொல்லுகிருள். ( கடலித்யாதி ) இதுதான் நித்யசூரிகள் சொல்லக்கடவவார்த்தை; ஆக, நித்யசூரிகள் சொல்லக்கடவவார்த்தையை சம்சாரத்திலேயிருந்து என்மகள்சொல்லுகிற 'விதுக்கு நானெத்தைச்சொல்லுவது .............. ...............................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு ( கடல்ஞாலமித்யாதி ) பாட்டெல்லாம்கடாக்ஷித்தவதாரிகை ( என்மகளித்யாதி )

ஸ்ருஷ்டி அப்யயபூர்விகையாகையாலே, அப்யயத்தையுங்கூட்டி யருளிச்செய்கிருர் (கடலோடித்யாதி) கண்ணுக்கிடவொருதரும்பென்றது - இளநீர்க்குழம்பிடுகிற தரும்பைச்சொல்லுதல், அஞ்சநமெழுதுகிற தூரியக்கோலைச்சொல்லுதல். "யானே" என்றவவதாரணார்த்தம் (ஸூக்ஷ்மேத்யாதி) யத்வா, த்ரிவிதகாரணமும் தானேயாகக்கூடுமோவென்ன (ஸூக்ஷ்மேத்யாதி) என்னுதல். த்ரிவிதகாரணமும் தானேயானலும், பரிணாமம் விசேஷணம்சத்திலேயென்னுமிடந்தோற்ற(ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்ட ப்ரஹ்மமேகாரணமாயென்றது) விவரணம் (விஶிஷ்டமேயித்யாதி) ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டவேஷேணோபாதாநத்வம், சங்கல்பவிஶிஷ்டவேஷேண நிமித்தத்வம், ஜ்ஞாநஶக்த்யாதி விஶிஷ்டவேஷேணஸஹகாரித்வம். அவதாரணார்த்தத்தை முக்தகண்டமாக வருளிச்செய்கிருர் (அவதாரணத்தாலேயித்யாதி) அடியிலே (அஹம்க்ருத்ஸ்நஸ்ய) "அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா । மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய". ( அஹம்க்ருத்ஸ்நஸ்யஜகத:

ப்ரபவஃப்ரளயஸ்ததா। மத்தஃபரதரம்நாந்யத்கிஞ்சிதஸ்திதநஞ்ஜய ) என்று கீதா ஸூ௲ஸப்தமே.

“ ஆவேனும் ” என்ற ஆனப்ரகாரத்தைக்காட்டுகிறார் (தத்ஸ்ருஷ்ட்வேத்யாதி) தன்னளவும்வரும்படி யெப்படியென்ன (வாசகமாயித்யாதி; இத்தை வ்யுத்க்ரமமாகவிவரிக்கிறார் (தோற்றுகிறவித்யாதி) வாசகமாயாதலென்றது - அஸ்மந்மதாநுஸாரேண. போதகமாயாதலென்றது - ப்ராபாகரமதாநுஸாரேண. ஸங்காதத்துக்கு வாசகமாகையாவது -“ வநம் ” என்றால் - ஒன்றுக்கு ப்ராதாந்யமின்றிக்கே சகலவ்ருக்ஷங்களுக்கும் சாதாரணமாகிறப்போலே, “ தேவதத்தன் ” என்றால், இஶ்ஶப்தம் - சிதசிதீஶ்வரவாசகமாயிருக்கை. போதகமாகையாவது-ப்ரதமம்தோற்றுகிற வசித்தைச்சொல்லி, ததபிமாநியான சேதநனைச்சொல்லி, ததந்தர்யாமியான வீஶ்வரனைச்சொல்லுகை. சங்காதத்துக்கு வாசகமாகிறதென், ஸ்வரூபைக்யம்சொன்னாலோவென்ன (ஸச்சத்யச்சேத்யாதி) “ தத௲ந௲வ்ரவிஶ ” (ததநுப்ரவிஶ்ய) என்றது - இவ்விடத்திலநுவாதமன்றிக்கே சிதசித்வாசிஶப்தம் ஸ்வபர்யந்தமாகைக்காக நின்றநிலையைச்சொல்லுகிறதென்றபடி.

“ யானே ” என்கிறதென், இந்த்ரனர்த்திக்கவில்லையோவென்ன ( ஆஸ௲ரேத்யாதி )

அவதாரணார்த்தம் (அமிழ்ந்துகிடக்கிறவித்யாதி)

“ உண்டேனும் ” என்று - ரக்ஷணத்தைச்சொல்லுகிறது, ரக்ஷணம் தாரகமாகையாலே. ஏவகாரார்த்தம் (அப்போதித்யாதி)

வைகுந்தத்தமரொன்னுமாபோலேயென்றது - பரமபதத்தை யிருப்பிடமாகவுடைய நித்யசூரிகளென்று விசேஷித்தாப்போலேயென்றபடி.

“ கொலோ ” என்றதுக்கு - கீழே சம்ஶயோக்தியாக வருளிச்செய்து, நிஶ்சயோக்தியாகத் தாத்பர்யாந்தரம் (கொலோவென்றவிடமித்யாதி)

இதுதானென்றது - “கடல்ஞாலம்” இத்யாத்யுக்திமை.

க்ரமேணாந்வயஃ..........................................................................*

## இரண்டாம்பாட்டு.

கற்குங்கல்விக்கெல்லையிலனேயென்னுங் கற்குங்கல்வியாவேனும்யானேயென்னுங், கற்குங்கல்விசெய்வேனும்யானேயென்னுங் கற்குங்கல்வி தீர்ப்பேனும்யானேயென்னுங், கற்குங்கல்விச்சாரமும்யானேயென்னுங் கற்குங்கல்விநாதன் வந்தேறக்கொலோ, கற்குங்கல்வியீர்க்கிவை யென் சொல்லுகேன் கற்குங்கல்வியென்மகள்காண்கின்றவே.

### ஆறாயிரப்படி.

(கற்குங்கல்வி) நான்கற்றவித்யைகளுக்கு ஒருமுடிவில்லையென்னும். எல்லாரும்விரும்பிக்கற்கிற வித்யைகள் நானிட்டவழக்கென்னும். அவற்றையுண்டாக்கினேன் நானேயென்னும். அவற்றினுடைய தாத்பர்யநிர்ணயமென்னாலேயென்னும். வித்யாபலம் நானேயென்னும். அப்ய

வஸிக்கப்படும் சகலவித்யாவேத்யனன சர்வேஶ்வரன்வந்தேறினனே. அறிவில்லாதவுங்களுக்கு, அறியத்தொடங்கும் பருவத்தையுடைய விவளநுசந்திக்கிறவற்றைச்சொல்ல விரகுண்டோவென்கிருள்................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சகலவேதவித்யைகளும் தத்ப்ரவர்த்தநாதிகளும் நானிட்டவழக்கென்றுநின்றுளென்கிருள்.

கற்கும்-புஸ்தகநிரீக்ஷணாதிகளாலன்றியே ஆசார்யமுகத்தாலே கற்கப்படும். கல்விக்கு-வேதரூபவித்யைகளுக்கு. "அநந்தாவைவேதா:" (அநந்தாவைவேதா:) என்கிறபடியே, எல்லை-எல்லையை. இலன்-உடையேனல்லேன். என்னும்-என்னும். கற்குங்கல்வியாவேனும் - அந்தவித்யைகளெனக்கு ப்ரகாரமாம்படி சப்தப்ரஹ்மாத்மகனுய்நிற்பேனும். யானே-நானே. என்னும்-என்னும். கற்குங்கல்வி -அவற்றை. செய்வேனும்-சுப்தப்ரபுத்தந்யாயத்தாலே ஸ்ருஷ்டிகாலத்திலே யதாபூர்வமுண்டாக்குவேனும். யானே-நானே. என்னும் - என்னும். கற்குங்கல்வி தீர்ப்பேனும்-சம்ஹ்ருதிசமயத்திலே உபசம்ஹரித்து என்னெஞ்சிலேயிட்டுவைப்பேனும். யானே-நானே. என்னும்-என்னும். கற்குங்கல்விச்சாரமும்-அந்தவித்யாசாரமான மூலமந்த்ராதிகளும். யானே - நானிட்டவழக்கு. என்னும்-என்னும். கற்குங்கல்வி - சகலவேத ப்ரதிபாத்யனன. நாதன் - சர்வேஶ்வரன். வந்தேற - இவளை ஆவேசித்தானுக. கொலோ-கூடுமோ. கற்குங்கல்வியீர்க்கு-இன்றென்பக்கலிலே யிதுகற்கும்படியானவுங்களுக்கு. கற்குங்கல்வி-இன்றுவார்த்தைகற்கும்பருவமான. என்மகள் - என்பெண்பிள்ளை. காண்கின்ற-தான்கண்டுசொல்லுகிற. இவை-இவற்றை. என்-என்னென்று. சொல்லுகேன்-சொல்லுவேன்.

"கற்கும்கல்வியென்று - சகலவித்யாஸ்த்தாநம்" என்றும் சொல்லுவாருமுளர் ...............................................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

சகலவித்யாவேதநமும் அவ்வித்யாப்ரவர்த்தகத்வாதிகளும் நானிட்டவழக்கென்கிருள்.

(கற்குமித்யாதி) அல்பகாலத்துக்குள்ளே சாந்தீபநியோடே நான்கற்ற பரப்புக்கோரெல்லையில்லையென்றுநின்றுள். அன்றிக்கே, "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்கிறஶ்ருதிக்கு நிலமன்றிக்கேயிருக்கிறேன் நானென்றுநின்றுள். கற்கும்கல்வியினுடைய எல்லைக்குள்ளேநிற்கிறேனல்லேன். அன்றிக்கே, "வேதாந்தவிழுப்பொருளின்மேலிருந்தவிளக்கை" என்கிறபடியே, வேதாந்தவேத்யன் நானென்றுநின்றுளென்னுதல்.

(ஆவேனும்) அவற்றுக்கு அவிஷயமானவளவேயோ, அவைதானென்ன நிகமன்றே. "த்வமேவவித்யா" (த்வமேவவித்யா) என்கிறபடியே.

(செய்வேனும்) அவ்வித்யைகள் தம்மை அவ்வவகாலங்களிலேயுண்டாக்குவேனும் நானென்றுநின்றுள்.

(கற்குங்கல்விதீர்ப்பேனும்) அவற்றின்சம்ஶயங்களைத்தீர்த்துத்தாத்பர்யநிர்ணயம்பண்ணுவேனும் நானென்கின்றாள். பரக்கக்கற்றுவைத்தே "ஶூந்யமேதத்வம்" என்கிறாருண்டிறே. அன்றிக்கே, அத்யேதாக்களும் அத்யாபகரும் நானிட்டவழக்கென்கின்றாளென்றுமாம். தீர்ப்பேனென்னுங்காட்டில் - இவ்வர்த்தத்தைக் காட்டுமோவென்னில்; தீர்க்கையாகிறது-அவற்றினுடைய வெல்லைகாண்கையிறே.

(சாரமும்) அவ்வித்யைகளுடைய சாராம்ஶமான ப்ரயோஜநமும் நானென்கின்றாள். (நாதன்வந்தேறக்கொலோ) சகலவித்யாவேத்யனை சர்வேஶ்வரன்வந்தாவேசித்தானோ.

(கற்குமித்யாதி) இப்போது கற்றறியவேண்டும்படி, பகவத்விஷயத்தில் ஒவ்வோக்குழியிடாதேயிருக்கிற வுங்களுக்கு நானெத்தைச்சொல்லுவது. (கற்குமித்யாதி) சொன்னவார்த்தையைச்சொல்லு மித்தனை போக்கி, தானாகவொருவார்த்தைசொல்லமாட்டாத அளவாயிருக்கிற இவளிவ்விஷயத்திலே யவகாஹிக்கிறவெல்லையை, நானெத்தைச்சொல்லுவது..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (கற்குமித்யாதி) "கற்குங்கல்வி" என்றதின் த்ருதீயார்த்தத்தைப்பற்ற (சகலவித்யாவேதநமுமென்றது)

விவரணம் (கற்குங்கல்வியினுடையவித்யாதி) த்ருதீயார்த்தத்துக்கு, 'எல்லையென்று - வேதாந்தமாய், இல்லென்று-இருப்பிடமாய், வேதாந்தத்தை யிருப்பிடமாகவுடையவனென்று சப்தார்த்தமாய், வேதாந்தவேத்யனென்று பலிக்கிறது, த்விதீயத்ருதீயார்த்தங்களுக்கு, கற்குமென்றது - எல்லாராலுமென்றபடி.

த்விதீயார்த்தத்தை யுபஜீவித்து மேல்பதத்துக்கவதாரிகை (அவற்றுக்கித்யாதி) "கற்குங்கல்வியாகிறவனிவனே" என்னுமதுக்குப்ரமாணம் (த்வமேவேத்யாதி) "[Grantha text] | [Grantha text]" (த்வமேவமாதாசபிதாத்வமேவத்வமேவபந்துஶ்சகுருஸ்த்வமேவ | த்வமேவவித்யாத்ரவிணம் த்வமேவத்வமேவஸர்வம்மமதேவதேவ.)

அவ்வவகாலங்களிலே - ஸ்ருஷ்டிகாலங்கள்தோறும்.

சம்சயமுண்டாயேநீர்க்கவேணுமே, சம்சயப்ரஸக்தியேதென்ன (பரக்கக்கற்றித்யாதி) ஶூந்யமேதத்த்வமென்றது - ப்ரபஞ்சமித்யாத்வம் சொல்லுகிற மாயாவாதிகளுக்கு முபலக்ஷணம். இப்படிகொள்ளவேண்டுகிறது - "வேதத்தில் சம்சயங்கள்தீர்ப்பேன்" என்கிற பதஸ்வாரஸ்யத்துக்காக. "கற்குங்கல்விதீர்ப்பேன்" என்றதுக்குபாவாந்தரம் (அத்யேதாக்களுமித்யாதி) இவ்வர்த்தத்தை - "அத்யேதாக்களு மத்யாபகரும் நானிட்டவழக்கு" என்கிறவர்த்தத்தை. "தீர்ப்பேனும்" என்றதுக்கு-சிஷ்யாசார்யராய் நிர்வஹிக்கிறவனும் நானேயென்றிரண்டாமர்த்தம்.

சாராம்ஶமான ப்ரயோஜநம் - மோக்ஷம்.

ஒவ்வோக்குழி - பாலொழுத்துடுகிறவரிக்குழி.

அவகாஹிக்கிறவென்றது - " காண்கின்ற " என்றதுக்கர்த்தம்.

" கற்கும் " என்றால் - பூதவர்த்தமானார்த்தவாசகமாகையாலே, " கற்குங் கல்வியீர்க்கு, கற்குங்கல்வியென்மகள் " என்கிறவிடத்தில் வர்த்தமானார்த்தவாசகமாயிருக்கிறது. ( வேதாந்தவிழுப்பொருளின்மேலிருந்தவிளக்கை ) வேதாந்தப்ரதிபாத்யங்களான சிரியவர்த்தங்களுக்கெல்லாம் மேலாயிருந்துள்ள ஸ்வயம்ப்ரகாஶவஸ்துவானவனை. பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து மூன்றாந்திருமொழி பதினொன்றாம்பாட்டு, "மாலிருஞ்சோலையென்னும்" இத்யாதி. கற்குங்கல்விக்கென்று தொடங்கி, கற்குங்கல்வியீர்க்கு - கற்குங்கல்வியென்மகள் காண்கின்ற - இவையென்சொல்லுகேன் இத்யந்வயஃ. கற்குங்கல்விக்கெல்லையிலனென்றதுக்கு - நான்கற்ற வேதரூபவித்யைகளுக்கு முடிவில்லாதவனென்னுதல்; எல்லாரும் கற்கப்படுகிற வேதத்தினுடைய வெல்லைக்குள்ளே நிற்கிறேனல்லேனென்னுதல்; எல்லாராலும் கற்கப்படுகிற வேதத்தினுடையவெல்லையை - வேதாந்தத்தை. இல்லாக-இருப்பிடமாக, உடையவனென்னுதலென்றர்த்தத்ரயம். த்விதீயத்ருதீயார்த்தங்களுக்கு, கல்விக்கென்றது - கல்வியினுடையவென்றபடி. கல்வி-வித்யை. மேல், "கற்கும்" என்றவற்றுக்கெல்லாம் - எல்லாராலும் கற்கப்படுமென்றே யர்த்தங்கண்டுகொள்வது. செய்வேனும் - உண்டாக்குவேனும். சாரம்-ஸாரம். பலமித்யர்த்தஃ. கல்விநாதன்-வேதப்ரதிபாத்யனானஸர்வேஶ்வரன். ஏறக்கொலோ. ஏறினனோ. ஆவேசித்தானோ வித்யர்த்தஃ. கற்குங்கல்வியீர்க்கு - இன்றென்பக்கலிலே கற்றறியவேண்டும்படியானவுங்களுக்கு. ( கற்கும்கல்வியென்மகள் ) கல்வி-கற்கும்-என்மகள். இன்றுவார்த்தைகற்கும் பருவமான வென்பெண்பிள்ளை. கல்வி-வார்த்தை, ஜ்ஞாநமும். காண்கின்ற - கண்டுசொல்லுகிறவற்றை. அவகாஹித்துச்சொல்லுகிறவற்றை. என்சொல்லுகேன் - என்னென்றுசொல்லுவேனித்யர்த்தஃ..................................*

---

## மூன்றாம்பாட்டு

---

காண்கின்றநிலமெல்லாம்யானேயென்னுங் காண்கின்றவிசும்பெல்லாம்யானேயென்னுங், காண்கின்றவெந்தீயெல்லாம்யானேயென்னுங்காண்கின்றவிக்காற்றெல்லாம்யானேயென்னுங், காண்கின்றகடலெல்லாம் யானேயென்னுங் காண்கின்றகடல்வண்ணனேறக்கொலோ, காண்கின்ற வுலகத்தீர்க்கென்சொல்லுகேன்காண்கின்றவென்காரிகைசெய்கின்றவே.

## ஆறாயிரப்படி.

( காண்கின்ற ) அபரிச்சேத்யமான ப்ருதிவ்யாதிபூதபஞ்சகமும் நானிட்டவழக்கென்னாநின்றாள். கடல்போலேயெப்போதும் தர்ஶநீயமான திருநிறத்தையுடையவன் வந்தேறினனோ. நமக்குத்தெரியாததில த்திலேபுக் கவகாஹித்து என்மகள் பண்ணுகிறசேஷ்டிதங்கள் நீங்கள் காண்கிறபடிக்கு மேற்பட வென்னால்சொல்லலாவதில்லையென்கிறாள்..*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரமாணஸித்தமான ஜகத்துக்கு ப்ரதாநகாரணமான மஹாபூதங்கள் நானிட்டவழக்கென்னுமென்கிறாள்.

காண்கின்ற-ப்ரமாணத்தாலே காணப்படுவதான. நிலமெல்லாம் - சரமபூதமானப்ருதிவியெல்லாம். யானே-நானே. என்னும்-என்றுநிற்கும். காண்கின்ற-அப்படிப்பட்ட. விசும்பு-ப்ரதமபூதமான ஆகாஶமும். எல்லாம், யானே-நானே. என்னும்-என்றுநிற்கும். காண்கின்ற-தேஜோபதார்த்தங்களில் ப்ரதாநமாய். வெம் - உஷ்ணஸ்பர்ஶமான. தீ-அக்நியும். எல்லாம், யானே-நானே. என்னும்-என்றுநிற்கும். காண்கின்ற-தத்பூர்வபாவியாய். இ-தாரகத்வாதிகளாலே ஸந்நிஹிதமான. காற்றெல்லாம்-வாயுக்களும். யானே-நானே. என்னும்-என்றுநிற்கும். காண்கின்ற - ததநந்தரபாவியான. கடல்-ஜலதத்வம். எல்லாம்-எல்லாம். யானே-நானே. என்னும்-என்றுநிற்கும். காண்கின்ற-தர்ஶநீயமாய். கடல்-அபரிச்சிந்நமானகடல்போன்ற. வண்ணன்-வடிவையுடையசர்வேஶ்வரன். ஏறக்கொலோ-ஆவேசித்தானோ. காண்கின்ற-காண்கிற. உலகத்தீர்க்கு-லோகமொழியவறியாதவுங்களுக்கு. காண்கின்ற - ஒருவருங்காணவொண்ணாதவற்றையும் காணும்படியா யபிருபையான. என்-என். காரிகை - மகள். செய்கின்ற - செய்கிறவற்றை. என் - என்னென்பதாக. சொல்லுகேன் - சொல்லுவேன்...........................................................*

## ௩ ௫ - மூன்றாம்பாட்டு.

காரணமான ப்ருதிவ்யாதிபூத பஞ்சகங்களும் நானிட்டவழக்கென்றுநின்றாளென்கிறாள்.

(காண்கின்றவித்யாதி) காணப்புக்கால் கண்டதாய்த்தலைக்கட்டமுடியாதபடியான பரப்பையுடைத்தான பூமியெல்லாம் நானிட்டவழக்கென்றுநின்றாளென்கிறாள். இப்படியிருக்கிறதுதான் கார்யரூபையான ப்ருதிவியிறே, கண்ணுக்குத்தோற்றுகிற இதிவ்வளவானால், இதுக்குங்கூடக் காரணமாய்த்தான் சாஸ்த்ரங்கொண்டறியவேண்டும்படி யிருக்குமது இவ்வளவல்லவிறே.

(காண்கின்றவித்யாதி) காணப்புக்கால் கண்டதாய் முடியவொண்ணாதபடியாய், இதுதனக்குங்கூட அவகாசப்ரதாநம்பண்ணு மாகாசமும் நானிட்டவழக்கென்றுநின்றாள்.

(காண்கின்றவித்யாதி) அப்படிப்பட்ட தேஜஸ்தத்வமும் நானிட்டவழக்கென்றுநின்றாள்.

ஸ்பர்ஶங்கொண்டறியும்படியிருக்கிறகாற்றும் நானிட்டவழக்கென்றுநின்றாள்.

(காண்கின்ற) காண்பார்க்குக்கண்டதாய்த் தலைக்கட்டமுடியாதபடியான பரப்பையுடையகடலெல்லாம் நானிட்டவழக்கென்றுநின்றாள். காணப்புக்கால் கண்டதாய்மீளவொண்ணாதபடியான கடல்போலே ஶ்ரமஹரமானவடிவையுடைய சர்வேஶ்வரன்வந்தாவேசித்தானோ.

( காண்கின்றவித்யாதி ) நீங்களுமென்னோடொக்கக் காணுகின்றி கோளாகில், உங்களுக்குநானென்ன பாசுரமிட்டுச்சொல்லுவது; உங்க ளோடென்னோடு வாசியுண்டோசொல்லவொண்ணாமைக்கு. (காண்கின் றவித்யாதி) " யதோவாசோநிவர்த்தந்தே " ( யதோவாசோநிவர்த்தந் தே ) என்கிற அபரிச்சேத்யமானவிஷயத்தை யுட்புக்குப்பேசுகிற எ ன்பெண்பிள்ளைசெய்கிற இத்தை நான்சொல்லுவதென் ................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (காண்கின்றவித்யாதி) கார்யவாசிரூபத்தாலே காரணத் தைலக்ஷிக்கிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (காரணமானவித்யாதி)

வர்த்தமாநநிர்த்தேஶார்த்தம் (காணப்புக்காலித்யாதி) காண்கின்ற-காணப் படாநிற்கிற. "காண்கின்ற" என்று-ப்ரத்யக்ஷமாகச்சொல்லுகையாலே, கார்யப்ரு திவியென்று ஸித்தம். அப்படிகண்டு தலைக்கட்டமுடியாதபடியாயிருக்குமோவெ ன்ன (இப்படியிருக்கிறதித்யாதி) அன்றிக்கே, "காண்கின்ற" என்றதுக்கர்த்தத்வய ம் - கண்ணுக்கு விஷயமான கார்யபூமியென்னுதல், சாஸ்த்ராதிகளால் காணப்படு கிற காரணபூமியென்னுதலென்று. அதில் கார்யபூமியை யருளிச்செய்தார் (காண ப்புக்காலித்யாதியாலே) காரணமானபூமியை யருளிச்செய்கிறார் ( இப்படியிருக்கி றதித்யாதிவாக்யத்வயத்தாலே ) ஏதத்த்விதீயயோஜநாபி ப்ராயேண - அவதாரிகை யென்று கண்டுகொள்வது என்றுமாம்.

" இக்காற்று " என்றது - தாரகத்வேநஸந்நிஹிதமாகையைப்பற்ற.

ஆனாலும், எங்களைப்பற்றநீ அந்தரங்கையன்றோ, உன்னாலேசொல்லவொண் ணாதோவென்ன ( உங்களோடித்யாதி )

காண்கின்றவென்காரிகை - சாக்ஷாத்கரித்தவென்பெண்பிள்ளை. காரிகை-பெ ண்பிள்ளை.

க்ரமேணாந்வய: ...............................................*

## நான்காம்பாட்டு.

செய்கின்றகிதியெல்லாம்யானேயென்னுஞ் செய்வானின்றனகளும் யானேயென்னுஞ், செய்துமுன்னிறந்தவும்யானேயென்னுஞ் செய்கைப் பயனுண்பேனும்யானேயென்னுஞ், செய்வார்களைச்செய்வேனும்யானே யென்னுஞ் செய்யகமலக்கண்ணனேறக்கொலோ, செய்யவுலகத்தீர்க்கி வையென்சொல்லுகேன் செய்யகனிவாயிளமான்றிறத்தே.

## ஆறாயிரப்படி.

(செய்கின்ற) வர்த்தமானகிரியைகளும், மேல்வருவதானக்ரியை களும், பண்டுசெய்தக்ரியைகளும், க்ரியாபலம்புஜிப்பேனும், க்ரியாகர்த் தாக்களை யவற்றில் ப்ரவர்த்திப்பிப்பேனும் நானென்னும். இவள்தன்னி

ணழகாலு மவனுவேசித்தாப்போலே யிராநின்றது. சிவந்தகனிபோலே யிருக்கிற வாயையுடையவளாயிருக்கிற சிறுபெண்பிள்ளை யிடையாட்டத்திலாழங்காணமாட்டாதே படிபொடரான வுங்களுக்கெத்தைச் சொல்லுவேனென்கிருள்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வக்ரியைகளும் நானிட்டவழக்கென்னுமென்கிருள்.

செய்கின்ற-செய்யப்படாநிற்கிற. கிதி-வர்த்தமானக்ரியையும். எல்லாம், யானேயென்னும்: செய்வான் - மேற்செய்வதாக. நின்றனகளும்- நிற்கிறபவிஷ்யத்க்ரியையும். யானேயென்னும். முன்-முன்பு. செய்து-செய்து. இறந்தவும்-கழிந்தபூதக்ரியையும். யானே-நானிட்டவழக்கு. என்னும் - என்னும். செய்கை - இந்தக்ரியையினுடைய. பயன்-பலத்துக்கு. உண்பேனும்-போக்தாவும். யானே-நானே. என்னும்-என்னும். செய்வார்களை - இக்க்ரியைக்கநுஷ்ட்டாதாக்களை. செய்வேனும் - உண்டாக்குவேனும். யானே-நானே. என்னும்-என்னும். இது, செய்ய-சிவந்த. கமலம்-தாமரை போலேயிருக்கிற. கண்ணன்-கண்ணையுடையசர்வேஸ்வரன். ஏறக்கொலோ - ஆவேசித்தபடியோ. செய்ய-செவ்வையொழியவறியாத. உலகத்தீர்க்கு - லோகத்தீர்க்கு. செய்ய-சிவந்த. கனி-கனிபோலேயிருக்கிற. வாய் - அதரத்தையுடையளாய். இளம்-முக்தமான. மான்-மான்போலேபேதையானவிவள். திறத்து-இடையாட்டத்து. இவை-இவை. என்-என்னுக. சொல்லுகேன் - சொல்லுவேன்.........................*

## ஈடு - நான்காம்பாட்டு.

காலத்ரயத்திலுமுண்டான க்ரியாஜாதமெல்லாம் நானிட்டவழக்கென்னுநின்றுளென்கிருள்.

(செய்கின்றவித்யாதி) அதில் வர்த்தமாநமான க்ரியாஜாதம், செய்யக்கடவதாய்நிற்கிற க்ரியாஜாதம், முன்புசெய்தற்ற க்ரியாஜாதம், இவையடைய நானிட்டவழக்கென்னுநின்றுள்.

(செய்கைப்பயனுண்பேனும்) * அஹம்ஹிஸர்வயஜ்ஞாநாம்போக்தாச என்னுநின்றுள். க்ரியாபலபோக்தாக்களும் நானிட்டவழக்கென்னுநின்றுள். அன்றிக்கே, செய்கையாகிற க்ரியையும், பலபோக்தாவும் நானிட்டவழக்கென்னுநின்றுள்.

( செய்வார்களையித்யாதி ) க்ரியாகர்த்தாக்களை யிடுவித்து அவற்றை யநுஷ்ட்டிப்பிப்பேனும் நானென்னுநின்றுள். அன்றிக்கே, அவர்களிவற்றைக்கொண்டு என்னையாஶ்ரயிக்கும்படி பண்ணுவேனும் நானென்னுநின்றுள். (செய்ய) * அஸிதேக்ஷணையான வாகாரம்போய், புண்டரீகாக்ஷன்படியாய்விட்டது. * மையகண்ணுளான வாகாரம்போய், * செய்யகோலத்தடங்கண்ணன்படியாய்விட்டது.

(செய்யவுலகத்தீர்க்கு) "சொல்லலாம், ஆகாது" என்றறியாதே, "சொல்லு, சொல்லு" என்று அலைக்கிற படிபொடரான வுங்களுக்கு நா

னைத்தைச்சொல்லுவது. (செய்யகனிவாய்) அநுகார (ரஸ) த்தாலேச ம்ஶ்லேஷ சமயத்திற்போலேயிருக்கிற இவள், அதரம் செவ்விபெற்றுவ ரும்படி விக்ருதையாய், அதிமுக்தையாயிருக்கிறபடி. நானைத்தைச்சொ ல்லுவது. பிரிவில் விவர்ணமாகை ப்ராப்தமாயிருக்க, இவளதரம் செவ் விபெற்றுவருகிறதிறே அநுகாரத்தால்வந்ததரிப்பாலே. சிவந்தகனிபோ லேயிருக்கிற வதரத்தையுடையளாய், முக்தமானமான்போலே பேதை யான விவளிடையாட்டத்தே ........................................ ............*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (செய்கின்றவித்யாதி) "இதி" என்று-க்ருதியாய், க்ரியையை ச்சொல்லுகிறது.

"செய்கின்ற, செய்வானின்றனகளும், செய்துமுன்னிறந்தவும்" என்கிறமூ ன்றுக்கும் - வர்த்தமானபவிஷ்யத்பூத க்ரியாஜாதபரதயாவ்யாக்யாநம் (அதிலித் யாதி)

அர்த்தாந்தரம் (க்ரியாபலேத்யாதி) முந்தினவர்த்தத்துக்கு, "செய்கைப்பய ன்" என்றது - யாகத்தில் ப்ரயோஜநரூபமான ஹவிஸ்ஸென்றபடி. த்விதீயார்த்தத் துக்கு, பலபோக்தாக்களென்று-ஸ்வர்க்காதி பலபோக்தாக்களென்றபடி. முந்தின வர்த்தத்வயத்திலும் - செய்கையினுடைய பலமென்றபடி. த்ருதீயார்த்தத்துக்கு- செய்கையும் பயனும்பேறுமென்றபடி. செய்கை-யாகாதிக்ரியைகள். த்ருதீயார்த்த த்தில், க்ரியையுமென்றது - க்ரியாமாத்ரமாதல், "கருமமும்" என்றவிடத்திற்போ லே க்ரியாநுஷ்டாதாக்களாதல்.

"செய்வார்களைச்செய்வேன்" என்றதுக்கர்த்ரத்வயம்; செய்வார்களை-காம் யமான ஸ்வர்க்காதி பலசாதநகர்த்தாக்களை, செய்வேனும் - தேவதாந்தரங்களை யா ஶ்ரயிப்பிப்பேனும் நானென்றுதலென்றர்த்தம். இத்தையருளிச்செய்கிறார் (க்ரியா கர்த்தாக்களையித்யாதி) அன்றிக்கே, செய்வார்களை-மோக்ஷசாதநமான யஜ்ஞாதிகர் மங்களைச்செய்கிறவர்களை, செய்வேனும் - என்னையாஶ்ரயிப்பிப்பேனுமென்றுதல். இத்தை யருளிச்செய்கிறார் (அன்றிக்கேயவர்களித்யாதி)

(அஸிதேக்ஷணே) இத்யாதி வாக்யத்துக்கு-புண்டரீகாக்ஷனுக்கேயிறே யிப் ரதிபத்தியுள்ளதென்று கருத்து. விவரணம் (மையகண்ணாளானவித்யாதி)

"செய்யவுலகத்தீர்க்கு" என்றவிடத்தில், செய்யவென்று - செவ்வையாய், (படுபாடரான) என்றபடி. படுபாடர் - க்ருஹீதக்ராஹிகள். இத்தையருளிச்செய்கி றார் (சொல்லலாமித்யாதி)

அநுகாரத்தாலே-சப்தாநுகாரத்தாலே. அநுகாரத்தாலே யாகவேணுமோ, வாஸ்தவமாகச்சிவந்திருக்கவொண்ணாதோவென்ன (பிரிவிலித்யாதி)

"அஹம்ஹிஸர்வயஜ்ஞாநாம் போக்தாச ப்ரபுரேவச । நதுமாமபிஜாநந்திதத்த்வேநாதஶ்ச்யவந்திதே" (அஹம்ஹிஸர்வயஜ்ஞாநாம் போக்தாச ப்ரபுரேவச । நதுமாமபிஜாநந்திதத்த்வேநாதஶ்ச்யவந்திதே) இதிகீதாயாம்சவமே. செய்கின்றவென்று தொடங்கி, உலகத்தீர்க்கு - செய்யகனிவாயிளமான்திறத்து - இ வையென்சொல்லுகேனித்யந்வய: ......................................................*

# ஐந்தாம்பாட்டு.

திறம்பாமன்மண்காக்கின்றேன்யானேயென்னுந் திறம்பாமன்மலை
யெடுத்தேனேயென்னுந், திறம்பாமலசுரரைக்கொன்றேனேயென்னுந் தி
றங்காட்டியன்றைவரைக்காத்தேனேயென்னுந், திறம்பாமற்கடல்கடைந்
தேனேயென்னுந் திறம்பாதகடல்வண்ணனேறக்கொலோ, திறம்பாதவு
லகத்தீர்க்கென்சொல்லுகேன் றிறம்பாதென்றிருமகளெய்தினவே.

## ஆறுயிரப்படி.

( திறம்பாமல் ) ஒருவர்க்கும் தப்பச்செய்யவொண்ணாதபடி யித்
தாவையெல்லா மொருதுணையின்றிக்கே காக்கின்றேன். சலியாதபடி
கோவர்த்தநோத்தரணம்பண்ணினேன். தப்பாதபடிகோலி அசுரரைமு
டித்தேன். ஒருவர்க்குமறியவொண்ணாத வென்படியை லோகத்திலேயா
விஷ்கரித்து தர்மபுத்ராதிகளைவரையுங்காத்தேன். நினைத்தபடிதப்பாமல்
கடலைக்கடைந்தேனென்னும். ஒருவர்க்கும் தன்சாஸநத்தைத்தப்பவொ
ண்ணாதபடியான சர்வேப்வரனுவேசித்தானோ. லக்ஷ்மீஸமையான வெ
ன்மகள் பகவத்குணங்களிலேதப்பாமே யகப்பட்டபடிகளை, “ கேட்டல்
லது போகோம் ” என்று நிர்ப்பந்திக்கிற வுங்களுக்கென்னென்று சொல்
லுகேனென்கிறுள்..................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜகத்ரக்ஷணதிவ்யாபாரமெல்லாம் செய்கிறேன் நானேயென்னு
மென்கிறுள்.

திறம்பாமல்-ஆஜ்ஞையைஅதிலங்கியாதபடி. மண்-ஜகத்தை. காக்கின்றேன்-
ரக்ஷிக்கிறேன். யானே-நானே. என்னும்-என்னும். கோரக்ஷணார்த்தமாக, திறம்பா
மல்-சலியாதபடி. மலை-மலையை. எடுத்தேனே - எடுத்தேனே. என்னும் - என்னும்.
திறம்பாமல் - தப்பாதபடி. அசுரரை - அரிஷ்டதேநுகப்ரப்ருதிகளான அசுரர்களை.
கொன்றேனே-கொன்றேனே. என்னும்-என்னும். திறம்-விஜயஹேதுவானவுபாயப்
ரகாரங்களை. காட்டி-காட்டிக்கொடுத்து. அன்று - துர்யோதநாதிகளெதிரிட்டவன்
று. ஐவரை-பாண்டவர்களைவரையும். காத்தேனே-ரக்ஷித்தேனே. என்னும்-என்னும்.
திறம்பாமல்-நினைவுதப்பாதபடி. கடல்-கடலை. கடைந்தேனே - கடைந்தேனே. என்
னும்-என்னும். திறம்பாத-ஆஸ்ரிதரக்ஷணத்தில் திறம்புதலில்லாத. கடல்வண்ணன்-
கடல்வண்ணனானவன். ஏறக்கொலோ - இவளை ஆவேசித்தபடியோ, இது, திறம்பா
த - “ அறியவேணும் ” என்கிறநினைவுதப்பாதிருக்கிற. உலகத்தீர்க்கு - லோகத்தீர்க்
கு. என்-என்னுடைய. திரு-லக்ஷ்மீஸமானையான. மகள்-பெண்பிள்ளை. திறம்பாது-
தப்பாதபடி. எய்தின-ப்ராபித்தஸ்வபாவங்களை. என் - ஏதாக. சொல்லுகேன் - சொ
ல்லுவேன்.

திறம்பாதகடலென்று - கரைகடவாத கடலென்றுமாம் .....................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ஜகத்ரக்ஷணப்ரமுகமான சேஷ்டிதங்களுமெல்லாம் பண்ணினேன் நானென்னுகின்றாளென்கிறாள்.

(திறம்பாமலித்யாதி) ஒருவர்கூறையெழுவருடாதபடி, "பீஷாஸ்மாத்வாத:பவதே" (பீஷாஸ்மாத்வாத:பவதே) என்கிறபடியே, பூமியைநோக்குகிறேன்நானென்னும்.

ஒருபசுவின்மேலாதல் ஒரு இடையன்மேலாதல் ஒருதுளிபடாதபடி கோவர்த்தநகிரியை தரித்துரக்ஷித்தேனும் நானென்னுகின்றாள்.

அசுரவர்க்கத்தைத்தப்பாதபடி பறுத்துப்போகட்டேனென்னும்.

(திறங்காட்டியித்யாதி) லோகத்திலேயென்படிகளைக்காட்டி; பகலையிரவாக்கியும், "ஆயுதமெடேன்" என்றாயுதமெடுத்தும், சத்ருக்களுடைய வுயிர்நிலையைக்காட்டியு மிப்படி அன்று பாண்டவர்களை பக்ஷபதித்து ரக்ஷித்தேனும் நானென்றுநின்றாள். "நகாங்க்ஷேவிஜயம்க்ருஷ்ண" (நகாங்க்ஷேவிஜயம்க்ருஷ்ண) என்ற அர்ஜுநனை, "கரிஷ்யேவசநம்தவ" (கரிஷ்யேவசநம்தவ) என்னப்பண்ணினானிறே.

(திறம்பாமற்கடல்) ஒருதாழிக்குட்பட்டதயிரையொன்றும் பிறிகதிர்ப்படாதபடி கடைவாரைப்போலே, சமுத்ரமென்கிற மஹாதத்வத்தின்நடுவே மந்தரத்தைநட்டுக்கடைகிறவிடத்துக் கீழேவிழுதல் மேலேகொந்தளித்தல் செய்யாதபடி கடலைக்கடைந்தேனும் நானென்னும். (திறம்பாத) தன் சாஸநத்தை யொருவரால் தப்பவொண்ணாதபடியிருக்கிற அபரிச்சேத்ய ஸ்வபாவனான சர்வேஸ்வரன்வந்தாவேசித்தானோ.

(திறம்பாத) "கேட்டல்லதுகால்வாங்கோம்" என்றிருக்கிறவுங்களுக்கு நானெத்தைச்சொல்லுவது. லக்ஷ்மீசமையான வென்மகள், ஹிதஞ்சொல்லி மீட்கவொண்ணாதபடி ப்ராபித்தவற்றை நானெத்தைச் சொல்லுவது. ஆழங்காலிலேயிழிந்தார்படியைக் கரையிலேநின்றாராலே சொல்லப்போமோ..............................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (திறம்பாமலித்யாதி)

"திறம்பாமல் மண்காக்கின்றேன்" என்றவிடத்திலே, திறம்பாமலென்றதுக்கு - ஒருவர்நிமித்தமான பயத்தாலே சலியாதபடி என்றர்த்தம்விவக்ஷித்து (ஒருவர்கூறையித்யாதி) ஒருவர்கூறை யெழுவருடுக்கையாவது - ஒருவன்கையில் புடவையை யொருவன்பறிக்க, அவன்கையிலத்தை வேறொருவன்பறிக்க, இப்படியே ழுபேராகப்பறித்துடுக்கை. இது - எளியாரை வலியார்பாதிக்கைக்கு த்ருஷ்டாந்தம். இப்படி யெளியாரை வலியார்பாதியாதபடி ஸ்வஸ்வமர்யாதையிலே நிறுத்தி பூமியை ரக்ஷிக்கிறேனென்றபடி.

" திறம்பாமல்மலை, திறம்பாமலசுரரை " என்கிறவிரண்டிடத்திலும், திறம்பாமலென்றதுக்கு - தப்பாமலென்றர்த்தம்.

திறங்காட்டி - பக்ஷபாதப்ரகாரங்களைக்காட்டியென்னுதல்; திறமென்று - சமூஹமாய், தத்த்வவிவேகந்தொடங்கி ப்ரபத்திபர்யந்தமான வர்த்தசமூஹங்களைக்காட்டியென்னுதல். இரண்டர்த்தத்தையு மடைவேயருளிச்செய்கிறார் (லோகத்திலேயென்படிகளையித்யாதியாலும், நகாங்க்ஷ இத்யாதியாலும்)

திறம்பாமல்கடல் - சலியாதபடி சமுத்ரத்தை.

(திறம்பாதகடல்வண்ணனித்யாதி) திறம்பாத - அதிக்ரமிக்கப்போகாத. இது - * கடல்வண்ணனுக்கு விசேஷணம்.

திறம்பாதவுலகத்தீர்க்கு - சலியாதவுலகத்தீர்க்கு.

திறம்பாது - சலியாமல். எய்தின-ப்ராபித்தன. அவள ப்ராபித்தத்தை யுன்னுலேசொல்லப்போகாதோவென்ன (ஆழங்காலிலேயித்யாதி)

திறம்பாமலித்யாரப்ய, உலகத்தீர்க்கு - என்திருமகள் - திறம்பாது - எய்தின - என்சொல்லுகே ணித்யந்வயஃ. பீஷாஸ்மாத்வாதஃபவதே என்றது - இவன் நிமித்தமான பயத்தாலே காற்றுமுதலானவை ஸ்வஸ்வகார்யஞ் செய்யுமென்றபடி. " 𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍇 𑌵𑌿𑌜𑌯𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌨 𑌚 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿 𑌚 । 𑌕𑌿𑌂 𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑍇𑌨 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦 𑌕𑌿𑌂 𑌭𑍋𑌗𑍈𑌰𑍍𑌜𑍀𑌵𑌿𑌤𑍇𑌨 𑌵𑌾 " (நகாங்க்ஷவிஜயம்க்ருஷ்ண நசராஜ்யம்ஸுகாநிச। கிம்நோராஜ்யேநகோவிந்தகிம்போகைர்ஜீவிதேநவா) இதிகீதாஸுப்ரதமே. " 𑌨𑌷𑍍𑌟𑍋 𑌮𑍋𑌹𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌲𑌬𑍍𑌧𑌾 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌨𑍍𑌮𑌯𑌾𑌚𑍍𑌯𑍁𑌤 । 𑌸𑍍𑌥𑌿𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌗𑌤𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌃 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇 𑌵𑌚𑌨𑌂 𑌤𑌵 " (நஷ்டோமோஹஸ்ஸ்ம்ருதிர்லப்தாத்வத்ப்ரஸாதாந்மயாச்யுத। ஸ்த்திதோஸ்மிகதஸந்தேஹஃ கரிஷ்யேவசநம்தவ) இத்யஷ்டாதஸே.......................................................*

---

# ஆறும்பாட்டு.

---

இனவேய்மலையேந்தினேன்யானேயென்னு மினவேறுகள்செற்றேனும்யானேயென்னு, மினவான்கன்றுமேய்த்தேனும்யானேயென்னுமினவாநிரைகாத்தேனும்யானேயென்னு, மினவாயர்தலைவனும்யானேயென்னு மினத்தேவர்தலைவன்வந்தேறக்கொலோ, வினவேற்கண்ணல்லீர்க்கிவையென்சொல்லுகேனினவேற்கண்ணியென்மகளுற்றனவே.

## ஆறாயிரப்படி.

(இனவேய்மலை) திரள்திரளானமூங்கிலையுடைத்தான கோவர்த்தநகிரிதாரணம்முதலான க்ருஷ்ணசேஷ்டிதங்களெல்லாம் நானேபண்ணுநின்றேனென்னாநின்றாள். (இனத்தேவர்) தனித்தனியநுபவிக்கமுடியாமையாலே, திரண்டிருக்கிற * அயர்வறுமமரர்களதிபதியானவனாவேசித்தானோ. வேல்போலேயிருக்கிறகண்ணையுடையீராய் அவஹிதராயிரு

க்கிற வுங்களுக்கு, தான்படுகிறபாட்டைப் பிறைப்படுத்தவல்ல கண்ணழகையுடைய விவளுற்றவிவற்றை யென்சொல்லுகேனென்கிறாள் ......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், க்ருஷ்ணசேஷ்டிதங்களைச்செய்தேனும் நானேயென்னு மென்கிறாள்.

இனம்-திரளான. வேய்-மூங்கிலையுடைய. மலை-கோவர்த்தநத்தை. ஏந்தினேன்-எடுத்தேன். யானே-நானே. என்னும் - என்னும். இனம்-திரளவந்த. ஏறுகள்-ஏழெருத்தையும். செற்றேனும்-கொன்றேனும். யானே - நானே. என்னும் - என்னும். இனம்-ஓரினத்தில். ஆன்கன்று-கன்றுகளை. மேய்த்தேனும்-மேய்த்தேனும். யானே-நானே. என்னும்-என்னும். இனம்-திரள்திரளான. ஆநிரை-பசுக்களை. காத்தேனும்-ரக்ஷித்தேனும். யானே-நானே. என்னும்-என்னும். இனம் - ஒருதரத்தில். ஆயர் - இடைப்பிள்ளைகளுக்கு. தலைவனும் - நாயகனுமிருப்பேனும். யானே-நானே. என்னும்-என்னும். இனம்-சங்கமான. தேவர்-சூரிகளுக்கு. தலைவன்-நிர்வாஹகனானசர்வேச்வரன். ஏய்ந்தேறக்கொலோ-ஆவேசித்தபடியோ. இனம்-தன்னிற்றான்செறிந்து. வேல்-வேல்போலேயிருக்கிற. கண்-கண்ணழகையுடைய. நல்லீர்க்கு-உங்களுக்கு. வேல்-வேலோடு. இனம்-ஒத்திருக்கிற. கண்ணி-கண்ணையுடைய. என்-என்னுடைய. மகள்-பெண்பிள்ளை. உற்றன-மெய்த்த. இவை-இந்தஸ்வபாவங்களை. என்-ஏதென்று.சொல்லுகேன்-சொல்லுவேன்.

இனத்தேவரொன்று - சாம்யம்பெற்றவரொன்றுமாம் ..........................*

## ஈடு - ஆறும்பாட்டு.

கோவர்த்தநோத்தரணம் முதலான க்ருஷ்ணசேஷ்டிதங்களெல்லாம் பண்ணினேன் நானென்னாநின்றாளென்கிறாள்.

(இனவேய்மலை) அனுக்கனைக்கவிழ்த்துப்பிடித்தாப்போலே, திரளதிரளான மூங்கிலையுடைத்தான மலையை அநாயாஸேந தரித்தேன் நானென்னாநின்றாள்.

(இனம்) ஒன்றிரண்டன்றிக்கே ம்ருத்யுஸத்ருசமாயிருக்கிற ருஷபங்களேழையு மொருகாலே யூட்டியாகநெரித்துப்பொகட்டேன்நானென்னும்.

(இனவான்கன்று) "வத்ஸமத்யகதம் பாலம்" ( வத்ஸமத்யகதம் பாலம் ) என்கிறபடியே என்றேடொத்தபருவமான கன்றுகளைமேய்த்தேனும் நானென்னும்.

(இனவாநிரை) முன்பு ப்ரஹ்மசர்யமநுஷ்ட்டித்துப்பின்பு கார்ஹஸ்த்யதர்மமநுஷ்ட்டிப்பாரைப்போலே, பால்யத்திலே கன்றுகளைமேய்த்து, பருவம் நிரம்பினபின்பு பசுக்களைமேய்த்தேனும் நானென்னும்.

(இனவாயர்) "தன்னேராயிரம்பிள்ளைகள்" என்கிறபடியே, என்றேடொத்தபருவத்தில் பிள்ளைகளும் நானுமாய்த் தீம்புசெய்து திரி

கிறவிடத்தில், அவர்களிலென்றனேத் தீம்பரில்லேயென்னும். ( இனத்தேவர்) நைரபேக்ஷ்யத்துக்குத் தன்னேடொத்திருக்கிற நித்யசூரிகளுக்கு நிர்வாஹகனென சர்வேச்வரன்வந்தாவேசித்தானே. அன்றிக்கே, (இனத்தேவர்) தனியநுபவிக்கவொண்ணுமையாலே திரள்திரளாயிருக்கிற நித்யசூரிகளென்னுதல். " அடியார்கள்குழாங்கள் " என்னக்கடவதிறே.

( இனவேல் ) வேலொழுங்குபோலே, " இவள்தசை யெவ்வளவாய்த் தலேக்கட்டுகிறது " என்று கூர்க்கப்பார்த்துக்கொண்டிருக்கிற வுங்களுக்கு நானெத்தைச்சொல்லுவது. ஏன்றுன், சொல்லவருமையென்னென்ன (இனவேற்கண்ணி) தன்கண்ணுக்கிலக்கானூர் படுவதைத்தான் படுகிறபடியைச் சொல்லப்போமோ. "உயிர்காமின்கள்ஞாலத்துள்ளே" என்றிறே யிவள்கண்ணுக்கிலக்கானூர் படுவது..........................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (இனவேயித்யாதி)

அணுக்கன் - குடை. இனவேய்-திரளானமூங்கில்.

" இனவேறுகள் " என்றவிடத்தில், இனமென்றது - ஸத்ருஶமாய், ( ம்ருத்யு ஸத்ருஶமாயிருக்கிற ) என்றபடி. ஊட்டியென்று - கழுத்தாய், கழுத்துத்தன்கையிலே யகப்படும்படியாக நெரித்தென்றபடி. ஊட்டி - ஊணும், கழுத்தும்.

வான்கன்று - பெரியகன்றுகள்.

இனவாநிரை - திரளானபசுக்கூட்டம்.

நல்லீர்க்கு - விலக்ஷணைனானவுங்களுக்கு. இனவேற்கண் - ஒன்றுக்கொன்று ஒப்பாய் வேல்போலேயிருக்கிறகண்.

( தன்னேராயிரம்பிள்ளைகள் ) தன்னேடொத்த வாயிரம்பிள்ளைகளோடே. பெரியாழ்வார்திருமொழி மூன்றும்பத்து. ( உயிர்காமின்கள்ஞாலத்துள்ளே ) சம்சாரத்திலேயிருக்கிற நீங்களுயிரைக்காத்துக்கொள்ளுங்கோள். திருவிருத்தம் ஆறும்பாட்டு, " தடாவிய " இத்யாதி. " [illegible] " ( ஸததர்ஶததாதத்ரக்ருஷ்ணமாதோஹநேகவாம் । வத்ஸமத்யகதம்பாலம்நீலோத்பலதளச்சவிம் ) இதிபஞ்சமேம்போ..........................................*

# ஏழாம்பாட்டு.

உற்றூர்களெனக்கில்லேயாருமென்னுமுற்றூர்களெனக்கிங்கெல்லாருமென்னு, முற்றூர்களேச்செய்வேனும்யானேயென்னு முற்றூர்களேயழிப்பேனும்யானேயென்னு, முற்றூர்களுக்குற்றேனும்யானேயென்னு முற்றூரிலிமாயன்வந்தேறக்கொலோ, வுற்றீர்கட்கென்சொல்லிச்சொல்லுகேன்யா னுற்றென்னுடைப்பேதையுரைக்கின்றவே.

## ஆறுயிரப்படி.

(உற்றூர்கள்) இஜ்ஜகத்தி லென்படியையறிந்து எனக்குபந்துக்க ளாயிருப்பாரொருவருமில்லை. அவர்களப்படியிருந்தமை யறிந்துவைத்தே, எனக்குறவாகநினைத்திராதாரொருவருமில்லை. சிலரென்னையாஸ்ரயிக்கும்படி பண்ணுவேன். அநாஸ்ரயிக்குமவர்களில் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவர்கள்வேண்டினவற்றைக்கொடுத் தகற்றுவேன்நான். அநந்யப்ரயோஜநரானவர்களுக்கெல்லா பந்துக்ருத்யமும் பண்ணுவேன்நானென்னும். எத்தனையேனு மளவுடையார்க்கும் முட்டக்காணவொண்ணாதவத்யாஸ்சர்யபூதனானவ னாவேசித்தானோ. ஈடுபட்டு, அத்யந்தபாலையான வென்மகள் சொல்லுகிறவற்றை, உறவுமுறையாரான வுங்களுக்கென்னபாசுரத்தாலே சொல்லுவேன் நானென்கிறாள்........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜகத்தில்பந்துக்களளவி லவன்படியெல்லாம் தன்படியாகச் சொல்லாநின்றாளென்கிறாள்.

உற்றூர்கள்-ஒருபாதியாலேகிட்டுதல், என்னையுள்ளபடியறிந்துகிட்டுதல் செய்திருக்கும்பந்துக்கள். எனக்கு-எனக்கு. யாரும்-ஒருவரும். இல்லை - இல்லை. என்னும்-என்னும். இங்கு-இஜ்ஜகத்தில். நிருபாதிகசம்பந்தத்தைப்பார்த்தால், அவர்கள்தாரதம்யம்பாராதே, எல்லாரும்-எல்லாரும். எனக்கு - எனக்கு. உற்றூர்கள் - பந்துக்களாயிருக்கும். என்னும்-என்னும். உற்றூர்களை-அவர்களை எனக்குற்றாராம்படி. செய்வேனும்-பண்ணுவேனும். யானே-நானே. என்னும்-என்னும். உற்றூர்களை-ப்ரயோஜநாந்தரத்துக்காகக்கிட்டினவர்களை. அறிப்பேனும்-அவற்றைக்கொடுத்து உறவறுத்துவிடுவேனும். யானே-நானே. என்னும்-என்னும். உற்றூர்களுக்கு-அநந்யப்ரயோஜநராய்க்கிட்டினார்க்கு. உற்றேனும்-எல்லாவுறவுமுறையும். யானே-நானே. என்னும்-என்னும். உற்றூர்-எத்தனையேனுமளவுடையராகிலும் தன்னைமுட்டக்கண்டுகிட்டினார். இலி-இல்லாத. மாயன்-ஆஸ்சர்யபூதன். வந்தேறக்கொலோ-ஆவேசித்தபடியோ. உற்றீர்கட்கு-பந்துக்களானவுங்களுக்கு. என்னுடைப்பேதை - அதிபாலையானவென்னுடையபெண்பிள்ளை. உற்று-உள்ளுறக்கண்டு. உரைக்கின்ற-சொல்லுகிறவார்த்தைகளை. என்-என்னபாசுரம். சொல்லி-சொல்லி. சொல்லுகேன்-சொல்லுவேன்......*

## ஈடு - ஏழாம்பாட்டு.

எம்பெருமானாஸ்ரிதவிஷயத்திலிருக்கிற விருப்பைத் தன்படியாகப்பேசாநின்றாளென்கிறாள்.

( உற்றூர்களெனக்கில்லையாருமென்னும் ) எனக்கோருபாதியால் வந்தபந்துக்க ளொருவருமில்லையென்னும். அன்றிக்கே, என்னோட்டை சம்பந்தமறிந்து எனக்கு ஸ்நேஹிக்கக்கடவா ரொருவருமில்லையென்னுதல், "பதிம்விஸ்வஸ்ய" ( பதிம்விஸ்வஸ்ய ) என்கிறத்தையோதிவைத்தே தேவதாந்தரபஜநமிறேபண்ணுவது.

(உற்றார்களெனக்கிங்கெல்லாருமென்னும்) எனக்கு நிருபாதிகபந்துக்களல்லாதாரில்லையென்னும். அவர்களிப்படியிருக்கச்செய்தே நிருபாதிகபந்துவாய் எல்லார்க்கும் ஸ்நேஹித்திருப்பனென்னுதல்.

(உற்றார்களைச்செய்வேனும்யானேயென்னும்) அவர்களிலே சிலர்வந்து என்னையாச்ரயிக்கும்படி பண்ணுகிறேனும் நானென்னும்.

(உற்றார்களையழிப்பேனும்) அவர்களுக்கு ப்ரயோஜநாந்தரங்களிலே ருசியுண்டானால், அந்த ப்ரயோஜநங்களைக் கொடுத்து என்பக்கலினின்று மகற்றுவேன் நானென்னும். அன்றிக்கே, ஆண்டான்பணித்தானாக இளையபெருமாள், "அவர்களை சௌந்தர்யாதிகளாலே யழிப்பேனும் நானென்னாநின்றாள்" என்றுமருளிச்செய்வர்.

(உற்றார்களுக்குற்றேனும்யானேயென்னும்) என்பக்க லநந்யப்ரயோஜநராய்ப்பரிமாறுவார்க்கு என்றனை யநந்யப்ரயோஜநரில்லையென்னுதல். அன்றிக்கே, என்னையே சர்வவிதபந்துவுமாகப் பற்றினவர்களுக்கு, நானுமவர்களையே சர்வவிதபந்துவுமாக இருப்பேனென்னவுமாம். (உற்றாரிலி) இற்றைக்குமுன்பு ஸ்வயத்நத்தாலேகிட்டினாரொருவருமில்லாதபடியிருக்கிற ஆஸ்சர்யபூதனான சர்வேஸ்வரன்வந்தாவேசித்தானோ.

(உற்றீர்களித்யாதி) "இங்ஙன் சம்சயிக்கக்கடவதோ, பந்துக்களுக்கு நிஸ்சயித்துச்சொல்லவேணுங்காண்" என்ன; உறவுமுறையாராயித்தனையோவேண்டுவது, சொல்லலாய்ச்சொல்லவேண்டாவோ. என்னபாசுரத்தைச்சொல்லிச்சொல்லுவேன். என்றான், சொல்லவொண்ணாமைக்கு வந்ததென்னென்னில் (உற்றீத்யாதி) பருவம்நிரம்பாத என்பெண், மறுபாடுருவத் தைத்துச்சொல்லுகிறவற்றை, கரையிலேநிற்கிற நானெத்தைச்சொல்லுவது. திருத்தாயாரானதசையு மிவர்தமக்கேயுள்ளதொன்றாகில், இங்குச்சொல்லவொண்ணாதபடி கலங்குகையாவதென்னென்னில்; "தனக்கும்தன்தன்மை யறிவரியான்" என்று-ஈஸ்வரனை, தன்படிதானுமறியானென்றுசொல்லுமாபோலே; தம்தசை தமக்குங்கூடப்பேச்சுக்கு நிலமன்றென்கிறது..........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (உற்றார்களித்யாதி)

உபாதியால் - கர்மமாகிறவுபாதியால். த்விதீயார்த்தத்துக்கு - உற்றிருப்பாரொன்றாய், ஸ்நேஹிப்பாரொன்றபடி. சம்பந்தமறிந்து ஸ்நேஹியார்களோவென்ன (பதிமித்யாதி)

ஈழிற்பதத்தி லர்த்தத்வயாநுகுணமாக வர்த்தத்வயம் (எனக்குநிருபாதிகேத்யாதி வாக்யத்வயத்தாலே)

என்னையாஸ்ரயிக்கும்படி பண்ணுகிறேனுமென்றது - "தேஷாம்ஸதத யுக்தாநாம்" (தேஷாம்ஸததயுக்தாநாம்) இத்யாதியைப்பற்ற.

இளையபெருமாள் - ஆண்டான்ஸ்ரீபாதத்திலவர்.

உற்றார்களுக்குற்றேனும் - அநந்யப்ரயோஜநராய்க்கிட்டினார்க் குற்றிருப்பேனுமென்னுதல்; உறுதல்-கிட்டுதல். அன்றிக்கே, உறவுமுறையார்க் குறவுமுறையாயிருப்பேனுமென்னுதல்.

உற்றாரிலி-கிட்டினவர்களில்லாதவன்.

என்சொல்லிச்சொல்லுகேன் - எந்தப்பாசுரத்தையிட்டு எந்தவர்த்தத்தைச் சொல்லுவேன்.

மறுபாடுருவ-அப்பாலுருவ. நன்றாகவவகாஹித்தென்றபடி.

ஸ்வாபதேசத்திலே ஜிஜ்ஞாஸாப்ரஸ்நத்தை யநுவதித்துப் பரிஹரிக்கிறார் (திருத்தாயாரானவித்யாதி) (தனக்குந்தன்றன்மையறிவரியான்) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான தன்னாலும்தன்னைப் பரிச்சேதிக்கப்போகாதவன்.

உற்றார்கள்-யாரும்-எனக்கிங்கில்லை-என்னும், இங்கெல்லாரும் - எனக்கு-உற்றார்கள்-என்னுமித்யாரப்ய, உற்றீர்கட்கு- என்னுடைப்பேதை-உற்று - உரைக்கின்ற-என்சொல்லிச்சொல்லுகே னித்யந்வயஃ ....................................................*

## எட்டாம்பாட்டு.

உரைக்கின்றமுக்கட்பிரான்யானேயென்னு முரைக்கின்றதிசைமுகன்யானேயென்னு, முரைக்கின்றவமரரும்யானேயென்னு முரைக்கின்றவமரர்கோன்யானேயென்னு, முரைக்கின்றமுனிவரும் யானேயென்னு முரைக்கின்றமுகில்வண்ணனேறக்கொலோ, வுரைக்கின்றவுலகத்தீர்க்கென்சொல்லுகே னுரைக்கின்றவென்கோமளவொண்கொடிக்கே.

### ஆறாயிரப்படி.

( உரைக்கின்ற ) ஜகத்ப்ரதாநராக சாஸ்த்ரங்களிற்சொல்லப்படுகிற சதுர்முகப்ரமுகரும் நானிட்ட வழக்கென்றாநின்றாள். காலதத்வமுள்ளதனையும் பேசினாலும் பேசிமுடிக்கவொண்ணாத வழகையுடையவனாவேசித்தாளே. அதி லோகமான பேச்சைப் பேசுவதுஞ்செய்து, துஃகஸஹையுமன்றிக்கே யிருக்கிற இவ்விலக்ஷணையான பெண்பிள்ளைக்குப்பிறந்த வவஸாதத்தை "சொல்லு, சொல்லு" என்று நிரந்தரமாகச் சொல்லுகிற லௌகிகரான வுங்களுக்கு ஏதென்று சொல்லுவேன் நானென்கிறாள்..........................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜகத்ப்ரதாநராய் ப்ரஹ்மருத்ராதிகளான தேவர்களும் ருஷிகளும் நானிட்ட வழக்கென்னுமென்கிறாள்.

**உரைக்கின்ற - " ஸம்பிவஃ " ( ஸம்பிவஃ ) என்று பகவத்ப்ரகாரமாகச் சொல்லப்படுகிற. முக்கண் - த்ரிநேத்ரனாய். பிரான் - ஈஸ்வரனாக ப்ரஸித்தனானருத்**

ரன். யானே - எனக்கு ப்ரகாரபூதன். என்னும் - என்னாநிற்கும். உரைக்கின்ற - "ஸப்ரஹ்மா" (ஸப்ரஹ்மா) என்று சொல்லப்படுகிற. திசைமுகன் - சதுர்முகன். யானே - எனக்கு ப்ரகாரபூதன். என்னும் - என்னும். அப்படியே, உரைக்கின்ற - பகவத்விபூதியா, "தக்ஷாதயஃ" (தக்ஷாதயஃ) என்று சொல்லப்படுகிற அமரரும் - தஸப்ரஜாபதிகளான தேவர்களும். யானே - எனக்குவிபூதிபூதர். என்னும் - என்னும். உரைக்கின்ற - "ஸேந்த்ரஃ" (ஸேந்த்ரஃ) என்றுசொல்லப்பட்ட. அமரர்கோன் - த்ரயஸ்த்ரிம்ஸத்கோடி தேவதாதிபதியான இந்த்ரனும். யானே - எனக்கு ப்ரகாரபூதன். என்னும் - என்னும். உரைக்கின்ற - "தேவர்ஷீஞ்சநாரதஃ" (தேவர்ஷீஞ்சநாரதஃ) இத்யாதிகளிலே சொல்லுகிற. முனிவரும் - ருஷிகளும். யானே - நானிட்டவழக்கு. என்னும் - என்னும். உரைக்கின்ற - "நீலதோயதமத்யஸ்த்தா" (நீலதோயதமத்யஸ்த்தா) என்று வேதாந்தங்களிலேசொல்லுகிற. முகில் - காளமேகநிபஸ்யாமமான. வண்ணன் - வடிவையுடையவன். ஏறக்கொலோ - ஆவேசித்தபடியோ. உரைக்கின்ற - "சொல்லு, சொல்லு" என்றுரைக்கின்ற. உலகத்தீர்க்கு - லோகத்தாரான வுங்களுக்கு. உரைக்கின்ற - லோகமர்யாதையல்லாத பேச்சையுடையளாய். என், கோமளம் - ஸுகுமாரமாய். ஒண் - தர்ஸநீயமான. கொடிக்கு - கொடிபோலே ஆஸ்ரய வ்யதிரேகத்தில் தறைப்படும்படியான இவளுக்குண்டான. இவை - இஸ்ஸ்வபாவங்களை. என் - ஏதாக. சொல்லுகேன் - சொல்லுவேன்..........................................................*

## ௩-ம் - எட்டாம் பாட்டு.

ஜகத்ப்ரதாநரான ப்ரஹ்மாதிகள் நானிட்ட வழக்கென்று நின்றாளென்கிறாள்.

(உரைக்கின்ற) வேதத்திலே பகவத்விபூதியைப் பரக்கச்சொல்லுகிறவிடங்களிலேயாதல், அர்த்தவாத ப்ரகரணங்களிலேயாதல், தாமசபுராணங்களிலேயாதல் சொல்லப்படுமவனாய், ஸ்வகோஷ்டிக்குபகாரகனான ருத்ரன் நானிட்ட வழக்கென்று நின்றாள். "ருத்ராணாம்ஸங்கரஸ்சாஸ்மி" (ருத்ராணாம்ஸங்கரஸ்சாஸ்மி) என்று ஈஸ்வரனுக்கு ப்ரகாரமாகச் சொல்லப்பட்டவனென்றுமாம்.

(உரைக்கின்றதிசைமுகன்) "விரூபாக்ஷாய ப்ரஹ்மணஃபுத்ராய ஜ்யேஷ்டாய ஸ்ரேஷ்டாய" (விரூபாக்ஷாய ப்ரஹ்மணஃ புத்ராய ஜ்யேஷ்டாய ஸ்ரேஷ்ட்டாய) என்கிறபடியே, அவன்றனக்குங்கூட ஜநகனாக ப்ரமாணப்ரசித்தனாயிருக்கிறசதுர்முகனும் நானிட்டவழக்கென்கிறாள்.

(அமரர்) ப்ரஹ்மாவாலே ஸ்ருஷ்டராய், நித்யஸ்ருஷ்டிக்குக்கடவராக சாஸ்த்ரங்களிலே சொல்லப்படுகிற தஸப்ரஜாபதிகளும் நானிட்டவழக்கென்னும். (உரைக்கின்றவமரரென்று) "ப்ரஹ்மாதக்ஷாதயஃ" (ப்ரஹ்மாதக்ஷாதயஃ) என்று பகவத் ப்ரகாரமாகச் சொல்லப்படுகிறவென்றுமாம்.

(உரைக்கின்றவமரர்கோன்) "நகிரிந்த்ரஸ்த்வதுத்தரஃ" (நகிரிந்த்ரஸ்த்வதுத்தரஃ) என்று சொல்லப்படுகிறவனென்னுதல், "தேவாநா

ஃவேஹிவாஸவஃ'' (தேவாநாமஸ்மிவாஸவ:) என்று ப்ரகாரமாகச்சொல்லப்படுகிறவனென்னுதல்.

(முனிவரும்) வேதார்த்தத்தை ஸ்மரித்து, ஜகத்துக்குக் கர்த்தவ்யங்களைச்சொல்லும் மந்வாதிகளும் நானிட்டவழக்கென்னும். (முகில் வண்ணன்) "நீலதோயதமத்யஸ்தா'' (நீலதோயதமத்யஸ்த்தா) என்று வர்ஷுக வலாஹகமாகச் சொல்லப்படுகிற வென்னுதல். வார்த்தை சொல்லுவதாய், கழுத்தே கட்டளையாக நீரைமுகந்து, மின்னி, முழங்கி, வில்லிட்டுவருவதொரு மேகம்போலே வடிவழகையுடைய சர்வேஸ்வரன் வந்தாவேசித்தானோ !, அறிகிறிலேன்.

(உரைக்கின்றவுலகத்திற்கு) சிலவற்றைச்சொல்லுமித்தனையாய், "சொல்லலாம், சொல்லவொண்ணாது'' என்று பாராதே, "சொல்லு, சொல்லு'' என்றலைக்கிற லௌகிகரான வுங்களுக்கு நானெத்தைச சொல்லுவது. (உரைக்கின்றவித்யாதி) அதுவும் சொல்லியொழிவேனிறே வார்த்தை சொல்லிற்றிலளாகில். கோமளமென்கையாலே-சௌகுமார்யத்தைச் சொல்லிற்று. கொடியென்கையாலே- "பதிஸம்யோகஸுலபம்வய:'' (பதிஸம்யோகஸுலபம்வய:) என்கிறபடியே ஒரு கொள் கொம்போடே சேராதபோது தறைப்படும் பருவமென்கை.....*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (உரைக்கின்றவித்யாதி)

"உரைக்கின்ற'' என்றதுக்கர்த்தத்வயம் - பரனாகச் சொல்லப்படுகிறவென்னுதல், பகவத்ப்ரகாரபூதனாகச் சொல்லப்படுகிற வென்னுதல். இந்தவர்த்தத்வயத்தையு மடைவே யருளிச்செய்கிறார் (வேதத்திலேயித்யாதியாலும், ருத்ராணாமித்யாதியாலும்) பகவத்விபூதியைப் பரக்கச்சொல்லுகிற விடங்களாவன-"நஸந்நசாஸச்சிவஏவகேவல:'' (நஸந்நசாஸச்சிவஏவகேவல:) இத்யாதிகள். அர்த்தவாதப்ரகரணங்களாவன- "ஏகஏவருத்ரோநத்விதீயாயதஸ்த்தே'' (ஏகஏவருத்ரோநத்விதீயாயதஸ்த்தே) இத்யாதிகள். "ருத்ராணாம்ஸங்கரஸ்சாஸ்மி வித்தேஸோயக்ஷரக்ஷஸாம் । வஸூநாம்பாவகஸ்சாஸ்மி மேருஸ்ஸிகரிணாமஹம்'' (ருத்ராணாம்ஸங்கரஸ்சாஸ்மி வித்தேஸோயக்ஷரக்ஷஸாம் । வஸூநாம்பாவகஸ்சாஸ்மி மேருஸ்ஸிகரிணாமஹம்) இதி கீதாஸுதஸமே.

(ப்ரஹ்மண:புத்ராயேத்யாதி) ஸாமவேதே.

"ப்ரஹ்மாதக்ஷாதய:காலஸ்ததைவாகிலஜந்தவ: । விபூதயோஹரேரேதாஜகதஸ்ஸ்ருஷ்டிஹேதவ:'' (ப்ரஹ்மாதக்ஷாதய:காலஸ்ததைவாகிலஜந்தவ: । விபூதயோஹரோதாஜகதஸ்ஸ்ருஷ்டிஹேதவ:) இதி ஸ்ரீவிஷ்ணு புராணே.

(நகிரிந்த்ரத்வதுத்தரஇதி) ருக்ஸம்ஹிதாயாம் த்ருதீயாஷ்டகே. ஹே இந்த்ர, த்வதுத்தர:, கி: - கஸ்சந, நேத்யர்த்த:. "வேதாநாம்ஸாமவேதோஸ்மி

ஜெவாநாமஸ்மிவாஸவஃ। ஐந்த்ரியாணாம் மநஶ்சாஸ்மி" (வேதாநாம்ஸாமவேதோ ஸ்மி தேவாநாமஸ்மிவாஸவ:। இந்த்ரியாணும் மநஶ்சாஸ்மி) இத்யாதி கீதாஸூ க்தமமே.

உரைக்கின்றமுனிவரும் - சாஸ்த்ரங்களைத் தாந்தாம் சொல்லுகிறமுனிகளு ம். "உரைக்கின்ற" என்றதுக்கு சொல்லப்படுகிறவென்று கீழெல்லாமர்த்தம்; இ ங்கே, சொல்லுகிறவென் றர்த்தங் கண்டுகொள்வது.

"உரைக்கின்ற" என்றமாத்ரத்துக்கர்த்தாந்தரம் (வார்த்தைசொல்லுவதா யித்யாதி) கழுத்தே கட்டளையாக - கண்டபர்யந்தமாக. மேகத்தை வர்ணித்துச் சொன்னது - "முகில்" என்கையாலே அர்த்தாத்ஸித்தம்.

உரைக்கின்றவுலகத்தீர்க்கு - "சொல்லு, சொல்லு" என்றுரைக்கிற லௌ கிகரான வுங்களுக்கு.

உரைக்கின்ற வென் கோமளவொண்கொடிக்கு - உல்லோகமான வார்த்தை யைச்சொல்லுகிற, ஸுகுமாரையாய், தர்ஶநீயமான கொடிபோலேயிருக்கிறவென் மகளுக்கு. உண்டான ஸ்வபாவங்களென்று கூட்டுவது. (வார்த்தைசொல்லிற்றில ளாகில்) பகவத்விபூதியைப் பரக்கச் சொல்லிற்றிலளாகில். ஆகையா லீத்ருஶவை பவமென்னால் சொல்லப்போகா தென்று கருத்து. "பதிஸம்யோகஸுலபம்வயோத்ருஷ்ட்வா ஜசமேபிதா। சிந்தார்ணவகதஃபாரம் நாஸஸாதாப்லவோயதா" (பதிஸம்யோகஸுலபம்வயோத்ருஷ்ட்வாசமேபிதா। சிந்தார்ணவகதஃபா ரம் நாஸஸாதாப்லவோயதா) இத்யயோத்யாகாண்டே அநஸூயாம் ப்ரதிஸீதா.

உரைக்கின்ற முக்கட்பிரானித்யாரப்ய, உலகத்தீர்க்கு - உரைக்கின்ற வென் கோமளவொண்கொடிக்கு - என்சொல்லுகேனித்யந்வயஃ. ..........................*



## ஒன்பதாம்பாட்டு.

கொடியவினையாதுமிலனேயென்னுங் கொடியவினையாவேனும்யா னேயென்னுங், கொடியவினைசெய்வேனும்யானேயென்னுங் கொடியவி னைதீர்ப்பேனும்யானேயென்னுங், கொடியானிலங்கைசெற்றேனேயென் னுங் கொடியபுள்ளுடையவனேறக்கொலோ, கொடியவுலகத்தீர்க்கிவை யென்சொல்லுகேன் கொடியேன்கொடியென்மகள்கோலங்களே.

### ஆறுயிரப்படி.

(கொடியவினை) கர்மவஶ்யரை நலியுமாபோலே நலியக்கடவதா ய், கொடிதானகர்மங்க ளெனக்கொன்றுமில்லையென்னும். அவைநானி ட்டவழக்கென்னும். ப்ரதிகூலர்க்குக் கொடிதானபாபத்தை விளைப்பே ன்நானென்னும். அநுகூலர்க்குக் கொடிதானவினையைத் தீர்ப்பேனும்நா னென்னும். கொடியானிலங்கையை யொருபடியழித்தேனென்னும். ப்ர திபக்ஷத்துக்குக் கொடியனான பெரியதிருவடியை வாஹநமாகவுடையவ ன் வந்தேறினனே. இப்படிபடுகைக்கீடான பாபத்தைப்பண்ணின வெ

ன்னுடையமகளுடைய வொருப்பாடுகளை "சொல்லு, சொல்லு" என்று மிகவுமலேக்கிற வுங்களுக்கென்னென்று சொல்லுவேனென்கிருள்...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், க்ரூரமான கர்மப்ரகாரங்களெல்லாம் நானிட்டவழக்கென்னுமென்கிருள்.

கொடிய-கர்மவஶ்யரான பத்தசேதநரைக்கண்ணற்றுநலியும் கொடுமையையுடைத்தான. வினை-கர்மம். யாதும்-ஒன்றும். இலன் - "நமாம்கர்மாணிலிம்பந்தி" (நமாம்கர்மாணிலிம்பந்தி) என்கிறபடியே எனக்கில்லை. என்னும் - என்னுகிற்கும். அந்தக்ரூரகர்மமானதென்நிக்ரஹமாகையாலே, கொடியவினை-அது. ஆவேனும்-ஆகிறேனும். யானே-நானே. என்னும்-என்னும். "தாநஹம்த்விஷதः" (தாநஹம்த்விஷதः) என்கிறப்ரதிகூலரானரை, கொடியவினை-அந்தக்கர்மங்களிலேமூட்டி. செய்வேனும்-செய்விப்பேனும். யானே-நானே. என்னும்-என்னும். கொடியவினை-அந்தக்கர்மத்தை. தீர்ப்பேனும்-"மோக்ஷயிஷ்யாமி" (மோக்ஷயிஷ்யாமி) என்று ஆஶ்ரிதர்க்குப்போக்குவேனும். யானே-நானே. என்னும்-என்னும். கொடியான்-க்ரூரகர்மாவான ராவணனுடைய. இலங்கை-லங்கையை. செற்றேன் - அழித்தேன். என்னும்-என்னும். கொடிய-ஆஶ்ரிதவிரோதிகளுக்கு ம்ருத்யுஸமனான. புள் -பெரியதிருவடியை. உடையவன்-வாஹநமாகவுடையவன். ஏறக்கொலோ - ஆவேசித்தபடியோ. கொடிய-"நமக்கிதுநிலமன்று" என்றிராதே அதிநிர்ப்பந்தம்பண்ணுகிற கொடுமையையுடைய. உலகத்தீர்க்கு-லோகத்தீர்க்கு. கொடியேன்-இவளையிப்படி விக்ருதையாகக்காணவைத்த பாபத்தின்கொடுமையையுடையேனான. என்-என்னுடைய. கொடி-கொடிபோலேமெல்லியளான. மகள்-பெண்பிள்ளையினுடைய. கோலங்கள் - தர்ஶநீயசேஷ்டிதங்களான. இவை-இவற்றை. என்-என்னென்று. சொல்லுகேன்-சொல்லுவேன்.

கொடியபுள்ளென்று - கொடியிலேயான புள்ளொன்றுமாம். கோலங்களென்று - ஒருப்பாடாகவுமாம்.........................................................*

## ௯-ஒன்பதாம்பாட்டு.

அகர்மவஶ்யத்வ ப்ரமுகமான பகவதுக்திகளைத் தன்னினவாகப் பேசாநின்ருளென்கிருள்.

(கொடியவினையாதுமிலனேயென்னும்) கர்மவஶ்யரைக்கண்ணற்று நலியும் கர்மங்களெனக்கொன்று மில்லையென்னும்.

"அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி," (அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி) "நமாம்கர்மாணிலிம்பந்தி" (நமாம்கர்மாணிலிம்பந்தி) என்றவன்படியைத்தான் சொல்லாநின்ருள். "நாட்டிற்பிறந்துபடாதனபட்டு" என்கிறவிடம்-ஐச்சிகமிறே.

(ஆவேனும்) நானிவற்ருல் ஸ்பர்ஶிக்கப்படாதமாத்ரமேயாய்; அவைதா மெனக்குப் புறம்பாயிருக்கிறதோ; அப்பாபமாகிறது - என்னுடைய நிக்ரஹமன்ருேவென்னும்.

(செய்வேனும்) ஆஶ்ரிதவிரோதிகளுக்குக் கொடியதான பாபத்தைவிளைப்பேனும் நானேயென்னும். ஆஶ்ரிதவிரோதிகளைப் பாபங்களிலே மூட்டுகை-செய்கையாகிறது. "தாநஹம்த்விஷதஃக்ரூராந்" (தாநஹம்த்விஷதஃக்ரூராந்.)

(தீர்ப்பேனும்) என்னையாஶ்ரயித்தவர்களுக்கு அவைவந்துகிட்டாதபடி, "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்பேனும் நானென்னும்.

(கொடியானிலங்கை செற்றேனேயென்னும்) இவ்விடத்தில், "கொடியானென்கிறவிடம்-திருத்தாயார்வார்த்தைகாண்" என்றருளிச்செய்வர் ஜீயர், எதிரிகளை யிவனென்றுகமதித்திருந்தானாகாமைக்கு; அவனாலே ஆவிஷ்டையிறேயிவள். * சுரிகுழல்கனிவாய்த்திருவினைப்பிரித்த கொடுமையுடையவனென்னக்கடவதிறே. (கொடியபுள்) ஆஶ்ரிதவிரோதிகளுக்கு ம்ருத்யு சத்ருஶமான பெரியதிருவடியை வாஹநமாகவுடைய சர்வேஶ்வரன்வந்தாவேசித்தானே.

(கொடியவுலகத்தீர்க்கு) "கேட்கவேணும்" என்று திரண்டுகிடக்கிற வுலகத்தீர்க்கென்னுதல்; "ஶக்யம், அஶக்யம்" (ஶக்யம், அஶக்யம்) என்று பாராதே, "சொல்லு, சொல்லு" என்று நிர்ப்பந்தித்து ஸ்வார்த்தபரைகளாயிருக்கிற வுங்களுக்கெத்தைச்சொல்லுவதென்னுதல். (கொடியேன்) இவளநுகரித்துச்சொல்லுகிற பாசுரங்களைக்கேட்கவேண்டும்படியான பாபத்தைப்பண்ணின என்மகள் தர்ஶநீயமான ப்ரவ்ருத்திகளையென்னுதல், ஒருப்பாடுகளையென்னுதல்... ... .........*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (கொடியவித்யாதி) தன்னினவாக-தன்னதுகளாக.

"கொடிய" என்றதுக்குபாவம் (கர்மவஶ்யனாயித்யாதி) கண்ணற்று-நிர்த்தயமாக. (அநஶ்நந்நந்யஇதி) "த்வாஸுபர்ணா" (த்வாஸுபர்ணா) இத்யாதி, ருக்ஸம்ஹிதாயாம். ஸுபர்ணௌ - சோபநகதிசாதநௌ. சோபநஜ்ஞாநாவித்யர்த்தஃ. ஸயுஜௌ-ஸமாநாபஹதபாப்மத்வாதிகுணகௌ. ஸகாயௌ-சேஷசேஷிபாவஸம்பந்தயுக்தௌ. அவதாரதசையிலே துஃகித்வமுண்டாகச் சொல்லுகிறதேயென்ன (நாட்டிலித்யாதி)

"அகர்மவஶ்யந்" (அகர்மவஶ்யந்) என்றுசொல்லிவைத்து. "கொடியவினைசெய்வேன்" என்கிறவிதுவிருத்தமன்றோவென்ன (ஆஶ்ரிதவிரோதிகளுக்கித்யாதி) விவரணம் (ஆஶ்ரிதவிரோதிகளையித்யாதி) செய்வேனும்-செய்விப்பேனும். அப்படி மூட்டுமோவென்ன (தாநஹமித்யாதி)

பெண்பிள்ளை சர்வேஶ்வரனை யநுகரித்துச்சொல்லுகிறாளாகையாலே, இவள்சொன்னதே யவன்சொன்னதாமென்றுவிவக்ஷித்து, (எதிரிகளை யிவனென்றுகமதித்திருந்தானாகாமைக்கு) என்கிறார். அவனப்படிகொடியனோவென்ன (சுரிகுழலி

த்யாதி ) அழகியகுழலையும் கனிந்தவதரத்தையுமுடைய பிராட்டியைப்பிரித்த க்ரௌர்யத்தையுடையவித்யர்த்தஃ. திருமொழி அஞ்சாம்பத்து ஏழாந்திருமொழி.ஏ ழாம்பாட்டு.

“ கொடியவுலகத்திர்க்கு ” என்றது, “ கொடிய ” என்றத்தைநீட்டி, கோடியவென்றாய், கோடுதல்-வளைதலாய், (திரண்டுகிடக்கிற வுலகத்திர்க்கு) என்றபடி. அன்றிக்கே, கொடியவென்று - க்ரூரரென்றாய், ஸ்வார்த்தபரதையாகிற க்ரௌர்ய த்தையுடையவர்களென்னுதல்.

கோலங்கள்-தர்ஶநீயப்ரவ்ருத்திகளாதல்; கோலுதல் - உத்யோகமாய், ஒரு ப்பாடுகளென்றபடி.

கொடியவினையித்யாரப்ய, உலகத்திர்க்கு - கொடியேன் கொடியென்மகள் கோலங்கள்-இவையென்சொல்லுகேனித்யந்வயஃ. “ ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா । இதி மாம் யோऽபிஜாநாதி கர்மபிர் ந ஸ பத்யதே ” (நமாம்கர்மாணிலிம்பந்திநமேகர்மபலேஸ்ப்ருஹா । இதிமாம்யோபிஜாநாதி கர்மபிர்நஸப த்யதே) இதிகீதாஸுசதுர்த்தே. “ தாநஹம் த்விஷதஃ க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு ” ( தாந ஹம்த்விஷதஃக்ரூராந் ஸம்ஸாரேஷுநராதமான் । க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீ ஷ்வேவயோநிஷு) இதிஷோடஶே. “ ஸர்வதர்மாந் ” ( ஸர்வதர்மாந் ) இத்யா த்யஷ்டாதஶே.......................................................................*

---

## பத்தாம்பாட்டு.

---

கோலங்கொள்சுவர்க்கமும்யானேயென்னுங் கோலமினரகமும்யா னேயென்னுங், கோலந்திகழ்மோக்கமும்யானேயென்னுங் கோலங்கொ ளுயிர்களும்யானேயென்னுங், கோலங்கொடணிமுதல்யானேயென்னுங் கோலங்கொண்முகில்வண்ணனேறக்கொலோ, கோலங்கொளுலகத்திர்க் கென்சொல்லுகேன் கோலந்திகழ்கோதையென்கூந்தலுக்கே.

### ஆறாயிரப்படி.

(கோலங்கொள்) கலப்பற்ற சுகரூபமானஸ்வர்க்கமும், சுககந்தமி ன்றிக்கே துஃகமேயானநரகமும், அபரிச்சிந்ந சுகரூபமானமோக்ஷமும், கர்மாநுகுணமாக தேவாதிஶரீர ப்ரவேஶம்பண்ணக்கடவ வாத்மாக்களு ம், விசித்ரகார்யஜநநசக்தியுக்தையான ப்ரக்ருதியும் நானிட்டவழக்கெ ன்று சொல்லாநின்றாள். சமஸ்தகல்யாணகுணாத்மகனாய், வில்லிட்டுமின் னி தர்ஶநீயமானமேகம்போலேயிருக்கிற திருநிறத்தையுடையவன் வந் தேறினானே. அழகியமாலையையும் மயிர்முடியையுமுடைய வென்மகளு க்குப்பிறந்த வவஸ்த்தைகளை, கேட்கையிலே யொருப்படாநின்றுள்ள வு லகத்திர்க் கென்சொல்லுவேனென்கிறாள்.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்வர்க்கநரகாதிகளான சகலபலங்களும் நானிட்டவழக்கென்னுமென்கிறாள்.

கோலம்-தர்ஶநீயபோக்யதையை. கொள்-உடைத்தான. சுவர்க்கமும்-ஸ்வர்க்கமும். யானேயென்னும். கோலம்-ஒருவைலக்ஷண்யமும். இல்-இன்றியே. நரகமும்-துஃகோத்தரமானநரகமும். யானேயென்னும். கோலம்-நிரதிசயாநந்த ரூபவைலக்ஷண்யத்தாலே. திகழ்-விளங்குவதான. மோக்கமும்-மோக்ஷமும். யானேயென்னும். கோலம்-இவ்வோபலங்களை. கொள் - பற்றக்கோலுமொருப்பாட்டையுடைய. உயிர்களும்-ப்ராணிகளும். யானே-நானே. என்னும்-என்னும். கோலம்-இவற்றையடையத் தன்னினைவிலே நிர்வஹிக்குமொருப்பாட்டை. கொள் - உடைத்தாய். தனி-ஸஹாயாந்தரநிரபேக்ஷமான. முதல்-பரமகாரணவஸ்து. யானே - நானே. என்னும்-என்னுநிற்கும். கோலம்-பசுத்தவடிவும் ஸ்புரிக்கிறமின்னும் நாநாவர்ணமான இந்த்ரதநுஸ்ஸுமானகோலத்தை. கொள்-உடைத்தான. முகில்- மேகம்போலேயிருக்கிற. வண்ணன்-வடிவையுடையவன். ஏறக்கொலோ - ஆவேசித்தபடியோ. கோலங்கொள் - "கேட்டல்லதுபோகோம்" என்றொருப்படுகிற. உலகத்தீர்க்கு-உங்களுக்கு. கோலம்-அழகு. திகழ்-விளங்குகிற. கோதை-மாலையையுடைய. என்கூந்தலுக்கு-மயிர்முடியையுடையளான வென்பெண்பிள்ளைக்கு. என்-என்னப்ரகாரமாயிருந்ததென்று. சொல்லுகேன்-சொல்லுவேனோ.............................................*

## ஈடு-பத்தாம்பாட்டு.

ஸ்வர்க்கப்ரமுகமான பதார்த்தங்களெல்லாம் நானிட்டவழக்கென்னுநின்றாளென்கிறாள்.

(கோலங்கொளித்யாதி) சுகரூபமானஸ்வர்க்கம், நிலைநில்லாமையாலே, முகப்பில் தர்ஶநீயதையைப்பற்றச் சொல்லுகிறது. "நரகத்தோடொத்திருக்கச்செய்தே, வாசலிலேகழஞ்சுசெம்மண்பூசியிருக்குமாபோலேகாண்" என்றருளிச்செய்வர்.

(கோலமில்) ஆபாதப்ரதீதியிலங்ஙனு மொன்றின்றியிலேயிருக்கிறநரகமும் நானிட்டவழக்கென்னுநின்றாள்.

(மோக்கமும்) அபுநராவ்ருத்தி லக்ஷணமான மோக்ஷமும் நானிட்டவழக்கென்னுநின்றாள். "கடல்ஞாலம்செய்தேன்" என்று-ஸ்ருஷ்டி தொடங்கி, மோக்கமும்யானேயென்று - மோக்ஷபர்யந்தமாக ஸ்வகார்யமென்கிறாள்.

( கோலங்கொளுயிர்களும் ) நாடகங்கட்டியாடுவாரைப்போலே, தேவனுக, மநுஷ்யனுக; இப்படிநாநாவான சரீரபரிக்ரஹம்பண்ணுகிற ஆத்மாக்களென்னுதல்; ஜ்ஞாநாநந்தலக்ஷணமான ஆத்மாக்களென்னுதல்.

(கோலங்கொள்தனிமுதல்) இதுக்கெல்லாம் காரணமான மூலப்ரக்ருதியைச்சொல்லுதல், சங்கல்ப ரூபஜ்ஞாநத்தைச்சொல்லுதல். விசித்ரகார்யகாரிணியான ப்ரக்ருதியையும், அப்படிப்பட்ட சங்கல்பரூபஜ்

ஞானத்தையும் ப்ரகாசமாகவுடையனாய், சமஸ்தகல்யாணகுணாத்மகனான சர்வேஶ்வரனென்னுதல்; (கோலங்கொள்முகில்வண்ணன்) திருமேனிக்கு மேகத்தையொப்பாகச்சொல்லும்போது, அலங்கரித்துச்சொல்லவேணுமாயிற்று. மின்னிமுழங்கி வில்லிட்டுவந்து தோற்றினபோதாயிற்று ஒப்பாகச்சொல்லலாவது.

(கோலங்கொளுலகத்திர்க்கு) "கேட்கவேணும்" என்றொருப்பட்டிருக்கிற வுலகத்திர்க்கு. அன்றிக்கே, மயிருமுகிரும்பேணி, உடம்புபேணிவந் தலங்கரித்துநிற்கிற வுங்களுக்கு நானெனத்தைச்சொல்லுவது. (கோலமித்யாதி) அழகியமாலையையும் மயிர்முடியையுமுடைய வென்மகளுக்குப்பிறந்த வவஸ்த்தைகளை. இவள்மாலையையும் மயிர்முடியையும் கண்டார்படுகிறபாட்டைத் தான்பட்டு அநுகரித்துச்சொல்லுகிறவற்றை நானெனத்தைச்சொல்லுவது.......................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (கோலங்கொளித்யாதி)

கோலங்கொள்சுவர்க்கம் - சுகத்தையுடையஸ்வர்க்கம். கோலம்-சுகம். பரமபதம்போலே சுகரூபமோவென்ன; மேலே "கோலந்திகழ்மோக்கம்" என்று விசேஷிக்கையாலே யதில்லையென்கிறார் (நிலைநில்லாமையாலேயித்யாதி) நிலைநில்லாமையாலே-நிலைநில்லாததுமாய், து:கமிஶ்ரமுமான சுகத்தையுடைத்தாகையாலே. முகப்பில் தர்ஶநீயதை - ஆபாததஃ உண்டான தர்ஶநீயதை. "முகப்பில்தர்ஶநீயதையைப்பற்ற" என்றதுக்கு ஆப்தசம்வாதம் (நரகத்தோடித்யாதி) (அருளிச்செய்வர்) ஜீயரொன்றபடி.

கோலமில்நரகமும் - சுகலேசமுமின்றிக்கே யிருக்கிறநரகமும்.

கோலந்திகழ்மோக்கமும் - நிரதிசயாநந்தரூபத்வாதி வைலக்ஷண்யத்தாலே விளங்குகிற மோக்ஷமும். அபுநராவ்ருத்தி லக்ஷணமானவென்றது- தாத்பர்யார்த்தம். (அபுநராவ்ருத்திலக்ஷணமான) என்றத்தோடே, சுகைகதாநமாயென்றுகூட்டுவது.

(கோலங்கொளுயிர்களும்) கோலம்-சரீரம். தேவாதிநாநாசரீரங்களையுடையவாத்மாக்களும். த்விதீயார்த்தத்துக்கு, "கோலம்" என்று- அழகு. ஆத்மாவுக்கழகாவது-ஜ்ஞாநாநந்தங்களை ஸ்வரூபமாகவுடையனாகை.

இதுக்கெல்லாம் - ப்ரத்யக்ஷபரித்ருஶ்யமான ஜகத்துக்கெல்லாம். ப்ரக்ருதிக்கும், சங்கல்பரூபஜ்ஞாநத்துக்கு மழகேதென்ன, விசித்ரகார்யகரத்வமென்கிறார் (விசித்ரேத்யாதி) "கோலங்கொள்தனிமுதல்" என்றதுக்குமூன்றுமர்த்தம் (சமஸ்தகல்யாணகுணேத்யாதி) ஆக, "தனிமுதல்" என்று - ப்ரக்ருதியாதல், சங்கல்பமாதல், ஈஶ்வரனாதல். ப்ரக்ருதியையும் சங்கல்பத்தையுஞ்சொன்னபோது, "கோலம்" என்று - விசித்ரகார்யகரத்வத்தைச்சொல்லுகிறது. ஈஶ்வரனைச்சொன்னபோது, கோலமென்று - கல்யாணகுணங்களைச்சொல்லுகிறது.

"கோலங்கொள்முகில்வண்ணன்" என்கிறவிடத்தில், கோலமென்று-பசுத்தவடிவும் ஸ்புரிக்கிறமின்னும் நாநாவர்ணமான தநுஸ்ஸுமான வலங்காரத்தைச் சொல்லுகிறது.

(கோலங்கொளுலகத்தீர்க்கு) கோலுதலை-ஒருப்பாட்டை, உடைய உலகத்தீர்க்கென்னுதல்; ஒருப்பாடு - உத்யோகம். அலங்காரத்தையுடைய வுலகத்தீர்க்கென்னுதல். கோலம்-அலங்காரம். ஒருப்பட்டிருக்கிற-யத்நப்பட்டிருக்கிற.

கோதை-மாலை. கூந்தல்-மயிர்முடி. "கூந்தலுக்கு" (பிறந்தவவஸ்த்தைகளை) என்று கூட்டுவது. இதுக்குபாவம் (இவள்மாலையையுமித்யாதி)

கோலங்கொளித்யாரப்ய, உலகத்தீர்க்கு - கூந்தலுக்கு - என்சொல்லுகேனித்யந்வயः.....................................................................*



# பதினொன்றும்பாட்டு.

கூந்தன்மலர்மங்கைக்குமண்மடந்தைக்குங்குலவாயர்கொழுந்துக்குங்கேள்வன்றன்னை, வாய்ந்தவழுதிவளநாடன்மன்னு குருகூர்ச்சடகோபன்குற்றேவல்செய், தாய்ந்ததமிழ்மாலையாயிரத்துளிவையுமொருபத்தும் வல்லாருலகி, லேந்துபெருஞ்செல்வத்தராய்த்திருமாலடியார்களைப் பூசிக்கநோற்றார்களே.

## ஆறாயிரப்படி.

(கூந்தல்) கூந்தல்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்குங் குலவாயர்கொழுந்துக்கும் கேள்வன்றன்னை யநுகாரத்தாலே கிட்டின மன்னுகுருகூர்ச்சடகோபன் வாசிககைங்கர்யமாய் ஆராய்ந்துசொன்ன வாயிரத்திலிப்பத்தும் வல்லவர்கள் லோகத்திலெல்லாரும் கொண்டாடும்படியான பெருஞ்செல்வத்தை யுடையராய், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ப்ரியமானவ்ருத்தி பண்ணப்பெறுவரென்கிறார்..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிகற்றார் சர்வலோக ஸம்பாவநீயராய்க் கொண்டு பாகவதகிஞ்சித்காரம்பண்ண இட்டுப்பிறந்தார்களென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

கூந்தல் - "வாசஞ்செய்பூங்குழலாள்" என்கிறபடியே விலக்ஷணமானமயிர்முடியையுடையளாய். மலர் - தாமரைப்பூவில்பிறப்பாலே நிரதிசயபோக்யபூதையாய். மங்கைக்கும் - நித்யயௌவநஸ்வபாவையானலக்ஷ்மிக்கும். மண்மடந்தைக்கும் - இவளோடொத்த ரூபவைலக்ஷண்யத்தையுடைய ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும். குலம் - அபிஜாதரான. ஆயர் - கோபாலர்க்கு. கொழுந்துக்கும் - சிரோபூதையான நப்பின்னைப்பிராட்டிக்கும். கேள்வன்றன்னை - அபிமதனானசர்வேஶ்வரனை யுத்தேசித்து. வாய்ந்த - பாவநாப்ரகர்ஷத்தாலே தத்பாவத்தைக் கிட்டியிருப்பாராய். வழுதிவளநாடன் - வழுதிவளநாட்டுக்கு நிர்வாஹகராய். மன்னு-ஸுஸ்த்திரையான. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். குற்றேவல்-அந்தரங்கவ்ருத்தியாக. செய்து - அநுஷ்டித்து. ஆய்ந்த - ஆராய்ந்துசொன்ன. தமிழ்மாலை - தமிழ்த்தொடையான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இவையுமொருபத்தும்-

"இவையுமொருபத்தே!" என்னும்படி விலக்ஷணமான விவைபத்தையும். வல்லார் - பாவவ்ருத்தியோடே யப்யசிக்கவல்லவர்கள். உலகில் - லோகத்திலே. ஏந்து- சிரஸா வஹிக்கும்படியான. பெருஞ்செல்வத்தராய் - ஸ்ரீவைஷ்ணவசம்பத்தை யுடையராய்க்கொண்டு. திருமால்- ஸ்ரியஃபதியான சர்வேஸ்வரனுக்கு. அடியார்களை- சேஷபூதரான பாகவதர்களை. பூசிக்க - ஆராதிக்கைக்கு. நோற்றார்கள் - பாக்யம் பண்ணினவர்களாவர்கள்.

ஏய்ந்தவென்று பாடமாய் - பொருந்தினவென்றுமாம். இது - எண்சீராசிரியவிருத்தம்.....................................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் – இத்திருவாய்மொழி யப்யசிக்கவல்லவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக் கடிமைசெய்யப் பெறுவர்களென்கிறார்.

( கூந்தல்மலர்மங்கைக்கும் ) சர்வேஸ்வரனுடைய ஐஸ்வர்யத்துக்கும் ஹேதுபூதையாயிருக்கும் பெரியபிராட்டியார். "விஷ்ணோஸ்ஸ்ரீ:" ( விஷ்ணோஸ்ஸ்ரீ: ) என்கிறபடியே, சர்வேஸ்வரனுடைய சம்பத்தாயிருக்கிற பெரியபிராட்டியார். அதுக்கு விளைபூமியாயிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டி. அதினுடைய பலரூபையாயிருக்கும் நப்பின்னைப்பிராட்டி. "ஸ்ரியாஸார்த்தம் ஜகத்பதி:" ( ஸ்ரியாஸார்த்தம்ஜகத்பதி:. ) ( கேள்வன்றன்னை ) இவர்களுக்குப் பதியாயுள்ளவனை. இத்தால்-ஒரு அவதாரமாத்ரமன்றிக்கே, உபயவிபூதிநாதனை பூர்ணவிஷயத்திலே யநுகரிக்கிறவொன்றுதோற்றியிருக்கிறபடி. ( வாய்ந்த ) வாய்க்கையாவது – கிட்டுகை. கிட்டின. அநுகாரத்தாலே கிட்டினபடியை நினைக்கிறது. ( குற்றேவல்செய்து ) ஆழ்வார் அவன்றிருவடிகளிலே அந்தரங்கவ்ருத்திகள் பண்ணினபடியாயிற்றிவைதாம். வாசிகமாக வடிமைசெய்தபடி யாயிற்று. அநுகார மடிமையானபடி யெங்ஙனேயென்னில்; அப்படியாகத்தட்டென், கொள்ளுகிறவன்கருத்தாலே. அவனுகப்பேயிறே அடிமையாலும் புருஷார்த்தம். "நம்முடைய விஸ்லேஷத்திலநுகரித்து தரிக்கவேண்டும்படி சம்சாரத்திலே யிப்படியுண்டாவதே" என்று திருவுள்ளம்போர வுகக்கும், அதடிமையாய்த் தலைக்கட்டுமித்தனை. ( ஆய்ந்ததமிழ்மாலை ) ஆராய்ந்து சொன்ன தமிழ்த்தொடை ஆயிரத்திலு மிப்பத்தை யப்யசிக்க வல்லவர்கள். ( உலகிலேந்துபெருஞ்செல்வத்தராய் ) இந்த லோகத்திலே யெல்லாரும் கொண்டாடும்படி வைஷ்ணவஸ்ரீயையுடையராய். அன்றிக்கே, "நின்னையேதான் வேண்டிநீள்செல்வம் வேண்டாதான்றன்னையே தான்வேண்டும்செல்வம்" என்கிறபடியே, லோகத்திலே முகக்தெழுபானையான நிரவதிகசம்பத்தை யுடையராய்க்கொண்டு. ( திருமாலடியார்களைப்பூசிக்க நோற்றார்களே ) ஸ்ரீமத்புத்ரர்களை யாராதிக்கப் பெறுவர்கள். ஸ்ரியஃபதியடியாரை யாராதிக்கையாவது – இவர் அநுகாரத்தாலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ப்ரியகரரானாற்போலே, இது கற்றார்களும் ஸ்ரீவைஷ்ணவர்க

ளுக்கு ப்ரியகரமானவ்ருத்தி பண்ணப்பெறுவனொன்கை. அதாவது - இவ ரநுகரித்த இப்பாசுரத்தைச் சொல்லுகை. "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்சொன்னேன்" என்னக்கடவதிறே......................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (கூந்தலித்யாதி) "இவையுமோர்பத்தும்வல்லார் - திருமாலடியார்களைப் பூசிக்கநோற்றார்கள்" என்ற பதத்தைக் கடாக்ஷித்து - அவதாரிகை.

அர்த்தாந்தரம் (விஷ்ணோஶ்ஶ்ரீரித்யாதி) பலரும்பை - அநுபவரும்பை. ஸ்ரீபூமிநீளைகளோடே கூடியிருக்குமதுக்கு ப்ரமாணம் (ஶ்ரியாஸார்த்தமித்யாதி) ஶ்ரியாஸார்த்தமென்றது - பூமிநீளைகளுக்கு முபலக்ஷணம்; "𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑍇𑌤𑍁𑌪𑌰𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌶𑍍𑌰𑍀𑌸𑌹𑌾𑌯𑍋𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃 । 𑌉𑌭𑌾𑌭𑍍𑌯𑌾𑌂𑌭𑍂𑌮𑌿𑌨𑍀𑌲𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑍇𑌵𑌿𑌤𑌃" (வைகுண்டேதுபரேலோகே ஸ்ரீஸஹாயோஜநார்த்தநஃ । உபாப்யாம்பூமிநீளாப்யாம்ஸேவிதஃ) என்னக்கடவதிறே. "𑌨𑌿𑌤𑍍𑌯𑍈𑌵𑍈𑌷𑌾𑌜𑌗𑌨𑍍𑌮𑌾𑌤𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌰𑌨𑌪𑌾𑌯𑌿𑌨𑍀 । 𑌯𑌥𑌾𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑍋𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌸𑍍𑌤𑌥𑍈𑌵𑍇𑌯𑌂𑌦𑍍𑌵𑌿𑌜𑍋𑌤𑍍𑌤𑌮" (நித்யைவைஷாஜகந்மாதாவிஷ்ணோஶ்ஶ்ரீரநபாயிநீ । யதாஸர்வகதோவிஷ்ணுஸ்ததைவேயம் த்விஜோத்தம) இதி ப்ரதமேம்ஶேஷ்டமே. "(𑌯𑌥𑍇𑌤𑌿) 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑍋𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃, 𑌯𑌥𑌾 - 𑌯𑌤𑍍𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃, 𑌇𑌯𑌮𑌪𑌿, 𑌤𑌥𑌾 - 𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍇𑌤𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌤𑍍𑌵𑌸𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑌿𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌮𑌤𑌿𑌦𑍇𑌶𑌃. 𑌅𑌥𑌵𑌾, 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑌿𑌭𑍁𑌤𑍍𑌵𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃, 𑌅𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌶𑌕𑍍𑌤𑌿𑌵𑌶𑌾𑌤𑍍, 𑌅𑌣𑍁𑌤𑍍𑌵𑍇𑌪𑌿 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌾𑌨𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌤𑍍𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑌮𑍍" ((யதேதி) ஸர்வகதோவிஷ்ணுஃ, யதா - யத்ஸ்வபாவஃ, இயமபி, ததா - தத்ஸ்வபாவேதி விஷ்ணோஸ்ஸர்வகதத்வ ஸத்யஜ்ஞாநாதி ஸ்வரூபகல்யாண குணாநாமதிதேஶஃ. அதவா, பகவாந் விபுத்வேநஸர்வகதஃ, அஸ்யாஸ்து ஶக்திவஶாத், அணுத்வேபி தத்ர தத்ர ஸந்நிதாநாத் ஸர்வகதத்வ முக்தம்) இதி ஸ்ரீவிஷ்ணு சித்தீயம். "𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑍇𑌤𑍁𑌪𑌰𑍇𑌲𑍋𑌕𑍇𑌶𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑌾𑌰𑍍𑌧𑌂𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿𑌃 । 𑌆𑌸𑍍𑌤𑍇𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑌕𑍍𑌤𑍈𑌰𑍍𑌭𑌾𑌗𑌵𑌤𑍈𑌸𑍍𑌸𑌹." (வைகுண்டேதுபரேலோகேஶ்ரியாஸார்த்தம்ஜகத்பதிஃ । ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ.) இதி ஶைவே.

ப்ரத்யக்ஷமாகக் கிட்டினாரோ வென்ன (அநுகாரத்தாலேயித்யாதி) ஈஶ்வரனைக்கிட்டினபடியை இத்யர்த்தஃ. அந்தரங்கவ்ருத்தியேதென்ன (வாசிகமாகவித்யாதி) வாசிகமாக வடிமைசெய்தபடியாயிற்று - அநுகார முகத்தாலே வாசிகமாக வடிமைசெய்தபடியாயிற்று. கொள்ளுகிறவன் கருத்தாலே யடிமையாம் ப்ரகாரமேதென்ன (அவனுகப்பேயிறேயித்யாதி) இதவனுக் குகப்பானபடியைக் காட்டுகிறார் (நம்முடையவித்யாதி)

ஏந்து - எல்லாராலும் கொண்டாடப்படுகிறவென்னுதல், முகந்தெழுபானை போலே யுத்தரோத்தர மபிவ்ருத்தமாய் வருகிற வென்னுதல். முகந்தெழுபானையாவது - ஜலத்தைமுகந்து மேலேயெழுகிற வேற்றப்பானை. "ஏய்ந்த" என்றுபாடமானாலும் - அர்த்தமிதுவே. ஏந்துகை - அங்கீகரிக்கையாய், கொண்டாடுகை. "செல்வம்" என்று - வைஷ்ணவஸ்ரீயாதல், த்ருஷ்டைஶ்வர்யமாதல். இப்பாசுரத்தைச் சொன்னவர்களுக் குகப்பாமோவென்ன (தொண்டர்க்கித்யாதி)

(நின்னையேதான்வேண்டியித்யாதி) உன்னையே வேண்டி நிரவதிகஸம்பத்தைக் காற்கடைக்கொண்டவன்றன்னையே யவசரப்ரதீக்ஷமாய்ப் பார்த்திருக்குமை ஶ்வர்யம்போலே இத்யர்த்தঃ. நின்னையேதானென்று- முழுச்சொல்லாய், உன்னையேயென்றபடி. வேண்டாதான்றன்னையே தானென்றதும் - முழுச்சொல்லு. வேண்டாதவன்றன்னையேயென்றபடி. பெருமாள்திருமொழி ஐந்தாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு. ..............................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( கடல் ஞாலம் )

ஸ்ரஷ்ட்ருத்வாத்யைர்ஜகத்யாঃ ஸகலவிதகலாவர்த்தகத்வேந பூதாந்தர்யாமித்வேந க்ருத்யுத்தரணபரதயா பூபராபாக்ருதேஶ்ச ।
ஶைலேந்த்ரோத்தாரணாத்யைঃ ஸ்வஜநஹிததயா ப்ரஹ்மருத்ரேந்த்ரபாவாத் துஷ்கர்மோந்மூலநாத்யைঃ ப்ராஹார நிஶமஹ ஸ்வம்பவிபோர்யோऽநுபாவி॥ (௫௪)

(ஸ்ரஷ்ட்ருத்வாத்யைர்ஜகத்யாঃ) கடல்ஞாலமித்யாதி-பூமியினுடையஸ்ரஷ்ட்ருத்வ நியந்த்ருத்வாதிகளாலும்; (ஸகலவிதகலாவர்த்தகத்வேந) கற்குங்கல்வியித்யாதி - சர்வவித்யோத்பாதகத்வ ப்ரவர்த்தகத்வாதிகளாலும்; (பூதாந்தர்யாமித்வேந) காண்கின்ற நிலமித்யாதி - ப்ருதிவ்யாதி பூதபஞ்சகாந்தர்யாமித்வத்தாலும்; (க்ருத்யுத்தரணபரதயா) செய்கின்றகிதியித்யாதி - பூதபவிஷ்யத்வர்த்தமாந க்ரியாப்ரவர்த்தகத்வகாரயித்ருத்வாதிகளாலும்; (பூபராபாக்ருதேஶ்ச) திறம்பாமலித்யாதி - பூமிபாரநிராகரணாதிகளாலும்; (ஶைலேந்த்ரோத்தாரணாத்யைঃ) இனவேய்மலையேந்தினேனித்யாதி - கோவர்த்தநோத்தரண வ்ருக்ஷகணமர்த்தநாதிகளாலும்; (ஸ்வஜநஹிததயா) உற்றார்களெனக்கித்யாதி - ஆஶ்ரிதஜநஹிதத்வாதிகளாலும்; (ப்ரஹ்மருத்ரேந்த்ரபாவாத்) உரைக்கின்றவித்யாதி - ப்ரஹ்மருத்ரேந்த்ரநிர்வாஹகத்வாதிகளாலும்; (துஷ்கர்மோந்மூலநாத்யைঃ) கொடியவினை யித்யாதி - துஷ்கர்மநிவாரணாதிகளாலும்; ஆதிசப்தத்தாலே - மேலிற்பாட்டில், "கோலங்கொள்" இத்யாதியாலே சொல்லப்படுகிற சுபாசுபபலப்ரதத்வம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது; இப்படிகளாலெம்பெருமான், ஸ்ரீகோபிமார்களநுகரித்தநுபவித்த க்ரமத்தாலே "கடல்ஞாலம்" என்கிற தஶகத்திலே ஆழ்வாராலே யநும்புத்தியாலே யநுபவிக்கப்பட்டானென்கிறார் ..............................................(௫௪)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

கடல்ஞாலத்தீசனைமுன்காணமல்நொந்தே
உடனவனுகரிக்கலுற்றுத் - திடமாக
வாய்ந்தவனுய்த்தான்பேசும்மாறனுரையதனை
ஆய்ந்துரைப்பாராட்செயநோற்றார். (௪௬)

இதில் - அநுகாரத்தாலே தரிக்கப்பார்க்கிற பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; * எங்ஙனேயோவில் - ப்ரீத்யப்ரீதிஸமமாய்ச் சென்றவிடத்தில், ப்ரீத்யம்ஸம் தலையெடுத்து, தரிக்கைக்கு யோக்யதை யுண்டாயிருக்க, பாக்யஹாநியாலே அப்ரீத்யம்ஸமே தலையெடுத்து, பெற்றல்லது தரிக்கவொண்ணாதபடி ஆற்றாமை கரைபுரண்டு, கோபிமார் க்ருஷ்ணனை யநுகரித்து தரித்தாப்போலே இவருமுபயவிபூதிநாதனை யநுகரித்து தரிக்கப் பார்க்கிறபடியைக் கண்டு கண்கலங்கின பரிவர்ஸந்நிஹிதர்க்கு, விஷண்ணராய்ச் சொல்லுகிற க்ரமத்தை; நாயகனைப்பிரிந்தாற்றாமையாலே தத்ப்ரகாரங்களை யநுகரித்து தரிக்கப்பார்க்கிற தலைவிநிலையை வினவவந்தவர்களுக்கு, திருத்தாயார், "ஸர்வேஶ்வரனாவிஷ்டனானோ" என்று க்லேசத்தாலே சொல்லிச் செல்லுகிறதுறையிலே வைத்தருளிச்செய்கிற * கடல்ஞாலத்திலர்த்தத்தை "கடல்ஞாலத்தீசனை" என்றுதொடங்கியருளிச் செய்கிறானென்கை.

(கடல்ஞாலத்தீசனை) கடல்சூழ்ந்த பூமியிலுள்ளோர்க்கு நியந்தாவாய் அத்தாலே சர்வநிர்வாஹகனான ஸர்வேஶ்வரனை. (முன் காணாமல்நொந்தே) ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரம்பண்ணாமல் நொந்து. அதாவது - "சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருருவென்னெஞ்சுள்ளெழும்" என்றும், "அறிவரியபிரானை" என்றுமருளிச்செய்த மாநஸஸாக்ஷாத்காரமாத்ரமொழிய, ப்ரத்யக்ஷ ஸாக்ஷாத்காரமில்லையென்றபடி. அத்தாலே யவஸந்நராய். (உடனவநுகரிக்கலுற்று) அநந்தரமாக கோபிமார் க்ருஷ்ணனையநுகரித்து தரித்தபடியை யாராய்ந்து தாமுமநுகரித்து தரிப்பதாகத் திருவுள்ளத்திலேயுற்று. (திடமாகவாய்ந்து) த்ருடாத்யவஸாயயுக்தராய். "வாய்ந்தவழுதிவளநாடன்" என்னும்படி பாவபந்தத்தோடே கிட்டி. (அவனாய்த்தான்பேசும்) அதாவது - "கடல்ஞாலம்," "கற்குங்கல்வி," "காண்கின்ற," "செய்கின்ற," "திறம்பாமல்," "இனவேய்மலை," "உற்றார்கள்," "உரைக்கின்ற," "கொடியவினை," "கோலங்கொள்," "கூந்தல்" என்கிறவிவைபத்தும்பத்தாக - ஜகத்ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்கள், சகல வித்யாவேதநமும் வித்யாப்ரவர்த்தகத்வாதிகளும், காரணமான பூதபஞ்சகங்களும், காலத்ரயத்திலுண்டான க்ரியாஜாதங்களும், ஜகத்ரக்ஷண ப்ரமுகமான சேஷ்டிதங்களும், கோவர்த்தநோத்தரணம் முதலான க்ருஷ்ணசேஷ்டிதங்களும், எம்பெருமானாஶ்ரிதாநாஶ்ரித விஷயங்களிலிருக்கு மிருப்பையும், ஜகத்ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதி ப்ரகாரித்வமும், அகர்மவஶ்யத்வப்ரமுகமானவை, ஸ்வர்க்கப்ரமுகமானவையாய், இப்படி உக்தங்களானவையெல்லாம் நானிட்டவழக்கென்று, "யானேயென்னைவாய்ந்தேறப்பேசி" என்னும்படி யவனாக வநுகரித்தப்ரகாரத்தையருளிச்செய்யும். (மாறனுரையதனை) ஆழ்வாரருளிச்செய்த திவ்யஸூக்தியானத்தை. (ஆய்ந்துரைப்பார்) "ஆய்ந்ததமிழ்மாலையாயிரத்துளிவையுமொருபத்து" என்று இதின் வைபவத்தை யாராய்ந்தநுசந்திப்பார். (ஆட்செயநோற்றார்) "திருமாலடியார்களைப் பூசிக்கநோற்றார்கள்" என்னும்படி ஆழ்வார்க்கடிமைசெய்யநோற்றாராவர். "வண்டமிழ்நூற்கநோற்றேனடியார்க்கின்பமாரியே" என்றிறே யவரிருப்பது. "ஸஹஸ்ராராவணஂஸஂஸ்ரவ்யஂ..." (அஹத்வாராவணம்ஸங்க்யேஸபுத்ரம்ஸஹயார்தவம்) "கொடியானிலங்கை செற்றேனேயென்னும்" என்னக்கடவதிறே.

ஐந்தாம்பத்தில் - ஆறாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - சகூ. - பாட்டு - ருoஅ.

கூரு



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஐந்தாம்பத்து

## ஏழாந்திருவாய்மொழி.

### நோற்றநோன்பு – ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(நோற்றநோன்பு) இப்படியெம்பெருமானுடைய ஸ்வரூபரூபசேஷ்டித சர்வைஶ்வர்யோக்திகளை யநுகரித்தத்தினாலு மோராலம்பமலபமாநரான வாழ்வார், "தன்னைவிஶ்லேஷித்து நானிப்பாடுபடாநிற்கச்செய்தே என்னை யெம்பெருமா னுபேக்ஷித்திருக்கிறது, ஸ்வஸம்ஶ்லேஷோபாயரூப கர்மயோகஜ்ஞாந யோகபக்தியோகங்களில்லாமையாகாதே" என்றுபார்த்து;..............................................................*

### பன்னீராயிரப்படி.

ஏழாந்திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியி லநுகாரம் ப்ராப்தியோடு தலைக்கட்டமாட்டாமையாலே ஆர்த்தியேயதிசயித்து, பாவனையால்வந்த அநுகாரத்தாலே அல்பமாஶ்வஸ்தராய் ப்ரபோதம்பிறந்து, இவ்வளவில்; தன்னைலபிக்கைக்குத்தானே யுபாயமானவிவன் முகங்காட்டாதொழிந்தது நம்முடையவநுகாரார்த்தமானபாவனையை யுபாஸநமாகநினைத்து, "அதினுடையசரமதசையிலே வருகிறோம்" என்றுவிளம்பித் தானாக அதிசங்கைபண்ணி, "நம்மாகிஞ்சந்யத்தை முன்னிட்டுக்கொண்டு அபேக்ஷிக்க அவனுபிமுக்யம்பண்ணும்" என்றறுதியிட்டு; அகிஞ்சநருமாசைப்படும்படியான வவனுடைய ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்தையும், அநிஷ்டநிவர்த்தகத்வத்தையும், அதிசயிதபரத்வப்ரகாசகங்களான வஸாதாரணாகாரங்களையும், ஆஶ்ரிதஸம்ரக்ஷணப்ரகாரத்தையும், ஆஶ்ரிதவிரோதிகளை அந்தர்ப்பேதம்பண்ணுமாகாரத்தையும், ஆஶ்ரிதோபகாரத்தால்வந்த ஔஜ்ஜ்வல்யத்தையும், அகிலஸத்தாஹேதுத்வத்தையும், ஆஶ்ரிதவிரோதியவனிட்டவழக்கென்னுமத்தையும், விரோதிநிவர்த்தகத்வத்தால்வரும் விசேஷௌஜ்ஜ்வல்யத்தையும், விரோதிநிவர்த்தகமான 'உபாயப்ரகாஶகத்வத்தையு மநுசந்தித்து, "ஏவம்விஶிஷ்டனான நீ, உன்னைப்ராப்திக்கைக்கு ஹேதுவானவுபாயாந்தரங்களில் அகிஞ்சநனாய் ஆர்த்தனானவெனக்கு உன்திருவடிகளே யுபாயமாக வுபகரித்தவிதற்கு என்னப்ரத்யுபகாரம் பண்ணுவேன்" என்று அலமரும்படி தமக்குப்பிறந்த ஆஶ்வாஸவிசேஷத்தை, சிரீவரமங்கையிலே ஆஸந்நமாக வெழுந்தருளியிருக்கிற வானமாமலையைநோக்கி விண்ணப்பம்செய்கிறார்................................................................*

௯௫.

கீழ்த்திருவாய்மொழியில் - அநுகரித்துதரிக்கப்பார்த்தார், "அநுகரித்து தரிக்கவேண்டும்படியான கலக்கம்பிறந்தவிடத்திலும்வந்து முகங்காட்டிற்றிலன், இதுக்கடியென்; தன்பக்க லாசாலேசமுடையார்க்குத்தானேவந்து முகங்காட்டிரக்ஷிக்கக்கடவ சர்வேஸ்வரன் நம்பக்கலாறியிருக்கைக்கு நிபந்தநமென்" என்றுபார்த்தார்; "இனியிங்ஙனேயாமித்தனை; நம்ப்ரக்ருதி ஸ்வபாவத்தாலே, தன்னாலல்லது செல்லாதபடியாயிருப்பதோ ராற்றாமையுண்டாயிருந்தது; நமக்கத்தை 'ஸ்வரூபம்' என்றறியாதே 'உபாயம்' என்றிருந்தானாகவேணும்" என்றுபார்த்து, தங்கையி லொன்றில்லாமையையறிவித்து அவன் திருவடிகளிலே சரணம்புகுகிறார். கடற்கரையில் வெளியிலே, மஹாராஜருள்ளிட்டமுதலிகளோடும், "லக்ஷ்மணம்புண்யலக்ஷணம்" (லக்ஷ்மணம்புண்யலக்ஷணம்) என்கிற தம்பியோடுங்கூட வெழுந்தருளியிருக்க, ஸ்ரீவிபீஷணாழ்வான் "ராவணோநாமதுர்வ்ருத்த:" ( ராவணோநாமதுர்வ்ருத்த: ) என்று ஸ்வநிகர்ஷத்தைமுன்னிட்டுக்கொண்டுவந்து பெருமாள் திருவடிகளிலேவிழுந்தாப்போலே,இவரும்; அவன்கடற்கரையிலே தனியிருந்த இழவுதீர, பிராட்டிமாரோடும் நித்யபரிகரத்தோடுங்கூட சிரீவரமங்கலநகரிலே திருவநந்தாழ்வான்மேலே யெழுந்தருளியிருக்கிற வானமாமலைதிருவடிகளிலே, வேரற்றமரம்போலே புகலற்றுவிழுந்துசரணம்புகுகிறார். இவர்தாமென்கொண்டு அவனைவடிம்பிடப்பார்க்கிறதென்னில்; அவன்ரக்ஷ்யவிஷயாபேக்ஷியாயிருந்தான், நமக்குரக்ஷகாபேக்ஷை யுண்டாயிருந்தது, ஆனபின்பு இதுக்கு மேற்படசம்பந்தமுண்டோ .........................*

## ஜீயர் அரும்பதம்.

நோற்றநோன்புப்ரவேஸே, சங்கத்யர்த்தமாக 'வ்ருத்தவர்த்திஷ்யமாணகதநம் (கீழிலித்யாதி) கீழே-அநுகரித்து தரிக்கப்பார்த்தவர், இங்கே "நோற்றநோன்பிலேன்" என்று - உபாயசூந்யதையைச்சொல்லுகைக்கடியேதென்ன; ப்ரசங்கமருளிச்செய்கிறார் (அநுகரித்தித்யாதி) ஆற்றாமையுண்டாயிருந்ததென்றது "ஆற்றகிற்கின்றிலேன்" என்றத்தைப்பற்ற. ( உபாயமென்றிருந்தானாகவேணுமென்றது ) ஆற்றாமையாவது - ஸ்நேஹமாய், * ஸ்நேஹபூர்வமநுத்யாநம்-பக்தியாகையாலே, இது உபாயமாகவேணுமென்றிருந்தானென்றபடி. ( உபாயமென்றிருந்தானாகவேணும் ) என்றதுக்கு நியாமகம் - * ப்ரஸக்தஸ்யஹி ப்ரதிஷேத:, ஆகையாலே "நோன்பிலேன்" என்றுசொன்னதுவேயென்றுகருத்து.

த்ருஷ்டாந்தகதநமுகேந விஸ்தரஸங்கதி (கடற்கரையிலித்யாதி) "ஸர்வாநுதீக்ஷ்ய" ( ஸர்வாநுதீக்ஷ்ய ) என்றத்தைப்பற்ற. (மஹாராஜருள்ளிட்டமுதலிகளோடுமென்றது) நித்யபரிகரத்தோடுமென்றது - "கருளப்புட்கொடி" என்றத்தைப்பற்ற. திருவநந்தாழ்வான்மேலேயென்றது - "அரவினணை" என்றத்தைப்பற்ற. "ஆறெனக்கு" இத்யாதியைப்பற்ற (புகலற்றித்யாதி)

என்றபோதே - ஜ்ஞாநமில்லையாகாதோ, அதெடுத்துக் கழிக்கவேண்டு வானென்னென்னில் ; பூர்வஜந்மத்திலே கர்மம் தலைக்கட்டின வளவிலே சரீரவிப்ரலேஷம்பிறந்தால் அநந்தரஜந்மத்திலே ஜ்ஞாநமுண்டாகக் கடவது. பக்தியுமப்படியானாலோவென்னில் ; ஜ்ஞாநகர்மங்களிரண்டுமுண்டானால் பக்திகூடியல்லது நில்லாது, ஆனபின்பு இங்கப்படியாகவொண்ணாது. " உன்னைவிட்டொன்று மாற்றகிற்கின்றிலேன் " என்றிவர்சொல்லுகிறவிதுபக்தியன்றோ, " ஸ்நேஹபூர்வமநுத்யாநம்பக்திஃ " (ஸ்நேஹபூர்வமநுத்யாநம்பக்திஃ) இறே ; ஆனபின்பு இது உபாயமானாலோ வென்னில் ; அங்ஙனன்றிறே, கர்மஜ்ஞாந ஸஹக்ருதாந்தஃகரணனுக்குப்பிறக்கும் பரபக்தியிறே சாஸ்த்ரங்களில் சாதநமாகச் சொல்லிப் போருகிறது ; இது அங்ஙனன்றிக்கே, அவனநுக்ரஹமடியாக வந்ததாகையாலே இது ஸ்வரூபமாமித்தனை. அங்ஙனன்றிக்கே, புராணங்களிலே தனித்தனியே கர்மஜ்ஞாநங்களை சாதநமாகச் சொல்லுகையாலே சொல்லிற்றாகவுமாம்.

இவையில்லையாகில் ருசியில்லாதார் பலிசையிழக்குமத்தனையன்றோவென்ன ( ஆகிலும் ) இங்ஙனே யிருந்ததேயாகிலும். " ஆற்றகிற்கின்றிலேன் " என்கிறவித்தை - " உபாயம் " என்றிருந்தாராகில், ( ஆகிலும் ) என்கைக்கு விஷயமில்லை. ஆனால், நீர் இந்நாள்வரையுமாறியிருந்தீரோவென்ன ( இனி ) உன்னையுமறியாதே யென்னையுமறியாதேயிருந்தவன்று இழக்கவமையாதோ, உன் நிறைவும் என் குறைவுமறிந்தவின்றுமிழக்கவேணுமோ. ஒருவன் கையிலே சோறுமுண்டாய் அவனிடுவானுமானால், ஒருவனுக்குச் சோறுமின்றிக்கே பசியனுமானாலிழக்கவேணுமோ. ( இனி ) என்கையிலேயு மொன்றுண்டாய் அது சமையுந்தனையுமாறியிருக்கிறேனே. சத்தையை யுபாயத்திலே சிலவெழுதிக் கைவிடப் பார்க்கில் பார்க்குமித்தனை. அநாதிகாலம் மெய்மறந்து இழந்தகாலம் போராதோ, நான் மெய்யாக விசைந்தவின்றுமிழக்கவேணுமோ. (உன்னைவிட்டு) நீயுமென்னைப்போலே யிருந்தாயாகில் நானாறியிரேனோ, நானும் சிறிது செய்துவரவேண்டும்படியோ நீ யிருக்கிறது. ( உன்னைவிட்டு ) ப்ராணனைவிட்டு ப்ரக்ருதி தரிக்கவற்றோ. ( ஒன்றுமாற்றகிற்கின்றிலேன் ) உன்னுடைய ஸ்வரூபஜ்ஞாநமெனக்கு தாரணத்துக்குடலாயிருக்கிறதில்லை. " தத்தஸ்யஸத்ருஶம்பவேத் " (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றாறியிருக்கைக்கு மொருவழியுண்டிறே யவனுக்கு, கடலையணைசெய்யவும் ராவணனை யழியச்செய்யவும் வேண்டாவிறே யிவர்க்கு. ( அரவினணையம்மானே ) கீழ் - தம்முடைய அபூர்த்திசொல்லிற்று ; மேல்-அவனுடைய பூர்த்திசொல்லுகிறது. ( அரவினணை ) உன்னுடைய போக ப்ராவண்யமென்னாலாறியிருக்கலா யிருக்கிறதோ. நீ பரமபோகியாயிருக்க, என்னாலாறியிருக்கப்போமோ. அநந்தசாயித்வம் - சர்வாதிகத்வத்

துக்குலக்ஷணமிறே. அரவை அணையாகவுடையசர்வேச்வரனே. இன்-சாரியை. ( சேற்றுத்தாமரையித்யாதி ) வெறும் அரவினணை யம்மானு னுயாகில் நானுறியிருக்கலாயிற்றே. ( சேற்றுத்தாமரை ) பரமபதத்தையும் விஸ்மரிக்கும்படியான தேசம். சேறுகளிலே தாமரைகளானவைசெந்நெலூடே, அவற்றுக் கனுக்கனிட்டாப்போலே அலரா நிற்கும். ராஜாக்களெடுத்துவிட்டவிடத்தே பரிகரமும் புகுமித்தனையிறே. ( சிரீவரமங்கலநகர் ) "தேவாநாம்பூரயோத்யா" (தேவாநாம்பூரயோத்யா) என்னுமாபோலே, பரமபதத்திற்காட்டில் தனக்கு நகரமாக விரும்பிவர்த்திக்கிறதேசம். சம்ஸாரிகளுடைய ரக்ஷணத்துக்காக நித்யவாசம்பண்ணுகிறதேசம். ( வீற்றிருந்த ) "அங்கே யிருக்கக்கடவ நமக்கு இவ்விருப்பிருக்கவேண்டாநின்றதே" என்னும் வெறுப்போ டன்றிக்கே, தட்டியிலிருந்தவன் முடிசூடினுப்போலே தன் வேறுபாடு தோற்ற விருக்கை. ( எந்தாய் ) அங்குத்தையிருப்பு நித்யசூரிகளுக் காணுப்போலே, இவ்விருப்பெனக்காகவன்றோ விருக்கிறது. சிரீவரமங்கலநகரான—அங்கே—வீற்றிருந்தவெந்தாய். ( உனக்குமிகையல்லேன் ) நித்யவிபூதியிலே நெடுங்கை நீட்டாகவிருந்தாயாகில் நான் தரித்திருக்கலாயிற்றே, எனக்காக வந்தவிடத்தே நானிழக்கவோ. ( அங்கே-வீற்றிருந்த – உனக்குமிகையல்லேன் ) ரக்ஷ்யவிஷயம் தேட்டமான வுனக்குப்புறம்பல்லேன். அன்றிக்கே, ( உனக்குமிகையல்லேன் ) "வைதர்ம்யம்நேஹவித்யதே" (வைதர்ம்யம்நேஹவித்யதே) என்று மற்றைப்போதைக்கு நானிரோன். உனக்கு மிகையானபோது அல்லேனுய்விடுவன். இத்தால் நமக்கு லாபமென்னென்ன ( அங்கே ) "தவசார்த்தஃப்ரகல்பதே" ( தவசார்த்தஃப்ரகல்பதே ) என்று, இத்தால் வரும் ப்ரயோஜநமும் தேவரதே. ஸ்தநந்தயப்ரஜையைப் பால்குடித்து வயிறுநிறையக்கண்டுகக்கும்தாயைப்போலே, சேஷபூதன் ஸ்வரூபம்பெற் றடிமைசெய்கை சேஷிக்குப் பேறிறே.......*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (நோற்றவித்யாதி) "நோற்றநோன்பிலேன்" என்றத்தைப்பற்ற ( எனக்குப்பேற்றுக்கித்யாதி ) ரக்ஷகாபேக்ஷையுண்டென்றது - "ஆற்றகிற்கின்றிலேன்" என்றத்தைப்பற்ற. ரக்ஷ்யவிஷயார்த்தியாயிருந்தீரென்றது - "சிரீவரமங்கலநகர்வீற்றிருந்த" என்றத்தைப்பற்ற. என்னபேக்ஷைசெய்தருளவேணுமென்றது-மேலிற்பாட்டில் "அருளாய்" என்றத்தைப்பற்ற.

இப்படிசொன்னபேருண்டோவென்ன (நதர்மேத்யாதி) ஸ்தோத்ரே. என்கிறுரென்றது - "பேற்றுக்கடியான கர்மஜ்ஞாநங்களில்லை" என்றுளவந்தாரருளிச்செய்தாப்போலே இவருமருளிச்செய்கிறுரென்றபடி. ஆழ்வார்கருத்தை யநுவிதாநம்பண்ணி யாளவந்தாரருளிச்செய்தாரோயாகிலும், புத்திவைஶத்யார்த்தம், இவரருளிச்செய்தாப்போலே யவரருளிச்செய்கிறுரென்று வ்யாக்யாதாவுக்குச்சொல்லலாமாகையாலே விரோதமில்லை. தர்மவாந்நாஸ்மியென்னுதே, "நயாஜ்ஞிகோஹம்,"

(நதர்மநிஷ்டோஸ்மி) என்றதுக்குபாவம் (நாட்டாரித்யாதி) இத்தால் - பலசாதந த்திலுபக்ரமித்தமாத்ரமொழிய, சாதநத்தையநுஷ்டித்து, "பலம்கைவரும்" என்று நிஶ்சயிக்கத்தக்கதில்லையென்றபடி. "ஆத்மவேதீ-ந" (ஆத்மவேதீ-ந) என்றதுக்கு-ஆத்மவேதந ஸ்வபாவனல்லவென்றுபொருளாய், அத்தையெடுத்துக்க ழிக்கிறபோதே - அதிலே கிஞ்சிதங்வயமுண்டென்று தோற்றுகையாலே, (தாச்சீல் யந்தோற்றவிருப்பன்) என்கிறார். இவ்வாத்மவேதநத்தில் கிஞ்சிதந்வயமுண்டென்ற துதான் போராதோ என்கிறசங்கையிலே; அல்பஜ்ஞாநம் லௌகிகஜ்ஞாநத்தோ டே கூடினதாகையாலே அஜ்ஞாநகல்பமாயிருக்குமென்றதுக்கு ப்ரமாணங்காட் டாநின்றுகொண்டு, "தாச்சில்யந்தோற்றவிருப்பன் எனக்கதுதானுமில்லை" என்ற த்தைவிவரிக்கிறார் (தத்ஜ்ஞாநமித்யாதிவாக்யத்வயத்தாலே) தாச்சீல்யம் - தத்ஸ்வ பாவம். தாச்சீல்யந்தோற்றவிருப்பன் - ஜ்ஞாநஜ்வபாவனுன வாகாரந்தோற்றவிரு ப்பன். அதுதானுமில்லை-ஆத்மஜ்ஞாநசிலதையுமில்லை. (தந்ஜ்ஞாநமஜ்ஞாநமித்யாதி) ஷஷ்டேம்ஶே. பூர்வமேவலிகிதம் மஹாப்ரவேஶாதௌ. (கீழிலவையிரண்டுமு ண்டானுல் வருமதிறே யது) என்றதுக்கநந்தரத்திலே, அவையிரண்டுமில்லாமை யாலே பக்தியுமில்லையென்கிறுரொன்று கூட்டுவது. அப்படிபார்த்திருந்தபேருண் டோவென்ன (சக்ரவர்த்தியித்யாதி)

"நுண்ணறிவிலேன்" என்றதுக்கு, "நஸாத்மவேதீ" (நசாத்மவேதீ) என் றத்தையெடாதே, "நதர்மநிஷ்டோஸ்மி" (நதர்மநிஷ்டோஸ்மி) என்றத்தை த் ருஷ்டாந்தமாகவெடுத்தது-இதிலே "நிஷ்டையில்லை" என்னுமதுசாப்தமாய் வ்ய க்தமாயிருக்கையாலேயென்றுகருத்து. "நுண்ணறிவு" என்றதுக்குபாவம் (ஸ்வ ஸ்வரூபஜ்ஞாநேத்யாதி)

(நின்கணும்பத்தனல்லேன்) தேவரீரிடத்திலும் பக்தியையுடையேனல்லே ன். திருமாலை இருபத்தஞ்சாம்பாட்டு, "குளித்து" இத்யாதி. (உபயபரிகர்மிதஸ் வாந்தஸ்ய) கர்மஜ்ஞாநங்களாலே அலங்க்ருதமான மநஸ்ஸையுடையவனுக்கு. பூர் வஜந்மஸித்தகர்ம ஜ்ஞாநங்களாலே அநந்தரஜந்மத்திலே பக்தியுமுண்டாகலாமே, ஆனபின்பு அவை யுடையவனுக்கே பக்திநிஷ்டதமும் பண்ணலாமேயென்று சங்கி த்துப்பரிஹரிக்கிறார் (பக்தியுமப்படியித்யாதி) பக்திகூடியல்லது நில்லாதென்றது - "பக்திஶ்சஜ்ஞாநவிஶேஷ:" (பக்திஶ்சஜ்ஞாநவிஶேஷ:) என்றும், "ஞானக்கனி ந்தநலம்" என்றும் சொல்லுகிறபடியே, ஜ்ஞாநத்தினுடைய பரிபாகம் பக்தியாகை யாலே ஜ்ஞாநம் பக்திவ்யாப்தமாயேயிருக்குமென்றபடி. (பக்தியுமப்படியானுலோ வென்னில்) பூர்வஜந்மத்திலே கர்மஜ்ஞாநங்களையநுஷ்டித்து, இந்தஜந்மத்திலே பக்தியுண்டானுலோவென்னில். ஜிஜ்ஞாஸாப்ரஶ்நாநுவாதம் (உன்னைவிட்டித்யா தி) "ஸ்நேஹபூர்வமநுத்யாநம் பக்திரித்யபிதீயதே । பஜநமித்யேஷதாதுர்வை ஸேவாயாம் பரிகீர்த்தித: । தஸ்மாத்ஸேவாபுதை: ப்ரோக்தா பக்திஶப்தேந பூயஸீ" (ஸ்நேஹபூர்வமநுத்யாநம்பக்திரித்யபிதீ யதே। பஜஇத்யேஷதாதுர்வைஸேவாயாம்பரிகீர்த்திதः। தஸ்மாத்ஸேவாபுதைः ப் ரோக்தாபக்திஶப்தேநபூயஸீ) என்றதநுசந்தேயம். உத்தரம் (அங்ஙனென்னுமித் யாதி) "கர்மஜ்ஞாநாங்கிகையாயிருக்கும்பக்தி" என்கிறவேதாந்த ப்ரக்ரியையை யுபஜீவித்தருளிச்செய்தார் - கீழ்; "ஜ்ஞாநபக்த்யந்விதம் கர்ம ஜநகாதிஷு த்ருஶ்யதே । கர்மபக்த்யந்விதம் ஜ்ஞாநம் ப்ராயேண பரதாதிஷு । கர்மஜ்ஞாநாந்விதா பக்தி: ப்ரஹ்லாதாதிஷு த்ருஶ்யதே" (ஜ்ஞாநபக்த்யந்விதம்கர்ம ஜநகாதிஷுத்ரு

ஶ்யதே । கர்மபக்த்யர்ஷிதம்ஜ்ஞாநம்ப்ராயேணபரதாதிஷு । கர்மஜ்ஞாநாங்விதாப
க்திஃப்ரஹ்லாதப்ரமுகாஶ்ரயா ) என்று - கர்மஜ்ஞாநாதிகளை ப்ரத்யேகம் சாதநமா
கச்சொல்லுகிற புராணப்ரக்ரியையை யுபஜீவித்தருளிச்செய்கிறார் ( அங்ஙனன்றிக்
கேபுராணங்களிலேயித்யாதி ) இந்தப்பக்ஷத்தில், கர்மஜ்ஞாநராஹித்யம்சொன்ன
து-பக்திராஹித்யத்துக்கு முபலக்ஷணம்.

“ ஸாதநாபாவேஸாத்யாபாவஃ ” ( ஸாதநாபாவேஸாத்யாபாவஃ )
என்றத்தையுட்கொண்டருளிச்செய்கிறார் ( முதலில்லாதாரித்யாதி ) பலிசு - வட்டி
இங்ஙனேயிருந்ததேயாகிலும் - நிஸ்ஸாதநனாயிருந்தேனேயாகிலும். கர்மஜ்ஞாநாங்
கபக்தியில்லாவிட்டாலும், “ ஆற்றகிற்கின்றிலேன் ” என்கிற பகவத்ப்ரஸாதமடி
யாகவந்த பக்திதானே சாதநமாகாதோவென்ன ( ஆற்றகிற்கின்றிலேனென்கிறவித்
தையித்யாதி ) விஷயமில்லையென்றது - “ ஆகிலும் ” என்கிறபதம் வ்யர்த்தமாமெ
ன்றபடி. அதாவது - “ உபாயாந்தரங்கள் தமக்கில்லை ” என்றருளிச்செய்யக்கூடா
தென்றபடி. கீழ்ப்பதங்களையும் “ அரவினணையம்மானே ” என்றத்தையும்கடாக்ஷித்
து “ இனி ” என்றதுக்குபாவம் ( உன்னையுமித்யாதி ) விவரணம் (உன்னிறைவுமித்
யாதி) அபூர்ணனுக்குப் பூர்ணன்கார்யம்செய்யவேணுமோவென்ன; வேணுமென்னு
மத்தை லௌகிகத்ருஷ்டாந்தத்திலேகாட்டுகிறார் ( ஒருவனித்யாதி ) “ நோற்றநோ
ன்பிலேன் நுண்ணறிவிலேன் ” என்கிறபதமாத்ரத்தைக்கடாக்ஷித்து, “ இனி ” என்
றதுக்குத் தாத்பர்யாந்தரம் (என்கையிலேயுமித்யாதி) “ ஒன்றுமில்லை ” என்கிறதெ
ன், “ ஆற்றகிற்கின்றிலேன் ” என்கிறபக்தி யுபாயமாகாதோவென் றீஶ்வராபிப்ரா
யமாக வருளிச்செய்கிறார் (சத்தையையித்யாதி) “அரவினணையம்மானே” என்றப
தத்துக்கு - அநந்தசாயித்வம் சர்வாதிகலக்ஷணமாகையாலே, பூர்த்திசொல்லுகிற
தென்றும்; “ அரவினணை ” என்று - சேஷசாயியாகையாலே பரமபோக்யுமாய்,
“ அம்மானே ” என்று - சரீரித்வேந சேஷியுமானவனேயென்று மிரண்டர்த்தம்.
இந்தவிரண்டாமர்த்தத்தைக்கடாக்ஷித்து “ இனி ” என்றதுக்குமூன்றாம்பாவம் ( அ
நாதிகாலமித்யாதி ) மெய்மறந்தென்றது-சாடு. சரீரசரீரிபாவஸம்பந்தத்தைமறந்
தென்று ஸ்வபாவார்த்தம்; உடம்புதெரியாதே மோஹித்தென்றுசாடு. மெய்யாக-
சரீரதயாசேஷமாகவென்றும், சத்யமாகவென்று மர்த்தத்வயம். “ அரவினணையம்
மானே ” என்றபதத்தின் - பூர்ணனென்ற முந்தினவர்த்தத்துக்கநுகுணமாக, “ உ
ன்னை ” என்றதுக்கும் - பூர்ணனானவுன்னையென்றர்த்தம் விவக்ஷித்துபாவம் ( நீயு
மென்னைப்போலே யித்யாதிவாக்யத்வயம் ) பரமபோக்யுமாய் சேஷியுமானவனெ
ன்ற விரண்டாமர்த்தத்துக்கநுகுணமாக, போக்யமானவுன்னையென்றர்த்தாந்தரம்
(ப்ராணனையித்யாதி) “ ஒன்றும் ” என்றுவிசேஷித்ததுக்குபாவம் (உன்னுடையவி
த்யாதி) பிராட்டிக்கு ஸ்வரூபஜ்ஞாநம் தரிக்கைக்குடலாயிற் றில்லையோவென்ன
(தத்தஸ்யேத்யாதி) வழியாவது - க்ரமேணவிரோதியைப்போக்கவேண்டுகை. த்வ
ரையுண்டாயிருக்கச்செய்தே யவளுக்காறியிருக்கைக்கும், இவர்க்காறியிருக்கவொ
ண்ணாமைக்கும் ஹேதுவேதென்ன (கடலையித்யாதி)

“அரவினணையம்மானே” என்றதுக்கு - போக்யதையைப்பற்ற பாவாந்தரம்
(உன்னுடையவித்யாதி) விவரணம் ( நீபரமபோக்யித்யாதி ) “ அரவினணையம்மா
னே ” என்றத்தாலே - பூர்த்தியைச்சொல்லும்படி யெங்ஙனேயென்ன (அநந்தசா
யித்வமித்யாதி)

அவ்வூரில் தாமரையையும் செந்நெலையும் வர்ணிக்கிறதுக்குபாவம் ( பரமப
தத்தையுமித்யாதி) வர்ணித்ததுக்குத்தாத்பர்யாந்தரம் (ராஜாக்களித்யாதி) அதாவ

து - சர்வேஶ்வரன்வந்தவதரிக்கையாலே, நித்யசூரிகளும் தத்ரூபேணவந்தவதரிக்கையாலே யவனோபாதியுத்தேஶ்யமாய் வர்ணிக்கிறுரென்றபடி. "நகர்" என்றதுக்குபாவம் (தேவாநாமித்யாதி) தட்டி-சிறைச்சாலே.

முந்தினவர்த்தத்துக்கு, எந்தையாய் சந்நிஹிதனானவுனக்கு மிகையல்லேன்-உன்னுடையரக்ஷணத்துக்குப் புறம்பல்லேனென்றபடி. த்விதியார்த்தத்துக்கு, உனக்குப்புறம்பாய்த்தோற்றிற்றுகில், அல்லேன்-தரியேனென்றபடி. நெடுங்கைநீட்டாக-அதிதூரமாக. "உனக்குமிகையானுல், தரியேன்" என்னுமத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாகக்காட்டுகிறுர் (வைதர்ம்யமித்யாதி) இத்தால் - மிகையாய்த்தோற்றுதே அடிமைகொண்டவித்தால். "அங்கே" என்றதுக்கர்த்தாந்தரம் (தவசேத்யாதி) சகாரஃ-அவதாரணே. "இவரையடிமைகொண்டால் அவன்பேருயிருக்கும்" என்னுமத்தை ஸத்ருஷ்டார்ந்தமாகக்காட்டுகிறுர் (ஸ்தநந்தயேத்யாதி) "[Grantha text] । [Grantha text]" (குருஷ்வமாமநுசரம்வைதர்ம்யம்நேஹவித்யதே । க்ருதார்த்தோஹம்பவிஷ்யாமிதவசார்த்தஃப்ரகல்பதே ) இத்யயோத்யாகாண்டே ராமம்ப்ரதிலக்ஷ்மணஃ.

க்ரமேணுந்வயஃ.....................................................................*

---

# இரண்டாம்பாட்டு.

அங்குற்றேனல்லேனிங்குற்றேனல்லே னுன்னைக்காணுமவாவில்வீழ்ந்து
னெங்குற்றேனுமல்லேனிலங்கைசெற்றவம்மானே [நா
திங்கள்சேர்மணிமாடநீடுசிரீவரமங்கலநகருறை
சங்குசக்கரத்தாய்தமியேனுக்கருளாயே.

## ஆறுயிரப்படி.

( அங்குற்றேனல்லேன் ) உன்திருவடிமலர்களைப் பெற்றேனல்லேன், பெறுகைக்கிடான வுபாயமுடையேனல்லேன், உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து நானினிமேலோருபாயமநுஷ்டிக்க க்ஷமனல்லேன். ஆகிலும் அசோகவநிகையில் பிராட்டியுடைய ப்ரதிபந்தகத்தை யன்று போக்கினுப்போலே, அடியேனுடைய ப்ரதிபந்தகத்தையும் நீயே நிர்ஹேதுகமாகப்போக்கி, தமியேனுக்கு அருளாயென்கிறுர்..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னை யங்கீகரிக்கைக்கு ப்ரதிபந்தகமான அநிஷ்டமுண்டாகிலும், அதுக்கு நிவர்த்தகன் நீயாகையாலே, எனக்கு க்ருபைபண்ணி யருளவேணுமென்கிறுர்.

அங்குற்றேன்-நிஷ்பந்நோபாயனாய்க்கொண்டு நீ யிருக்கிற ப்ராப்யஸ்தலத்தில் புகுந்தவன். அல்லேன் - அல்லேன். "உபாயசூந்யராரியிருக்கையன்றோவுள்ளது" என்று நிரபேக்ஷனாய், இங்குற்றேன் - இருந்தவிடத்திலிருக்கிறேன். அல்

லேன் - அல்லேன். உன்னை - நிரதிசயபோக்யனனவுன்னை. காணும் - அநுபவிக்க வேணுமென்கிற. அவாவில் - அபிநிவேசத்திலே. வீழ்ந்து - அகப்பட்டு. நான் - ஆற்றாமையையுடையநான். எங்குற்றேனும் - அந்யபரரான லௌகிகர் நிலையிலொன்றிலும். அல்லேன் - அல்லேன். இலங்கை - ஆஶ்ரிதவிஷயத்தில் ப்ரதிபந்தகமானலங்கையை. செற்ற - அழியச்செய்து ப்ராபித்துக்கொண்ட. அம்மானே- அசாதாரண ஸ்வாமியாய். பிற்பட்டார்க்குதவுகைக்காக, திங்கள் - சந்த்ரனோடு. சேர் - சேரும்படி. மணி - மாணிக்யமயமான. மாடம் - மாடங்கள். நீடு - வளருகிற. சிரீவரமங்கலநகர் - சிரீவரமங்கலநகரிலே. உறை - நித்யவாசம்பண்ணுமவனாய். சங்குசக்கரத்தாய் - ஆஶ்ரிதவிரோதி நிரஸநகரமாயும் போக்யமாயுமுள்ள ஆயுதவிசேஷங்களையுடையவனே. தமியேனுக்கு - உன்னையொழியத் துணையில்லாதவெனக்கு. அருளாய் - உன்னுபகாரசீலமான க்ருபையைப்பண்ணி யருளவேணும்.................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

"ஆற்றேன்" என்றால் பெற்றதென், ப்ரதிபந்தகங்க ளின்னமுண்டேயென்ன ; பிராட்டிக்கு வந்த ப்ரதிபந்தகங்களைப்போக்கினாப்போலே அடியேனுடைய விரோதியையும் போக்கி யருளவேணுமென்கிறார்.

(அங்குற்றே னல்லேன்) முக்தரிஸ்ஸம்சாரத்திலே யுலாவினாப்போலே சித்தசாதநனாய்த் திரிகிறேனல்லேன். (இங்குற்றேனல்லேன்) இங்கேயிருந்து சாதநாநுஷ்டாநம்பண்ணு மவர்களிலே யொருவனாயிருக்கிறேனல்லேன். அன்றிக்கே, (அங்குற்றேனல்லேன்) "நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்கிறபடியே, உன்னை யநுபவித்து சம்சாரத்தை நினையாதிருக்கிறே னல்லேன். (இங்குற்றேனல்லேன்) "மறந்தேனுன்னைமுன்னம்" என்கிறபடியே, உன்னைமறந்து "அவர்தரும் கலவியேகருதி" என்கிறபடியே அதுவே ப்ராப்யமாக விருக்கிறேனல்லேனென்னுதல். * யாதானும் பற்றிநீங்கும் விரதத்தை நல்வீடுசெய்கையாலே அப்படி யிருக்கமாட்டாரோ. (உன்னையித்யாதி) ஆனால், மேலொருகாலாகிலும் சிலசெய்யவல்லீரோவென்னில்; அது, முன்பே "உன்னைவிட்டொன்றுமாற்றகிற்கின்றிலேன்" என்றுசொன்னேனிறே. ஒன்றுசெய்கைக்கு யோக்யர் சக்தரா யிருப்பரன்றே. "உன்னைக்காணவேணும்" என்றாசையாலே பலஹீநனாய்த்தளர்ந்து இனி யுபாயாநுஷ்டாநக்ஷமனல்லேன். இது பூர்வர்கள்நிர்வாஹம். (அங்குற்றேனல்லேன்) நித்யஸூரிகளோடொக்க அங்கேயிருக்கிறேனல்லேன். (இங்குற்றேனல்லேன்) சம்சாரிகளோடொக்க இங்கேயுண்டுடுத்துப் போருகிறேனல்லேன். (உன்னையித்யாதி) இங்ஙனேயானால், நீவந்து முகங்காட்டுமளவும் நடுவோரிடத்தில் நிற்க க்ஷமனாகிறிலேன். (அவாவில்வீழ்ந்துநான்) "ஆசையென்னுங்கடலில் வீழ்ந்திங்கயர்த்தோம்" என்கிறபடியே, அவ்வபிநிவேசத்திலே விழுந்து கரையேறமாட்டாதே தடுமாறுநின்றேன். (அங்குவரமாட்டேன், அபிநிவேசத்தாலே யிங்கு நிற்கமாட்டேன்.) (இலங்கைசெற்றவம்மானே) தந்தலையிலொ

ன்றுமில்லாமையைக்கண்டார், ஒன்றுமில்லாதார் பெற்றவிடத்தைப்பா ர்க்கிறார்; கைம்முதலற்றவன் சஞ்சிதமான தநத்தை வாங்கிப்பார்க்குமா போலே. ( இலங்கைசெற்றவம்மானே ) தன்பேறாயிருக்கிறபடி. ஸ்வ ரூபம் ப்ரகாசித்தால், அவன்றலையிலே தள்ளிவைக்கவுங்கடவதாய், அவ னும் பிராட்டிமாரோடொக்க மேல்விழுந்து விரோதிகளையும்போக்கி அ ணைக்கைக்கு வேண்டும் ப்ராப்தியுண்டாய்க்காணுமிருப்பது.

அவையெல்லாம் செய்தமையுண்டு, ஆனாலும் அதுக்குப்பிற்பட் டதேயென்ன; அக்கண்ணழிவறுத்து வைத்தாயிறே ( திங்களித்யாதி ) சந்த்ரபதத்திலே செல்லவோங்கி ரத்நமயமான மாடங்களை யுடைய சிரீ வரமங்கலநகரிலே, அவதாரம்போலே தீர்த்தம் ப்ரசாதியாதே நித்யவா சம்பண்ணுகிறிலையோ. ( திங்கள்சேர்மணிமாடநீடு ) சந்த்ரனோடேசே ரும்படி மாணிக்யமயமான மாடங்கள்வளருகிற. நீடுகை - நீட்சியை யு டைத்தாகை. அது அப்படியேயானாலும் பரிகரமில்லையேயென்ன ( சங் குசக்கரத்தாய் ) அங்ஙன் கண்ணழிவுசொல்லலாமோ, ஒரோகைக்குப் படையன்றோ கூடநிற்கிறது என்கிறார். இங்கு, " ஶாவமாநயஸௌமித்ரே " ( சாபமாநயஸௌமித்ரே ) என்னவேண்டும் குறையுண்டோ. பிறர் கைபார்த்திருக்கவேண்டும் குறையுண்டோ விங்கு. பரிகரங்களை ய ழைத்துக் காரியங்கொள்ளவேண்டும்படியோ உனக்கிருக்கிறது. நீஸந்நி ஹிதனல்லாமையோ, நிசக்தனல்லாமையோ, உனக்குப்பரிகரமில்லாமை யோ, பரிகரந்தான் கைகழியநின்றோ, எத்தாலே தானிழக்கிறதென்ன; அவையெல்லாமப்படியே, இத்தலை யிப்படி குறைவற்றாலும் ப்ரயோஜந மில்லையே, அத்தலையும் குறைவறவேணுமே என்ன ( தமியேனுக்கு ) இத்தலையும்குறைவற்றதென்கிறார். அங்கே பிரியாதிருக்கிறார்படியல்லே ன், இங்கே பிரியாதிருக்கிறார்படியல்லேன். இங்குள்ளார்க்கு ஒவ்விஷ யத்தை யறியாமையாலே பிரிவில்லையே. ( தமியேனுக்கு ) உன்னையொ ழியத் துணையில்லாதவெனக்கு. ஸ்வரூபத்தை, " ஸாதநம் " என்று சி லவெழுதிக்கழிக்கில் கழிக்குமித்தனை. நீ உபாயமானாலும் உபாயப்ரதிப த்திபண்ணுவார்வேண்டாவோ. ( தமியேன் ) பிராட்டியில் வ்யாவ்ருத் தி. அங்கானால் ஒரு த்ரிஜடையாகிலுமுண்டிறே, இங்கு " ஆவாரார்து ணை " என்னும்படியிறேதனி. ஆனால் செய்யவேண்டுவதென்னென்ன ( அருளாயே ) என் வெறுமையும் உன் பௌஷ்கல்யமுமறிகைக்கு, நீ அடியில் தந்தவருளின்றுகுடிபோயிற்றோ. அன்று நானபேக்ஷியாதிருக் க அருளின நீ, அபேக்ஷிக்கைக்கு யோக்யதையைப் பிறப்பித்துப் பொக டவோ. ருச்யுத்பாதநம்பண்ணுவாரொருவரும், உபாயாநுஷ்டாநம்ப ண்ணுவாரொருவருமாயோவிருப்பது. * நின்னருளே புரிந்திருக்கிறவெ னக்கருளாயாகில் பின்னையார்க்கு வேறருளவிருக்கிறாய்...............*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. ( அங்குற்றேனித்யாதி ) "இலங்கைசெற்றவம்மானே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( ஆற்றேனென்றுலித்யாதி )

உபாசகரிலே, ஆரப்தயோகரென்றும் ஆரூடயோகரென்றும் த்விவிதராயிருப்பர்கள்; அவர்களில், ஆரூடயோகர்படி யெனக்கில்லையென்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் ( முக்தரித்யாதி ) சித்தசாதநனென்றது - சாதநமெல்லாமநுஷ்ட்டித்து, பலாநுபவத்துக்காக வங்கே போகவிருக்கிற வாரூடயோகனென்றபடி. ஆரப்தயோகர்படியை விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( இங்கேயிருந்தித்யாதி ) சாதநாநுஷ்ட்டாநம்பண்ணுமவர்களிலே யென்றது - சாதநாநுஷ்ட்டாநம்பண்ண வாரம்பித்த வாரப்தயோகரிலே யென்றபடி. ஆக, இப்பதத்வயத்தால் - "நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்" என்று சொன்ன வுபாயசூந்யதையை முகபேதேந வநுபாஷிக்கிறுரென்றும்; த்விதீயயோஜநைக்கு, இப்பதத்வயத்தாலும் - "உன்னைவிட்டொன்று மாற்றகிற்கின்றிலேன்" என்கிறத்தை முகபேதேந வநுபாஷிக்கிறுரென்றும் கண்டுகொள்வது. ( மறந்தேனுன்னைமுன்னம் ) ஸ்பஷ்டோர்த்தஃ. (அவர்தருங்கலவியேகருதி) ஸ்த்ரீகள் தருகிற கலவியையே மநோரதித்து. திருமொழி, "வாடினேன்" இத்யாதி. அதுவே - இதரவிஷயமே. இதரவிஷயமே ப்ராப்யமென்றிருந்தாலோவென்ன ( யாதாநுமித்யாதி ) ப்ராக்ருதி ப்ராக்ருதங்களிலேதேனுமொன்றைப்பற்றிப்பகவத்விஷயத்தைவிட்டே போம்படியான விஸ்ஸம்சாரிசேதநனுடைய ஸங்கல்பத்தைப்புநரந்வயமில்லாதபடி நன்றாகவிடுவிக்கையாலேயித்யர்த்தஃ. திருவிருத்தம் தொண்ணூற்றஞ்சாம்பாட்டு, "யாதாநுமோராக்கை" இத்யாதி. கீழிற்பதத்வயத்தின் முந்தினவர்த்தாநுகுணமாக மேலுக்கவதாரிகை ( ஆனுலித்யாதி ) ஆனுலென்றது - ஆரூடயோகரு மாரப்தயோகரு மல்லீராகி லென்றபடி. ( சிலசெய்யவல்லீரோ ) சாதநாநுஷ்ட்டாநம் பண்ண யோக்யதைதா னுமக்குண்டோ. நம்மைவிட்டு தரிக்கமாட்டீரென்றுல், "யோக்யதையில்லை" என்னுமதுக்குடலாகவேணுமோவென்ன ( ஒன்றுசெய்கைக்கித்யாதி ) அதாவது - "காலாழும்" இத்யாதிப்படியே, பக்திபாரவஶ்யத்தாலே யசக்தனுன நான் மேலும் சாதநாநுஷ்ட்டாநத்துக்கு க்ஷமனல்லேனென்றபடி. கீழிற்பதத்தின் த்விதீயார்த்தத்துக்குச்சேர "எங்குற்றேனுமல்லேன்" என்றதுக்கு - த்விதீயார்த்தாநுவாத பூர்வகமாக த்ருப்தப்ரபந்நனு மல்லேனென் றர்த்தாந்தரம் ( நித்யசூரிகளித்யாதி, க்ஷமனுகிறிலேனித்யந்தம் ) நித்யசூரிகளிலும் சம்சாரிகளிலும் கூட்டன்றிக்கே ஆந்தராளுல் ஸ்வரூபஜ்ஞாநத்தாலே தரித்திருந்தாலோ வென்ன ( இங்ஙனேயானுலித்யாதி ) அதாவது - பக்திபாரவஶ்யத்தாலே, "சேஷிசெய்தபடிகண்டிருக்கிறோம்" என்றுறியிருக்க க்ஷமனுகிறிலேனென்றபடி. இத்தால் - த்ருப்தப்ரபந்ந னல்லேனென்றபடி. ( ஆசையென்னுங்கடலில்வீழ்ந்திங்கயர்த்தோம் ) "உம்மைக்காணவேணும்" என்கிற வாசையாகிற பெருங்கடலிலே புக்கப்பட்டு இங்கறிவுகெட்டோ மித்யர்த்தஃ. திருமொழி நாலாம்பத்து ஒன்பதாந் திருமொழி மூன்றும்பாட்டு, "பேசுகின்றது" இத்யாதி.

"அங்குற்றேனல்லேனிங்குற்றேனல்லேன்" என்றதின் முந்தினவர்த்தாநுகுணமாக, "இலங்கைசெற்றவம்மானே" என்றதுக்கு ஸங்கதி ( தந்தலையிலித்யாதிவாக்யத்வயமும் ) இத்தால் - உன்னையே யுபாயமாக வத்யவஸித்த பிராட்டிக்குதவினுப்போலே, எனக்கு நீயே யுதவவேணுமென்கை. கீழ்ச்சொன்னதுக்கு த்ரு

ஷ்டார்த்தம் ( கைம்முதலற்றவனித்யாதி ) த்விதீயார்த்தத்துக்குச்சேர, "இலங்கை செற்றவம்மானே" என்றதுக் கிரண்டாம்பாவ மிப்பாட்டினவதாரிகையிலேகண்டு கொள்வது. "அம்மானே" என்றதுக்குபாவம் ( தன்பேருகவித்யாதி ) பிராட்டி யோபாதி தமக்குதவவேண்டும்படியான ப்ராப்தியைவிவக்ஷித்து - "அம்மானே" என்கிறுனொன்று தாத்பர்யாந்தரம் ( ஸ்வரூபமித்யாதி )

அதுக்கு - ராமாவதாரத்துக்கு. கண்ணழிவு - குறை. கை - யுத்தமும், கரமும். படை - ஆயுதமும், சேனையும். "சங்குசக்கரத்தாய்" என்று நிரூபகமாகச் சொன்னதுக்கு பாவம் ( இங்குசாபமாநயேத்யாதி ) "ஸௌமித்ரே" ( ஸௌமித்ரே ) என்றதுக்கு பாவம் ( பிறர்கையித்யாதி ) "சாபமாநய" (சாபமாநய) என்றதுக்குபாவம் (பரிகரங்களையித்யாதி) "திங்கள்சேர்" இத்யாதிக்குத் தாத்பர்யகதநமுகேந மேலுக்கவதாரிகை ( நீஸந்நிஹிதனித்யாதி ) "சிரீவரமங்கலநகருறை" என்றத்தைப்பற்ற ( நீஸந்நிஹிதனல்லாமையோவென்றது ) "இலங்கைசெற்றவம்மானே" என்றத்தைப்பற்ற ( நீஶக்தனல்லாமையோவென்றது ), "சங்குசக்கரத்தாய்" என்றத்தைப்பற்ற (உனக்குப் பரிகரமில்லாமையோவென்றது) இத்தை நிரூபகமாகச் சொல்லுகையைப்பற்ற ( பரிகரந்தான் கைகழிய நின்றேவென்றது.)

அத்தலேயும் குறைவறவேணுமேயென்றது - உமக்கிச்சையுமுண்டாகவேணுமேயென்றபடி. "அங்குற்றேனல்லேன்" இத்யாதியின் த்விதீயார்த்தாநுகுணமாக, "தமியேன்" என்றதுக்குபாவம் (அங்கேபிரியாதித்யாதி) இங்குள்ள சம்சாரிகளுக்குப் பிரிவில்லாமையெப்படியென்ன (இங்குள்ளார்க்கித்யாதி) "அங்குற்றேனல்லேன்", இத்யாதியின் முந்தினவர்த்தாநுகுணமாக, "தமியேன்" என்றதுக்கு-உபாயசூந்யனுனவெனக்கென்றர்த்தாந்தரம்விவக்ஷித்து, "உபாயசூந்யன்" என்றுசொல்லுவானென், "அவாவில்வீழ்ந்து" என்றபக்தி யுபாயமாளுலோவென்ன ( ஸ்வரூபத்தையித்யாதி ) ஸ்வரூபத்தை சாதநமென்று சில்வெழுதவொண்ணுதோவென்ன (நீயுபாயமித்யாதி) ஆக, சாதநாந்தரசூந்யனென்றபடி. "இலங்கைசெற்றவம்மானே" என்றத்தைக்கடாக்ஷித்து, "தமியேன்" என்றதுக்கு - சம்சாரிகளிலே தமக்கொருதுணையில்லாதவனென்று மூன்றும்பாவம் (பிராட்டியில்வ்யாவ்ருத்தியென்று) தத்விவரணம் (அங்காளுலித்யாதி) ஆக, "தமியேன்" என்றதுக்கு-பிரிந்திருக்கிற வெனக்கென்றும், உபாயசூந்யனுனவெனக்கென்றும், சம்சாரிகளில் துணையில்லாத வெனக்கென்றும் மூன்றர்த்தம் கண்டுகொள்வது. தமியேனுக்கு-தனியேனுக்கு. "சங்குசக்கரத்தாய்தமியேன்" என்றத்தைக்கடாக்ஷித்து, "அருளாய்" என்றதுக்குபாவம் (என்வெறுமையுமித்யாது) அதாவது-இப்படியருளினநீ பேற்றுக்கீடாகவு மருளவேணுமென்றபடி. அடியில்தந்தவருளென்றது - * மயர்வறமதிநலமருளினத்தைப்பற்ற. கீழ்வாக்யவிவரணம் ( அன்றுநானித்யாதி ) நானபேக்ஷியாதிருக்கவென்றது - "மயர்வறமதிநலமருளினன்" என்றவிடத்தில், எனக்கென்றுதத்தைப்பற்ற, யோக்யதையைப்பிறப்பித்தால் ப்ராப்தியும் பண்ணித்தரவேணுமோவென்ன (ருச்யுத்பாதநமித்யாதி) "தமியேனுக்குஅருளாய்" என்றுகூட்டிபாவம் (நின்னருளேயித்யாதி) உன்க்ருபையையே யாதரித்திருந்தேன்.

க்ரமேணுந்வய:..........................................................*

——*382*——

# மூன்றாம்பாட்டு.

---

கருளப்புட்கொடிசக்கரப்படைவானநாடவெங்கார்முகில்வண்ணா
பொருளல்லாதவென்னைப்பொருளாக்கியடிமைகொண்டாய்
தெருள்கொணான்மறைவல்லவர்பலர்வாழ்சிரீவரமங்கலநகர்க்
கருள்செய்தங்கிருந்தாயறியேனொருகைம்மாறே.

## ஆறாயிரப்படி.

(கருளப்புள்) இப்படி நிர்ஹேதுகமாக வும்முடையபேக்ஷிதத்தைச்செய்தால் ப்ரயோஜநமென்னென்னில்;

ஸ்வபரிசரணபோக சேஷசேஷாஶந கருடப்ரமுகநாநாவிதாநந்தபரிஜந பரிசாரிகாபரிசரித சரணயுகளனாய், ஸ்வாநுரூபாசிந்த்யசக்தி சங்கசக்ரகதாஸி சார்ங்காத்ய ஸங்க்யேய திவ்யாயுதோபேதனாய், நித்யநிரவத்ய நிரதிசய கல்யாணபரம வ்யோமநிலயனாயிருந்தநீ, த்வத்விஷயஜ்ஞாந ரஹிததயா அவஸ்துபூதனானவென்னை, த்வத்விஷயஜ்ஞாநவத்தயா வஸ்துவாய் த்வத்கைங்கர்யைகரதியுமாயிருக்கும்படிபண்ணியருளிற்றென்பக்கலென்னப்ரயோஜநங்கொள்ளுகைக்காக; ஒருப்ரயோஜநாபேக்ஷையால் செய்தருளினாயல்லையிறே, உன்னுடைய நிரதிசயௌதார்ய காருண்யாதிகளாலே செய்தருளினாயத்தனையிறே, இன்னம்குறையுமப்படியே செய்தருளாயென்கிறார் ..................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயிதபரத்வஸூசகமான ஆகாரங்களை யுடையையாய்க்கொண்டு என்னையங்கீகரித்தடிமைகொண்ட வுபகாரத்துக்கு நானொருப்ரத்யுபகாரம் செய்தேனாக வறிகிறிலேனென்கிறார்.

கருளன்-கருடனாகிற. புள்-பக்ஷியை. கொடி-கொடியாகவும். சக்கரம் - திருவாழியை. படை-ஆயுதமாகவும். வானம்-பரமபதத்தை. நாட-நாடாகவுமுடையையாய். இப்படி பரமப்ராப்யனானவுன்னை, கார்முகில்-எதிர்த்தலையில் தரம்பாராதேயுபகரிக்கும் காளமேகம்போலே. எம்-எனக்காக்கின. வண்ணா - வடிவையுடையையாய். அவ்வடிவழகாலே, பொருள்-ஒருவஸ்துவென்று. அல்லாத-புத்திபண்ணவொண்ணாதபடி * அஸந்நேவவான. என்னை - என்னை. பொருள் - லப்தஸ்வரூபனாம்படி. ஆக்கி-அங்கீகரித்து. அதுக்குமேலே, அடிமை-வாசிகமானகைங்கர்யத்தையும். கொண்டாய்-கொண்டவனாய். அதுமுழுக்கநடத்துகைக்காக, தெருள் - ஜ்ஞாநாதிசயத்தை. கொள்-உடையராய்க்கொண்டு. நால்-நாலுவகைப்பட்ட. மறை - வேதங்களையும். வல்லவர்-தாங்கள்நினைத்தபடி நிர்வஹிக்கவல்லவர்கள். பலர் - பலரும். வாழ்-பகவதநுபவத்தாலே சம்பந்நராய்வர்த்திக்கிற. சிரீவரமங்கலநகர்க்கு-சிரீவரமங்கலநகருக்கு. அருள்-நிரவதிகக்ருபையை. செய்து-பண்ணி. அங்கு - அங்கே. இருந்தாய்-இருக்கிறவனே. இப்படியிதுக்குமுன்பு நீபண்ணினவுபகாரத்துக்குநான், ஒரு-ஒரு. கைம்மாறு-ப்ரத்யுபகாரம். அறியேன்-பண்ணினேனாகவறிகிறிலேன்.

ஆனபின்பு மேலும் நீயேயருளவேணுமென்று வாக்யசேஷமாய், "தமியேனுக்கருளாய்" என்றுகீழோடே யந்வயிக்கிறது. கருளப்புள்ளென்று - "கறையணி மூக்கு" என்னுமாபோலே "ஆகெஸாஞாதிெதரா" (ஆகேஸாந்தாத்ஸிதேதரம்) என்கிறபடியே கறுத்ததிருமுகமுடையவனென்னவுமாம். தெருள்கொள் நான்மறையென்று - வேதவிசேஷணமாகவுமாம்...........................*

## ஈடு - மூன்றாம் பாட்டு.

"அருளாய்" என்றீர், அருளக்கடவோம், அதிலொருதட்டில்லை; ஆனாலும், "ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி" (ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி) "கர்த்தாஶாஸ்த்ரார்த்தவத்த்வாத்" (கர்த்தாஶாஸ்த்ரார்த்தவத்த்வாத்) அன்றே, அருள்பெறுவார்பக்கலிலேயும் சிறிதுண்டாகவேணுங்காணுமென்ன; இதுமேலுற்றைக்கிட்ட மர்யாதையோ! கீழுற்றைக்குமேதேனுமுண்டோ; ஆனபின்பு, இத்தலையில் நிருபித்காரத்தைவிட்டு உன்க்ருபையாலே செய்தருளாயென்கிறார். இவ்வளவும்வர இதுக்குமுன்பு நீ நிர்ஹேதுகமாக விஷயீகரித்தபின்பு, மேலும் நீசெய்தருளவேணுமென்கிறார்.

(கருளப்புட்கொடி) நீமுன்பருளிற்று உன்னையறிந்தோ, என்னையறிந்தோ!. (கருளப்புட்கொடி) இன்னமுமொன்று வேண்டும்படியோ வுன்னுயர்த்தி. பெரியதிருவடியை த்வஜமாகவுடையனாயிருக்கிறவிருப்பு. * அருளாழிப்புள்ளிறே. (சக்கரப்படை) அதுவும் வரவேண்டும்படியோ இதிருக்கிறது. * அருளார்திருச்சக்கரமிறே. (வானநாட) ஒன்றெடுக்கவும் ஒன்றுபிடிக்கவும்வேணுமோ, இருப்பிடமேயமையாதோ. பெரியதிருவடியை த்வஜமாகவும், திருவாழியை ஆயுதமாகவும், பரமபதத்தை வாஸஸ்த்தாநமாகவுமுடையையாய்வைத்து. பெரியதிருவடியை மேற்கொள்ளுதல், திருவாழியைச்சலியாமல்பிடித்தல், பரமபதத்தையிருப்பிடமாகவுடையனாதல், இவையாயிற்று சர்வாதிகவஸ்துவுக்கு லக்ஷணம்; இவையோரொன்றே யமைந்திருக்க, சர்வப்ரகாரபரிபூர்ணனாயிருக்கிறபடி. (கருளப்புள்) புள்ளென்று - பக்ஷிசாமாந்யமாய், கருடனாகிறபுள்ளென்று விசேஷிக்கிறது. "ஈடே" என்கிறவித்தை - "ஈளோ" என்னுமாபோலே-கருளனென்கிறது. அன்றிக்கே, கருளென்று - கறுப்பாய், அது - சீற்றமாய், ப்ரதிபக்ஷத்தின்மேலே சீற்றத்தையுடையவனென்றுமாம். "கருளுடையபொழில்மருது" என்னக்கடவதிறே. (எங்கார்முகில்வண்ணா) பெரியஉன்னுயர்த்தி பாராவிட்டால், வர்ஷிக்கிறஸ்த்தலத்தைத்தான்பார்த்தாயோ. என்பக்கலிலே ஔதார்யத்தைப்பண்ணினவனே. என்னளவுபாராதே ப்ரயோஜநநிரபேக்ஷமாகப்பண்ணினபடி. பண்ணினஔதார்யமேதென்ன (பொருளல்லாதவித்யாதி) வஸ்துமுன்பேயுண்டாய், அதுக்கோருத்கர்ஷம்பண்ணிவிட்டாயோ; * அஸ

ந்நேவ ஸபவதியிறே விஷயீகாரத்துக்குமுன்பு, இப்போதொருவஸ்து வாக்கி, "ஸந்தமேநம்" (ஸந்தமேநம்) என்றுஜ்ஜீவிக்கும்படிபண்ணி னாய். (அடிமைகொண்டாய்) "பெருமக்களுள்ளவர்" என்கிறபடியே, நித்யஸித்தர் செய்யக்கடவ கைங்கர்யத்தையன்றோ என்னைக்கொண்டது. உண்டாக்கினவளவேயோ, ஜீவநமுமிட்டிலேயோ. "கார்முகில்" என்றதுபலித்தபடியிறே. அடிமைகொண்டாயென்கிறது - "அடிதொழுதெழு" என்னப்பண்ணின வவ்வளவையிறே. * மயர்வறமதிநலமருளப்பெற்றவ ரிப்படிசொல்லுகையாலே, ஸ்வநிகர்ஷம்சொல்லுகை ஜ்ஞாநகார்யம்; "ஈஸ்வரோஹம்" என்றிருக்கை அஜ்ஞாநகார்யம்.

(தெருள்கொள்நான்மறைவல்லவர்) தெரியும்படி வேததாத்பர்யம்கைவந்தவர்கள். ஜ்ஞாநாதிசயத்தை யுடையராய்க்கொண்டு, நாலுவகைப்பட்டவேதங்களையும் தாங்கள்நினைத்தபடி நிர்வஹிக்கவல்லவர்கள். (பலர்) ஒருவரிருவரன்றிக்கே ஸ்ரீவைகுண்டம்போலே திரள்திரளாயிருக்கை. (வாழ்) வேதார்த்தபூதனைக்கண்டநுபவிக்கிறவர்கள். தீர்த்தங்களிலே வர்த்திக்கிற சத்வங்களுக்குப் பாபம்போகிறதில்லையிறே ஜ்ஞாநமில்லாமையாலே; அங்ஙனன்றிக்கே, ஜ்ஞாநமும் அத்தோடுசேர்ந்த வ்ருத்தியுமுடையராயிருக்கை. ( சிரீவரமங்கலநகர்க்கருள்செய்தங்கிருந்தாய் ) அங்குள்ளார்க்குத் தன்னைக்கொடுத்துக்கொண்டிருக்கிற விருப்புத்தன்பேறாகவிருக்கிறபடி. சிரீவரமங்கலநகரிலுள்ளாரர்த்திக்கவன்றிக்கே, அவர்கள்பக்கல் தண்ணளியாலேவந்திருந்தவனே. என்னையடிமைகொள்ளுகைக்காக அங்கேவந்திருந்தாயென்றுமாம். "கைங்கர்யத்தளவும் வரநிறுத்தினோம், இனியதுக்குவிச்சேதம் வரவொண்ணாது" என்று அங்கே வந்திருந்தாய்.

(அறியேனொருகைமாறே) நீயிவ்வளவாக வுபகரித்துநின்றவிதுக்கு, நானொன்றுசெய்தேனாக வறிகிறிலேன். இதுக்குமுன்புபகரித்ததுக்கு ஒருஹேது என்பக்கலிலேயுண்டென்று சொன்னாயாதல், மேலும் நீயே நிர்வஹித்தாயாதல் செய்யவேணும். "நீருள்ளீராகையாலேசெய்தோம்" என்றும்சொல்லலாவதில்லை உன்னால், * பொருளல்லாதவென்னைப்பொருளாக்கியிறே அடிமைகொண்டது.................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (கருளப்புள்ளித்யாதி) தம்முபாயசூந்யதையைச்சொல்லி, "நீயேரக்ஷிக்கவேணும்" என்றுப்ரார்த்திக்கிற ப்ரகரணத்துக்கு "அடிமைகொண்டாய்" "அறியேனொருகைமாறே" என்கிறவிது சேராதென்கிறசங்கையிலே; இது-முன்புசெய்ததுக்கொரு ப்ரத்யுபகாரமறியேன் என்கிறத்தைச் சொல்லுகிறதென்னு மிடந்தோன்ற வவதாரிகை (அருளாயென்றீரித்யாதி) (ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி) சேதநேப்ரயோக்தரி ஸதிஶாஸ்த்ரஸ்யஸாபல்யம்பவதி. ஆத்மாகர்த்தாவானால்ஶாஸ்த்ரம் ஸப்ரயோஜநமென்றபடி. (கர்த்தாஶாஸ்த்ரார்த்தவத்த்வாத்) ஶாஸ்த்ரம்-விதிவாக்யம். ஶாஸ்த்ரம், அர்த்தவத்தாம்போது-ப்ரயோஜநவத்தாம்போது, ஆத்

மா கர்த்தாவாகவேணுமென்றபடி. மேலுற்றைக்கிட்ட மர்யாதையோவென்றது- "அருள்செய்தங்கிருந்தாய்" என்றத்தைப்பற்ற. கீழுற்றைக்குமென்றது - "பொருளல்லாத வென்னைப்பொருளாக்கி" என்றத்தைப்பற்ற. ஆனபின்பு - முன்பின்றிக்கே இப்போதுண்டானபின்பு.

"அடிமைகொண்டாய்" என்னுமளவுக்கும்பாவம் (நீமுன்பித்யாதி) (அறிந்தோ) என்கிற ஸ்வரத்துக்குபாவம் - உன்பெருமையையு மென்சிறுமையையும் பாராதே முன்பு நிர்ஹேதுகமாக விஷயீகரித்தாப்போலே, ப்ராப்தியையு முன்க்ருபையாலே செய்தருளவேணுமென்று. "கருளப்புட்கொடி" என்றதுக்குபாவம் (இன்னமுமித்யாதி) அதாவது-கருடத்வஜத்வமே யுன்பெருமைக்குநிரபேக்ஷசாதகம், சக்ரதாரணமும் பரமபதநிலயத்வமும் மிகையென்றபடி. சப்தார்த்தம் (பெரியதிருவடியையித்யாதி) கீழ்-மேன்மைக்குடலாகவருளிச்செய்து, நீர்மைக்குடலாகவருளிச்செய்கிறார் (அருளாழிப்புள்ளிறே, அருளார்திருச்சக்கரமிறேயென்று) ஆக, இவர்கள்சேர்த்தி மேன்மைக்கும் நீர்மைக்கு முடலாயிருக்கிறபடி. கீழிரண்டையும் பற்ற ரஸோக்தி (ஒன்றெடுக்கவுமித்யாதி) மேன்மைக்குடலாகச்சொன்ன வர்த்தவிவரணம் (பெரியவித்யாதி) ஒன்றைச்சொல்லவமைந்திருக்க, மூன்றையும்சொல்லுகிறதுக்குபாவம் (இவையித்யாதி) ஆனால், கருடனென்னவேண்டாவோவென்ன (ஈடேயென்கிறவித்யாதி) "கருள்" என்று-கறுப்பைச்சொல்லுமோவென்ன (கருளுடையவித்யாதி) சீற்றத்தையுடைத்தாய்ச் சோலைசெய்திருக்கிற யமளார்ஜுநங்களென்றபடி. பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து ஒன்பதாந்திருமொழி மூன்றும்பாட்டு.

"எம்" என்றதுக்குபாவம் (பெரியவித்யாதி) விவரணம் (என்னளவித்யாதி) வஸ்துவில்லையோவென்ன (அஸந்நேவேத்யாதி) "பொருளாக்கி" என்றவநந்தரம், "அடிமைகொண்டாய்" என்றதுக்குபாவம் (உண்டாக்கினவித்யாதி) "கார்முகில்" இத்யாதிக்கு - மேகம் ஜீவநத்தைக்கொடுக்குமிறேயென்றுகருத்து. அடிமைகொண்டால் துஃகப்படுவானென்னென்ன (அடிமையித்யாதி) பெருமக்களுள்ளவர்-நித்யஸித்தரானபெரியோர்கள்.

"தெருள்கொள்நான்மறைவல்லவர்" என்று - ஜ்ஞாநத்தைச்சொல்லி, "வாழ்" என்று - அநுபவத்தைச்சொல்லுகிறதென், திவ்யதேசவாஸந்தானேயுஜ்ஜீவநஹேதுவன்றோவென்ன (தீர்த்தங்களிலேயித்யாதி) இங்கே - "[illegible] ।  [illegible]" (கங்காதிதீர்த்தேஷு வஸந்திமத்ஸ்யாஃதேவாலயேபக்ஷிஸங்காஃசநித்யம் । பாவோஜ்ஜிதாஸ்தேநபலம்லபந்தேதீர்த்தா புண்யாயதநாச்சமுக்யாஃ) என்றதநுஸந்தேயம். "நகர்க்கு"- நகரிலுள்ளார்க்கு. அவர்க்கருள்செய்தால் தமக்கேதென்ன (அங்குள்ளார்க்கித்யாதி) "அங்கு" - சிரீவரமங்கலநகரிலே. "அருள்செய்து" என்றதுக்குபாவம் (சிரீவரமங்கலமித்யாதி) ஷஷ்டிக்குப்பொருளின்றியே, சிரீவரமங்கலநகரானவங்கே யெனக்கருள்செய்கைக்காக விருந்தாயென்றர்த்தாந்தரம் (என்னையடிமையித்யாதி) "அடிமைகொண்டாய்" என்றுசொல்லியிருக்க, அடிமைகொள்ளுகைக்காக வந்திருக்கையாவதேதென்ன (கைங்கர்யத்தளவுமித்யாதி)

ஆகில் செய்யவடுப்பதேதென்ன (இதுக்குமுன்பித்யாதி) அதாவது - "அடியேனுருகைமாறு" என்று - கீழ், நீசெய்ததுக்கு ப்ரத்யுபகாரமறியேனென்கை

யாலே, மேலும் நீயேசெய்யவேணுமென்றுகருத்து. "ஹேதுவில்லை" என்கிறதென், நீருள்ளீராகையாலே செய்தோமென்ன (நீருள்ளீரித்யாதி)

க்ரமேணாந்வயः.........................................................*

## நான்காம்பாட்டு.

மாறுசேர்படைநூற்றுவர்மங்கவோரைவர்க்காயன்றுமாயப்போர்பண்ணி
நீறுசெய்தவெந்தாய்நிலங்கீண்டவம்மானே
தேறுஞானத்தர்வேதவேள்வியறாச்சிரீவரமங்கலநக
ரேறிவீற்றிருந்தாயுன்னையெங்கெய்தக்கூவுவனே.

### ஆறாயிரப்படி.

(மாறுசேர்படை) இப்படி ஸ்வப்ரயோஜந நிரபேக்ஷமாகவன்றோ வாஶ்ரித ஸம்ரக்ஷணம்பண்ணியருளிற்று, ஆனபின்பு அடியேனுடைய அபேக்ஷிதத்தையு மப்படியே செய்தருளாயென்கிறார்.................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதஸம்ரக்ஷணைக ஸ்வபாவனானவுன்னை யென்னபேக்ஷைஸாதநமாகப்பெறுவதெங்கேயென்கிறார்.

மாறு-சத்ருக்களாய்க்கொண்டு. சேர் - சேர்ந்த. படை - சேனையையுடைய. நூற்றுவர்-துர்யோதநாதிகள்நூற்றுவரும். மங்க-நசிக்கும்படி. ஓர்-தனியரான. ஐவர்க்கு-பாண்டவர்களைவர்க்கும். ஆய்-ஸஹாயபூதனாய்க்கொண்டு. அன்று - துர்யோதநாதிகளாலேபீடிதரானவன்று. மாயம் - பகலையிரவாக்கினதுமுதலான ஆஶ்சர்ய சேஷ்டிதங்களையுடைய. போர்-யுத்தத்தை. பண்ணி-பண்ணி. "எல்லாச்சேனையும்" என்கிறபடியே ஸமஸ்தபரிகரத்தையும், நீறு-தூளிசேஷமாம்படி. செய்த - பண்ணின. எந்தாய்-மஹோபகாரகனாய். நிலம்-அவர்களோபாதி வ்யாபாரக்ஷமையுமல்லாதபூமியை. கீண்ட-ப்ரளயாபத்திலேயிடந்தெடுத்த. அம்மானே-ஸ்வாமியாய். அவ்வவஸ்தைகளுக்குப்பிற்பட்ட வென்போல்வார்க்காக, தேறு-ப்ராப்யப்ராபகவிஷயமாகத்தெளிந்த. ஞானத்தர்-ஜ்ஞாநத்தையுடையரானவர்களுடைய. வேதம்-வைதிகமான. வேள்வி-பகவத்ஸமாராதநம். அறா-இடைவிடாமல் நடக்கக்கடவதான. சிரீவரமங்கலநகர்-சிரீவரமங்கலநகரத்திலே. ஏறி-அவர்களோடொக்கஏறி. வீற்று-அவர்களுக்காராத்யனாகக்கொண்டு வ்யாவ்ருத்திதோன்ற. இருந்தாய் - இருந்தவனே. உன்னை-இப்படி அபேக்ஷாநிரபேக்ஷமாக ஸ்வயமேவரக்ஷணத்திலே ப்ரவ்ருத்தனாய் அநந்யஸாத்யனானவுன்னை. எங்கு - எங்கே. எய்த - ப்ராபிப்பதாக. கூவுவன்-நான்கூவுவேன்.

நீ கூவுதல் வருதல் செய்கையன்றோ அநுரூபமென்றுகருத்து... ... ... ...*

### ஈடு - நான்காம்பாட்டு.

"வெறுமுன்க்ருபையாலே ரக்ஷிக்கவேணும்" என்னாநின்றீர், நாமிதுக்குமுன்பு அங்ஙன்செய்தவிடமுண்டோவென்ன; ஒன்றிரண்டு

தாஹரணத்தை யெடுத்துக்காட்டி; இங்ஙனேசெய்ததில்லையோ, எனக்கு ம்செய்தருளவேணுமென்கிறார்.

(மாறுசேர்படைநூற்றுவர்) எதிரிகளாய்க்கொண்டுவந்துசேர்ந்தபடையையுடையநூற்றுவர். அவர்களுக்கு சஹகாரிகளாய்வருகையன்றிக்கே, தனித்தனியே சத்ருக்களாய்வந்துகிட்டுகை. (படை - சேனை.) அன்றிக்கே, (மாறுசேர்படைநூற்றுவர்) மாற்றாராய்ச்சேர்ந்து சாயுதரானநூற்றுவரொன்றுமாம். (படை-ஆயுதம்) "த்விஷதந்நம் நபோக்தவ்யம்" (த்விஷதந்நம்நபோக்தவ்யம்) என்கிறபடியே, தனக்கு சத்ருக்களாகநினைத்திருக்கிறபடி. (மங்க) மாள. விளக்குப்பிணம்போலே காணவொண்ணாதபடி. (ஓரைவர்க்காய்) இரண்டுபக்ஷமுமொத்திருக்க, ஒருதலையிலேநின்றாயோ. உளனானவொருசாரதியுங்கூட அப்ரதானனும்படி தனியரான ஐவர். (ஐவர்க்காய்) அவர்களுக்குத்தன்னை யிஷ்டவிநியோகார்ஹனாக்கிவைத்தபடி. (அன்று) யுத்தோந்முகராய்வந்தவன்று. (மாயப்போர்பண்ணி) ஆச்சர்யமானயுத்தமென்னுதல், வஞ்சகமானயுத்தமென்னுதல்; அதாவது - பகலையிரவாக்கியும், "ஆயுதமெடேன்" என்றாயுதமெடுத்தும், சத்ருக்களுயிர்நிலையைக்காட்டிக்கொடுத்தும் செய்தவை. (நீறுசெய்த) பஸ்மமாக்கின. "கூறாய்நீறாய்நிலனாகி" என்றுசொல்லுகிறபடியே. (எந்தாய்) பாண்டவர்களுக்காக துர்யோதநாதிகளை நிரசித்ததும் தம்பேறாயிருக்கிறபடி. நீர்சொல்லுகிறவையெல்லாமுண்டு, ஆனாலும் அவர்களெனக்கு பவ்யரன்றோவென்ன; ஆனாலதுவும்பாராதேயன்றோ நீ பூமியைரக்ஷித்தது (நிலங்கீண்டவம்மானே) அதுகிடக்கிடுவேணுமாகில், அதுக்கொன்றுசொல்லுகிறாய்; இப்ப்ரளயங்கொண்டபூமிக்கு என்னதக்கோர்மையுண்டாய் நீசெய்தது. (நிலங்கீண்ட) "எடுக்கவேணும்" என்றபேக்ஷிக்கவும்மாட்டாதே, உபகாரஸ்ம்ருதியுமின்றிக்கேயிருக்கிற விதுக்கு உதவிற்றிலையோ. இங்கொருதலையேயிறேயுள்ளது. (அம்மானே) "உடைமையிழக்கவொண்ணாது" என்று வெறுமன் க்ருபையாலே செய்தவித்தனையன்றோ. (தேறுஞானத்தரித்யாதி) அநுஷ்டாநாநநுஷ்டாநங்களை விகல்பிக்கலாம்படி தெளிந்திருக்குமவர்கள். அநநுஷ்டாநம் சாதநமாகாதே. "நிஷித்தாசரணம் நமக்குரக்ஷகமன்று" என்றிருக்குமோபாதி, "விஹிதாசரணமும் நமக்குரக்ஷகமன்று" என்றிருக்குமவர்கள். ஆனலிது அநுஷ்டிக்கிறதென்னென்னில்; ஈச்வராஜ்ஞாநுவர்த்தநம்பண்ணினனாகிறான்; இனித்தான் நிஷித்தாசரணம் ரஜஸ்தமஸ்ஸுக்களை வர்த்திப்பிக்குமாபோலே, இதுவும் சத்த்வவ்ருத்தியையும்பண்ணிக்கொடுக்கக்கடவதாயிருக்குமிறே; இனித்தான் சேதநனுகையாலே ஒரு ப்ரவ்ருத்திபண்ணியன்றியில்லானே. "ஸத்த்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" (ஸத்த்வாத்ஸஞ்ஜாயதேஜ்ஞாநம்) என்று ஜ்ஞாநத்துக்கு மடியாயிருக்குமிறே, ஆகையாலே அநுஷ்டேயமாகக்கடவது. (சிரீவரமங்கலநகரோறிவி

ற்றிருந்தாய்) இவனுமவர்களிலே யொருவனாய் ஒக்கக்குடியேறியிருக்கிறபடி. (வீற்றிருந்தாய்) "இவர்கள்நடுவேயிருக்கப்பெற்றோமே" என்று பெரும்பேறுபெற்றானாயிருக்கிறபடி. ( உன்னை ) அநந்யசாத்யனானவுன்னை. (எங்கெய்தக்கூவுவனே) நீயிவ்விருப்பிருக்கைக்கு நானநுஷ்டித்ததேதேனும்சாதந முண்டாகிலன்றோ என்ப்ராப்திக்கு நானேதேனும் செய்வது, இவ்வளவாகப்பண்ணின நீமேலு முன்க்ருபையாலே செய்தருளவேணும்..............................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (மாறுசேரித்யாதி) "ஐவர்க்காய்" இத்யாதியையும், "நிலங்கீண்டவம்மானே" என்றத்தையுங்கடாக்ஷித்து, உத்தரப்ரத்யுத்தரமாகவவதாரிகை (வெறுமுன்க்ருபையாலேயித்யாதி)

"மாறுசேர்" என்றத்தை - * படைக்குவிசேஷணமாக்கியர்த்தம் ( எதிரிகளாயித்யாதி ) படை-சேனை. துர்யோதநாதிகளுக்கு சஹாயமாகையாலே இவர்களுமெதிரிகளாயிருக்க, "மாறுசேர்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (அவர்களுக்கித்யாதி) த்விதீயார்த்தத்துக்கு, "மாறுசேர்"என்றது - * நூற்றுவர்க்கு விசேஷணம். படை-ஆயுதம். மாற்றாராய்-க்ருஷ்ணனுக்குமாற்றாராய். துர்யோதநாதிகள் க்ருஷ்ணனுக்குமாற்றாரோவென்ன (த்விஷதந்நமித்யாதி) "𑌦𑍍𑌵𑌿𑌷𑌦𑌨𑍍𑌨𑌂 𑌨 𑌭𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌂 𑌨𑍈𑌵 𑌭𑍋𑌜𑌯𑍇𑌤𑍍 । 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍍 𑌦𑍍𑌵𑌿𑌷𑌸𑍇 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌮𑌮 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌹𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌃" ( த்விஷதந்நம்நபோக்தவ்யம்த்விஷந்தம்நைவபோஜயேத்.பாண்டவாந்த்விஷஸேராஜந்மமப்ராணாஹிபாண்டவா: ) இதிபாரதே துர்யோதநம்ப்ரதிக்ருஷ்ண. விளக்குப்பிணம்-இருட்டு. தாத்பர்யம் ( இரண்டுபக்ஷமுமித்யாதி ) அதாவது-பக்ஷத்வயமும் துல்யபலமாயிருக்க, கேவலக்ருபையாலே தாழ்ந்ததலையிலே நின்றாயத்தனையன்றோவென்றபடி. நின்றாயோ-நின்றாயே. நின்றாயத்தனையன்றோவென்றபடி. "ஓரைவர்" என்றதுக்கு - தனியரானவைவரென்று சப்தார்த்தம்விவக்ஷித்து, க்ருஷ்ணனில்லையோவென்ன (உளனாவித்யாதி) அப்ரதாநனும்படி-யுத்தம்பண்ணப்போகாமையாலே அப்ரதாநனும்படி. "ஆய்" என்றதுக்கர்த்தம் (அவர்களுக்கித்யாதி) அதாவது - வஞ்சநமாவது. (கூறாய்) இத்யாதிக்கு-முற்படவிருதுண்டமாக்கி, பின்னை நீறாக்கி, பின்னைதறையாக்குமென்றபடி.

அதுவும்-பவ்யதையும். "அதுவும்பாராதே" என்றத்தை முகபேதேநவிவரிக்கிறார் (அதுகிடக்கிடுவித்யாதிவாக்யத்வயத்தாலே) தக்கோர்மை-நன்மை. "நிலம்" என்றவசேதநசமாதிக்குபாவம் ( எடுக்கவேணுமித்யாதி ) ஒருதலையேயிறே யுள்ளதென்றது - க்ருஷ்ணனும் பாண்டவர்களுமான விரண்டுதலையிலும் ஸ்நேஹமுண்டங்கு; இங்கு அசேதநமானபூமிக்கு பவ்யதையில்லாமையாலே, வராஹநாயனாருடைய ஸ்நேஹமேயுள்ளதென்றபடி.

"தேறுஞானத்தர்" என்றத்தை "வேதவேள்வியர்" என்றதுக்குசேஷமாக்கியருளிச்செய்கிறார் (அநுஷ்டாநேத்யாதி) வேள்வி-பஞ்சமஹாயஜ்ஞம். தெளிந்தஜ்ஞாநத்தையுடையவர்களுடைய வேதமும் வேள்வியும் மாறாத சிரீவரமங்கலநகரிலேயித்யர்த்த:. ஜ்ஞாநத்துக்குத்தேற்றமாவது-வேதவேள்வியி லுபாயத்வபுத்திகலசாதிருக்கை. விகல்பிக்கலாம்படி-சமமாகவிகல்பிக்கலாம்படி. அதாவது-அநநுஷ்

ட்டாநத்தி லுபாயபுத்திபண்ணுதவோபாதி, வக்ஷ்யமாணமானவேதத்திலும் வேள்வியிலு முபாயபுத்திபண்ணுதவர்களென்றபடி. ஏதத்விவரணம் (அநநுஷ்ட்டாநமித்யாதிவாக்யத்வயமும்) அநநுஷ்ட்டாநம் - நிஷித்தாசரணம். அநுஷ்டிக்கிறதுக்கடைவே ஹேதுத்ரயம் (ஈஸ்வராஜ்ஞேத்யாதிவாக்யத்ரயத்தாலே) இவற்றில், ஈஸ்வராஜ்ஞாநுவர்த்தநம்பண்ணுகை ப்ரதாநமாய், மற்றவிரண்டும்-ஜ்ஞாநயோகநிஷ்ட்டனுக்குச்சொன்னதாகையாலே இதுக்கு த்ருஷ்டாந்தமாகிறதென்று கண்டுகொள்வது. த்ருதீயஹேதுவில், குர்வத்ரூபகரணனுகையாலே ப்ரவ்ருத்திசீலனுயன்றியில்லானென்றபடி. “ 𑌨 𑌹𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌜𑌾𑌤𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 । 𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌵𑌶𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ” ( நஹிகஶ்சித்க்ஷணமபிஜாதுதிஷ்ட்டத்யகர்மக்ருத் । கார்யதேஹ்யவஶ:கர்மஸர்வ:ப்ரக்ருதிஜைர்க்குணை: ) என்னக்கடவதிறே. த்விதீயஹேதுவில், ஸத்த்வவ்ருத்தியுண்டாகில் பலமேதென்ன (ஸத்த்வாத்ஸஞ்ஜாயதஇத்யாதி) “ 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌸𑌞𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌰𑌜𑌸𑍋 𑌲𑍋𑌭 𑌏𑌵 𑌚 । 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌮𑍋𑌹𑍌 𑌤𑌮𑌸𑍋 𑌭𑌵𑌤𑍋𑌽𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍇𑌵 𑌚 ” (ஸத்த்வாத்ஸஞ்ஜாயதேஜ்ஞாநம்ரஜஸோலோபஏவச । ப்ரமாதமோஹௌதமஸோபவதோஜ்ஞாநமேவச) இதிகீதாஸூ. “ஏறி” என்றதுக்குபாவம் (இவனுமித்யாதி) “வீற்றிருந்தாய்” என்றதுக்குபாவம் (இவர்கள்நடுவேயித்யாதி) *

( உன்னையெங்கெய்தக்கூவுவனே ) உன்னைக்கிட்ட வென்னசாதநாநுஷ்ட்டாநம் பண்ணப்புகுகிறேனென்றபடி. கூவுகை - சாதநாநுஷ்ட்டாநத்தாலே யழைக்கை. க்ரமேணார்வய:......................................................*

———— * 30 * ————

## ஐந்தாம்பாட்டு.

எய்தக்கூவுதலாவதேயெனக்கெவ்வதெவ்வத்துளாயுமாய்நின்று
கைதவங்கள்செய்யுங்கருமேனியம்மானே
செய்தவேள்வியர்வையத்தேவரறாச்சிரீவரமங்கலநகர்
கைதொழவிருந்தாயதுநானுங்கண்டேனே.

### ஆறுயிரப்படி.

( எய்த ) ப்ரதிகூலர்க்கன்றோ அவர்கள்நடுவே புகுந்துவைத்தே உன்னைக்காட்டிக்கொடாதொழிவது, உன்னை யாசைப்பட்டார்க்கு மரியையோ, ஆனபின்படியேனுடைய வபேக்ஷிதத்தைச்செய்தருளாய். உம்முடைய வபேக்ஷிதம்பெறுகைக் குடலானவுபாயத்தை நீர்செய்யலாகாதோவென்னில்; உன்றிருவடிகளைக்கிட்டுகைக்கிடாயிருப்பதோருபாயமென்னாற்செய்ய முடியாது. இனித்தான் செய்யவேண்டுவதொன்றுண்டோ. மதேகபோகராயிருப்பாரெல்லார்க்கும் கண்ணாலேகண்டநுபவிக்கலாம்படி சிரீவரமங்கலநகரிலே புகுந்திருந்தோமிறேயென்ன; அதுநானுங்கண்டேன், எனக்கதமையாதென்கிறார்...................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதவிரோதிகளான ஆஸுரப்ரக்ருதிகளை அந்தர்ப்பேதம்பண்ணியழிக்கும் ஸ்வபாவனான நீ ஆஸ்ரிதர்க்கநுபாவ்யனாய்வந்திருக்கக்கண்டேன், இப்படியிருக்கிறவுன்னைப்பெறுகைக்கு நான்ப்ரவர்த்திக்கை அநுரூபமோவென்கிறார்.

எனக்கு - அநந்யரக்ஷ்யமான ஸ்வரூபத்தையுடையேனானவெனக்கு. எய்த-புருஷார்த்தப்ராப்திக்குசாதநமாக. கூவுதல்-அபேக்ஷிக்கை. ஆவதே - அநுரூபமோ. அபேக்ஷாநிரபேக்ஷமாக, ஆஸ்ரிதவிரோதிகளான, எவ்வ-எவ்வகைப்பட்ட. தெவ்வத்துள்-சத்ருக்களாகிற அசுரவர்க்கத்துக்குள்ளே. ஆயுமாய்-புத்ராதிவிக்ரஹபரிக்ரஹம்பண்ணிக்கலந்து. நின்று-நின்று. கைதவங்கள் - வைதிகருசியைக்குலைத்து பாஹ்யருசியைப்பிறப்பிக்கையாகிற க்ருத்ரிமங்களை. செய்யும் - செய்யும். கருமேனி-அவர்கள்நெஞ்சைக்கலக்கும் ஶ்யாமளவிக்ரஹத்தையுடைய. அம்மானே - ஸ்வாமியானவனே. ப்ரதிபக்ஷப்ரசங்கமில்லாமையாலே, செய்தவேள்வியர் - க்ருதக்ருத்யராய். வையம்-பூமியிலே. தேவர்-ஜ்ஞாநாத்யைஶ்வர்யத்தாலே ஸூரிசமாநரானவர்கள். அறு-கைவிடாதேவர்த்திக்கிற. சிரீவரமங்கலநகர்-சிரீவரமங்கலநகரிருந்ததே குடியாக. கைதொழ-சேஷவ்ருத்திபண்ணும்படி. இருந்தாய் - சேஷியாயிருந்தாய். நானும்-அவர்களோடொத்த சேஷத்வஜ்ஞாநத்தையுடையநானும். அது-அந்தவிருப்பை. கண்டேன்-கண்டேன்.

ஆனபின்பு என்விரோதியையும்பேதித்து அநுபவிப்பிக்கையு முனக்கே கர்த்தவ்யமென்று கருத்து ............................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ஆஸ்ரித பக்ஷபாதத்தையும் சிரீவரமங்கலநகரிலிருப்பையும் உமக்குக்காட்டினோமே, "எங்கெய்தக்கூவுவன்" என்று - ஒன்றும்பெறாதாரைப்போலே கூப்பிடாநின்றீரோவென்ன; செய்தஅம்சமறிந்தேன், அத்தாலே பர்யாப்தனாகிறிலேனென்கிறார்.

(எய்தக்கூவுதலாவதேயெனக்கு) பொகடு, அதுகிடக்கிடாய், இந்த ஸ்ரியஃபதியைக்கண்ட வனக்கு "இவன்சாதநாநுஷ்டாநம்பண்ணுவான்" என்றுதோற்றியிராதோ. நீயெனக்குக் கைப்படும்படியாக அபேக்ஷிக்கையாவதே. உன்னிலும் நானென்னையறிவேனிறே!. என்னால்செய்யலாவதுண்டோவென்று கேட்கிறார் "அவனாலேபேறு" என்றிருக்குமவராகையாலே; நீகைவிட்டவன்று நானநுஷ்டிக்கும்படி, ஸ்ரியஃபதியான வுன்னோடொக்க விகல்பிக்கலாம்படி யிருந்தேனோவென்கிறார். (எனக்கு) ஒருதுர்ப்பலன்றலையிலே ஒருமலையைவைத்தாற்போலே யிருக்கிறதுகாணுமிவர்க்கு. "[illegible]" (மாம்நமஸ்குரு) என்றால், அநந்தரமில்லையாகாதேதான்.

இனி ப்ரபலனாயிருப்பானொருவன் அத்தைத்தள்ளி, "அஞ்சாதேகொள்" என்னவேணுமிறே (எவ்வவித்யாதி) அநந்யகதிகளாயிருப்பார்பக்கலிலும், அநாஸ்ரிதர்பக்கல்செய்வது செய்யப்புக்கதோவிப்போ

து. எவ்வகைப்பட்ட சத்ருசமூஹங்களினுள்ளேபுக்கு. ( எவ்வ ) எவ்வகைப்பட்ட. தெவ்வவொன்று – சத்ருக்கள். தெவ்வமென்று – சத்ருசமூஹம். "தெவ்வரஞ்ச" என்னக்கடவதிறே. (கைதவங்கள்செய்யும்) க்ருத்ரிமங்களைச்செய்யும். அதாவது-புத்தமுனியாய் அவர்கள்நடுவேபுக்குநின்று அவர்களுக்குண்டான வைதிகப்ரத்தையைப்போக்கினபடி. (கைதவங்கள்செய்யும்கருமேனியம்மானே) வசநங்களாலும் யுக்திகளாலும் க்ருத்ரிமத்தைப்பண்ணி வைதிகப்ரத்தையைப்போக்கி, அவ்வளவிலும் கேளாதார்க்கு வடிவைக்காட்டி வாய்மாளப்பண்ணினபடி. தன்னுடைய வார்த்தைகளாலே அவர்களை சவப்ராயராக்கி, ஒருவனம்புக்கிலக்காம்படிபண்ணிவைத்தான். ( அம்மானே ) சம்பந்தமொத்திருக்கச்செய்தே, நீ அவர்களை யழியச்செய்தது ஆஶ்ரிதர்க்காகவன்றோ. " ஒருதைவமுண்டு " என்றிருக்கிறவர்களை யழித்தவோபாதிகிடாய் " ஒருதைவமில்லை " என்றிருக்கிறவென்னை யொன்றுசெய்யச்சொல்லுகையாவது. " ஒருமாதெய்வமற்றுடையமோயாமே " என்றாரிறே. அவர்களுடைய வைதிகப்ரத்தையை அழிந்தாப்போலேயிருக்கிறதாயிற்று சித்தசாதநபரிக்ரஹத்தைநெகிழ்த்து சாதநத்திலேமூட்டுகிற இது. ( செய்தவேள்வியர் ) "[illegible]" ( விது:க்ருஷ்ணம்ப்ராஹ்மணாஸ்தத்த்வதோயேதேஷாம்ராஜந்ஸர்வயஜ்ஞாஸ்ஸமாப்தா: ) என்றாரிறே. வேறொன்றுசெயயுமவனுக்குக்குறைகிடப்பது மோரம்சமுண்டிறே, க்ருதக்ருத்யரிறே சித்தசாதநபரிக்ரஹம்பண்ணினவர்கள். ( வையத்தேவர் ) பூசுரர். அவர்கள் நித்யவாசம்பண்ணும் சிரீவரமங்கலநகரிலே அங்குள்ளவர்களடிமைசெய்ய, அதுவேதாரகமாகவிருந்தாய்.

ஸ்ரீவைகுண்டத்தைக் கலவிருக்கையாகவுடைய நாமிங்கேவந்து உமக்காகவிருக்க, ஒன்றும்செய்திலோமாகச்சொன்னீரோயென்ன; இருந்தாய், அதில்தட்டில்லை, நானநுபூதாம்சத்தையில்லை செய்கிறேனல்லேன்; அநுபூதாம்சம்போராமல் படுகிறேன். ( அதுநானும்கண்டேனே ) (தேவர்செய்தருளின அம்சமிவ்வளவுண்டு, அதில்குறையில்லை, எனக்கவ்வளவால்போராது. திருவடிகளில் கைங்கர்யமே யாத்ரையாகப்பெறவேணுமென்று வாக்யசேஷமாய்க்கிடக்கிறது.......... ..........*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (எய்தவித்யாதி) " கைதவங்கள்செய்யும் கருமேனியம்மானே, சிரீவரமங்கலநகர் கைதொழவிருந்தாய் " இத்பாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (ஆஶ்ரிதேத்யாதி) செய்தஅம்சமறிந்தேனென்றது - "அதுநானுங்கண்டேனே" என்றத்தைப்பற்ற.

கீழே, " எங்கெய்தக்கூவுவனே " என்று - சாதநாநுஷ்ட்டாநம்பண்ணப்போகாதென்றவர், மீளவும், " எய்தக்கூவுதலாவதேயெனக்கு " என்றுசொல்லுகி

றது புநருக்தமன்றோவென்ன; கீழ் - ப்ராப்திக்கு சாதநாநுஷ்டாநம்பண்ணவே ண்டுவதில்லையென்றார். இங்கே-அஜ்ஞாநாசக்திகளாலே சாதநாநுஷ்டாநம்பண் ணமாட்டேனென்னுமத்தை வ்யங்க்யோக்தியாக வருளிச்செய்கிறாராகையாலே புநருக்தியில்லையென்கிறார் (பொகடித்யாதிவாக்யத்வயத்தாலே) "பொகடு" என்ற தின்விவரணம் (அதுகிடக்கிடாயென்றது) அதுகிடக்கிடாய் - சாதநாநுஷ்டாநம் பண்ணவேணுமென்னு மதுகிடக்கிடாய். அதாவது-நிர்ஹேதுகமாக சிரீவரமங்கல நகரிலே யிருந்தாயாகையாலே ப்ராப்திக்கு சாதநாநுஷ்டாநம் பண்ணவேண்டு வதில்லையென்றுகருத்து. அநுஷ்டிக்கத்தான் வேண்டினாலும், அஜ்ஞாநாசக்திக ளாலே யநுஷ்டிக்கமாட்டேனென்னுமத்தை வ்யங்க்யமாகவருளிச்செய்கிறார் (இந்த்ரியவஶபதியையித்யாதி) இதுக்கு - "எனக்கு" என்றதிலேநோக்கு. இந்த்ரியவஶ பதியையென்றது - விபரீதலக்ஷணையாலே, என்னையென்றபடி. உம்முடையவசக்தி நமக்குத்தெரியுமோவென்ன (உன்னிலுமித்யாதி) இதுவும் - க்ஷேபத்திலே. அதாவ து-சர்வஜ்ஞனான நீயறியாதத்தை நானறிவேனோவென்றபடி. கீழ்வ்யங்க்யோக்தி யாலே யபிப்ரேதமான வஜ்ஞாநாசக்திகளை வ்யக்தமாக வருளிச்செய்கிறார் (அவ னுலேயித்யாதி) அப்படிமலையைவைத்தாப்போலே யிருக்குமோவென்ன; வ்யாக் யாதாவினீடுபாடு (மாம்நமஸ்குர்வித்யாதி) " [illegible] | [illegible] " (மந்ம நாபவமத்பக்தோமத்யாஜீமாம்நமஸ்குரு | மாமேவைஷ்யஸியுக்த்வைவமாத்மாநம் மத்பராயணஃ) இதிகீதாஸுநவமே. அதாவது-பக்தியைவிதித்தவநந்தரம் சத்தாநா சம் பிறந்ததாய்விடுமென்கை. இல்லையாகாதேதான் - சத்தையில்லையாய்விடுமென் றபடி.

மேலிற்பதத்துக்கவதாரிகை (இனிப்ரபலனுயித்யாதி) "சாதநாநுஷ்டாந ம்பண்ணமாட்டேன்" என்றவநந்தரம், அசுரவர்க்கத்தைவஞ்சித்த ப்ரகாரத்தைச் சொல்லுகிறது-சித்தோபாயபூதனுடைய சக்திமத்தையைச்சொல்லி, இப்படிசக்தி மானான நீயே யுபாயமானபின்பு இழக்கவேண்டுவதில்லையென்கைக்காகவென்று (இனிப்ரபலனுய்) இத்யாதிவாக்யத்துக்கு தாத்பர்யம். இனி - உபாயாநுஷ்டாந யோக்யதையற்றபின்பு. அத்தைத்தள்ளி - "சாதநாநுஷ்டாநம்பண்ணப்போகாத வனிழந்தேபோமத்தை" என்கிறசோகத்தைத்தள்ளி. (வேணுமிறே) என்றவநந்த ரம், ஆகையாலே யவன்விரோதிநிரசநசீலவத்தையை யருளிச்செய்கிறானென்று கூ ட்டுவது. அவதாரிகையிலே-விரோதிநிரசநத்துக்குறுப்பாக வருளிச்செய்து, அவர் களை வஞ்சித்தாப்போலே யென்னையும் வஞ்சித்தாயென்று வெறுப்பாக தாத்பர்யா ந்தரம் (அநந்யகதிகளாயித்யாதி) அதாவது-அவர்களுக்கு வைதிகஸ்ரத்தையைக்கு லைத்தாப்போலே, சித்தசாதநநிஷ்டனான வென்னுடைய வத்யவசாயத்தையும் குலைக்கக்கடவதோ விப்போதென்றபடி. "தெவ்வர்" என்று - சத்ருவாசகமாமோ வென்ன (தெவ்வரஞ்சவித்யாதி) சத்ருக்கள் பயப்படும்படியான. பெருமாள்திரு மொழி பத்தாந்திருமொழி மூன்றும்பாட்டு, "செவ்வரி" இத்யாதி. (ஆயுமாய்நின் று) அதுக்குள்ளேயானவனுய்க்கொண்டுநின்று. வாய்மாளப்பண்ணி-சவப்ராயரா கப்பண்ணி. அவர்களை சம்ஹரித்தவன் ருத்ரனன்றோ. இவன்சவமாக்கினபடியெப் படியென்ன (தன்னுடையவித்யாதி) (ஆஶ்ரிதர்க்காகவன்றோ) என்றதுக்குபாவம்- அம்மானுய்வைத்து மாஶ்ரிதபக்ஷபாதத்தாலே யவர்களைநிரசித்தநீ, ஆஶ்ரிதனானவெ ன்னையு மழிக்கலாமோவென்று. உம்மைநாமழித்தோமோவென்ன (ஒருதைவமித் யாதி) (ஒருதைவமில்லை) உன்னையொழிய இதிசேஷஃ. "இவனையொழியவேறொரு

தைவமில்லை " என்றிருப்பரோவென்ன (ஒருமாதெய்வமித்யாதி) அவனையொழிய வேறொருபரதேவதையை யுடையோமோநாமென்றபடி. திருவாசிரியம் ஏழாம்பாட்டு, " நளிர்மதி" இத்யாதி.

செய்தவேள்வியர்-செய்யப்பட்டவேள்வியையுடையவரொன்றாய், சித்தசாதநம்பண்ணினவர்களென்றுவிவக்ஷித்து, செய்தவேள்வியரென்றால் - சித்தோபாய நிஷ்டராச்சொல்லுமோவென்ன; அர்த்தௌசித்யத்தாலே சொல்லுகிறதென்று அதுக்குப்ரமாணம் (விதுஃக்ருஷ்ணமித்யாதி) பாரதே, " [illegible] " (ஸர்வேவேதாஸ்ஸர்வவித்யாஸ்ஸஶாஸ்த்ராஸ்ஸர்வேயஜ்ஞாஸ்ஸர்வஇஜ்யஶ்சக்ருஷ்ணஃ) இதிபூர்வார்த்தம். அர்த்தௌசித்யந்தன்னைக்காட்டுகிறானென்னுதல், " [illegible] " (ஸர்வயஜ்ஞாஃ) இத்யாதிக்குபாவமாதல் (வேறொன்றித்யாதி) " அரு " என்றது-மாறாதவென்றாய், நித்யவாசம்பண்ணுகிறவென்றபடி.

" நானும் " என்ற சப்தத்துக்குபாவம் (ஸ்ரீவைகுண்டத்தையித்யாதி) (எனக்கு - எய்தக்கூவுதலாவதே) அஜ்ஞனுமசக்தனு யநந்யரக்ஷ்ய ஸ்வரூபனுனவெனக்கு, உன்னைக்கிட்டும்படியாக சாதநாநுஷ்டாநம் பண்ணலாவதுண்டோவென்று சப்தார்த்தம். கூவுகை-சாதநாநுஷ்டாநத்தாலே யழைக்கை. சாதநாநுஷ்டாநம்பண்ணுகையென்றபடி. எனக்கு-எய்தக்கூவுதலாவதே, எவ்வதெய்வத்து ளித்யாரப்யாந்வயஃ.........................................................*

# ஆறாம்பாட்டு.

ஏனமாய்நிலங்கீண்டவென்னப்பனேகண்ணாவென்றுமென்னையாளுடை-
வானநாயகனேமணிமாணிக்கச்சுடரே
தேனமாம்பொழிற்றண்சிரீவரமங்கலத்தவர்கைதொழவுறை
வானமாமலையேயடியேன்றொழவந்தருளே.

## ஆறாயிரப்படி.

( ஏனமாய்நிலங்கீண்ட ) மற்றுமக்குச்செய்யவேண்டுவதென்னென்னில்;

அடியேன்தொழவந்தருளவேணும். அது நிர்ஹேதுகமாகச்செய்யக்கடவதோவென்னில்; நிர்ஹேதுகமாகவன்றோ ரஸாதலஸ்த்தமான ஜகத்தையெடுத்தருளிற்றும், இதுக்குமுன்படியேன்றிறத்தில் செய்தருளினசெயலும்; இன்னம் குறையு மிப்படியே யெனக்குச்செய்தருளாயென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதோபகாரகத்வத்தாலே யத்யுஜ்ஜ்வலஸ்வபாவனுனநீ, உன்னை நானநுபவித்து சேஷவ்ருத்தியைப்பண்ணும்படி வந்தருளவேணுமென்கிறார்.

ஏனமாய் - ப்ரளயார்ணவத்துக்குநிலவனும்படி வராஹவேஷத்தையுடைய னாய்க்கொண்டு. நிலம்-பூமியை. கீண்ட-கீண்டெடுத்தவபதாநத்தால். என்-எனக்கு. அப்பனே-உபகாரகனாய். கண்ணா-இப்படி ஏகவிஷயமன்றியே சர்வவிஷயோபகார கனான க்ருஷ்ணனாய். இஸ்ஸௌலப்யாதிகுணப்ரகாஶத்தாலே, என்றும்-என்றுமொ க்க. என்னை-என்சத்தையழியாமல். ஆளுடை-அடிமைகொண்டு. வானம் - பரமபத போகம்போலே வாசிககைங்கர்யங்கொண்ட. நாயகனே-நாயகனாய். மணி-விலக்ஷ ணமான. மாணிக்கம்-மாணிக்கம்போலே. சுடரோ - அத்யுஜ்ஜ்வலமானதேஜஸ்ஸையு டையவனாய். தேன-தேனையுடைத்தான. மாம்பொழில்-மாம்பொழிலையுடைத்தாய். தண்-ப்ரமஹரமான. சிரீவரமங்கலத்தவர்-சிரீவரமங்கலத்திலுள்ளார். கைதொழ- சேஷவ்ருத்திபண்ணும்படியாக. உறை நித்யவாசம்பண்ணாநிற்பானாய். வானம்-பர மவ்யோமவாசிகளுக்கநுபாவ்யமாய். மா - அபரிச்சேத்யமான. மலையே - மலைபோ லே சுஸ்த்திரமானவடிவையுடையவனே. அடியேன் - சேஷபூதனானநான். தொழ- சேஷவ்ருத்திபண்ணும்படியாக. வந்து - அவ்விருப்புக்குலைந்துவந்து. அருள்-அரு ளவேணும்.

வானமாமலையென்று - ஆகாசத்தில் கிட்டும்படியோங்கின அஞ்சனகிரிபோ லேயென்றுமாம்.............................................................................*

## ஈடு - ஆறும் பாட்டு.

அந்தவாக்யசேஷத்தாற்சொன்ன கைங்கர்யத்தைபபேக்ஷிக்கிறார்.

(ஏனமாய்நிலங்கீண்ட) ஆபந்நராநாரறிவிக்கையும் மிகையாம்ப டியன்றோ வுன்படியிருப்பது. ரக்ஷணமொருதலையானால் உன்னைப்பேணா தவனன்றோ. (ஏனமாய்நிலங்கீண்டவென்னப்பனேகண்ணா) மஹாவராஹ மாய் ப்ரளயங்கொண்டபூமியையெடுத்தாய், ஸ்ரீக்ருஷ்ணனாய் சம்சாரப் ரளயங்கொண்ட வென்னையெடுத்தாய். ( ஏனமாய்நிலங்கீண்டவென்னப் பனே ) ப்ரளயங்கதையானபூமிக்குதவினது தமக்குபகரித்ததாயிருக்கிற படி. (என்னப்பனேகண்ணா) என்னுடைய ரக்ஷணத்துக்கேதேனும் முக ம்பண்ணவேணுமோ. என்னுடையரக்ஷணத்துக்கொரு கோலங்கொள் ளவேணுமோ. * கண்ணன்கோளிழைவாண்முகமிறே யிவர்க்குரக்ஷகம். (என்று மென்னையாளுடைவானநாயகனே) தனக்கீடானாரோடிருக்கும் போது மிவரிடையாட்டமாயிற்றாராய்ந்துபோருவது. இவர்சத்தையே தொடங்கிக்கைதொட்டுநோக்கிக்கொண்டாயிற்றுப்போந்தது. (மணிமா ணிக்கச்சுடரோ) உளரானபின்போ றேற்றம்பண்ணிக்கொடுக்கையன்றிக் கே, அடியேபிடித்து நோக்கிக்கொண்டுபோந்து, இச்சைபிறந்தவாறே, அவ்வளவிலே நித்யசூரிகளுக்கு விடும்படியையு மிவர்க்குவிட்டான். (ம ணிமாணிக்கச்சுடரோ) ரத்நஶ்ரேஷ்ட்டமென்னுதல், மணியினுடையவும் மாணிக்யத்தினுடையவும் தேஜஸ்ஸை யுடைத்தாயிருக்குமென்றுமாம். (தேனமாம்பொழிலித்யாதி) தேனையுடைத்தான மாம்பொழிலையுடைத் தாகையாலே ப்ரமஹரமான சிரீவரமங்கலநகரத்திலுள்ளார், ஸ்வரூபா நுரூபமான கைங்கர்யத்தைப்பண்ணாவிருக்கிற. (வானமாமலையே) நித்ய

சூரிகளை யடிமைகொண்டிருக்கும் வேண்டற்பாடுபோலேகாணு மிங்குள்ளாரடிமைசெய்ய விருக்கிறவிருப்பும். (வானமாமலையென்று - ஆகாசத்திலேகிட்டும்படி யோங்கினமலை. இது-திருநாமம்.) (அடியேன்தொழவந்தருளே) நானடிமைசெய்து வாழும்படிக்கீடாகவந்து தோற்றவேணும். (வந்தருளே) நானடிமைசெய்து வாழும்படிக்கீடாக வென்முன்னே நடந்து வரவேணும். அடிமைசெய்கையாவது - "அன்றிவ்வுலகமளந்தாயடிபோற்றி" என்னுமாபோலே, அந்நடையழகுக்கு மங்களாசாஸநம்பண்ணுகை. (வந்தருளே) என்கண்வட்டத்திலே நீயுலாவி நின்றடிமைகொள்ளவேணும்.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (ஏனமாயித்யாதி) "அடியேன்தொழ" என்றத்தைக்கடாக்ஷித்து (அந்தவாக்யசேஷத்தாலித்யாதி)

"என்னப்பனே" என்றத்தை-"கண்ணு" என்றத்தோடே கூட்டிபாவம் (ஸ்ரீக்ருஷ்ணனுயித்யாதி) "என்னப்பனே" என்றத்தைக்கீழேகூட்டிபாவாந்தரம் (ப்ரளயங்கதையானவித்யாதி) "என்னப்பனேகண்ணு" என்றதுக்கு-வெறுப்பிலேயாக்கிசாடுவாக தாத்பர்யாந்தரம் (என்னுடையவித்யாதிவாக்யத்வயமும்) முகம் - வேறுருப்ரகாரமும், வராஹமுகமும். கோலம்-வராஹரூபமும், அலங்காரமும். வேறுருமுகங்கொள்ளாமல் ஸ்வாபாவிகமானக்ருஷ்ணன் முகமேபோருமோவென்ன (கண்ணனித்யாதி) க்ருஷ்ணனுடைய, தன்னழகே தனக்காபரணமாய் ஒளியையுடைய முகமிறேயென்றபடி.

"வானநாயகனுய்வைத்து - என்னையாளுடை" என்றங்வயித்துபாவம் (தனக்கித்யாதி) இடையாட்டம்-கார்யம். "என்றும்" என்றதுக்குபாவம் (இவர்சத்தையேயித்யாதி) "என்றுமென்னையாளுடை" என்கிறதிற்சொன்னவர்த்தத்தையு மநுவதித்துக்கொண்டு, "மணிமாணிக்கச்சுடரோ" என்றதுக்குபாவம் (உளரானவித்யாதி) இரண்டாமர்த்தத்துக்கு, "மணி" என்று-நீலமணி; "மாணிக்கம்" என்று - பத்மராகம். உபயார்த்தத்துக்கும், "சுடர்" என்று-விக்ரஹம். லக்ஷ்மீசமேதத்வாத், ஸ்வபாவதஶ்ச உபயவிததேஜஸ்கத்வமுபபத்யதே. முந்தினவர்த்தத்தில்; மாணிக்கமென்று-ஶ்ரேஷ்டமாய், மணியென்று-ரத்நமாய். ஶ்ரேஷ்டமானமணிபோலே-இந்த்ரநீலமணிபோலேயிருக்கிற விக்ரஹமென்றபடி. தேஜஸ்ஸையுடைத்தாயென்றது-பலிதார்த்தம்.

வானத்திலே - பரமபதத்திலே, பெரியமலைபோலே அபரிச்சின்னனுய்க்கொண்டு வீற்றிருந்தாப்போலே யிங்கும்வீற்றிருக்கிறுனென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நித்யசூரிகளையித்யாதி) வேண்டப்பாடு-பெருமை.

அர்த்தாந்தரம் (நானடிமையித்யாதி) யத்வா, "வந்தருள்" என்றால்-தோற்றவேணுமென்றுசொல்லுமோவென்ன (நானடிமையித்யாதி) நடக்கிறபோது செய்கிறவடிமையேதென்ன (அடிமைசெய்கையாவதித்யாதி) "என்முன்னேநடந்துவரவேணும்" என்றதின்விவரணம் ( என்கண்வட்டத்திலித்யாதி ) அன்றிக்கே, அடிமைசெய்கையாவது - மங்களாசாஸநம்பண்ணுகையென்று - கீழேயருளிச்செய்து,

அவன் ந - ந்தோரிடத்திலேயின்றால், அவ்விளைப்பாற சிசிரோபசாரம் பண்ணுகையென்று தாத்பர்யார்த்தம் (என்கண்வட்டத்திலேயித்யாதி) என்னுதல்.
க்ரமேணாந்வய:..........................................................*

# ஏழாம்பாட்டு.

வந்தருளியென்னெஞ்சிடங்கொண்டவானவர்கொழுந்தேயுலகுக்கோர்
முந்தைத்தாய்தந்தையேமுழுவேழுலகுமுண்டாய்
செந்தொழிலவர்வேதவேள்வியறாச்சிரீவரமங்கலநக
ரந்தமில்புகழாயடியேனையகற்றேலே.

## ஆறாயிரப்படி.

(வந்தருளி) வானவர்கொழுந்தாய்வைத்துவந்தருளி யென்னெஞ்சிடங்கொண்டருளினவனே, உலகுக்கோர் முந்தைத்தாய்தந்தையே, சர்வலோகத்தையு முன்திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தருளின பரமகாருணிகனே, கைங்கர்யைக ரதித்வநிரூபணீய ஸ்வரூபரான ஜநங்களாலே அநவரதபரிசரித சரணயுகளனாய்க்கொண்டு சிரீவரமங்கலநகரிலே யெழுந்தருளியிருந்த அஸங்க்யேயகல்யாணகுணங்களையுடையவனே, அடியேனை யகற்றேலென்கிறார்..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சகலசத்தாஹேதுவானநீ யென்னை விஶ்லேஷிப்பித்து சத்தையழியாதொழியவேணுமென்கிறார்.

வந்தருளி-பரமபதகூீராப்திகளை விட்டுவந்தருளி. என் - உன்பக்கலபேக்ஷையற்றுவிமுகனாய்ப்போந்தவென். நெஞ்சு - நெஞ்சை. இடம் - வாசஸ்த்தாநமாக. கொண்ட-கொண்டுஎன்சத்தையைநோக்கி. வானவர்- பரமபதவாஸிகள்சத்தையையும். கொழுந்தே-அபிவர்த்திப்பிக்குமவனாய். உலகுக்கு-இந்தலோகத்துக்கு. ஓர்-சத்தாஹேதுவாய்க்கொண்டு அத்விதீயனாய். முந்தை-ப்ரதமபாவியான. தாய்-மாதாவும். தந்தையே-பிதாவுமாய். ப்ரளயார்ணவத்திலழுந்தாதபடி, முழுவேழுலகும்-சகலலோகத்தையும். உண்டாய்-அமுதுசெய்து வயிற்றிலேவைத்து சத்தையைநோக்கினவனாய். செம்-அநந்யப்ரயோஜநமாய் கைங்கர்யரூபமாகையாகிற ஆர்ஜவத்தையுடைய. தொழிலவர்-வ்ருத்திவிசேஷத்தையுடையரானவர்களுடைய. வேதம் - வைதிகமான. வேள்வி-பகவதாராதநம். அறா-மாறுமல்நடக்கிற. சிரீவரமங்கலநகர்-சிரீவரமங்கலநகரிலே. அந்தம்-முடிவு. இல்-அற்ற. புகழாய்-குணப்ரதையையுடையனாயிருக்கிறவனே. அடியேனை-அகற்றினாலுமகற்றப்போகாதபடி அநந்யார்ஹமானஸ்வரூபத்தையுடையேனானவென்னை. அகற்றேல்-அகற்றாதொழியவேணும்...........*

## ஈடு-ஏழாம்பாட்டு.

"அடியேன்தொழவந்தருளே" என்கிறசொல்லோடே வரக்காணாமையாலே, "உபேக்ஷித்தானோ" என்றஞ்சி, என்னையகற்றுதொழியவேணுமென்கிறார்.

வந்தருளியித்யாதிக்கு - "பட்டர், ஸ்ரீபுஷ்பயாகமணித்தானவாறே நஞ்சீயரைப்பலகாலு மியல்கேட்டருளுவர், ஒருகோடையிலே திருவீதியிலே நீரைவிட்டு எழுந்தருளியிருந்து இப்பாட்டை இயல்சொல்லும், என்று ஜீயரையருளிச்செய்து, தாமித்தையநுசந்தித்திருந்து அநந்தரத்தே தாமுமிப்பாட்டை இயல்சொல்லி, 'யமநியமாதிக்ரமத்தாலே த்யேயவஸ்துவை மநநம்பண்ணிப் புறம்புள்ள பராக்கையறுத்தநுசந்திக்கப்புக்காலும் சுக்கான்பரல்போலேயிருக்கக்கடவ நெஞ்சுகள் பதஞ்செய்யும்படி, தார்மிகராயிருப்பாரிவை சில ஈரச்சொற்களைப் பொகட்டுப்போவதே!,' என்றருளிச்செய்தார்; நஞ்சீயரிவ்வார்த்தையுருத்தோறுமருளிச்செய்வர்" என்றருளிச்செய்வர்.

(வந்தருளி) நானபேக்ஷியாதிருக்கவந்தருளி. த்விபாந்தரவஸ்துக்களிரண்டிறே சங்கதமாகிறது; பரமபதநிலயனானவனும், சம்சாரத்தையிருப்பிடமாகவுடையவரும், இவ்விருவருமிறே கூடுகிறார்கள். உத்தேஶ்யவஸ்துவிருந்தவிடத்தேற இவன்தான் போகக்கடவனாயிருக்க, அது பெறாவிட்டால் இருவரும் பாதிப்பாதிவழிதான் வரப்பெற்றதோ. வந்தருளியென்று-நெஞ்சுளுக்கிச்சொல்லுகிறாரிறே. ஆப்பான் திருவழுந்தூரரையர் கையிலேதாளத்தைவாங்கி "வந்தருளி, வந்தருளி" என்று, மேல்போகமாட்டாதே படுவராம். (வந்தருளி) த்ரவ்யகுணங்கள் சேர்ந்தாப்போலே. த்ரவ்யமாயிருக்கச்செய்தேயும் குணங்களோடொக்கச் சிலசேரக்காணநின்றோமே; (ஆத்மாவைக்குறித்து சரீரமும், ஜ்ஞாநமும்; பரமாத்மாவைக்குறித்து ஜீவாத்மாவும், த்ரவ்யமாயிருக்கச்செய்தே குணவதப்ருதக்ஸித்தங்களிறே) (என்னெஞ்சு) அவனையொழியவிஷயங்களை யுகந்துபோந்த நெஞ்சுகிடீர். ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாகவுடையவன் என்னெஞ்சுபெறுகைக்கு அவசரப்ரதீக்ஷனுவதே!. (இடங்கொண்ட) வந்தாலும் "நெஞ்சுக்குவிஷயம்வேறேயுண்டு" என்பரோ. * "ஆவாஸம்த்வஹமிச்சாமி" (ஆவாஸம்த்வஹமிச்சாமி) என்னுநின்றான். (என்னெஞ்சிடங்கொண்டவானவர்கொழுந்தே) நித்யஸூரிகளுக்குத்தலையானவன்கிடீர்!. நித்யசம்சாரிகளுக்குத்தலையான வென்னெஞ்சுபெறுகைக்கு ப்ரார்த்திக்கிறான். (உலகுக்கோர்முந்தைத்தாய்தந்தையே) அங்கிரண்டுதலையும் கூடிவருமிறே, இங்குவெறுமொருதலையேயாயிருக்கிறபடி. [ ஸுஹ்ருதாம்பொவஹ்யபிஷக் ] [பூதாநாம்யோவ்யயஃபிதா] நாலுநாள் மணற்கொட்டகமிட்டு விளையாடுமாபோலே அழியும் தாயுந்தமப்

பனுமிறே யவர்கள், ஒருநாளுமழியாத மாதாபிதாக்களிறே யிவர்கள். "𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑍇𑌵𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 𑌪𑌿𑌤𑌾𑌮𑌾𑌤𑌾𑌚𑌮𑌾𑌧𑌵𑌃 । 𑌗𑌚𑍍𑌛𑌧𑍍𑌵𑌮𑍇𑌨𑌂𑌶𑌰𑌣𑌂𑌶𑌰𑌣𑍍𑌯𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍍𑌷𑌭𑌾𑌃" ( ஸர்வேஷாமேவலோகாநாம் பிதா மாதாசமாதவ: | கச்சத்வமேநம்ஶரணம்ஶரண்யம் புருஷர்ஷபா: ) [யுத்த] [கச்சத்வம்] ஒருதலையாகாமே நீங்களு மாபிமுக்யம்பண்ணப்பாருங்கோள். லோகத்துக் கத்விதீயனாய்ப் பழையனான தாயும் தமப்பனுமானவன். (முழுவேழுலகுமுண்டாய்) மாதாவானவள் பத்துமாசம் வயிற்றிலேவைத்து தரிப்பது, "பிறந்துவளர்ந்தால் பின்னைநமக்கு துக்கநிவர்த்தகனும்" என்னும்ப்ரயோஜநத்தைப்பற்றவிறே; இவனங்ஙனன்றிக்கே, "இவைதான் நோவுபடாதொழியப்பெற்றோமே" என்று இதுதன்பேறாயிருக்கும். (செங்தொழிலவர்) "* 𑌦𑍇𑌹𑌿𑌮𑍇𑌦𑌦𑌾𑌮𑌿" ( தேஹிமேததாமி ) என்னுதவர்கள். அவனுக்கு ரக்ஷணம்போலேயிறே யிவர்களுக்குக் கைங்கர்யம், இங்ஙனன்றாகில் வ்யர்த்தமாமே. அநந்யப்ரயோஜநதையாகிற ஆர்ஜவத்தையுடைய வ்ருத்திவிசேஷத்தை யுடையவர்களுடைய. (வேதவேள்வியறா) வேதகோஷமும் வைதிகக்ரியாகோலாஹலமும் மாறாதேசெல்லுகை. ப்ராப்யவிரோதியாதல் ப்ராபகவிரோதியாதலில்லாமையாலே, நாய்ச்சிமாருடைய பரிஷ்வங்கத்தோபாதியாய்ச் செல்லாநிற்கும். அபிமதவிஷயத்தை அணைக்கிறதுக்கு வேறொருபலமுண்டாகிலிறே இதுக்கு வேறொருபலமுண்டாய் அவ்வளவில் தலைக்கட்டுவது. (சிரீவரமங்கலநகரந்தமில்புகழாய்) ஸ்ரீவைகுண்டத்திலே யிருந்தானாகில புகழாக்கந்தமுண்டுபோலேகாணும். (அடியேனையகற்றேலே) தேசாத்தேசாந்தரப்ராப்திபண்ணி நீபடைத்தபுகழை, "ஓரநந்யகதியைக்கைவிட்டாய்" என்றுபழியாக்கித் தலைக்கட்டுவித்துக்கொள்ளப்பாராதேகொள்ளாய். (அகற்றேலே) அனாரக்ஷணம் தாழ்க்கப்பொறுக்கமாட்டாமைச்சொல்லுகிறவார்த்தையிறே. விளம்பம்பொறாதார் சொல்லப்பெறுவர்போலேகாணும். ( அடியேனை ) இதினுடைய ரக்ஷணத்திலே யுன்னையொழிய ப்ராப்தியுண்டாய்த் தானகற்றுகிறாயோ.............................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (வந்தருளியித்யாதி) கீழே, "வரவேணும்" என்று ப்ரார்த்தித்தவர், முகங்காட்டாதவனைச்சொல்லுமாபோலே "அகற்றேலே" என்பானென்னென்ன (அடியேன்தொழவித்யாதி)

"வந்தருளி" என்று-ஈடுபாடுதோன்ற வருளிச்செய்ததுக்கு சம்வாதம் (பட்டரித்யாதி) பட்டரென்றதுக்கு - ( அருளிச்செய்தார் ) என்றத்தோடேயந்வயம். சந்நிதியிலே உபர்யாசோபயுக்தமான பாசுரங்களைக் கூட்டிக்கொள்ளுகைக்காகக் கேட்டருளுவரென்றபடி. இத்தை-இந்தபாசுரத்தை. சுக்கான்பரல் - சுக்கான்பருக்கை. பதஞ்செய்கை - ம்ருதுவாக்குகை. தார்மிகர் - ஆழ்வார்கள். ஈரச்சொற்கள்- பக்திரசார்த்ரமானசொற்கள்.

"வானவர்கொழுந்து - வந்தருளி" என்கையாலே-அதிகாரவர்த்தியாயிருக்கி றவன் சம்சாரியான நானிருந்தவிடத்தேவந்தானென் றீடுபட்டமையும், "கொழு ந்து" என்கையாலே-அவர்களுக்கு மாதரணீயனாகையாலே, சேஷியானவன் சே ஷபூதனிருந்தவிடத்தே வந்தானென்றீடுபட்டமையுந்தோற்றுகையாலே, இவ்விர ண்டையு முட்கொண்டருளிச்செய்கிறார் (த்வீபாந்தரவஸ்துக்களித்யாதி, பாதிவழி தான்வரப்பெற்றதோவென்னுமளவும்) விவரணம் (பரமபதநிலயனித்யாதி) இப்ப டியீடுபாடாக வருளிச்செய்ததுக்கு சப்தமேதென்ன (வந்தருளியித்யாதி) அதாவ து - "ஸ்வரதோப்யர்த்தநிர்ணயஃ" (ஸ்வரதோப்யர்த்தநிர்ணயஃ) என்று, தாழ் ந்தஸ்வரத்தாலே தோற்றுகிறதென்றபடி. நெஞ்சுளுக்கி - ஈடுபட்டு. ஈடுபாட்டுக்கு சம்வாதாந்தரம் (ஆப்பானித்யாதி) "நெஞ்சிடங்கொண்ட" என்றதுக்குபாவம் (த்ரவ்யகுணங்களித்யாத) கருமையும் நெய்தலும்சேர்ந்தாப்போலே, என்னோடே பிரியாமல் கலந்தானென்றபடி. இருவரும் த்ரவ்யமாயிருக்க, த்ரவ்யகுணங்கள் போலே சேரக்கூடுமோவென்ன (த்ரவ்யமாயிருக்கவித்யாதி) ப்ரகாரப்ரகாரிபாவானக ளிடத்திலே காணுகின்றோமேயென்றபடி. குணங்களொடொக்க - குணங்கள்போ லே. "என்னெஞ்சு" என்கிறவருடைய ஹார்த்தபாவம் (அவனையொழியவித்யா தி) "வானவர்கொழுந்து" என்றத்தைக்கடாக்ஷித்து, "இடங்கொண்ட" என்றது க்கீடுபாடாகபாவம் (ஸ்ரீவைகுண்டமித்யாதி) "கொண்ட" என்று-அவனுக்கு ப்ரா ர்த்யமாகத்தோற்றுகிறதென்றுவிவக்ஷித்து, இவர்நெஞ்சுபெறுகைக்கு ப்ரார்த்திக்க வேணுமோவென்ன (வந்தாலுமித்யாதி) அவனப்படி ப்ரார்த்தித்தவிடமுண்டோ வென்ன (ஆவாசமித்யாதி) "அஹமேவாஹரிஷ்யாமி ஸ்வயம் லோகாந் மஹாமுநே। ஆவாஸம் த்வஹமிச்சாமி ப்ரதிஷ்டமிஹ காநநே" (அஹமேவாஹரிஷ்யாமி ஸ்வயம்லோகாந்மஹாமுநே।ஆவாஸம்த்வஹமிச்சாமி ப்ரதிஷ்டமிஹகாநநே) இத்யாரண்யகாண்டே பஞ்சமே சரபங்கம்ப்ரதிராமஃ "ஸ்ரீவைகுண்டம்" இத்யா திவாக்யவிவரணம் (நித்யஸூரிகளுக்கித்யாதி)

"உலகு" என்றவசேதநஸமாதிக்குபாவம் (அங்கித்யாதி) அதாவது - "வா னவர்கொழுந்து" என்கிறவிடத்திலே, இரண்டுதலைக்கும் சேஷசேஷிபாவாதிசம்ப ந்த ஜ்ஞானமுண்டாகையாலே (இரண்டுதலையுங்கூடிவருமிறே) "உலகுக்கோர்முந் தைத்தாய்தந்தை" என்கிறவிடத்திலே, லோகத்தார்க்கறிவின்றியே ஈச்வரன் தா னேயறிந்ததாக ரக்ஷிக்கையாலே (வெறுமொருதலையேயாயிருக்கிறபடி) என்று கருத்து. லோகத்துக்கத்விதீயனாய் ப்ரதமபாவியானமாதாவும் பிதாவுமானவனே யித்யர்த்தஃ. அப்படி ஈச்வரன் முந்தையான தாய்தந்தையாயிருக்குமோவென்ன; ப்ரமாணம் (பூதாநாமித்யாதி) இதுக்கர்த்தம் (நாலுநாளித்யாதி) இவர்களென்ற து-பிராட்டியுமீச்வரனும். இது - "மாதா ச கமலா தேவீ பிதா தேவோ ஜநார்த்தநஃ" (மாதாசகமலாதேவீபிதாதேவோஜநார்த்தநஃ) இத்யாதி ப்ரமாணாந்தரத் தையுட்கொண்டு. "ஈச்வரனேலோகத்துக்குமாதாபிதா" என்னுமதுக்கு ப்ரமா ணாந்தரம் (சர்வேஷாமித்யாதி) "பவித்ராணாம் பவித்ரம் யோ மங்களாநாஞ்ச மங்களம்। தைவதம் தேவதாநாஞ்ச பூதாநாம் யோவ்யயஃ பிதா" (பவித் ராணாம்பவித்ரம்யோ மங்களாநாஞ்சமங்களம்।தைவதம்தேவதாநாஞ்ச பூதாநாம் யோவ்யயஃபிதா) இதிமஹாபாரதே. தத்ரைவ ஆரண்யபர்வணி, "ஸர்வேஷா மேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவஃ। கச்சத்வமேநம் ஶரணம் ஶரண்யம்

ஷோஸ்ஷஷ்ஷூஹாஃ" ( ஸர்வேஷாமேவலோகாநாம்பிதாமாதாசமாதவஃ । கச்ச த்வமேநம்ஸரணம்ஸரண்யம்புருஷர்ஷபாஃ ) இதிபாண்டவான் ப்ரதிமார்க்கண்டேயஃ. இதினுத்தரார்த்தத்துக்கர்த்தம் (ஒருதலையாகாமேயித்யாதி) "உண்டாய்" என்று-போஜநமாகச்சொல்லுகையாலே, ( இதுதன்பேருயிருக்குமென்று ) லௌகிகயானமாதாவில் வ்யாவ்ருத்தி (மாதாவானவளித்யாதி)

* செம்மைக்கு - அநந்யப்ரயோஜநத்வமாகவர்த்தம் ( தேஹிமஇத்யாதி ) சாதநத்வபுத்தி ராஹித்யமாகவர்த்தாந்தரம் (அவனுக்குரக்ஷணமித்யாதி) வ்யர்த்தமாமே - அநந்யப்ரயோஜநத்வ சித்தசாதநநிஷ்டைகளுக்கு விருத்தமாமே. "அரு" என்று-நித்யமாகச்செல்லுகைக்கு ஹேதுவேதென்ன ( ப்ராப்யேத்யாதி ) அதாவது-நாய்ச்சிமாருடைய பரிஷ்வங்கம்போலே யிதுவு மீஸ்வரனுக்கு போக்யமாகையாலே நித்யமாயிருக்குமென்றபடி. இவனுக்கபிமதவிஷயஸ்பர்ஸம்போலேபோக்யமாகையாலே நித்யமாயிருக்கிறதென்று ஹேத்வந்தரம் (அபிமதேத்யாதி) அவ்வளவில் தலைக்கட்டுவது-பலசித்தியளவிலேநிற்பது. இதுக்குபாவம் ( ஸ்ரீவைகுண்டத்திலேயித்யாதி )

"அந்தமில்புகழாய்" என்றத்தை - "அகற்றேலே" என்றத்தோடேகூட்டி பாவம் (தேசாதித்யாதி) தம்மைவிடமாட்டாதே ஸந்நிஹிதனுயிருக்கிறவனை "அகற்றேல்" என்பானென்னென்ன ( அரக்ஷணமித்யாதி ) விவரணம் ( விளம்பமித்யாதி )

சிரீவரமங்கலநகரந்தமில்புகழாய் - சிரீவரமங்கலநகரிலே முடிவற்றபுகழையுடையவனுயிருக்கிறவனே. க்ரமேணார்வயஃ..................................*

---

# எட்டாம்பாட்டு.

---

அகற்றநீவைத்தமாயவல்லைம்புலன்களாமவைநன்கறிந்தன
னகற்றியென்னையுநீயருஞ்சேற்றில்வீழ்த்திகண்டாய்
பகர்க்கதிர்மணிமாடநீடுசிரீவரமங்கைவாணனேயென்றும்
புகற்கரியவெந்தாய்புள்ளின்வாய்பிளந்தானே.

## ஆருயிரப்படி.

(அகற்ற) உம்மை யகற்றிறோமோவென்ன; த்வத்ப்ராப்தி விரோதியா பரிஹரிக்கக்கடவதான சப்தாதிவிஷயங்கள் கையிலே என்னைவிட்டு வைத்தபோதே யகற்றினுயல்லையோ, இப்படி நீ யரியையாவது ப்ரதிகூலர்க்கன்றே, அநுகூலர்க்கு மரியையோவென்கிறார்................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அகலுகைக்கு ஹேதுவான விந்த்ரியங்கள் நடையாடுகிற சம்சாரமுனக்கு விதேயமாயிருக்க, அதிலே வைத்தது அகற்ற நினைத்தன்றேவென்கிறார்.

அகற்ற - உன்பக்கல்விமுகனா அகற்றுகைக்காக. நீ - நீ. வைத்த - உண்டாக்கிவைத்தவையாய். மாயம் - ஒன்றோடொன்று சேராதவாச்சர்ய ஸ்வபாவங்க

னாய். வல் - ஒருவராலும் வெல்ல வரிதான. ஐம்புலன்களாமவை - அஞ்சிந்த்ரிய ங்களாமவற்றை. நன்கு - உள்ளபடியே நன்றாக. அறிந்தனன் - அறிந்தேன். என் னையும் - இப்படி யறிவுபிறந்து அஞ்சியிருக்கிற வென்னையும். அகற்றி - உன்பக்கல் நின்று மகற்றி. நீ, அரு - கால்வாங்கிக் கரையேறவரிதான. சேற்றில் - விஷயங்க ளாகிற சேற்றிலே. வீழ்த்திகண்டாய் - தள்ளுவுதியென்றஞ்சாநின்றேன். பகர் - விளங்குகிற. கதிர் - ஒளியையுடைத்தான. மணி - மாணிக்கங்களையுடைய. மாடம்- மாடங்கள். நீடு - ஓங்கியிருக்கிற. சிரீவரமங்கை - சிரீவரமங்கைக்கு. வாணனே - நிர்வாஹகனாய். நீ நினையாதார்க்கு, என்றும்-ஒருநாளும். புகற்கு - ப்ரவேசிக்க. அரிய - அரிய. எந்தாய் - என் ஸ்வாமியாய். புள்ளின்- நீ நினைத்த கோபிமாருக்கு உன்னைக்கிட்டுகைக்கு விரோதியான பகாசுரன். வாய் - வாயை. பிளந்தானே - பிளந்தவனே.

இப்படி சக்தனாயிருக்க விரோதியைப் போக்காதிருந்தது அகற்ற நினைத்தென்று கருத்து. பகவென்று - விளங்குதல். புகற்கரியவென்று - புகலுதற்கரிய வென்றுமாம்.........................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

உம்மை யகற்ற ப்ரசங்கமென், இங்குவந்து சந்நிஹிதராய் நின்றதுமக்காகவன்றோவென்ன; அடிமைக்கு விரோதியான சப்தாதிகள் நடையாடுகிற சம்சாரத்திலே வைத்தபோதே யென்னை யகற்றினையல்லையோ வென்கிறார்.

(அகற்றநீவைத்த) சர்வசக்தியான நீ, உன்னை யுகவாதாரகன்று போம்படிக்கீடாக, " मममायादुरत्यया " (மமமாயாதுரத்யயா) என்று கொண்டுவைத்த. (மாயவல்லைம்புலன்களாமவை) ஆப்சர்யமான செயல்களைப் பண்ணக்கடவதாய்த் தப்பவொண்ணாதபடியாயிருக்கிறவைந்திந்த்ரியங்களாகிறவை. உன்னை யுகவாதாரகன்று போம்படிக்கீடாக சர்வேஸ்வரனான நீ வைத்தவை.

நீரெங்ஙனே யிதறிந்தபடியென்ன (நன்கறிந்தனன்) * மயர்வற மதிநலம் பெறுகையாலே நானழகிதாகவறிந்தேன்.

உகவாதாரகன்று போகைக்கு வைத்தோமாகில், அதுக்குமக்கென்னென்றான் (அகற்றியென்னையும் நீயருஞ்சேற்றில் வீழ்த்திகண்டாய்) உன்னாலல்லது செல்லாதபடியாயிருக்கிற வென்னையு முன்பக்கல் நின்றும் நீ பிரித்து, கால்வாங்கவொண்ணாதபடியான சப்தாதிவிஷயங்களிலே தள்ளப்புகாநின்றாய். அவன் பக்கலிலே கார்யங்கொள்ள நினைக்கிறவர்,நிர்த்தயனைச் சொல்லுமாபோலே கொடிதாகச்சொல்லுவானென்னென்னில்;"நமக்கே பழியாய்வந்து விளையப்புகாநின்றது" என்றுநீர்மையுடையார் காரியஞ்செய்து தலைக்கட்டுவர்களென்று பார்த்து. இவ்வுடம்போடெனக்கொரு சம்பந்தமற்றிருக்க, நீ பொதுவான விதிலேவைக்கிறது கைவிட்டப்பார்த்தன்றோ. (பகர்க்கதிரித்யாதி) (புகவென்றும், கதிரென்றும் - புகர்,) மிக்க வொளியை யுடைத்தாய், மணிமயமான மாடங்

ளிஞேக்கத்தை யுடைத்தான சிரீவரமங்கைக்கு ப்ரதாநனானவனே. ((பகற்கதிர்) என்று பாடமானபோது - ஆதித்யபதத்தளவும் செல்ல வுயர்ந்த ஒளியையுடைய மணிமாடங்கள். பகல் - ஆதித்யன்.) (என்றுமித்யாதி) (உகவாதார்க்கொருநாளும் கிட்டவொண்ணாதபடியா யிருக்குமவனே.) நீ, கிட்டாமல் பண்ணுமது மழியச்செய்வது முகவாதாரையன்றே. (புகற்கரிய - புகலுக்கரிய. (எந்தாய்) அசாதாரணனாயிருக்கிற வென்விஷயத்திலு மத்தைச்செய்யவோ.) (புள்ளின்வாய் பிளந்தானே) உமக்குக் கிட்டத்தட்டென்னென்ன; பகாசுரனை நிரசித்தாப்போலே, என் ப்ரக்ருதி சம்பந்தத்தைப் போக்கியருளாய்வந்து கிட்டும்படியென்கிறார்.

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (அகற்றவித்யாதி) "அகற்றி யென்னையும் நீ" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (உம்மை யகற்றவித்யாதி) அகற்ற - அகற்றுகைக்கு. ஸந்நிஹிதராயென்றது - ஆத்மஸிபஹு"வசநமலால், நீர் சந்நிஹிதராம்படி நானிங்கு வந்து நின்றதென்னுதல்.

"நீ - அகற்ற - வைத்தமாய வல்லைம்புலன்களாமவை" என்றந்வயித்தர்த்தம் (சர்வசக்தியிந்யாதி) இந்த்ரியங்கள் தப்பவொண்ணாது என்றதுக்கு (மமமாயா துரத்யயா) என்றத்தை ப்ரமாணமாகவெடுத்தது - இந்த்ரியங்களும் ப்ரக்ருதிகார்யமாய் அதுக்குள்ளே யந்தர்ப்பூதமாகையாலே. "மாயவல்லைம்புலன்களாமவை-அகற்ற நீ வைத்தவை" என்றந்வயித்தர்த்தம் (உன்னை யுகவாதாரித்யாதி)

இந்த வந்வயத்திலே யருளிச்செய்கிறார் (நீ ரெங்ஙனேயித்யாதி)

"என்னையும்" என்ற சப்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (உகவாதாரித்யாதி) நாமும்மை விஷயங்களிலே தள்ளினோமோவென்ன (இவ்வுடம்போடித்யாதி)

"பகர்" என்றும், "கதிர்" என்றும்-தேஜஸ்ஸாய், மிக்க தேஜஸ்ஸென்றபடி.

"என்றும் புகற்கரிய" இத்யாதிக்கிரண்டுபாவம். முந்தினது (நீ கிட்டாமலித்யாதி) (உகவாதாரையன்றே) அசாதாரணனாயிருக்கிற வென் விஷயத்திலு மத்தைச்செய்யவோ என்று கூட்டுவது. த்விதீயதாத்பர்யம் (உமக்கித்யாதி) இந்த பக்ஷத்தில், "என்றும் புகற்கரிய வெந்தாய்" என்று - சர்வகாலத்திலும் ஸ்வயத்நத்தால் கிட்ட வரியனென்று விவக்ஷித்து; கிட்டவொண்ணாதது ஸ்வயத்நபரர்க்கன்றே, (உமக்குக் கிட்டத்தட்டென்னென்ன பகாசுரனை யித்யாதி) என்று கூட்டிக்கொள்வது.

பகர்க்கதிரென்று தொடங்கி, புள்ளின்வாய் பிளந்தானே, அகற்றவித்யாரப்ய, வீழ்த்திகண்டா யித்யந்வய:...............................................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

---

**புள்ளின்வாய்பிளந்தாய்மருதிடைபோயினாயெருதேழடர்த்தவென்**
**கள்ளமாயவனேகருமாணிக்கச்சுடரே**
**தெள்ளியார்திருநான்மறைகள்வல்லார்மலிதண்சிரீவரமங்கை**
**யுள்ளிருந்தவெந்தாயருளாயுய்யுமாறெனக்கே.**

## ஆறாயிரப்படி.

(புள்ளின்வாய்) உன்னுடையவதிமனோஹர திவ்யசேஷ்டிதங்களாலும், நிரவதிகசௌந்தர்யத்தாலு மென்னைத்தோற்பித் துனக்கடிமையாக்கி யருளினவனே, சாங்கசகலவேதவித க்ரேசரராய் த்வச்சரணாரவிந்தயுகளை கோபாயராயிருந்த திவ்யஜநங்களாலே சம்ருத்தமான சிரீவரமங்கையுள்ளிருந்தவெந்தாய், அருளாயுய்யுமாறெனக்கென்கிறார்.......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதவிரோதிநிரசநத்தாலே அத்யுஜ்ஜ்வலஸ்வபாவனாயிருக்கிறநீ, நானுஜ்ஜீவிக்கும்படி க்ருபைபண்ணி யருளவேணுமென்கிறார்.

புள்ளின்வாய்பிளந்தாய்-ஆஸ்ரிதருடைய ப்ரக்ருதிசம்பந்தத்தை யழிக்கைக்கு சூசகமாக பகாசுரனைநிரசிப்பானாய். மருதிடைபோயினாய்-த்வந்த்வதுக்கத்தைப் போக்குகைக்கு சூசகமாகயமளார்ஜுநநிரசநம்பண்ணுமவனாய். அவஸ்தாசப்தகங்களையழிக்கைக்குசூசகமாக, எருது-சப்தருஷபங்களையும். அடர்த்த - மர்த்திப்பானாய். கள்ளம்-இப்படியொருவர்க்குமறியவொண்ணாதபடி கூடமானஸ்வபாவங்களை. என் - எனக்குப்ரகாசிப்பித்த. மாயவனே - ஆச்சர்யபூதனாய். இந்தவிரோதியை நிரசித்தப்ரீதியாலே, கரு-கறுத்த. மாணிக்கம்-மாணிக்கத்தின். சுடரோ - சுடர்போலேயிருக்கிற வடிவழகையுடையனாய். தெள்ளியார்-அநந்யரக்ஷ்யமாம்படி தந்தாமுடையஸ்வரூபத்தில் தெளிவையுடையாராய். தெளிவுக்கூற்றும்படி, திரு-பரவத்ஸ்வரூபாதிப்ரதிபாதகமாகிற ஸ்ரீயையுடைத்தான. நால்-நாலு. மறைகள்-வேதங்களினுடையதாத்பர்யங்களும். வல்லார் - தாங்களிட்டவழக்காம்படியானவர்கள். மலி-நெருங்கிவர்த்திக்கையாலே. தண் - சாம்சாரிகதாபப்ரசங்கமில்லாதபடி ரமணீயமான. சிரீவரமங்கை-சிரீவரமங்கையின். உள்-உள்ளே. இருந்த-என்னையுஜ்ஜீவிப்பிக்கைக்காக வெழுந்தருளியிருந்த. எந்தாய்-உபகாரகனே. எனக்கு-அநந்யகதியானவெனக்கு. உய்யும்-உன்திருவடியடிமையைப்பெற்றுஜ்ஜீவிக்கும். ஆறு-ப்ரகாரம். அருளாய்-க்ருபைபண்ணியருளவேணும் ..........................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

"அருஞ்சேற்றில்வீழ்த்திகண்டாய்" என்றதுகிறவுமக்கு நான் செய்யவேண்டுவதென்னென்ன; சக்தனாய் சந்நிஹிதனுமாயிருக்கிறநீ என் விரோதியைப்போக்கி, உன்திருவடிகளில் கைங்கர்யத்தைத்தந்தருளவேணுமென்கிறார்.

(புள்ளின்வாய்பிளந்தாய்) கவியர்சோறிட்டநாளையெண்ணுமாபோலே, பண்டுபகரித்தபடிகளைச்சொல்லுகிறார். (புள்ளித்யாதி) பகாசுரநிரசநம்பண்ணினாய், யமளார்ஜுநங்களைப்பொடிபடுத்தினாய், ருஷபங்களேழையு மூட்டியாகநெரித்தாய். (என்கள்ளமாயவனே) ஒருவர்க்கும் தெரியாத ஆச்சர்யமான செயல்களையுடையையாய், அவையெல்லாமெனக்குத்தெரியும்படிபண்ணி யென்னை யகப்படுத்திக்கொண்டவனே. (கருமாணிக்கச்சுடரே) நப்பின்னைப்பிராட்டியுடைய ப்ரதிபந்தகங்களைப்

போக்கி அவனுக்குக்கொடுத்த வுடம்பின்வாசியை யெனக்குமறிவித்தவனே. (தெள்ளியாரித்யாதி) "ராமஸ்ய வ்யஸநாய ஜ்ஞா லக்ஷ்மணஸ்ய ச தீமத:" (ராமஸ்யவ்யஸாயஜ்ஞாலக்ஷ்மணஸ்யசதீமத:) என்கிறபடியே, (ஆஶ்ரிதவிஷயத்தில் நீவழிதப்பிலும் உன்னைத்திருத்தும்படி தெள்ளியார் மிக்கிருந்துள்ளதேசம். (தெள்ளியார்)–தந்தாமுக்கும் சிலவுண்டேயாகிலும், அவற்றைப்பொகட்டு அவன் கைபார்த்திருக்குமவர்கள். இவர்கள் சைதந்யத்துக்கு விநியோகமிதுவேயிறே. அசோகவநிகையில் தனியிருப்பில் பிராட்டிதெளிவுபோலேயும் அபிப்ரயாணவேளையில் ஸ்ரீவிபீஷணாழ்வான் தெளிவுபோலேயும் தெளிந்திருக்குமவர்கள். "ஸுக்ரீவம் தாம்ஶ்ச ஸம்ப்ரேக்ஷ்ய" (ஸுக்ரீவம்தாம்ஸ்சஸம்ப்ரேக்ஷ்ய) என்கிறபடியே - நலியாநின்றாலும் தாய்முகமேபார்த்துக்கிடக்கும் ப்ரஜையைப்போலே, "வத்யதாம்" (வத்யதாம்) என்கிறமஹாராஜரையும், அவரிலுங்கொடியமுதலிகளையும் அழகிதாகப்பார்த்துக்கொண்டிருந்தான். (திருநான்மறைகள்வல்லார்) நூறாயிரம்வரியெழுதிக்கிடந்தாலும் அவற்றில்போகாதே, தாத்பர்யத்தை க்ரஹித்திருக்குமவர்கள். "மாதவன்பேர்சொல்லுவதேயோத்தின்சுருக்கு" என்றிருக்குமவர்கள். (மலிதணித்யாதி) அவர்கள்நெருங்கி வர்த்திக்கிற ப்ராமஹாரமான சிரீவரமங்கையிலே அவர்களோடொக்கவிருக்கிற வென்றுதனே. (அருளாயுய்யுமாறெனக்கே) அறச்சென்றற்றதுகிடாய், உன்திருவடிகளில் கைங்கர்யத்தைத்தந்தருளவேணும். கைங்கர்யமென்றும், உய்கையென்றும் இரண்டன்றிவர்க்கு. த்வரித்திலராகில் அவன்வைலக்ஷண்யத்தில் ஜ்ஞாநமில்லையாகக்கடவது, இங்கே கால்பாவிற்றாகில் சம்சாரத்தில்தன்மையில்ஜ்ஞாநமில்லையாகக்கடவது*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (புள்ளின்வாயித்யாதி) "அருளாயுய்யுமாறெனக்கு" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (அருஞ்சேற்றிலித்யாதி) சக்தனென்றது- "புள்ளின்வாய்பிளந்தாய்" என்றத்தைப்பற்ற. சந்நிஹிதனென்றது - "சிரீவரமங்கையுள்ளிருந்த" என்றத்தைப்பற்ற.

அவதாரிகையிலே - விரோதிநிரசநத்தை சக்திமத்த்வத்துக்குறுப்பாக வருளிச்செய்து, உபகாரபரமாக பாவாந்தரம் (கலியரித்யாதி)

"என்" என்றதுக்குபாவம் (அவையெல்லாமித்யாதி) "என்" என்றத்தை- * கருமாணிக்கச்சுடரிலும் கூட்டிபாவம் (அவளுக்குக்கொடுத்தவித்யாதி) "எருதேழடர்த்த-கருமாணிக்கச்சுடர்" என்று கூட்டிபாவம் (நப்பின்னையித்யாதி)

"தெள்ளியார்" என்றதுக்கிரண்டுதாத்பர்யம். முந்தினது (ராமஸ்யேத்யாதி) அதாவது-ஸ்வவ்யாபாரத்தைவிட்டு அவன்கைபார்த்திருக்குமவர்களென்றபடி. ஜ்ஞாநமுண்டானால் சாதநாநுஷ்டாநம்பண்ணவேண்டாவோவென்ன (இவர்கள் சைதந்யத்துக்கித்யாதி) இரண்டாம்தாத்பர்யம் (சுக்ரீவமித்யாதி) அதாவது - அவன்றான் நலியும்போது மவன்கையைப்பார்த்திருக்கும்படி தெளிந்தஜ்ஞாநத்தையு

டையவர்களென்றபடி. "ராமஸ்யவ்யவஸாயஜ்ஞா லக்ஷ்மணஸ்ய ச தீமத:। நாத்யர்த்தம் க்ஷுப்யதே தேவீ கங்கேவ ஜலதாகமே" (ராமஸ்யவ்யவஸாயஜ்ஞா லக்ஷ்மணஸ்யசதீமத:। நாத்யர்த்தம்க்ஷுப்யதேதேவீ கங்கேவஜலதாகமே) இதி ஸுந்தரகாண்டே. "உவாச ச மஹாப்ராஜ்ஞ: ஸஸ்வரேண மஹாஸ்வந:। ஸுக்ரீவம் தாம் ச ஸம்ப்ரேக்ஷ்ய ஸ்வஸ்தவக்தா விபீஷண:" (உவாசசமஹாப்ராஜ்ஞ ஸ்ஸ்வரேணமஹாமஹாந்।ஸுக்ரீவம்தாம்சஸம்ப்ரேக்ஷ்யகஸ்த்தவகவிபீஷண:) இதியுத்தகாண்டே. "தாம்ச" (தாம்ச) என்றசப்தார்த்தம் (அவரிலும்கொடியவென்றது) "ஸம்" (ஸம்) என்றதுக்கர்த்தம் (அழகிதாகவென்றது) "வல்லார்" என்றதுக்கு-தாத்பர்யத்தை க்ரஹித்திருக்குமவர்களென் றர்த்தமருளிச்செய்கிறார் (மூருபிராமித்யாதி) ப்ரமாணகதநமுகேந விவரணம் (மாதவன்பேரித்யாதி) ஸ்ரிய:பதியானவனுடைய திருநாமத்தைச்சொல்லுகையே வேதப்பரப்பெல்லாவற்றாலும் சம்க்ஷேபித்துத் தலைக்கட்டினவர்த்தமென்றபடி. இரண்டாந்திருவந்தாதி முப்பத்தொன்பதாம்பாட்டு, "ஒத்தின்பொருள்" இத்யாதி. "தெள்ளியார்" இத்யாதிக்கு-தந்தாமுடையஸ்வரூபத்தில் தெளிவையுடையராய் பகவத்ஸ்வரூபாதி ப்ரதிபாதகமாகிற ஸ்ரீயையுடைய நாலுவேதங்களினுடைய தாத்பர்யத்தை க்ரஹித்திருக்குமவர்களே நெருங்குகிறவென்றுசப்தார்த்தம்.

"எனக்கு" என்கைபாலே - "ஏஹிபஸ்ய" (ஏஹிபஸ்ய) என்னுமாபோலே (அறச்சென்றற்றதுகிடாய்) என்கிறார். "உப்புமாறு" என்றால் - கைங்கர்யத்தைச்சொல்லுமோவென்ன (கைங்கர்யமேச் அமித்யாத்)

ரக்மேஷ்றக்வய: ........... ... .......................................................*

## பத்தாம்பாட்டு.

ஆறெனக்குநின்பாதமேசரணாகத்தந்தொழிந்தாயுனக்கோர்கை
மாறுநானொன்றிலேனெனதாவியுமுனதே
சேறுகொள்கரும்புஞ்பெருஞ்செந்நெலுமலிதண்சிரீவரமங்கை
நாறுபூந்தண்டுழாய்முடியாய்தெய்வநாயகனே.

### ஆறுயிரப்படி.

(ஆறெனக்கு) ப்ராப்ய ப்ராபகங்களிரண்டு முன்திருவடிமலர்களே யென்றிருக்கு மிவ்வத்யவசாயத்தை யெனக்கு ஸ்வபாவமாம்படி தந்தருளினாய், இதுவே யமையாதோ ; இம்மஹோபகாரத்துக்குனக்கொரு கைம்மாறு செய்யப்பெறுகிறிலேன். இவ்வாத்மாவைக் கைம்மாறுகத் தந்தாலாகாதோவென்னில்; எனதாவியுமுனதே. சர்வப்ரகாரத்தாலும் பரிபூர்ணனை யுனக்கென்னாற் செய்யலாவதொன்றுண்டோ வென்கிறார்.......................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், "நம்மைப் பெறுகைக்கு நம் சரணங்களே காணுமுபாயம்" என்று ப்ரகாசிப்பிக்க, இவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை யென்கிறார்.

எனக்கு - எனக்கு. ஆறு - ப்ராப்திக்குவழி. நின் - உன். பாதமே - திருவடிகளே. சரணாக - புகலிடமான உபாயமாக. தந்தொழிந்தாய் - தந்துவிட்டாய். உனக்கு - இப்படி யுபகாரகனான வுனக்கு. ஓர் - ஒருபடியாலும். கைமாறு - ப்ரத்யுபகாரமாவது. நான் - அகிஞ்சநனான நான். ஒன்று - ஒன்று. இலேன் - இன்றியிலே யிராநின்றேன். எனது - என்னுடைய. ஆவியும் - ஆத்மாவும். உனது-பண்டே யுன்னதாயிராநின்றது. சேறு - சேற்றுநிலத்திலே. கொள் - இடங்கொள்ளுகிற. கரும்பும் - கரும்பும். பெரு - அதிலும் பெருக்கவளருகிற. செந்நெலும் - செந்நெலும். மலி - நெருங்கி. தண் - ஸ்ரமஹரமான. சிரீவரமங்கை - சிரீவரமங்கையிலே யிருப்பானும். நாறு - பரிமளோத்தரமாய். பூ - செவ்வியையுடைத்தாய். தண்-ஸ்ரமஹரமான. துழாய் - திருத்துழாயாலே யலங்க்ருதமான. முடியாய் - திருமுடியையுடையனும். தெய்வம் - நித்யஸூரிகளுக்கு. நாயகனே - நிர்வாஹகனானவனே.

உன்னுடைய போக்யதையாலும் சேஷித்வத்தாலும் விபூதி பூர்த்தியாலும் ப்ரத்யுபகாரத்துக்கு யோக்யதை யில்லையென்று கருத்து.........................*

## ஈடு-பத்தாம் பாட்டு.

"அருளாயுய்யுமாறெனக்கு" என்றார், அப்போதே வந்தருளக் கண்டிலர்; ஏதேனும் தசையிலும் "உன்றிருவடிகளே சரணம்" என்றிருக்கும்படி யென்னைப் பண்ணியருளின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை யென்கிறார்.

(ஆறெனக்கித்யாதி) "ஆறென்று - வழி. வழியென்று - உபாயம். 'எவ்வாறு நடந்தனை,' 'இப்பொய்கைக்கெவ்வாறு வந்தாய்' என்னக்கடவதிறே. சரணென்று - உபேயம். உபாயோபேயங்களிரண்டு முன்றிருவடிகளேயாம்படி பண்ணித்தந்தாயே" என்று பிள்ளான் பணிக்கும். "இவை யிரண்டாலும் - உபாயத்தையே சொல்லுகிறது" என்று பட்டரருளிச்செய்வர். எனக்குபாய முன்றிருவடிகளேயாம்படி பண்ணித்தந்தாய். ஆறு - உபாயம். "உபாயார்த்தைகவாசக:" (உபாயார்த்தைகவாசக:) என்கையாலே, சரணென்றும்-உபாயம். எனக்கென்று-உபாயாந்தர நிஷ்டரிற்காட்டில் தமக்குண்டான வேறுபாடு சொல்லுகிறார். "நோற்ற நோன்பிலேன்" என்று தொடங்கி - உபாயாந்தரசூந்யதையை முன்னிட்டுக்கொண்டு உபாயநிஷ்கர்ஷம்பண்ணுகிற திருவாய்மொழியாகையாலே, அத்தையே நிகமிக்கிறது. அவதாரணத்தாலே - *ஏகபதத்தை நினைக்கிறது. ஈஸ்வரனைப்பற்றின ஆற்றத்தாலே யுபாயாந்தரங்களை நெகிழுகையொழிய, நாஸ்திக்யத்தாலே விடுமன்று அது விஷயாந்தரப்ராவண்ய ஹேதுவாம்; ஔஷதசேவை பண்ணினனொருவன் சர்ப்பத்தின் வாயிலே கைகொடுத்தாலது நிர்ப்பாதம், ஔஷதஸ்பர்ஶமில்லாதவன் அத்தைச் செய்தாலது மரணஹேதுவாம்.

இத்தெளிவைப் பிறப்பித்த வுனக்கு சத்ருஶமான ப்ரத்யுபகாரங் காணாத மாத்ரமன்றிக்கே, போலியாயிருப்பதொரு ப்ரத்யுபகாரமும் அகிஞ்சநனான நான் காண்கிறிலேன்.

என்றிய, உம்முடைய ஆத்மாவைத் தந்தாலோவென்ன (என தாவியுமுனதே) அதுவும் செய்து நெஞ்சாறல் கெட்டிருப்பனிறே, நீ * மயர்வறமதிநல மருளிற்றிலேயாகில். ராஜமஹேந்த்ரன்படியை யெடுத்து"என்னது" என்று வைத்துப் பெருமாளுக்குக் கொடுப்பாரோபாதி, களவு வெளிப்படுகையிறே ஆத்மசமர்ப்பணம் பண்ணுகையாவது. உம்மதான ஆத்மாவைத் தந்தாலோவென்ன (நின்பாதமே! - எனதாவியு முனதேயென்று) நின்பாதமே என்கிற விடத்தை - இங்கே யந்வயித்து, சபதமாக்கி நிர்வஹிப்பர் ஆப்பான் திருவழுந்தூரரையர். (அப்போது; ஆறெனக்கு, சரணாக - திருவடிகளாக. எனக்குபாயம் திருவடிகளாக.) (சேறுகொளித்யாதி) மிக்க சேற்றையுடைத்தான கரும்பும், அதுக்கு நிழல்செய்யும்படியான செந்நெலும் மிக்குக்குளிர்ந்த சிரீவரமங்கை. (நாறுபூந்தண்டுழாய்முடியாய்) பரிமளிதமாய் தர்ஸநீயமான திருத்துழாய். இதுக்கெல்லாம் முதலியாக வைத்த வினயத்தை யுடையையாய். எத்தனையேனு மளவுடையார்க்கும் நிர்வாஹகனாயிராநின்றாய், ஆனபின்பு நானுனக்கென்ன ப்ரத்யுபகாரம்பண்ணுவது.

நீயோ! எனக்க யுபகரித்துக்கொண்டு நின்றாய், நானஞ்ஞானகப் பெற்றிலேன், இவையனையானாலும் நான் சிலசெய்து தலைக்கட்டினேனாக வொண்ணுகபடி நீ பரிபூர்ணனானாய். உபகாரங்கொள்ளாதாருண்டுநித்துத் திரியாநின்றார்கள், அறிவுகேடரானவர்கள் "சில ப்ரத்யுபகாரம் பண்ணினோம்" என்றிராநின்றார்கள்; நீ பரிபூர்ணனாகி லிவையெல்லாம் சில செய்ததாக நினைத்திருக்கலாயிற்றே, நீயோ! பூர்ணனாயிருந்தாய்; ஆனபின்பு, ஒன்று செய்து தலைக்கட்டப்போமோ. நித்யசூரிகளுக்குநியானவனே. தெய்வம் - தேவர்கள்.........................................*

## ஜீயர் அரும்பதம்

பத்தாம்பாட்டு (ஆறெனக்கித்யாதி) இந்தப்பாட்டிலும் - சந்தோஷம்போலேயிருந்ததேயாகிலும், ப்ரகரணோசிதமாக வாயாப்தித்தோற்ற வவதாரிகை (அருளாயுய்யுமாறித்யாதி) இதுக்கு - "உனக்கோர் கைமாறு நானொன்றிலேன்" என்றதிலே நோக்கு.

"ஆறு" என்று - வழியைக்காட்டுமோவென்ன (எவ்வாறு நடந்தனையித்யாதி) பெருமாள் திருமொழி ஒன்பதாந்திருமொழி இரண்டாம்பாட்டு, "வெவ்வாயேன்" இத்யாதி. எவ்வழியாய் நடந்தாயித்யர்த்தம். (இப்பொய்கைக்கெவ்வாறு வந்தாய்) இந்தப்பொய்கைக் கெந்தவழிவந்தாயித்யர்த்தம். நாய்ச்சியார் திருமொழி மூன்றாந்திருமொழி இரண்டாம்பாட்டு, "இதுவென்" இத்யாதி. பிள்ளான் நிர்வாஹத்தில், "சரண்" என்று-க்ருஹமாய், அத்தால்-உபேயத்தைச்சொல்லுகிறது.

பட்டர் நிர்வாஹத்திலே சப்த நிர்வாஹங்காட்டுகிறார் (ஆறு உபாயமென்று தொடங்கி) (சரணென்றுமுபாயம்) என்ற வநந்தரத்திலே, (எனக்குபாயம்) இத்யாதி வாக்யத்தைச் சொல்லிக்கொள்வது. "எனக்குபாய முன்திருவடிகளேயாம்படி பண்ணித்தந்தாயென்றது - எனக்குபாயந்தருமிடத்தில் வேறொன்றைத் தாரா

தே உன் திருவடிகளையே யுபாயமாகப்பண்ணித் தந்தாயென்றபடி."என்று பெரிய ஜீயரருளிச்செய்வர்; ஆகையாலே, பட்டர் நிர்வாஹத்துக்கு, "எனக்கு - ஆறுதருமிடத்தில் - நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்று சப்தநிர்வாஹம். எனக்கு -- அகிஞ்சநனான வெனக்கு. "ஆறு, சரண்" இரண்டும் - உபாயபரமாக பட்டரருளிச்செய்ததுக்கு நியாமகமேதென்ன; ப்ரகரணத்துக்கநுகுணமாகையாலே யென்கிறார் (நோற்றநோன்பிலே னித்யாதி) ஏகபதத்தை நினைக்கிறது - ஸ்வீகாரத்திலுபாயபாவத்தைக் கழிக்கிற வேகபதத்திலர்த்தத்தை நினைக்கிறது. தான் ஸ்வீகரித்த ஸ்வீகாரமுமுபாயமன்றென்றபோதே - உபாயாந்தரசாங்கத்யாஜ்யத்வம் இம்புநர்ங்யாய சித்தமென்று விவக்ஷித்து; ஆனால், நித்யநைமித்திககர்மங்களை த்யஜிக்கலாமோவென்ன (ஈஸ்வரனை யித்யாதி) இது - "அத்தாணிச்சேவகத்தில் பொதுவானது நழுவும்" என்கிற வுத்தமாதிகாரி விஷயம். இங்கே - "[illegible] [illegible]" (ஹ்ருதாகாஶேசிதாதித்யஸ்ஸதாபாதிநிரந்தரம்। நாஸ்தமேதிநசோதேதிகதம்ஸந்த்யாமுபாஸ்மஹே) என்றதநுசந்தேயம். உக்தார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தம் (ஔஷதசேவையித்யாதி)

"ஓர்" என்றதுக்கர்த்தம் (போலியாயிருப்பதொருவென்றது) "உனக்கு"- (இத்தெளிவைப்பிறப்பித்தவுனக்கு) போலியாயிருப்பது-ஏகதேச ஸத்ருஶமாயிருப்பது. அத்யல்பமாயிருப்பது மொன்றில்லையென்றபடி. "ஒருபடியாலும் ப்ரத்யுபகாரமாவது அகிஞ்சநனான நானொன்றின்றியிலே யிராநின்றேன்" என்றுரையில் சப்தார்த்தம்.

என்றிய - எதுக்குக்லேசிக்கிறீர். நெஞ்சாறல் - மநோது:கம். * மயர்வறமதிநலமருளினு லாத்மசமர்ப்பணம் பண்ணப்போகாதோவென்ன (ராஜமஹேந்த்ரனித்யாதி) (அதுவும்செய்து) இத்யாதி வாக்யத்வயத்துக்குபாவம்-அத்யந்தபாரதந்த்ர்யஜ்ஞாநமுடையவனுக்கு ஆத்மஸமர்ப்பணம்பண்ணப்ராப்தியில்லை; அப்படியன்றிக்கே, "என்னது" என்றுசமர்ப்பித்தால் ப்ரத்யவாயம் வருமென்று. ராஜமஹேந்த்ரன்படியாவது-பெரியபெருமாளுடைய திருப்பதக்கம். ஆப்பான்திருவழுந்தூரரையர் நிர்வாஹத்துக்கு, "சரணை-திருவடிகளை, ஆறாகத்தந்தொழிந்தாய், உனக்கோர்கைமாறு நானொன்றிலேன், நின்பாதமே-எனதாவியுமுனதே" என்றந்வயம்.

"தெய்வநாயகன்" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (இதுக்கெல்லாமித்யாதி) இந்தவிபூதிக்கெல்லாமென்றபடி. தெய்வநாயகனென்றது - லீலாவிபூதிக்குமுபலக்ஷணம். தெய்வநாயகனே-நித்யசூரிகளுக்கு நிர்வாஹகனானவனே.

பாட்டுக்கெல்லாம்தாத்பர்யம் (நீயோவித்யாதி) "ஆறெனக்குநின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்றத்தைப்பற்ற (எனக்கவுபகரித்துக்கொண்டுநின்றாயென்றது) "எனதாவியுமுனதே" என்றத்தைப்பற்ற (நானஜ்ஞனாகப்பெற்றிலேனென்றது) "தெய்வநாயகன்" என்றத்தைப்பற்ற (பரிபூர்ணனானாயென்றது) "நீயோவுனக்க" என்றுதொடங்கிக் கீழ்ச்சொன்னவர்த்தத்தை வ்யதிரேகமுகத்தாலே த்ருடீகரிக்கிறார் (உபகாரங்கொள்ளாதாரித்யாதி) அறிவுகேடரானவர்கள் - * மயர்வறமதிநலமருளப்பெறாத ஸ்வகதஸ்வீகாரபரர்.

சேறுகொள்கரும்புமித்யாரப்ய, தெய்வநாயகனே, எனக்கு-ஆறுதருமிடத்தில்-நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய், உனக்கோர்கைமாறு நானொன்றிலேன், எனதாவியுமுனதே யித்யந்வய:. ஆப்பான்நிர்வாஹத்தில், "சரண்" என்றது-உ

ரணமென்றபடியாய், திருவடிகளென்றபடி. "உபாயே க்ருஹரக்ஷித்ரோஶ்ஶப்தஶ்ஶரணமித்யயம்। வர்த்ததே ஸாம்ப்ரதஞ்சைஷ உபாயார்த்தைகவாசக:" (உபாயேக்ருஹரக்ஷித்ரோஸ்ஸப்தஸ்ஸரணமித்யயம்। வர்த்ததேஸாம்ப்ரதஞ்சைஷ உபாயார்த்தைகவாசகஃ) இதிபகவச்சாஸ்த்ரே.................................*

# பதினொன்றாம்பாட்டு.

தெய்வநாயகனாரணன்றிரிவிக்கிரமனடியிணைமிசைக்
கொய்கொள்பூம்பொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்
செய்தவாயிரத்துள்ளிவைதண்சிரீவரமங்கைமேயபத்துடன்
வைகல்பாடவல்லார்வானோர்க்காராவமுதே.

## ஆறாயிரப்படி.

(தெய்வநாயகன்) த்ரிவிக்ரமனாவகத சர்வேஶ்வரேஶ்வரத்வத்தையுடையனாயிருந்த நாராயணனுடைய திருவடிகளிலே, கொய்கொள் பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்செய்த வாயிரத்துள்ளிவை, தண் சிரீவரமங்கைமேயபத்துடன்வைகல் பாடவல்லார் வானோர்க்கு, காலதத்வமெல்லாம் புஜித்தாலு மாறாதபோக்யரென்கிறார்.......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியைப் பாடவல்லவர்கள் நித்யசூரிகளுக்கு நிரந்தரபோக்யராவர்களென்று பலத்தையருளிச்செய்கிறார்.

தெய்வம்-நித்யசூரிகளுக்குநிர்வாஹகனான. நாயகன்-சர்வேஶ்வரனாய். நாரணன் - நிருபாதிகசம்பந்தயுக்தமான வாத்ஸல்யத்தையுடையனாய். திரிவிக்கிரமன்-ஸ்வசேஷவஸ்துவுக்கு அந்யாபிமாநம்வாராதபடி யளந்துகொள்ளுமவன். அடியிணைமிசை-திருவடிகளிலே. கொய்கொள் - கொய்துகொள்ளும்படி சம்ருத்தமான. பூ-பூக்களையுடைய. பொழில்-பொழில்களாலே. சூழ்-சூழப்பட்ட. குருகூர்-திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். செய்த-அருளிச்செய்த. ஆயிரத்துள்-ஆயிரந்திருவாய்மொழியினுள்ளே. தண்-ஶ்ரமஹரமான. சிரீவரமங்கை-சிரீவரமங்கையை. மேய-மேவிய. இவை-இவை. பத்து-பத்தையும். உடன் - அர்த்தத்தோடே உடன்பட்டு. பாடவல்லார்-பாடவல்லவர்கள். வானோர்க்கு-பரமபதவாசிகளுக்கு. வைகல் - எப்போதும். ஆரா - ஆராத. அமுது - அம்ருதம்போலே நித்யபோக்யமாவர்கள்.

இது-முதலடியும் மூன்றாமடியும் எழுசீராய், அயலடியு மீற்றடியும் நாற்சீரான ஆசிரியத்துறை...................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழியை சாபிப்ராயமாகக்கற்குமவர்கள், நித்யசூரிகளுக்கென்றும் போக்யராவரென்கிறார்.

(தெய்வநாயகன்) சர்வேஶ்வரன். (நாரணன்) தன்னுடைமையை விடாத வத்ஸலன். (திரிவிக்கிரமன்) தன்னையிரந்தார்க்குத் தன்னை

யழியமாறியும் காரியம்செய்து தலைக்கட்டிக்கொடுக்குமவன். (அடியிணை மிசை) திருவடிகளிலே. (கொய்கொள்பூம்பொழில் (சூழ்)) நித்யவசந்த மானசோலை. (இவருபாயாத்யவசாயத்தாலே தரித்தவாறே) எப்போது ம்கொய்கைக்குப்பக்வமாயிருக்கை. (குருகூர்ச்சடகோபன்) ஸ்ரீகீதையில் வ்யாவ்ருத்தி. (செய்தவாயிரம்) அர்த்தம்வேதார்த்தமேயாகிலும், வேத ம்போலே தான்றோன்றியன்று. பரத்வம்போலேவேதம், அவதாரம்போ லே யிதிஹாசபுராணங்கள், அர்ச்சாவதாரம்போலே திருவாய்மொழி. * செய்தவாயிரமிறே. தமப்பனில்லாதவிழவுதீர சக்ரவர்த்திக்குப்பிள்ளை யானைப்போலே. (ஆயிரம்திருவாய்மொழியினுள்ளே ப்ரமஹரமான சிரீ வரமங்கையை மேவினபத்தையும்.) (உடன்-பாடவல்லார்) சாபிப்ராய மாகப்பாடவல்லார். இவர் தம்முபாய சூம்பதையை யநுசந்தித்துப்பாட வல்லார். (வைகலும்-வானோர்க்காராவமுதே) காலதத்வமுள்ளதனையும் நித்யசூரிகளுக்கு போக்யபூதராகப்பெறுவர். தேவஜாதிகள் அம்ருதம் பெற்று க்ருதார்த்தராமாபோலே, நித்யசூரிகள் "இவர்களைப்பெற்றோ ம்" என்று க்ருதார்த்தராவர். ப்ராபகாந்தரநிரபேக்ஷமான பகவத்ருசியை யுடையவவர்கள், ப்ராபகாந்தர நிரபேக்ஷமான பகவத்ருசியையுடைய வி வரைவிரும்பியிருக்கையாலே; ப்ராபகாந்தர நிரபேக்ஷராயித்தை யநுபவி க்கவல்லரானவர்கள் நித்யசூரிகளுக்கு போக்யராவர்.....................*

## ஜீயர் அரும்பதம்·

நிகமம் (தெய்வநாயகனித்யாதி) "உடன்பாடவல்லார் வானோர்க்காராவமு து" என்றதைக்கடாக்ஷித்து-அவதாரிகை.

ஸ்ரீகீதையில் வ்யாவ்ருத்தியென்றது - தத்வபூதனுடைய வுபதேசமான கீ தையைப்பற்ற, தத்த்வதர்ஶிவசநமாகையாலே இது விலக்ஷணமென்றபடி.

திருவாய்மொழிவேதமாயிருக்க, "செய்தவாயிரம்" என்னலாமோவென்ன (அர்த்தமித்யாதி) அதாவது-ஆப்ததமரானவாழ்வார்பக்கலிலேபிறந்தது, அஸ்ம்ரு தகர்த்ருகமான வேதத்திற்காட்டிலு முத்கர்ஷத்துக் குடலாயிருக்குமென்று கருத் து. ஆனால், வேதத்தைப்பற்ற விதுக்காதிக்யமேதென்ன (பரத்வமித்யாதி) அர்ச்சா வதாரம்போலேயென்றதுக்கு - சர்வாதிகாரமென்றுகருத்து. அர்ச்சாவதாரம்போ லேயென்கிற தெப்படியென்ன (செய்தவாயிரமிறேயென்று) கீழ்-வேதார்த்தத்தை ச்செய்த வாயிரமென்றருளிச்செய்து, வேதாவதாரமென்று பாவாந்தரம் (தமப்ப னில்லாதவித்யாதி) இத்தால்-வேதத்துக்கு மிவர்பக்கலிலேவந்து பிறந்து நிறம்பெ றவேணுமென்றபடி.

விவரணம் (இவர்தமித்யாதி) "அமுது" என்றதிலேநோக்காகக் கீழ்வாக்ய விவரணம் (தேவஜாதியித்யாதி) வானோர்க்காராவமுதாகைக்கு ஹேதுவேதென்ன (ப்ராபகாந்தரேத்யாதி) ப்ராபகாந்தரநிரபேக்ஷமான பகவத்ருசியையுடையவர்க ளென்றது - ஸ்வயம்ப்ரயோஜநமான பகவத்பக்தியையுடையவர்களென்றபடி.

கொய்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன் - தண்சிரீவரமங்கை மேய-தெய்வநாயகன்தொடங்கி, அடியிணைமிசை-செய்தவாயிரத்துள்ளிவை-பத்து

ம்-உடன்-பாடவல்லார்-வைகலும்-வானோர்க்காராவமுதே இத்யந்வய꞉. கொய்கொள்பூம்பொழில்சூழ்குருகூர்-எப்போதும் கொய்துகொள்ளும்படி சம்ருத்தமானபூக்களையுடைய தோப்புக்களாலே சூழப்பட்ட திருநகரிக்கு நிர்வாஹகரானவாழ்வாரித்யர்த்த꞉. தெய்வநாயகன்-நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகன். அடியிணைமிசை-இரண்டுதிருவடிகளின்மேலே.........................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( நோற்றநோன்பு. )

ஸர்ப்பாதீஶஶய்யத்வாதரிதரதரணாத் ஸாநுகம்பத்வயோகாத் ஸத்ஸாஹாய்யாதஶேஷாந்தரநிலயதயா பூஸமுத்த்ருத்யுதந்தை꞉ । ஸர்வேஷாம் தாதபாவாதிதரஜநதுராதர்ஷதாதேஶ்ச ஶௌரிம் தீநாநாம் ஶரண்யம் விஷ்ணும் ஸம்ஸாரஜநபயநோதேவதாஸாவளத்ய. (௫௭)

(ஸர்ப்பாதீஶஶயத்வாத்) அரவினணையம்மானே - திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகையாலும்; (அரிதரபாணாத்) உறைசங்குசக்கரத்தாய் - திருவாழிதிருச்சங்குகளை தரிக்கையாலும்; (ஸாநுகம்பத்வயோகாத்) அருள்செய்தங்கிருந்தாய்-நிரவதிககாருண்யத்தை யுடைத்தாகையாலும்; (ஸத்ஸாஹாய்யாத்) ஐவர்க்காயன்று மாயப்போர்பண்ணி - சத்துக்களானபாண்டவர்களுக்கு சஹாயமாய்க்கொண்டு பாரதயுத்தத்தைப்பண்ணுகையாலும்; (அஶேஷாந்தரநிலயதயா) எவ்வதெவ்வத்துளாயுமாய்நின்று கைதவங்கள்செய்யும் - சர்வாந்தர்யாமியா யிருக்கையாலும்; (பூஸமுத்த்ருத்யுதந்தை꞉) ஏனமாய்நிலங்கீண்ட- வராஹரூபத்தைக்கொண்டு பூமியையுத்தரித்த வ்ருத்தாந்தங்களாலும்; (ஸர்வேஷாம்தாதபாவாத்) உலகுக்கோர்முந்தைத்தாய்தந்தையே-மாதாபிதாக்களைப்போலே யெல்லார்க்கும் ப்ரியஹிதங்களைப்பண்ணுகையாலும்; (இதரஜநதுராதர்ஷதாதே꞉) என்றும் புகற்கரியவெந்தாய்-ஸ்வாஶ்ரிதேதரஜநத்தாலே அப்ரவேஶனுகையாலும்; ஆதிசப்தத்தாலே-ஆஶ்சர்யசேஷ்டிதத்வாத்யநேகோபகாரகத்வங்கள் ஸங்க்ரஹிக்கப்படுகிறது, புள்ளின்வாயித்யாதி-க்ருஷ்ணனுயவதரித்தருளி பகாசுரநிரசநாத்யாஶ்சர்ய சேஷ்டிதங்களைப்பண்ணுகையாலும்; ஆறெனக்கித்யாதி-ப்ரத்யுபகாரமில்லாதபடி ஆஶ்ரிதருக்கு பகரிக்கையாலும் வானமாமலை யெம்பெருமானை அசரணஶரண்யனுக "நோற்றநோன்பு" என்கிறதஶகத்திலே யாழ்வாரருளிச்செய்தாரென்கிறுர் ...........(௫௭)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

நோற்றநோன்பாதியிலேனுன்றனைவிட்டாற்றகில்லேன்
பேற்றுக்குபாயமுன்றன்பேருளே- சாற்றுகின்றேன்
இங்கெனிலையென்னுமெழில்மாறன்சொல்வல்லார்
அங்கமரர்க்காராவமுது. (சஎ)

( நோற்றநோன்பாதி ) இதில்-வானமாமலை திருவடிகளிலேவணங்கி ப்ரவணராய் சரணம்புக்கபடியைப்பேசின பாசுரத்தையநுவதித் தருளிச்செய்கிறுர். அ

தெங்ஙனேயென்னில் ; அப்ரீதியாலே யநுகரித்து தரிக்கவேண்டும்படி அபிநிவேச மதிசயித்துச் செல்லாநிற்கச்செய்தேயும் ஸ்வாமிதம்பெருமையாலே யவஸந்ந ராய்; இப்படியநுபவருசிரூபமான தம்மபிநிவேசத்தை சாதநமாகக்கருதி, "அது முற்றினவாறே கார்யம்செய்கிறோம்" என்றீஸ்வரன் நினைத்திருந்தானாகக்கொண்டு, பேற்றுக்குறுப்பாக சாஸ்த்ரசித்தமான கர்மாத்யுபாயங்களில் தமக்குமறந்தும் மயக்கமில்லாமையைச்சொல்லிக்கொண்டு, "அவனடியிலேகாட்டின உபாயமொழிய வேறொருபாயமில்லை" என்று; சம்சாரி சம்ரக்ஷணார்த்தமாகப் பிராட்டிமாரோடும் நித்யபரிகரத்தோடுங்கூடச் சிரீவரமங்கையிலேவந்தெழுந்தருளியிருக்கிற வானமாமலை திருவடிகளிலே, வேரற்றமரம்போலே புகலற்றுவிழுந்து சரணம்புகுகிற * நோற்றநோன்பி லர்த்தத்தையருளிச்செய்கிறார் - "நோற்றநோன்பாதியிலேன்" என்றுதொடங்கியென்கை.

(நோற்றநோன்பாதியிலேன்) இத்தால்-மோக்ஷசாதநமாக சாஸ்த்ரசித்தமான கர்மாத்யுபாயங்களி லெனக்கந்வயமில்லை. "𑌰𑌾𑌵𑌣𑍋 𑌨𑌾𑌮 𑌦𑍁𑌰𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑍋 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍋 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 । 𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌮𑌨𑍁𑌜𑍋 𑌭𑍍𑌰𑌾𑌤𑌾 𑌵𑌿𑌭𑍀𑌷𑌣 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌃" (ராவணோநாமதுர்வ்ருத்தோராக்ஷஸோராக்ஷஸேஸ்வரஃ । தஸ்யாஹமநுஜோப்ராதாவிபீஷணஇதிஸ்ருதஃ) இத்யாதிகளைமுன்னிட்டு சரணமடைந்தாப்போலே. "நோற்றநோன்பிலேன்" என்கிறபாட்டைக்கடாக்ஷித்தருளிச்செய்தபடி. (உன்றனைவிட்டாற்றகில்லேன்) தாரகனுமாய் போக்யனுமாயிருக்கிற வுன்னைவிட்டுதரிக்கமாட்டுகிறிலேன். இவ்வாற்றாமையெனக்கு ஸ்வரூபமித்தனை. ஆனால் பேற்றுக்கு சாதநமென்னென்னில் (பேற்றுக்குபாயமுன்றன்பேரருளே) மோக்ஷோபாயம் * அரவினணைமேலிவீற்றிருந்து * சிரீவரமங்கைவாணனாய் * கருளப்புட்கொடிசக்கரப்படைவானநாடனாய், இப்படி * அயர்வறுமமரர்க ளதிபதியாயிருக்கிற தேவரடியிலேயருளின நிர்ஹேதுகக்ருபையே. அதாவது - "பொருளல்லாதவென்னைப்பொருளாக்கி" என்றும், "தமியேனுக்கருளாய்" என்றும், "வந்தருளியென்னெஞ்சிடங்கொண்ட" என்றும், "அருளாயுய்யுமாறெனக்கு" என்றும், "ஆறெனக்குநின்பாதமேசரணாகத்தந்தொழிந்தாய்" என்றுமருளிச்செய்தவையென்கை. மற்றுமுண்டானபாட்டுக்கள் - அருளுகைக்கடியான வவன்படிகளையும், அதுக்குடலாகத் தம்படிகளையு மருளிச்செய்தவையாயிருக்கும். (பேற்றுக்குபாயமுன்றன்பேரருளேசாற்றுகின்றேன்) "ஆகையாலே உன்நிர்ஹேதுகக்ருபையேசாதநம்" என்னுமதெல்லாருமறியும்படி பறையறைந்து சாற்றுகின்றேனென்கிறார். (இங்கென்னிலையென்னும்) இவ்விடத்தில்-இவ்வர்த்தவிஷயத்தில், என்னுடையநிஷ்டை யிதுவென்னும். அத்தலையில் பூர்த்தியாலே இத்தலையி லாகிஞ்சந்யத்தை முன்னிடுகையே பாதந்த்ரனான வாத்மாவுக்கு ஸ்வரூபமென்னும். (எழில்மாறன்) சேஷத்வபாரதந்த்ர்யங்களாகிற ஆத்மபூஷணத்தாலே அபிராமராயிருக்கிற வாழ்வாருடைய வுபாயநிஷ்கர்ஷமான வித்திருவாய்மொழியை யப்யசிக்கவல்லார். (அங்கமரர்க்காராவமுது) அவ்விடத்தில் * அளப்பரியவாரமுதை யநுபவிக்கிற நித்யசூரிகளுக்கு நித்யாபூர்வமான வம்ருதமாகப்பெறுவர். "சிரீவரமங்கைமேய பத்துடன் வைகல்பாடவல்லார் வானோர்க்காராவமுதே" என்றத்தையருளிச்செய்தபடி. (௪௭)

ஐந்தாம்பத்தில் – ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - ௪௭.—பாட்டு - ௫௧௧.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஐந்தாம்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### ஆராவமுதே – ப்ரவேசங்கள்.

### ஆறாயிரப்படி.

(ஆராவமுதே) இப்படி சிரீவரமங்கலநகரிலே அலப்தமநோரத ராய் அத்யந்தமவசந்நரான வாழ்வார், "தமக்குப்ராப்யமும் ப்ராபகமு மெம்பெருமான்றிருவடிமலர்களே" என்றுள்ள திவ்யஜ்ஞாநத்தைப்பெ ற்ற இந்தலாபத்தை யநுசந்தித்து அதினாலே விஸ்ரப்தராய்த் திருக்கு டந்தையிலேபோய்ப்புக்கு, அங்குமெம்பெருமானோடு ஸம்ஸ்லேஷிக்கப் பெறாமையாலே கிடந்தலற்றுகிறார்......................................*

### பன்னீராயிரப்படி.

எட்டாந்திருவாய்மொழியில், கீழ்-வானமாமலைதிருவடிகளிலே யநுபவத் தை யபேக்ஷித்து, அவர் தந்திருவடிகளி னுபாயபாவத்தையும் ப்ரகாசிப்பிக்கக்கண் டு சந்துஷ்டராய், பின்பு மநுபவம் சித்திக்கக்காணாமையாலே அவஸந்நரானவிவர் க்கு ஆராவமுதாழ்வார் தம்வடிவழகை ப்ரகாசிப்பிக்க, "அங்கேதம்மபிமதம் தலை க்கட்டிக்கொள்ளலாம்" என்றுநினைத்து; ஆராவமுதாழ்வாருடைய நிருபாதிகஸம் பந்தத்தையும், ஸம்பர்தகார்யமான அவதாரௌஜ்ஜ்வல்யத்தையும், அவனையொழி யத் தம்மை யநந்யநிரபேக்ஷராக்கினபடியையும், அவருடைய அபரிச்சிந்ந மாஹா த்ம்யத்தையும், மாஹாத்ம்யப்ரகாசகமான புண்டரீகாக்ஷத்வத்தையும், நித்யஸூரி சேவ்யமான நிரதிசயபோக்யதையையும், போக்யதாப்ரகாசகமான விக்ரஹவைல க்ஷண்யத்தையும், விபரீதமேபலிக்கிலும் விடாதபடியான தம்முடைய வநந்யகதித் வத்தை ப்ரகாசிப்பித்தபடியையும், அநுமதியையும்பிறப்பித்து அநுபவிப்பிக்கு மா காரத்தையும், ஆர்த்தராநுபவவிஷயமான அதிசயிதஸாரஸ்யத்தையு மநுசந்தித்து, "ஏவம்ப்ரகாரவிசிஷ்டரானவர் ஆலோகாலாபாதிகளாலே நம்மை யநுபவிப்பித்தி லரோ" என்று புத்திஸாக்ஷாத்கார ஸந்நிஹிதரானவவர் தம்மையேநோக்கி அத்யந் தமார்த்தராய்க்கூப்பிட்டு, எல்லாவவஸ்தையிலும் முன்பு ப்ரகாசிப்பித்த திருவ டிகளேயல்ல துபாயமில்லையென்று ப்ரதிபத்திபண்ணித்தலைக்கட்டுகிறார்..........*

### ஈடு.

சிரீவரமங்கலநகரிலே யெழுந்தருளியிருக்கிற வானமாமலை திரு வடிகளிலே, வேரற்றமரம்போலேவிழுந்து அநந்யகதிகளாய்க்கொண்டு

சரணம்புக்கார்; இவரப்படி பெரியவார்த்தியோடே சரணம்புகச்செய் தேயும் வந்துமுகங்காட்டாதிருக்க; கடலிலமிழ்ந்துவா ரங்கேயொரு மி தப்புப்பெற்று தரிக்குமாபோலே, "இவ்வளவிலும் 'வேறொன்றாலே பேறு' என்றிருத்தல், மற்றொருவர்வாசலிலேசென்று கூப்பிடுதல்செய் யும் ப்ரமத்தைத்தவிர்த்தானிறே" என்றுகொண்டுதரித்த விதுதான் தி ருக்குடந்தையளவும் கால்நடைதந்துபோகைக் குடலாயிற்று. என்றான், இங்குத்தம்மபேக்ஷிதம் கிட்டாதொழியவும் அங்கேறப்போகவேண்டுவா னென்னென்னில்; "ஒருகால் ப்ரபத்திபண்ணினோம், அதுபலித்ததில் லை" என்று, நாஸ்திக்யத்தாலே விப்ரவாசம்குலைந்து ருசியும் நெகிழும வரன்றே; "ஆஶ்ரிதார்த்தமாக வெழுந்தருளியிருக்கிறவன் நங்காரியம்செ ய்து தலைக்கட்டாமையில்லை, 'இன்னவிடங்களிலே செய்யக்கடவோம்' என்று வ்யவஸ்த்திதமாயிருக்குமிறே; ஆனபின்பு, இங்குச்செய்யப்பார் த்திலனாகில் மற்றோரிடத்திலேசெய்கிறான்; இனித்தான், ஸ்ரீபரதாழ்வா ன் 'பெருமாளை மீட்டுக்கொண்டுவந்து திருவபிஷேகம்பண்ணவேணும்' என்றுபாரித்துக்கொண்டுசெல்ல, 'பதினாலாண்டும்கழித்தல்லது மீளோ ம்' என்னும் ஸ்வதந்த்ரனிறே; ஆகையாலே நமக்குநாலுநாள் தாழ்த்த தேயாகிலும் நங்காரியம்செய்யாமையில்லை" என்றுபார்த்து, "திருக்குட ந்தையிலேசென்றுபுகவே நம்மபேக்ஷிதங்களெல்லாம்கிட்டும், நமக்கொ ருகுறைகளுமில்லை" என்றுபுக; ஸ்ரீபரதாழ்வான் "ராஜ்யத்துக்குநிமித்த பூதனானேன்" என்றத்தாலே யொருபுண்பாடும், "'தாயைக்கொண்டுரா ஜ்யத்தைவாங்கிப் பெருமாளைக்காடேறப்போகவிட்டான்' என்று நாட் டார் சீறுபாறென்றிருப்பார்கள்" என்றத்தாலேவந்ததொரு பயத்தை யுமுடையனாய்க்கொண்டு; நான்திருவடிகளிலேசென்றுகிட்டினால், ப்ரா தாவல்லேனோ! சிஷ்யனல்லேனோ! தாசனல்லேனோ! என்பக்கல் ப்ர ஸந்நராய் க்ருபைபண்ணியருளாதொழிவரோ! என்றுபார்த்து; அம் பெய்வார்படை திரட்டிக்கொண்டுபோமாபோலே, திருவயோத்யையி லுள்ளாரில் வ்ருக்ஷங்களகப்படவார்த்தியிலே தன்னில் குறைந்தாரில்லை யிறே, நம்மார்த்திகண்டு மீண்டிலராகிலும் ஆர்த்தர்பலரையுங்கண்டால் மீளாமையில்லையென்றுபார்த்து [ஸஹிஸ்ருஷஜிதெவை:] [ஏபிர்சஸசிவை:] என்கிறபடியே இவன்செல்ல; பெருமாளும், "ராஜ்யதந்த்ரங்களிற்கு றைப்படாமல் நடத்தாநின்றாயே? காரியங்கள்செய்யுமிடத்தில் மந்த்ரிக ளோடேகூடிச்செய்யாநின்றாயே?" என்றாப்போலே இவனுக்கிடமற வார்த்தைகேட்டாப்போலே; இவர்புக்கவிடத்தில் திருக்கண்களையலரவி ழித்துக் குளிரநோக்கியருளுதல், திருப்பவளத்தைத்திறந்தொரு வார்த் தையருளிச்செய்தல், அணைத்தல்செய்யக்கண்டிலர். "[illegible] க்ஷ்யதி" (மாமக்ரூரோதிவக்ஷ்யதி) என்றாப்போலே ப்ரதிகூலர் சோறு ண்டுவளர்ந்தவன் மநோரதம்பெற்றானிறே; அப்படியே தம்மையுங்கி ட்டவந்தணைக்கப்பெறாமையாலே மிகவுமவசந்நராய், போக்யதையாலு

மீடுபட்டு சௌந்தர்யாதிகளாலும் போரநொந்து, ஸ்தநந்தயப்ரஜை தாய்பக்கலிலேகிட்டி முகம்பெருவிட்டா லலமந்து நோவுபடுமாபோலே அவன்சந்நிதியிலேதளர்ந்து கிடந்துகூப்பிட்டு, இன்னமெத்தனைத் திருவாசல் தட்டித்திரியக்கடவேனென்று மார்த்தியோடே தலைக்கட்டுகிருர் ......................................................................*

## ஜீயர் அரும்பதம்

ஆராவமுதுப்ரவேசே, வ்ருத்தாநுவாதபூர்வகமாக வர்த்திஷ்யமாணசங்கதி (சிரீவரோத்யாதி) "நோற்றநோன்பிலேன்" இத்யாதியைப்பற்ற (அநந்யகதிகளாயித்யாதி) அநந்யகதிகளாயென்றது - பூஜ்யோக்தி. முகங்காட்டாதிருக்க, திருக்குடந்தைக்குப்போகத் தரிப்புண்டானபடி யெப்படியென்ன (கடலிலித்யாதி) மிதப்பு-தெப்பம். "ஆறெனக்கு நின்பாதமேசரணுகத்தந்தொழிந்தாய்" என்றதைக்கடாக்ஷித்தருளிச்செய்கிருர் (இவ்வளவிலுமித்யாதி) இங்கே, (வேறொன்றுலேபேறென்றிருத்தல் மற்றொருவர்வாசலிலேசென்று கூப்பிடுதல்செய்யும்) என்றிருக்கையாலே, "ஆறெனக்கு" இத்யாதிக்கு - கீழ்மூன்றுயோஜனையும்தவிர, இன்னமு மொருபொருளுண்டென்று தோற்றுகிறது. அதாவது - எனக்குன் பாதமேயுபாயமாகவும் ரக்ஷகமாகவும் தந்தாயென்று. "நின்பாதமே-ஆறாக" என்கையாலே - உபாயாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறது; "நின்பாதமே-சரணுக" என்கையாலே-ரக்ஷகாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறது. ஆக, "ஆறு" என்று-ஆகிஞ்சந்யமும், "சரண்" என்று-அநந்யகதித்வமும் பலிக்கிறது. இத்தால்-இவ்வவஸ்த்தையிலு மாகிஞ்சந்யாநந்யகதித்வங்களுக்கொரு ஹாநிவாராதபடி பண்ணினுனென்றபடி. ஆக, "சரண்" என்றபதத்துக்கு-க்ருஹமும், உபாயமும், திருவடிகளும், ரக்ஷகமுமென்று நாலுயோஜனை. ஆகிஞ்சந்யமாவது-உபாயாந்தரசூந்யதை. அநந்யகதித்வமாவது-ரக்ஷகாந்தரசூந்யதை. "உபாயேக்ருஹரக்ஷித்ரோஶப்தஶ்ஶரணமித்யயம்" (உபாயேக்ருஹரக்ஷித்ரோஶ்ஶப்தஶ்ஶரணமித்யயம்) என்னக்கடவதிறே.

(என்றுனிங்கு) இத்யாதிவாக்யத்துக்குதாத்பர்யம் - வஸ்த்வைக்யத்தாலே யங்கிருக்கிறவனுமிவனேயாயிருக்க, இங்கேபலியாவிட்டாலங்கேபலிக்கக்கூடுமோ; அதுக்குமேலே "சக்ருத்கர்த்தவ்யமாய் அமோகமானப்ரபத்தியும் விபலமாயிற்று" என்று விஶ்வாசமாந்த்யத்தாலேருசியும் நெகிழாதோவென்னிலென்று. இத்தசங்காத்வயத்தையும் வ்யுத்க்ரமேணபரிஹரிக்கிருர் (ஒருகாலித்யாதிவாக்யத்வயத்தாலே) வ்யவஸ்த்திதமாயிருக்குமிறேயென்றது-ராஜாக்களாசநபேதத்தாலே கார்யம்செய்யுமாபோலவும், நம்பெருமாள் திருமங்கையாழ்வாரபேக்ஷிதம் கோயிலிலேசெய்யாதே திருக்குறுங்குடியிலே செய்தாப்போலவும் தேசம் வ்யவஸ்த்திதமாயிருக்குமிறேயென்றபடி. காலபேதத்தாலும் கார்யம்செய்யுமென்று ஹேத்வந்தரம் (ஸ்ரீபராதாழ்வானித்யாதி) ஆக, இத்தால் - "இன்னானையின்னதேசத்திலே யங்கீகரிக்கக்கடவோம்" என்றும், "இன்னகாலத்திலே யங்கீகரிக்கக்கடவோம்" என்று மவனுக்கிரண்டு வ்யவஸ்த்தையுண்டாகையாலே, இந்தவிரண்டையு மறிந்திருக்கிறவிவர்; இங்குச்செய்திலனாகி லின்னமொருதேசத்திலே செய்கிருன், இப்போதுசெய்திலனாகில் வேறொருகாலத்திலே செய்கிருனென்று திருக்குடந்தையிலே புக்காரென்றதாயிற்று.

"திருக்குடந்தையிலேபோனால் நம்மபேக்ஷிதங்களெல்லாம்கிட்டும்" என்று இவர்பாரித்ததுக்கும், இதுக்கவன்கார்யம்செய்யாமைக்கு முதாஹரணங்காட்டுகி

ஞர் (ஸ்ரீபராதாழ்வான் ராஜ்யத்துக்கித்யாதி) நிமித்தபூதனுனேனென்றது - "[illegible]" (மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்வநப்ரவேஸேரகுநந்தநஸ்ய) என்றத்தைப்பற்ற. பாபமாவது-ராஜ்யயோக்யஸரீரபரிக்ரஹம்பண்ணின பாபமென்றபடி. (திருக்கண்களையலரவிழித்தென்றுதொடங்கி, செய்யக்கண்டிலனொன்னுமளவும்) "கிடந்தாய்கண்டேன்" என்கையாலேசித்தம். "ஆஸ்ரிதார்த்தமாகவெழுந்தருளியிருக்குமவன் நம்கார்யம்செய்யாமையில்லை" என்று அவன்ஸ்வபாவத்தை யநுசந்தித்து, "கிடைக்கும்" என்றுபோனீரோயாகிலும், அயோக்யரானவுமக்குக்கிடைக்குமோவென்ன (மாமக்ரூரேத்யாதி) "ஆராவமுதே, ஏரார்கோலம்" என்றத்தைப்பற்ற (போக்யதையாலுமென்றது) "செந்தாமரைக்கண்ணு" என்றத்தைப்பற்ற (சௌந்தர்யாதிகளாலுமென்றது) "உனக்காட்பட்டு மடியேனின்னமுழல்வேனு" என்றத்தைப்பற்ற (இன்னமெத்தனையித்யாதி) "[illegible]" (யோநந்தஃப்ருதிவீம்தத்தேஸேகரஸ்த்திதிஸம்ஸ்த்திதாம் । ஸோவதீர்ணோஜகத்யர்த்தேமாமக்ரூரேதிவக்ஷ்யதி) இதிபஞ்சமேம்ஸே.......................................*

---

## எட்டாந்திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

---

ஆராவமுதேயடியேனுடலநின்பாலன்பாயே
நீராயலைந்துகரையவுருக்குகின்றநெடுமாலே
சீரார்செந்நெற்கவரிவீசுஞ்செழுநீர்த்திருக்குடந்தை
யேரார்கோலந்திகழக்கிடந்தாய்கண்டேனெம்மானே.

## ஆறுயிரப்படி.

உன்னேடு பிறரோடு வாசியின்றியே எல்லார்க்குமொக்க சர்வகாலமு மநுபவித்தாலு மாராதபோக்யமே, உன்னுடையநிரவதிக சௌந்தர்யாதி கல்யாணகுணங்களாலே, அடியேனுடைய வசேதநமான விந்ததேஹமுங்கூட, உன்பக்கலுள்ள நிரதிசயாநுராகத்தாலே நீராயுருகும்படிபண்ணிவைத்து எனக்கரியையாயிருக்கிறவனே; சீரார்செந்நெல்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை யேரார்கோலந்திகழக்கிடந்தாய், கண்டேன். என்னையுன்றிருக்கண்களாலே பார்த்தருளுதல், ஒருவார்த்தையருளிச்செய்தருளுதல் காண்கிறிலேனென்கிறார்........................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், உன்னுடையநிருபாதிக சம்பந்தமடியாக வுன்னழகாலேயெனக்குநிரதிசயபோக்யபூதனாய் என்னை சிதிலனாம்படி பண்ணுநின்றுகொண்டு திருக்குடந்தையிலே கண்வளரக்கண்டேனென்கிறார்.

எம்மானே - எனக்குநிருபாதிகஸ்வாமியானவனே. அந்தசம்பந்தமடியாக, ஆரா-நிரந்தராநுபவம்பண்ணாநின்றாலும் த்ருப்திபிறவாத. அமுதே-நித்யபோக்யபூதனாய்க்கொண்டு. அடியேன்-இப்போக்யதைக்குத்தோற்றடிமைபுகுந்தவென்னுடைய. உடலம்-சரீரமானது. நின்பால் - உன்பக்கல். அன்பாயே - அன்புதானேதனக்கு வேஷமாய். அதடியாக, நீராய்-ஜலமயமாம்படிகட்டுக்குலைந்து. அலைந்து - ஒருநிலையில்நில்லாதே வ்யாகுலமாய். கரைய-ஆஸ்ரயமும்தெரியாதபடி கரையும்படியாக. உருக்குகின்ற-உருகப்பண்ணாநிற்கிற. நெடுமாலே - அபரிச்சின்னபோக்யதாமாஹாத்ம்யத்தையுடையவனே. சீர்-கனத்தாலே. ஆர்-விஞ்சின. செந்நெல்-செந்நெற்கதிர்கள். கவரிவீசும்-கவரிவீசினாற்போலேயிருப்பதாய். அதுக்கடியாக, செழு-சம்ருத்தமான. நீர்-ஜலத்தையுடைத்தான. திருக்குடந்தை-திருக்குடந்தையிலே. ஏர்-அழகு. ஆர்-விஞ்சின. கோலம்-ஒப்பனையானது. திகழ-விளங்கும்படியாக. கிடந்தாய்-கண்வளர்ந்தருளினாய். கண்டேன்-என்கண்ணாலேகண்டநுபவிக்கப்பெற்றேன்.

நினைத்தபடி பரிமாறப்பெற்றிலேனென்று கருத்து. சீரென்று-அழகாகவுமாம்.*

## ஈடு - முதற்பாட்டு.

உன்னழகாலே யென்னையுருக்குகிற வுன்னைக்கண்வளர்ந்தருளக் கண்டேன், குளிரநோக்குதல், அணைத்தருளுதல் செய்யக்காண்கிறிலேனென்கிறார்.

(ஆராவமுதே) அநுபவியாநின்றாலும் க்ரமப்ராப்திபற்றாதவிஷயத்தைப்பிரிந்தா ரெங்ஙனேயாறியிருக்கும்படி. முற்படதர்ஸநமாய், அநந்தரத்திலே அணுகி, பின்னைஸ்பர்ஸமாய், இப்படியேயிறே யநுபவப்ரகாரங்கள்; அத்தனைக்ரமம் பார்த்திருக்கவொண்ணாதபடியாயிருக்கை. (ஆராவமுதே) கடலிலுப்புச்சாறுகுடிப்பார்க்கு, தேவயோநியிலேபிறக்கவேணும், ப்ரஹ்மசர்யமநுஷ்டிக்கவேணும், இத்தனைபட்டால் ஸக்ருத்ஸேவ்யமாயிருக்கும்; இதங்ஙனன்றிக்கே, சர்வாதிகாரமுமாய், சதாசேவ்யமுமாய், ப்ரஹ்மசர்யாதி வைகல்யமுண்டானவையும் தானே பரிஹரிக்கக்கடவதாயிருக்கும். உத்தரபூமியிலே லோகசாரங்கமஹாமுனிகள் வர்த்தியாநிற்க, இங்குத்தையாரொருவனங்கேறச்செல்ல, "பிள்ளாய், தக்ஷிணபூமியில் விசேஷமென்" என்றுகேட்க, "திருவாய்மொழி என்றொருப்ரபந்தமவதரித்து, சிஷ்டர்கள் பரிக்ரஹித்துப் போரக்கொண்டாடிக்கொடுபோகாநின்றார்கள்" என்ன, "அதிலே உனக்குப்போவதொரு சந்தைசொல்லிக்காணாய்" என்ன, "'ஆராவமுதே' என்கிறவித்தனையுமெனக்குப்போம்" என்ன, "நாராயணாதிநாமங்கள்கிடக்க, இங்ஙனேயுமொரு நிர்த்தேஸமுண்டாவதே!" என்று அத்ருப்தராய், "இச்சொல் நடையாடுகிற்தேசத்தேறப்போவோம்" என்று அப்போதே புறப்பட்டுப்போந்தார். (ஆராவமுதே) [ஸஹவைதேஹ்யா] [ஸஹபத்ந்யா] ஆழங்காலிலேயிழிவார் ஒருகொம்பைக்கொடியைப்பிடித் திழியுமாபோலே. [வைதேஹ்யா-ஸஹ] [பத்ந்யா-ஸஹ] கிண்ணகத்திலிழிவார் தேசிகரைக்கைப்பிடித்துக்கொண்டிழியுமாபோலே, பெருமாள் பெரியபெருமாளை யநுப

விக்கும்போது பிராட்டியைக்கூடக் கொண்டாயிற்றிழிவது. [ விஸாலா க்ஷ்யா ] [ விஸாலாக்ஷ்யா ] இவர்க்குப் பெரியபெருமாள்பக்கலுண்டான ப்ரேமாதிசயத்தைக்கண்டு, தன்னையணைக்கும்போதையிற்காட்டிலு முட்டம்பெல்லாம் கண்ணுனபடி. [நாராயணமுபாகமத்] [நாராயணமுபாகமத்] இவர்நியதியிருக்கிறபடி, இக்கண்ணுக்கிலக்கா யாழங்காற்பட்டாதே அவ்வருகுபட்டார். இத்தால் சொல்லிற்றாயிற்று - தான்தன்னையநுபவிக்கும்போதும் கூட்டுத்தேடவேண்டும்படியாயிற் றாராமையிருக்கும்படியென்கிறது. ( ஆராவமுதே ) இத்திருவாய்மொழியி லிவர்க்குண்டான ஆற்றாமைக்கெல்லாம் பீஜமிப்பதமாயிற்று. (அடியேன்) * மயர்வறமதிநலமருளப்பெற்ற ஸ்வரூபத்தால் சொல்லுகிறாரல்லர், போக்யதைக்குத்தோற்றுப்புகல்விச்சொல்லுகிறார். “ பரவாநஸ்மி ” ( பரவாநஸ்மி ) என்றவர், “ குணைர்தாஸ்யமுபாகதঃ ” (குணைர்தாஸ்யமுபாகதঃ) என்றாப்போலே. (உடலம்நின்பாலன்பாயே) சேஷத்வமாத்மாவுக்கு ஸ்வரூபமானால் தேஹமதுக்கு விரோதியாய் நிற்கும்நிலைகுலைந்தது. “அஹம்” (அஹம்) என்றிருக்கக்கடவ இவர்தாம், அடியேனென்றது-விஷயத்தினுடைய போக்யதாதிசயமிறே; அப்படியேசரீரமும் விஷயாதீநமாக அழிந்தபடி. சேஷத்வாகாரமான ஆத்மாவைத் தன்வழியேயிழுக்கைதவிர்ந்து, அதின்வழியே தானொழுகும்படியாயிற்று. ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனான ஆத்மாவாதல், அதுக்குத்தோள்தீண்டியான ஜ்ஞாநப்ரஸர த்வாரமான மநஸ்ஸாதலன்றிக்கே, இவற்றுக்கவ்வருகான த்வங்மாம்ஸமேதோஸ்த்திமயமான சரீரமுமழியும்படியாயிற்று. ( நின்பாலன்பாயே ) சேதநாசேதநவிபாகமற அழிக்கவல்ல வுன்பக்கலிலே, அன்புக்காஸ்ரயமாகைதவிர்ந்து அன்புதானொருவடிவுகொண்டாற்போலேயிராநின்றது. (நீராயலைந்து) உடலமன்பாய், அன்புதான் நீராய்க்கொண்டு அலையாநின்றது. முந்தறப்ரவணமாய், அநந்தரத்தில் மநநமாய், பின்னைபாவனையாய், அதுப்ரத்யக்ஷ சமாநாகாரமாய்க்கொண்டு அவ்வடைவிலேவருகிறதன்றே; விஷயமழிக்க அழிகிறதித்தனையிறே. (நீராயலைந்துகரைய) நீர்தன்பக்கலிலகப்பட்டத்தைக்கரைத்துத் தான் கரையாதிருக்குமாயிற்று; இங்கங்ஙனன்று, நீர்தானுயிற்றுக்கரைகிறது. அன்பு நீரானால், நீர்தான் கரையத்தட்டில்லையே. இத்தலை யளவிதுவானால் அத்தலைசெய்கிறதென்னென்னில் (உருக்குகின்ற) அழிக்கைக்கடியிட்டவித்தனையாயிற்று. அழிப்பாளனுனவன் “ ஆபரணதிகள் ” என்றுபாராதே யுருக்கியழிக்குமாபோலேகாணு மிவனுமுருக்கியழிக்கிறபடி. *தேசமானவணிகலனு மிவர்கைகூப்புச்செய்கையிறே. ஆழ்வார்க்குள்ளவுடலையுருக்கி யழிக்குமித்தனையோவென்னில் (நெடுமாலே) எதிர்த்தலையிலழிவுகண்டபின்பிறே யித்தலையிலழிவு. அவனுடைய வ்யாமோஹத்தைப்பார்க்கி லிதொன்றும் போராதபடியாயிருக்கும். அவனுடைய அழிவுசொல்லும்போது இனி

யிவ்வளவில் வாசகசப்தமிட்டுச்சொல்லவொண்ணாது, (நெடுமால்) எ ன்னிலென்னுமித்தனை. மாலென்று – வ்யாமோஹம். நெடுமாலென்று- மிக்கவ்யாமோஹத்தையுடையனாயிருக்கை. அன்றிக்கே, மாலென்று-பெ ரியோனென்றபடியாய், அதுதானும் ப்ரஹ்மருத்ராதிகளளவோவென்னி ல்; அல்ல, * மனிசர்க்குத் தேவர்போலத்தேவர்க்கும் தேவனென்கிறது. நெடுமாலென்று - சர்வேச்வரனென்றபடி. அவனுடையபெருமையும் இவளையழிக்கைக்குடலாமித்தனையிறே. (சீராரித்யாதி) மிக்ககனத்தையு டைத்தான செங்நெற்கதிர்களானவை கண்வளர்ந்தருளுகிற அழகைக்க ண்டு, பரிசர்யைபண்ணுவாரைப்போலே யசையாநிற்கும். சீர்-கனமும், அழகும். கவரிபோலேவீச. கவரி-சாமரம். அன்றிக்கே, செந்நெலுக்கு ச்சீர்மையாவது - ஆராவமுதாழ்வார்க்கமுதுபடியாகிற சீர்மையாகிலுமா கிறது. அப்போது “ ஊஹமஙூ ” (அஹமந்நம்) என்கிறசீர்மை. (கவரி வீசும்) “ ஊகாலஃஸிநோவ்ருக்ஷாஃ ” (அகாலபலிநோவ்ருக்ஷாஃ) என்னு மாபோலே. அருத்துநடவேண்டாபோலேகாணும். கருத்தறிந்தடிமை செய்வாரைப்போலே. சேஷவஸ்துவின் வ்யாபாரமடைய சேஷிதனக்க டிமையாக நினைத்திருக்கிறபடி. (செழுநீர்) கண்வளர்ந்தருளுகிற சௌ குமார்யத்துக்குப்போரும்படி அழகிதான ஜலசம்ருத்தியையுடைத்தா ன திருக்குடந்தையிலே. செழுநீர்-பெருநீரென்றுமாம். (ஏராார்கோலமி த்யாதி) அழகுசமைந்தவொப்பனை நிறம்பெறும்படி கண்வளர்ந்தருளி னாய். நாட்டாருலாவித்திரியும்போது அவயவங்களிலுண்டான பொல் லாங்குகள் மறைந்து ஒன்றுபோலேயிருக்கும், ஓரிடத்திலேயிருத்தல் கிடத்தல்செய்தவாறே வைரூப்யந்தோற்றிக் கண்கொண்டுபார்க்கவொ ண்ணாதபடியிருப்பர்கள்; இங்கங்னன்றிக்கே, “ ஸமயாபோயிதஸ்ரீ ஊாந் ” (ஸமயாபோதிதஶ்ரீமாந்) என்று கிடைந்தகிடைக்காலத்திலழி க்கவேண்டும்படியிருக்கை. “ இவனுணரில்செய்வதென் ” என்றுவயிறு பிடிக்கவேண்டும்படியிருக்கை. (கிடந்தாய்கண்டேன்) “ஸுகஸுப்தஃ” ( ஸுகஸுப்தஃ ) என்கிறபடியே கிடையழகைக்கண்ணாலே காணப்பெற் றேன், நினைத்தபரிமாற்றம்பெற்றிலேன். ( என்னைப்பற்ற ) எழுந்திருத்த ல், இருத்தல், உலாவுதல், “என்செய்தாய்” என்னுதல், அணைத்தல்செ ய்யப்பெறுகிறிலேன். (எம்மானே) “ இதுநம்மது ” என்றிராதொழியப் பெற்றேனாகில் நானுமியிருக்கலாயிற்றே. வடிவோடொக்க ப்ராப்தியுமெ ன்னை நலியாநின்றது. ப்ராப்தியையிட்டிப்படியென்னை நலியலாமோவெ ன்கிறார்............................................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (ஆராவமுதேயித்யாதி) “ உருக்குகின்றநெடுமாலே ” என்றத் தைப்பற்ற (உன்னழகாலேயித்யாதி) “கிடந்தாய்கண்டேன்” என்றதுக்குசப்தார்த் தம் (கண்வளர்ந்தருளக்கண்டேனென்றது) தாத்பர்யம் (குளிரநோக்குதலித்யாதி)

"ஆராவமுதே" என்றது - அத்ருப்தாம்ருதமென்றபடி. இத்தால்தாத்பர்யம் (**அநுபவியாநின்றாலுமித்யாதி**) "க்ரமப்ராப்தியின்னதென்றும், அநுபற்றுத" என்றத்தையுங்காட்டுகிறார் (முற்படவித்யாதி) இன்னார்க்காராவமுதென்னுதல், இன்ன போதாராவமுதென்னுதல்செய்யாதே, சாமாந்யேந "ஆராவமுதே" என்கையாலே-அதிகாராதிநியமமில்லையென்று வ்யாவ்ருத்தி (கடலிலித்யாதி) இத்திருநாமம் போக்யமென்னுமதுக்கைதிஹ்யம் (உத்தரபூமியிலேயித்யாதி). "ஆராவமுதே" என்றதுக்கு-இதினுடைய போக்யதாதிசய மீஶ்வரனுக்கும் தனியேயநுபவிக்கப்போகாதென்று தாத்பர்யாந்தரம் (ஸஹபத்ந்யேத்யாதி) "𑌗𑌤𑍇 𑌪𑍁𑌰𑍋𑌹𑌿𑌤𑍇 𑌰𑌾𑌮𑌃 𑌸𑍍𑌨𑌾𑌤𑍋 𑌨𑌿𑌯𑌤𑌮𑌾𑌨𑌸𑌃 । 𑌸𑌹 𑌪𑌤𑍍𑌨𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑌾𑌲𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌾 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌮𑍁𑌪𑌾𑌗𑌮𑌤𑍍" (கதேபுரோஹிதேராமஸ்ஸ்நாதோநியதமாநஸ꞉। ஸஹபத்ந்யாவிஶாலாக்ஷ்யாநாராயணமுபாகமத்) இத்யயோத்யாகாண்டே. இதுக்குபாவம் (ஆழங்காலித்யாதி) கொம்பென்றது - "கொம்புபோற்சீதை" என்றத்தைப்பற்ற. "ஆழங்காலிலே" இத்யாதிவாக்யவிவரணம் (கிண்ணகத்திலித்யாதி) நியதியாவது - ஜிதேந்த்ரியத்வம்.

புற்கவ்வுகை-யுத்தத்திலேதோற்றவன் ஆயுதத்தைப்பொகட்டுப் புல்லைக்கவ்வுவன், அத்தைச்சொல்லுகிறது. அதாவது-தோல்விக்குஸூசகமான வ்யாபாரத்தைச்சொல்லுகிறது. "ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமேயுத்தேஶ்யம்" என்றிருக்கிறவருக்கு, போக்யதைக்குத்தோற்று - "அடியேன்" என்கிறவிது சேருமோவென்ன (பரவாநஸ்மீத்யாதி) விரோதியாய்நிற்கும் நிலைகுலைகைக்குஹேதுவேதென்ன; த்ருஷ்டாந்தபூர்வகமாக வருளிச்செய்கிறார் (அஹமென்றிருக்கவித்யாதி) "சேஷத்வமாத்மாவுக்கு" இத்யாதிவாக்யவிவரணம் (சேஷத்வாகாரமானவித்யாதி) (தானொழுகும்படியாயிற்று) என்றவநந்தரம், இதினுடைய போக்யதையென்றுசேஷம். விரோதியானசரீரமு மழியும்படியாயிற்றென்றொருபாவமருளிச்செய்து, அசேதநமானசரீரமுமழியும்படி யாயிற்றென்று தாத்பர்யாந்தரம் (ஜ்ஞாநாநந்தேத்யாதி) அன்பையுடைத்தென்னாதே, "அன்பாயே" என்றதுக்குபாவம் (உன்பக்கலிலேயித்யாதி) அமூர்த்தமானவன்பு நீராகக்கூடுமோவென்ன; அசேதநமானதேஹம் விஷயவைலக்ஷண்யத்தாலே யன்பானாப்போலே, அமூர்த்தமானவன்பும் நீராயிற்றென்கிறார் (உடலமித்யாதி) சாஸ்த்ரம்சொல்லுகிறபடியன்றிக்கே,உடலமின்பாயன்புநீராய் இப்படி அமர்யாதமாகக்கூடுமோவென்ன (முந்தற ஶ்ரவணமாயித்யாதி) நீர்கரையக்கூடுமோவென்ன (அன்புநீரானலித்யாதி) வர்த்தமானநிர்த்தேசத்துக்கர்த்தம் (அழிக்கைக்கித்யாதி) ஆபரணம்போலே ஶ்லாக்யமானவிவர்திருமேனியையுருக்கலாமோவென்ன (அழிப்பாளனித்யாதி) அழிப்பாளன்-தட்டான். இவர்திருமேனி யாபரணமாயிருக்குமோவென்ன (தேசமானவித்யாதி)

(அழிக்குமித்தனையோ) தனக்கொருவிக்ருதி யில்லையோவென்றுகூட்டுவது. * நெடுமைக்கர்த்தம் (அவனுடையவித்யாதி) ஆனால், "நீராயலைந்துகரைய" என்றாப்போலே வாசகசப்தமிட்டுச் சொல்லாதொழிவானென்னென்ன் (அவனுடையவழிவித்யாதி) நீர்மையோலே மேன்மையு மீடுபடுத்தக்கூடுமோவென்ன (அவனுடையபெருமையுமித்யாதி)

"சீர்" என்று-கனமாய், ஆர்தல்-மிகுதியாய். மிக்ககனத்தையுடைய செந்நெலென்னுதல்; "சீர்" என்று - அழகாய். அழகுமிக்க செந்நெலென்னுதல், வர்த்

தமானுர்த்தம் (அகாலேத்யாதி) விவரணம் ( அருத்தித்யாதி ) அசேதநமானசென் னெல் கவரிவீசக்கூடுமோவென்ன (கருத்தறிந்தித்யாதி) அதாவது- * அஹ்ருதஸஹஜ தாஸ்யரான சூரிகளுடையவவதாரமாகையாலே கூடுமென்றபடி. இவையசேதநங் களாகிலும் சேஷியினுவாலே யடிமையாகக்கூடுமென்றுபரிஹாராந்தரம் ( சேஷ வஸ்துவினித்யாதி ) * செழுமை-அழகாதல், சம்ருத்தியாதல்.

"கிடந்தாய்கண்டேன்" என்கைக்கு - கிடக்கிறதிலே யப்படியழகுண்டோ வென்ன; நாட்டாரைப்பற்ற வ்யாவ்ருத்தமாயன்றோ கிடையழகிருப்பதென்கிறார் (நாட்டாரித்யாதி) "ஸ்ரீமான்" என்றதுக்குபாவம் (இவனுணரிலித்யாதி) "[illegible] [illegible]" ( வாயஸோநததஸ்தேநபலவத்க்லிஸ்யமாநயா । ஸமயாபோதித ஸ்ஸ்ரீமாந் ஸுகஸுப்தஃபரந்தபஃ ) இதிஸுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதிஸீதா. "கிடந்தாய்கண்டேன்" என்றதுக்குபாவம் (எழுந்திருத்தலித்யாதி) எழுந்திருத்த லித்யாதி-வாக்யசேஷமாய்க்கிடக்கிறது. "எம்மானே" என்கிறதுக்கிரண்டுபாவ ம். முந்தினது (இதுநம்மதென்றித்யாதி) இரண்டாவது ( வடிவோடொக்கவித்யா தி ) வடிவோடொக்க - வடிவழகுபோலே. "இதுநம்மதென்று" இத்யாதிவாக்ய த்தால்பலிதம் (ப்ராப்தியையித்யாதி) அதாவது - அப்ராப்தமாகிலாறியிருக்கலாம், ப்ராப்தமாகையாலே "இப்போதேபெறவேணும்" என்னும்த்வரையைப்பிறப்பியா நின்றது; இதறிந்து சீக்ரமாக வுதவவேணுமென்கை.

எம்மானே - ஆராவமுதேயென்றுதொடங்கி க்ரமேணார்வயஃ. "[illegible]" ( பரவாநஸ்மிகாகுத்ஸ்த, ) "[illegible]" ( அஹமஸ்யாவரோப்ராதா குணைர்தாஸ்யமு பாகதஃ, ) "[illegible]" ( அகாலபலிநோவ்ருக்ஷாஸ்ஸர்வே சாபிமதுஸ்ரவாஃ। பவந்துமார்க்கேபகவந்நயோத்யாம்ப்ரதிகச்சதஃ ) இத்யாதிபூர்வ மேவாஸக்ருல்லிகிதம் ..........................................................*

# இரண்டாம்பாட்டு

எம்மானேயென்வெள்ளைமூர்த்தியென்னையாள்வானே
யெம்மாவுருவும்வேண்டுமாற்றுலாவாயெழிலேறே
செம்மாகமலஞ்செழுநீர்மிசைக்கண்மலருந்திருக்குடந்தை
யம்மாமலர்க்கண்வளர்கின்றுனேயென்னான்செய்கேனே.

## ஆறுயிரப்படி.

(எம்மானே) எம்பிரானே, அசேஷதோஷப்ரத்யநீக கல்யாணைக தாநதிவ்யரூபனே, அந்ததிவ்யரூபகத சௌந்தர்யத்தாலே யென்னைத் தோற்பித் துனக்கடிமையாக்கினவனே, ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாக இச்

சாதுகுண திவ்யரூபவிசிஷ்டனாய்க்கொண்டு பிறந்தருளுமவனே, நிரதிசயதீப்தியுக்தனானவனே, திருக்குடந்தையில் தாமரைகளெல்லாம் மலராநிற்கச்செய்தே உன்னுடைய திருக்கண்களாகிற தாமரைகளலருகின்றனவில்லை; நானென்செய்கேனென்கிறார்..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமாக வநேகாவதாரங்களைப்பண்ணினநீ, உன்கண்ணாலே புரட்டிப்பார்க்கிறிலை; நானென்செய்வேனென்கிறார்.

எம்மானே-என்காரியம் நீயிட்டவழக்காம்படி யெனக்குஸ்வாமியாய். என்னெனக்குஸத்வோத்ரேகம்பிறக்கும்படி. வெள்ளை-பரிசுத்தமான. மூர்த்தி-வடிவையுடையையாய். அவ்வடிவழகைக்காட்டி, என்னை - என்சத்தையழியாமல். ஆள்வானே-அநுபவிப்பித்துக்கொண்டுபோருமவனாய். எ-இப்படி ஆஸ்ரிதார்த்தமாக தேவாதிகளானவெல்லாவகைகளையுமுடைத்தாய். மா-ஸ்லாக்யமான. உருவும் - அவதாரவிக்ரஹங்களை. வேண்டுமாற்றால்-இச்சாப்ரகாரத்தாலே. ஆவாய் - அங்கீகரித்துநிற்குமவனாய். எழில்-அவ்வோவிக்ரஹங்களிலழகாலே * பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரத்தைப்பண்ணி. ஏறே-செருக்கனாயிருக்குமவனாய்வைத்து. செம்-சிவந்து. மா-பெருத்த. கமலம்-தாமரைகள். செழு-சம்ருத்தமான. நீர்மிசை-ஜலத்தின்மேலே. கண்-எங்குமொக்க. மலரும்-மலருகிற. திருக்குடந்தை - திருக்குடந்தையிலே. அ-அந்த. மா-விலக்ஷணமான. மலர்-தாமரைப்பூப்போலேயிருக்கிற. கண் - திருக்கண்கள். வளர்கின்றானே-வளரும்படிகிடக்கிறவனே. நான்-நான். இதற்கு, என்-என். செய்கேன்-செய்வேன்.

எல்லாத்தாமரையும் மலரச்செய்தே, இவையிரண்டுதாமரை யென்னைநோக்கி மலருகிறதில்லையென்றுகருத்து. “ அம்மாமலரென்றது - அழகியபெரியமலர் ” என்றும்சொல்லுவர்..........................................*

## ஈடு - இ ர ண் டா ம் பா ட் டு.

இப்படிகூப்பிடச்செய்தேயும் ப்ரதிவசநம்பண்ணாமையாலே, “உம்முடையகார்யம் நீரோசெய்யுமித்தனையன்றோ” என்றிருந்தானாகக்கொண்டு, முன்புபண்ணினவுபகாரங்களைச்சொல்லிக் கூப்பிடுகிறார்.

(எம்மானே) உடைமையோ! உடையவனோ உடைமையைநிர்வஹிப்பார். “ நீயேயுன்கார்யம்செய்து தலைக்கட்டிக்கொள் ” என்கைக்கு வெறும் நானேயாயிருந்தேனோ. எம்மானே-என்னுதனே. (எம்மானேயென்வெள்ளைமூர்த்தி) “ பதிம்விஶ்வஸ்ய,” (பதிம்விஸ்வஸ்ய,) “ யஸ்யாஸ்மி ” (யஸ்யாஸ்மி) என்கிறப்ரமாணங்கொண்டறிந்தேனோ. பின்னையெங்ஙனே செய்தபடியென்னில்; சுத்தஸ்வரூபனாகையாலே, தன்படிகளிலொன்றும் குறையாதபடி எனக்குத்தன்பேறாகத்தானே காட்டக்கண்டேன். சிறிது மயர்வுகிடக்க நீயருளினாயாகில் நானறியிருக்கலாயிற்றே. (மூர்த்தி-ரூபமாய், ஸ்வபாவத்தைநினைக்கிறது. சுத்தஸ்வபாவனே.) (என்னையாள்வானே) காட்டுகிறபோது தெரியக்காட்டி, பின்னையென்வழி

யேயாக்கி யென்னைக்கைவிட்டாயோ. * அஞ்சிறையமடநாரை, * மாசறு சோதிதொடக்கமான வ்யஸநங்களையும்போக்கி குணஜ்ஞாநத்தாலே தரிப்பித்துக்கொண்டுபோந்தபடி. (எம்மாவுருவும்) எனக்காகவு மாஸ்ரிதர்க்காகவும் நீபடும்பாடறிவுதியே. எவ்வகையாலும் விலக்ஷணமானவிக்ரஹம். அதாவது - “ ப்ரக்ருதிம்ஸ்வாமதிஷ்டாய ” (ப்ரக்ருதிம்ஸ்வாமதிஷ்டாய) என்கிறபடியே அப்ராக்ருத திவ்யசம்ஸ்தாநமாயிருக்கை. ( வேண்டுமாற்றால் ) “ தனக்குவேண்டுருக்கொண்டு ” என்கிறபடியே இச்சையாலேயென்னுதல், ஆஸ்ரிதர் வேண்டுமாற்றாலென்னுதல். “ தமருகந்ததெவ்வுருவமவ்வுருவந்தானே ” என்னக்கடவதிறே. (எவ்வுருவும்வேண்டுமாற்றாலாவாய்) “ எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தாய், ” ஆஸ்ரிதார்த்தமாக நீகொள்ளாதவடிவுண்டோ. (எம்மாவுருவும்) எல்லாவடிவு மவன்கொண்டதாகையாலே ப்லாக்யமாயிருக்கிறபடி. அதாவது - “ ஆவிர்பூதம் ” (ஆவிர்ப்பூதம்) என்கிறபடியே அப்ராக்ருததிவ்ய சம்ஸ்தாநத்தை யிதரஸஜாதீயமாக்குமிந்தனையிறே. “ ரூபமந்யத்தரோர்மஹத் ” ( ரூபமந்யத்தரோர்மஹத் ) என்னுமிந்தனையிறே. ( வேண்டுமாற்றாலாவாய் ) கர்மமடியாக இவன்பிறக்குமாபோலேயிறே அநுக்ரஹமடியாக அவன்பிறக்கும்படி. இருவர்க்கும்பிறவியொக்கும். இவனுக்குக்கர்மக்ஷயம்பிறக்க ஜந்மக்ஷயம்பிறக்கும், இவன்கர்மமவன்காலிலே குனியப்போம்; அவனுக்கு நித்யமாய்ச்செல்லாநிற்கும். இனி அவனுக்குக் கர்மமென்னப்பார்க்கிறது-அநுக்ரஹத்தையிறே, அதுதானும் நித்யமிறேயவனுக்கு. இவனுக்கிவன்றன்னளவிலே பிறக்கவமையும், அவனுக்கெல்லார்க்குமாகப்பிறக்கவேணுமே. இவனுக்குக்கர்மமடியாகவந்ததாகையாலே ஸ்வார்த்தமாயிருக்கும், அவனுக்கநுக்ரஹமடியாகவந்ததாகையாலே பரார்த்தமாயிருக்கும். * பஹூநிமேவ்யதீதாநி ஜந்மாநிதவசவிறே. தவச என்கிறது-உன்னுடையபிறவி மெய்யாயிருக்குமாபோலே யென்னுடையஜந்மமு மைந்த்ரஜாலிகமன்றுகாண். இப்படிப்பிறாதவன்று இவனுக்கு மார்விலே கைவைத்துறங்கவொண்ணாதே. (பழியேற) இப்படி யாஸ்ரிதார்த்தமாகப் பிறவாநின்றால் பழையபுகரிற்குறைந்து வருமோவென்னில்; பண்டில்லாதவெழிலுமுண்டாயிருக்கை. கர்மத்தாலேபிறக்கிலிறேநிறக்கேடாவது. * பலபிறப்பாயொளிவருமுழுநலமிறே. [ ஸஉஶ்ரேயாந்பவதிஜாயமாந: ] [ஸஉஶ்ரேயாந்பவதிஜாயமாந:] ஸஏவ என்கிறதிறே-எல்லார்க்கும் பிறக்கப்பிறக்கப்புகரழிந்துவரும், இவனொருவனுக்கும் பிறவாநின்றால் புகருண்டாகாநிற்குமிறே. தேசமறியப்புகருண்டாய் நெஞ்சு வெறுத்திருக்குமோவென்னில்; “ பிறக்கப்பெற்றோம் ” என்னும் மேனாணிப்பையுடையனாயிருக்கும். “பட்டிமேய்ந்தோர்காரேறு” என்கிறபடியே. “ வானிளவரசு ” என்கிறபடியே அகம்படிவைத்தவராசாயிருக்குமங்கு, அச்செறுப்புத்திர ஸ்வைரம் சஞ்சரிக்கப்போந்தவிட்டமிறே

யிது, ஆகையாலே, அங்குநின்றும்போந்து பிறந்தபின்பாயிற்று எழிலே றாயிற்று. அடியறிவார் “ஸவாஙூாாயணொெஷவஃ” (பவாந்நாராய ணோதேவ:) என்றால், அதஸஹ்யமாய்; “ஆத்மாநம்மாநுஷம்மந்யே” (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்றும், “அஹம்வோபாந்தவோஜாத:” (அஹம்வோபாந்தவோஜாத:) என்றும் சூழ்த்துக்கொடுக்கும்படியிறே அவதாரத்திலே மெய்ப்பாடிருக்கும்படி. (செம்மாவித்யாதி) அவதாரகா லத்திலுதவாதார்க்கு மிழக்கவேண்டாதபடியிறே கோயில்களிலேவந்து கண்வளர்ந்தருளுகிறது. (செம்மாகமலமித்யாதி) பரிமளம் முகத்தேவ ந்தலையெறிய அதுதானே தொடைகுத்தக்கிடந் துறங்குகிறபடி. சிவந்த பெரியகமலங்களானவை, தர்ஶநீயமான நீரையமுக்கி மேலேயலருகிற போது, கடல்நிறமானவடிவையும் அங்குத்தை யவயவங்களையுங்காட்டா நின்றன. (செம்மாகமலம்) அனாக்ஷணத்திலே செவ்விமாறுகிறதாமரை அங்குத்தைக்கொப்பாகாதிறே, வருந்திச்சொல்லும்போதும் இத்தனை யேறிட்டுச்சொல்லவேணுங்காணும். (அம்மாமலர்க்கண்வளர்கின்றானே) அழகியதாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களலரக் காண்கிறிலே ன். (அம்மாமலர்) அவற்றோடே ஸஜாதீயமாயிற்றின இரண்டுபூவலரக் காண்கிறிலேனென்றுமாம். (என்நான்செய்கேனே) இவையிரண்டுமலர் ந்தாலல்லது தரியாதிருக்கிற நானென்செய்கேன். திருக்குடந்தையிலே தாமரைகளலர்ந்தால் மதுபாநம்பண்ணக்கடவவண்டுகள் மதுபாநம்பண் ணிக்களியாநின்றன, இத்தாமரைகளலர்ந்தால் மதுபாநம்பண்ணக்கடவ வண்டிங்ஙனே பட்டினிகிடந்துபோமித்தனையோ. (என்னான்செய்கே னே) “இக்கூப்பிடுருவச்செல்லும்” என்றிருக்கிறாயோ, சென்றற்றது கிடாய். “இவையொழியமதுபாநம்பண்ணோம்” என்கையிறே யிவர்க்கிங்ஙா ன்படவேண்டுகிறது. இனியிவையலருகையாவது-விசேஷகடாக்ஷம்பண் ணுகைகாணும். அவன்கண்விழியாதபோது இவர்கண்விழிக்கமாட்டாரோ.

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (எம்மானேயித்யாதி) பாட்டையெல்லாங்கடாக்ஷித்தவ தாரிகை (இப்படியித்யாதி) உம்முடையகார்யம் நீரேசெய்யுமித்தனையன்றோ வெ ன்றது - பலமும்மதானபின்பு அதுக்குத்தக்க சாதநாநுஷ்டாநமும் நீரேசெய்யு மத்தனையன்றோவென்றபடி.

“எம்மானே - என்னான்செய்கேன்” என்றந்வயத்தைவிவக்ஷித்து, சாதநா நுஷ்டாநம் பண்ணப்போகாதென்கிறவிடத்திலே ஸ்வாமித்வத்தைச்சொல்லுகி றதுக்கு ப்ரயோஜநமேதென்ன (உடைமையோவித்யாதி) இவ்வாக்யத்துக்குதாத்ப ர்யம் - ஸ்வம்மான வென்னைப்பெறுகைக்கு ஸ்வாமியானநீயே சாதநாநுஷ்டாந ம்பண்ணுமத்தனை யென்றி 'ற, அத்தையருளிச்செய்கிறார் (நீயேயித்யாதி) வெறு ம்நானேயாயிருந்தேனோ - கேவலம் ஸ்வதந்த்ரனாயிருந்தேனோ, உமக்கு ஸ்வம்மன் றோவென்றபடி. இவ்விடத்திலே - “யெநாயவஜொஷிலவஜியொகெவெ

[illegible] (யோநதவந்தோஹிபவந்தி லோகே தேநாத்மகார்யாணிஸமாரபந்தே । கார்யேஷுதேஷாம்ப்ரபவந்திநாதாஶ்சைப்யாதயோராமயதாயயாதேஃ) என்கிறஶ்லோகமநுஸந்தேயம். இது - பாண்டவர்கள் நிமித்தமாக சாத்யகிநம்பி மூத்தபிரானைப்பார்த்துச்சொன்னது. அதாவது-ஆரண்யபர்வத்திலே, யயாதியினுடைய பெண்ணின்பிள்ளைகள் சைப்யன்முதலானார் நாலுபேர்; இவர்கள், யயாதிஸ்வர்க்கத்திலேயிருந்து விழுந்தபோது தங்கள் ஸுக்ருதங்களைக்கொடுத்து ஸ்வர்க்கத்திலே யேற்றினார்களென்றுகதை.

“எம்மான்” என்றறிந்திருக்கச்செய்தேயும் உபாஸகர் ஸ்வயத்நத்தாலே தங்கள்கார்யம் செய்துகொள்ளவில்லையோவென்ன; “எம்மானே” என்கிறவிது-ஸாதநாநுஷ்டாநம்பண்ண ப்ராப்தியில்லாமையைச்சொல்லுகிறதென்னு மிடந்தோன்றவருளிச்செய்கிறார் (பதிம்விஶ்வஸ்யேத்யாதி) (யஸ்யாஸ்மிநதமந்தரேமி) யஸ்ய-ஈஶ்வரஸ்ய, தாஸோஸ்மி, தம், நாந்தரேமி-அதிக்ரமிக்கிறேனல்லேனென்றபடி. “வெள்ளை” என்று-வெளுப்பாய், சுத்தியைச்சொல்லி, “மூர்த்தி” என்று-ஸ்வரூபமாய், சுத்தஸ்வரூபனாகையாலே எனக்குத்தன்பேறாக * மயர்வறமதிநலமருளினானென்கிறார் (சுத்தஸ்வரூபனித்யாதி) “ஒன்றும்குறையாதபடி” என்றத்தை விவரிக்கிறார் (சிறிதித்யாதி)

“எம்மாவுரு” என்றதுக்குமூன்றுபொருள். அதில்முந்தினது; “எம்” என்று-பஹுவசநமாய், அதுக்கர்த்தம் (எனக்காகவுமித்யாதி) “எ” என்றதுக்கு-எவ்வகையாலுமென்றிரண்டாமர்த்தம் (எவ்வகையாலுமித்யாதி) எவ்வகையாலுமென்றது-அப்ராக்ருதமாகையாலும், இச்சாதீநமாகையாலும், பரார்த்தமாகையாலுமென்றபடி. அவதாரவிக்ரஹத்துக்கு வைலக்ஷண்யமுண்டோவென்ன (அதாவதித்யாதி) வேண்டுமாற்றால்-இச்சித்தப்ரகாரத்தாலே இதிசப்தார்த்தஃ. தானிச்சித்தபடியேயென்னுதல், ஆஶ்ரிதரிச்சித்தபடியேயென்னுதல். ஆஶ்ரிதர் வேண்டினபடியே விக்ரஹத்தைக்கொள்ளுமோவென்ன (தமருகந்ததித்யாதி) “எ” என்றதுக்கு-எல்லாமானவென்று மூன்றுமர்த்தம் (எவ்வுருவுமித்யாதி) அதில்ப்ரமாணம் (எந்நின்றவித்யாதி) சகலஜாதிகளிலு மவதீர்ணனானவனே யித்யர்த்தஃ. மாவுரு-விலக்ஷணவிக்ரஹம். இது-அர்த்தத்ரயத்துக்குமொக்கும். “வேண்டுமாற்றால் - எம்மாவுருவுமாவாய்”என்றர்த்தத்ரயத்திலு மந்வயிப்பது.இச்சித்தபடியே யெங்களுக்காக விலக்ஷணமான வவதாரவிக்ரஹங்களை யுடையனானவனேயென்று ப்ராதமிகார்த்தம், இச்சையாலே எல்லாவகையாலும் விலக்ஷணமான விக்ரஹங்களையுடையவன் என்றிரண்டாமர்த்தம். அநேகமான விக்ரஹங்களையுடையவனேயென்று மூன்றுமர்த்தமென்று கண்டுகொள்வது. “வேண்டுமாற்றால்” என்றத்தைக்கடாக்ஷித்து (ஆஶ்ரிதார்த்தமாகவித்யாதி) “மாவுரு” என்றதுக்கர்த்தம் (எல்லாவடிவுமித்யாதி) இந்தவாக்யம்-திர்யகாதிவிக்ரஹங்கள் ஶ்லாக்யமாயிருக்குமோவென்கிற சங்கைக்கு பரிஹாரமாயுமிருக்கிறது. “அவனுடையவிக்ரஹமப்ராக்ருதம்” என்கிறதுக்குப்ரமாணம் (ரூபமந்யதித்யாதி) “[illegible]” (ஸமஸ்தாஶக்தயஶ்சைதாந்ருபயத்ரப்ரதிஷ்டிதாஃ । தத்விஶ்வரூபவைரூப்யம் ரூபமந்யத்தரேர்மஹத்.) இதிஷஷ்டே. “[illegible]

ஞ நா” ( தேவகீபூர்வஸந்த்யாயா மாவிர்ப்பூதம்மஹாத்மநா ) இதிபஞ்சமே. விஶ்வரூபவைரூப்யம்-விஶ்வத்திலுண்டான ரூபங்களைப்பற்ற விலக்ஷணமாயிருக்கும். இப்படியழகாலே விலக்ஷணமாய், உபாதாநத்ரவ்ய மொன்றாயிருக்குமோவென்ன (அந்யத்) வேறாயிருக்கும். அதாவது-அப்ராக்ருதமாயிருக்குமென்றபடி. “ஆவாய்” என்றவர்த்தமாநத்துக்கர்த்தம். ( கர்மமடியாகவித்யாதி ) ஆனாலிருவர்க்கும் வாசியேதென்ன (இருவர்க்குமித்யாதிவாக்யத்வயம்) கர்மக்ஷயம்பிறக்கைக்குஹேதுவேதென்ன (இவன்கர்மமித்யாதி) நித்யமாகச்செல்லுகைக்கு ஹேதுவேதென்ன (இனியவனுக்கித்யாதி) (அதுதானும்நித்யமிறேயவனுக்கு) ஆனபின்பு, அநுக்ரஹத்துக்கு முடிவில்லாமையாலே அநுக்ரஹகார்யமான பிறவியும் நித்யமாய்ச்செல்லாநிற்குமென்றபடி. (அதுதானும்) என்றசப்தம்-ஸ்வரூபநித்யத்வத்தை சமுச்சயிக்கிறது. நித்யதையாலே வ்யாவ்ருத்தியருளிச்செய்து, பரார்த்ததையாலும் வ்யாவ்ருத்தமென்கிறார் (இவனுக்கிவன்றன்னளவிலேயித்யாதி) இந்தஸ்வார்த்தபரார்த்ததைகளுக்கு ஹேதுவேதென்ன (இவனுக்குகர்மமித்யாதி) ஈஶ்வரனுடைய வவதாரங்களஸங்க்யாதங்களாயிருக்குமோவென்ன; ப்ரமாணம் (பஹூநீத்யாதி) “பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந । தாந்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப” ( பஹூநிமேவ்யதீதாநி ஜந்மாநிதவசார்ஜுந । தாந்யஹம்வேதஸர்வாணிநத்வம்வேத்தபரந்தப ) இதிகீதாயாம்சதுர்த்தே. ஶ்லோகார்த்தம் (தவசேத்யாதி) ஜந்மரஹிதனாயிருக்கிற நீயிப்படி அநேகாவதாரங்களைப்பண்ணுகிறாயென்றால், இது ஐந்த்ரஜாலிகமொழிய சத்யமாகக்கூடுமோவென்று அர்ஜுநன் சங்கிக்க; உன்னுடைய பிறவியெப்படிசத்யம், அப்படியிதுவும் சத்யமென்றபடி “தவச” (தவச) என்கிறது - த்ருஷ்டாந்தார்த்தமென்கிறது. (இப்படியிராதவன்று) இத்யாதிவாக்யத்துக்குக்கருத்து-அவதாரங்களசத்யமானால், அவதாரங்களிலுக்தங்களான “ஸக்ருதேவ” (ஸக்ருதேவ) இத்யாதிஶ்லோகங்களும் மஸத்யங்களாகையாலே, அவ்வார்த்தைகளை விஶ்வஸித்து நிர்ப்பரனாயிருக்கக்கூடாதென்று. அன்றிக்கே, இப்படியவன் அநுக்ரஹத்தாலே அநேகாவதாரங்களைப்பண்ணுதபோது, இவனுக்கு “அவனேரக்ஷகன்” என்று விஶ்வஸித்து நிர்ப்பரனாயிருக்கவிரகில்லையென்கிறார் (இப்படியிராதவன்றித்யாதி) ஆவாய்-ஆகிறவனே.

அதுக்குஹேதுவேதென்ன (கர்மத்தாலேயித்யாதி) பிறக்கப்பிறக்கப்புகரதிசயிக்கைக்குப்ரமாணம் (பலபிறப்பாயித்யாதி) “ ஆத்மாவைப்போலல்லவிவன்பிறவி ” என்றதுக்குப்ரமாணம் ( ஸஉஶ்ரேயாநித்யாதி ) இந்தஶ்ருதியிலே - சேதநவ்யாவ்ருத்தி தோன்றுகிறதோவென்ன (ஸஏவேத்யாதி) இதுக்கர்த்தம் (எல்லார்க்குமித்யாதி) “ஏறே” என்கிறபதத்துக்கவதாரிகை ( தேசமறியவித்யாதி ) மேனாணிப்பு-கர்வம். அவதரித்தவிடத்தில் வ்ருஷபம்போலே மேனாணித்திருக்கைக்குப்ரமாணம் (பட்டியித்யாதி) ஸ்வைரசஞ்சாரம்பண்ணியத்தாலே யத்விதீயமான கறுத்த வ்ருஷபம்போலே மேனாணித்திருக்குமவனித்யர்த்தஃ. நாய்ச்சியார்திருமொழி பதினாலாந்திருமொழி முதற்பாட்டு. இதுக்கர்த்தம் (வானிளவரசித்யாதி) (வானிளவரசு) வ்ருத்தமந்த்ரிகள் கீழோபலராஜாவானவன் வர்த்திக்குமாபோலே, பரமபதத்துக்கிளவரசாயுள்ளவனித்யர்த்தஃ. பெரியாழ்வார்திருமொழி மூன்றாம்பத்து ஆறாந்திருமொழி மூன்றாம்பாட்டு. அகம்படி-பழையபடியார். செறுப்பு - ஸங்கோசம். பாதை. “ இதுவேயிஷ்டமாய் மேனாணித்திருக்கும் ” என்கைக்கு பகவதுக்தியையருளிச்செய்கிறார் (அடியறிவாரித்யாதி) சூழ்த்துக்கொடுக்கை - ஆணையிட்டுக்கொ

டுக்கை. " [illegible] " ( பவாந்நாராயணோதேவஸ்ஸ்ரீமாம்ஸ்சக்ராயுதோவிபுஃ । ஏகஸ்ருங்கோவராஹஸ்த்வம்பூதபவ்யஸபத்நஜித் ) இதியுத்தகாண்டேப்ரஹ்மா. " [illegible] " ( ஆத்மாநம்மாநுஷம்மந்யேராமம்தஸரதாத்மஜம் ) இத்யாதி. " [illegible] " ( நாஹம்தேவோநகந்தர்வோநயக்ஷாநசதாநவஃ । அஹம்வோபாந்தவோஜாதோநைதச்சிந்த்யமதோந்யதா ) இதிபஞ்சமேம்ஸே.

(கோயில்களிலே) என்கிறபஹுவசநத்துக்கு - "நாகத்தணைக்குடந்தை" இத்யாத்யநுசந்தேயம். " செம்மாகமலம் " என்றதுக்கு- அவனுக்குபோக்யமாயிருக்குமென்று, போக்யதைக்குறுப்பாகபாவம் (பரிமளமித்யாதி) அவன்திருமேனிக்கும் திவ்யாவயவங்களுக்கும் போலியாயிருக்குமென் றுபமாநபரமாகபாவார்தரம் (சிவந்தவித்யாதி) "செம்மா" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (அரைக்ஷணத்திலேயித்யாதி) " அம் " என்று-அழகாகவர்த்தம் (அழகியவித்யாதி) "அ" என்று பூர்வபராமர்ஸியாக்கி யர்த்தாந்தரம் (அவற்றேருடேயித்யாதி)

" அம்மாமலர்க்கண்வளர்கின்ருனே, என்-செய்கேன் " என்றதுக்குபாவம் (திருக்குடந்தையிலேயித்யாதி) " நான் " என்றதுக்குபாவம் ( இக்கூப்பீடித்யாதி ) அல்லாதபூக்களில் மதுவைப்பாநம்பண்ணவொண்ணுதோ விவர்க்கென்ன (இவையொழியவித்யாதி) "[illegible]" (கதமப்யஹ்ச்சதி) என்னக்கடவதிறே. சென்றற்றதுகிடாய் - முடியுமளவாயிற்று கிடாயென்றபடி. ஸ்வாபதேஸம் ( இனியிவையித்யாதி ) க்ரமேணாந்வயஃ.......................................................*

---

## மூன்றும்பாட்டு.

---

என்னான்செய்கேன்யாரேகளைகணென்னையென்செய்கின்றாயுன்னாலல்லால்யாவராலுமொன்றுங்குறைவேண்டேன்
கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தாயடியேனருவாணாள்
சென்றுளெந்நாளந்நாளுனதாள்பிடித்தேசெலக்காணே.

### ஆருயிரப்படி.

(என்னான்செய்கேன்) என்னாலொருசெயலில்லை, நீயல்லதெனக்கு மற்றொருகதியில்லை, என்னுடைய யத்நத்தாலே உன்திருவடிகளைப் பெறக்கடவனாகவோ ! பார்த்தருளுகிறது, உன்னுடையக்ருபையாலேயுன்திருவடிகளைப்பெறுகையொழிய வேறொருபாயத்தால் பெறிலும்வேண்டா; ஆனபின்பு, இனி இவ்வாத்மா உள்ளகாலமும் உன்திருவடிகளைப்பிரியாதேயிருக்கும்படி பார்த்தருளவேணுமென்கிறார் ............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அகிஞ்சநனான நானுன்னையொழிய வேறொருவராலு மபேக்ஷையுடையேனல்லேன்; இப்படியாக்கினநீயே, யாவதாத்மபாவி யுன்றிருவடிகளிலே யடிமைகொண்டருளப் பார்க்கவேணுமென்கிறார்.

நான்-கர்த்ருத்வம் ஸ்வாதீநமல்லாதநான். ஸ்வரக்ஷணார்த்தமாக, என்-என்னப்ரவ்ருத்தியை. செய்கேன்-பண்ணுவேன். வேறு, தந்தாங்காரியந்தாந்தாமறியாதசேதநரில், களைகண்-ரக்ஷகராவார். யார்-ஆர். என்னை-அசக்தனானவென்னை. என்செய்கின்றாய்-துஸ்ஸோபாயங்களிலே மூட்டநினைத்திருக்கிறாயோ, உனக்கே பரமாக வேறிட்டுக்கொள்ள நினைத்திருக்கிறாயோ, என்செய்யவிருக்கிறாய். உன்னாலல்லால்-சர்வரக்ஷகனாய்ப்ராப்தனாய் சக்தனானவுன்னையொழிய. யாவராலும்-அரக்ஷகராயப்ராப்தராயசக்தரானவர்களாலேனுமொருவராலும். ஒன்றும்-ஒரு. குறையும்-குறையும். நிரம்புவதாக, வேண்டேன்-வேண்டியிரேன். கன்-சிக்கெனவு. ஆர்-விஞ்சியிருக்கிற. மதிள்-மதிள். சூழ்-சூழ்ந்த. குடந்தை-திருக்குடந்தையிலே. கிடந்தாய்-கண்வளர்ந்தருளினவனே. அடியேன்-உனக்கடியேனானவென். அரு-ஆத்மவஸ்து. வாழ்-உஜ்ஜீவிக்கும். நாள்-காலம். செல்-அநுவர்த்திக்கும். நாள்-நாள். ஏ-எத்தனை. நாள்-நாள். அந்நாள்-அந்நாளெல்லாம். உன-உன். தாள்-திருவடிகளை. பிடித்தே-அவலம்பித்துக்கொண்டே. செல-நடக்கும்படி. காண்-பார்த்தருளவேணும்.

கன்னென்று - தொழிலுமாம். அருவென்று-அணுரூபமானஸ்வரூபம்... ...*

## ஈடு-மூன்றாம்பாட்டு.

இப்படிநசையற்றாப்போலே துடித்துக்கிடந்து கூப்பிட்டவிடத்திலும், குளிரநோக்குதல் வினவுதல் செய்யாமையாலே, பேறுதம்மதானால் பெறுவார்க்கும் சிலசெய்யவேணுமென்றிருந்தானாகக்கொண்டு; நானென்காரியம் செய்கையென்றொன்றுண்டோ, நீசெய்து தலைக்கட்டித்தரவேணுமென்கிறார்.

( என்னாஞ்செய்கேன் யாரோகளைகணென்னையென்செய்கின்றாய் ) என்மேலேவிட்டிருக்கிறாயோ? பிறர்மேலே விட்டிருக்கிறாயோ ? நீயே செய்யக்கடவதாக நினைத்திருக்கிறாயோ?. (என்னான்செய்கேன்) " நான் செய்வதெது" என்றுகேட்கிறாரல்லர், நான்செய்து தலைக்கட்டுவதாக நினைத்திருக்கிறவற்றுக்கு மெனக்கு மென்னசேர்த்தியுண்டு. ( யாரோகளைகண்) அமிழ்ந்துகிறாரமிழ்ந்துகிறானையெடுக்கவோ. * போதயந்த:பரஸ்பரம்பண்ணுகைக்கு மாளல்லாதவர்களென்கார்யம்செய்யவோ. ( என்னையென்செய்கின்றாய் ) * நெறிகாட்டி நீக்குதியோ, நின்பால் கருமாமுறிமேனிகாட்டுதியோ, நீநினைத்திருக்கிறதென். ( என்னான்செய்கேன் யாரோகளைகண் என்னையென்செய்கின்றாய்) என்னையறியாயோ! பிறரையறியாயோ! உன்னையறியாயோ!. என்னைநானாகவன்றோ புத்திபண்ணியிருக்கிறது. (யாரோகளைகண்) என்னளவுகிட்டாதாரோனக்குரக்ஷகராகவோ. (என்னையென்செய்கின்றாய்) நீசெய்துதலைக்கட்டப்பார்த்தாயோ?; அன்

ழிக்கே, "சாதநாநுஷ்ட்டாநம்பண்ணிவாரும்" என்று நளன் தமயந்திக்குவழிகாட்டினைப்போலே கைவிடப்பார்த்தாயோ. (என்னான்செய்கேன்) தாம்கைவாங்கினபடி. (யாரேகளைகண்) பிறர்பக்கல்நின்றும் கைவாங்கினபடி. (என்னையென்செய்கின்றாய்) " मद्याजी मां नमस्कुरु " ( மத்யாஜீ மாம்நமஸ்குரு ) என்னப்பார்த்தாயோ ? " मा शुचः " (மாஶுச:) என்னப்பார்த்தாயோ?.

( உன்னாலல்லால் யாவராலுமொன்றும் குறைவேண்டேன் ) நீ "मां नमस्कुरु" (மாம்நமஸ்குரு) என்றாலெனக்கு சோகம்போகாதுகிடாய். பெறுவதுன்னையேயாகிலு முன்னாலேபெறுமன்றுவேண்டுவன், என்னாலும் பிறராலும் பெறுமுன்னையும்வேண்டேன். உன்னாலல்லால் என்கிறவித்தை-உபேயவிஷயமாக்கி, "உன்னையொழிய மற்றொன்றாலெனக்கொரு குறையில்லை" என்றுசொல்லுவாருமுண்டு. ( யாவராலும் ) யாவையாலுமென்னாதே, யாவராலுமென்கிறது – " உபாயபாவமொரு சேதநனாலே " என்றிருக்கையாலே. ( ஒன்றும்குறைவேண்டேன் ) அல்லாதவற்றுக்கு மபிமதசித்தியுண்டேயாகிலும், காலன்கொண்டு மோதிரமிடுமாபோலே ஸ்வரூபவிரோதியான தெனக்குவேண்டா. கடல்கடத்தப்பெறவிருத்தல், சபித்துப்பெறவிருத்தல் செய்யாதபிராட்டியைப்போலே. அதாவது - இரண்டுதலையையுமழிக்கையிறே. ஒருவராலுமொருகுறை நிரம்புவதாகவேண்டியிரேன்.

( கன்னார்மதில்சூழ்குடந்தைக்கிடந்தாய் ) இவருடையவுபாயமரண் செய்துகிடக்கிறபடி. " அவனையுபாயோபேயம் " என்றறுதியிட்டவர்கள், அத்தலையில் பரிவாலே யவனைக்காக்கையணியிறே; * செவ்வடி செவ்விதிருக்காப்பிறே. (கன்னார்மதின்) தொழில்மிக்கமதிளென்னுதல், செம்பாலேசெய்யப்பட்ட மதிளென்னுதல். கன்னென்று - தொழிலும், செம்பும், சிக்கெனவும். (அடியேனரு) உனக்கநந்யார்ஹமாய்த் தனக்குரித்தல்லாத இவ்வாத்மவஸ்து. ( வாணாள்சென்னாளெந்நாள் ) ஜீவித்துக்கொண்டுசெல்லும்நாள் யாதொருநாள். ( அந்நாள் ) அவ்வளவும். ( உனதாள்பிடித்தேசெலக்காணே ) உன்திருவடிகளையேபெற்றுச் செல்லும்படி பார்த்தருளவேணும். காற்கூறும் விடாதபடிபார்த்தருளவேணும். " ஒன்றும்குறைவேண்டேன் " என்றவநந்தரம் வந்துகுறைவிரப்பக் கண்டிலர்; இனி அநுபவம்பெற்றபோதுபெற, " உன்னாலல்லால் யாவராலுமொன்றும் குறைவேண்டேன் " என்கிற இவ்வத்யவசாயம் குலையாதபடி பார்த்தருளவேணுமென்கிறார். அடிவிடி லத்யவசாயம்குலையுமே, அடியேபிடித்து ஜீவித்தவரத்தைவிடாரோ இப்போதாக. அத்யவசாயமிது, ருசியில்லாந்தால் பரமபக்தியுக்தர், விளம்பத்துக்கடியென்னென்னில்; பக்திவிபாகத்துக்காகவும், இவருடையப்ரேமம் வழிந்தசொல்லாலே நாட்டைத்திருத்துகைக்காகவும் ..................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (என்னானித்யாதி) "என்னான்செய்கேன்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்படியித்யாதி) நசையற்றாப்போலே - தம்முடையப்ராணனில் நசையற்றாப்போலேயென்றபடி.

"என்னான்செய்கேன்" என்று-தம்முடைய செயலறுதியும், "யாரேகளைகண்" என்று-பிறர்ரக்ஷகரல்லாமையும், "என்னையென் செய்கின்றாய்" என்று-அவனைக்கேட்கிறதுமான விம்மூன்றிலு மிவர்க்குண்டானபாவத்தை யருளிச்செய்கிறார் (என்மேலேயித்யாதி) "இவன்தானே சாதநாநுஷ்டாநம்பண்ணுகிறான், நாமென்" என்று என்மேலேயாக்கி முகங்காட்டாதிருக்கிறாயோ, அஸ்ஸாதநாநுஷ்டாநத்துக்கு நான்க்ஷமனல்லேனென்கிறவிது (என்மேலேவிட்டிருக்கிறாயோ) என்றதுக்குதாத்பர்யம். "இவன்சாதநாநுஷ்டாநக்ஷமனல்லனேயாகிலும் பிறரிவனை ரக்ஷிக்கிறார்கள்" என்று அவர்கள்மேலேயாக்கி முகங்காட்டாதிருக்கிறாயோ, அவர்கள் ரக்ஷிக்கமாட்டார்களென்கிறவிது (பிறர்மேலேவிட்டிருக்கிறாயோ) என்றதுக்கு தாத்பர்யம். "தன்நிலையும் பிறர்நிலையு மிப்படியானபின்பு நாமேயன்றோ உளோம்" என்றுநீயேரக்ஷிக்கப்பார்த்தாயோ என்கிறவிது (நீயேசெய்யக்கடவதாக நினைத்திருக்கிறாயோ) என்றதுக்குபாவம். என்னான்செய்கேனென்றது - அநுவாதமன்றிக்கே, ப்ரஶ்நோக்தியுமன்றிக்கே, க்ஷேபோக்தியாய், அஜ்ஞனாயசக்தனான நானென்ன சாதநாநுஷ்டாநம்பண்ணுவேனென்றபடி. இத்தைக்காட்டுகிறார் (நான்செய்வதித்யாதி) (என்னசேர்த்தியுண்டு) என்கிறவிடத்திலே-ஸ்ரீவசநபூஷணத்திலே, "என்னான்செய்கேனென்கிறவிடத்திலே யிம்மூன்றுமுண்டு" என்றருளிச்செய்த வர்த்தத்ரயமும் விவக்ஷிதம். அதாவது-எம்பெருமான் தம்முடைய வார்த்திகண்டிரங்கக் காணாமையாலே, தன்னைப்பெறுமிடத்தில் சிலசாதநாநுஷ்டாநம் பண்ணவேணுமென்றிருந்தானாகக்கொண்டு; உபாயாந்தராநுஷ்டாநத்துக்குயோக்யதையில்லாதபடி அஜ்ஞனா யசக்தனானநானென்செய்கேன்; ஜ்ஞாநம் தந்தோமேயென்னில்; நீதந்தஜ்ஞாநத்தாலே ஸ்வரூபபாரதந்த்ர்யத்தையுணர்ந்து "சாதநாநுஷ்டாநமப்ராப்தம்" என்றிருக்கிற நானென்செய்கேன்; ஸ்வரூபத்துக்குச்சேராதாகிலு முன்னைப்பெறலாமாகி லதுதன்னை யநுஷ்டிக்கலாயிற்றிறே ஜ்ஞாநமாத்ரத்தைத்தந்தாயாகில், பக்திரூபாபந்ந ஜ்ஞாநத்தைத்தருகையாலே யொன்றையு மடைவுபடவநுஷ்டிக்க க்ஷமனல்லாதபடி பக்திபரவசனானேன் என்செய்வேனென்றபடி. நீரசக்தரானால், சக்தரானதேவதாந்தரங்கள் ரக்ஷகரானாலோவென்ன (ஆமிழ்ந்துகிறாரித்யாதி) அதாவது-அசக்தரென்றபடி. எடுக்கமாட்டாவிட்டாலுசாத்துணையாவர்களோவென்ன (போதயந்தஇத்யாதி) அதாவது-அஜ்ஞதையாலு மென்கார்யம் செய்யமாட்டார்களென்றபடி. "என்செய்கின்றாய்" என்கிறவம்சயம் த்விஷ்டமாகையாலே யருளிச்செய்கிறார் (நெறிகாட்டியித்யாதி) உபாயாந்தரங்களைக்காட்டி "அவற்றையநுஷ்டித்துவா" என்று அகற்றப்பார்க்கிறாயோ, அன்றிக்கே உனக்கசாதாரணமாய்க்கறுத்து ஶ்லாக்யமான அஞ்சநம்போலேயிருக்கிறதிருமேனியைக்காட்டுதியோவென்றபடி. பெரியதிருவந்தாதி ஆறாம்பாட்டு. இப்பதத்ரயங்களிலும் சித்தித்த மூன்றாகாரங்களாலே-உன்னுபேக்ஷையொழிய வேறுமுகங்காட்டாமைக்கு ஹேதுவில்லையென்றிவர்க்கபிப்ரேதமென்னுமிடந்தோற்றவருளிச்செய்கிறார் (என்னையறியாயோவித்யாதி) "அஜ்ஞனாயசக்தனானநானென்னசாதநாநுஷ்டாநம்பண்ணுவேன்" என்னுமத்தை வ்யங்க்யமாகவருளிச்செ

ய்கிறார் (என்னைநாளுகவித்யாதி) என்னைநாளுகவன்றோ புத்திபண்ணியிருக்கிறதென்றது - என்னை "அஜ்ஞன், அசக்தன், அப்ராப்தன்" என்றுபுத்திபண்ணியிருக்கவில்லையோ, சர்வஜ்ஞனாய் சர்வசக்தியான தேவரீரோபாதி விசாரித்துவிட்டதோவென்றபடி. என்னளவுகிட்டாதாரொன்றது-என்னோபாதி யுன்ப்ரசாதத்துக்கிலக்காகாதாரொன்றபடியென்னுதல், என்னளவு ஜ்ஞாநபக்திரஹிதரொன்னுதல். களன் தமயந்திக்கு வழிகாட்டுகையாவது - காட்டிலே தமயந்தியை யுபேக்ஷிப்பதாகநினைத்து, [illegible] [ஏஷபந்தாவிதர்ப்பாணமேஷயாத்யபகோஸலாந்] என்கிறபடியே - இதுங்கள் தமப்பனாருக்குப் போகிறவழி, இதுநம்முடைய வூருக்குப்போகிறவழியென்றது. இம்மூன்றுபதத்தாலும் - "[illegible]" ( அஹமஸ்ம்யபராதாநாமாலயோகிஞ்சநோகதி: ) என்று ப்ரபத்தியைவிதிக்கிற ஶ்லோகத்திற்சொன்ன வாகிஞ்சந்யாநந்யகதித்வங்களும், "அவனேரக்ஷகன்" என்னுமதுவும் சொல்லிற்றென்னுமிடந் தோற்றவருளிச்செய்கிறார் ( தாம்கைவாங்கினபடியித்யாதி ) (என்னையறியாயோஎன்றுதொடங்கி, மாசுச: என்னப்பார்த்தாயோவென்னுமளவும்) உத்தரோத்தர விவரணமாகவுமாம். "[illegible]" ( மந்மநாபவமத்பக்தோமத்யாஜீமாம்நமஸ்குரு । மாமேவைஷ்யஸியுக்த்வைவ மாத்மாநம்மத்பராயண: ) இதிபகவத்கீதாயாம் நவமே. "[illegible]" ( மத்யாஜீமாம்நமஸ்குரு ) என்று பக்த்யுபாயத்தைச்சொல்லுகிறது.

கீழ் - அநப்யுபகம்யவாதத்தாலேயருளிச்செய்து, அப்யுபகம்யவாதத்தாலேயருளிச்செய்கிறார்-மேல் (உன்னாலல்லாலென்றுதொடங்கி) அதாவது - தமக்குபாயாந்தரங்களிலே ஜ்ஞாநசக்திகளுமுண்டாய் ரக்ஷகாந்தரங்களுக்கு மோக்ஷப்ரதத்வசக்தியுமுண்டாகிலும், ஸ்வரூபவிருத்தமாகையாலே தமக்குவேண்டாவென்கிறார் ( உன்னாலல்லாவித்யாதியாலே ) என்று. "உன்னாலல்லால்" இத்யாதிக்கு மூன்றுபொருள். முந்தினது; "என்னான்செய்கேன்" என்கிறபதமாத்ரத்தைக்கடாக்ஷித்து, உன்னால்வருமுன்னையொழிய வுபாயாந்தரங்களால்வரு முன்னையும்வேண்டேனென்கிறார் (நீமாம்நமஸ்குர்வித்யாதி) இந்தவர்த்தத்துக்கு, "யாவராலும்" என்றது-யாலையாலுமென்றபடி. இரண்டாவது; "என்னான்செய்கேன் யாரேகளைகண்" என்கிறபதத்வயத்தையும் கடாக்ஷித்து, உன்னாலே பெறுமுன்னையொழிய வுபாயாந்தரங்களாலும் ரக்ஷகாந்தரங்களாலும் பெறுமுன்னையும் வேண்டேனென்கிறார் (பெறுவதுன்னையேயாகிலு மித்யாதிவாக்யத்வயத்தாலே) "யாவராலும்" என்றசப்தத்தாலே - ரக்ஷகாந்தரங்களால் சாதிக்கப்போகாதது சாதிக்கப்பெற்றாலுமென்றபடி. மூன்றும்பொருள்; உம்மாலும் பிறராலும் சாத்யமல்லாதவென்னைவிட்டு, உபயசாத்யமான வைஶ்வர்யாதிகளைப்பெற்றுப்போமென்ன(உன்னாலல்லாதென்கிறவித்தையித்யாதி) சொல்லுவாருமுண்டென்கையாலே-முந்தினயோஜநாத்வயமேயுபாயப்ரகரணத்துக்குச்சேருமென்றபடி.மூன்றும்யோஜநையில், உன்னையொழிய மற்றொன்றுலென்றது - ப்ராப்யனான வுன்னையொழிய வேறானைஶ்வர்யாதிகளாலென்றபடி. அசேதநமான வைஶ்வர்யாதிகளை - "யாவராலும்" என்றது; "ப்ராப்யமொரு பரமசேதநம்" என்கிறவாசநையாலே யருளிச்செய்கிறாரென்றபடி. முந்தினவர்த்தத்திலே, யாலையாலுமென்று - அசேதநமாகச்சொல்லாதே, "யாவராலும்" என்று சேதநராகச்சொல்லுகிறதென்னென்ன ( யாலையாலுமென்னாதேயி

த்யாதி ) பெறுவது நம்மையானுல் உபாயாந்தர ரக்ஷகாந்தரங்களாலே நம்மைப் பெற்ருல் விரோதமேதென்ன ( அல்லாதவற்றுக்குமித்யாதி ) இந்தவாக்யத்துக்கு- "பெறுவதுன்னேயேயாகிலும்" என்கிறவாக்யத்தோடேசங்கதி. காலன்கொண்டு-காலபுருஷதாநம்வாங்கி. அப்படி "என்னுலும் பிறராலும் வருமவனும்வேண்டா" என்றிருந்தபேருண்டோவென்ன (கடல்கடத்தவித்யாதி) திருவடி கடல்கடத்தவென்றபடி. தான் சபித்தென்றபடி. அப்படிசெய்தா லவனுடையரக்ஷகத்வத்துக்குந்தன்னுடைய பாரதந்த்ர்யத்துக்கும் சேராதென்கிருர் (அதாவதித்யாதி)

"கன்ஞர்மதிள்சூழ்" என்றதுக்குபாவம் (இவருடையவித்யாதி) அரண்செய்துகிடக்கிறபடி-அவிசால்யமாயிருக்கிறபடி. ஸ்வயத்நநிவ்ருத்தரான விவரத்தலைக் குரக்ஷைதேடுவானென்னென்ன ( அவனேயுபாயேத்யாதி ) உக்தார்த்தத்துக்குப்ரமாணம் (செவ்வடியித்யாதி) கன்-செயலும், செம்பும், பொன்னும். ஆர்தல்-மிகுதி.

உபாயம் சந்நிஹிதமாளுல் கொள்ளப்புகுகிறகார்யமேதென்ன (அடியேனருவித்யாதி) " உன்னுலல்லால் " இத்யாதியாலே-நீயேயுபாயமென்ருல், விரோதியைப்போக்கி கைங்கர்யத்தைத்தந்தருளவேணுமென்ருதே " உனதாள்பிடித்தேசெல்லும்படி பார்த்தருளவேணும் " என்பானென்னென்ன ( ஒன்றும்குறைவேண்டேனென்றவித்யாதி) " உனதாள்பிடித்தே செலக்காணே " என்றதுக்கர்த்தம் (காற்கூறுமித்யாதி) இது-சாடு. உனதாள்பிடித்தே செலக்காணேயென்றது -உன்றிருவடிகளேயேபிடித்துச் செல்லும்படி பார்த்தருளவேணுமென்றபடி. "பிடித்தே" என்றவதாரணுர்த்தம் (அடிவிடிலித்யாதி) கீழ் - " உன்னுலல்லால் " என்றதினர்த்தத்வயாதுகுணமாகவருளிச்செய்து, த்ருதீயார்த்தாநுகுணமாகபாவாந்தரம் ( அடியேபிடித்தித்யாதி ) அதாவது-உன்றிருவடிகளே ப்ராப்யமாகச்செல்லும்படி பார்த்தருளவேணுமென்றபடி.

க்ரமேணுர்வய?..........................................................................*

---

# நான்காம்பாட்டு.

செலக்காண்கிற்பார்காணுமளவுஞ்செல்லுங்கீர்த்தியா
யுலப்பிலானேயெல்லாவுலகுமுடையவொருமூர்த்தி
நலத்தான்மிக்கார்குடந்தைக்கிடந்தாயுன்னேக்காண்பானு
னலப்பாயாகாசத்தைநோக்கியழுவன்றொழுவனே.

## ஆருயிரப்படி.

(செலக்காண்கிற்பார்) அநவதிகாதிஶயா ஸங்க்யேய கல்யாணகுண மஹோததியே, சர்வாத்மாக்களேயு முன்னழகாலே தோற்பித்தடிமையாக்கிக்கொள்ளவல்ல திருவுடம்பையுடையவனே, நலத்தால் மிக்கார் குடந்தைக்கிடந்தாய், உன்னேக்காண்பான் நானலமந்து " ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குவந்துதோற்றி யருளினுப்போலேவந்துதோற்ருய் " என்றுகொண் டாகாசத்தைநோக்கி அழுவன்தொழுவனென்கிருர்,.........*

## பன்னீராயிரப்படி.

*அநந்தரம், அபரிச்சிந்நமாஹாத்ம்யத்தையுடைய சர்வேஶ்வரனானவுன்னை இந்த அர்ச்சாவதாரதசையிலே நினைத்தபடி கண்டநுபவிக்கவாசைப்பட்டு அலமந்து க்லேசியாநின்றேனென்கிறார்.*

*செல-மேலேபோக. காண்கிற்பார்-காணவல்லசக்தியையுடையவர்கள். காணுமளவும்-காணவல்லவளவுக்கும். செல்லும்-அவ்வருகேபோம்படியானவைபவத்தையுடைய. கீர்த்தியாய் - குணவிபூதிப்ரதையையுடையவனாய். அந்தகுணவிபூதிகளினுடைய கணைக்கு, உலப்பு-முடிவு. இலானே-இன்றியேயிருக்குமவனாய். எல்லாவுலகும்-சர்வலோகத்தையும். உடைய-அடிமையாகவுடைத்தாய். ஒரு-அத்விதீயமான. மூர்த்தி-ப்ராப்யவிக்ரஹத்தையுடையனாய்வைத்து, நலத்தால்மிக்கார்-உன்பக்கல் ப்ராவண்யம் விஞ்சியிருப்பாருடைய. குடந்தை-திருக்குடந்தையிலே. கிடந்தாய் - அவர்களுக்கநுபாவ்யனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளினவனே. உன்னை-இப்படிசர்வாதிகனாய் சர்வசுலபனானவுன்னை. நான் - அத்யந்தாபிநிவிஷ்டனானநான். காண்பான்-நினைத்தபடிகண்டநுபவிக்கைக்காக. அலப்பாய்-அலமந்து. ஆகாசத்தை-நீவரசம்பாவனையுள்ள வாகாசத்தை. நோக்கி-நோக்கி. அழுவன்-பக்திபரவசனைப்போலேயழுது. தொழுவன் - ப்ரபத்திபரனைப்போலே தொழுவதாகாநின்றேன்.*

*பாலனைப்போலேயழுவது, பக்வனைப்போலே தொழுவதாகாநின்றேனென்றுமாம்.........................................................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

*சர்வேஶ்வரனாயிருந்துவைத்து ஆஶ்ரிதர்க்காகத் திருக்குடந்தையிலே சந்நிஹிதனாயிருக்க, நினைத்தபரிமாற்றம் கிடையாமையாலே நோவுபடாநின்றேனென்கிறார்.*

(செலவித்யாதி) உன்னுடைய குணவத்தாப்ரதை யடங்கலுமழியப்புகாநின்றதுகிடாய். (செலக்காண்கிற்பார் காணுமளவும் செல்லும்கீர்த்தியாய்) எத்தனையேனு மளவுடையாரும் தாங்கள் நின்றவளவுகளைக்கழித்து அவ்வருகேகாணப்புக்கால், அவ்வளவுகளையுடையனாயிருக்கும். [பேசுவாரெவ்வளவு பேசுவரவ்வளவே - வக்கரனைக்கொன்றான்வடிவு] திவ்யவிக்ரஹ வைலக்ஷண்யத்தைப்பேசுமவர்கள் யாதோரளவுசொல்லுவர்கள், அவ்வளவாயிருக்குமத்தனை. ( உலப்பிலானே ) ஸ்வரூபகுணங்கள் புருஷபுத்த்யதீநமல்லாதவளவாய், தான் சாவதியாயிருக்குமோவென்னில் (உலப்பிலானே) ஸ்வதஃ எல்லைகாணவொண்ணாதபடியாயிருக்கை. * தனக்குந்தன்றன்மையறிவரியானிறே. ( எல்லாவுலகுமுடையவொருமூர்த்தி )' வடிவழகைக்காட்டி சர்வப்ராணிகளையும் காற்கீழேயிட்டுக்கொள்ளக்கடவனாய். வடிவுகண்டபோதே, "இவனேயிதுக்கெல்லாம்கடவன்" என்று தோற்றும்படி யிருக்கும். மூர்த்திசப்தந்தான்-விக்ரஹத்துக்கு வாசகமாய், ஐஶ்வர்யத்துக்கும் வாசகமாயிருக்கும்; அப்போது, ஸகலலோகங்களுக்கும் நிர்வாஹகனாய் அத்விதீயனான சர்வேஶ்

வரனென்றபடி. இத்தாலிவர்க்குப்பேறென்னென்னில்; உன்பெருமையை யழிக்கக்கிடாய் புகுகிறுயென்கை; "நீர்நோவுபடுகிறவிடமென்னெல்லைக்குள்ளன்று" என்னவொண்ணுதேயவனுக்கு. ( நலத்தால்மிக்கார் குடந்தைக்கிடந்தாய் ) நீ ஸ்வரூபரூபங்களால் விஸஜாதீயனுய்க்கொண்டங்கேயிருந்தாயாகில் நாறுறியிரோமே, உன்னுலல்லது செல்லாதாருடைய தேசத்தைவிரும்பிவிடமாட்டாதே படுகாடுகிடவாநின்றுய். ( நலத்தால்மிக்கார் ) க்ரமப்ராப்திபற்றுதபடி ஸ்நேஹித்திருக்குமவர்கள். நலம்-ஸ்நேஹம். (உன்னைக்காண்பான்நான்) ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாயிருக்க, ஆஸ்ரிதரைவிடமாட்டாதே திருக்குடந்தையில் கண்வளர்ந்தருளுகிறவுன்னை, அத்தலை யித்தலையாய், நான்காணவாசைப்பட்டலமாவாநின்றேன். அத்யபிநிவிஷ்டனுனநான். (உன்னைக்காண்பான்நான்) காண்கிறேன்நானன்றே,காண்கிறதுன்னையன்றே; ஆனபின்பு எங்ஙனேயாயிருக்கும்படி. (உன்னை) கீழ்ச்சொன்ன போக்யதையுடைய வுன்னையென்றுமாம். (அலப்பாய்) அலமந்து. "கண்டபோது கண்டுகொள்ளுகிறேம்" என்று, சூது சதுரங்கம் பொருதாறியிருக்கும் விஷயமன்றே. காணப்பெறுமையாலேவந்ததுடிப்பு. (ஆகாசத்தைநோக்கி) திருவடியுடைய த்வநி ஒருதிக்கிலேயாயிருக்கச்செய்தே, "ஸாதிய-ூம-ு-ஊ-ுது" (ஸாதிர்யகூர்த்வஞ்ச) என்று-பிராட்டியெங்குமொக்கப் பார்த்தாளிறே. (உன்னை) என்னுநிற்கச்செய்தே, (ஆகாசத்தைநோக்கி) என்பானென்னென்னில்; ( அலப்பாய் ) என்றதிறே, கலக்கத்தின்கார்யமிருக்கிறபடி. விஷயம் ஸந்நிஹிதமாயிருக்கச்செய்தே ஆகாசத்தைப்பார்க்கிறது, நினைத்தபரிமாற்றம்பெறுமையாலே. "ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குவந்து தோற்றினுப்போலே தந்தசையைப்பார்த்துத் தோற்றுகிறுனே" என்றுபார்த்து. "(ஆகாசத்தைநோக்கி) என்னுடைய நிராலம்பநதையைப்பார்த்து" என்றுண்டான்வார்த்தை. அன்றிக்கே, "மம நாஸக்தலோசநஃ" (ககநாஸக்தலோசநஃ) என்றுகொண்டு,கண்களிலக்கிற்றைக்கமாட்டாதபடியாயிற்றுச்சென்றற்றபடி. (அழுவன் தொழுவனே) ஸ்நேஹிகள் செய்வதையும் செய்யாநின்றேன், க்ருபணர்செய்வதையும் செய்யாநின்றேன். சபலர்செய்வதையும் செய்யாநின்றேன், விரக்தர்செய்வதையும் செய்யாநின்றேன்..........................................................*

## ஜீயர்அரும்பதம்.

நாலாம்பாட்டு (செலவித்யாதி) "எல்லாவுலகுமுடையவொருமூர்த்தி, குடந்தைக்கிடந்தாய், நானலைப்பாய் ஆகாசத்தை" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (சர்வேஶ்வரனுயித்யாதி)

"செல" என்றுதொடங்கி, "கீர்த்தியாய்" என்று - கீர்த்தியைவர்ணித்ததுக்குபாவம் (உன்னுடையவித்யாதி) "செலக்காண்கிற்பார்" என்றது - "முன்புண்டானஜ்ஞானம் போராது" என்று அத்தைக்கழித்து மேன்மேலன ஜ்ஞாநாதிசயத்தை சம்பாதித்துக்கொண்டு காணவல்லாரென்றர்த்தமருளிச்செய்கிறுர் (எத்தனையேனு

மித்யாதி) அவ்வருகே காணப்புக்காலென்றது-மேன்மேலன ஜ்ஞாநாதிசயத்தை சம்பாதித்துக்கொண்டு காணப்புக்காலென்றபடி. அவ்வளவுகளை யுடையனாயிருக்குமென்றது - "காணுமளவும்செல்லும்" என்றதுக்கர்த்தம். "செலக்காண்கிற்பார்" இத்யாதிக்கு-மேலேபோகக்காணவல்ல சக்தியையுடையவர்கள் காணவல்லவளவுக்குமவ்வருகேபோம்படியான கீர்த்தியையுடையவனேயென்று நிஷ்க்ருஷ்டமான சப்தார்த்தம். அப்படிகாண்பார் காணுமளவாயிருக்குமோவென்ன(பேசுவாரித்யாதி) மறுபாடுருவப்பேசுகைக்கு சக்தராயிருக்குமவர்கள், தங்கள் ஜ்ஞாநசக்திகளைக்கொண்டு எவ்வளவுபேசவல்லார்கள், அவ்வளவேயாயிருக்கு மத்தனையல்லது, உள்ளபடி கண்டுபேசவொண்ணாது, தந்தவக்ராசுரனைமுடித்துப் போகட்டவனுடையவடிவென்றபடி. மூன்றாந்திருவந்தாதி இருபத்தோராம்பாட்டு. வக்கரனை-தந்தவக்ரனை. வடிவென்றது-ஸ்வரூபகுணங்களுக்குமுபலக்ஷணம். இந்தப்பாசுரத்துக்கர்த்தம் (திவ்யவிக்ரஹேத்யாதி)

(ஸ்வரூபகுணங்கள்) இத்யாதி சங்காவாக்யத்துக்குபாவம்- சமுத்ரமிச்சேதநாலே பரிச்சேதிக்கவொண்ணாதே யிருந்ததேயாகிலும், ஸ்வரூபதஃபரிச்சிந்நமாயிருக்குமிறே; அப்படியே ஸ்வரூபகுணங்களுக்கு பரிச்சேதமுண்டோவென்று, சங்கைக்குதயமுண்டென்றபடி. சங்காவாக்யத்திலே, ( ஸ்வரூபகுணங்கள் ) என்றருளிச்செய்கையாலே, " கீர்த்தியாய் " என்கிறவிதுக்கு-கீர்த்யத இதிகீர்த்திஃஎன்று, போக்யபதையாலே ஸர்வதாகீர்த்தநீயமான ஸ்வரூபகுணங்களை யுடையவனேயென்றுமோரர்த்தம் கண்டுகொள்வது. "கீர்த்தி" என்றதுக்கு-குணவத்தாப்ரதையென்றுமுந்தினவர்த்தம்.

" எல்லாவுலகுமுடையவொருமூர்த்தி " என்றதுக்கு மூன்றுபொருள். அதாவது; மூர்த்தியென்று - விக்ரஹமாய், அத்தாலே - சௌந்தர்யத்தைவிவக்ஷித்து, விக்ரஹசௌந்தர்யத்தாலே யெல்லாவுலகங்களையும் சேஷமாகக்கொண்டானென்னுதல்; அன்றிக்கே, மூர்த்தியென்று-விக்ரஹமாய், விக்ரஹத்தைக்கண்டவாறே "இவனே யெல்லாலோகங்களுக்கும்சேஷி" என்றுதோற்றும்படியிருக்குமென்னுதல்; இந்தவர்த்தத்வயத்தையுமடைவேயருளிச்செய்கிறார் ( வடிவழகைக்காட்டியித்யாதி) த்விதீயார்த்தத்துக்கு, " கண்டவாற்றால் தனதே யுலகெனநின்றான், " " ரூபஶ்ரியாபரயா " ( ரூபஶ்ரியாபரமயா ) இத்யாத்யநுசந்தேயம். * மூர்த்திசப்தம் - விக்ரஹவாசியோ என்கிறசங்கையையும் பரிஹரித்துக்கொண்டு மூன்றாமர்த்தம் (மூர்த்திசப்தந்தானித்யாதி) ஐஶ்வர்யத்துக்கு வாசகமானபோதைக்கு சப்தநிர்வாஹங்காட்டுகிறார் (அப்போதித்யாதி) அப்போது-ஐஶ்வர்யவாசகமானபோதென்றபடி. உம்மைத்தவிரவிட்டால் நம்பெருமையழிந்ததாக வேணுமோவென்ன (நீர்நோவுபடுகிறவித்யாதி) அவனுக்கென்றது-அவ்வுனக்கென்றபடி.

பூர்வார்த்தத்தையெல்லாம் கடாக்ஷித்துபாவம் (நீஸ்வரூபரூபேத்யாதி) படுகாடு-வெட்டிவிழுந்தகாடு.

"உன்னை" என்றதுக்கு - சௌலப்யபரமாகபாவம் ( ஸ்ரீவைகுண்டமித்யாதி ) கலவிருக்கை - நெஞ்சுபொருந்தியிருக்கை. அபிமதமான வாசஸ்த்தாநமென்றபடி. "நான்" என்றத்தையும்கடாக்ஷித்து, " உன்னை " என்றதுக்கு - ப்ராப்யபரமாகபாவார்த்தரம் ( காண்கிறேன் நானித்யாதி ) நானன்றோ - * ஆராதகாதலையுடைய நானன்றோவென்றபடி. விவரணம் (கீழ்ச்சொன்னவித்யாதி) கீழ்ச்சொன்னவென்றது-" ஒருமூர்த்தி " என்றத்தையாதல், " ஆராவமுதே " என்றத்தையாதல். அலமருகிறதென்னென்ன (கண்டபோதித்யாதி) ஆகையாலே (காணப்பெறாமையாலே

வந்தறுடிப்பு) என்றபடி. "ஆகாசத்தைநோக்கி" என்றதுக்கு மூன்றுதாத்பர்யம். முந்தினது (ஆகாசத்தையித்யாதி) ஆகாசத்தைநோக்குகைக்கு ஹேதுவேதென்ன (திருவடியுடையவித்யாதி) கலக்கத்தாலேயென்றபடி. இரண்டாவது (என்னுடை நிராலம்பநதையித்யாதி) ஆகாசத்தை - நிராலம்பநதையை இத்யர்த்த:. அதாவது-அநந்யகதித்வமென்று கருத்து,த்ருதீயதாத்பர்யம் (அன்றிக்கே ககநேத்யாதி) அதாவது-ஆற்றாமையாலே புரோவர்த்திவிஷயம் தெரியாமையாலேஆகாசத்தைப்பார்த்தென்றபடி. இலக்கில்-லக்ஷ்யத்தில். ஸ்நேஹிகள்-உபாசகர், க்ருபணர்-ப்ரபந்நர்.

க்ரமேணாந்வய:. "[illegible] ( ததைவோஷ்ணம் விநிச்வஸ்ய வ்ருத்தோதசரதோந்ருப: । விலலாபார்த்தவத்து:காத்ககநாஸக்தலோசந: ) இத்யயோத்யாகாண்டே கைகேயீவாக்யச்ரவணே து:கிதோதசரத:. "[illegible]" (ஸாதிர்யகூர்தவம்) இத்யாதி, * ஆடியாடியிலே லிகிதம்.......................................................*

# ஐந்தாம்பாட்டு.

அழுவன்றொழுவனாடிக்காண்பன்பாடியலற்றுவன்
தழுவல்வினையாற்பக்கநோக்கிநாணிக்கவிழ்ந்திருப்பன்
செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய் செந்தாமரைக்கண்ணா
தொழுவனேனையுனதாள்சேரும்வகையேசூழ்கண்டாய்.

## ஆறாயிரப்படி.

(அழுவன்) அழுதுகாண்பன், தொழுதுகாண்பன், ஆடிக்காண்பன், பாடிக்காண்பன், அலற்றிக்காண்பன், பின்னையும் நீவரக்காணேன். காணுதொழிந்தவாறே, "இந்தலோகத்தாருன்பக்கலிலே குணஹாநியைச்சொல்லாநிற்கிறுரே!" என்றுலஜ்ஜித்துத் தலையெடுக்கமாட்டாதே, "என்னுடையபாபம்" என்றிருப்பன். செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய், செந்தாமரைக்கண்ணா, உன்திருவடிகளைச்சேர்வதொரு விரகுபார்த்தருளாயென்கிறுர்...............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்கண்ணழகாலே யீடுபட்டு நாநாவிதஜயநீயவ்ருத்திகளைப் பண்ணுகிற நான் உன்திருவடிகளைச்சேரும்படி பார்த்தருளவேணுமென்கிறுர்.

அழுவன்-கலக்கத்தாலேயழுவது. தொழுவன்-தெளிவாலேதொழுவது. ப்ரமத்தாலே, ஆடி-ஆடி. காண்பன்-பார்ப்பது. பாடி - குணபாரவச்யத்தாலேபாடுவது. அலற்றுவன்-ஆர்த்தியாலேப்ரலாபித்தலற்றுவது. "இவ்வவஸ்த்தையில் வாராதொழியக்கூடாது" என்றுநினைத்து, தழு-என்னைத்தழுவி, விடாதேநிற்கிற. வல்வினையால்-காதலாகிறப்ரபலபாபத்தாலே. பக்கம்-அவன்வரசம்பாவனையுடையபக்கங்களை, நோக்கி-பார்த்து. அங்குக்காணுமையாலே, நாணி - "ஸ்வரூபமும்பெற்றி

லோம், அபிமதமும்பெற்றிலோம்" என்றுலஜ்ஜித்து. கவிழ்ந்திருப்பன்-கவிழ்ந்திருப்பன். செழு-சம்ருத்தமாய். ஒண்-தர்ஸநீயமான. பழனம் - நீர்நிலங்களையுடைய. குடந்தை-திருக்குடந்தையிலே. கிடந்தாய் - ஆஶ்ரிதார்த்தமாகக்கண்வளர்ந்தருளுமவனாய். அவர்களுக்கு ரக்ஷகமும்போக்யமுமாய், செ - சிவந்த. தாமரை-தாமரைபோலேயிருக்கிற. கண்ணா-திருக்கண்களையுடையவனே. தொழுவனேனை - அநந்யகதித்வத்தாலே அத்யர்தக்ருபணனானவென்னை, உன-ப்ராப்தனானஉன்னுடைய. தாள்-போக்யமானதிருவடிகளை. சேரும்வகை-சேரும்படி. நீயே, சூழ்கண்டாய்-ஒருநல்விரகுபார்க்கவேணும்.

தொழுவன்-தண்ணியன். சூழ்ச்சி-விரகு..........................................*

## ௫ - ஐந்தாம்பாட்டு.

"உன்னைக்காணவேணும்" என்னும் சாபலத்தாலே தயநீயப்ரவ்ருத்திகள் பலவும்பண்ணினவிடத்திலும் காணப்பெற்றிலேன், உன்திருவடிகளை நான் பெறும்படி பார்த்தருளவேணுமென்கிறார்.

(அழுவன்தொழுவன்) பாலர்செய்வதையும் செய்யாநின்றேன், வேதாந்தஜ்ஞாநமுடையார் செய்வதையும் செய்யாநின்றேன். "மற்றவர்தனருள் நினைந்தேயழுங்குழவி" என்னக்கடவதிறே.

(ஆடிக்காண்பன்) கலியர் "இத்தனைசோறிடுகிறோம், ஆடவல்லையோ" என்றாலாடுமாபோலே, ஆடியும்பார்ப்பன். "என்பட்டால்பெறலாம்" என்றறியாரே.

(பாடியலற்றுவன்) ப்ரேமம்வழிந்தசொல்-பாட்டாய், அதுதானுமடைவுகெடக்கூப்பிடுகை - அலற்றுகை. (தழுவல்வினையால்) இப்படிபட்டாலும் காணவொண்ணாதிறே உடன்வந்தியானவல்வினை. என்னைத்தழுவிவிடாதேநிற்கிற காதலாகிற ப்ரபலபாபத்தாலே. பக்தியை - பாபமென்கிறது, அநிஷ்டாவஹம்-பாபமாகையாலே.

( பக்கம்நோக்கி ) "ஆர்த்தியேசெப்பேடாகவரும்" என்றிருக்கையாலே, வரசம்பாவனையுள்ள திக்கைப்பார்த்து. (நாணிக்கவிழ்ந்திருப்பன்) அங்குவந்துதோற்றக்காணாமையாலே, "ஆசைப்பட்டழகிதாகவுண்டோம்" என்று லஜ்ஜித்துக்கவிழ்தலையிட்டிருப்பன். அன்றிக்கே, (பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன்) "அருகுநின்றாரிவனையென்சொல்லுவர்களோ" என்றதுக்கு லஜ்ஜித்துக்கவிழ்தலையிட்டிருப்பனென்கிறாராகவுமாம். "ஆசைப்பட்டார்க்கழகிதாகவுதவினான்" என்றுநாட்டார்சொல்லுமவத்யத்துக்கு லஜ்ஜித்திருப்பன்.

(செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய்) பெருத்தழகிதான நீர்நிலங்களையுடைய திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறவனே. (செந்தாமரைக்கண்ணா) முகாந்தரத்தாலே யென்ஜீவநமாய்க்கிடக்கிறாயல்லை. கையிலேநிதியுண்டாயிருக்க ஆர்த்தர்க்கிடாதாரைப்போலே. எ

ன்ஜீவநமொருமுகம் செய்துகிடக்கிறதன்றே. (தொழுவனேனை) க்ரு பணனென்னுதல், ஹேயனென்னுதல். புறம்புபுகலற்று, உன்னாலல்லது, செல்லாதபடி க்ருபணனானவென்னை; பாஹ்யவிஷயங்களிலே ப்ரவண னாய் ஹேயனானவென்னையென்னுதல். (உனதாளித்யாதி) உன்றிருவடிக ளைக்கிட்டுமதொருவிரகு, நானறியாதபடி நீயேபார்த்தருளவேணும். த ம்மாற்றாமை பேற்றுக்குடலன்றிக்கே, அது ப்ரக்ருதியாய், "அவனாலே பேறு" என்றிருக்கிறபடி. (சூழ்கண்டாய்) அநந்யப்ரயோஜநர்திறத்தில் கார்யசிந்தையு மவனதாயிருக்கிறபடி. ............................ ..............*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (அழுவனித்யாதி) "அழுவன் தொழுவன்" இத்யாதியையு ம், "உனதாள்சேரும்வகையே" இத்யாதியையும்கடாக்ஷித்தவதாரிகை (உன்னைக் காணவித்யாதி)

கீழ், காணப்பெறாமையாலே - "அழுவன தொழுவன்" என்றார்; இங்கு, காணவேணுமென்று - "அழுவன் தொழுவன்" என்கிறார், ஆகையாலே புனருக்தியி ல்லை. "அஞ்ஜலிꣳபரமாமுத்ரா" (அஞ்ஜலிꣳபரமாமுத்ரா) இத்யாதியைக்கடாக்ஷி த்து (வேதாந்தஜ்ஞாநமுடையாரித்யாதி) பாலராமவர்களோவென்ன (மற்றவள்த னித்யாதி) அந்தத்தாயினுடைய வருளைநினைந்தே யழுகிறகுழந்தையென்றபடி. பெ ருமாள்திருமொழி அஞ்சாந்திருமொழி முதற்பாட்டு, "தருதுயரம்" இத்யாதி.

(கலியர்-ஆடுமாப்போலே) என்றந்வயம். கலியர்-பசியர். ஆடுவனென்னா தே, "காண்பன்" என்றதுக்குபாவம (என்பட்டாலித்யாதி) (அறியாரோ) ஆகை யாலே-பார்ப்பனென்கிறானென்று கூட்டுவது.

"தழுவல்வினையால், காணப்பெறாதே" என்றத்யாஹார்த்தவ்யம். "தழுவல் வினையால் - அழுவன்தொழுவன்" என்றுதொடங்கி யந்வயமென்று திருவுள்ளம் பற்றியருளிச்செய்கிறார் (இப்படிபட்டாலுமித்யாதி) வல்வினையென்று - ஆழ்வார பிப்ராயத்தாலே, பாபமென்கிறது; தத்த்வஸ்த்திதி, பக்தியென்றபடி. உடன்வந்தி யென்றது-போனபோனவிடமெல்லாமொக்க வருகிறதென்றபடி.

அழகிதாகவுண்டோம்-நன்று! கபுஜித்தோமென்றுவெறுப்பு.

பழனம்-நீர்நிலங்கள். என்னுடைய வார்த்திதீர்க்கைக்கு பரிகரமுன்கையி லே யுண்டாயிருக்க, நானார்த்தனாயிருக்க, என்னைக்கடாக்ஷியாதே யிருக்கிறாயென் னுமத்தை சநிதர்ஶநமாகக்காட்டுகிறார் (கையிலேயித்யாதி) (முகாந்தரத்தாலே) இ த்யாதி வாக்யத்தோடேசம்பந்தம் (என்ஜீவநம்) இத்யாதிவாக்யத்துக்கு.

இரண்டாமர்த்தத்துக்கு, "தொழுவன்" என்றது-தொழும்பனென்றபடியா ய், (ஹேயன்) என்றபடி. உக்தார்த்தத்வயவிவரணம் (புறம்பித்யாதி) * தொழு கை-கார்ப்பண்யகார்யமென்றுவிவக்ஷித்து (உன்னாலல்லது செல்லாதபடி க்ருபண னானவென்னை) என்கிறார். சேரும்வகையைப்பாரொன்னாதே, "சூழ்கண்டாய்" என் றதுக்குபாவம் (நானறியாதபடியித்யாதி) சூழ்ச்சியாவது-புறம்பொருவரறியாதப டிபார்க்கும்விரகு. "அழுவன்தொழுவன்" இத்யாதியானவாற்றாமை யுண்டாயிருக் க, "சூழ்கண்டாய்" என்று - நீயேவிரகுபார்த்தருளவேணுமென்கிற தென்னென்

ன (தம்மாற்றமையித்யாதி) பலிதம் (அநந்யப்ரயோஜநரித்யாதி) சேரும்வகையே சூழ்கண்டாய்-சேரும்படியே விரகுபார்க்கவேணுமென்று சப்தார்த்தம்.
க்ரமேணார்வயஃ.........................................................................*

# ஆறும்பாட்டு.

சூழ்கண்டாயென்றொல்லைவினையையறுத்துன்னடிசேரு
மூழ்கண்டிருந்தேதூராக்குழிதூர்த்தெனைநாளகன்றிருப்பன்
வாழ்தொல்புகழார்குடந்தைக்கிடந்தாய்வானோர்கோமானே
யாழினிசையேயமுதேயறிவின்பயனேயரியேறே.

## ஆறுயிரப்படி.

(சூழ்கண்டாய்) என்னுடையப்ரதிபந்தகத்தைப்போக்கி யுன்றிருவடிகளைச்சேர்வதோருபாயத்தைச் செய்தருளவேணும்; செய்தருளுமிடத்தில், நீசெய்தருளுகிற வுபாயத்தையறிந்து அதிலகப்படாதேதப்பிலும், நானறியாததொருபடி செய்தருளவேணுமென்று; அபேக்ஷித்தபடியே செய்தருளக்காணாமையாலே, ஆஶ்ரித வாத்ஸல்ய ஸௌஶீல்ய ஸௌலப்ய போக்யதாத்யபரிமித கல்யாணகுணகணனாயிருந்த வுன்றிருவடிகளோடுள்ள ஸம்ஶ்லேஷமாகிற மஹாரசத்தையறிந்துவைத்தே, துஷ்பூரமான விந்த்ரியங்களாலே இந்தப்ராக்ருத விஷயங்களையேபுஜித்து இன்னமெத்தனைகால முன்றிருவடிகளை யகன்றிருக்கக்கடவேனென்கிறார்.........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யஸூரிசேவ்யனாய் நிரதிசயபோக்யனானநீ யென்விரோதியைப்போக்கி யுன்றிருவடிகளிலே சேர்த்துக்கொண்டருளவேணுமென்கிறார்.

வாழ்-பகவதநுபவமாகிற வாழ்ச்சியாலே. தொல் - ஸ்வாபாவிகமான. புகழார்-புகழையுடையவர்களதான. குடந்தை-திருக்குடந்தையிலே. கிடந்தாய்-அவர்களுக்கநுபாவ்யனாய்க் கண்வளர்ந்தருளினவனாய். அப்படியே, வானோர்-நித்யஸூரிகளுக்கும். கோமானே-போக்யனாய்க்கொண்டு நிர்வாஹகனாய். யாழின் - மிடறுபோலேபோதுசெய்யாதயாழின். இசையே - இசைபோலேஶ்ரவணபோக்யனாய். அமுதே-நித்யபோக்யமானவம்ருதம்போலே ஸ்துத்யாதிமுகத்தாலே நாக்குக்கினியனாய். அறிவின்பயனே-ஜ்ஞாநபலமாகையாலேமநஸ்ஸுக்குபோக்யனாய். இப்படிபாஹ்யாப்யந்தரரூபஸர்வேந்த்ரியங்களாலு மநுபவியாநின்றாலும், அரியேறே - ஸிம்ஹஶ்ரேஷ்டம்போலேவளாய்க்கொள்ளவொண்ணாதபடி மேனாணித்திருக்குமவனே. நான்,உன்-உன். அடி-திருவடிகளை. சேரும்-சேர்ந்தநுபவிக்குமிருக்கும். ஊழ்-பழமையை; கண்டிருந்தே-கண்டிருந்தே. தூரா-துஷ்பூரமான. குழி-தூராசையாகிற குழியை. தூர்த்து-தூர்விஷயங்களாலேதூர்த்து. எனை-எத்தனை. நாள்-நாள். அகன்

று-அகன்று. இருப்பன்-இருக்கக்கடவேன். இதுக்கடியான, என்-என்னுடைய. தொல்லைவினையை - அநாதிபாபத்தை. அறுத்து - அறுத்து. உன்னடிசேரும் - ஸ்வரூபப்ராப்தமான வுன்றிருவடிகளைச்சேரும்படி. சூழ்கண்டாய்-சூழ்ந்தருளவேணும்....*

## ௪-டு - ஆ று ம் பா ட் டு.

உன்போக்யதையிலே யந்வயித்த எனக்கொருவிச்சேதம் வாராதபடி த்வத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்களையும்போக்கி, உன்னைப்பெறுவதொருவிரகுபார்த்தருளவேணுமென்கிறார்.

(சூழ்கண்டாயென்றொல்லைவினையையறுத்து) என்னுடைய ப்ராக்தநமான கர்மங்களை சவாஸநமாகப்போக்கி, உன்றிருவடிகளை நான்வந்துகிட்டுவதொருவழி நீயேபார்த்தருளவேணும்.

க்ரமத்திலேசெய்கிறோமென்ன; அதுக்சவதி யென்னென்கிறார். ( உன்னடிசேருமூழ்கண்டிருந்தே ) நாட்டாரோபாதியுன்னையறியாதொழியப்பெற்றிலேன். உன்திருவடிகளைக்கிட்டும் முறையையறிந்துகொண்டிருந்தே. (தூராக்குழிதூர்த்து) துஷ்பூரமான இந்த்ரியங்களுக்கிரையிட்டு. (எனைநாளகன்றிருப்பன்) இன்னமுமெத்தனைநாளிங்ஙனேயிருக்கக்கடவேன். ஸ்ரீபரதாழ்வான்போல்வார்க்கோ வொருநாளிட்டுக்கொடுக்கலாவது.

(வாழ்தொல்புகழார்குடந்தைக்கிடந்தாய்) "பிரிந்திருக்கும் நாளெவ்வளவு" என்று கேட்கவேண்டாதவர்கள். அவன் கண்வட்டத்தில் வர்த்தித்து வாழப்பெறுகையால் வந்த ஸ்லாக்யமான புகழையுடையவர்கள். பழையபுகழென்றுமாம். விஷயஸந்நிதி தமக்குமவர்களுக்குமொத்திருக்க, அவர்கள் வாழ்கிறபடியெங்ஙனேயென்னில்; தம்மைப்போலே கூப்பிடாமையாலே நினைத்த பரிமாற்றம் பெற்றார்களென்றிருக்கிறார். (வானோர்கோமானே) அவர்கள் சிலர் நாள்நடையாடாததேசத்திலே வர்த்திக்கிறவர்களாறும். (யாழினிசையே) மிடற்றோசைபோலே கர்மாநுகுணமாகப் போது செய்கையன்றிக்கேயிருக்கை. "யாழ்பயில் நூல்நரம்பின் முதிர்சுவையே" என்னக்கடவதிறே. (அமுதே) செவிக்கதுவாய், நாக்குக்கொன்று தேடவேண்டாதபடி போக்யமாயிருக்கை. ( அறிவின்பயனே ) அறிவின் ப்ரயோஜநமான சுகம். மநஸ்ஸுக்கு போக்யமாயிருக்கிறபடி. ( அரியேறே ) ஸர்வவஸ்து விஜாதீயதையால் வந்த மேனாணிப்பை யுடையவனே. கன்றுக்கு முகக்கொள்ள வொண்ணாத போக்யதையுடையவனென்றுமாம். ( சிம்ஹப்போத்தம்போலேமுகக்கொள்ளவொண்ணாதபடி மேனாணித்திருக்குமவனே. ) இங்குள்ளார்க்கு மங்குள்ளார்க்கு முன்னை யநுபவிக்கக்கொடுத்து நிரதிசயபோக்யனாயிருக்க, நானிந்த்ரியங்களுக்கிரையிட்டு எத்தனைகாலமகன்றிருக்கக்கடவேன்*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( சூழ்கண்டாயித்யாதி ) "சூழ்கண்டாய்" என்று தொடங்கி, "உன்னடிசேரும்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை ( உன்போக்யதையிலேயித்யாதி )

அறுவாத மன்றிக்கே, "உன்னடிசேரும்படி - சூழ்கண்டாய்" என்றும், "உன்னடிசேரும் - ஊழ்கண்டிருந்தே" என்றும், "உன்னடிசேரும்" என்றத்தை-கீழும்மேலும் கூட்டுவது.

"ஊழ்" என்றது - சேஷசேஷிபாவமுறையென்றபடி. "இருந்தே" என்கிறவவதாரணத்துக்கர்த்தம் ( நாட்டாரித்யாதி ) "எனைநாளகன்றிருப்பன்" என்கிறதென், நமக்கு "நாளிட்டுக்கொடுக்கவேணும்" என்றுநிர்ப்பந்தமுண்டோவென்ன ( ஸ்ரீபரதாழ்வானித்யாதி )

"வாழ்" என்றதுக்குபாவம் (பிரிந்தித்யாதி) * வாழ்ச்சியைஹேதுவாக்கி, "தொல்புகழார்" என்றதுக்கர்த்தம் ( அவன்கண்வட்டத்திலித்யாதி )

தம்மைப்போலே "எனைநாளகன்றிருப்பன்" என்று நாளிட்டுக்கொடுக்க வேண்டாதே, நிரந்தரமநுபவித்துக்கொண் டிருப்பர்கள் திருக்குடந்தையிலுள்ளவர்களென்கிறார் - கீழ்; அந்தகாலந்தானுமின்றிக்கே நிரந்தர பகவதநுபவம்பண்ணுவர்கள் நித்யசூரிகளென்கிறார் - மேல் ( அவர்கள்ரிலவரித்யாதி )

கண்டத்வநியைச்சொல்லாதே, வீணாஸ்வரத்தைச் சொன்னதுக்குபாவம் ( கர்மாநுகுணமாகவித்யாதி ) போதுசெய்கையாவது- மொட்டிக்கையாய்; ஶ்லேஷ்மாதிகளாலே அபிபூதமாம் நசையுண்டிறே கண்டத்வநிக்கு, அதின்றிக்கேயிருக்கையென்றபடி. அவள் யாழினிசையோவென்ன ( யாழ்பயிலித்யாதி ) செவிக்கதுவாயென்றது - செவிக்கு காநம் போக்யமாயென்றபடி. ஒருவனே ஸர்வேந்த்ரியவிஷயமாகச் சொல்லுகைபாலே ( ஸர்வவஸ்துவிசஜாதியதையால்வந்த ) என்கிறது. த்விதீயார்த்தத்துக்கு, அப்ரத்ருஷ்யமான அரியேறுபோலே பரிச்சேதித்தநுபவிக்கவொண்ணாத போக்யதையை யுடையவனென்றபடி. முகக்கொள்ள-பரிச்சேதித்து க்ரஹிக்க. அரியேறு-சிம்ஹரிஷபோத்ருஷ்டம்போலே யிருக்குமவனென்னுதல், அரிபோலேயும் ஏறுபோலேயு மிருக்குமவனென்னுதல்.

"வாழ்தொல்புகழார்" என்று தொடங்கி, "எனைநாளகன்றிருப்பன்" என்னுமளவுக்கும்பாவம் ( இங்குள்ளார்க்குமித்யாதி )

வாழ்தொல்புகழா ரித்யாரப்ய, அரியேறே, என் தொல்லைவினை யறுத்து உன்னடிசேரும்படி - சூழ்கண்டாய்; உன்னடிசேரு மூழ்கண்டிருந்தே தூராக்குழி தூர்த் தெனைநாளகன்றிருப்ப னித்யந்வயঃ.......................................*

## ஏழாம்பாட்டு.

அரியேறேயென்னம்பொற்சுடரேசெங்கட்கருமுகிலே
யெரியேபவளக்குன்றேநாற்றோளெந்தாயுனதருளே
பிரியாவடிமையென்னைக்கொண்டாய்குடந்தைத்திருமாலே
தரியேனினியுன்சரணந்தந்தென்சன்மங்களையாயே.

## ஆறாயிரப்படி.

( அரியேறே ) உன்னுடைய க்ருபையாலே உன்னழகைக்காட்டி யென்னை யாத்மாந்த தாஸ்யைக ரதியாகப்பண்ணியருளினாய், இனி யுன் திருவடிகளைப் பிரிந்தொரு க்ஷணமாத்ரமும் தரிக்கமாட்டேன்; ஆனபின்பு முந்தற வுன்திருவடிகளைத் தந்து, பின்னை யென்னுடைய ப்ரதிபந்தகத்தைப்போக்கி யருளவேணுமென்கிறார்.............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்னுடைய விக்ரஹவைலக்ஷண்யத்தைக்காட்டி யென்னை யடிமைகொண்டபின்பு, உன்திருவடிகளைத் தந்து விரோதியைப் போக்கவேணுமென்கிறார்.

அரியேறே - நிரங்குச ஸ்வாதந்த்ர்யத்தாலே மேனாணித் திருப்பானாய். கேவல ஸ்வாதந்த்ர்யமேயன்றியே, அம் - ஸ்ப்ருஹணீயமான. பொன் - பொன்போலேயிருக்கிற. சுடர் - வடிவிலொளியை. என் - எனக்கநுபவிப்பிப்பானாய். ஆச்ரித விஷயத்தில் வாத்ஸல்யாம்ருதவர்ஷியான, செ - சிவந்த. கண் - திருக்கண்களையுடைத்தாய். கருமுகிலே - முன்பு சொன்ன பொன்னொளிக் காச்ரயமான நீலதோயதநிபவிக்ரஹத்தையுடையனாய். எரியே - ஆச்ரிதவிரோதிவிஷயத்தில் "ஜுஹி த்வாவமொாவஜ்ஞ" ( அபிதஃபாவகோபமம் ) என்னும்படி அக்நிபோலே சிவந்த. பவளக்குன்றே - பவளக்குன்றென்னலாம்படி உத்துங்கமாய் ஸ்திரமான வடிவையுடையனாய். நாற்றோள் - அந்த வடிவோடு சேர்ந்த நாலு தோள்களையுங் காட்டி. எந்தாய் - என்னை யெழுதிக்கொண்ட ஸ்வாமியாய். உனது - உன்னுடைய. அருள் - க்ருபையை. பிரியா - ஒருகாலும்பிரியாதபடி. நிரந்தரமாக, அடிமை - வாசிகாதி கைங்கர்யங்களை. என்னை, கொண்டாய் - கொண்டவனாய். அடிமைக்கு ப்ரதிசம்பந்தியாக, குடந்தை - திருக்குடந்தையிலே. திருமாலே - லக்ஷ்மீசஹிதனாய்க் கொண்டு சந்நிஹிதனானவனே. இனி - இப்படி யுபகாரகனான நீ பிராட்டியோடுங்கூட சந்நிஹிதனானபின்பு. தரியேன் - ஆறியிருக்கமாட்டேன். எனக்கு ப்ராப்யமான, உன் - உன். சரணம் - திருவடிகளை. தந்து - தந்து. என் - என்னுடைய. சன்மம் - சரீரசம்பந்தத்தை. களையாய் - ஸவாசநமாகப் போக்கவேணும்.

எரியேயென்று - ஸம்புத்தியாகவுமாம்..............................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

உன் க்ருபையாலே யுன் வைலக்ஷண்யத்தைக்காட்டி அடிமையாலல்லது செல்லாதபடி யாக்கினபின்பு, உன் திருவடிகளைத்தந்துபின்னை சம்சாரத்தை யறுக்கவேணுமென்கிறார்.

( அரியேறே ) ஸ்வவ்யதிரிக்தங்களுக்கெல்லாம் தானே கடவனாகையால் வந்த மேனாணிப்பு. ( என்னம்பொற்சுடரே ) அம்மேன்மைக்குச் சிறிதுள்ளாகப் பார்த்தவாறே ப்ரகாசித்துத்தோற்றுகிற தேஜஸ்ஸு. விலக்ஷணமான பொன்போலே ஸ்ப்ருஹணீயமான வொளியை யுடையவனே. அவ்வடிவில் வாசியை யெனக்கறிவித்தவனே. ( செங்கட்கருமுகிலே ) அதுக்குமடியான திருக்கண்களும் திருமேனியு மிருக்கிறபடி.

(எரியேபவளக்குன்றே) எரி - கேட்டைநக்ஷத்ரம். நக்ஷத்ரபதத்தளவாக வோங்கின பவளக்குன்றே. சமுதாயமிருக்கிறபடி. எரியேய்ந்த பவளக்குன்றுபோலேயிருக்கை. அக்நிகல்பமான தேஜஸ்ஸையுடைய பவளக் குன்றே. இத்தால் நினைக்கிறது - ஔஜ்ஜ்வல்யத்தையும், ஸ்ப்ருஹணீயதையையும். உகவாதார்க் கநபிபவநீயனாய், அநுகூலர்க்கௌஜ்ஜ்வல்யத்தாலே ஸ்ப்ருஹாவிஷயமாயிருக்கை. (குன்றே) அபரிச்சேத்யனானவனே. (நாற்றோளெந்தாய்) கல்பகதரு பணைத்தாற்போலே யிருக்கிற திருத்தோள்களைக்காட்டி யென்னை யநந்யார்ஹமாக வெழுதிக் கொண்டவனே. திருவடிதோற்ற துறையிலேயாயிற் றிவரும்தோற்றது. (உனதருளித்யாதி) உன்னுடைய கேவல க்ருபையாலே யென்னை யாத்மாந்ததாஸ்யத்தைக்கொண்டாய். (அருளே) அருளாலே. (குடந்தைத்திருமாலே) அடிமைகொள்ளுகைக்காகப் பெரியபிராட்டியாரோடேகூடத் திருக்குடந்தையிலே வந்து கண்வளர்ந்தருளினவனே. "ஒருதேசவிசேஷத்தே" என்னுதபடி தேசத்தில் குறையில்லை, ஸ்ரீயஃபதியாகையாலே ப்ராப்யத்திற்குறையில்லை. "ஹவாஂ [illegible]" (பவாம் ஸ்துஸஹவைதேஹ்யா) என்ற இளையபெருமாளைப்போலே பற்றுகிறாரிவரும். (தரியேனினி) அச்சேர்த்தி கண்ட பின்பு என்னால் பிரிந்து தரித்திருக்கப்போகாது. மாதாபிதாக்கள் சந்நிதியுமாய் அவர்கள் ஸ்ரீமான்களுமாய் உதாரருமாயிருக்க, ப்ரஜை பசித்துத் தரித்துக் கிடக்கவற்றோ.

தரியாமை யெவ்வளவுபோருமென்ன (உன்சரணந்தந்தென்சன்மங்களையாயே) முலைகொடுத்து சிகித்ஸிப்பாரைப்போலே, முற்படத் திருவடிகளைத் தந்து, பின்னை ஜந்மசம்பந்தத்தை யறுக்கவேணும். * புண்ணாராக்கையின் புணர்வினையிறே யறுக்கப்புகுகிறது; அதுக்கடியிலே தரிப்பித்துக்கொண்டு, பின்னை யறுக்கவேணுமென்கிறார்................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (அரியேறேயித்யாதி) "அரியேறே" இத்யாதியையும், "உனதருளே" இத்யாதி மேலெல்லாவற்றையும் கடாக்ஷித்தவதாரிகை (உன்க்ருபையாலேயித்யாதி) "அரியேறே" இத்யாதியைப் பற்ற (உன்னைவலக்ஷண்யத்தையென்றது)

"அரியேறே" என்றதுக்கு, கீழே - சர்வவஸ்து விசஜாதீயதையால் வந்த மேனாணிப்பென்றருளிச்செய்து, இங்கே - சர்வநிர்வாஹகனாகையால் வந்த மேனாணிப்பென்கையாலே புநருக்தியில்லை. "என்" என்றதுக்கர்த்தம் (அவ்வடிவிலித்யாதி) அதுக்கு மடியானவென்றது - "அரியேறே" என்றமேன்மைக்குமடியானவென்னுதல், "அம்பொற்சுடரே" என்ற தேஜஸ்ஸுக்கு மடியானவென்னுதல். தேஜஸ்ஸுக்கடியாகையாவது - ஆஶ்ரயமாயிருக்கை. சிவந்தகண்ணையுடையனாய்க் கறுத்தமுகில்போலே யிருக்கிறவனே யென்று சப்தார்த்தம். எரிபோலவும்பவளக் குன்றுபோலவு மிருக்கிறவனே யென்றபடி. அதாவது; எரியென்று - கேட்டைநக்ஷத்ரமாய், எரியே - கேட்டைநக்ஷத்ரம்போலே யிருக்கிறவனே யென்றபடி. கே

ட்டையை த்ருஷ்டாந்தமாகச் சொன்னத்தால் பலிதம் (சமுதாயமிருக்கிறபடியென்று) சமுதாயமென்றது - சமுதாயசோபையென்றபடி. எரிபோலவும் பவளக்குன்றுபோலவு மிருக்கிற சமுதாய சோபையை யுடையவனென்று - கிழருளிச் செய்து, எரிபோலேயிருக்கிற பவளக்குன்றே யென்றார்த்தாந்தரம் (எரியேய்ந்தவித்யாதி) இத்தை விவரிக்கிறார் (அக்நிகல்பமான வித்யாதி) "எரி" என்கையாலே - ஔஜ்ஜ்வல்யம்; "பவளக்குன்று" என்கையாலே - ஸ்ப்ருஹணீயதை. "ஆயதாம்ஸு" (ஆயதாம்ச) இத்யாதி ஶ்லோகத்தைக் கடாக்ஷித்து (திருவடிதோற்றவித்யாதி)

"அருளே" என்ற வவதாரணத்துக்கர்த்தம் (கேவலக்ருபையாலே யென்று) அருளேயென்றது - அருளாலே யென்றபடி.

தரித்திருக்கப்போகாமைக்கு ஹேதுவேதென்ன (மாதாபிதாக்களித்யாதி)

எவ்வளவுபோருமென்ன வென்றது - ப்ரக்ருதிசம்பந்தத்தை யறுத்துத்திருவடிகளைத் தரப்பற்றுமோவென்ன வென்றபடி. களையாயே - களையவேணும். இது புண்ணேவென்ன (புண்ணாக்கையித்யாதி) புண்ணால் நிறைந்த சரீரத்தின் சம்பந்தத்தையிறே யென்றபடி.

அரியேறே இத்யாரப்ய, க்ரமேணார்வய:.....................................*

## எட்டாம்பாட்டு.

களைவாய்துன்பங்களையாதொழிவாய்களைகண்மற்றிலேன்
வளைவாய்நேமிப்படையாய்குடந்தைக்கிடந்தமாமாயா
தளராவுடலமெனதாவிசரிந்துபோம்போ
திளையாதுனதாளொருங்கப்பிடித்துப்போதவிசைநீயே.

### ஆறாயிரப்படி.

(களைவாய்துன்பம்) களைவாய்துன்பம், களையாதொழிவாய், திருவுள்ளமானபடி செய்தருளாய்; எனக்கு நீயல்லது மற்றொரு கதியில்லை. அடியேனுடைய துஃகங்களைப் போக்குகைக்காக வன்றோ திருவாழியை யேந்திக்கொண்டிருந் தருளுகிறதும், திருக்குடந்தையிலே புகுந்தருளிற்றும். ஆனபின்பு; உடலந்தளர்ந்து என்னுயிர் சரிந்துபோகா நின்றது, இவ்வாத்மா முடிவதற்குமுன்னே ஈண்ட வுன்திருவடிகளிலே வாங்கி யருளவேணுமென்கிறார்..................................................*

### பன்னீராயிரப்படி.

**அநந்தரம், விபரீதமே பலிக்கிலும் வேறொருரக்ஷகரை யுடையேனல்லேன், இப்படி யநந்யகதியான நான் உன்திருவடிகளை விடாதபடி யநுமதிபண்ணவேணுமென்கிறார்.**

**துன்பம் - உன்னை யநுபவிக்கப்பெறாத துஃகத்தை. களைவாய் - போக்குவாய். களையாதொழிவாய் - போக்காதொழிவாய்செய். களைகண் - துஃகநிவர்த்தக வ**

ஸ்தானை. மற்று - வேறு. இலேன்-உடையேனல்லேன். துஃகநிவ்ருத்திக்குப் பரிகரமாய், வளை - சூழ்ந்த. வாய் - வாயையுடைத்தான. நேமி - திருவாழியை. படையாய் - ஆயுதமாகவுடையையாய். ஆஶ்ரிதார்த்தமாக, குடந்தை - திருக்குடந்தையிலே. கிடந்த - கண்வளர்ந்தருளுகிற. மாமாயா - அத்யாஶ்சர்யஸௌந்தர்யயுக்தனே. உன்னை அநுபவிக்கப்பெறாத ஆர்த்தியாலே, உடலம் - சரீரம். தளரா - தளர்ந்து. எனது - என்னுடைய. ஆவி - ப்ராணனானது. சரிந்து - நிலைகுலைந்து. போம்போது - சரீரத்தைவிட்டுப் போம்படியானபோதாயிற்று. இவ்வளவில், இளையாது - சித்ததௌர்ப்பல்யம்பிறவாதே. உன - உன். தாள் - திருவடிகளையே. ஒருங்க - உபாயமுமுபேயமுமாக வொருபடிப்பட. பிடித்து - பிடித்து. போத - போதும்படி. நீயே - நீயே. இசை - அநுமதி பண்ணவேணும்.............................*

## ஏ-டு - எட்டாம்பாட்டு.

"தரியேன்" என்றபின்பும் முகங்கிடையாமையாலேகலங்கி; அநுபவம்பெற்றிலேனே யாகிலும், "உன்றிருவடிகளே தஞ்சம்" என்று பிறந்த விஶ்வாசம் "குலைகிறதோ" என்றஞ்சா நின்றேன்; அது குலையாதபடி பார்த்தருளவேணுமென்கிறார்.

(களைவாய்துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்) நீயுன்காரியம் செய்யிலும்செய், தவிரிலும் தவிர்; நான் குறைவற்றேன், "த்வமேவோபாயபூதோமேபவ" (த்வமேவோபாய பூதோமேபவ) என்கிற அம்சத்தில்குறையில்லை; "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்று முன்கூறுசெய்யிலும் செய், தவிரிலும்தவிர்.

அப்படி செய்கிறோம் என்னுமையாலே; என்னுடையரக்ஷணத்துக்கன்றோ இக்கிடையென்கிறார் - மேல். (வளைவாய்நேமிப்படையாய்) பார்த்தவிடமெங்கும் வாயானதிருவாழியை ஆயுதமாக வுடையவனே. களையாதொழிகைக்குச் சொல்லலாம் கண்ணழிவுண்டோ. உன்கையிலாயுதத்துக்கு வாயல்லாதவிடமுண்டோ. அது வாய்படைத்த ப்ரயோஜநம் பெறவேண்டாவோ. "பரிகரமில்லை" என்னப்போமோ. "கைகழிந்துபோயிற்று, இனிப் படைதிரட்டவேணும்" என்னும் கண்ணழிவுண்டோ. (நேமிப்படையாய்-களைகண்மற்றிலேன்) அப்படி யிருப்பதென்கையிலோராயுதமுண்டோ, பிறர்கையிலோராயுதமுண்டோ, உன்கையிலாயுதமில்லையோ. (குடந்தைக்கிடந்தமாமாயா) நீ "மாம்" என்றதுக்குப் பின்பு இவ்வருகுள்ள ஏற்றமெல்லாம் பாராய். இத்தால் - அவதாரதசையிலும் அர்ச்சாவதாரம் சுலபமென்றபடி. திருக்குடந்தையிலேவந் தாஶ்சர்யமான அழகோடே கண்வளர்ந்தருளுகிறது ஆஶ்ரிதர்க்காகவன்றோ. சக்திவைகல்யம் சொல்லவொண்ணாது, "சுலபனன்று" என்னவொண்ணாது, "ருச்யுத்பாதகனல்லன்" என்னவொண்ணாது. (தளராவுடலம்) சரீரமானது கட்டுக்குலையா. தளரா - தளர. (எனதாவி

சரிந்துபோம்போது) என்ப்ராணனானது முடிந்துபோமளவாயிற்றுக்கிடாய். (போம்போது) போம்போதாயிற்று. இதுதான் அந்திமஸ்ம்ருதியானுலோவென்னில்; "𑌕𑌾𑌷𑍍𑌠𑌪𑌾𑌷𑌾𑌣𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌃" (காஷ்டபாஷாணஸந்நிபம்) என்றும், "𑌅𑌹𑌂 𑌸𑍍𑌮𑌰𑌾𑌮𑌿" (அஹம்ஸ்மராமி) என்றும் சொல்லுகிறது இவரழியாரன்றே; இவர்தாமவ்வதிகாரிகளுமன்றே. விஸ்லேஷவ்யஸநத்தாலே சரீரமும் தளர்ந்து, ப்ராணனும் சரீரத்தைவிட்டுப்போம் தசையாயிற்றிப்போதென்கை. (இளையாதிந்யாதி) அபேக்ஷிதம் பெற்றிலேனேயாகிலும், என்னபேக்ஷிதம் சித்திக்கும்படி யுன் திருவடிகளைப் பற்றினபற்று நெகிழாமற்பண்ணியருளவேணும். அநுபவம் கிடையாமையாலே, "அதுக்கடியான உபாயாத்யவசாயமும் குலைகிறதோ" என்றஞ்சி; இது குலையாமல் பார்த்தருளவேணுமென்கிறார். ஒருங்க - ஒருபடிப்பட.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (களைவாயித்யாதி) "𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍇𑌧𑌃" (ப்ரஸக்தஸ்யஹிப்ரதிஷேதஃ) என்கிற ந்யாயத்தாலே, இப்போது, "விஸ்வாசம் குலையாதபடி பண்ணவேணும்" என்கைக்கு ப்ரசங்கமேதென்ன (தரியேனென்றபின்புமித்யாதி) "இளையாதுனதாள்" இத்யாதியைப்பற்ற (உன்றிருவடிகளே தஞ்சமென்றித்யாதி)

"துன்பம் - களைவாய், துன்பம் - களையாதொழிவாய்" என்றபடி. குறைவற்றப்ரகாரத்தை விவரிக்கிறார் (த்வமேவேத்யாதி) அதாவது - சரமஸ்லோகபூர்வார்த்த ப்ரதிபாத்யாதிகாரி க்ருத்யத்தில் குறையில்லையென்றபடி. (நீயுன்காரியம்) இத்யாதியின் விவரணம் (ஸர்வபாபேப்ய இத்யாதி) கூறு - பாகம்.

"குடந்தைக்கிடந்த" என்றதுக்கவதாரிகை (அப்படியித்யாதி) "நேமிப்படையாய்" என்றதுக்குபாவம் (களையாதொழிகைக்கித்யாதி) கண்ணழிவு - குறை. "வளைவாய்" என்றதுக்கு பாவம் (உன்கையிலித்யாதி) "களையாதொழிகைக்கு" இத்யாதி விவரணம் (பரிகரமித்யாதி) "படையாய்" என்று - நிரூபகமாகச் சொன்னதுக்கு பாவம் (கைகழிந்தித்யாதி) "மற்றிலேன்" என்றதுக்கு பாவம் (அப்படியித்யாதி) "குடந்தைக்கிடந்த" என்று - அர்ச்சாவதாரஸௌலப்யம் சொல்லுகையாலே (நீமாமென்றதுக்கித்யாதி) இத்தால் - அவதாரவ்யாவ்ருத்தி. மாமென்றதுக்கென்றது - க்ருஷ்ணாவதாரஸௌலப்யத்தைப்பற்ற. ஏற்றமெல்லாம் - அர்ச்சகபராதிநனாயிருக்கிற வேற்றமெல்லாமென்றபடி. "குடந்தைக்கிடந்த" என்றத்தோடே - "𑌮𑌾𑌮𑌾𑌯𑌾" (மாமாயா) என்றத்தைக்கூட்டி பாவம் (திருக்குடந்தையிலே யித்யாதி) "𑌮𑌾𑌮𑌾𑌯𑌾" (மாமாயா) என்று - அழகால் வந்த வாஸ்சர்யத்தைச் சொல்லுகிறது. மாமாயா - அத்யாஸ்சர்ய ஸௌந்தர்யயுக்தனே இத்யர்த்தஃ. "நேமிப்படையாய்" இத்யாதி பதத்ரயத்தையும் கடாக்ஷித்துபாவம் (சக்திவைகல்யமித்யாதி)

"தளரா" என்றது - தளர்ந்தென்றபடி. கட்டுக்குலையாவென்றது - கட்டுக்குலைந்தென்றபடி. (போமளவாயிற்றுகிடாய்) என்று மிறுக்கி யோஜிக்கிறதெ

ன்; இருந்தபடியே, அந்திமஸ்ம்ருதி ப்ரார்த்தனையாகக் கொண்டாலோ வென்று சங்கிக்கிறார் ( இருதானித்யாதி ) அவ்வதிகாரிகளுமன்றேயென்றது - உபாசகரன்றேயென்றபடி.

அபேக்ஷிதங்களான வநுபவகைங்கர்யங்களை ப்ரார்த்தியாதே, "உனதாள் பிடித்தே" என்று - அத்யவசாயத்தை ப்ரார்த்திக்கிறதென்னென்ன ( அநுபவம் கிடையாமையாலேயித்யாதி ) ஒருபடிப்பட - விச்சேதமில்லாதபடி.

எனதாவிசரிந்துபோம்போது - என் ப்ராணனானது நிலை குலைந்து முடிந்து போம்படியானபோதாயிறறு; இவ்வளவில், இளையாது - அத்யவசாயம் நெகிழாமல், உன் திருவடிகளை யுபாயமாக வொருபடிப்படப் பிடித்துப் போகும்படி நீயே யநுமதிபண்ணி யருளவேணுமிதிசப்தார்த்தஃ. போத - போகும்படி. க்ரமேணாந்வயஃ. "அஹமஸ்ம்யபராதாநாமாலயோகிஞ்சநோகதி: । த்வமேவோபாயபூதோமேபவேதிப்ராத்தநாமதி: । ஶரணாகதிரித்யுக்தா ஸாதேவேஸ்மிந்ப்ரயுஜ்யதாம்." ( அஹமஸ்ம்யபராதாநா மாலயோகிஞ்சநோகதி: । த்வமேவோபாயபூதோமேபவேதிப்ரார்த்தநாமதிஃ । சரணாகதிரித்யுக்தா ஸாதேவேஸ்மிந்ப்ரயுஜ்யதாம். ) "காஷ்டபாஷாணஸந்நிபம்" ( காஷ்டபாஷாணஸந்நிபம் ) இத்யாதி, ஸ்ரீவாராஹே..............................*

# ஒன்பதாம்பாட்டு.

இசைவித்தென்னையுன்றாளிணைக்கீழிருத்துமம்மானே
யசைவிலமரர்தலைவர்தலைவாவாதிப்பெருமூர்த்தி
திசைவில்வீசுஞ்செழுமாமணிகள்சேருந்திருக்குடந்தை
யசைவிலுலகம்பரவக்கிடந்தாய்காணவாராயே.

## ஆறாயிரப்படி.

( இசைவித்து ) "இவ்வாத்மா வுனக்கேயடிமை" என்னுமிடத்தை யென்னை ஸம்வதிப்பித்து, என்னை த்வச்சரணாரவிந்தயுகள ஸம்ஶ்லேஷவியோகைக சுகதுஃகனாக்கினவனே, சேஷசேஷாஸந கருடப்ரமுக நாநாவிதாஸங்க்யேய திவ்யபரிஜந பரிசரித சரணயுகளனாய் சர்வேஶ்வரனாயிருந்துவைத்து, சர்வ சமாஶ்ரயணீயத்வார்த்தமாகத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறவனே, காணவாராயென்கிறார்...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னை யநுமதியைப் பிறப்பித் துன்றிருவடிகளை ப்ராப்யமாகவநுபவிப்பித்த நீ கிடையழகைக்காட்டின வோபாதி நடையழகு காணவரவேணுமென்கிறார்.

என்னை - அநாதிகாலம் விமுகனானவென்னை. இசைவித்து சேஷத்வமாகிற ஸ்வரூபத்திலே "ஓம்" என்றிசையும்படி பண்ணி. அதுக்கீடாக, உன் - உன். தாளி

ணைக்கீழ் - திருவடிகள் விஷயமான ப்ராப்யப்ராபகபுத்தியோடே. இருத்தும்- அந ந்யபரனாயிருக்கும்படிபண்ணின. அம்மானே - ஸ்வாமியாய். இப்படிஸ்வரூபஜ்ஞா நம் பிறப்பித்தார்க்கு ப்ராப்யனாகைக்காக, பகவதநுபவத்துக்கொருகாலும். அசை வு - அசைவு. இல் - இல்லாத. அமரர் - ஸூரிகளுக்கு. தலைவர் - தலைவரான அநந்த கருடவிஷ்வக்ஸேநர்க்கு. தலைவா - தலைவனாய். ஆதி - சமஸ்தகாரணபூதமாய். பெ ரு - சர்வாதிகமான. மூர்த்தி - விக்ரஹத்தையுடையனாய். ஆஶ்ரிதர்க் கநுபவார்த்த மாக, திசை - திக்குக்கள்தோறும். வில் - ஒளியை. வீசும் - பரப்புகிற. செழு- தர் ஶநீயமாய். மா - பெருவிலையனான. மணிகள் - ரத்நங்கள். சேரும் - சேருகிற. தி ருக்குடந்தை - திருக்குடந்தையில். அசைவு - தௌர்லப்யசங்கையாலே வந்தவலை ச்சல். இல் - தீர்ந்து. உலகம் - லோகம். பரவ - ஸ்துதிக்கும்படி. கிடந்தாய்- கண் வளர்ந்தருளினவனே. லோகத்துக்குக் கிடையழகுகாட்டினவோபாதி, காண - நா ன்நடையழகுகாணும்படி. வாராய் - வரவேணும்.

துஃகஸாகரத்திலே யசைகிறலோகம் அழகிலே யகப்பட்டுப் பரவும்படியெ ன்றுமாம். அசைவில்லாத பரமபதமாகவுமாம். இடம் வலங்கொள்ளுகிற திருமே னியசைவிலே லோகம் பரவவென்றுமாம்.......................................*

## ௯டு - ஒன்பதாம்பாட்டு.

சர்வேஶ்வரனாய்வைத்து சர்வசமாஶ்ரயணீயனாகைக்காக இங்கே சந்நிஹிதனாய் எனக்கடிமையாலல்லது செல்லாதபடிபண்ணின நீ, கண்ணாலே காணலாம்படி வரவேணுமென்கிறார்.

( இசைவித்தென்னை ) என்னை யிசைவித்து. நெடுநாள்விமுகனா னவென்னை யடிமையிலே யிசைவித்து. இசையாதவென்னை யிசைவித்த வருமைவேணுமோ இசைந்திருந்த நீ கார்யம் செய்கைக்கு. ( என்னை ) நித்யசம்சாரிகளுக்கு மிவ்வருகாயிருக்கிற வென்னை. ( உன்தாளிணைக்கீ ழிருத்தும் ) நித்யஸூரிகளடிமைசெய்கிற வுன்திருவடிகளின்கீழே யிருத்தின வனே. பரகுபரகு என்று திரியாதபடி தன் திருவடிகளிலே விஷயமாம் படிபண்ணுமவனென்கை. "கிறுமடி தாதுமானோம்" என்கிறபடியே மிதியடியாம்படி ஸ்ரீசடகோபனாக்கி. பெருங்காற்றில் பூளைபோலே *யா தானும்பற்றி நீங்கும் விரதமாயிறே முன்பு வர்த்தித்தது. ( அம்மானே ) பேறிவரதாயிருக்க, அவனிசைவிக்கவேண்டின ப்ராப்திசொல்லுகிறது. ( அசைவிலமரர்தலைவர்தலைவா ) அசைவில்லாத வமரருண்டு - நித்யஸூ ரிகள், அவர்களுக்குத் தலைவனான ஸ்ரீசேநாபதியாழ்வானுடைய கார்யமு மிவன் புத்த்யதீநமாயிருக்கிறபடி. அசைவில்லாமை யாவது - ப்ரஹ்மா திகளுடைய அமரத்வம்போலே யாபேக்ஷிகமன்று. கல்பாவதியன்றென்ற படி. ஜ்ஞாநத்துக்கு சங்கோசவிகாஸங்களை யுடையரன்றிக்கே யிருக்கை யென்றுமாம். ( ஆதிப்பெருமூர்த்தி ) இவ்வருகுள்ளாருடையவும் சத் தைக்கு ஹேதுபூதனானவனே. ஜகத்காரணபூதனான சர்வாதிகனே. மூர் த்தி - ஸ்வாமி. ( திசைவிலித்யாதி ) சத்தையைநோக்கி, மேலுள்ளதி

வர்கள் தாங்களே நிர்வஹித்துக்கொள்ள விருக்கையன்றிக்கே, மேலுள்ளதும் தானே செய்வானாக நினைத்துவந்து கிடக்கிறபடி. திக்குக்களிலே தேஜஸ்ஸு பரவாநின்றதாய், தர்ஸநீயமாய், பெருவிலையனான ரத்நங்கள் சேராநிற்கிற திருக்குடந்தையிலே. வில் – தேஜஸ்ஸு. (அசைவிலுலகம்பரவக்கிடந்தாய்) லோகமானது வருத்தமற்று ஆஸ்ரயிக்கும்படி கிடந்தாய். தௌர்லப்யசங்கையால் வந்த அலைசசல்தீர்ந்து. அன்றிக்கே, அசைவில்லாத லோகமுண்டு - நித்யவிபூதி, அங்குள்ளாரும் வந்தாஸ்ரயிக்கக்கிடந்தாய். அன்றிக்கே, அசைவுண்டு - இடம் வலங் கொள்ளுகை, அத்தைக்கண்டு லோகமானது பரவும்படிகிடந்தாய். (கிடந்தாய்காணவாராயே) கண்வளர்ந்தருளுகிற வழகுகண்டநுபவித்தேன், இனி நடையழகுகண்டு நான் வாழும்படிவரவேணும். "(செழுமாமணிகள் சேரும் திருக்குடந்தை) ஆராவமுதாழ்வார், திருமழிசைப்பிரான்போல்வார் புருஷரத்நங்கள் சேரும் திருக்குடந்தை" என்று நிர்வஹிப்பர்கள்......*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (இசைவித்தித்யாதி) "ஆதிப்பெருமூர்த்தி, உலகம்பரவ, காணவாராய்" இத்யாதிபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (சர்வேஸ்வரனுயித்யாதி) "உலகம் பரவ" என்றத்தைப் பற்ற (சர்வ சமாஸ்ரயணீயனுகைக்காகவென்றது)

"காணவாராய்" என்றமாத்ரம் சொல்லவமைந்திருக்க. "இசைவித்தென்னை" என்கிற பதப்ரயோகத்துக்கு பாவம் (இசையாதவித்யாதி) (இசையாதவென்னை) என்கிறவிடத்திலே - "யாரெருட்டி" இத்யாத்யநுசந்தேயம இசைந்திருந்தநீயென்றது - "எதிர்சூழல்புக்கு" எனகிறத்தைப்பற்ற. "அசைவிலமரர்" இத்யாதியைக் கடாக்ஷித்து பாவம் (நித்யசூரிகளித்யாதி)

அசைவாவது - சலநமாய், இல்லென்று - இல்லாமையாய், கல்பாவசாநத்திலே நசியாதவமரரொன்றபடி. "அமரர்" என்றபோதே - நித்யத்வம் சித்தமாயிருக்க, "அசைவில்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (அசைவில்லாமையாவதித்யாதி) அபேக்ஷிகமன்றென்றது - நம்மிற்காட்டில் நாலுநாள் சாவாதிருக்கிறத்தையிட்டு - அவர்களை, அமரரொன்னுநின்றதிறே; அப்படியன்றென்றபடி. "அசைவில்" என்று - ஸ்வபாவசலநராஹித்யத்தைச்சொல்லுகிறதென்று விவக்ஷித்து; அப்போது, "அமரர்" என்று - ஸ்வரூபம் நித்யமென்றபோதே, தத்ஸ்வபாவபூதஜ்ஞாநசலநராஹித்யமும் சித்தமன்றோ; அப்ராஸக்தநிஷேதம்பண்ணுகிறதென்னென்ன; பத்தவ்யாவ்ருத்த்யாத்தமாக வென்கிருர் (ஜ்ஞாநத்துக் கித்யாதி) "மூர்த்தி" என்று-ஸ்வாமியாய், சர்வகாரணபூதனாய் சர்வாதிகனான சர்வேஸ்வரனென்றபடி.

"வில்" என்று - தேஜஸ்ஸு. முந்தினவர்த்தத்துக்கு, "அசைவில்" என்று - (வருத்தமற்று) என்றபடி. வருத்தமற்றென்றது - "அதீந்த்ரியனானவனை நாமெங்கே யாஸ்ரயிக்கப்புகுகிறோம்" என்கிற ப்ரயாசமின்றிக்கேயென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, அசைவிலென்று - ஜ்ஞாநசங்கோசமில்லாதவென்றபடி. சம்சாரிகளுக்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கிற நீர்மையை யநுசந்தித்து நித்யவிபூதியிலுள்ளாரும் வந்தாஸ்ரயியாநிற்பர்களென்றபடி. மூன்றாமர்த்தத்துக்கு, "அசை

வில்" என்று - விஷயசப்தமி. அசைவுவிஷயமாகப் பரவும்படி கிடந்தாயென்றபடி. "செழுமாமணிகள்" என்றது - புருஷார்த்தபரமானபோது, வில்வீசுகையாவது - இவர்களுடைய ஜ்ஞாநப்ரகாசம் லோகமெங்கும் பரம்பியிருக்கை.

என்னை - இசைவித்தென்றுதொடங்கி யந்வயம்.............................*

## பத்தாம்பாட்டு

வாராவருவாய்வருமென்மாயாமாயாமூர்த்தியா
யாராவமுதாயடியேனுவியகமேதித்திப்பாய்
தீராவினைகடீரவென்னையாண்டாய்திருக்குடந்தை
யூராயுனக்காட்பட்டுமடியேனின்னமுழல்வேனோ.

### ஆறாயிரப்படி.

(வாராவருவாய்) கண்களுக்கும்படிவாராதே யென்னெஞ்சுக்குத்தோற்றும்படி வருமவனே, உன்னுடைய நிரவதிக சௌந்தர்யநிதியான் வடிவைக்காட்டி யெனக்கு நிரதிசயபோக்யமானவனே, த்வதேகபோகத்வவிரோதியா யொருவராலும் தீர்க்கவொண்ணாத விரோதிகளைத் தீர்த்தருளினவனே, இப்படி யடியேனை விஷயீகரித்தருளுகைக் கீடாகத் திருக்குடந்தையிலே புகுந்தருளினவனே, உனக்காட்பட்டு மடியேனின்ன முழல்வேனோ வென்கிறார்.....................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், கண்டநுபவிக்க வொண்ணாதபடி யகவாயிலே நின்று நிரதிசய சாரஸ்யத்தை விளைக்கிற வுன்னை, அர்ச்சாவதார சுலபனுகப் பெற்றடிமை புகுந்துவைத்து எத்தனைகாலமலமரக்கடவேனென்கிறார்.

வாரா - கண்ணிட்டுக்கண் டநுபவிக்கலாம்படி வடிவழகோடே நடந்துவாராதே. அருவாய் - அரூபியாய்க்கொண்டு. வரும் - என்னகவாயிலேவந்துதோன்றி. என்மாயா - உன்னுஸ்சர்யகுணங்களை யெனக்கு ப்ரகாசிப்பிக்கிறவனுய். அந்த அந்தராத்மத்வத்தளவன்றியே, மாயா - அபக்ஷயவிநாசாதிரஹிதமான. மூர்த்தியாய் - நித்யமங்கள விக்ரஹயுக்தனுய்க்கொண்டு. ஆரா - அநுபவிக்க த்ருப்திபிறவாத. அமுதாய் - அம்ருதம்போலே போக்யபூதனுய். அடியேன் - உனக்குசேஷமான வென்னுடைய. ஆவி - ப்ராணாஸ்ரயமான. அகம் - நெஞ்சுக்குள்ளே. தித்திப்பாய் - நிரதிசய சாரஸ்யத்தை விளைப்பானுய். இந்த ஆந்தராநுபவத்துக் கநாதி ப்ரதிபந்தகமாய், தீரா - ஒருகாலும் தீராத. வினைகள் - பாபங்கள். தீர - நசிக்கும்படியாக. என்னை - என்னை. ஆண்டாய் - வாசிகைகைங்கர்யங்கொண்டு போந்தவனுய். அவ்வளவில் நில்லாதே கண்டநுபவிக்கலாம்படி, திருக்குடந்தை - திருக்குடந்தையை. ஊராய் - அசாதாரண தேசமாக வுடையை யாய்க்கொண்டு சந்நிஹித னுனவனே. உனக்கு - இப்படி சௌலப்ய சௌந்தர்யவிசிஷ்டனுன வுனக்கு. ஆட்பட்டும் - அடிமைப்பட்டிருக்கச்செய்தேயும். அடியேன் - அநந்யார்ஹனு யநந்யகதியானநான். இன்னம் - இன்னம் மேலுண்டானகாலத்திலும், உழல்வேனோ - நினைத்தபடிபரிமாறப்பெறுமலலமரக்கடவேனோ.

இன்னமெத்தனை யுகந்தருளின நிலத்திலே முகங்காட்டி, ஆசைப்பட்டபடி யநுபவிக்கப்பெறாதே க்லேசிக்கக்கடவேனென்று கருத்து. வாராவருவாயென்று-நித்யமான ஆத்மாவுக்கு அந்தர்யாமியா யென்றுமாம்..............................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

"திருக்குடந்தையிலேபுக, நம்மநோரதமெல்லாம் சித்திக்கும்" என்றுசெல்ல, மநோரதித்தபடி தாம் பெறாமையாலே; இன்னமுமெத்தனை திருவாசல் தட்டித் திரியக்கடவேனென்கிறார்.

( வாராவருவாய் ) வாராதவருவாய். பாஹ்ய சம்ஶ்லேஷம்பண்ணவாராத அருபித்ரவ்யமாய். ( வருமென்மாயா ) ( அருவாய் - வருமென்மாயா ) என்று, ( அரு ) என்கிற பதத்தை - இங்கேயுங் கூட்டிக்கொள்வது. மறந்து பிழைக்க வொண்ணாதபடி அகவாயிலே யருவாய்க்கொண்டு ப்ரகாசிக்கிற ஆபீசார்யபூதனே. ( மாயாமூர்த்தியாய் ) நித்யமான திவ்யமங்களவிக்ரஹத்தை யுடையையாய். அல்லாதாருடைய தேஹங்களுடைய வுத்பத்திவிநாசங்களை யுடைத்தாயிறேயிருப்பது. ( ஆராவமுதாய் ) நிரதிசயபோக்யனாய்க்கொண்டு எனக்கு மறக்க வொண்ணாதபடியிருக்கிறவனே. ( அடியேனுவியகமேதித்திப்பாய் ) என்று முனக்கு ஸ்வமான என்னெஞ்சினுள்ளே யுன்போக்யதையை யாவிஷ்கரித்தநுபவிப்பித்தவனே. ( தீராவினைகள்தீர வென்னையாண்டாய் ) அநுபவைகவிநாஶ்யமாய், உன்னையொழிய வொருவரால் போக்கவொண்ணாத, த்வதநுபவவிரோதியான கர்மங்களைப்போக்குவித்து, "அடியேனுவி யகமே தித்திப்பாய்" என்னும்படி புகுர நிறுத்தினவனே. "பிணியுமொழிகின்றதில்லைபெருகுமிதுவல்லால்" என்கிறபடியே - * தீர்ப்பாரையாமினியில்வினைகள் தொடக்கமானவற்றைப்போக்கி யென்னை யடிமைகொண்டாயென்றுமாம். ( திருக்குடந்தையூராய் ) என்னை யடிமைகொள்ளுகைக்குத் திருக்குடந்தையிலேவந்து சந்நிஹிதனானவனே. பரவ்யூஹ விபவங்களை வ்யாவர்த்திக்கிறது. நான் கிட்டாத அம்சத்துக்கு நீ கிட்டவந்து கிடக்கிறவனே. ஒருநத்தமில்லாதா னொருவனையோ நான்பற்றிற்று. (உனக்காட்பட்டும்) சம்சாரிகளை யநுபவிப்பிக்க வந்துகிடக்கிற வுனக்காட்பட்டும். ( அடியேன் ) ஆருடைய வஸ்து விங்ஙனலமந்து திரிகிறது. ( இன்னமுழல்வேனோ ) என் சர்வபரத்தையு முன்றிருவடிகளிலேபொகட்டு, நீசெய்து தலைக்கட்டக்கடவையாக நினைத்திருக்கிற நான், இன்னமெத்தனை திருப்பதிகள் புக்குத்தட்டித் திரியக்கடவேனென்கிறார்......*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( வாராவித்யாதி ) "உனக்காட்பட்டு மடியே னின்னமுழல்வேனோ" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( திருக்குடந்தையிலே யித்யாதி )

மேலே, "வருமென்மாயா" என்னுகிற்க, "வாரா வருவாய்" என்கிறதென்னென்ன ( பாஹ்யசம்ஶ்லேஷமித்யாதி ) ( அகவாயிலேயருவாய்க்கொண்டென்றது ) அருவென்று - ஆத்மாவாய், அகவாயிலே தாரகனாய்க்கொண்டென்றபடி.

மாயா - நசியாதவென்றபடி. "மாயா" என்று விசேஷிப்பானென்னென்ன ( அல்லாதாருடையவித்யாதி )

விச்லேஷத்தில் நோவுபடாநிற்க, "ஆய்ச்சாய்" என்கிற தென்னென்ன ( அநுபவைகேத்யாதி ) "தீர" என்றது - தீரப்பண்ணியென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, "வினை" என்று - விச்லேஷதுக்கம்.

விவரணம் ( நான்கிட்டாதவித்யாதி ) நான் கிட்டாத வம்சத்துக்கு நீ கிட்டவந்து கிடக்கிறவனேயென்றது - நீயிருக்கிற பரமபதத்தே நான் கிட்டவேண்டும்படி யிருக்க, நானிருக்கிறவிடத்திலே நீ கிட்டவந்து கிடக்கிறவனேயென்றபடி. "ஊராய்" என்றதுக்கு பாவம் ( ஒருநத்ரமித்யாதி )

தட்டித்திரிகை - ப்ரதிஹதபலனாய்த்திரிகை.

வாரா வருவாய் தொடங்கி யடைவே யந்வயம்............................*

# பதினொன்றாம்பாட்டு.

உழலையென்பிற்பேய்ச்சிமுலையூடவளையுயிருண்டான்
கழல்களவையேசரணாகக்கொண்டகுருகூர்ச்சடகோபன்
குழலின்மலியச்சொன்னவோராயிரத்துளிப்பத்து
மழலைதீரவல்லார்காமர்மானேய்நோக்கியர்க்கே.

## ஆறாயிரப்படி.

( உழலை ) ஆச்ரிதவிரோதி நிரஸனைக போகனாயிருந்த வெம்பெருமானுடைய திருவடிமலர்களையே ப்ராப்யமும் ப்ராபகமுமாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன், வண்டுவளைப் பெருமானுடைய திருக்குழலோசையிற்காட்டிலு மினியவாகச்சொன்ன வாயிரத்து ளிப்பத்தும் மழலைதீரவல்லார், மானேய் நோக்கியர்க்கு ப்ரியதமர் போக்யராமாபோலே, எம்பெருமானுக்கு போக்யராவரொன்கிறார்...............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை மௌக்த்யந்தீர்ந் தப்யசிக்க வல்லவர்கள் பகவதீயர்க்குக்கமநீயராவரொன்று பலத்தை யருளிச்செய்கிறார்.

உழலை - உழலைகோத்தாற்போலே யிருக்கிற. என்பு - எலும்புகளை யுடைய. பேய்ச்சி - பேய்ச்சி. முலையூடு - முலையி னகவாயாலே. அவளை - அவளை. உயிருண்டான் - ப்ராணபஹாரம்பண்ணின விரோதி நிரஸநஸ்வபாவனான க்ருஷ்ணனுடையவையாய். அவை - தமக்குபாயமாக முன்பு ப்ரகாசிப்பித்த. கழல்களே - திருவடிகளையே. சரணாக - அபிமதசித்திக்குபாயமாக. கொண்ட - புத்தி பண்ணிக்கொண்ட. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வாரானவர். குழலில் - சப்தஸ்வரத்துக்கு முத்பாதகமான வங்கியத்திலும். மலிய - மிக்கவினிமையை யுடைத்தாம்படி. சொன்ன - அருளிச்செய்த. ஓர் - அத்விதீயமான. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியினுள். இப்பத்தும் - இப்பத்தையும். மழலை - தங்கள்மௌக்த்யம். தீர - தீர்ந்து. வல்லார் - பாவவ்ருத்தியோடே சொல்ல வல்லவர்கள். மானேய் - மான்போலேயிருக்கிற. நோக்கியர்க்கு - நோக்கையுடைய * மதிமுகமடந்

தையரான திவ்யாப்ஸரஸ்ஸுக்களுக்கு. காமர் - ப்ரஹ்மாலங்காரமுகத்தாலே கம நீயராம்படி யாதரிக்கப்படுவர்கள்.

மானேய்நோக்கியர்க்குக் காமுகரைப்போலே, ஸ்ரீவைஷ்ணவர்களுக் காதர ணீயரென்று த்ருஷ்டாந்தாபிப்ராயமாகவும் சொல்லுவர். குழல் - வங்கியம்.

இது - அறுசீராசிரியவிருத்தம்.........................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-இப்பத்தைப் பழுதறக்கற்கவல்லார், காமிநிகளுக்குக் காமுகரைப்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யராவரென்கிறார்.

( உழலையென்பிலித்யாதி ) உழலை கோத்தாற்போலே யிருக்கிற வெலும்புகளையுடைய பூதனைமுலைவழியே அவளுடையவுயிரையுண்டா ன். ( கழல்களவையேசரணாகக்கொண்ட ) விரோதிநிரசந சீலனுடைய திருவடிகளையே, அநிஷ்ட நிவ்ருத்திக்கு மிஷ்டப்ராப்திக்கு முபாயமென் றத்யவசித்த ஆழ்வார். விரோதியைப்போக்குவது மவனைத்தருவதும் தி ருவடிகளேயென்கை - அவதாரணத்தால். ( கழல்களவையே சரணாகக் கொண்ட ) பலியாவிட்டாலும் தம்மடிவிடாரிறேயிவர். ( குழலில் மலி ய ) திருக்குழலோசையிற்காட்டிலும் மிஞ்சி, கேட்டார் நோவுபடும்படி யாயிருக்கை. * மரங்கள் நின்றும் மதுதாரைகள் பாயவிறேயங்கு, * மர ங்களுமிரங்கும் வகையிங்கு; இனி நாமிரங்குகிற விது தன்னேற்றமிறே யிங்குத்தைக்கு. அத்விதீயமான வாயிரந் திருவாய்மொழியி லிப்பத்தை யும். ( மழலைதீரவல்லார் ) இளமைதீர வல்லார். அதாவது - “ வரிற் பொகடேன், கெடில் தேடேன்” என்றிருக்கையன்றிக்கே, இவர் சொ ன்னவாற்றாமையோடே சொல்லவல்லார். “ அழுவன்றொழுவனாடிக்கா ண்பன் பாடியலற்றுவன்” என்றிறே யிவராற்றாமை. ( காமர்மானேய் நோக்கியர்க்கே ) மானையொத்த நோக்கையுடைய ஸ்த்ரீகளுக்குக் காமு கரைப்போலேயாவர். ஆவதென்னென்னில் - “ தூராக்குழிதூர்த்தெனை நாளகன்றிருப்பன் ” என்றவிவரிது பலமாகச் சொல்லும்போது கிழோ டே வ்யாஹதமாம். ஆனால் சொல்லிற்றாயிற்றென்னென்றால் ; “ மேல் கொடிதானநரகம்” என்றுநிற்கச்செய்தேயும், விஷயப்ரவண ரதுபாரா தே மேல்விழுமாபோலே, இதுகற்றாரை எம்பெருமானும் ஸ்ரீவைஷ் ணவர்களும் மேல்விழுந்து போக்யராகக் கொள்ளுவர்கள். இங்ஙனன்றா கில், விப்ரலம்பகர் வார்த்தையாமிறே. இவர் ப்ராமாணிக ரன்றிக்கே யொழிவரோ. ப்ரகரணத்துக்கீடாயிறே தலைக்கட்டி யிருப்பதும். அவர்க ளுக்குப்போல் என்றொருசப்த மிங்குக்கண்டிலோமீ ! என்னில் ; “ மு ற்றுவமை” என்றொரு லக்ஷணமிருக்கிறபடி. த்ருஷ்டாந்தம் புக்க விட த்தே தார்ஷ்டாந்திகமும் வரக்கடவது. “ தாவிவையங்கொண்ட தடந் தாமரைகள் ” என்னுமின்றதிறே..........................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( உழலையித்யாதி ) "மழலைதீரவல்லார்" என்று தொடங்கிமேலைக் கடாக்ஷித்தவதாரிகை ( இப்பத்தையித்யாதி ) பழுதற - மௌக்த்யந்தீர.

( உழலைகோத்தாப்போலே யிருக்கிற வெலும்புகளையுடைய ) என்றதுக்கு தாத்பர்யம் - அகவாயில்மாத்ரமன்றிக்கே வடிவிலு மொருபசையில்லையென்று. பூதனை முலையுண்டவன்றிருவடிகளை யுபாயமாகக்கொண்டதுக்கு பாவம் ( விரோதி நிரஸநேத்யாதி ) அவதாரணத்துக்கர்த்தம் ( விரோதியையித்யாதி )

கொண்ட - அத்யவஸித்தவென்றபடி. "கொண்ட" என்றதுக்குபாவம் ( பலியாவிட்டாலுமித்யாதி )

"பூதனையை நிரஸித்தவன்" என்று நிறேசொல்லி, "குழலில்மலிய" என்கையாலே, குழலென்கிறவிது - சாமாந்யமேயாகிலும். க்ருஷ்ணன் றிருக்குழலோசையென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் ( திருக்குழலோசையித்யாதி ) திருக்குழலோசையைப்பற்ற விதுக்காதிக்யமேதென்ன; சாம்யகதநமுகேந வாதிக்யமருளிச்செய்கிறார் ( மரங்கள்நின்று மித்யாதிவாக்யத்ரயேண ) பாசுரஸ்ய ஸ்பஷ்டோர்த்த:. பெரியாழ்வார்திருமொழி மூன்றாம்பத்து ஆறாந்திருமொழி பத்தாம்பாட்டு, "கருங்கண்தோகை" இத்யாதி. தன்னேற்றமிறேயென்றது - "மரங்கள்போல் வலியநெஞ்சம்" என்றத்தைப்பற்ற.

இளமையாவது - ஔதாஸீந்யம். ஔதாஸீந்யப்ரகாரோபபாதநம் பண்ணி நின்றுகொண்டு, அதின்றிக்கே கற்கையாவது - ப்ரேமயுக்தராய்க் கற்கையென்கிறார் ( வரில்பொகடேனித்யாதி ) இவராற்றாமையோடே சொன்னாரோவென்ன ( அழுவனித்யாதி ) காமுகரைப்போலேயாவரென்றது - ஸ்த்ரீகளுக்கு காமுகர்போக்யராமாப்போலே, ஈஶ்வரனுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும்போக்யராவரென்றபடி. இது அவதாரிகைக்குச் சேர்ந்தவர்த்தம். ஆவதென்னென்னிலென்றது - இருந்தபடியே யர்த்தம் சொல்லாமல் த்ருஷ்டாந்தமாகச் சொல்லுவானென்னென்னிலென்றபடி. ப்ரகரணவிரோதத்தாலே மிறுக்கி யோஜித்தோமென்று ( தூராக்குழி ) இத்யாதிவாக்யத்துக்கு தாத்பர்யம். ஆனபின்பு, முதல்சொன்னதேநல்லதென்று. சங்காபூர்வகமாக வுக்தார்த்தத்தை ஸ்திரீகரிக்கிறார் ( அஜுலித்யாதி ) அவதாரிகையிற் சொன்ன வர்த்தமன்றிக்கே, மானேய்நோக்கியர் விஷயத்தில் காமுகரிருக்குமாப்போலே யென்றர்த்தாந்தரம் ( மேல்கொடிதானவித்யாதி ) தமக்கித்தை பலமாகச் சொன்னானன்றோ "தூராக்குழி" இத்யாதியோடே வ்யாஹதமாவது, பிறர்க்கித்தை பலமாகச்சொன்னால் விரோதமேதென்ன; த்ரிவிதமாக பரிஹரிக்கிறார் (இங்ஙனன்றாகிலித்யாதி வாக்யத்ரயத்தாலே ) இங்ஙனன்றாகிலென்றது - நான்சொன்னபடி சொல்லாதே, இருந்தபடியே சொல்லிலென்றபடி. "எம்பெருமானுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் போக்யராவர்" என்று தார்ஷ்டாந்திகசப்த மில்லையே யென்ன ( த்ருஷ்டாந்தம்புக்கவிடத்தேயித்யாதி ) என்னுதல், விவரணமாதல். முற்றுவமைக்குதாஹரணம் ( தாவியித்யாதி ) முற்றுவமை - பூர்ணோபமை. காமர் - காமுகர்.

க்ரமேணாந்வய:.....................................................................*

# த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( ஆராவமுதே. )

நிஸ்ஸௌஹித்யாம்ருதத்வாத் ஸ்வஜநிதயா நநந்யபாவப்ரதாநா
ந்மர்யாதாதீதகீர்த்யா நளிநநயநதோ நாயகத்வாத் ஸுராணாம் | ஸர்வ
ஶ்லாக்யாஷ்டாதியோகாதநிதரகதிதாத்யாவஹாத் ஆஸங்கபாவாத் ஸம்
ஸ்வாவாஸயோக்யாநுஸந்திஸம்ஜ்ஞாவ்யாஜாஸக்ருஷ்ண: || (௫௮)

( நிஸ்ஸௌஹித்யாம்ருதத்வாத் ) ஆராவமுதே - ஸர்வகாலமு மநுபவித்தா லும் த்ருப்திவாராதபடியான போக்யதாதிசயத்தை யுடையனாகையாலும்; ( ஸ்வ வஶஜநிதயா ) எம்மாவுருவும் வேண்டுமாற்றாலாவாய் - * இச்சாக்ருஹீதாபிமதோ ருதேஹனாகையாலும்; ( அநந்யபாவப்ரதாநாத் ) உன்னாலல்லால் யாவராலுமொ ன்றும் குறைவேண்டேன் - ஆஶ்ரிதருக்கநவரத மநந்ய பாவத்தைக் கொடுக்கையா லும்; ( மர்யாதாதீதகீர்த்யா ) செலக்காண்கிற்பார் காணுமளவும் செல்லுங் கீர்த் தியாய் - ஒருவராலும் பரிச்சேதிக்கவொண்ணாத குணவத்தாப்ரதையையுடைத்தா கையாலும்; (நளிநநயநத:) செந்தாமரைக்கண்ணா - ஸரஸிஜ ஸத்ருஶங்களான தி ருக்கண்மலரை யுடையனாகையாலும்; ( நாயகத்வாத்ஸுராணாம் ) வானோர்கோ மானே - * அயர்வறு மமரர்களுக் கதிபதியாகையாலும்; ( ஸர்வஶ்லாக்யாஷ்டாதி யோகாத் ) அரியேறேயித்யாதி - சிம்ஹஶ்ரேஷ்டம்போலே அநபிபவநீயனாய், நி ரதிசயதீப்தியுக்ததயா ஸ்ப்ருஹணீயமான திவ்யவிக்ரஹத்தையுடையனுமாய், பெரி யபிராட்டியாரோடு பிரிவில்லாதிருக்கையாலும்; ( அநிதரகதிதாத்யாவஹ ) களை வாய்துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன் - அநந்யோபாயத்வத்தை யு ண்டாக்குகையாலும்; ஆதிசப்தத்தாலே - "இசைவித்தென்னை" என்ற வொன்ப தாம் காதையிற்சொல்லுகிற வநந்ய ப்ரயோஜநத்வம் ஸங்க்ருஹீதம்; ( ஆஸங்கபா வாத் ) தீராவினைகள் தீரவென்னையாண்டாய் திருக்குடந்தையூராய் - வருத்தமற வெல்லாரும் வந்தாஶ்ரயிக்கும்படி விரோதிகளை நிரசித்துக்கொண்டு, மஹநீயமா ன திருக்குடந்தையிலே கண்வளர்ந் தருளுகையாலும், ஆராவமுதப் பெருமாள் ஆஶ்ரிதரை ஸ்வதாஸ்யத்திலே யத்யந்த மநுரக்தராகப் பண்ணுகிற்கிறானென்று "ஆ ராவமுதே" என்கிற தசகத்திலே யாழ்வாரருளிச்செய்தாரென்கிறார்........(௫௮)

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஆராவமுதாழ்வாராதரித்தபேறுகளைத்
தாராமையாலேதளர்ந்துமிகத் - தீராத
வாசையுடனாற்றாமைபேசியலமந்தான்
மாசறுசீர்மாறனெம்மான். (௪௮)

( ஆராவமுதாழ்வார் ) அகிஞ்சநரா யார்த்தியோடே ப்ரபத்திபண்ணியிருக் கச்செய்தேயும் ஆராவமுதாழ்வார் "இவர்நம்மாழ்வார்" என்றபிமானித்தபேக்ஷித ம்செய்யாமையாலே யலமந்து ஆர்த்தராயருளிச்செய்த பாசுரத்தை யநுவதித்த ருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; சிரீவரமங்கைவாணன் திருவடிகளிலே ச ரணம்புக்கவிடத்திலு மங்குத் தம்மபேக்ஷிதங்கிடையாமையாலே, "ஆஶ்ரிதாநுண

தீக்ஷிதனான சர்வேஶ்வரன் நங்கார்யம் செய்யாமையில்லை, எங்கே கார்யம்செய்ய நினைத்திருக்கிறானென்று தெரியாது" என்று, "திருக்குடந்தையிலே ஆராவமுதாழ்வார் திருவடிகளிலே செல்ல நம்மபிமதம் சித்திக்கும்" என்று மநோரதித்துச் சென்றவிடத்தில், அவரெழுந்திருத்தலிருத்தலுலாவியருளுதல் இன்சொல்லுச்சொல்லுதல் குளிரநோக்குதல் அறவணைத்தல் செய்தருளக் காணாமையாலே, "பிராட்டியுமவனுமான சேர்த்தியுமுண்டாய் நமக்கபேக்ஷையுமுண்டாயிருக்க அபிமதம்பெறாதொழிவோமே!" என்று துடித்து, "இவ்வளவிலும் 'திருவடிகளேயுபாயம்' என்னும் துணிவு குலையாதொழியப்பெற்றோமிறே!" என்று வருந்தி தரித்தாராய்த் தலைக்கட்டுகிற * ஆராவமுதிலர்த்தத்தை யருளிச்செய்கிறார் "ஆராவமுதாழ்வார்" என்று தொடங்கியென்கை.

(ஆராவமுதாழ்வார்) "ஸஹபத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்" (ஸஹபத்ந்யாவிஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்) என்று கூட்டுத் தேடி யநுபவிக்கவேண்டும்படி நிரதிசயபோக்யராய், * ஏரார்கோலந்திகழக்கிடந்த வாராவமுதாழ்வார். (ஆதரித்தபேறுகளை) இவரபேக்ஷித்த புருஷார்த்தங்களை. அதாவது - "கிடந்தாய்கண்டேன்" "அம்மாமலர்க்கண்வளர்கின்றானே," "காணவாராயே" என்கிறவிடங்களிலபேக்ஷிதமானத்தை. "குடந்தையுட்கிடந்தவாறெழுந்திருந்து" என்கிறபடியே எழுந்திருக்கவேணும், * குடந்தைத்திருமாலான தேவர் "தாமரைமங்கையும்நீயும்" என்னும்படி இருவருங்கூட விருந்தருளவேணும், * தாமரைக்கண்களாலே நோக்கியருளவேணும், * பவளம்போல் கனிவாய்சிவப்ப நீகாணவரவேணும் என்றாப்போலே சில பரிமாற்றங்களை யபேக்ஷிக்க, அதப்போதே பெறாமையாலே. (தளர்ந்துமிக) "ஆகாசத்தைநோக்கி யழுவன்தொழுவன்" என்னும்படி அத்யவசந்நராய். (பேராதவாசையுடன்) அபிநிவேசம்போவ தநுபவத்தாலேயாகையாலே, அநுபவம்பெறாமல் முடியாத வபிநிவேசத்தோடே. (ஆற்றாமைபேசியலமந்தான்) அதாவது - "அடியேனுடலம் - நீராயலைந்து கரைய வுருக்குகின்ற" என்றும், "என்செய்கேன்" என்றும், "உன்னைக் காண்பான் நானலப்பாய்" என்றும், "தூராக்குழிதூர்த் தெனைநாளகன்றிருப்பன்" என்றும், "தரியேனினி" என்றும், "உனக்காட்பட்டுமடியேனின்னமுழல்வேனோ" என்றும் பேசினவையென்கை. இத்தசையிலும் "உனதாள்பிடித்தேசெலக்காணே" என்றும், "களைகண்மற்றிலேன்" என்று மிவர்க்கடியி லத்யவசாயமிருக்கும்படி யிதுவாயிற்று (மாசறுசீர்மாறனெம்மான்) இவ்வளவான தசையிலு முபாயாந்தரங்களில் கண்வைக்கையாகிற மாசின்றிக்கேயிருக்கிற வத்யவசாய ஜ்ஞாநாதிகுணங்களையுடையரான வாழ்வார், தம்மையடைந்த ப்ரபந்நஜநமான நமக்கு ஸ்வாமி. அன்றிக்கே, ஆற்றாமைபேசி யலமந்தானென்று - க்ரியையாதல்..............................(௪௮)

ஐந்தாம்பத்தில் - எட்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

———•3O8•———

ஆக திருவாய்மொழி - ௪௮.—பாட்டு - ௫௱0.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஐந்தாம்பத்து.

## ஒன்பதாந் திருவாய்மொழி.

### மானேய்நோக்கு – ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(மானேய்நோக்கு) திருக்குடந்தையிலே புக்கவிடத்திலும் தம்முடைய வபேக்ஷிதம் கிடையாமையாலே, திருவல்ல வாழிலேசெல்லத் தம்முடைய மனோரதங்கள் பூரிக்குமென் றங்கேபோகப்புக்கு, பலஹாநியாலே முட்டப்போகமாட்டாதே மிகவுமவசந்நரானவாழ்வார், எம்பெருமானோடே விஶ்லேஷித்த வொரு பிராட்டி தசையையுடையராய்த்தம்முடைய தசையை யந்யாபதேசத்தாலே பேசுகிறார். எம்பெருமானோடே கலந்து பிரிந்தாளொருபிராட்டி, திருவல்லவாழுக்கணித்தாகவிருந்தவூரில், திருச்சோலையும், அங்குத்தைப் பரிமளத்தைக் கொண்டு புறப்படுகிற தென்றலும், அங்குத்தைச் சோலைகளிலே மதுபானமத்தமானவண்டுகளுடைய வினிதான மிடற்றோசைகளும், வைதிகக்ரியாகோலாஹலங்களும், ஹோமதூமங்களும், மற்றுமுண்டான ஸம்ப்ரமங்களு மெல்லா முள்ளேப்புகப்பெறாதே யிருக்கிற தன்னை மிகவும் நலிய அவற்றாலு ம்நோவுபட்டு, திருவல்லவாழிலேபுக்குப் பரிமாறவாசைப்பட்டவவளைக் கண்டு "நீநினைக்கிறவிது, கடல்ல" என்று தோழிமார் நிரோதியாநிற்க, தன்னார்த்தியை யவர்களுக்காவிஷ்கரித்து அவர்களை யநுநயியாநின்று கொண்டு, திருவல்லவாழிலேபுக்கு நினைத்தபடி பரிமாற வல்லேனேயென்று அவர்களைக் குறித்துச் சொல்லுகிறாள்.......................... ........*

### பன்னீராயிரப்படி.

ஒன்பதாந்திருவாய்மொழியில், சீழ் - திருக்குடந்தையிலே ஆராவமுதாழ்வாரை யநுபவிக்கத்தேடித் தாம் நினைத்தபடி பரிமாறப்பெறாமையாலே "இன்னமுழல்வேனோ" என்று ஆர்த்தரானவளவிலு மவனையொழிய ரக்ஷகரில்லாமையாலும், உகந்தருளின் திவ்யதேசமொழிய ப்ராப்யமில்லாமையாலும்; நிரதிசயபோக்யமாய் சம்ருத்தமான திருவல்லவாழிலே யெழுந்தருளியிருக்கிற சர்வேஶ்வரன் தம்முடைய திருவுள்ளத்திலே முகங்காட்ட, அவனுடைய ஸ்வபாவவிசேஷங்களிலே வித்தராய்; நிருபாதிகசேஷித்வத்தையும், தத்ஸித்தமான வுபகாரகத்வத்தையும், அந்த வுபகாரகத்வத்தினுடைய நைரந்தர்யத்தையும், உபகார ரூபமான நித்

யாஶ்ரிதஸம்ஶ்லேஷத்தையும், நித்ய நிரதிசயபோக்யதையையும், ஆஶ்ரிதோபகார கமான அர்த்தித்வத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், வனாயாமலங்கரிக்கும் சீலாதிசயத்தையும், ஆதிக்யஸூசகமான வாயுதவத்தையையும், அசாதாரண சம்பந்தத்தையு மநுசந்தித்து, ஏவம்விசிஷ்டனான சர்வேஶ்வரனுடைய வநுபவத்திலே யத்யந்தமபிநிவிஷ்டராய், அவ்வநுபவசித்திக்கு அவன் திருவடியே யுபாயமென்கிற விஶ்வாசத்தையுடையராய்க்கொண்டு; அவனெழுந்தருளியிருக்கிற, நிரதிசய ஸர்வப்ரகாரபோக்யதையை யுடைத்தான திருவல்லவாழிலே சென்றநுபவிக்கக் கூடுமோவென்று சுஹ்ருத்துக்களைக் குறித் தருளிச்செய்த பாசுரத்தை; அந்த நாயகனோடு கலந்து பிரிந்தாளொருநாயகி "அவன்வர்த்திக்கிற தேசத்திலே புகப்பெறுவோமோ" என்று தோழிமாரைக் குறித்துத் தன்னாற்றாமைகூறின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.......................................................................*

## ஈடு.

திருக்குடந்தையிலே போய்ப் புக்கவிடத்திலும் தம் மபேக்ஷிதம் பெறாமையாலே திருவல்ல வாழேறப்போக வொருப்பட்டு, தம்மபிமதம் சித்தியாதவோபாதி அங்கு முட்டப்போகவுங் கூடவரிதாம்படி தமக்குப்பிறந்த வவசாதத்தை யந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார். * மாசறுசோதியிலே - இவர்தாம் மடலெடுக்கப்புக்கு, "அவனுக்கவத்யம்" என்று தவிர்ந்தார்; இங்கு-ஆற்றாமைதோற்ற, கண்ட திருப்பதிகள்தோறும்புக்கு நுழைந்து திரியாநின்றார்; இதுக்கடியேதும் தெரிகிறதில்லை. அங்கு - அவன் ஸ்வரூபம் பரிஹரித்தார், இங்கு - தம்முடைய ஸ்வரூபம்நோக்கப்பார்க்கிறார்; அங்கு - வடிவிலே யணையவேணுமென் றாசைப்பட்டார்; பின்பு இவ்வளவும்வர அவ்வடிவிலே யவகாஹித்த படியாலே ஆற்றாமைமுறுகி, "கொம்மைமுலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர்குற்றேவல்" என்கிறபடியே அடிமைசெய்ய வாசைப்படுகிறார். இனி இவர் தமக்குத் தான் சம்ப்லேஷமாவது - மாநசாநுபவ மென்றிறே ப்ரவேசத்திலே அடியிலே சொல்லிற்று; இங்ஙனேயிருக்க, திருவல்ல வாழேறப் புறப்பட்டுப்போகையாவதென்! பந்துவர்க்கம் நிஷேதிக்கையாவதென்னென்னில்; அந்த மாநசாநுபவந் தனக்கொருகலக்கம்வரவமையுமிறே.

எம்பெருமானோடே கலந்து பிரிந்து பிரிவாற்றாமை நோவு படுகிறாளொருபிராட்டி, தன்னுடைய வாபிஜாத்யாதிகளையும் பாராதே திருவல்லவாழேறப் புறப்பட்டுப்போகப்புக, இத்தை யறியும் தோழிமார் வந்து "இதுகார்யமல்ல, நந்தலைமைக்குப் போராதுகாண்" என்று ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்க, "இனி நீங்கள் சொல்லுகிறவற்றால் நான்பெற்றதென்; அவ்வூரில் திருச்சோலையும், அங்குண்டான பரிமளத்தைக் கொய்துகொண்டு புறப்படுகிற தென்றலும், அங்கே மதுபானம்பண்ணிக் களித்துப் பாடாநின்றுள்ள வண்டுகளினுடைய இனிதானமிடற்றோசையும், ஊரிலுண்டான வைதிகக்ரியா கோலாஹலங்களும், நகரசம்ப்ரமங்களும், இவையெல்லாம், நீங்களென்னைமீட்க நினைக்கிறவோபாதி 'அ

ங்கேபோருபோரு' என்றழையாநின்றது; ஆனபின்பு நீங்கள் சொல்லு கிறவற்றால் பெற்றதென்" என்று தன்னார்த்தியை அவர்களுக் காவிஷ்க ரித்து அவர்களை யநுநயியாநின்றுகொண்டு; திருவல்லவாழிலே நான் நி னைத்தபடியே போய்ப்புக்குப் பரிமாற வல்லேனேயென்று அவர்களுக்கு ச் சொல்லுகிறாளாயிருக்கிறது. "இதுதான் நானநுபவித்தேன்" என்று ஜீயரருளிச்செய்வர் – பட்டர் திருவடிகளை யாஶ்ரயித்துப் பின்பொருகா ல் மேல்நாட்டுக்கெழுந்தருளி மீண்டு பெரியத்வரையோடே "திருநாளு க்குதவவேணும்" என்றுவர, திருக்கரம்பன் துறையளவிலே வந்தவா றே அசிந்திதமாக ஆறு பெருகிக்கிடக்க; இராத்திருநா ளெழுந்தருளி இங்குண்டான சம்ப்ரமங்களெல்லாம் செவிப்படுவது, வந்துபுகுரப்பெ றுதொழிவதாய்க்கொண்டு "போரநோவுபட்டோம்" என்றருளிச்செ ய்வர். ஏகதத்விதத்ரிதர்கள் ஶ்வேதத்வீபத்தைச்சென்று கிட்டி, உள்ளு ப்புகுகைக்கு யோக்யதையில்லாமையாலே புறம்பேநின்று; அங்குள்ளா ரெம்பெருமானைக்கண்டு படுகிற சம்ப்ரமத்தைச் செவியாலே கேட்டுநிற் பது, கண்ணால் காணப் போகாதொழிவதாய்க் கிடந்து பட்டாப்போலே கிடந்து கூப்பிடுகிறாராயிற்றிவரும்.......................................*

## ஜீயர் அரும்பதம்.

*மானேய்நோக்கு ப்ரவேஶே, சங்க்ரஹசங்கதி (திருக்குடந்தையிலே யித்யாதி)*

*ஸ்வாபதேசத்திலே சங்கித்து பரிஹரிக்கிறார் (மாசறுசோதியிலேயித்யாதி)* அவனுக் கவத்யமென்று - *அவனுடைய ரக்ஷகத்வத்துக் கவத்யமென் றென்றபடி.* * ஊரெல்லாம் துஞ்சி ப்ரவேசத்திலே - *ஆஶ்ரித்யனஸ்ரயிக்கையாலே* மடலெடுக்கை தவிர்ந்தாரென் றருளிச்செய்தாரோ யாகிலும், இங்கு - *அவனுக்கவத்யம்* என்றுதவி ர்ந்தாரென்றருளிச்செய்கையாலே, இதுவு மொரு ஹேதுவாகக் கண்டுகொள்வது. (இதுக்கடியேதும் தெரிகிறதில்லை) என்கிற சங்கையை த்வேதா பரிஹரிக்கிறார் (அங்கவனித்யாதியாலும், அங்குவடிவிலே யித்யாதியாலும்) அவன் ஸ்வரூபம் ப ரிஹரிக்கையாவது - *அவனுடைய நிருபாதிக ரக்ஷகத்வத்துக்கு* ஸ்வப்ரவ்ருத்தி, வி ருத்தமாகையாலே, *ஸ்வப்ரவ்ருத்தியை விட்டாரென்றபடி.* இங்குத்தம்முடைய ஸ் வரூபம் நோக்குகையாவது - *அநுபவமில்லாதபோது ஸத்தைகிடவாமையாலே,* தி ருப்பதிகள் தோறும் புக்காகிலு மவனை யநுபவித்து சத்தையை நோக்கப் பார்க்கி றாரென்றபடி. இத்தால் - ஸ்வசத்தையை யுண்டாக்கியே யத்தலையைநோக்கவேண் டுகையாலே, ஸ்வசத்தாசித்த்யர்த்தமாகத் திருப்பதிகள் தோறும் புக்கநுபவிக்கப் பார்க்கிறாரென்று *பரிஹரித்தாராயிற்று.* "மாசறுசோதியென் செய்யவாய்மணிக் குன்றத்தை" *என்றத்தைப்பற்ற (அங்குவடிவிலே யணையவேணுமென்றாசைப்பட் டாரென்றது)* ஆசைப்பட்டாரென்றது - ஆசைப்பட்டமாத்ரமாகையாலே "தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றிருக்கலாமென்றபடி.

(கொம்மைமுலைகளிடர்தீர) கொம்மைமுலை - பெரியமுலை. அதாவது - அநுபவா லாபத்தாலே வீங்கின முலையென்றபடி. இடர்தீர - இவற்றின்க்லேஶம்தீர. (கோவி

க்தற்கோர்குற்றேவல்) குற்றேவல் - அந்தரங்ககைங்கர்யம். நாய்ச்சியார்திருமொழி. "அடிகூடுவதென்றுகொலோ" என்றத்தைப்பற்ற (அடிமைசெய்யவாசைப்படுகிறுரென்றது)

ப்ரவேசத்திலேயென்றது - மஹாப்ரவேசத்திலேயென்றபடி. (புறப்பட்டுப்போகையாவதென்) என்றவனந்தரம், முடியப்போக மாட்டாதே புறச்சோலையிலே விழுந்துகிடக்கையாவதென் என்று கூட்டிக்கொள்வது. இரண்டுக்குமுத்தரம். (அந்தவித்யாதி) (அந்தமாநுசாநுபவந் தனக்கொருகலக்கம் வர வமையுமிறேயென்றது) திருவல்லவாழேறப்போகிறது - மாநசாநுபவமாய், முடியப் போகமாட்டாமல் புறச்சோலையிலே விழுந்துகிடக்கை - மாநசாநுபவாபாவத்தால் வந்த கலக்கமென்றபடி. (பந்துவர்க்கம் நிஷேதிக்கையாவதென்) என்ற சங்கைக்கு பரிஹாரம் - சம்பந்த ஜ்ஞாநோபாயாத்யவசாய தசாவிசிஷ்டராய் நிருபிக்குமளவில், ஸ்வப்ரவ்ருத்தி, ததேகரக்ஷ்ய ததேகபாரதந்த்ர ஸ்வரூபத்துக்கு விருத்தமாய்த்தோற்றுகையாலே, சம்பந்த ஜ்ஞாநோபாயாத்யவசாயதசைகள் பந்துவர்க்கமென்கிறதென்று.

ப்ராசங்கிகசங்காபரிஹாரம்பண்ணி, அநந்தரம் விஸ்தரசங்கதி (எம்பெருமானோடே யித்யாதி) (ஆபிஜாத்யாதிகளையும்) என்ற சம்பந்தத்தாலே - அவனுடைய ரக்ஷகத்வாதிகுணங்களை சமுச்சயிக்கிறது. (இனிநீங்கள்) என்றவிடத்தில், இனியென்றது - வக்ஷ்யமாணத்தைப்பற்ற. (அவ்வூரில்திருச்சோலையும்) இத்யாதி பஞ்சகமும் - "தேனார்சோலைகள்," "தென்றல்மணங்கமழும்," "பாண்குரல்வண்டு," "பாடல்வேதவொலி," "மண்ணும்விண்ணும் தொழநின்ற" என்றவற்றைப்பற்ற. "மானேய்நோக்குநல்லீர்," "நன்னலத்தோழிமீர்காள்" என்றத்தைப்பற்ற (அவர்களை யநுநயியா நின்றுகொண்டென்றது)

அங்குத்தை வ்யாபாரங்களும் செவிப்படாநிற்கக் கிட்டப்பெறுமல் சமீபத்திலே நோவுபட்டமைக்கு த்ருஷ்டாந்தத்வயம் (இதுதானித்யாதி) இதுதானென்றது - அங்குத்தை சம்ப்ரமங்கள் செவிப்படாநிற்க, சமீபத்திலே கிட்டப்பெறுமல் நோவுபடுகிற விதுதானென்றபடி. திருக்கரம்பன்துறை - உத்தமர்கோயில் துறை. "கரம்பனூருத்தமனை" என்னக்கடவதிறே. ஏகதத்விதத்ரிதர்கள் - ப்ரஹ்மாவின் மாநசபுத்ரரான ருஷிகள்.........................................................*

## ஒன்பதாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு

மானேய்நோக்குநல்லீர்வைகலும்வினையேன்மெலிய
வானார்வண்கமுகுமதுமல்லிகைகமழுந்
தேனார்சோலைகள்சூழ்திருவல்லவாழுறையுங்
கோனாரையடியேனடிகூடுவதென்றுகொலோ.

இவளிருக்கிற விடம் * அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:, அவனிருக்கிற விடம் * அகாலபலிநோவ்ருக்ஷா:. ( வண்கமுகும் ) தர்ஸநீயமாயிருக்கை. "குலையார்ந்த பழுக்காயும் பசுங்காயும் பாளைமுத்தும் தலையார்ந்தவிளங்கமுகு" என்னுமாபோலே யிருக்கை. (வண்கமுகு) கொடிதொடர வேண்டாதே, தான் கொடிக்குடம்புகொடுத்து நிற்கிற ஔதார்யமென்றுமாம். மெய்யே கொடுக்கிற ஔதார்யமிறேயிது. ( மதுமல்லிகைகமழும் ) மலட்டுக்கொடியாயிராதே!, பூகத்தோடே அணைகையாலே. பரப்பும் பூவாயிருக்கை. மதுவையுடைத்தான மல்லிகைகளின் பரிமள மிவளிருந்தவிடத்தேவந் தலையெறிகை. ( தேனூர்சோலைகள்சூழ் ) இதுக்கு முன்பு சொன்னவையெல்லா மாப்ரயமாத்ரமேயாய்த்தேனேமிக்கிருக்கை. வானூர் வண்கமுகுகள் தேன் வெள்ளத்திலே யலைந்து, ப்ரளயகாலத்திலே மார்க்கண்டேயன் பட்டதெல்லாம் படாநின்றது. தேன் வெள்ளமிடுகிற சோலைகள் சூழ்ந்த திருவல்லவாழுறையும் கோனை — இருவருங்கூட மதுபாநம்பண்ணிக் களிக்கவேண்டியிருக்க, நான் மெலியத் தாமே மதுபாநம்பண்ணி வர்த்திக்கிறவனை. பாவியேன், இவ்வளவில் "நசாபிமது ஸேவதே" ( நசாபிமதுஸேவதே ) என்னவேண்டாவோ. இவரிவ் வாற்றாமையோடே யிருந்து சோலையைக் கவிபாடுகிறது - உள்ளுநிற்கிற வனோடொக்க இவையும் போக்யமாயிருக்கையிறே. உபாஸ்யவஸ்து, மநஸ்ஸை ப்ரத்யக்ஷவிஷயமாக்கி யநுபவிக்கமாட்டாதார்க்குக் கண்ணுக்கிலக்காக்கிக்கொண்டு நிற்கிறாப்போலே காணு மிவையும். ப்ராப்ய னானவனுடைய வுபாயபாவத்தில் நிலைபோலே. நித்ய ப்ராப்யனுய்க்கொண்டங்கே யிருக்கிறவன், ஆஶ்ரிதருகந்ததொரு த்ரவ்யத்தைத் திருமேனியாகக்கொண்டு முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிறாப்போலே, அங்குள்ளாரு மிங்கேபோந்து ஸ்த்தாவரங்களாயும் ஜங்கமங்களாயும் திர்யக்குக்களாயு மவனை விடமாட்டாதே நிற்கிறபடி. நித்யரும் முக்தரும் பத்தரில்ருசியுடையாரும், உகந்தருளின நிலங்களைப்பற்றியிறே கிடப்பது; ( "ஸஹ்ருதஸஹஜநாஸ்யா:" ( அஹ்ருதஸஹஜதாஸ்யா: ) இத்யாதி ) ராமாவதாரத்திலு மொருலக்ஷ்மணாதிகள், வாநரத்வங்களை யடைந்தார்கள், விபீஷணாதிகள் பற்றிக்கிடந்தார்கள்; அதுபோலே. அதிலும் நடையாடித் திரிவார்க்குப்போகைக்கும் யோக்யதையுண்டிறே, அதுவுமில்லையிறே ஸ்த்தாவரங்களுக்கு. ஜநநாதப்ரஹ்மராயர் திருமுடிக் குறையிலே யொருமரம்வெட்டப்புக, அத்தை யெம்பார்கேட்டு "அல்லாளப்பெருமாளே, ஈஶ்வர விபூதியை யழிக்கப்பார்த்தாயோ" என்ன, இவர் சொல்லும் வார்த்தை கேட்கைக்காக "ஈஶ்வரவிபூதியல்லாதவிடமுண்டோ" என்ன, "அவைபோலன்றுகாணிவை; சார்வபௌமனான ராஜாவும் மஹிஷியுமாக முற்றூட்டாகக் குடநீர்வார்த்து ஆக்கும் சோலைபோலே, பெருமாளும் பெரியபிராட்டியாருங் கூடக் கைதொட்டாக்குமவைகாண்" என்றருளிச்செய்தார். உகந்தருளின நிலங்களிலே மெய்யே ப்ரதிபத்தி பண்ணினார்

க்கு அங்குள்ளவையெல்லா முத்தேஶ்யமாய்த்தோற்றுமிறே. கால்வாங்கி யல்லது நிற்கவொண்ணாத சம்ஸாரம் ததீயத்வாகாரத்தாலே யொருகாலு த்தேஶ்யமாகாநின்றதிறே. ப்ரமாணத்தில் பிறக்கும் ப்ரதிபத்திபோலன் றிறே கண்ணுக்கிலக்காஜலிருப்பது, முக்தரோபாதி ப்ரத்யக்ஷ ஸமாநமி றே ஆழ்வார்க்குத் ததீயத்வாகாரம். ப்ராமாணிகனுக் கிங்ஙனல்லது ப்ரதி பத்தி யில்லையிறே. நல்லான்பட்டர் ஸ்ரீபாதத்தை யாஶ்ரயித்து நெடுங் காலம்சேவித்து, பின்பு அந்திமதசையிலே பட்டரெழுந்தருளி, "என் னினைத்திருந்தாய்" என்ன, "'ஒருசர்வசக்தியுபகரிக்கும்போது இங்ங னே கனக்கவாகாதே யுபகரிக்குமது' என்று நினைத்திருந்தேன்" என்ன, "அதுவென், உன் தேசத்தைவிட்டு பந்துக்களைவிட்டு நெடுந்தூரம்போ ந்து இங்ஙனே நோவுபட்டுத் திருவடி சேரக்கிடந்தாயாகில் இங்குபகார மென்" என்ன, "தேசாந்தரத்திலே யிருந்து அப்ரஸித்தனாய் விழுந்து போகக்கடவ வென்னை இவ்வளவுமழைப்பித்து, உம்முடைய திருவடிக ளை யாஶ்ரயிக்கப்பண்ணி ருசியை விளைப்பித்து, இத்தேசத்திலே யும்மு டைய கண்வட்டத்திலே சரீரவியோகமுண்டாம்படி பண்ணினனே" எ ன்ன, "ஆனாலும், தானாகவபிமாநித்த சரீரம்போகாநிற்க நீ யிங்ஙன் நி னைத்திருந்ததென்கொண்டு" என்ன, "ப்ரமாணங்கொண்டுநினைத்திருந் தேன்" என்றான். கண்ணழிவற்ற வெளிச்சிறப்புடையார்க் கிங்ஙனேயி றேயிருப்பது. (தேனார்சோலைகள்சூழ்திருவல்லவாழுறையும்கோனை) இருவராய்க்கொண்டு பரிமாறவேண்டும் தேசத்திலே தனியே நின்றவர் கிடீர். (உறையும்) அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியா தொழி கை. (கோனையடியேன்) நாராயண சப்தத்திலும் ப்ரணவத்திலும் போலே. அவனைச்சொல்லும்போது தம்மையிட்டல்லதுசொல்லப்போ காது; தம்மைச் சொல்லும்போது மவனையிட்டல்லது சொல்லவொண் ணாது. கோனையென்றவிடம் - நாராயணசப்தார்த்தம், அடியேனென் றவிடம் - ப்ரணவார்த்தம். ப்ரணவம் - ஜீவப்ரதாநம், நாராயணசப்த ம் - ஈஶ்வரப்ரதாநம். அடிகூடுவதென்றுகொலோ வென்கிறவிடம்-சது ர்த்த்யர்த்தம்; என்றுகொலோ வென்று-ப்ரார்த்தநையோடே தலைக்கட் டுகிறதிறே. (கோனையடியேன்) நாயகன் திரோதாத்தநாயகன், இவ ள் தைர்யமழிந்தவள். (அடியேனடிகூடுவதென்றுகொலோ) ஸ்வரூபத் துக்கீடாக விபக்தியிலர்த்தத்தோடே தலைக்கட்டுகிறபடி. எல்லா வளவி லும் ஸ்வரூபமழியாதிறே. தாமாகவுமாம், பிராட்டிமார் தசையை ப்ரா ப்தராகவுமாம், அதுக்கு மவ்வருகே சில அவஸ்தைகளை யுடையராகவு மாம், சர்வகாலமும் ஸ்வரூபம் மாறாது; பிண்டத்வ கடத்வ கபாலத்வ சூர்ணத்வங்களாகிற அவஸ்த்தாந்தரங்களை பஜித்தாலும் ம்ருத்தானவாகா ரத்துக் கழிவில்லையிறே. தாமானதன்மையில் "அடிதொழுதெழு" என் பார்; பரோபதேசத்தில் "திண்கழல்சேர்" என்பார்; தூதுவிடப்புக்கா ல் "திருவடிக்கீழ்க்குற்றேவல்" என்பார்; பிறனைச் சொல்லப் புக்கால்

"தாட்பட்டதண்டுழாய்த்தாமம் காமுற்றுயே" என்பர்; கலங்கிமடலெடுக்கு மளவானாலும் "தலையில்வணங்கவுமாங்கொலோ" என்பர்; பித்தேறிச்சொல்லும்போதும் "கண்ணன்கழல்கள் விரும்புமே" என்னுதல், "ஏறியபித்தினேடெல்லாவுலகு கண்ணன்படைப்பு" என்னுதல் சொல்லுமித்தனை.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (மானேய்நோக்கித்யாதி) "திருவல்லவாழுறையும் கோனுரை யடியேனடிகூடுவதென்றுகொலோ" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தோழிமாரையித்யாதி)

"நோக்கு" என்றத்தை - கடாக்ஷ வாசகமாக்கி, தோழிமாருடைய நோக்கை வர்ணித்ததுக்கு பாவம் (நான்திருவல்லவாழிலேயித்யாதி) "நோக்கு" என்றதுக்கு - நேத்ரவாசகமாக வர்த்தாந்தரம் (பிரிவாற்றுமையாலேயித்யாதி) ஈக்ஷணசப்தம்போலே, "நோக்கு" என்கிறதும் - பார்வைக்கும் கண்ணுக்கும்வாசகமாயிருக்கும். கண்ணுக்கு வாசகமானபோது; மானானது பயத்தாலே கலங்கினகண்ணையுடைத்தாயிருக்குமாபோலே, என் துஃகம் கண்டு கலங்கின கண்ணையுடையவர்களென்று சப்தார்த்தம். பார்வைக்கு வாசகமானபோது; மானானது ஸ்நேஹமாகத் தன் பந்துக்களைப் பார்க்குமாபோலே, என்னையும் ஸ்நேஹமாக நோக்கவேணுமென்றுகக்கடவது. நிஷேதகார்யம் தோற்றும்படி யென்றது - நிஷேதத்தாலேவந்த வ்யஸநம் தோற்றும்படியென்கை. காதரேக்ஷணம் - மான்போல் பார்வை. நிஷேதியாதே தத்கார்யம் தோற்றும்படி யிருக்கிறவர்களை, அப்ரதிஷேதமாத்ரத்தாலே "நல்லீர்" என்று கொண்டாடக் கூடுமோவென்ன (இவள்தனக்கித்யாதி) ஶ்லோகார்த்தம் (இதந்த்வித்யாதி) "[Grantha text, illegible] ஜ்ஞாநம்விஜ்ஞாநஸஹிதம்யஜ்ஜ்ஞாத்வாமோக்ஷ்யஸே[illegible]"

(இதந்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே। ஜ்ஞாநம்விஜ்ஞாநஸஹிதம்யஜ்ஜ்ஞாத்வாமோக்ஷ்யஸேஶுபாத்) இதிகிதாயாம் நவமே. (அத்தலை) இத்யாதிவாக்யத்துக்கு தாத்பர்யம் - அதிகாரியான நீ குறையற்றபின்பு நான் வெறுமனே யிருப்பனோவென்று.

"வைகலும் - மெலிய" என்றதுக்கு பாவம் (ஒருகாலித்யாதி) விஷயாந்தரங்களைப் பிரிந்தவர்க ளாறியிருக்க வில்லையோ, அப்படி யிவரும் தரித்திருக்கவொண்ணுதோவென்ன (காலங்கழியவித்யாதி) அதாவது-விஷயாந்தரங்க ளல்பபோக்யங்களாகையாலே யவர்களுக்காறியிருக்கலாம், அங்ஙனன்றிக்கே நிரதிசயபோக்ய விஷயத்தை ஆதரிக்கையாலே யிவர்க்கு தரித்திருக்கப்போகா தென்றபடி. பின்னை யிவருடைய பக்தியிருக்கும்படி யென்னென்ன (மநஸித்யாதி) இது-இவருடையபக்தி. "சரீரவியோகம்பார்த்திருப்பார்கள்" என்றதுக்குப்ரமாணம். (தஸ்யமஇத்யாதி) ஶ்ருதியிலில்லாதத்தைக் கூட்டுகிறதுக்குபத்தி (அதஸம்பத்ஸ்யே இத்யாதி-) ஶ்ருதிக்கர்த்தம் (தாவதேவேத்யாதி) எவ்வளவென்ன (யாவந்நவிமோக்ஷ்யேயென்று) (அதாவது) இத்யாதிக்கு - பகவத்ப்ராப்தி பூர்வகமாக ஸ்வாசாதாரணகாரத்தை யடைகையென்றபடி. "[Grantha text, illegible]" (தஸ்யதாவதேவசிரம்யாவந்நவிமோக்ஷ்யே அதஸம்பத்ஸ்யே) இதிச. "[Grantha text, illegible]

ஏஷ ஸம்ப்ரஸாதோஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரஞ்ஜ்யோதி ரூபஸம்பத்ய ஸ்வேநரூபேணாபி நிஷ்பத்யதே " (ஏஷஸம்ப்ரஸாதோஸ்மாச்சரீராத் ஸமுத்தாயபரஞ்ஜ்யோதி ருபஸம்பத்ய ஸ்வேநரூபேணபி நிஷ்பத்யதே) இதிச, சாந்தோக்யே. இதென்றது - மெலிவு. இவள் நாள்தோறும் மெலிகிறதுக்கு, மேலே - பிராட்டி மெலிவை த்ருஷ்டாந்தீகரிப்பாராக வுபோத்காதம் (ஒருநாள்மெலியவித்யாதி) திருவடிகண்டுபோந்தவநந்தரமென்றது - லங்கையிலேபோந்து பிராட்டியைக்கண்டவநந்தரமென்றபடி. விஶ்லேஷதசையிலே பிராட்டி பட்டபடிக்கு ப்ரமாணம் (இமாமித்யாதி) " இமாமஸிதகேஶாந்தாம் ஶதபத்ரநிபேக்ஷணாம் । ஸுகார்ஹாம் து:கிதாம் த்ருஷ்ட்வா மமாபி வ்யதிதம் மந: " (இமாமஸிதகேஶாந்தாம் ஶதபத்ரநிபேக்ஷணாம் ஸுகார்ஹாம்து:கிதாம்த்ருஷ்ட்வா மமாபிவ்யதிதம்மந:) இதி ஸுந்தரகாண்டே. " அஸிதகேஶாந்தாம் " (அஸிதகேஶாந்தாம்) என்றதுக்குபாவம் (மைவண்ணமித்யாதி) கறுத்தவர்ணத்தையும் பரிமளத்தையுமுடைய திருக்குழலை யுடையவர்க்கென்றபடி. திருநெடுந்தாண்டகம் இருபத்தோராம்பாட்டு. பேணத்தகும்-ஆசைப்படத்தகும். சதபத்ரநிப மென்றது - தர்ஶநீயதையைப் பற்றவாதல், செய்தலாதல். (மடியிலேயிருக்க) என்றவிடத்திலே - " தவாங்கே ஸமுபாவிஶம் " (தவாங்கேஸமுபாவிஶம்) என்றத்தை நினைப்பது. " வினையேன் " என்றதுக்கு தாத்பர்யாந்தரம் (நாள்செல்லவித்யாதி)

" மெலிய - வானூர் " என்றுகூட்டியாதல், " மெலிய - கோனூர் " என்று கூட்டியாதல் பாவம் (இத்தலையித்யாதி) அத்தலையென்றது - தேசத்தையாதல், கோனையாதல். " மெலிய - வண்கமுகு " என்று கூட்டிபாவம் (அவ்வூரிலித்யாதி) " ஆர் " என்றதுக்கர்த்தம் (ஆகாசத்தையித்யாதி) கண் செறியிட்டாப்போலே - கபளீகரித்தாப்போலே. இவற்றை யிப்படி வர்ணிக்கைக்கு, தானிருக்கிறவிடமிப்படி யிருக்கவில்லையோவென்ன (இவளிருக்கிறவித்யாதி) அழகாவதேதென்ன (குலையார்ந்தவித்யாதி) ஒருகுலையிலே நிறைந்த பழுக்காயும், ஒருகுலையிலே பசுங்காயும், ஒருகுலையிலே நிறைந்த பாளைமுத்தும் தலைநிறைய வுடைய விளங்க முருகணையுடைய பெரியசோலையையுடைய திருநறையூரென்றபடி. திருமொழி ஆறும்பத்து ஒன்பதாந்திருமொழி எட்டாம்பாட்டு. * வண்மைக்கர்த்தாந்தரம் (கொடிதொடரவித்யாதி) சாடு (மெய்யேயித்யாதி) மெய்-சரீரமும், ஸத்யமும். மல்லிகையானது மதுவையுடைத்தாம்போது, புஷ்ப சம்ருத்தியுண்டானாலொழியக் கூடாமையாலே யருளிச்செய்கிறார் (மலட்டுக்கொடியித்யாதி) மதுவை நிரூபகமாகச் சொன்னதுக்கு பாவம் (பரப்பும்பூவாயிருக்கையென்றது) " மதுமல்லிகைகமழும் " என்றுவைத்து, " தேனார்சோலைகள் " என்று விசேஷித்ததுக்கு பாவம் (இதுக்குமுன்பித்யாதி) இதுக்குமுன்பு சொன்னவையெல்லாமென்றது - கமுகையும் மல்லிகையையும். " தேனார் " என்றத்தால் பலித்தபாவம் (வானார்வண்கமுகுகளித்யாதி) சோலையென்றது - கமுகஞ்சோலை. " மெலிய " என்றத்தை - " வானூர் " என்றத்தோடே கூட்டி யொருதாத்பர்யமருளிச்செய்து, இங்கே, " மெலிய - திருவல்லவாழுறையும் " என்று கூட்டி பாவம் (இருவருமித்யாதி) இந்த வாக்யம் - " இத்தலைமெலியமெலிய " இத்யாதிவாக்ய விவரணமாகக் கண்டுகொள்வது.

விஶ்லேஷ வ்யஸநத்தாலே நோவுபடுகிறவர் சோலையை வர்ணிப்பானென்னென்ன (இவரிவ்வாற்றாமையித்யாதி) அவனோபாதி போக்யமாயிருக்கையாலே வர்ணிக்கிறாரென்று - மேலருளிச்செய்து, நித்யஸூரிகளிவையாய்வந்து நிற்கையாது

மிச்சோலையை வர்ணிக்கிறுரென்று பாவாந்தரம் ( உபாஸ்யவஸ்துவித்யாதி ) ( உபாஸ்யவஸ்து - நிற்கிறுப்போலே ) என்றந்வயம். " கண்ணுக்கிலக்காகக்கொண்டு " என்றதின் விவரணம் ( ப்ராப்யனுனவித்யாதி ) ப்ரபத்திக்கடைத்த நில மர்ச்சாவதாரமாகையாலே ( உபாயபாவத்தில்நிலே ) என்கிருர். கீழ்வாக்ய விவரணம் ( நித்யப்ராப்யனுயித்யாதி ) நித்யசூரிகளிவையாய் நிற்கிறதுக்கு ப்ரமாணமாக, " அஹ்ருதஸஹஜதாஸ்யா: " ( அஹ்ருதஸஹஜதாஸ்யா: ) இத்யாதி ஶ்லோகத்தைவிவக்ஷித்து, அதுக்கர்த்தம் ( நித்யருமித்யாதி ) ஸ்ரஸ்தபந்தா: - முக்தா:. விமலசரமதேஹா: - பத்தரில் ருசியுடைய முமுக்ஷுக்களென்றபடி. " ஈஶ்வரனவதரித்தவிடத்திலே நித்யசூரிகள்முதலானு ரவதரிப்பர்கள் " என்றதுக் கறுஷ்டாநம் காட்டுகிருர் ( ராமாவதாரத்திலுமித்யாதி ) லக்ஷ்மணுதிகள் - நித்யர். வாநரத்வங்களையடைந்தார்கள் - தேவர்கள். விபீஷணுதிகள் - முமுக்ஷுக்கள். லக்ஷ்மணுதிகளைப்போலே யவதரியாதே ஸ்தாவரங்களா யவதரிப்பானென்னென்ன ( அதிலும் நடையாடியித்யாதி ) நித்யமுக்தாவதாரமாகையாலே உத்தேஶ்யமென்று - கீழருளிச்செய்து, பகவதபிமதமாகையாலு முத்தேஶ்யமென்று விவக்ஷித்து, அதுக்கைதிஹ்யம் ( ஜநகாதேத்யாதி ) திருமுடிக்குறை - பெருமாளுடைய சிரோபாகப்ரதேசமான வுபயகாவேரீ மத்யப்ரதேசம். அல்லாளப்பெருமாளேயென்று - ஜநகாதப்ரஹ்மராயனை ஸம்போதித்தபடி. முற்றூட்டாக - பூர்ணமாக. எல்லார்க்கு மிப்படி ப்ரதிபத்தி பிறவாமைக்கடியேதென்ன ( உகந்தருளினவித்யாதி ) ப்ரமாண மூலேந ( மெய்யே ப்ரதிபத்திவிளைந்தார்க்கு ) என்றபடி. " உத்தேஶ்யமாய்த்தோற்றும் " என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் ( கால்வாங்கியல்லதித்யாதி ) உக்தார்த்தத்வைத கைமுதிக ந்யாயத்தாலே பலிப்பிக்கிருர் ( கால்வாங்கியித்யாதி ) என்னுதல். ( உத்தேஶ்யமாகாநின்றதிறே ) முக்தர்க்கென்றபடி. ஆனுலிவர்க்கும் நமக்கும் வாசியேதென்ன ( ப்ரமாணத்திலித்யாதி ) அதாவது - நமக்கு ப்ரமாணங்கொண்டறியவேணும், அிவருக்கு ப்ரத்யக்ஷமாகத் தோற்றும்; ஆனபின்பு, ப்ரமாணஜந்யபரோக்ஷஜ்ஞாநத்தைப்பற்ற ஸாக்ஷாத்காரஜ்ஞாநம் வ்யாவ்ருத்தமென்றபடி. ப்ரமாணத்தாலே ப்ரதிபத்தி விளையக்கண்டவிடமுண்டோவென்ன; ஐதிஹ்யம் காட்டுவாராக வதிஷ்டிகை ( ப்ராமாணிகனுக்கித்யாதி ) அப்ரசித்தனுயென்றது - அவஸ்துவாயென்றபடி. " ஈஶ்வரஸ்ய ச ஸௌஹார்த்தம் " ( ஈஶ்வரஸ்யசஸௌஹார்த்தம் ) இத்யாதி ( ப்ரமாணங்கொண்டு நினைத்திருந்தேன் ) என்றபடி. " ஆசார்யாங்கீகாரத்தாலே மோக்ஷம் " என்று சொல்லுகிற ப்ரமாணந்தானே, " ஸ்வயத்நமூலமான பக்தியாலே மோக்ஷம் " என்று சொல்லுகையாலே, நிஶ்சயஜ்ஞாநம் பிறக்கமாட்டாதிறேயென்ன ( கண்ணழிவற்றவித்யாதி ) " இருவருங்கூட மதுபாநம்பண்ணிக்களிக்க " இத்யாதிவாக்யவிவரணம் ( இருவராய்க்கொண்டித்யாதி )

நாராயணசப்தம் - ஈஶ்வரவாசியாய், ப்ரணவம் - சேதநவாசியாயிருக்கையாலே, ( நாராயணசப்தத்திலும் ப்ரணவத்திலும்போலே ) என்கிருர். ஆனுல், ஈஶ்வரவாசகமான நாராயணசப்தம் - சேதநனையும், சேதநவாசகமான ப்ரணவம்-ஈஶ்வரனையுஞ் சொல்லுகிறதுக்குக் கருத்தேதென்ன; இவை ப்ரதியோகியைவிட்டிராமையாலே யென்கிருர் ( அவனைச்சொல்லும்போ தித்யாதி வாக்யத்வயத்தாலே ) " நாராயணசப்தத்திலும் ப்ரணவத்திலும் " என்றத்தைவிவரிக்கிருர் ( கோனுரையித்யாதி ) இது சதுர்த்யர்த்தமானபடி யென்னென்ன ( என்றுகொலோவித்யாதி ) நாயகியிருந்தவிடத்தே நாயகன்வந்து மேல்விழுகையொழிய, நாயகித்வரிக்கலாமோவென்ன ( நாயகனித்யாதி ) ப்ரணவார்த்தம் சொன்னவநந்தரம் சதுர்

த்யர்த்தம் சொல்லுவானென்னென்ன ( ஸ்வரூபத்துக்கித்யாதி ) சேஷத்வ ஸ்வரூபத்துக்கென்றபடி. வல்லையானவள், அவனை யணையவேணுமென்னாதே, "அடிசூடுவதென்றுகொலோ" என்பானென்னென்ன ( எல்லாவளவிலுமித்யாதி ) விவரணம் ( தாமாகவுமித்யாதி ) இதுக்கு த்ருஷ்டாந்தம் ( பிண்டத்வேத்யாதி ) "தாமாகவுமாம்" இத்யாதிவாக்யவிவரணம் ( தாமானதன்மையிலித்யாதி )

மானேய்நோக்கித்யாதி க்ரமேணாந்வயஃ. "மெலிய" என்றத்தை- * வானார்வண்கமுகோடே கூட்டுதல், "உறையும்கோனார்" என்றத்தோடே கூட்டுதல். அதாவது - மெலியும்படி வானார் வண்கமுகென்னுதல், மெலியும்படி திருவல்லவாழுறையும் கோனாரையென்னுதல். வண்கமுகும் மதுமல்லிகையும் பரிமளியா நிற்கிற, தேனார்சோலைகளென்று சப்தார்த்தம். "[illegible] ।[illegible]" ( நமாம்ஸம்ராகவோபுங்க்தே நசாபிமதுஸேவதே । வந்யம்ஸுவிஹிதம்நித்யம் பக்தமச்நாதிபஞ்சமம் ) இதிசுந்தரகாண்டே ஸீதாம்ப்ரதிமாருதிஃ. "[illegible]" ( அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ்ஸூரயஸ்ஸ்ரஸ்தபந்தாஃ விமலசரமதேஹா இத்யமீரங்கதாம । மஹிதமநுஜதிர்யக்ஸ்தாவரத்வாச்ச்ரயந்தே ஸுநியதமிதிஹஸ்மப்ராஹுரோப்யோசமஸ்தாத்" இதிஸ்ரீரங்கராஜஸ்தவே..................*

# இரண்டாம்பாட்டு.

என்றுகொலோதோழிமீர்காளெம்மைநீர்நலிந்தென்செய்தீரோ
பொன்திகழ்புன்னைமகிழ்புதுமாதவிமீதணவித்
தென்றல்மணங்கமழுந்திருவல்லவாழ்நகரு
ணின்றபிரானடிநீறடியோங்கொண்டுசூடுவதே.

## ஆறாயிரப்படி.

( என்றுகொல் ) என்ப்ரக்ருதியை யறிந்திருக்கிற நீங்களென்னை யாச்வஸிப்பியாதே நலிந்து என்ன ப்ரவ்ருத்தி பண்ணுகிறீர்கள். பொன்திகழ் புன்னைமகிழ் புதுமாதவிமேலே யணைந்து தென்றல்மணங்கமழும் திருவல்லவாழிலே நின்றருளின மஹோபகாரகனுடைய பாதரேணுவைச் சூடுவதென்றோ வென்கிறாள்..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிஷேதமுகத்தாலே தன்னை நலிகிறவர்கள் தங்களையேபார்த்து, புஷ்பவ்ருக்ஷஸம்ச்லேஷத்தாலே தென்றல் பரிமளத்தை ப்ரவஹிக்கிற திருவல்லவாழிலே நிற்கிற வுபகாரகனுடைய பாததூளியை சிரஸாவஹிப்பதென் றென்கி

தோழிமீர்காள் - சமானசுகதுஃகைகளான தோழிமீர்காள். எம்மை - என்னபிமதத்துக்கு உங்களைத் துணையாக நினைத்திருக்கிற வெம்மை. நலிந்து - நிஷேதித்து நலிந்து. உங்கள்பேற்றுக்குமிழவாம்படி, நீர் - நீங்கள். என் - என்னகாரியம். செய்தீர் - செய்கிறிகோள். பொன் - பொன்போலே. திகழ் - விளங்கினதாதுக்களையுடைத்தாயிருக்கிற. புன்னை - புன்னை. மகிழ் - மகிழ். புது - அபிநவமான. மாதவி - குருக்கத்தி. மீது - இவற்றின்மேலிற்பூவோடே. அணவி - அணைந்து. தென்றல் - தென்றலானது. மணம் - பரிமளத்தை. கமழும் - பரப்பாநிற்கிற. திருவல்லவாழ் - திருவல்லவாழாகிற. நகருள் - நகரத்துக்குள்ளே. நின்ற - நின்ற. பிரான்- உபகாரகனுடைய. அடிநீறு - அடிப்பொடியை. அடியோம் - அவன் சந்நிஹிதனானவுபகாரத்துக் கடியோமான நாம். கொண்டு - சேஷத்வாநுரூபமாக ஸ்வீகரித்து. சூடுவது - சிரஸாவஹிப்பது. என்றுகொல் - என்றோ.

எம்மையென்று - ஆத்மநிபஹுவசநம். அடியோமென்று - தோழிமாரையுங்கூட்டிக்கொள்ளுகிறாள்.................................................*

## ௬-இரண்டாம்பாட்டு.

நிஷேதிக்கிற தோழிமார்கள் தங்களையே, அவன் பாதரேணுவை நான் சூடுவதென்றென்கிறாள்.

( என்றுகொல்தோழிமீர்காள் ) "அநிமாத்ரப்ராவண்யமாகாது" என்று நிஷேதிக்கிறவர்களையே, தன் பேற்றுக்கு நாளவதியிட்டுத் தருமவர்களாகக் கேட்கிறாளிறே. அவர்கள் லோகாபவாதத்தைப் பற்றி நிஷேதிக்கிறார்கள்; இவள், தன்பேறு தங்கள்பேறாக நினைத்திருக்கு மைககண்டயத்தாலே கேட்கிறாள். தோழிமாரிறே - இவளுடைய லாபாலாபமேயிறே யவர்களுக்கும் பேறிழவு. ( தோழிமீர்காள் ) உங்களுக்கு நான் பெறும்நாளாராய்கையிலேயன்றோ அதிகாரம். ( தோழிமீர்காள் ) என் ப்ரக்ருதியை யறியு முங்களுக்கென் வழியே போகவேண்டாவோ. ( எம்மை ) உங்கள் கையாலும் காலாலும் துகையுண்கிறவென்னை. ( நீர்நலிந்து ) என்னுடைய வுஜ்ஜீவநமெண்ணுகையன்றோ வுங்களுக்கு யாத்ரை. அவ்வூரிலே புக்கல்லது தரிக்கமாட்டாத வென்னை. எனக்கு ப்ரியமேசெய்துபோந்த நீங்கள். ( என்செய்தீரோ ) உங்கள் ப்ரக்ருதிக் கிதுசேர்ந்ததோ, என் ப்ரக்ருதிக்குச் சேர்ந்ததோ. ( தோழிமீர்கா ளெம்மைநீர் நலிந்தென்செய்தீரோ ) உங்களுக்கவஶ்யம் நலியவேண்டிலுல் தென்றலையன்றோ நலிய வடுப்பது. என்னை மீளவொட்டாதே காற்கட்டாநிற்க, நான் மீளும்படியென்.

( பொன்றிகழித்யாதி ) நலிகைக்கவை யமையாதோ. கடிநப்ரக்ருதிகளா யிருப்பார் செய்வதை ம்ருதுப்ரக்ருதிகளாயிருக்கிற நீங்கள் செய்யவோ. ( பொன்றிகழ்புன்னைமகிழ் ) " புன்னைபொன்னேய்தாதுதிர்க்கும்" என்கிறபடியே, பொன்னோடொக்க ப்ரகாசிக்கிற புன்னை, அப்படியேயிருக்கிறமகிழ். ( புதுமாதவி ) அப்போதலர்ந்த குருக்கத்தி. ( மீதணவித்தென்றல்மணம்கமழும் ) இவற்றின்மேலே தென்றலானது வந்து

ணைந்து பரிமளத்தைக் கொண்டுபோந்து கமழாநின்றது. ( மீதணவி ) " ஆழவிழியில்பூவில்வெக்கைதட்டும் " என்று மேலே ஸ்பர்ஶித்து, அங்குள்ளதெல்லாம் கொண்டு போந்து கமழாநின்றது. " பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட: " ( பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட: ) என்னுமாபோலே – பூவில்கால்படாமே மேலெழுந்த பரிமளத்தைக்கொண்டு போருகை. அத்தலையிலுள்ளதடங்கக்கொண்டு, தந்தாமதொன்றும் கொடாதேபோருகை அந்நிலத்திலுள்ள பதார்த்தங்களுக்கெல்லாம் ஸ்வபாவங்கிடீர். ( பொன்றிகழ்புன்னைமகிழ் புதுமாதவிமீதணவித் தென்றல்மணங்கமழும் ) கலம்பகமல்லது சூடப்பொறுதஸுகுமாரரைப்போலேகாணும் தென்றலின்ஸ்வபாவம். செருக்கராயிருக்கும் ராஜபுத்ரர்கள் முலைசரிந்தாரை " போகயோக்யைகளன்று " என்று கழிக்குமாபோலே, கழியவலர்ந்தவற்றைக் கடாக்ஷியாதே போருகிறபடி. பூவில் பரிமளம் தேடுவாரைப்போலேகாணுமிதுபரிமளத்தில் கலம்பகம் தேடுகிறபடி. (தென்றல்மணங்கமழும்) கண்ணுக்குத்தோற்ற நின்று நலியாமையாலேகாணும் " நோவில்லை " என்றிருக்கிறது. இவர்களுக்கு லாபாலாப மொத்திருக்கச் செய்தேயும், ஹிதபுத்திவர்த்திக்கையாலே யிவை நெஞ்சிற்படாதிறே. " நீங்கள்தாங்களங்வயத்தில் கூடாவிட்டால் வ்யதிரேகத்திலும் கூடலாகாதோ" என்று காணுமிவள் நினைத்திருக்கிறது. இவர்களுக்குப் பேறிழவொத்திருந்தாலும், இவர்களிவள் தாளுகமாட்டார்களே, இவளுக்கே வருமவையிறே இவையெல்லாம். ( பொன்றிகழ்புன்னைமகிழென்று ) சக்ஷுரிந்த்ரியத்துக் காகர்ஷகமாயிருக்கிறபடி. ( தென்றல்மணங்கமழும் ) ஸ்பர்ஶேந்த்ரியத்துக்கும் க்ராணேந்த்ரியத்துக்கும். ( திருவல்லவாழ்நகருள்நின்றபிரான் ) அவனத்தனைவிடுவெதும் செய்திலன். நான் நோவுபடாநிற்க,இவ்வளவிலே ஸ்ரீவைகுண்டத்திலே யிருக்கை யன்றிக்கே, திருவல்லவாழிலே புகுந்து கிட்டவிருக்கு மிதுக்குமேற்பட வுபகாரமுண்டோ. " வஹ்நதஸ" ( பஹ்வேதத் ) என்னுமாபோலேகாணு மிவ்வளவி லாபீ்தவாசம். * ஏகாம்தரணிமாஶ்ரிதெள இறே. * வாஹிவாத என்று - இவர் கையாலே தொடவேண்டாதபடி யிடைச்சுவரான சடல்கிடந்ததே யாகிலும், ஒருபடுக்கையிலே யிருப்பாரைப்போலே அவளிருந்த பூமியிலே யிருக்கப்பெற்றோமே என்றாரிறே பெருமாள். காலைப்பிடித்து " நீயிப்படிசெய்யவேணும்" என்று வேண்டிக் கொள்ளுகிறாரிறே இவருடைய செல்லாமை. ( நின்றபிரானடிநீறடியோங்கொண்டுசூடுவது- என்றுகொல் ) பூவில்சுண்ணம் பெறுவதென்றோ. ( அடிநீறடியோங்கொண்டுசூடுவது-என்றுகொலோ) மயிர்கழுவிப் பூச்சூடவிருப்பாரைப்போலேகாணும். ( அடியோம் ) இப்போது பிரியநின்றார்களேயாகிலும் அங்வயத்திலநுபவமிவர்களுக்கு மொத்திருக்கிறபடி. அவன்வந்தாலு மிவளுக்குமுன்னே கொண்டாடுவ திவர்களையிறே. ( அடியோங்கொண்டுசூடுவது ) [யாவந்நசரணெளித்யாதி] ஸ்ரீபரதாழ்வானை, " பிள்ளாய், உன்னுள்வெ

துப்பாறுவதெப்போது" என்ன; பெருமாளும் தமக்கு வகுத்தமுடிசூடி, நானுமெனக்கு வகுத்தமுடிசூடி, இருவரும் முறைதப்பாதே கூடிருக்கின்றவன்றென்றான். (அவனவரிற்காட்டில் காற்கூறுவிஞ்சப்பெற்றான். "அவர் நாட்டுக்கு முடிசூடுகைக்கு லக்ஷண மவர்திருவடிகளிலே, எனக்கு சேஷத்வத்துக்கு லக்ஷணமென்றலையிலே" என்றான். அவருக்கடியிலே வகுத்துக்கிடக்கிறதிறே, இவனைப்போலே தலையோட்டில்பொறியன்றே. [மாலடிமுடிமேல் கோலமாம் குலசேகரன்] என்றானிறே - எனக்குமுடியிவையல்ல; மாலடி-சர்வேச்வரன்றிருவடி, எனக்குவகுத்தமுடி.) "கோலமாமென்சென்னிக் குன்கமலமன்னகுரைகழல்" என்றிருக்குமவரிறே...........................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (என்றுகொலித்யாதி) "அடிநீறடியோங்கொண்டுசூடுவது - என்றுகொல்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நிஷேதிக்கிறவித்யாதி)

(அதிமாத்ரேத்யாதி) முதல்வாக்யம்-சங்கையிலேயாய், மேலிரண்டுவாக்யமும்-அதுக்குபரிஹாரமாயிருக்கிறது. (கேட்கிறாளிறே) என்றவநந்தரம், இதுக்குக் கருத்தேதென்னிலென்று சங்கையைப்பூரித்துக்கொள்வது. மேல்-அவர்கள் நிஷேதிக்கிறதுக்கும், இவள்கேட்கிறதுக்கும் ஹேதுவையருளிச்செய்கிறார் (அவர்களித்யாதி வாக்யத்வயத்தாலே) லோகாபவாதத்தைப்பற்றி நிஷேதிக்கிறார்களென்றது - "லோகாபவாதம்கண்டுமீளுவளோ!, இவ்விஷயத்திலேயுறைக்க ப்ரவணையாயிருப்பளோ!" என்று பரீக்ஷார்த்தமாக நிஷேதிக்கிறார்களென்றபடி. அவர்களுக்கு ஐககண்ட்யமுண்டோவென்ன (தோழிமாரிறேயென்று) "தோழிமாரிறே" என்றதின்விவரணம் (இவளுடையவித்யாதி) "தோழிமீர்காள் - என்றுகொல்" என்றுகூட்டிபாவம் (உங்களுக்கித்யாதி) "நலிந்தென்செய்தீரோ" என்றதுக்குபாவம் (என்ப்ரக்ருதியையித்யாதி) உங்கள் கையாலும் காலாலும் துகையுண்கிறவென்னையென்றது - உங்கள் ஹிதவசநத்தாலும் தென்றலாலும் பாதைப்படுகிறவென்னையென்றபடி. கால் - காற்று. "தென்றல்" என்றத்தைக்கடாக்ஷித்து (காலாலுமென்றது) உங்கள் ப்ரக்ருதிக்கென்றது - ப்ரியபரைகளானவுங்கள் ப்ரக்ருதிக்கென்றபடி. "எம்மை" என்றதுக்குபாவார்த்தரம் (உங்களுக்கவஶ்யமித்யாதி) ப்ரவர்த்திக்கிறவுன்னைநலியாமல், தென்றலைநலிவானென்னென்ன (என்னைமீளவித்யாதி) காற்கட்டாநிற்கவென்றது - சாடு; காற்று பாதியாநிற்கவென்றபடி. பந்தகமாகாநிற்கவென்று சாடு.

அவையென்றது - புன்னைமகிழ்மாதவிகளை. அவற்றுக்கொழிய வெங்களுக்கு நலியலாகாதோவென்ன (கடிநேத்யாதி) கடிநப்ரக்ருதிகளென்றது - மரங்களாகையாலே. (புன்னைபொன்னேய்தாதுதிர்க்கும்) புன்னையானது பொன்னையொத்த தாதுகளை யுதிராநிற்கு மிதி சப்தார்த்தஃ. திருமொழி. கமழாநின்றது - வ்யாபியாநின்றது. கமழுகை - பரம்புகையும், பரிமளிக்கையும், வ்யாபிக்கையும். வெக்கைதட்டாமல் மேலே ஸ்பர்சித்ததுக்குப்ரமாணம் (பத்மகேஸரேத்யாதி) "பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டோ வ்ருக்ஷாந்தரவிநிஸ்ருதஃ । நிஃச்வாஸ இவ ஸீதாயா வாதி வாயுர் மநோஹரஃ" (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டோ வ்ருக்ஷாந்தரவிநிஸ்

ருத: । [illegible] ) இதி கிஷ்கிந்தாகாண்டே. கேஸரங்களிலே மேலே ஸ்பர்ஸித்துவந்தாப்போலே, இத்தென்றலும்மீதணவிவந்த தென்றபடி. "[illegible]" (ஸம்ஸ்ருஷ்ட:) என்றதுக்கர்த்தம் (மேலெழுந்த பரிமளத்தையென்று) "மணங்கமழும்" என்றதுக்கு பாவம் (அத்தலையிலித்யாதி) பலவ்ருக்ஷங்களைச் சொன்னதுக்கு பாவம் (கலம்பகமித்யாதி) கலம்பகம்-நாநாபுஷ்பங்களால் தொடுத்தது. "புது" என்றதுக்கு பாவம் (செருக்கராயித்யாதி) "புன்னை" இத்யாதியின் "மணங்கமழும் என்றதுக்குபாவம்" (பூவிலித்யாதி) (பரிமளத்தில் கலம்பகம்) நாநாபரிமள ஸமுதாயம். எங்களுக்கு நலியக்காண்கிறோமில்லையென்ன (கண்ணுக்கித்யாதி) கண்ணுக்குத் தோற்றாவிடிலும், க்ராணேந்த்ரியத்துக்கு விஷயமாய் பாதகமாகாதோவென்ன (இவர்களுக்கித்யாதி) ஹிதபுத்திவர்த்திக்கையாலே தென்றலால் வந்தபாதை நெஞ்சிற்படாதே யிருக்கிறவர்கள் தனக்குக் கூட்டாவர்களோவென்ன (நீங்களித்யாதி) தென்றல் பாதகமாகாமைக்கு ஹேத்வந்தரம் (இவர்களுக்குப்பெறித்யாதிவாக்யத்வயம்) அதாவது - ஸம்ஸ்லேஷவிஸ்லேஷப்ரயுக்த ஸுகதுக்கப்ராதாந்யமிவருக்கேயாய்,இவளையிட்டு வருமவையிறே தோழிமார்க்கென்றபடி. இவையெல்லாமென்றது-ஸுகது:கங்களை.

விஸ்லேஷித்திருக்கிறவனை - "பிரான்" என்கிறதென்னென்ன; தானிருந்த பூமியிலே யவனிருக்கையால் வந்தவாஸவாஸங்கொண்டென்கிறார் (அவனத்தனையித்யாதிவாக்யத்வயத்தாலே) ஸம்ஸ்லேஷமின்றிக்கேயிருக்க, இம்மாத்ரத்தையுபகாரமாகக் கொள்ளலாமோவென்ன; பெருமான் பிராட்டியைப் பிரிந்திருக்கச்செய்தேயும் தாமிருந்தபூமியிலே யவளிருக்கை யடியாக வாஸவஸித்தாப்போலேயென்கிறார் (பஹுவேஷத்தித்யாதி) "[illegible]," (பஹுவேதத்காமயாநஸ்ய [illegible] தரணிமாஸ்ரிதா,) "[illegible]" (வாஹிவாதயத:காந்தாதாம் ஸ்ப்ருஷ்ட்வாமாமபிஸ்ப்ருஸ । த்வயிமே காத்ரஸம்ஸ்பர்ஸஸ்சந்த்ரே த்ருஷ்டிஸமாகம: ) இதி யுத்தகாண்டே. அஹம், [illegible] காம்தரணிமாஸ்ரிதா விதியத்; ஏதத், காமயாநஸ்யமேபஹு, [illegible] யித்யர்த்த:. "[illegible]" (ஏதத்பஹு) என்றதென்ன ([illegible] யித்யாதி) இதுக்கர்த்தம் (வாஹீத்யாதி) "வாஹிவாத" ([illegible]) என்கிறதுக்கு ரசோக்தி (காலைப்பிடித்தித்யாதி) காலை - காற்றையென்று ஸ்வபாவார்த்தம். இவ்வாக்யத்துக்குபாவம்-இரக்கும்போதும் சேதநனையிரவாதே யசேதநத்தையிரக்கிறது தன்னுற்றுமையி னதிசயமிறேயென்று.

"அடிநீறு" என்றதுக்குபாவம் (பூவிற்சுண்ணமித்யாதி) "அடிநீறடியோங்கொண்டுசூடுவது - என்றுகொல்" என்றந்வயம். "சூடுவது" என்றதுக்குபாவம் (மயிர்கழுவியித்யாதி) நிஷேதிக்கிறவர்களையுங்கூட்டிக்கொண்டு - "அடியோம்" என்கிறதென்னென்ன (இப்போதித்யாதி) தோழிமார்க்கநுபவமுண்டோவென்ன (அவன்வந்தாலுமித்யாதி) இப்படிப்ரார்த்திக்கப்பெருண்டோவென்ன (யாவந்நசரணவித்யாதி) இவர்தாமிப்படியிருப்பரோவென்ன (கோலமாமித்யாதி)

தோழிமீர்காளென்று தொடங்கி, சூடுவது - என்றுகொலோவென்றன்வயம். அடியும் முணியும் கூடியிருக்கிறதுக்கு "விற்பூட்டு" என்றுதமிழர்சொல்லுவர்கள்*

---

# மூன்றாம்பாட்டு.

---

சூடுமலர்க்குழலீர்துயராட்டியேனைமெலியப்
பாடுநல்வேதவொலிபரவைத்திரைபோன்முழங்க
மாடுயர்ந்தோமப்புகைகமழுந்தண்டிருவல்லவாழ்
நீடுறைகின்றபிரான்கழல்காண்டுங்கொனிச்சலுமே.

## ஆறாயிரப்படி.

( சூடுமலர் ) "நாங்கள்நோவுபடி லிவள்மிகவும்நோவுபடும்" என்று தரிப்புத்தோற்ற வொப்பித்திருக்கிற வுங்கள்சந்நிதியு மென்னைநலியாநின்றது. பண்டே துஃகப்படுகிற நான் மெலியும்படி பாடாநின்றுள்ள சர்மவேதத்வநி கடலில் திரைபோலேமுழங்க, பார்ப்பவங்களில் யாகங்களிலே யுயரவெழாநின்றுள்ள ஹோமதூமம் நாறுவதும் செய்ய நிரதிசயபோக்யமான திருவல்லவாழிலே, எத்தனையேனும் பிற்பட்டார்க்குமநுபவிக்கலாம்படி நித்யமாக வர்த்திக்கிற மஹோபகாரகனுடைய திருவடிகளை யென்று காணவல்லோமென்கிறாள்..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வேதகோஷமும் வைதிக க்ரியாதூமமும் மாறாத திருவல்லவாழிலே நித்யவாசம்பண்ணுகிற நிரந்தரோபகாரத்தைப் பண்ணுமவன் திருவடிகளை நித்யாநுபவம் பண்ணக்கூடுமோ வென்கிறாள்.

சூடு - சூடப்பட்ட. மலர் - மலராயுடைத்தான. குழலீர் - மயிர்முடியையுடையீரானவர்களே. துயராட்டியேனை - விப்லேஷத்துஃகிதையானவென்னை. மெலிய - மெலியும்படியாக. பாடு - பாடப்படுவதாய். நல் - "ஸாமவேதோஸ்மி" (ஸாமவேதோஸ்மி) என்று அநுஸந்திக்கிற சர்வேஶ்வரனுக்குத் திருமேனியோபாதியாம்படி நன்மையையுடைய. வேதவொலி-ஸாமவேதத்வநியானது. பரவை-ஸமுத்ரத்தினுடைய. திரைபோல் - திரைக்கிளப்பம்போலே. முழங்க - முழங்காநிற்க. மாடு - பரிசரங்களிலே. உயர்ந்து - யாகங்களிலே கிளம்பி. ஓமப்புகை-ஹோமதூமமானது. கமழும் - ஹவிர்கந்தத்தைப்பரப்புவதாய். தண் - ஶிரமஹரமான. திருவல்லவாழ் - திருவல்லவாழிலே. நீடுறைகின்ற - நிரந்தரவாசம்பண்ணுகிற. பிரான் - மஹோபகாரகன். கழல் - திருவடிகளை. நிச்சலுங்காண்டுங்கொல் - நித்யாநுபவம்பண்ணக்கூடுமோ. ..............................................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

தோழிமாரைப்பார்த்து, நானவனை நித்யாநுபவம் பண்ணப் பெறும் நாளென்றென்கிறாள்.

(சூடுமலர்க்குழலீர்) "உங்களைச் சூடுமலர்க் குழலாராக நான் காண்பதென்றோ" என்று பிள்ளான். அதாவது - இவள்பூவுக்கிறுய்க்க, அவர்கள் பூச்சூடியிரார்களிறே என்றுயிற்றபிப்ராயம். அங்ஙனன்றிக்கே, அவன் தான் வந்து இவள்பக்கல் பாவபந்தமுறைக்க வுறைக்கக் கொண்டாடுவதிவர்களை யாகையாலே, பெரியதிருநாள்சேவித்தார் இரட்டைகளழுக்கானாலும் மடிகுலையாமை வைக்குமாபோலே, இவர்களும் அவன் கொடுத்தமாலையிற் செவ்வி யழிந்ததேயாகிலும் மாறுதே வைத்துக்கொண்டிருப்பர்களிறே; அதிவளுக்கு ஸ்மாரகமாய் நலியாநின்றது. தென்றலுக்குப் பிழைக்கிலும் இவர்களுடைய தர்ஶநத்துக்குப் பிழைக்கப்போகிறதில்லை. கூறலொருகையும் மயிரொரு கையுமாகப் பிடித்து நலிகிறது காணும். அவன்றான் வந்தாலும் இவளுக்கு முன்னே விரும்புவது இவள்சம்பந்தமுடையவர்களையிறே. [தத்ரகாஷாயிண:] [தத்ரகாஷாயிண:] தந்தாமைப் பேணுமவர்களல்லாமையாலே அழுக்குச்சட்டையும் தாங்களுமாயிறே யிருப்பது. [வ்ருத்தாந] [வ்ருத்தான்] தொண்ணூற்றஞ்சுவயஸ்ஸுக்கு மேலாய் விநயாகாராயிருப்பாரையிறே அந்த:புரங்களுக்குவைப்பது. [வேத்ரபாணீந] [வேத்ரபாணின்] பெருமாள் விற்பிடித்தாப்போலே அவர்கள் பிரம்புபிடித்தபடி. விற்பிடித்து ரக்ஷகராயிருப்பாரும் பிரம்புபிடித்து ரக்ஷகராயிருப்பாருங்காணும். [ஸ்வலங்க்ருதாந] [ஸ்வலங்க்ருதான்] பேணுத பரிவட்டங்களையுடையராய் வ்ருத்தருமாயிருந்தார்களாகில் இவர்களுக் கலங்காரமாவதென்னென்னில்; பெருமாள் சக்ரவர்த்திமாளிகையிலே போய்த் திருமஞ்சநம்பண்ணி யமுதுசெய்துமீண்டு திவ்யாந்த:புரத்திலே யெழுந்தருளும்போது, சக்ரவர்த்திபோபாதி, பழையராகையாலும் தங்கள் பரிவாலுமாக இவனை மடியிலே வைத்தணைத்து உச்சியை மோந்துவிடுவர்கள்; அத்தாலே குங்குமக்குழம்பும் கோயிற்சாந்துமாயிருப்பர்கள். பெருமாளுடையவும் பிராட்டியுடையவு மொப்பனைபோலன்றிவர்களொப்பனை. அப்படியே யிவர்களும் (சூடுமலர்க்குழலீர்) என்னும்படியா யிருக்கிறபடி. (துயராட்டியேனை மெலியப்புகல்வேதவொலி) எனக்குத் துயரைவிளைக்கைக் கித்தனைபோக்கி, ப்ராஹ்மணர் வேண்டிச் செய்கிறார்களன்றே. ப்ராஹ்மணராகில் தார்மிகராயிருக்கவேண்டாவோ, ஸ்த்ரீவதம்பண்ணலாமோ. (துயராட்டியேனை) நலிவார்க்காப்ரயம் வேண்டாவோ. நலிகைக்குத் தென்றலேயமையாதோ. திருவடி மஹாராஜத்திலே சென்று பிராட்டியைக்கண்டு சிலவார்த்தை விண்ணப்பம்செய்ய, அவளிவனை "இன்னான்" என்றறுதியிடமாட்டாதே; "முன்பு சந்யாசிவேஷங்கொண்டு அவர்பக்கல் நின்றும் பிரித்தாய், இப்போது வாநரவேஷங்கொண்டு சிலவார்த்தைகளைச்சொல்லி நலியாநின்றாய், இவையெல்லாமுனக்காகாதுகாண்," [ஸந்தாபம்ஜநயஸி] [ஸந்தாபம்ஜநயஸோபமம்] வாராய், நீயு மு

ன்னையுகந்தாரைப் பிரிந்து நோவுபடுவுதிகிடாய். ( மெலியப்பாடும் ) க ர்த்தவ்யமானாலும் சிலர்க்கு நலிவானால் தவிர வேண்டாவோ. எல்லாவ ளவிலு மிவர்க்கு வேதத்திற்கிடக்கிற ப்ராவண்யம் பாரீர், முதல்வார்த் தைதான் * உளன்சுடர்மிகு சுருதியுளிறே. அதாவது - "ஸவெ-ஃவெடா யதூ ஊஊஉநதி" ( ஸர்வேவேதாயத்பதமாமநந்தி ) "ஸவெ-ஃவெடாய ெஒஹ்ரு கஂஹவதி" ( ஸர்வேவேதாயத்ரைகம்பவந்தி ) "வெஸெஷஸ ெவெ-ஃாஹெவெவெஷ்ய:" ( வேதைப்பசஸர்வைரஹமேவவேத்ய: ) என்றிறே ப்ரமாணங்கள். (மெலியப்பாடும்) அவர்களெல்லாம் சமைந்தா லல்லது குருகுலாந்நிவ்ருத்தராகார்களிறே; இவள் தனக்கு, வேதகோ ஷத்தைக்கேட்டவாறே, நாயகன்பேர்வைத்துப் புணர்த்த புணர்ப்புக்கே ட்டாற்போலேகானு மஸஹ்யமாயிருக்கிறபடி. இருவருங் கூடவிருந்து கேட்கக்கடவதைத் தனியிருந்து கேட்கப்புக்கால் பொறுக்க வொண்ணா திறே. அவன்பேர்வைத்துப் புணர்த்தாலும் "ஸீதாயாஶ்சரிதஂமஹத்" ( ஸீதாயாப்சரிதம்மஹத் ) என்றிறே புணர்ப்புந்தானிருப்பது. இனித் தான், "ஹ்ரீஶ்சதெ லக்ஷ்மீஶ்சபத்நௌ," ( ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீப்ச பத்நௌ,) "ஈஶ்வரீஂஸர்வபூதாநாஂ," ( ஈப்வரீம்ஸர்வபூதாநாம்,) "அஸ்யேஶாநாஜகதோவிஷ்ணுபத்நீ" ( அஸ்யேஶாநாஜகதோவிஷ்ணு பத்நீ) என்றிவையிறே யவள் விரும்பிக்கேட்பது. (பாடுநல்வேதவொலி) ஈப்வரனைப்பாடுகிற பழம்புணர்ப்பானவேதமென்றுதல், காநத்தையுடை த்தான சாமவேதமென்னுதல். ( நல்வேதம் ) "உளன்சுடர்மிகுசுருதி யுள்" என்று, ப்ரமாணாந்தரங்களிலுத்கர்ஷமாதல்; "வேதாநாஂஸாம வேதோஸ்மி" ( வேதாநாம்ஸாமவேதோஸ்மி ) என்கிற வுத்கர்ஷமாத ல். ஸ்வரத்திலே வைகல்யமுண்டாதல், "வேதாநாஂஸாமவேதோஸ்மி" ( வேதாநாம்ஸாமவேதோஸ்மி ) என்கிறபடியே அந்தரங்கமான வேதம ன்றிக்கே யொழிதல் தான்செய்ததாகில், நாருதியிருக்கலாயிற்றே. (வே தவொலிபரவைத் திரைபோல் முழங்க) ஓதங்கிளர்ந்த கடல்போலேகா னும் ஸாமத்வநியிருக்கிறபடி. ( முழங்க ) அதில் பர்வமொழிந்தநாள்க ளும் பகலு மாறியிருக்கலாமிறே. ( மாடுயர்ந்தோமப்புகைகமழும் ) ஓத் துச்சொல்லிச் சொல்லாதவிடமெல்லாம் வைதிக க்ரியைகளேயாய்க்கிட க்குமித்தனை. மாடு - பர்யந்தம். ( உயர்ந்தோமப்புகைகமழும் ) ஆகாச மடங்கலு மிடமடைத்து, வைமாநிகரை முகம்பார்த் தநுபவிக்கவொட் டாதபடியெழாநின்றது. (மாடுயர்ந்தோமப்புகைகமழும்) "கர்மணைவ ஹிஸஂஸித்திமாஸ்திதாஜநகாதய:" ( கர்மணைவஹிஸம்ஸித்தி மாஸ்தி தாஜநகாதய: ) என்கிறபடியே ஜ்ஞாநத்தில் தலைநின்றவர்களிறே; இனிப் பலாபிஸந்திபண்ணி யநுஷ்டித்துப் பலவ்யாப்தமானவாறே மீளுமவர் களன்றே, (கமழும்) ஹோமதூமமும், ஹவிஸ்ஸுக் கொள்ளவந்துதிற்

கிற எம்பெருமானுடைய மாளிகைச் சாந்துமாகக்கமழுகிறபடி. (திருவல்லவாழ்நீடுறைகின்றபிரான்) அவதாரம்போலே தீர்த்தம் ப்ரசாதியாதே பிற்பாடர்க்குதவும்படி பரமஹமான திருவல்லவாழிலே நித்யவாசம்பண்ணுகிறவுபகாரகன். (கழல்காண்டுங்கொல்நிச்சலுமே) அவனிங்கே நித்யவாசம்பண்ணாநின்றால், நாமும் நித்யவாசம்பண்ணும்தேசத்தில்போய்ப் பெறக்கடவபேற்றைப் பெறவல்லோமே. அங்கும்போனால் * ஸதாபச்யந்தியிறே.............................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (சூடி த்யாதி) "நீடுறைகின்றபிரான் கழல்காண்டுங்கொல் நிச்சலும்" என்றத்தைப்பற்றவவதாரிகை (தோழிமாரையித்யாதி)

சூடு மலர்க்குழலாரானமை வர்த்தமானமாக சப்தமிருக்க, பவிஷ்யத்தாக நிர்வஹிப்பானென்னென்ன (அநாவதித்யாதி) வர்த்தமானமாக வர்த்தாந்தரம் (அங்ஙனன்றிக்கேயித்யாதி) "மலர்க்குழலீர்" என்று நிரூபகமாகச்சொன்னதுக்கு பாவம் (தென்றலுக்கித்யாதி) சாடுவுக்தி, காலென்றும்-கீழ்ப்பாட்டிற்சொன்னதென்றலே. மேலொருசம்வாதம் காட்டுவாராக அர்த்தத்தையநுவதிக்கிறார் (அவன்றான்வந்தாலுமித்யாதி) உக்தார்த்தத்துக்குப்ரமாணம் (தத்ரேத்யாதி) "தத்ர காஷாயிணோ வ்ருத்தாந் வேத்ரபாணீந் ஸ்வலங்க்ருதாந் | ததர்ஸ விஷ்டாந் த்வாரிஸ்தாந் ப்ரத்யக்ஷாந் ஸமாஹிதாந்" (தத்ர காஷாயிணோ வ்ருத்தாந்வேத்ரபாணீந்ஸ்வலங்க்ருதாந் | ததர்ஸவிஷ்டாந் த்வாரிஸ்தாந் ப்ரத்யக்ஷாந்ஸமாஹிதாந்) இத்யயோத்யாகாண்டே. இந்தப்ரலோகத்தில், "ஸ்வலங்க்ருதாந்" (ஸ்வலங்க்ருதாந்) என்றபதமிங்குவேண்டுவது. இப்படியிருக்கிறதுக்கென்ன (விற்பிடித்தித்யாதி) தந்திருமாளிகையிருக்க, (சக்ரவர்த்திமாளிகையிலே-அமுதுசெய்து) என்கிறதுக்குநியாமகமேதென்ன; "ஆடியமுதுசெய்யப்பனுமுண்டிலன்" இத்யாதியுண்டென்றுகண்டுகொள்வது. "ஸ" என்றதுக்கர்த்தம் (பெருமாளுடையவித்யாதி)

"மெலியப்பாடும்" என்றதுக்குபாவம் (எனக்கித்யாதி) "மெலியப்பாடும்" என்றதுக்குஹார்த்தபாவம் (ப்ராஹ்மணராகிலித்யாதி வாக்யத்வயமும்) "ஆயராட்டியேனை" என்றதுக்குபாவம் (நபவார்க்கித்யாதிவாக்யத்வயமும்) அயர்-துக்கம். இரண்டாலும் நலிவுபடுமதுக்குத்ருஷ்டாந்தம் (இருவடியித்யாதி) "ஸந்தாபம் ஜநயந் மோஹநம்" (ஸந்தாபம்தந்நமோஹநம்) என்றதுக்கர்த்தம் (வாராயித்யாதி) "ஸ்வம் பரித்யஜ்ய ரூபம் ய: பரிவ்ராஜகரூபவாந் | ஜநஸ்தாநே மயா த்ருஷ்டஸ் த்வம் ஸ ஏவ ஹி ராவண: | உபவாஸக்ருஸாம் தீநாம் காமரூப நிஸாசர | ஸந்தாபயஸி மாம் பூயஸ் ஸந்தாபம் தந்ந ஸோபநம்" (ஸ்வம்பரித்யஜ்யரூபம்ய: பரிவ்ராஜகரூபவாந்|ஜநஸ்த்தாநேமயாத்ருஷ்டஸ்த்வம்ஸஏவாஹிராவண: | உபவாஸக்ருஸாம்தீநாம்காமரூபநிஸாசர | ஸந்தாபயஸிமாம்பூயஸ்ஸந்தாபம் தந்நஸோபநம்) இதிஸுந்தரகாண்டே ராவணபுத்த்யாஹநூமந்தம் ப்ரதிஸீதா. "ஸ்வாத்யாயோ(அ)த்யேதவ்ய:" (ஸ்வாத்யாயோ(அ)த்யேதவ்ய:) என்றுவிதிக்கைகயாலே கர்த்தவ்யமானத்தைத்தவிரப்போமோவென்ன (கர்த்தவ்யமானாலுமித்யாதி) பிராட்டியானவவஸ்த்தையிலும் வேதத்தை ப்ரசங்கிக்கிற சுக்திபை யநுசந்தித்து வ்யாக்யாதாவினீடுபாடு (எல்லாவளவிலுமித்யாதி) எல்லாவளவிலுமென்ற

து-தாமானதன்மையோடு பிராட்டியானதன்மையோடுவாசியற சர்வாவஸ்த்தையி லுமென்றபடி. "எல்லாவளவிலும்" என்கைக்கு,தாமானதன்மையிலேவேதத்தைப்ர சங்கித்தவிடமுண்டோவென்ன (முதல்வார்த்தையித்யாதி) உத்தரபாகமன்றோவிவ ளைச்சொல்லுவது, மற்றுள்ளவிடமெல்லா மிவளைச்சொல்லாதேயென்ன(அதாவதி த்யாதி) யத்பதமென்றது-யாதொருத்தனுடைய ஸ்வரூபமென்றபடி. பத்யத இதிபத ம்-ஸ்வரூபமித்யர்த்த꞉. "ஸவெ-ுவெதா꞉" (ஸர்வேவேதா꞉) இத்யாதி கடவல்லி யாம். "வெடைஶ்வஸவெரஹமெவவெத்ய꞉" (வேதைஶ்சஸர்வைரஹமே வவேத்ய꞉)இத்யாதி, கீதாயாம். "பாடும்" என்கிறவர்த்தமானத்துக்கர்த்தம். (அவர்க ளெல்லாமித்யாதி) இவளுக்குவேதம் பாதகமாகிறதெப்படியென்ன (இவள்தனக்கி த்யாதி ) நாயகன் புணர்ப்புகேட்டால் நல்லதன்றோ, பாதகமாமோவென்ன (இரு வருமித்யாதி ) ஈஶ்வரனுக்குத் தன் புணர்ப்பு கேட்கலாமோவென்ன ( அவன்பே ரித்யாதி ஆனாலிருவர் புணர்ப்பும் சமமாகக்கேட்குமோவென்ன (இனித்தானித்யா தி ) புணர்ப்பு - ப்ரபந்தம். ஸ்வரத்தோடேகூடப் பாடாநின்றுள்ள ஸாமவேதத்தி னுடைய கோஷமென்று சப்தார்த்தம். " பாடும் " என்கையாலே - ஸ்வரவைகல் யமில்லையென்றபடி. நல்வேதம்-ஸாமவேதம். இதுக்கு ஹார்த்தபாவம் ( ஸ்வரத்தி லேயித்யாதி ) " திரைபோடேகூடின - பரவையொலிபோலே - பாடுநல்வேத வொலி - முழங்க " என்றந்வயித்தர்த்தம் ( ஓதம்கிளர்ந்தவித்யாதி ) சமுத்ரகோ ஷத்துக்கு காலவிச்சேதமுண்டு, இதுக்கதுதானு மில்லையென்கிறார் (அகிலித்யாதி) இது - " முழங்கும் " என்கிற வர்த்தமானத்துக்கர்த்தம். அதில் - சமுத்ர கோஷத் திலென்றபடி. ஆனால், அநத்யயநங்களிலே ஓதலாமோவென்னில் ; தர்ஶபூர்ணமா சங்களிலும் யஜ்ஞக்ரியாசேஷமானவை சொல்லலாமென்றபடி.

" மாடு " என்றதுக்கர்த்தம் ( ஒத்துச்சொல்லி யித்யாதி ) பலம் சித்தமா னால் கர்மாநுஷ்டாநாந் நிவ்ருத்தமாகாதோ, " கமழும் " என்று - வர்த்தமா நமாகச் சொல்லுவானென்னென்ன ; ஆநுகாமிகமாகையாலே பலாபிசந்தி யில்லை யென்கிறார் ( கர்மணைவஹீத்யாதி வாக்யத்வயத்தாலே ) சப்தார்த்தம் ( ஹோமது மமுமித்யாதி ) எம்பெருமானுடைய மாளிகைச்சாந்தென்றது - ஹார்த்தபாவம்.

" நிச்சலும் - கழல்காண்டுங்கொல் " என்றதுக்கு பாவம் ( அவனிங்கேயி த்யாதி ) காண்கிறமாத்ரம்போருமோவென்ன ( அங்கும்போனாலித்யாதி )

கீழ்ப்பாட்டு - " ௨ீயசூ-ுயசூராநசமஷிஷ்யதி " ( மதீயமூர்த்தாநமல ங்கரிஷ்யதி ) என்றதினர்த்தம்; இப்பாட்டு - " கதாநுஸாக்ஷாத்கரவாணிவ க்ஷஷா " ( கதாநுஸாக்ஷாத்கரவாணிசக்ஷுஷா ) என்றதினர்த்தம். " காவ்யம் ராமாயணங்க்ருத்ஸ்நம் ஸீதாயாஶ்சரிதம்மஹத் । பௌலஸ்த்யவதமித்யேவ சகாரசரிதவ்ரத꞉ " (காவ்யம்ராமாயணம்க்ருத்ஸ்நம் ஸீதாயாஶ்சரிதம்மஹத்|பௌ லஸ்த்யவதமித்யேவசகாரசரிதவ்ரத꞉) இதிபாலகாண்டே. " வேதாநாம்ஸாம வேதோஸ்மிதேவாநாமஸ்மிவாஸவ꞉ । இந்த்ரியாணாம்மநஶ்சாஸ்மிபூதாநாமஸ்மி சேதநா " ( வேதாநாம்ஸாமவேதோஸ்மிதேவாநாமஸ்மிவாஸவ꞉ । இந்த்ரியா ணம்மநஶ்சாஸ்மிபூதாநாமஸ்மிசேதநா ) இதி பகவத்கீதாயாம் தஶமே. தத்ரைவத் ருதீயே, " கர்மணைவஹிஸம்ஸித்திமாஸ்திதாஜநகாதய꞉ । லோகஸங்க்ரஹமே வாபிஸம்பஶ்யந்கர்துமர்ஹஸி " ( கர்மணைவஹிஸம்ஸித்திமாஸ்த்திதாஜ நகாதய꞉லோகஸங்க்ரஹமேவாபிஸம்பஶ்யக்கர்த்துமர்ஹஸி) இதி, க்ரமேணார்த்த꞉

# நான்காம்பாட்டு.

நிச்சலுந்தோழிமீர்காளெம்மைநீர்நலிந்தென்செய்தீரோ
பச்சிலைநீள்கமுகும்பலவுந்தெங்கும்வாழைகளு
மச்சணிமாடங்கண்மீதணவுந்தண்டிருவல்லவாழ்
நச்சரவினணைமேனம்பிரானதுநன்னலமே.

## ஆறாயிரப்படி.

(நிச்சலும்) பச்சிலைநீள்கமுகும் பலவும் தெங்கும் வாழைகளும் மச்சணிமாடங்களின்மேலே யணைவாநின்ற ப்ரேமஹாரமான திருவல்ல வாழிலே நின்றருளின வெம்பெருமான், திருவநந்தாழ்வானைப்போலே என்னை யநந்யார்ஹமாக்கிக்கொண்டான், தோழிமாரானநீங்கள் நித்ய மாகவென்னை யலைத்தென்ன ப்ரவ்ருத்திபண்ணுகிறீகோளென்கிறாள் ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சோலைகளோடேகூடின மாடங்களையுடைய திருவல்லவாழிலே நித்யாஸ்ரித சம்ஸ்லிஷ்டனாய் வர்த்திக்கிற வுபகாரகன்பக்கலிலே யென்னுடைய ஸ்நேஹமாயிருக்க, நீங்கள் நலிந்தென்னப்ரயோஜநமுண்டென்கிறாள்.

தோழிமீர்காள்-ப்ரியபரத்வமே ஸ்வரூபமான தோழிமீர்காள். எம்மை-உங்களபிமதம் பலியாதவவஸ்த்தையையுடையவெம்மை. நீர் - ஜீவத்வாக்யைகளல்லாதநீங்கள். நிச்சலும்-நிரந்தரமாக. நலிந்து-நிஷேதித்துநலிந்து. என் - என்னகாரியம். செய்தீர்-செய்கிறீகோள். பசு-பசுத்த. இலை-இலையையுடைத்தாய். நீள்-நீண்ட. கமுகும்-கமுகும். பச்சிலைநீள்-அப்படிப்பட்ட. பலவும்-பலவும். தெங்கும் - தெங்கும். வாழைகளும்-வாழைகளும். மச்சு-மச்சுக்களின். அணி - நிரையையுடைத்தான. மாடங்கள்-மாடங்களின். மீது-மேலே. அணவும் - அவ்வோநிலங்களுக்கு நிழல்செய்யும்படிஅணவின. தண்-குளிர்ந்த. திருவல்லவாழ்-திருவல்லவாழிலே. நஞ்சு-அநாஸ்ரிதர்க்கணுகவொண்ணாதபடி நஞ்சையுமிழ்கிற. அரவினணைமேல்-திருவரவணையின் மேலே கண்வளர்ந்தருளுகிறபடியை. நம் - நமக்கு ப்ரகாஸிப்பித்த. பிரானது - மஹோபகாரகனிடத்தது. என்னுடைய, நல்-மிகுந்த. நலம்-நலமானது.

நற்சீவனென்றுமாம்...............................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

"இங்ஙன் மநோரதிக்கை யீடன்று" என்றுநிஷேதிக்கிற தோழிமாரைக்குறித்து; என்னுடைய நற்சீவனவன்பக்கலது, உங்களுடையஜல்பம் வ்யர்த்தமென்கிறாள்.

(நிச்சலும்தோழிமீர்காள்) தோழிமார் " உனக்கித்தனையாகாது காண்" என்று பலகாலும்சொல்லுவர்களே, அதுபலியாதிருக்கச்செய்தேயும், இவளையிழக்கவொண்ணாதென்று பார்த்துத்திரியவும் சொல்லத்தொடங்கினார்கள்; நீங்கள் நலிகைதவிரீகோளாகில், நானிருந்தவிடத்தேபோய் நலியுங்கோளென்கிறாள். என்னுடைய நற்சீவனானது அவன்

ய்க்களிலே யானபின்பு, நீங்கள்சொல்லுகிறவற்று லென்னப்ரயோஜநமு
ண்டு, எனக்கு "அவனைக்காணவேணும்" என்னுமாசை நித்யமாய்ச்
செல்லுகிறப்போலே, உங்களுக்கும் "என்னைமீட்கவேணும்" என்கி
ற இவ்வபிசந்திமாறுதே செல்லுகிறபடி. (தோழிமீர்காள்) நீங்கள் நீங்க
ளாய்ச்சொல்லுகிறிகோளோ, தாய்மாராய்ச்சொல்லுகிறிகோளோ. இத்
தனை ஸ்வரூபஜ்ஞாநமில்லாதாருண்டாயிற்றே. ஒன்றுசொல்லுவார் தம்
மையறிந்தன்றோசொல்லுவது. (எம்மைநீர்) உந்தாமையழியமாறியுமெ
ன்னுடைய ஜீவநமே பெண்ணைக்கடவநீங்கள், உங்கள்ஹிதவசநம் நெஞ்
சிற்பட்டால் ஜீவியாதவென்னை. (நலிந்தென்செய்தீரோ) நான்ஜீவிப்ப
ளோ! உங்கள் ஸ்வரூபத்தோடுசேர்ந்தோ. (நிச்சலும்தோழிமீரித்யா
தி) "* மாசறுசோதிதொடங்கி இவ்வளவும்வர ஹிதஞ்சொல்லுகிற
நீங்களென்னப்ரயோஜநம் பெற்றிகோள்" என்றுபிள்ளான். (தோழிமீ
ர்காளெம்மைநீர்நலிந்தென்செய்தீரோ) தாந்தாம் நலிவுபட்டும் பிறரை
நோக்குவார், தாங்களேபிறரை நலியவும்பார்ப்பரோ. (என்செய்தீரோ)
ஒன்றுசெய்வதொரு ப்ரயோஜநத்தளவுமன்றோ, லாபாலாபமறிந்தாலு
ம் கைவாங்கவேண்டாவோ. (எம்மைநீர் நலிந்தென்செய்தீரோ) ப்ராவ
ண்யத்துக்கு முற்பாடரானுல் ப்ராப்திக்கு முற்பாடராகவேண்டாவோ.

(பச்சிலையித்யாதி) அந்நிலத்திலே யகப்பட்டாரையும் சிலர்மீட்
கநினைப்பரோ. ஹிதஞ்சொல்லுவார் பசுமையுள்ளவிடத்தேயன்றோசொ
ல்லுவது, இங்குவிவர்ணமாயிறே கிடக்கிறது. பிரியாதிருப்பார்க்குப்பசு
மைமாறுதிறே. (பலவும்) பலா. "'(நீள் - கமுகும்) என்றுப்போலே,
பலவும் - தெங்கும், வாழைகளும்' என்று (பச்சிலைநீள் என்கிறத்தை-
அவற்றிலேயும்) உய்ந்தபின்னை கூட்டும்படிகாணும்" என்று ஜீயரருளி
ச்செய்வர். (மச்சணிமாடங்கள்) பலநிலங்களையுடைத்தாகையாலே அல
ங்க்ருதமான மாடங்கள். (மீதணவும்) செல்வப்பிள்ளைகளுக் கணுக்கனி
ட்டாற்போலேகாணும் கவிந்துகொண்டுநிற்கிறபடி. (தண்டிருவல்லவா
ழ்) ப்ரமஹாரமாம்படி சோலைசெய்தவூர். பசுமைமாறுத இலைகளையுடை
த்தாய் நீண்டகமுகும், அப்படிப்பட்டபலவும், தெங்கும், வாழைகளும்,
மச்சுக்களின் நிரையையுடைத்தான மாடங்களின்மேலே, அவ்வோநிலங்
களுக்கு நிழல்செய்யும்படி யணவினகுளிர்ந்த திருவல்லவாழிலே. (நச்ச
ரவினணைமேல்) மேலும்சுற்றும் சோலையுண்டானுல் கீழும்சோலையுண்
டாகவேணுமோ. இங்கும் சைத்ய சௌகந்த்ய சௌகுமார்யங்களால் கு
றையில்லையே. (நச்சரவு) படுக்கையும் தானேயாய்க்காத்தூட்டவும் வற்
றாயிருக்கை. பச்சிலையித்யாதிக்கு - போகிகளாயிருப்பார்விடாதே வர்த்
திக்கலாம்தேசம். (நச்சரவு) இளையபெருமாள் கையும்வில்லுமாய் வெ
ளிக்காவல்நிற்க, பெருமாளும் பிராட்டியுமாய்க் காட்டிலேரமித்தாப்
போலே. * ரமமாணாவநேத்ரய: இறே, அப்படியே யிங்கும் காவலுண்
டாயிருக்கிறபடி. அநந்தமுகமான காவலிறே. பெருமாளு மிளையபெரு

மாரும் பிராட்டியும் ஶ்ருங்கிபேரபுரத்திலே விட்டருளினவன்று ஸ்ரீகுஹப்பெருமாள் இளையபெருமாளைப்பார்த்து, " பெருமாளும்பிராட்டியும் கண்வளராநின்றார்கள், உமக்கிடாம்படி திருவடிகளிலே தலையாம்படி படுக்கைபடுத்தேன்; நாங்கள் காடரா யங்கே யிங்கேதிரிகையாலே எங்களுக்குறக்கம்வாராது, நீர் ராஜபுத்ரராகையாலே சுகுமாரர்; 'பரதாதிகள் வருவர்கள்' என்றஞ்சவேண்டா, நானு மென்பரிகரமுமுண்டு, நீர்கண்வளர்ந்தருளும்'' என்ன [ கயம்ஶாஸாய ஸுஜாஸய ாமெநஷஹவிதயா ] [ கதம்தாஸ்ரதௌபூமௌஸயாநேஸஹஸீதயா ] வாரீர், மஹாராஜனை சக்ரவர்த்தி அறுபதினாயிரமாண்டு அநபத்யனாய் வருந்திப்பெற்ற சுகுமாரரான பெருமாள் தறைக்கிடைகிடக்க, எனக்குக்கண்ணுறங்குமோ ; அவர்தாம் வஸிஷ்டாதிகள் கீழே தறையிலேயிருந்துமறிவர், அதுவுமின்றிக்கேயிருக்கிற பிராட்டியோடே கூடக்கிடக்கிறபடிபாரீர்; ஆனபின்பு, எனக்குறக்கமுண்டாய் அதுபோகைக் கபிசந்திபண்ணியிருக்கிறேனல்லேன்காணும், உறக்கம் தேட்டமாய்க்கிடையாமையாலேயிருக்கிறேன். (நம்பிரானதுநன்னலமே) "அஸ்யாதேவ்யாமநஸ்தஸ்மிந் தஸ்யசாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்" (அஸ்யாதேவ்யாமநஸ்தஸ்மிந் தஸ்யசாஸ்யாம் ப்ரதிஷ்ட்டிதம்) என்னும்படியேயிருந்ததாகில் நானறியிரோனே, இரண்டுமெங்கே யொருதலைத்தபின்பு நானெங்ஙனேயாறியிருக்கும்படி. ( நம்பிரானதுநன்னலமே ) திருவநந்தாழ்வான்மேலேசாய்ந்த வடிவழகைக்காட்டி யென்னை யநர்யார்ஹமாக்கினவன்பாடது என்னுடையநற்சீவன். திருவநந்தாழ்வானைப்போலே என்னை யநர்யார்ஹமாக்கினவனென்றுமாம். அவன்பக்கலிலே நற்சீவனாயிருக்க, கேவலசரீரத்துக்கு ஹிதஞ்சொல்லுகிறஇத்தால் ப்ரயோஜநமென்; அவன்பக்கலிலேசென்று ஹிதஞ்சொல்லுங்கோள் வேணுமாகில்.................................*

## ஜீயர் அரும்பதம்.

கீழாம்பாட்டு (நிச்சலுமித்யாதி) "நம்பிரானதுநன்னலம்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இங்ஙனித்யாதி)

" நிச்சலும்தோழிமீர்கா ளெம்மை நீர்நலிந்தென்செய்திரோ " என்றதுக்கு ப்ரஸக்தியருளிச்செய்கிறார் (தோழிமாரென்றுதொடங்கி, திரியவும்சொல்லத்தொடங்கினார்களென்னுமளவும்) " நம்பிரானதுநன்னலம் " என்றத்தைக்கடாக்ஷித்து, " எம்மைநீர்நலிந்தென்செய்திரோ " என்றதுக்குபாவம் (நீங்களித்யாதி) ஏதத்விவரணம் (என்னுடையவித்யாதி) "கழல்காண்டுங்கொல்நிச்சலுமே" என்றவநந்தரம், " நிச்சலும்-நலிந்து " என்றதுக்குஹார்த்தபாவம் ( எனக்கவனையித்யாதி ) "தோழிமீர்காள் - நலிந்தென்செய்திரோ" என்றதுக்கு ஹார்த்தபாவம் ( நீங்களித்யாதி ) பஹுவசநத்துக்குபாவம் (இத்தனையித்யாதி) இத்தனையென்றது - இத்தனைபேரென்றபடி. " நீங்கள் நீங்களாய்ச்சொல்லுகிறிகோளோ " என்றதின்பலிதம் (துன்றசொல்லுவாரித்யாதி) "எம்மை" என்றது - ஆத்மநிபஹுவசநமாகையாலே

(என்னையென்கிறார்) என்செய்தீர்-என்னப்ரயோஜநம்பெற்றீகோளென்றபடி. "என்செய்தீரோ" என்றதுக்குபாவம் (நான்ஜீவிப்பனுயோவித்யாதி) "நிச்சலும்" இத்யாதிக்குபாவாந்தரம் (மாசறுசோதியித்யாதி) ஆக, "நிச்சலும்" என்றதுக்கு-இந்தத்திருவாய்மொழியிலே பலகாலும் ஹிதஞ்சொல்லி என்செய்தீரோவென்னுதல்; * மாசறுசோதிதொடங்கி யிவ்வளவும் ஹிதஞ்சொல்லி என்செய்தீரோவென்னுதல். "நீர்நலிந்து" என்றதுக்குபாவம் (தாந்தாம்நலிவுபட்டுமித்யாதி) என்னுடைய சத்தாநாசமொழிய வேறொருப்ரயோஜநமில்லையென்று - கேழருளிச்செய்து, உங்கள் ஹிதவசநத்துக்கு நான்மீளாதபின்பு உங்களுக்கொரு ப்ரயோஜநமில்லையென்று பாவாந்தரம் ( ஒன்றுசெய்வதித்யாதிவாக்யம் ) விவரணம் ( லாபாலாபமித்யாதி ) நலியப்ராப்தியில்லையாகில், எதுக்குப்ராப்தியுண்டென்ன (ப்ராவண்யத்துக்கித்யாதி) ப்ராவண்யத்துக்கென்றது - ப்ராவண்யத்தை விளைக்கைக்கென்றபடி.

"பச்சிலை" என்றுதொடங்கி - அவ்வூரைவர்ணிக்கிறதுக்குபாவம் (அந்நிலத்திலேயித்யாதி) "பச்சிலை" என்றதுக்குபாவம் (ஹிதஞ்சொல்லுவாரித்யாதி) இங்குப்பசுமையில்லையோவென்ன ( இங்குவிவர்ணமாயித்யாதி ) அங்குப்பசுமையுண்டாகைக்குஹேதுவேதென்ன (பிரியாதிருப்பார்க்கித்யாதி) ஈஶ்வரனைப்பிரியாதிருக்கிறமரங்களுக்கென்றபடி. பிரியாதிருப்பார்க்கென்றது-பிரிவால்வரும் வ்யஸநமின்றிக்கே யிருப்பார்க்கென்றபடி. "பலவும்" என்றது - பலாமரமென்றபடி. உய்ந்தபிள்ளைநிர்வாஹத்துக்கு, * நீட்சிகமுகுக்கு விசேஷணமானப்போலே, பலவுமென்று-பஹுவசநமாய், பலவானதெங்கும் பலவானவாழைகளுமென்னுதல்; அன்றிக்கே, பச்சிலைநீளென்றது - * கமுகுக்கு விசேஷணமானப்போலே, "பச்சிலைநீள்-பலவும், பச்சிலைநீள் - தெங்கும், பச்சிலைநீள் - வாலழைகளும்" என்று கூட்டுதலென்றபடி. பலநிலங்களாவது - தளத்தின்மேல்தளம். மச்சை, அணியாக-அலங்காரமாகவுடைத்தான, க்ருஹங்களென்றுசப்தார்த்தம். மச்சு-மேல்தளம். அணி-அலங்காரம். மேல்தளமென்று சொன்னபோதே - பலநிலங்களென்றர்த்தாத்ஸித்தம். மீது - மேல். அணுக்கன்-குடை.

"மீதணவும்" என்று-மேற்சோலையைச்சொன்னபோதே, (சுற்றும்) என்றர்த்தாத்ஸித்தம். அரவைச்சோலையாகச்சொல்லுகைக்கடியேதென்ன; குணசாம்யத்தாலேயென்கிறார் (இங்கும்சைத்யேத்யாதி) "அரவினணை" என்றும், "நஞ்சு" என்றும் விசேஷித்ததுக்குபாவம் (படுக்கையுமித்யாதி) காத்தூட்டவும் வற்றாயிருக்கையென்றது - விரோதிகள் வாராமல் காத்துபுஜிப்பிக்கவும் வற்றாயிருக்கையென்றபடி. (பச்சிலையித்யாதிக்கு) தாத்பர்யமிதிசேஷ:. காத்தூட்டினதுக்குத்ருஷ்டாந்தம் (இளையபெருமாளித்யாதி) உக்தத்துக்குப்ரமாணம் (ரமமாணஇத்யாதி) இளையபெருமாள் காத்தப்ரகாரத்தைக்காட்டுகிறார் (பெருமாளுமித்யாதி "காவல்" என்றப்ரசங்கத்திலே யருளிச்செய்கிறாராதல். ராமேயென்னாதே, "தாஶரதௌ" (தாஶரதௌ) என்றதுக்குபாவம் (மஹாராஜனுனவித்யாதி) "மயா-நித்ரா - லப்தம்-கதம்-ஶக்யா" ( மயா-நித்ரா-லப்தும்-கதம்-ஶக்யா ) என்றதுக்குவயித்துபாவம் ( ஆனபின்பித்யாதி ) அபிசந்தி-நினைவு. தாத்பர்யம் (அஸ்யாதேவ்யாஇத்யாதி) அதாவது - பிராட்டிக்கும்மநஸ்ஸவர்பக்கலிலேயாய், ப்ராணனவள்பக்கலிலேகிடந்ததிறே; எனக்கங்ஙனன்றிக்கே, ப்ராணனும் மநஸ்ஸும மவர்பக்கலிலேயானபின் பாறியிருக்கப்போமோவென்றுகருத்து. இரண்டுமெங்கே யொருதலைத்தபின்பென்றது - பிராட்டிக்குப்போலே, "மநஸ்த்வயி" (மநஸ்தஸ்மிந்) என்று-மநோமாத்ரமன்றிக்கே, ப்ராணனுமங்கே யொருதலைத்தபின்பென்றபடி. "நன்னலம்" என்று-நற்வேனும்,

"ப்ராணன் நம்பிரானது" என்றபோதே-மநஸ்ஸங்கே ப்ரவணமாயிற்றென்றர்த்தா த்ஸித்தம். அன்றிக்கே, "நன்னலம்" என்று-ஸ்நேஹமாய், ததாஸ்ரயமானமநஸ் ஸைலக்ஷித்து, "நம்பிரானதேநன்னலம்" என்றந்வயித்துபாவம் (அஸ்யாதேவ்யா இத்யாதி) என்னுதல். அதாவது-இவள்திருவுள்ள மவனிடத்திலேயா யவன்திருவுள்ள மிவளிடத்திலேயா யிருக்கையன்றிக்கே, இரண்டுமங்கே யொருதலைத்தபின் பென்றபடி. "நச்சரவினணைமேல் நம்பிரானதுநன்னலம்" என்றதுக்கு சப்தார்த்தம்-திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினவழகைக்காட்டி யென்னையநந்யார்ஹமாக்கினவனிடத்த தென்னுடைய நற்சீவனென்னுதல்; அன்றிக்கே, திருவநந்தாழ்வானைப்போலே யென்னையநந்யார்ஹமாக்கினவனென்னுதல். "நம்பிரானதுநன்னலம்-எம்மைநீர்நலிந்தென்செய்தீரோ" என்றந்வயித்துபாவம் (அவன்பக்கலிலேயித்யாதி) இத்தால் - நற்சீவனவன்பக்கலிலேயாயிருக்க, கேவலசரீரத்துக்கு ஹிதஞ்சொல்லி யென்னப்ரயோஜநமென்றபடி.

தோழிமீர்காள், நீர்-எம்மை-நிச்சலும்-நலிந்தென்செய்தீரோ வித்யாரப்யாந்வயः. " [illegible] " (கதம்தாஸரதௌபூமௌஸயாநே ஸஹஸீதயா । ஸக்யாமித்ராமயாலப்தும் ஜீவிதம்வாஸுகாநிவா) இத்யயோத்யாகாண்டே குஹம்ப்ரதிலக்ஷ்மணः. " [illegible] " (அஸ்யா தேவ்யாமநஸ்தஸ்மிந் தஸ்யசாஸ்யாம்ப்ரதிஷ்டிதம் । தேநேயம்ஸசதர்மாத்மாமுஹூர்த்தமபிஜீவதி) இதி ஸுந்தரகாண்டே ஹநுமாந்... ... ... ... ... ...*

# ஐந்தாம்பாட்டு.

நன்னலத்தோழிமீர்காணல்லவந்தணர்வேள்விப்புகை
மைந்நலங்கொண்டுயர்விண்மறைக்குந்தண்டிருவல்லவாழ்க்
கன்னலங்கட்டிதன்னைக்கனியையின்னமுதந்தன்னை
யென்னலங்கொள்சுடரையென்றுகொல்கண்கள்காண்பதுவே.

## ஆறுயிரப்படி.

(நன்னலம்) நானென்றை யாசைப்பட்டா லத்தைமுடிக்கும் ஸ்வபாவமன்றோ வுங்களது. (நல்லவந்தணர்) அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணருடைய யாகங்களிலே கறுத்தெழுகிற ஹோமதூமங்களாகாஸாவகாஸமெல்லாம் மறைக்கும்படியான திருவல்லவாழிலேயிருந்து நிரதிசயபோக்யனுமா யென்னை சர்வஸ்வஹரணம்பண்ணின வழகையுமுடையவனை என்னுடையகண்கள் விடாய்தீரக் காணப்பெறுவதென்றோ வென்கிறாள்... ... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விலக்ஷணரான வைதிகாக்ரேசருடைய அக்நிஹோத்ரதூமமான [illegible] ஆகாசத்தைமறைக்கும் திருவல்லவாழில் நிரதிசயபோக்யபூதனானவனை [illegible] காண்பதென்றோவென்கிறாள்.

நன்னலம்-என்னிலுமெனக்குமிகவும்நல்ல. தோழிமீர்காள்-தோழிமீர்காள். நல்ல-அநந்யப்ரயோஜநரா யதிப்ரவணரான. அந்தணர்-வைதிகருடைய. வேள்வி-பகவதாராதநரூபமான அக்நிஹோத்ராதிகர்மங்களில். புகை - தூமங்களானவை. மை-மையினுடைய. நலம்-நன்றானநிறத்தை. கொண்டு - கொண்டு. உயர் - உயர்ந்த. விண்-ஆகாசத்தை. மறைக்கும்-தன்னிறமேயாம்படிமறைத்து நிழலைச்செய்கையாலே. தண்-குளிர்ந்த. திருவல்லவாழ் - திருவல்லவாழிலேவர்த்திப்பானாய். கன்னல்-கரும்பினுடைய. அம்-கோதற்ற. கட்டிதன்னை-கட்டிபோலே பாஹ்யாப்யந்தரவிபாகரஹிதரஸத்தையுடையனாய். கனியை-அப்போதே நுகரவேண்டும் பக்வபலம்போலே யினியனாய். இன்-இனிமைக்குமேலே. அமுதந்தன்னை - இழந்தசத்தையையுண்டாக்கு மம்ருதரூபனாய். என்னோடு சம்ச்லேஷித்தகாலத்தில், என்-என். நலம்-ஆத்மகுணத்தோடு ரூபகுணத்தோடுவாசியற. கொள்-புஜித்து. சுடரை-அத்தாலேயொளிபெற்ற வடிவையுடையனானவனை. கண்கள்-என்னிலும்பெருவிடாய்ப்பட்டகண்கள். காண்பது-தன்னினைவுக்கீடாகக்கண்டநுபவிப்பது. என்றுகொல்-என்றோ ... *

## ௫ - ஐந்தாம்பாட்டு.

நான்செய்தபடிசெய்ய, இக்கண்களின் விடாய்தீரக் காணப்பெறுவதென்றென்கிறாள்.

( நன்னலத்தோழிமீர்காள் ) நன்னலமாவது-இவள்பக்க லிவர்களுக்குண்டான ஸ்நேஹம். தங்கள் கார்யம் தலைக்கட்டிக்கொள்ளுகையன்றிக்கே யிருக்கை. ஆனபின்பு, "தாய்மார்பழிசொல்லுவர்கள்" என்றஞ்சி என்வழியே யுங்களுக்கொழுகாதிருக்கப்போமோ [ வாநராணாம் நராணாஞ்ச கதமாஸீத் ஸமாகம: ] [ வாநராணாம்நராணாஞ்சகதமாஸீத்ஸமாகம: ] குருகுலவாஸம்பண்ணாத திர்யக்குக்களுக்கும், வஸிஷ்டசிஷ்யர்களான ராஜபுத்ரர்களுக்கு மிதொருசேர்த்தியுண்டானபடி யெங்ஙனே; சாஸ்த்ரவஸ்யரிறே குருகுலவாஸத்துக்கு யோக்யர். மேலிதுக்கடிசொல்லுகிறான் [ ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத ] [ ராமஸுக்ரீவயோரைக்யம்தேவ்யேவம்ஸமஜாயத ] தங்களையுமறியாதே யெங்களையுமறியாதே யிங்ஙனேவிழுந்துகொடுநிற்கக்கண்டோமித்தனை. அதாவது-இளையபெருமாள்கையும் வில்லுமாயுணர்ந்துகொண்டு நின்றுநோக்கக்கடவ அந்த:புரகார்யத்துக் கடியேன் வரும்படியன்றோ அவர்கள் சங்கதரானபடி. இளையபெருமாளடிமையில் தப்பிநின்றவளவுக்கும் திருவடியைக்கொண் டிழையிடவேண்டும்படியாகவிறே யுவர்நிலவரானபடி, இளையபெருமாள் போரநிற்கையிறே பிரியவேண்டிற்று. [ ஏவம் ஸமஜாயத ] [ ஏவம்ஸமஜாயத ] தங்களளவிலும் பெருக்கப்பார்த்தார்கள். ஐஸ்வர்ய மவனுக்குக் காடுபடும்படியிறேபார்த்தது. இப்படியிறே சக்யமிருப்பது; இவர்களும்தோழிமாரிறே. (நல்லவந்தணர்) அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணர். அவர்கள்கண்டிகோளே அத்தலைக்கீடாகப்பரிமாறுகிறபடி; ஆனபின்பு, நீங்களு மப்படியாயிருக்கவேண்டாவோ. அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணருடைய யாகங்களிலுண்டான ஹோமதூம

மானது, வெளிமுகழித்துக்கொண்டு அந்தரிக்ஷத்தளவன்றியே உயர்வி ண்மறைக்கும். கறுத்தெழுகிற தூமங்கள், இங்கேகண்ணழிவறப் புண்யங் களை யநுஷ்டித்து சம்சாரவெக்காயம் தட்டாதபடிபோய் அப்ஸரஸ் ஸுக்களோடே யநுபவிக்கிறவைமாநிகளை முகத்தோடுமுகம்பார்க்க வொட்டாதே மறைக்கிறபடி. மிதுநமாய்க்கலப்பாரை முகத்தோடுமுகம் பார்க்கவொட்டாமை அங்நிலத்திலுள்ளார்க்கு ஸ்வபாவம்போலேகாணு ம். அவர்கள்புகைத்தலிருக்கிறபடி. (தண்டிருவல்லவாழ்கன்னலங்கட்டி தன்னை) "இன்னமலையின்கட்டி" என்னுமாபோலே. கரும்பினுடைய கோதற்றகட்டியை. (கனியை) அவ்வளவும்பார்த்திருக்கவேண்டாதபடி பக்வமானபலமாயிருக்கை. (இன்னமுதந்தன்னை) உடம்பைப்பூண்கட்டி க்கொடுக்க வற்றாயிருக்கை. அதாவது - போக்த்ருத்வசக்தியைக்கொடுக் கை. (இன்னமுதம்) தேவர்களுடைய வுப்புச்சாறுபோலன்றிக்கே, ஆத் மோஜ்ஜீவநம்பண்ணிக்கொடுக்க வற்றாயிருக்கை. (என்னலங்கொள்சுட ரை) என்னைசர்வஸ்வாபஹாரம்பண்ணி, அதாலே யுஜ்ஜ்வலனாயிருக் கிறவனை. என்னையெழுதிக்கொண்ட அழகையுடையவனையென்றுமாம். இத்தலையை சர்வஸ்வாபஹாரம்பண்ணினமை தன்பேறு என்னுமிடம் வடிவிலே தோற்றும்படியாயிருக்கை. (என்றுகொல் கண்கள்காண்பது வே) "நான்பட்டதுபட, ப்ரஜைஜீவிக்கப்பெறுவதுகாண்" என்பாரை ப்போலே, என்கண்களின்விடாய்தீர்வதென்றோவென்கிறார். * முடியா னேயிற்கரணங்களுடையவரிறே. இந்த்ரியங்களும் தாமும் தனித்தனி யே சேதநஸமாதியாலே விடாய்க்குமவரிறே. "ஶ்ரீ..." (காத்மைப்ரஸோகாபிகர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶேயம்) ப்ரஜைகள் ஜீவித்தால் பசிகெடுவாரபிமாநிகளிறே.......*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (நன்னலமித்யாதி) "என்றுகொல்கண்கள்காண்பதுவே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நான்செய்தபடியித்யாதி)

"நலம்" என்றதுக்குபாவம் (இவள்பக்கலித்யாதி) "நல்" என்றதுக்குபாவ ம் (தங்கள்கார்யமித்யாதி) "நன்னலம்" என்று - ஸ்வப்ரயோஜநத்தை யபேக்ஷியா த ஸ்நேஹத்தையுடையவர்களென்றவளுடைய ஹார்த்தபாவம் (ஆனபின்பித்யாதி) தோழிமார்க்குமிவளுக்குமுண்டான ஸ்நேஹத்துக்கு த்ருஷ்டாந்தம் (வாநராணமி த்யாதி) திர்யக்குக்களுக்கு குருகுலவாஸயோக்யதையில்லையோவென்ன (சாஸ்த்ர வஶ்யரித்யாதி) இதுக்கடியென்றது-சமாகமத்துக்கடியான, "ஏவம்ஸமஜாயத" (ஏவம்ஸமஜாயத) என்றநிர்ஹேதுகத்வமென்றபடி. "ஏவம்ஸமஜாயத" (ஏவம் ஸமஜாயத) என்றதுக்கு மூன்றுபாவம். (தங்களையுமித்யாதிவாக்யத்வயம்) மூந்தி னது. அதாவது - அந்த:புரகார்யத்துக்கடியேன் வரும்படியன்றோ சங்கதரானபடி யென்றுகருத்து. (தங்களையுமறியாதே) இத்யாதிக்கு-தங்கள்பெருமையையும் நங்க ள்சிறுமையையும்பாராதே அசிந்திதமாகச்சேரவிழுந்ததென்றபடி. அடியேன்வரு ம்படியன்றோவென்றது - "..."

( மத்த:ப்ரத்யவராக:ஸிந்நாஸ்திஸுக்ரீவஸந்நிதௌ ) என்கிறபடியே எல்லாரிலும் தாழ்ந்தநான் வரும்படியன்றோவென்றபடி. "ஏவம்ஸமஜாயத" ( ஏவம்ஸமஜாயத ) என்றதுக்கிரண்டாம்பாவம் ( இளையபெருமாளடிமையித்யாதி ) அதாவது-ப்ராதாவான இளையபெருமாளுடைய வபராதத்தையும் நான் சமிப்பிக்கும்படியென்றுகருத்து. நிலவர்-அந்தரங்கர். இளையபெருமாளடிமையில் தப்பநின்றோரோவென்ன (இளையபெருமாள் பேரநிற்கையிறேயித்யாதி) மூன்றாம்பாவம் ( தங்களளவிலுமித்யாதி ) அதாவது-தங்களுடைய வைஶ்வர்யத்தைப்பற்றவு மதிகமானவைஶ்வர்யத்தையுடையராம்படியென்றுகருத்து. கீழ்வாக்யவிவரணம் (ஐஶ்வர்யமித்யாதி) காடுபடும்படியென்றது - சம்ருத்தமாம்படியென்னுதல், காட்டுக்கெல்லாமதிபதியாம்படியென்னுதல்; "ஸுக்ரீவமகரோத்பதிம்" ( ஸுக்ரீவமகரோத்பதிம் ) என்னக்கடவதிறே.

"நன்னலத்தோழிமீர்காள்" என்றவநந்தரம், "நல்லவந்தணர்" என்றதுக்கு பாவம் (அவர்கள்கண்டிசோளேயித்யாதி) வெளிறு-அசாராம்சம். "மைந்நலம்" - நலமானமை. நன்றானகறுப்பென்றபடி. உயர்விண்-ஸ்வர்க்கமென்றபடி. "முகம்பார்க்கவொட்டாதே மறைக்கிறபடி" என்றதுக்குஹார்த்தபாவம் (மிதநமாயித்யாதி) சாடு (அவர்கள்புகைத்தலித்யாதி) சாடுவுக்கு, பொருமை; தூமமும்.

"அமுதம்" என்றதுக்குபாவம் ( உடம்பையித்யாதி ) அதாவதென்றது-பூண்கட்டிக்கொடுக்கையாவதென்றபடி. "இன்" என்றதுக்குபாவம் ( தேவர்களித்யாதி )

"நலம்" என்று - நன்மையாய், சர்வஸ்வத்தையுமென்றபடி. என்னையெழுதிக்கொண்ட - என்னையநந்யார்ஹமாக்கினவென்றபடி. "என்னை சர்வஸ்வாபஹாரம்பண்ணி" இத்யாதிவாக்யவிவரணம் (இத்நிலையையித்யாதி)

உமக்குக்காணவேண்டாவோவென்ன (நான்பட்டதித்யாதி) அசேதநமான கண்விடாய்க்கக்கூடுமோவென்ன (முடியானேயிலித்யாதி) விவரணம் ( இந்த்ரியங்களுமித்யாதி ) கரணங்கள் விடாய்க்கக்கூடுமென்னு மதுக்குப்ரமாணம் (காத்ராணித்யாதி) கண்களின்விடாய்தீர்ந்தால் தமக்குலாபமேதென்ன (ப்ரஜைகளித்யாதி)

க்ரமேணார்வய:. "யதாதம்புருஷவ்யாக்ரம் காத்ராணி ஶோககர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶ்யம் ஸகாமாஹம் ததாகுருதயாம்மயி" (யதாதம்புருஷவ்யாக்ரம்காத்ராணிஶோகாபிகர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶேயம்ஸகாமாஹம்ததாகுருதயாம்மயி) இதி ஸுந்தரகாண்டே ஹநுமந்தம்ப்ரதிஸீதா ... ... ... *

---

# ஆறும்பாட்டு.

---

காண்பதெஞ்ஞான்றுகொலோவினையேன்கனிவாய்மடவீர்
பாண்குரல்வண்டினொடுபசுந்தென்றலுமாகியெங்குஞ்
சேண்சினையோங்குமரச்செழுங்கானற்றிருவல்லவாழ்
மாண்குறட்கோலப்பிரான்மலர்த்தாமரைப்பாதங்களே.

## ஆறாயிரப்படி.

(காண்பது) (வினையேன்கனிவாய்மடவீர்) இப்போதுநான் நோவுபடாநிற்க, நீங்களுருவுதல்தீர்ந்து பண்டுபோலேயிருப்பதே. மதுபாநமத்தமாகையாலே நல்லமிடற்றோசையையுடைய வண்டுகளோடுகூட வெங்குமிளந்தென்றலுண்டாய், அந்தாலேயறவுயர்ந்த பணைகளையுடைத்தாய்க்கொண்டு வளராநின்றுள்ள வழகியசோலையையுடைய திருவல்லவாழிலே நின்றருளின ஸ்ரீவாமநனுடைய மிகவும் ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை நான் காண்பதென்றோவென்கிறாள் ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பாடுகிறவண்டும் புதுத்தென்றலுமான கடற்கரைச்சோலையையுடைய திருவல்லவாழிலேநிற்கிற, ஆஸ்ரிதார்த்தமாக வர்த்தியான ஸ்ரீவாமநனுடைய போக்யமான திருவடிகளைக்காண்பதென்றோ வென்கிறாள்.

பாண்-காநரூபமான. குரல்-மிடற்றோசையையுடைய. வண்டினொடு - வண்டுகளோடே. பசுந்தென்றலும்-புதுத்தென்றலும். ஆகி-ஆய். எங்கும்-சர்வப்ரதேசத்திலும். சேண்-உயர்ந்த. சினை-பணைகளையுடைத்தாய்க்கொண்டு. ஓங்கு - வளர்கிற. மரம்-மரங்களையுடைய. செழு-தர்ஸநீயமான. கானல்-கடற்கரைச்சோலையையுடைத்தான. திருவல்லவாழ்-திருவல்லவாழிலேநிற்கிற. மாண்-அர்த்தித்வப்ரகாசகமான ப்ரஹ்மசர்யத்தையும். குறள்-வாமநத்வத்தையுமுடைத்தான. கோலம்-தர்ஸநீயவிக்ரஹத்தையுடையனான. பிரான்-மஹோபகாரகனுடைய. மலர்-மலர்த்தியையுடைய. தாமரை-தாமரைபோலேபோக்யமான. பாதங்கள்-திருவடிகளை. கனி - கனிபோலே பழுத்த. வாய்-அதரசோபையையுடையராம்படி முகமலர்ந்து. மடவீர் - எனக்குவிதேயைகளாய்ப்போந்தவர்களே. வினையேன் - என்னினைவுக்கிடாகப் பரிமாறப்பெறாத பாபத்தையுடையேனானான். காண்பது-காண்பது. என்றுகொலோ-எந்நாளாயிருக்கிறதோ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - ஆறும்பாட்டு.

திருவல்லவாழிலே நின்றருளின ஸ்ரீவாமநனுடைய போக்யமான திருவடிகளை நான் காண்பதென்றோவென்கிறாள்.

(காண்பதென்றுகொலோவினையேன்) ப்ரஜைகள்செய்தபடிசெய்ய, நான்முன்னமென்பசிதீர்வதென்றோ. (வினையேன்) லோகவிஸஜாதீயமான பாபத்தைப்பண்ணினேன். காணாமைக்குப் பாபம்பண்ணினாருங்கூடக்காணும்படியான விஷயத்தை, காண்கைக்கு போக்யதையுண்டாய்வைத்தே காணாதபடியான பாபத்தைப்பண்ணினேன். * மாண்குறட்கோலப்பிரானிறே. ( காண்பதென்றுகொலோவினையேன் ) நீங்கள்காட்டுகைக்கு த்வரிக்க ஆறியிருக்கக்கடவநான், இன்று " காண்பதென்றுகொலோ " என்னும்படியான பாபத்தைப்பண்ணினேன். (கனிவாய்மடவீர்) உங்களைநான் பண்டுபோலே காண்பதென்றோ. "ஸ்ரீ

யோஹிஜ்ஞாநிநோத்யர்த்தம்)" (ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தம்) என்னும்படியிறே யவர்களிருப்பது. இவள் *மாசுடையுடம்பொடுதலையுலறிவாய்ப்புறம்வெளுத்திருக்க, அவர்கள் தங்களைப்பேணியிரார்களே. அவர்கள்பண்டுபோலேயிருக்கக்காண்கையுமிவளுக்குப் ப்ரார்த்யமானபடி. (பாண்குரல்வண்டினொடு) இவற்றின்த்வநியில் வெள்ளோசையர்க்கழியுண்பதில்லை, பரப்படங்கலும் பாட்டாயிருக்கும். அதாவது-இயல்கற்று இசையோடேகூட்டிற்றன்றே அவற்றுக்கு, பேச்சேதொடங்கியிசையிறே. "தேன்போலேயினியபாட்டு" என்னக்கடவதாயிருக்குமதுபோய், வடிவேதேனாய் அதுக்குமேலேபாட்டுமானால் மிகவுமினிதாயிருக்குமிறே. பாண்குரல் - காநரூபமானமிடற்றோசை. (பசுந்தென்றலுமாகியெங்கும்) கலப்பற்றதென்றலுமாயிருக்கை. பலவிடங்களிலே காலிட்டுவாராதே தாய்தலையாயிருக்கை. (பசுந்தென்றல்) இளந்தென்றலென்றுமாம். (சேண்சினையித்யாதி) கவடுகளானவை சுற்றிலேபணைத்திருப்பனவாய் மேலோக்கத்தையுடைத்தான மரங்களையுடைத்தாகையாலே, அழகியசோலையையுடைய. (செழுங்கானல்) தர்ஸநீயமானகானல். கானலென்று - கடற்கரைச்சோலையாதல், நெய்தல்நிலமாதல். சேண் - உயர்த்தி. சினை-கவடு. பணைக்கு ஓக்கம் - சுற்றிலேவளருகை. மரத்துக்கு ஓக்கம்-மேலே. (மாண்குறள்கோலப்பிரான்) தன்னுடைமைபெறுகைக்குத் தானர்த்தியாய், பெருவிலையனானவடிவைச் சிறுகவிட்டு மிக்கவழகையுடையவனாய், சௌலப்யத்தையு மழகையும் திருவல்லவாழிலாஶ்ரிதரையநுபவிப்பித்துக்கொண்டு நிற்கிறவனுடைய நிரதிசயபோக்யமான திருவடிகளை - காண்பதென்றுகொலோ. (மலர்த்தாமரைப்பாதங்கள்) அப்போதலர்ந்த தாமரைபோலே நிரவதிகபோக்யமான திருவடிகளை. அடியிலேயிவர்க்குத்தானேயிறே ருசியையுண்டாக்கினான். "அடிகள், அடிகள்" என்று வாய்புலற்றும்படியிறே திருவடிகளில் போக்யதையிருப்பது... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஜீயர்அரும்பதம்.

ஆறும்பாட்டு (காண்பதித்யாதி) "மாண்குறட்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்கள் - காண்பதென்றுகொலோ" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (திருவல்லவாழிலேயித்யாதி)

கீழ்-கண்களின்விடாயைச்சொல்லி, அநந்தரம் தம்விடாயைச்சொன்னதுக்குபாவம் (ப்ரஜைகளித்யாதி) தீருவது-தீர்த்துக்கொள்வது. விவரணம் (காணுமைக்கித்யாதி) பாபம்பண்ணினுரென்றது-மஹாபலிபோல்வாரை. அப்படி பாபம்பண்ணினவர்களு மவனைக்கண்டார்களோவென்ன (மாண்குறளித்யாதி) "வினையேன்" என்றதுக்குபாவாந்தரம் (நீங்களித்யாதி) அன்றிக்கே, (காணுமைக்கு) இத்யாதிவாக்யமும்-ஓரர்த்தமாய், இது - மூன்றுமர்த்தமாதல். இப்பக்ஷத்தில், மூர்த்திவர்த்தத்துக்கு, லோகவிலக்ஷணதீயமானவென்றது - * கழியமிக்கதோர்காதலாயிருக்கை.

"கனிவாய்மடவீர்" என்றத்தை-தத்காலீநவிசேஷணமாக்காதே பவிஷ்ய த்தாக நிர்வஹிக்கிறதுக்கடியேதென்ன; இவளதரம் விவர்ணமாயிருக்க, அவர்கள தரம் செவ்விபெற்றிருக்கக்கூடாமையாலே யென்பாராகநினைத்து; இவள்விஷயத் தி லிவர்களுக்குண்டான ஸ்நேஹத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாகக்காட்டுகிறார் (ப்ரி யோஹீத்யாதி) அதாவது-ஜ்ஞாநியானவன் விஷயத்தி லீச்வரன் மிகவும் ஸ்நே ஹித்திருக்குமாபோலே, இவர்களு மிவள்விஷயத்திலே அதிஸ்நிக்தைகளாயிறேயி ருப்பதென்றபடி. இப்படி அதிஸ்நிக்தைகளாகையாலே, இவளதரம் விவர்ணமாயி ருக்க வவர்களதரம் நிறம்பெற்றிருக்கக்கூடாதென்கிறார் (இவள்மாசுடையித்யாதி) இவளவனைப்பிரிந்த சமயத்திலே அவர்களதரமுருவினவுறைப்பை யருளிச்செய்கி றார் (அவர்கள்பண்டித்யாதி) (மாசுடையித்யாதி) ஸ்நாநமின்றிக்கே யழுக்குடைய வுடம்போடே தலைமயிரையுமுதறி அதரமும்வெளுத்து ஏகபுக்தமாய்க்கொண்டெ ன்றபடி. உலறி-உதறி. அதாவது-மயிரைப்பேணாதே யென்றபடி.

குரலென்னாதே, "பாண்குரல்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (இவற்றினி த்யாதி) வெள்ளோசையாய்-அசாரமாய். வெள்ளோசை-அசாராம்ஸம். பாண்-காந ம். பாட்டாயிருக்குமென்றது - காநமாயிருக்குமென்றபடி. ( பேச்சேதொடங்கியி சை ) என்றத்தால்பலிதம் - நிரதிசயபோக்யத்வமென்று விவக்ஷித்து, அதின் சர மாவதி (தேன்போலேயித்யாதி) தேனென்று - வண்டுக்குப்பேர். "எங்கும்-பாண் குரல் வண்டினோடு, எங்கும்-பசுந்தென்றலுமாகி" என்றுகூட்டுவது. பசுந்தென்ற ல்-செவ்வித்தென்றலென்றர்த்தம்விவக்ஷித்து, அதுக்குச்செவ்வியேதென்ன (கலப்ப ற்றவித்யாதி) "கலப்பற்ற" என்றத்தைவிவரிக்கிறார் ( பலவிடங்களிலேயித்யாதி ) பலவிடங்களிலேகாலிட்டுவாராதேயென்றது-பலசரீரங்களிலேபட்டு அந்ததுர்க்கந் தம் கலசிவாராதேயென்றபடி. தாய்தலைத்தென்றலாயிருக்கையென்றது-மேல்வரு கிற தென்றலுக்கெல்லாம் தாயாய், மூந்திவருகிறபோதே யிங்கேவருமதாயிருக்கை யென்றபடி. சினை-கவடு. சாகை இத்யர்த்தஃ. சேண்-உயர்த்தி. உயர்ந்தபணைகளையு டையவென்றபடி. நெய்தல்நிலம்-சமுத்ரப்ராந்தம்.

சௌலப்யத்தையு மழகையுமென்றது - "மாண்" என்றத்தையும், "கோல ம்" என்றத்தையும்பற்ற. வாமநனைச்சொன்னதுக்குபாவம் - தமக்குத்திருவடிகளி லே ருசிபிறந்த தவன்க்ருபையாலேயென்று திருவுள்ளம்பற்றி, (அடியிலே யிவர்க் குத்தானேயிறே ருசியையுண்டாக்கினான்) என்கிறார். பலபாட்டுக்களிலும் திருவடி களைச்சொன்னதுக்குபாவம் (அடிகளித்யாதி)

கனிவாய்மடவீர், எங்கும்-பாண்குரல்வண்டினொடு-எங்கும்- பசுந்தென்றலு மாகியென்றுதொடங்கி, பாதங்கள்-காண்பதென்ஞான்றுகொலோ வினையேனித்ய ந்வயஃ. "தேஷாம்ஜ்ஞாநீநித்யயுக்த ஏகபக்திர்விசிஷ்யதே। ப்ரியோஹி ஜ்ஞாநிநோத்யர்த்தமஹம்ஸசமமப்ரியஃ" ( தேஷாம்ஜ்ஞாநீநித்யயுக்தஏகபக்தி ர்விசிஷ்யதே। ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தமஹம்ஸசமமப்ரியஃ ) இதிபகவத்கீதா ஸூக்தமே... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ✱

# ஏழாம்பாட்டு.

பாதங்கண்மேலணிபூத்தொழக்கூடுங்கொல்பாவைநல்லீர்
ஓதநெடுந்தடத்துளுயர்தாமரைசெங்கழுநீர்
மாதர்கள்வாண்முகமுங்கண்ணுமேந்துந்திருவல்லவாழ்
நாதனிஞ்ஞாலமுண்டநம்பிரான்றன்னைநாடொறுமே.

௫௦

## ஆருயிரப்படி.

(பாதங்கள்) தன்மநோரதத்தை நிஷேதியாமையாலே தோழிமாரையுகந்து சம்போதிக்கிறாள். கடல்போலே பெருத்திருந்துள்ள பொய்கைகளிலே வளர்ந்த தாமரைப்பூவும் செங்கழுநீர்ப்பூவும், ஸ்த்ரீகளுடைய வழகியமுகங்களோடும் கண்களோடுமொக்கும்படியான திருவல்லவாழூக்கு நாயகனாய், ஜகத்தையெல்லாம் ப்ரளயத்தில் தன்வயிற்றிலேவைத்துப்பரிஹரித்தருளி, அவ்வளவுமன்றிக்கே ஆஶ்ரிதர்க்கு மிகவுமுபகாரகனானவனுடைய திருவடிகளிலே நித்யமாகப்பூவையணிந்து தொழவல்லோமோவென்கிறாள்... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தர்ஶநீயதடாகங்களையுடைய திருவல்லவாழூக்கு நிர்வாஹகனான ஆபத்ஸகன்திருவடிகளிலணிந்த பூவையாகிலும் தொழக்கூடுமோவென்கிறாள்.

ஓதம்-சமுத்ரம்போலே. நெடு-பெருத்த. தடத்துள்-தடாகங்களுக்குள்ளே. உயர்-உயர்ந்த. தாமரை-தாமரையும். செங்கழுநீர்-செங்கழுநீரும். மாதர்கள் - மாதருடைய. வாள்-ஒளியையுடைத்தான. முகமும்-முகத்தழகையும். கண்ணும்-கண்ணழகையும். ஏந்தும்-பரிக்கும்படியான. திருவல்லவாழ் - திருவல்லவாழூக்கு. நாதன்-ஸ்வாமியாய். இ-இந்த. ஞாலம்-ஜகத்தை. உண்ட-ப்ரளயங்கொள்ளாதபடி வயிற்றிலேவைத்து நோக்கினவபதாநத்தாலே. நம்-நமக்கு. பிரான்றன்னை-உபகாரகனென்றுதோன்றவிருக்கிறவனை. நாடொறும்-நித்யமாக. பாவை-பாவைபோலே. நல்லீர்-அவயவங்களினுடைய வகுப்பழகையுடைய விலக்ஷணஸ்வபாவைகளே. பாதங்கள்-திருவடிகளின். மேல்-மேலே. அணி-அணிந்த. பூ-பூவையாகிலும். தொழ - தொழ. கூடுங்கொல்-கூடுமோ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அவன்திருவடிகளிலே நித்யமாகப் பூவையணிந்து தொழவல்லோமே வென்கிறாள்.

(பாதங்கள்மேலணிபூத்தொழக்கூடுங்கொல்) திருவடிகளின்மேலே புஷ்பங்களையணிந்து நமக்குத்தொழக்கூடவற்றோ. (பாவைநல்லீர்) இவளைநிஷேதிக்கைக்கு க்ஷமைகளன்றிக்கே ஸ்திமிதைகளாயிருந்தபடி. எழுதினபாவைபோலே யிருந்தார்கள். நிஷேதியாமையாலேயுகந்து சம்போதிக்கிறாளாகவுமாம். (ஓதமித்யாதி) கடல்போலேபெருத்திருந்துள்ள தடாகங்களினுள்ளே, ஓக்கத்தையுடைத்தான தாமரைசெங்கழுநீரானவை, அவ்வூரில் ஸ்த்ரீகளுடைய ஒளியையுடைத்தான முகத்தையும் கண்ணையும் தரியாநின்றன. (ப்ரகாசிப்பியாநின்றதென்றபடி.) அன்றிக்கே, திருவோலக்கத்திற்படியே யவற்றைத்தள்ளும்படியாயிருக்கை. (திருவோலக்கத்தி லலங்காரார்த்தமான தாமரைகளை நிராகரிக்குமென்றபடி.) (மாதர்கள் வாண்முகமும்கண்ணுமேந்தும்) ஊருக்கும் வயலுக்கும் வாசிதெரிகையரிதாயிருக்கை. (திருவல்லவாழ்நாதன்) ஸ்ரீவைகுண்டநா

தனிலேற்றம். ஸ்ரீவைகுண்டத்துக்குக் கடவனாயிருக்கிறது - அந்தஃபுரத்துக்குக்கடவனென்கிறமாத்ரமிறே, * ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்ப இருக்கிறவிடமிறே; இதங்ஙனன்றிக்கே, ஒருவர்கூறையையெழுவருடுக்கிறதேசத்தில் தரிசறவிருக்கிறவிடமிறே. (இஞ்ஞாலமுண்ட) மேன்மைபாராதே தளர்ந்தார் தாவளமாயிருக்கும். ஆபத்தேசெப்பேடாக வயிற்றிலேவைத்துநோக்கும். அதுகதையில் கேட்கவேண்டியிருந்ததோ, ( நம்பிரான் ) சம்சாரப்ரளயங்கொண்ட என்னையெடுத்து இவ்வளவாக்கி யுபகரித்தவன்.

நாடொறும் - பாதங்கள்மேலணி பூத்தொழக்கூடுங்கொல்......*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (பாதங்களித்யாதி) "நாடொறும்-பாதங்கள்மேலணிபூத்தொழக்கூடுங்கொல்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( அவன்திருவடிகளிலேயித்யாதி )

"பாவைநல்லீர்" என்றதுக்குமூன்றர்த்தம். அதில்முந்தினது (இவளையித்யாதி) அதாவது - மரப்பாவைபோலே நிஷேதிக்க க்ஷமைகளன்றிக்கேயிருக்கிற நல்லீரென்றபடி. இரண்டாவது ( எழுதினபாவையித்யாதி ) அதாவது - கொல்லிமலையிலெழுதினபாவைபோலே யவயவங்களினுடைய வகுப்பழகையுடைய நல்லீரென்றபடி. மூன்றாவது (நிஷேதியாமையாலேயித்யாதி) அதாவது-பாவைபோலே பரதந்த்ரைகளான நல்லீரென்றபடி. நல்லீர்-விலக்ஷணஸ்வபாவைகளே. இது அர்த்தத்ரயத்துக்குமொக்கும். பாவை-மரப்பாவையாதல், கொல்லிமலையிலெழுதினபாவையாதல். பாவை-ப்ரதிமை. பாவையென்று - ஸ்த்ரீகளுக்கும்பேர். இப்போது, பெண்களில் நல்லரானவர்களேயென்றபடி. இதுமூன்றுமர்த்தத்துக்குச்சேரும். அதாவது-கீழ்ச்சொன்னபடியே பாவைபோலே பரதந்த்ரைகளான நல்லீரென்னுதல்; பாவைகளில்-பெண்களில், நல்லரானவர்களேயென்னுதல்.

ஏந்துகை-தரிக்கை. அதாவது-சாத்ருஸ்யத்தைவஹிக்கை. த்விதீயார்த்தத்துக்கு, ஏந்துகை-தள்ளுகை. திருவோலக்கத்திற்படியாவது - சிஷ்டர்களோலக்கத்திலே அசிஷ்டர்கள்வந்திருந்தால், க்ரமேண கடத்திவிடுகை. முந்தினவர்த்தத்துக்கு பலிதம் (ஊருக்குமித்யாதி)

அதிசயமேதென்ன ( ஸ்ரீவைகுண்டேத்யாதி ) தரிசு - பாழ்கிடக்கிறநிலம். (தனிசர்) என்றுபாடமாகில், தனிசர்-குறும்பர். தாவளமென்று - க்ருஹமாய், ஆதாரமென்றபடி. விவரணம் (ஆபத்தேயித்யாதி)

பாவைநல்லீரித்யாரப்ய, நம்பிரான்றன்னுடைய - பாதங்கள்மேல்-நாடொறும்-பூவை-அணிந்து-தொழக்கூடுங்கொ லித்யந்வயஃ. ஒருவர்கூறையை யெழுவருடுக்கையாவது- கலஹத்திலேயொருவர் புடைவையையேழுபேர் பறித்துடுக்கையாதல், தாரித்ர்யத்தாலே யொருத்தன்புடைவையை யேழுபேருடுக்கையாதல்... ...*

---

# எட்டாம்பாட்டு.

---

நாடொறும்வீடின்றியேதொழக்கூடுங்கொனன்னுதலீர்
ராடுறுதீங்கரும்பும்விளைசெந்நெலுமாகியெங்கு
மாடுறுபூந்தடஞ்சேர்வயல்சூழ்தண்டிருவல்லவாழ்
நீடுறைகின்றபிரானிலந்தாவியநீள்கழலே.

## ஆருயிரப்படி.

(நாடொறும்) (நன்னுதலீர்) ப்ரணமபாம்ஸுலபரார்த்யலலாடைகளாக வுங்களைக்காண்பதென்றோ. எப்போதும் பக்வபலமாய் அருகேயிருக்கிற பூத்தபொய்கைகளோடுசேர்ந்த வயல்சூழ்ந்து ஸ்ரமஹரமான திருவல்லவாழிலே, அநுக்ரஹசீலனாய்க்கொண்டு நிரந்தரவாஸம்பண்ணுகிறவனுடைய, குணகுணநிரூபணம்பண்ணாதே யெல்லாரையு மங்கீகரிக்கக்கடவதாய், ஆஸ்ரிதரிருந்தவிடத்திலேசெல்லுந் திருவடிகளை சர்வகாலமு மிடைவிடாதே தொழக்கூடவற்றோவென்கிறாள்... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அழகியவிளைநிலங்களாலே சூழப்பட்ட திருவல்லவாழிலே நித்யவாசம்பண்ணுகிறவனுடைய, சகலசம்ஶ்லேஷ ஸ்வபாவமான திருவடிகளை நிரந்தராநுபவம் பண்ணக்கூடுமோவென்கிறாள்.

எங்கும்-சர்வப்ரதேசத்திலும். ஆடு-ஆடுதலை. உறு-உறும்படி. தீ-இனிய. கரும்பும்-கரும்பும். விளை-முதிரவிளைந்த. செந்நெலும்-செந்நெலும். ஆகி-ஆய். மாடு-பரிசரத்தை. உறு-அணுகின. பூந்தடம்-பூத்ததடாகங்களை. சேர்-சேர்ந்த. வயல்-வயலாலே. சூழ்-சூழப்பட்ட. தண்-குளிர்ந்த. திருவல்லவாழ்-திருவல்லவாழிலே. நின்றுறைகின்ற-நிரந்தரவாசம்பண்ணுகிற. பிரான்-மஹோபகாரகனுடைய. நிலம் - பூமியை. தாவிய-அளந்துகொண்டு. நீள்-எல்லார்தலையிலும் சென்றுபொருந்தும்படி வளர்த்தியையுடைத்தான. கழல்-திருவடிகளை. நல்-தத்ப்ரணமத்தாலே தர்ஶநீயமாம்படியான. நுதலீர்-நுதலையுடையவர்களே. நாடொறும்-நாடோறும் வீடு-க்ஷணவிச்சேதம். இன்றியே-இன்றியே. தொழக்கூடுங்கொல்-தொழக்கூடுமோ ................*

## ௮-எட்டாம்பாட்டு.

சர்வசுலபனானவன் திருவடிகளிலே சர்வகாலமு மிடைவிடாதே யடிமைசெய்யக்கூடவற்றே யென்கிறாள்.

(நாடொறுமித்யாதி) நாடொறுமென்று - தர்ஶபூர்ணமாஸாதிகளை வ்யாவர்த்திக்கிறது. வீடின்றியேயென்று - நித்யாக்நிஹோத்ரத்தை வ்யாவர்த்திக்கிறது. "ஒழிவில்காலமெல்லாம்" என்கிறபடியேயிறேயிவர் ப்ரார்த்திப்பது. ஆசார்யோபதேசத்தை விப்ரலம்பித் தபேக்ஷிக்கிற நம்மைப்போலன்றியே, தாஸ்யம்ரஸித்து ராகத்தாலே யபேக்ஷிக்கிறாரிறே. (நன்னுதலீர்) அவன்வந்தவுபகாரத்துக்கு அவன்திருவடிகளிலே விழுந்து ப்ரணமபாம்ஸுலபரார்த்ய லலாடைகளாக வுங்களைக்காணவல்லேனே. "தலையில்வணங்கவுமாங்கொலோ" என்று தொழக்கடவளே, அப்போதிவர்களும் தொழுவர்களே; இவளுக்குக்கைங்கர்யத்தி லுகப்புப்போலே, இவள்பேறே தங்களுக்குகப்பாயிருக்குமவர்களே. (ஆடுறுதீங்கரும்பும்) கரும்புகளெப்போது மாடுகையிலேயுற்றிருக்கை. தீ-தித்திப்பு. செந்நெலுமெப்போது மறுக்கைக்குப் பக்வமாய் விளைந்துகிடக்கை. அங்குள்ளவையடைய பக்வபலமாய்க்காணுமிருப்பது. (மாடுறுபூந்-

யாதி) அருகேயுற்றிருப்பதாய்ப் பூக்களையுடைத்தான தடாகங்களைச்சேர்ந்த வயல்களாலே சூழப்பட்டிருப்பதாய் ப்ரமஹரமான திருவல்லவாழிலே. ஊரைத்தடாகங்கள்சூழ்ந்து, தடாகங்களை வயல்கள்சூழ்ந்திருக்க, இப்படிகளாலேகுளிர்ந்து காணுமூர்தானிருப்பது. (நீடித்யாதி) குணகுணநிரூபணம்பண்ணாதே யெல்லார்தலைமேலும் பொருந்தும்படி சுலபமான திருவடிகளைக்கொண்டு, அவதாரம்போலே தீர்த்தம்ப்ரஸாதியாதே நித்யவாஸம்பண்ணுகிற வுபகாரமே யிங்குத்தைக்குத்தன்னேற்றம்.

நிலந்தாவியநீள்கழல்-நாடொறும்வீடின்றியேதொழக்கூடுங்கொல்*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (நாடொறுமித்யாதி) "நீடுறைகின்றபிரான் நிலந்தாவியநீள்கழல் - நாடொறும்வீடின்றியே தொழக்கூடுங்கொல்" என்றத்தைக்கடாக்ஷித்த வதாரிகை (சர்வசுலபனுனவித்யாதி)

தர்ஶபூர்ணமாஸம் - பக்ஷந்தோறுமிஷ்டி. "யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம்ஜுஹுயாத் ஸாயம்ப்ராதஃ" (யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம்ஜுஹுயாத்ஸாயம்ப்ராதஃ) இது-நித்யாக்நிஹோத்ரம். ஒருகால்தொழுதாற்போராதோ, "நாடொறும்வீடின்றி" என்கிறதென்னென்ன (ஒழிவிலித்யாதி) நமக்கிப்படி யபேக்ஷைபிறக்கவில்லையேயென்ன (ஆசார்யேத்யாதி)

தன்தசையைக்கண் டுருவியிருக்கிறவர்களை -"நன்னுதலீர்" என்னக்கூடுமோவென்ன (அவன்வந்தவித்யாதி) தோழிமார் வணங்குவர்களோவென்ன (தலையிலித்யாதி)

ஆடுறு-ஆலையாடுகைக்கு பக்ஷமாயிருக்கை. ஆடுகையிலே யுற்றிருக்கையென்றது - ஆலையாடுகையிலே யொருப்பட்டிருக்கை பலிதம் (அங்குள்ளவையித்யாதி) அதாவது-நாம் சேருகையேதாமஸம், அவன் நம்மையநுபவிப்பிக்குமென்றபடி. மாடுறு - பர்யந்தத்திலேகிட்டியிருக்கை. தண்மைக்குஹேது (ஊரையித்யாதி)

குணகுணேத்யாதி வாக்யத்துக்குக்கருத்து - சௌலப்யம் வாமனனுக்கு மிவனுக்கும் சமாநம், நீடுறைகின்றதே யிங்குத்தைக்குத் தன்னேற்றமென்று.

ஆடுறுவித்யாரப்ய, நீள்கழல்-நன்னுதலீர்-நாடொறும் வீடின்றியேதொழக்கூடுங்கொலித்யந்வயஃ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

---

# ஒன்பதாம்பாட்டு.

கழல்வளைபூரிப்பயாங்கண்டுகைதொழக்கூடுங்கொலோ
குழலென்னயாழுமென்னக்குளிர்சோலையுட்டேனருந்தி
மழலைவரிவண்டுகளிசைபாடுந்திருவல்லவாழ்
சுழலின்மலிசக்கரப்பெருமானதுதொல்லருளே.

## ஆறாயிரப்படி.

(கழல்வளை) குளிர்ந்தசோலைகளிலேபுக்கு மதுபாநத்தைப்பண்ணி, குழலோசையென்னவும் யாழோசையென்னவுமாம்படி, முக்தமா

ய்க் கண்ணுக்கழகியவானவண்டுகள் ப்ரீத்யதிசயத்தாலே யிசைபாடாநி ன்றுள்ள திருவல்லவாழிலே, ப்ரதிகூல நிரஸநத்வரையாலே மிகவும் சுழன்று வாராநின்றுள்ள திருவாழியைத்தரித்துக்கொண்டுநின்ற சர்வே ஶ்வரனை, நம்முடைய கழலுகிறவளைகள் பூர்ணமாகக்கண்டு தொழலாம் படி யவனருள்கூட வற்றோவென்கிறாள் ...................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், மதுபாநமத்தமான வண்டுகளாடும் திருவல்லவாழில் கையுந்தி ருவாழியுமான சர்வேஶ்வரனுடைய க்ருபையானது, நாமவனை யநுபவிக்கும்படி லப்யையாக வற்றோவென்கிறாள்.

குளிர்-குளிர்ந்த. சோலையுள்-சோலையிலே. தேன்-மதுவை. அருந்தி-பானம் பண்ணி. மழலை-முக்தங்களாய். வரி-வரியையுடைத்தான. வண்டுகள் - வண்டுகளா னவை. குழலென்ன-குழலென்றுசொல்லும்படியாகவும். யாழென்னவும்-யாழென் றுசொல்லும்படியாகவும். இசை-இசை. பாடும்-பாடாநிற்கிற. திருவல்லவாழ்-திரு வல்லவாழிலே நிற்பானாய். சுழலில்-ஸ்வதேஜோப்ரமணத்தாலே. மலி-மிகைத்திரு க்கிற. சக்கரம் - திருவாழியையுடையனான. பெருமானது - சர்வேஶ்வரனுடைய. தொல்-ஸ்வாபாவிகமான. அருள்-க்ருபையானது. கழல்-கழலுகிற. வளை - வளைகள். பூரிப்ப-பூரிக்கும்படி. யாம்-நாம். கண்டு-அவனைக்கண்டு. கைதொழ -கைதொழும்ப டியாக. கூடுங்கொலோ-கிட்டவற்றோ.

அருளென்று - உதவியாய், அவனுடையவுபகாரத்தைக்கண்டு நாம்கைதொ ழக்கூடுமோவென்றுமாம்... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

நம்முடையகழலுகிறவளைகள் பூரிக்க அவனைக்கண்டுதொழும்ப டி அவனருள்கூடவற்றோவென்கிறாள்.

(கழல்வளைபூரிப்ப) "வெள்வளை" என்னுமாபோலே, கழல்வளை யென்று - வளைக்குவிசேஷணமாய் விட்டதுகாணும். இவளைக்கைவிடு கையாலேயிறே யிதுவிசேஷணமாகவேண்டிற்று. பூரிப்ப-பூர்ணமாக. அ வன்வரில் கைமேலேகாணலாமேயிவற்றை. (யாங்கண்டுகைதொழக்கூடு ங்கொலோ) இதுக்குமேலேக்ரியை. (யாம்) விஶ்லேஷத்தில் வளைகழலு வது தனக்கேயானாலும் காட்சியெல்லார்க்குமொத்திருக்குமே. (குழ லென்னயாழுமென்ன) குழலென்னவுமாய் யாழென்னவுமாயிருக்கை. நாட்டிலினியவற்றையெல்லாம் சேரக்கேட்டாப்போலேயிருக்கும். "வி ஷ்ணுநாஸத்ருஶோவீரோஸோமவத்ப்ரியதர்ஶந:" (விஷ்ணுநாஸத்ரு ஶோவீர்யேஸோமவத்ப்ரியதர்ஶந:) என்னுமாபோலே. (குளிர்சோலை யுள்தேனருந்தி) ஶ்ரமஹரமானசோலையிலே குளிருக்குப் பரிஹாரமாக த்தேனைப்பருகி. அருந்தல்-உண்டல். (மழலைவரிவண்டுகள்) முக்தமாய் தர்ஶநீயமானவண்டுகள், ப்ரீதிக்குப்போக்குவிட்டுப் பாடாநின்றுள்ள திருவல்லவாழ். இதிலேநிற்பானாய் (இசைபாடும்) செருக்கருமாய் சுகு

மாரருமாயிருப்பார், "மரம்" என்று சந்தநத்தைக்கழித்துப் புழுகுநெய்யையேயிட்டுக்கொண்டு திரியுமாபோலே, இவையுமியலைவிட்டு இசையையேபாடும். (சுழலித்யாதி) ப்ரதிகூலநிரஸநத்வரையாலே மிகவும்சுழன்று வாராநின்றுள்ள திருவாழியையுடைய சர்வேஸ்வரன். (சுழலின் மலிசக்கரம்) சுழல்வதுபோலத் துளங்காநின்றுள்ள சக்கரமென்னவுமாம். (தொல்லருள்) ஸ்வாபாவிகமான அருளாலே-கழல்வளைபூரிப்ப யாங் கண்டு கைதொழக்கூடவற்றே ............... ........ ......................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (கழல்வளையித்யாதி) "கழல்வளைபூரிப்பயாங்கண்டுகை தொழ-பெருமானதுதொல்லருள்-கூடுங்கொலோ" என்றதைக்கடாக்ஷித்தவதாரிகை (நம்முடையவித்யாதி)

விசேஷணமாகைக்கு ஹேதுவேதென்ன (இவளையித்யாதி) இவளைக்கைவிடுகையாலேயென்றது-இவளையவன கைவிடுகையாலேயென்னுதல், இந்தவளைகையை விடுகையாலேயென்னுதல். அதுபூரிக்கைக்குஹேதுவேதென்ன (அவன்வரிலித்யாதி) இதுக்குமேலே க்ரியையென்றது - இந்தக்ரியைக்குமேலே யந்வயமென்றபடி.

யாழ்-வீணை. (குழலென்னவுமாமிதி) குழல்போலேயும் வீணைபோலேயுமிருக்கையென்றபடி. "குழலென்னயாழுமென்ன" என்றத்தால்பலிதம் (நாட்டிலித்யாதி) ஒன்றுக்கநேகத்ருஷ்டாந்தம் சொன்னவிடமுண்டோவென்ன (விஷ்ணுநேத்யாதி)

"சுழலின்மலிசக்கரம்" என்றதுக்கிரண்டுபொருள். அதில் (மலி-சுழலில்-சக்கரம்) மிகவும் சுழன்றுவாராநின்றுள்ள சக்கரமென்னுதல்; இத்தையருளிச்செய்கிறார் (ப்ரதிகூலேத்யாதி) இரண்டாவது, உபமார்த்தேபஞ்சமியாய்; சுழல்வது போல், மலி-துளங்காநின்றுள்ள, சக்கரமென்னுதல்; இத்தை யருளிச்செய்கிறார் (சுழல்வதுபோலவித்யாதி) மலிதல்-துளங்குதல். துளங்குகையாவது-சலித்தலும், விளங்குதலும். "தொல்லருள்" என்றதுக்கு-அவதாரிகையிலே யோரர்த்தம், பாட்டின்முடிவிலே ஓரர்த்தம்.

அவதாரிகைக்குச்சேர; கழல்வளைபூரிப்ப யாங்கண்டுகைதொழும்படி-மழலை வரிவண்டுகள் - குளிர்சோலையுட்டேனருந்தி - குழலென்ன யாழுமென்ன-இசைபாடுமித்யாரப்ய, தொல்லருளானது-கூடுங்கொலோவென்றந்வயமாதல்; தொல்லருளாலே-கழல்வளைபூரிப்பயாங்கண்டுகைதொழக்கூடுங்கொலோ வென்றந்வயமாதல். "விஷ்ணுநாஸத்ருஸோவீர்யே" (விஷ்ணுநாஸத்ருஸோவீர்யே) இத்யாதிஸங்க்ஷேபே... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## பத்தாம்பாட்டு.

தொல்லருணல்வினையாற்சொலக்கூடுங்கொறேழிமீர்கா
டொல்லருமண்ணும்விண்ணுந்தொழநின்றதிருநகர
நல்லருளாயிரவர்நலனேந்துந்திருவல்லவாழ்
நல்லருணம்பெருமானாராயணனுமங்களே.

## ஆறுயிரப்படி.

(தொல்லருள்) தோழிமீர்காள், தன்னுடைய கண்ணழிவற்ற க்ருபையை சம்சாரமும் திருநாடுமொக்க வநுபவிக்கலாம்படியான திருநகரியாய், எம்பெருமான் றன்னிற்காட்டி லநுக்ரஹசீலரான வாயிரவர் தன்னுடைய கல்யாணகுணத்தைக் கொண்டாடும்படியான திருவல்லவாழிலேநின்றருளி, நல்லருளையுடையனாய்க்கொண்டு நமக்கு ஸ்வாமியான நாராயணனுடைய திருநாமங்களை, அவனுடைய ஸ்வாபாவிகக்ருபையாலே நாம்ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டுசொல்லக்கூடவற்றேயென்கிறாள்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விலக்ஷணபுருஷவாஸஸ்த்தாநமான திருவல்லவாழில் நிருபாதிகசம்பந்த விசிஷ்டனான நாராயணன்றிருநாமங்களை, அவன் க்ருபையாலே நாம் சொல்லக்கூடுமோ வென்கிறாள்.

தொல்-ஸ்வாபாவிகமான. அருள் - அவனுடையவுபகாரகத்வத்தை. மண்ணும்-சம்சாரத்திலுள்ளாரோடு. விண்ணும்-பரமபதத்திலுள்ளாரோடுவாசியற. தொழு-அநுபவித்துத்தொழும்படி. நின்ற-அவன்வந்துநின்ற. திரு-ஸ்ரீமத்தான. நகரம்-நகரமாய். நல்-ஆஸ்ரிதவிஷயத்தில் அவனிலும்விஞ்சின. அருள்-அருளையுடையரான. ஆயிரவர்-ஆயிரம்புருஷர்கள். நலன் - பகவத்ஜ்ஞாநப்ரேமாதிரூபமானநன்மையை. ஏந்தும்-தரிக்கும்படியான. திருவல்லவாழ்-திருவல்லவாழிலே. நல் - நன்றான. அருள்-அருளையுடையவனாய்க்கொண்டு. நம்-நம்மையநுபவிப்பிக்கும். பெருமான்-ஸ்வாமியாய். நாராயணன் - சமஸ்தகுணவிபூதியுக்தனானநாராயணனுடைய. நாமங்கள்-தத்தத்குணவிபூதிவாசகமானதிருநாமங்களை. தோழிமீர்காள் - திருநாமோச்சாரணத்துக்குகந்திருக்கும் தோழிமீர்காள். அவனுடைய, தொல் - ஸ்வாபாவிகமான. அருள்-அருளாகிற. நல்வினையால்-சுக்ருதவிசேஷத்தாலே. சொலக்கூடுங்கொல் - நாம் சொல்லக்கூடுமோ.

அருளென்று - உபகாரமாய், அதடியான வவனுடைய நல்லசெயல்களாலே சொல்லியேத்தக்கூடுமோவென்றுமாம் .... ... ... ... ... ... ... *

## ஈடு-பத்தாம்பாட்டு.

அவனுடைய ஸ்வாபாவிகக்ருபையாலே யவனைக்காணப்பெற்று, ப்ரீதியாலே இனிதாய்க்கொண்டு திருநாமங்களைச் சொல்லக்கூடவற்றேயென்கிறாள்.

( தொல்லருளித்யாதி ) அவனுடைய ஸ்வாபாவிகமான அருளாலே. ( நல்வினையால் ) அதாவது-அவனைக்காணப்பெற்று, அப்ப்ரீதியாலே, சொல்லக்கூடவற்றே. ஸ்வாபாவிகக்ருபையாலே யவனைக்காணப்பெற்று, ப்ரீதியாலே யுகந்துகொண்டு திருநாமத்தைச்சொல்லக்கூடவற்றேயென்னுதல்; நல்வினை - உகப்பு. அன்றிக்கே, ஸ்வாபாவிகக்ருபையாலுண்டான சுக்ருதத்தாலே யவனைக்கண்டு திருநாமங்களைச்சொல்லக்

கூடவற்றேவென்னுதல். "'நா, நீரற்றிருக்கை பாபபலமிறே, நா நீருண்டாய்த்திருநாமம் சொல்லவல்லோமேயென்கிறாள்' என்று அம்மங்கியம்மாள் வாக்யார்த்தமாகச்சொல்லும்" என்றருளிச்செய்வர். (தொல்லருளித்யாதி) தன்னுடைய கண்ணழிவற்ற க்ருபையை சம்சாரத்திலுள்ளாரும் நித்யவிபூதியிலுள்ளாரும் தொழுகின்ற மஹாநகரம். (நல்லருளாயிரவர்) எம்பெருமானிலும் ப்ரஜாரக்ஷணத்தி லநுக்ரஹசீலராயிருக்கிறவர்கள். (நலனித்யாதி) அவனுடைய கல்யாணகுணங்களைக்கொண்டாடி வர்த்திக்குமூரொன்னுதல், ப்ரேமத்தாலே மங்களாசாஸநம்பண்ணி வர்த்திக்குமூரொன்னுதல்.(நல்லருணம்பெருமான்) நல்ல அருளையுடையனாய் நமக்கு ஸ்வாமியாயிருக்குமவன். நல்லருளாகிறது-வாத்ஸல்யம்.வாத்ஸல்யஸ்வாமித்வங்கள் - நாராயணசப்தார்த்தம். அர்த்தத்தையருளிச்செய்து பின்னை சப்தத்தையருளிச்செய்கிறார் (நாராயணன்நாமங்களே) நாராயணசப்தம்-தர்மிநிர்த்தேஸம். இஸ்ஸ்வபாவங்களாலே நிரூபிதவஸ்துவுக்குண்டான குணசேஷ்டிதங்களுக்கு வாசகம் - அல்லாத திருநாமங்கள் ...............................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (தொல்லருளித்யாதி) " தொல்லருள்நல்வினையால்-நாராயணன் நாமங்கள் - சொலக்கூடுங்கொல் " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( அவனுடையவித்யாதி )

"தொல்லருள்நல்வினையால்" என்றதுக்கிரண்டுபொருள். முந்தினது-தொல்லருளாலே யவனைக்காணப்பெற்று,அத்தால்வந்த ப்ரீதியாலே திருநாமங்களைச்சொல்லக்கூடுமோவென்று ; இத்தையருளிச்செய்கிறார் ( அவனுடைய ஸ்வாபாவிகக்ருபையாலேயித்யாதி ) " தொல்லருளாலே, '' அவனைக்காணப்பெற்றென் றத்யாஹரிப்பது. இந்தயோஜநையில், " நல்வினை " என்று - சத்கர்மமாய், தத்பலமான ப்ரீதியைலக்ஷிக்கிறது. இரண்டாமர்த்தம்-தொல்லருளாகிற நல்வினையாலே நாவுக்கு நீர்வந்து திருநாமங்களைச்சொல்லக்கூடுமோவென்று ; இத்தையருளிச்செய்கிறார் (நாநீரற்றிருக்கையித்யாதி) அதாவது-நாநீரற்றிருக்கை பாபபலமானால், நாநீர்வருகை புண்யபலமாகையாலே, அவனுடையக்ருபையாகிற சுக்ருதத்தாலே நாநீருண்டாய்த்திருநாமம் சொல்லவல்லோமோவென்றபடி. நல்வினை.- சுக்ருதம். தொல்லருள் - ஸ்வாபாவிகக்ருபை.

அருளென்னாதே, " நல்லருள் '' என்றுவிசேஷித்ததுக்குபாவம் ( எம்பெருமானிலுமித்யாதி ) "நலன்" என்றது - நலமாய், அத்தால்-குணசமூஹத்தைச்சொல்லி; ஏந்துகையாவது-தரிக்கையாய், அவன்குணங்களைக் கொண்டாடிக்கொண்டிருக்கையென்று முந்தினவர்த்தம். இரண்டாமர்த்தத்துக்கு, நலனென்று - நலமாய், அதாவது - ப்ரேமமாய், ஏந்துகையாவது-ஏறிட்டுக்கொள்ளுகையாய், ப்ரேமத்தாலே யவனுடைய ரக்ஷகத்வத்தைத் தாங்களேறிட்டுக்கொண்டு அவனுக்கு மங்களாசாஸநம்பண்ணுகிற வூரொன்றுசப்தார்த்தம்.

நாராயணசப்தம் ப்ரஸ்துதமானவர்த்தகதக நிர்ப்பந்தமுண்டாகையாலே, நாராயணசப்தார்த்தமாக யோஜிக்கிறார் (நல்லருளாகிறதித்யாதி) வாத்சல்யம்-ப

ஹூஶ்ரீஹரியிலே. ஸ்வாமித்வம்-தத்புருஷனிலே. நாராயணசப்தமும் திருநாமமன்றோ, இத்தைப்ரதாநமாகச்சொல்லுவானென்னென்ன (நாராயணசப்தமித்யாதி) தர்மிநிர்த்தேசமென்றது - ஸ்வரூபநிரூபகமென்றபடி. இஸ்ஸ்வபாவங்களாலேயென்றது - வாத்ஸல்யஸ்வாமித்வங்களாலேயென்றபடி. குணங்களில்வைத்துக்கொண்டு ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகள் நிரூபகங்களாய், அல்லாதகுணங்களிவற்றாலே நிரூபிதமான ஸ்வரூபத்துக்கு விசேஷணமானாப்போலே; திருநாமங்களிலும் நாராயணசப்தம் ஸ்வரூபநிரூபகமாய், அல்லாததிருநாமங்க ளிந்தத்திருநாமத்தாலே நிரூபிதமான வஸ்துவுக்குண்டான குணசேஷ்டிதங்களுக்கு வாசகமாயிருக்குமென்றபடி.

தோழிமீர்காள், நலனேந்தும் - நல்லருளாயிரவரையுடைத்தாய்-தொல்லருள்மண்ணும்விண்ணும் தொழநின்றதிருநகரமான - திருவல்லவாழில் நல்லருள் நம்பெருமான் நாராயணன் நாமங்களை - தொல்லருள் நல்வினையால் சொலக்கூடுங்கொலென்றந்வயம்... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

# பதினொன்றாம்பாட்டு.

நாமங்களாயிரமுடையநம்பெருமானடிமேற்
சேமங்கொடென்குருகூர்ச்சடகோபன்றெரிந்துரைத்த
நாமங்களாயிரத்துளிவைபத்துந்திருவல்லவாழ்
சேமங்கொடென்னகர்மேற்செப்புவார்சிறந்தார்பிறந்தே.

## ஆறாயிரப்படி.

(நாமங்கள்) நாமங்களாயிரத்தையுமுடையனாய் சர்வேஶ்வரத்வேந ப்ரசித்தனானவன்திருவடிகளிலே, தமக்கு ரக்ஷைபார்த்துக்கொண்ட வாழ்வா ராராய்ந்தருளிச்செய்த ஆயிரந்திருநாமங்கள்போலே குணசேஷ்டிதாதிகளுக்கு ப்ரதிபாதகமான வாயிரத்திலும் இத்திருவாய்மொழியைத் திருவல்லவாழாகிற சேமமுடைத்தான தென்னகரிலே கூட்டிச் சொல்ல வல்லவர், சம்சாரத்திலே யிருந்துவைத்தே யெல்லாரிலும் சிறந்தாரென்கிறார். ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியைச் சொல்ல வல்லவர்கள் பகவதநுபவயோக்ய ஜந்மத்தையுடையவர்களென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

நாமங்களாயிரமுடைய - "பேராயிரங்கொண்டதோர்பீடையன் - நாராயணன்" என்கிறபடியே ப்ரதாநநாமமான நாராயணசப்தத்திலுடையஅம்சமான நாமஸஹஸ்ரத்தையு முடையனாய். நம்பெருமான் - அவற்றை யநுபவித்து "நம்ஸ்வாமி" என்று சர்வரும் பற்றும்படியான சர்வேஶ்வரனுடைய. அடிமேல்- திரு

வடிகளின்மேலே. நினைத்தபடி யநுபவிக்கப்பெறுத வபிநிவேசம் நடக்கச்செய்தே யும், சேமம் - க்ஷேமகாத்வ புத்திரூப வ்யவசாயத்தை. கொள் - உடையராய். தென் - கட்டளைப்பட்ட. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். தெரிந்து - "இத்திருவடிகளே ரக்ஷகம்" என்று ஆராய்ந்து விஸ்வசித்து. உரைத்த - அருளிச்செய்த. நாமங்கள் - அவனுக்குத் திருநாமங்கள்போலே வாசகமான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இவை - இவை. பத்தும் - பத்தையும். திருவல்லவாழ் - திருவல்லவாழாகிற. சேமங்கொள் - ரக்ஷாயுக்தமான. தென் - அழகிய. நகர்மேல் - திருநகரிவிஷயமாக. செப்புவார் - செப்பவல்லவர்கள். பிறந்து - சரீரசம்பந்தத்தோடே யிருந்துவைத்து. சிறந்தார் - பகவதநுபவமாகிற சிறப்பையுடையராவர்கள்.

இது - கலித்துறை. ... ... ... ... ... ... ... ... ... ... ⁕

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழியை யப்யசிக்கவல்லார் சம்சாரத்திலே யிருந்துவைத்தே பகவத் குணநுபவத்தாலே யெல்லாரிலும் சிறந்தவர்களென்கிறார்.

(நாமங்களித்யாதி) "ஜெவொ நாஉஸஹஹூவாநு" (தேவோ நாமஸஹஸ்ரவாந்) என்கிறபடியே, குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களை யுடையனாகையாலே ஸர்வேஸ்வரனாக ப்ரசித்தனானவன். நம் - ப்ரசித்தி. பெருமான் - சர்வேஸ்வரன். (அடிமேல்சேமங்கொள்) புறம்புள்ள காற்கட்டுக்களைவிட்டு, அவன்றிருவடிகளே தமக்கு ரக்ஷகமாகப் பற்றின ஆழ்வார். (தெரிந்துரைத்தநாமங்களாயிரத்து ளிவை பத்தும்) அவனுக்குத் திருநாமங்கள்போலே குணசேஷ்டிதாதிகளுக்கு ப்ரதிபாதகமான ஆயிரத்திலு மாராய்ந்துரைத்த. ஆயிரந்திருநாமங்களைச்சொன்னால் அவன்குணங்கள் தோற்றுமாபோலேயிறே யிவற்றுக்கு மவன்குணங்கள் தோற்றும்படி. இவை பத்தையும், திருவல்லவாழாகிற சேமமுடைத்தான தென்னகரிலே கூட்டிச் சொல்லுவார். தென்னகர்- அழகியநகரி. (சிறந்தார்பிறந்தே) ஒருவனுக்குப் பிறக்கைபோக்கித் தாழ்வின்றிக்கே யிருக்க, அவனுக்கு ⁎ பலபிறப்பா யொளிவருமாபோலே, இவர்களுமிங்கே பகவதநுபவம் பண்ணுகையாலே சீரியர்கள். "சீதனையேதொழுவார் விண்ணுளாரிலும் சீரியர்" என்னக்கடவதிறே. இப்பத்தை யப்யசிக்கவல்லார், என்னைப்போலே அவனிருந்ததேசத்திலே போகப்புக்கு, பலஹாநியாலே நடுவழியிலே விழுந்து நோவுப்படாதே உகந்தருளின தேசத்திலே புக்கநுபவிக்கப் பெறுவர்கள். இவர்கள் ஜந்மங்கள் கர்மநிபந்தநமா யிருக்கச்செய்தே அவனுக்குறுப்பாகையாலே முக்தசரீரத்திலுங்காட்டில் ஶ்லாக்யம். ஆஶ்ரிதார்த்தமான பகவதவதாரம்போலே ஶ்லாக்யமென்கை. ... ... ... ... ... ... ... ... ... ...⁕

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (நாமங்களித்யாதி) "இவைபத்தும் - செப்புவார் சிறந்தார்பிறந்தே" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை (இத்திருவாய்மொழியையித்யாதி)

"நாமங்களாயிரமுடைய" என்கிறவிது - ஹேதுகர்ப்ப விசேஷணமென்று திருவுள்ளம்பற்றி (திருநாமங்களையுடையனுகையாலே) என்கிருர். "நம்" என்று - ப்ரசித்தியைச் சொல்லுகிறது. "பெருமான்" என்று - சர்வேஶ்வரன்.

ஆயிரம்பாட்டுக்களி லிவைபத்தென்னுதே, "நாமங்களாயிரத்துளிவைபத்தும்" என்பானென்னென்ன; "நாமங்களாயிரமுடைய" என்றத்தை ஸ்ருதிகரித்து பாவம் (ஆயிரம்திருநாமங்களையித்யாதி) (தோற்றும்படி) ஆகையாலே திருநாமங்களான வாயிரமென்னக் குறையில்லையென் றத்யாஹார்யம். சேமம் - திருமதிள் முதலான ரக்ஷை.

கூட்டிச்சொல்லுகையாவது - ப்ரதிபாதகமென்கிற நினைவோடே சொல்லுகை. "பிறந்தே - சிறந்தார்" என்றந்வயிப்பது. ஜந்மத்தையுடையராயிருக்கச்செய்தே ஶ்லாக்யராயிருப்பர்கள். பிறவியில் ஶ்லாக்யதை கூடாதென்னுமத்தையும்; இப்படிக்கொத்த ஜந்மத்தையுடையரா யிருக்கச்செய்தே, ஈஶ்வரனுக்குப் பிறக்கப் பிறக்க குணங்கள் புகர்பெற்று வருமாபோலே, இவர்களும் பகவதநுபவம் பண்ணுகையாலே ஶ்லாக்யரா யிருப்பர்களென்னுமத்தையு மருளிச்செய்கிருர் (ஒருவனுக்கித்யாதி) ஒருவனுக்கு - சம்சாரிசேதநனுக்கு. பிறக்கைபோக்கி - பிறக்கையைப்பற்ற. ஜந்மத்தைக்காட்டிலும் தாழ்ச்சியின்றிக்கே யிருக்கவென்றபடி. "இங்கே பகவதநுபவம்பண்ணுகையாலே யவர்கள் சீரியர்" என்றதுக்கு ப்ரமாணம் (சீதனையேயித்யாதி) சீதளஸ்வபாவனுனவனையேயநுபவிக்கப்பெற்றவர் நித்யஸூரிகளிலும் கனத்தவர்களித்யர்த்தஃ. இத்திருவாய்மொழியி லர்த்தாநுகுணமாக பலமருளிச்செய்கிருர் (இப்பத்தை யப்யசிக்கவித்யாதி) பகவதவதாரம் ஐச்சிக மாகையாலே யொளிவரக்கூடும், கர்மநிபந்தந ஜந்மாக்களான விவர்கள் சிறக்கக்கூடுமோவென்ன (இவர்கள் ஜந்மங்களித்யாதி) சத்ருஷ்டாந்தமாக வுக்தார்த்தத்தை ஸ்த்திரீகரிக்கிருர் (ஆஶ்ரிதார்த்தமான வித்யாதி)

நாமங்களாயிரத்துளிவைபத்தும் திருவல்லவாழ் சேமங்கொள் தென்னகர் மேல்செப்புவார் - பிறந்தே - சிறந்தாரித்யந்வயஃ. "ஸஹஸ்ரபாஹுஸ் ஸர்வஜ்ஞோ தேவோநாமஸஹஸ்ரவாந் । ஸஹஸ்ரமகுடோதேவோ விஶ்வரூபோமஹாத்யுதிஃ" (ஸஹஸ்ரபாஹுஸ்ஸர்வஜ்ஞோ தேவோநாமஸஹஸ்ரவான் । ஸஹஸ்ரமகுடோதேவோ விஶ்வரூபோமஹாத்யுதிஃ) இதி பாரதே.... ...

# த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

( மானேய்நோக்கு )

ஸ்வாமித்வாத் ஸம்ச்ரிதாநாம் உபகரணரஸாத் ஸ்வேஷ்டஸம்ச்லேஷகத்வாத்
ஸர்வாஸ்வாதத்வபூம்நா கபடவடுதயா தாருணாபத்ஸகத்வாத் | திவ்ய
ஸ்தாநோபஸத்த்யா ப்ரமதநிரஸநாந் நாராயணத்வாத் தத்ராஸக்திம் ச்ரி
தாநாம் ஸ்வதிசதி சிதிலாம் ப்ராஹ காமார்த்த நக்ரஜ: || (ருள)

( **ஸ்வாமித்வாத்** ) திருவல்லவாழுறையும் கோனை - எல்லார்க்கும் ஸ்வாமியாகையாலும்; ( ஸம்ஶ்ரிதாநாமுபகரணரஸாத் ) திருவல்லவாழ்நகருணின்றபிரான், திருவல்லவாழ்நின்றைகின்றபிரான் - ஆஶ்ரிதருக் கநேகவிதமாக வுபகரிக்குமவனாகையாலும்; ( ஸ்வேஷ்டஸம்ஶ்லேஷகத்வாத் ) நச்சரவினணைமேல் நம்பிரான்-தனக்கபிமதனான திருவநந்தாழ்வான் பிரிந்து நோவுபடாதபடி யவனோடுஸம்ஶ்லேஷிக்கையாலும்; ( ஸர்வாஸ்வாதத்வபூம்நா ) கன்னலங்கட்டிதன்னைக் கனியையின்னமுதந்தன்னை - கன்னல்போலவும் கனிபோலவு மம்ருதம்போலவும் நிரதிசய போக்யதையை யுடைத்தாகையாலும்; ( கபடவடுதயா ) மாண்குறட் கோலப்பிரான் - மநோஹரமான வாமநரூபத்தை யுடையனாகையாலும், ( தாருணாபத்ஸகத்வாத் ) இஞ்ஞாலமுண்டநம்பிரான்றன்னை - ப்ரளயாபத்திலே யெல்லாரையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தருளுமவனாகையாலும்; (திவ்யஸ்த்தாநோபஸத்த்யா) ஆடுறுதீங்கரும்புமித்யாதி - எங்கும் பக்வபலமா யிருக்கையாலே திவ்யமாயிருக்கிற திருவல்லவாழிலே நித்யவாசம் பண்ணுகையாலும்; ( ப்ரமதநிரஸநாத் ) சுழலின்மலிசக்கரப்பெருமான் - விரோதிநிரஸநத்வரையாலே மிகவும் சுழலாநிற்கிற திருவாழியைத் திருக்கையிலே தரித்தருளுகையாலும்; (நாராயணத்வாத்) நல்லருணம் பெருமான் நாராயணன் - ஸர்வாதாரத்வ ஸர்வநியந்த்ருத்வாதிகளை யுடையனாகையாலும், திருவல்லவாழெம்பெருமானுஶ்ரிதருக் கார்த்தியெல்லாந் தீரும்படி யணித்தாகவந்திராநிற்கிறானென்று " மானேய்நோக்குநல்லீர் " என்கிறதசகத்திலே மாறனருளிச்செய்தானென்கிறார்........................................(ருள)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

---

மாநலத்தால்மாறன்றிருவல்லவாழ்புகப்போய்த்
தானிளைத்துவீழ்ந்தவ்வூர்தன்னருகில் - மேனலங்கித்
துன்பமுற்றுச்சொன்னசொலவுகற்பார்தங்களுக்குப்
பின்பிறக்கவேண்டாபிற. (சக)

( **மாநலத்தால்** ) இதில் - திருவல்லவாழேறச்செல்ல, புறச்சோலையில் போக்யதையாலே நலிவுபட்டுப் பேசின பாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; பெரியவாற்றாமையோடே திருக்குடந்தையிலே புக்கவிடத்திலும் தம்மபேக்ஷிதங்கிடையாமையாலே அங்குநின்றும்புறப்பட்டு, " திருவடிகளேயுபா

யம்" என்று துணிந்த துணிவு கைகொடுத்து நடத்தத் திருவல்லவாழேறப்போய், முட்டப்போகமாட்டாமல் தளர்ந்து ஊரில் புறச்சோலையிலேகிடந்து, அங்குண்டான வேதகோஷ வைதிக க்ரியாகோலாஹலம் செவிப்பட, மதுமல்லிகை தொடக்கமான போக்யதையை யநுஸந்திக்கையாலும், உள்ளேப்புக்கநுபவிக்கப்பெறுமையாலும் தமக்குண்டான ஈடுபாட்டை ; நாயகனிருப்பிடத்தே செல்லுவதாகப் புறப்பட்டுப்போய்க் கிட்டி யநுபவிக்கப்பெறுமையாலே நடுவே கிடந்து நோவுபட்டு. "அங்கேபுக்கு அவனை ஸ்தோத்ரம்பண்ணப் பெறுவதென்றோநாம்" என்று தன் தனர்த்தியைப்பாங்கிமாருக்குரைக்கிற நாயகிபாசுரத்தாலே யருளிச்செய்கிற * மானேய்நோக்கிலர்த்தத்தை- "மாநலத்தால்" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

(மாநலத்தால்மாறன்) பெரிய ப்ரேமத்தாலே ஆழ்வார். (திருவல்லவாழ் புகப்போய்) ப்ரேமப்ரேரிதராய் ப்ரவேசிக்கைக்காகப்போய். (தாளிணைத்துவீழ்ந்தவ்வூர்தன்னருகில்) அவ்வூர்தன்னருகில் - தாளிணைத்து வீழ்ந்து. உள்ளேபுக் கநுபவிக்கப்பெறாமல் ஊரின் புறச்சோலையிலே, பலஹாநியாலும் அங்குத்தை போக்யதையாலும் நகரஸம்ப்ரமங்களாலும் கால் நடைதாராமல் தளர்ந்துவீழ்ந்து. (மேல்நலங்கி) அதுக்குமேலே தோழிமார் நிஷேதவசநங்களாலும் நலங்கி. (துனபமுற்று) பகவதலாபத்தாலே மறுபாடுருவின துக்கத்தையுடையராய். (சொன்னசொலவு) அருளிச்செய்த திவ்யசூக்திகள். அதாவது - "[Grantha text] " (பத்மஸௌகந்திகவஹம், ) "[Grantha text]" (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டம்) இத்யாதிப்படியே ; "வைகலும்வினையேன்மெலியவாளுர்வண்கமுகும் மதுமல்லிகைகமழும் தேனுர்சோலைகள்சூழ்" என்றும், "பொன்றிகழ்புன்னைமகிழ் புதுமாதவிமீதணவித்தென்றல் மணங்கமழும்" என்றும், "பச்சிலைநீள்கமுகும்பலவும் தெங்கும்வாழைகளும்" என்றும், "பாண்குரல்வண்டினொடு பசுந்தென்றலுமாகியெங்கும்சேண்சினையோங்குமரச்செழுங்கானல்" என்றும், "ஓதநெடுந்தடத்துளுயர்தாமரைசெங்கழுநீர்" என்றும், "மாடுயர்ந்தோமம்" என்றும், "மழலைவரிவண்டுகளிசைபாடும்" என்றும் - விப்லேஷதசையி லங்குத்ஸதயில் பரிமளமஸஹ்யமாய்க் கால்கட்டுகிறபடியையும், மற்றுமுண்டான போக்யதைகளு மப்படியாகையையும் ; "வினையேன்மெலியப் பாடுநல்வேதவொலிபரவைத்திரைபோல்முழங்க" என்றும், "மாடுயர்ந்தோமப்புகைகமழும்" என்றும், "நல்லவந்தணர்வேள்விப்புகை மைந்நலங்கொண்டுயர்விண்மறைக்கும்" என்றும் - வேதவைதிகக்ரியாகோலாஹலங்களும் ; "தொல்லருள்மண்ணும்விண்ணும்தொழநின்றதிருநகரம்" என்று-நகரசம்ப்ரமங்களும் ; நாயகன் வேதப்ரதிபாத்யனாகையாலும் வைதிககர்ம சமாராத்யனாகையாலும் ஸ்மாரகத்வே பாதகமாயிற்று ; நகரஸம்ப்ரமம், தானும்ஸம்ப்ரமத்துடனே புகப்பெறாமையாலே பாதகமாயிற்று ; அதுக்குமேலே "என்றுகொல்தோழிமீர்காளெம்மைநீர்நலிந்தென்செய்திரோ" என்றும், "நிச்சலும்தோழிமீர்காளெம்மைநீர்நலிந்தென்செய்திரோ" என்றும் - ப்ரியபரைகள் ஹிதபரைகளாய் நிஷேதிக்கையாலும், தனக்கோடுகிற த்வரையாலே அதுவும் சைதில்யஜநகமாயிற்

று; "கோனாரையடியேனடிகூடுவதென்றுகொலோ," "நின்றபிரானடிநீறடியோ ங்கொண்டுசூடுவது - என்றுகொல்," "நீடுறைகின்றபிரான்கழல் காண்டுங்கொல் நிச்சலுமே," "நம்பிரானதுநன்னலமே," "என்னலங்கொள்சுடரையென்றுகொ ல்கண்கள்காண்பதுவே," "மாண்குறட்கோலப்பிரான்மலர்த்தாமரைப்பாதங்கள்- காண்பதெஞ்ஞான்றுகொலோ," "நிலந்தாவியநீள்கழலை - நாடொறும்வீடின்றி யேதொழக்கூடுங்கொல்," "யாங்கண்டுகைதொழக்கூடுங்கொலோ," "நல்லருள் நம்பெருமான் நாராயணன்நாமங்கள் - தொல்லருள்நல்வினையால் சொலக்கூடுங் கொல்" என்று - இப்படி திருவடிகளைத்தொழுகையும் திருநாமத்தாலே ஸ்துதிக் கையும் ப்ரார்த்யமாகையாலும் சைதில்யம் மிக்கிருக்குமிறே; இப்படியாகையால் மேல்நலங்கித் துன்பமுற்றுச்சொன்னசொல விவையாயிற்று. இத்தசையிலும், "அ டிமேல்சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்" என்றிறே யிவரத்யவசாயம் கு லையாமலிருக்கும்படி. (துன்பமுற்றுச்சொன்ன சொலவுகறபார்தங்களுக்கு) இப்ப டி விஶ்லேஷவ்யசநயுக்தரா யருளிச்செய்த சூக்தியான இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார்க்கு. (பின்பிறக்கவேண்டா) இதினப்யாஸாநந்தரம் ஜந்மபரிக்ர ஹம்பண்ணவேண்டா. ஜந்மத்தைமுடித்தேவிடும். பிற என்று - அவ்யயம். அன்றி யே, திருவடிகளுக்கசலான ஜந்மமெடுக்கவேண்டாவென்றுமாம். ((பின்பிறக்கவே ண்டாபிற) என்றபோது-இத்தையொழிய வேறொன்றை யப்யஸிக்கவேண்டாவெ ன்றபடி.)... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... •

ஐந்தாம்பத்தில் - ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ருக திருவாய்மொழி - சக.—பாட்டு - ருசக.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஐந்தாம்பத்து.

## பத்தாந்திருவாய்மொழி.

### பிறந்தவாறு – ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(பிறந்தவாறும்) இப்படி சிரீவரமங்கலநகர்த் திருக்குடந்தைத்திருவல்லவாழ்களி லெம்பெருமானோடு யதாமநோரதம் ஸம்ஶ்லேஷிக்கப்பெறாமையாலே யவஸந்நரானவாழ்வார்; எம்பெருமான் ஸ்ரீமதுரையிலேவந்து வசுதேவர்திருமகனாய்ப்பிறந்தருளினபடியையும், சகலமநுஜநயநவிஷயதாங்கதனாய்க்கொண்டு வளர்ந்தருளினபடியையும், அசேஷஜநமநோநயநஹாரியாய் அதிதைவாதிமாநுஷமான திவ்யசேஷ்டிதங்களைப்பண்ணினபடியையும், மற்றும் மத்ஸ்யகூர்மாதிரூபேணவதீர்ணனாய்ச்செய்தருளின திவ்யசேஷ்டிதங்களையும் காணப்பெற்றிலேன்; இனி “அவற்றையநுசந்திக்கவேணும்” என்றாபுக்கு மிகவும் சிதிலனாகாநின்றேன்; அந்தசைதில்யத்தைப்போக்கி, அநுசந்திக்கவல்லேனாம்படிபண்ணி யருளவேணுமென் றெம்பெருமானை சரணமாகப்பற்றிமுடிக்கிறார்.*

### பன்னீராயிரப்படி.

பத்தாந்திருவாய்மொழியில், இப்படி திருவல்லவாழிலேயநுபவிக்க வாசைப்பட்டு அதுகிடையாமையாலே ஆர்த்தராய், “பிறந்திருந்தேசிரமந்தீர்ந்தேன்” என்கிறபடியே அவனுடைய சர்வாவதாரஸித்தமான குணசேஷ்டிதங்களையநுசந்தித்து, தரிக்கப்பார்த்து; க்ருஷ்ணனுடைய வவதாராதி வ்ருத்தாந்தத்தையும், அபிமதவிஷயவ்யாபாரத்தையும், பாலசேஷ்டிதங்களையும், த்ரிபுரவாஸிகளான அசுரவர்க்கத்தினுடைய அந்தர்ப்பேதத்தையும், அதிமாநுஷசேஷ்டிதங்களையும், ஸ்த்ரித்யாஸநசயநாதி வ்யாபாரத்தையும், ஆந்தரமாகவும் பாஹ்யமாகவும் ப்ரகாசாப்ரகாசகரத்வத்தையும், சர்வாதிகத்வ ஸூசகமான ஸ்ருஷ்டிவ்யாபாரங்களையும், அர்த்தியாயும் தன்னபேக்ஷிதம் தலைக்கட்டிக்கொள்ளு மாகாரத்தையும், ஆஶ்ரிதவிஷயத்திலருந்தொழில்செய் துபகரிக்கும்படியையு மநுசந்தித்து, அவைதானே அப்ராப்திதசையில் சைதில்யாவஹமாகையாலே ஆர்த்தராய், “உன்னுடைய சேஷ்டிதாதிகளை நான்நிலைநின்றநுபவிக்கும்படி பண்ணியருளவேணும்” என்றபேக்ஷித்து, அவன்திருவடிகளிற்பிறந்த வுபாயவிஶ்வாசம் யாவத்ப்ராப்தி யநுவர்த்தித்தபடியையருளிச்செய்து, இப்படி உபாயபூதனுடைய ஸ்வரூபயாதாத்ம்யத்தை நிரூபித்துத் தலைக்கட்டுகிறார். ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

ஈடு.

"திருவல்லவாழிலேபோய்ப்புக்கு அங்குநிற்கிறவனோடே பரிமாறவேணும்" என்று மநோரதித்துக்கொண்டுபோக, கால்நடைதாராமல் நடுவழியிலேவிழுந்து கிடந்துகூப்பிட்டார்; இனி "இவ்வளவில் குணாநுபவம்பண்ணியாகிலும் தரிப்போம்" என்றுபார்க்க, அதுதானும் பேற்றோபாதியரிதாம்படி சைதில்யத்தைவிளைப்பிக்க; சர்வாவஸ்த்தைகளிலும் - உன்னைப்பிரிந்துநின்றாலும் தரித்துநின்று குணாநுபவம்பண்ணவல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்று அவன்றிருவடிகளிலே சரணம்புகுகிறார்.

ருஷிகளுக்குண்டான சம்சாரபயத்தோபாதியும் போருமாயிற்று ஆழ்வார்களுக்கு பகவத்விரஹத்தால்வரும் க்லேசம்; அவர்கள் தந்தாம் பேற்றுக்குத் தாந்தாம் சிலயத்நம்பண்ணுகிற்பார்கள், இவர்களத்தலையாலே பெறுமளவும் அசோகவநிகையில் பிராட்டியைப்போலே துடியாநிற்பர்கள்; அவர்களுக்குத்தங்கள் தலையிலேயும் சிலகிடக்கையாலே விளம்பம்பொறுக்கலாம், இவர்களுக்கு அங்ஙன்சொல்லலாவதொன்றில்லையாகையாலே கிடந்தலமாப்பாகள். "அவனடியாலேநம்பேறு" என்றிருக்கிறவர்களுக்கொரு கண்ணழிவில்லையே சொல்லலாவது. "நசஸீதாத்வயா ஹீநா நசாஹமபி ராகவ" (நசஸீதாத்வயாஹீநாநசாஹமபிராகவ) என்கிறபடியே, லாபாலாபங்களில் பிராட்டியையுந் தம்மையுமேகப்ரக்ருதியாகச்சொன்னாரிறே. "பாவோ நாந்யத்ர கச்சதி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்று, திருவடி ராமாவதாரமொன்றிலும் ஸக்தனாயிருக்குமாபோலே, இவரெல்லாவவதாரங்களிலு மெல்லாச்சேஷ்டிதங்களிலுமகப்பட்டிருப்பாரொருவர். அர்ச்சாவதாரத்திலே தம்மபேக்ஷிதம் பெற ஆசைப்பட்டவர், அதுகிடையாமையாலே அவதாரங்களிலேபோகிறார்; "விபவமுள்ளவிடத்தேசென்றால் சிறிது அபேக்ஷிதம்கிடைக்கும்" என்றிருப்பரோ. விபவங்களிலே பிறந்தார்க்கு மிழவுதீர்க்கிற விடமாயிருக்க, இத்தைவிட்டு "பெறலாம்" என்று விபவமுள்ளவிடந்தேடிப்போகையாவதென்னென்னில்; அர்ச்சாவதாரத்தில், அதீந்த்ரியனானதன்னை சம்சாரிகள் கண்ணுக்குவிஷயமாக்குகையும் சர்வாபேக்ஷிதங்களையுங்கொடுக்கையுமொழிய, குளிரநோக்குதல் வினவுதல் அணைத்தல் செய்யக்கடவதன்றாக சங்கல்பித்திருக்கையாலே, "சத்யசங்கல்பனுடைய சங்கல்பம்குலையும்படி அதிநிர்ப்பந்தம் பண்ணக்கடவோமல்லோம்" என்று, "ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே" (ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்யசப்ரீத்யா ஸுகாடம்பரிஷஸ்வஜே) என்னும்க்ருஷ்ணாவதாரத்திலேபோந்தார் ப்ரத்யாஸத்தியாலே. "இவ்வாழ்வார்களெல்லாரும் க்ருஷ்ணாவதாரமென்றவாறே போரமண்டியிருப்பர்கள், இதுக்குஹேதுவென்" என்று பட்டரைக்கேட்க, "ஒருவனுக்குதுஃகம் சிலநா

ள்கழிந்தால் பொறுக்கலாம், அணித்தானு லாறியிருக்கப்போகாதிறே, அப்படியே, அல்லாதவவதாரங்களைப்போலன்றிக்கே, சமகாலமாகையா லே, 'ஒருசெவ்வாய்க்கிழமை முற்படப்பெற்றிலோம், பாவியேன்! பல் லிலேபட்டுத்தெறிப்பதே, என்னுமிழவாலே வயிறெரித்தலேயாயிருக்கு ம்" என்றருளிச்செய்தார். இனித்தான் ராமாவதாரத்தில், தமப்பன்சம் பராந்தகனாய் ஏகவீரனாயிருப்பானொருவன்; பிள்ளைகள் தாங்களாண்பு லிகள், குடிதானே வன்னியமறுத்திருப்பதொருகுடி; இவையெல்லாம் மிகையாம்படி, குணத்தாலே நாட்டையெல்லா மொருமார்வெழுத்தாக் கிக்கொண்டிருப்பர்கள், ஆகையாலே எதிரிகள் என்கிற சப்தமுமில்லை; இங்கங்ஙனன்றிக்கே, தமப்பனொருசாதுவ்ருத்தன்; பிறந்ததுகம்ஸன் சி றைக்கூடத்திலே, வளர்ந்தது மவனகத்தருகே; ஸ்ரீப்ருந்தாவநத்திலே, எழும்பூண்டுகளகப்பட அசுரமயமாயிருக்கும், ரக்ஷகரானவர்களோரடி தாழநிற்கில் பாம்பின்வாயிலே விழும்படியாயிற்றிவன்றன்படிகளிருப்ப து, அப்படியானால் வயிறெரியாதே செய்வதென்னிவர்கள்; அக்காலத்தி லே உணர்ந்துநோக்கப்பெற்றிலர்கள், அவ்விழவுக்கின்றிருந்து நோவுப டுகிறார்கள். அவர்களிலே யொருவரானவிவர் சொல்லுகிறபடியிறேயிது [ தெரிந்துணர்வித்யாதி ] மாயாம்ருகத்தின்பின்னேபோயிளைத்து மீண் டெழுந்தருளினபோது அடிசுட்டுப்பொறுக்கமாட்டாமையாலே தழை க்ளைமுறித்துப்பொகட்டு அவற்றிலே நின்றுறியெழுந்தருளினார் என்று கேட்டு, பாவியே! ன் அன்றுதவி யத்திருவடிகளிலே யொன்றலையைமடு க்கப்பெற்றிலேன், வ்யர்த்தமேபோயிற்றிறே அநாதிகாலமெல்லாம் என் று நொந்தாரிறே. இப்படியேயிறே போனதுக்கிவர்கள் வயிறெரியும்படி. "திருநீலமணியார் மேனியோடென்மனம் சூழவருவாரோ" என்றும் வ யிறுபிடித்தாரிறே இவர்.

"'இவரவனுடைய அவதாரங்களையும், ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யா பாரங்களையும், "தாயர்மகிழ வொன்னார்தளரத்தளர்நடைநடந்த' என் கிறபடியே, ஆஸ்ரிதரைவாழ்விக்கவு மநாஸ்ரிதரையழியச்செய்யவு மடியி ட்டப்படி வளர்ந்தருளின க்ருஷ்ணாவதாரத்தையு மநுசந்தித்து மிகவும் சிதிலரானவிவர்; தரித்துநின்றுன்னை யநுசந்திக்கவல்லேனாம்படி பண் ணியருளவேணுமென்று அவனைச்சரணம்புகுகிறார்' என்றும்வான்பணி க்கும். அன்றியே, 'விப்லேஷசமயத்திலே யுன்குணங்கள் புத்திஸ்த்த மாய்க்கொண்டு மிகவும் நலிய, அத்தாலேநெருக்குண்டு நோவுபடுகைத விர்ந்து, உன்திருவடிகளிலேவந்துசேர்ந் துன்னைக்கிட்டி யநுபவிக்கும்ப டிபண்ணி யருளவேணுமென்று அவனைக்குறித்தருளிச்செய்கிறார்' என் று எம்பாரருளிச்செய்யும்படி. அங்ஙனன்றிக்கே, "சர்வேஸ்வரன்க்ரு ஷ்ணனாய்வந்து திருவவதாரம்பண்ணித் திருவாய்ப்பாடியிலே வளர்ந்த ருளாநின்றான்' என்றுகேட்டு, 'அங்கேயதாமநோரதம் நமக்குக்கலந்து

பரிமாறலாம்' என்று தெற்குத்திருவாசலாலேசென்றுபுக, 'இப்போது இங்ஙனே வடக்கிற்றிருவாசலாலே புறப்பட்டு * தன்னுடைச்சோதியே றவெழுந்தருளினுன்' என்றுகேட்டு விழுந்துகிடந்து கூப்பிடுகிறுர்' என்றுபிள்ளான்பணிக்கும் " என்றருளிச்செய்வர்............................*

## ஜீயர் அரும்பதம்.

பிறந்தவாறுப்ரவேஶ, (திருவல்லவாழிலேயென்றுதொடங்கி, கூப்பிட்டாரொன்னுமளவும்) உக்தாநுவாதம். ( இனி இவ்வளவிலென்றுதொடங்கி, சரணம்புகுகிருரொன்னுமளவாக ) ஆழ்வான் நிர்வாஹத்திலே சங்க்ரஹசங்கதி. ( குணுநுபவம்பண்ணியாகிலும் ) என்றவிடத்திலே - "கோவிந்தன்குணம்பாடி - ஆவிகாத்திருப்பேனே" என்றத்தையும், " [illegible] " ( ஆஶம்ஸேயம்ஹரிஶ்ரேஷ்டகூஷிப்ரம்மாம்ப்ராப்ஸ்யதேபதிः ) இத்யாதியையு மநுசந்திப்பது. "சர்வாவஸ்த்தைகளிலும்"என்றதின்விவரணம் (பிரிந்துநின்றுலுமென்றது)

மற்றும் பகவத்விஷயத்திலே கைவைத்திருப்பார் பலருமுண்டே, அவர்களுக்கிவ்வாற்றுமை காண்கிறிலோமேயென்ன (ருஷிகளுக்கித்யாதி) இத்தால்-ருஷிகள் முதலானுர்க்கு சம்சாரபயமாத்ரமொழிய, பகவத்விரஹத்தால்வரும் க்லேஶமில்லையென்றபடி. இருவரும் பகவத்விஷயத்திலே யந்வயித்திருக்க, அவர்களுக்கில்லாமற்போவானென்; ஆழ்வார்களுக்கு பகவத்விரஹக்லேஶமுண்டாவானென் என்கிறசங்கையிலே, இரண்டுக்கும் ஹேதுவையருளிச்செய்வதாக; ருஷிகளுடையவுமாழ்வார்களுடையவும் ப்ரதிபத்திசரீரத்தை யருளிச்செய்கிறுர் ( அவர்கள்தந்தாமித்யாதி வாக்யத்வயத்தாலே ) " ஸ்வப்ரயத்நத்தாலேபேறு " என்றிருக்கை-ருஷிகள் ப்ரதிபத்திசரீரமாகையாலே, " காமநுஷ்டித்தவுபாயம் முற்றிக்ரமத்திலே பலிக்கவேண்டாவோ " என்று அவர்களுக்கு விரஹம்பொறுக்கலாயிருக்குமென்றும்; ஆழ்வார்களுக்கவர்களைப்போலே தங்கள்தலையிலேயும் சிலவுண்டாய், அதுபக்வமாய்ப்பெறவேணுமென்னு மதில்லாமையாலே விரஹம்பொறுக்கமாட்டார்களென்று மருளிச்செய்கிறுர் ( அவர்களுக்குத்தங்களித்யாதிவாக்யத்வயத்தாலே ) இவர்களுக்கப்படிமுற்றிப் பலிக்கவேண்டுவதொன்றின்றிக்கே யிருப்பானென்னென்ன (அவனடியாலேயித்யாதி) அன்றிக்கே, "இவர்களுக்கங்ஙன்" இத்யாதிவாக்யவிவரணமாதல். " அசோகவநிகையில் பிராட்டியைப்போலே " என்று அவளோடொப்புச்சொல்லலாமோவென்ன (ரசஸீதேத்யாதி)

இத்திருவாய்மொழியிலே - க்ருஷ்ணுவதாரம்சொல்லாநிற்க, அவதாராந்தரங்களையும் சொல்லுவானென்னென்ன (பாவோநாந்யத்ரேத்யாதி) "[illegible]" ( ஸ்நேஹோமேபரமோராஜந்த்வயிநித்யம்ப்ரதிஷ்டிதः। பக்திஶ்சநியதாவீரபாவோநாந்யத்ரகச்சதி ) இத்யுத்தரஸ்ரீராமாயணே. கீழ்மூன்று திருவாய்மொழிகளிலும்-அர்ச்சாவதாரத்தை யருளிச்செய்தவர், அத்தைவிட்டிங்கே விபவங்களிலே வருவானென்னென்ன (அர்ச்சாவதாரத்திலேயித்யாதி) தம்மபேக்ஷிதமாவது-குளிரநோக்குதல், அணைத்தல்முதலானது. ரஸோக்தி ( விபவமித்யாதி ) இழவுதீர்க்கைறவிடமாயிருக்கவென்றது - அவதாரங்களில் பிற்பட்டார்க்கு மநுபா

வ்யமாம்படி சதாசந்நிஹிதமாகையைப்பற்ற. (சத்யசங்கல்பனுடைய சங்கல்பம் குலையும்படி) என்றவிடத்திலே - "கூரத்தாழ்வானார்த்தராய் சரணம்புக, பெருமாளுமிரங்கி 'மூன்றுநாளைக்குவீடுதந்தோம்' என்ன, 'ஆழ்வான் திருமதிளுக்குப்புறம்பானார்' என்றுகேட்டு உடையவரோடிச்சென்று, 'ஆழ்வான், நாமிங்கேயிருக்க வுமக்குப் பரமபதத்தேபோகவேண்டிற்றே' என்ன, 'அடியேன் சம்சாரத்திலடிக் கொதிப்பாலேமறந்தேன்' என்ன, 'ஆகில் நாமும் சரணம்புகுந்தால் இன்னம்சில நாளாழ்வானை யிங்கேவைக்கவிரங்குவர்' என்று திருவாசலளவும்சென்று, 'சத்யசங்கல்பனுடைய சங்கல்பத்தைக்குலைக்கவேண்டா' என்றுமீண்டருளினார்" என்று ப்ரசாதிப்பர். அதாவது - நானொருவன்தோன்றிப் பெருமாளை யிரண்டுவார்த்தை சொல்லுவாராகப்பண்ணலாமோவென்றுகருத்து. "[illegible]" (ராமோத்விர்நாபிபாஷதே) "[illegible]" (நத்யஜேயம்கதஞ்சந) "[illegible]" (ஏதத்வ்ரதம்மம) இத்யாதி. (அதிநிர்ப்பந்தம்பண்ணக்கடவோமல்லோம்) என்கையாலே - தாம்நிர்ப்பந்தித்தால் செய்வர் என்னுமிடந்தோற்றுகிறது.

விபவாந்தரங்களைவிட்டு க்ருஷ்ணவதாரத்திலே போருகைக்குஹேது (ப்ரத்யாசத்தியாலேயென்று) "ப்ரத்யாசத்தியாலே" என்றத்தை ஆப்தசம்வாதமுகேந விவரிக்கிறார் (இவ்வாழ்வார்களித்யாதி) பட்டரைக்கேட்கவென்றது - பட்டரை நஞ்சீயர்கேட்கவென்றபடி. (செவ்வாய்க்கிழமைமுற்படப்பெற்றிலோம்) என்றவிடத்திலே - "[illegible]" (ராதேகலேர்வாஸரஏவராதேமாஸேவிஶாகேமஹநீயதாரே । ஶுக்ரஸ்யவாரேஜநிவிஶ்வதித்யாம்பராங்குஶோயம்பகவாந்குரோ) என்றதநுசந்தேயம். விஶ்வதித்யாம் - சதுர்த்தஶ்யாம். செவ்வாய்க்கிழமை - செவ்வாயினுடையசாரம். ப்ரத்யாசத்திமாத்ரமன்றிக்கே, பரியவேண்டும் ஹேதுக்களுண்டாகையாலும் க்ருஷ்ணவதாரத்திலேபோந்தாரென்கிறார் (இனித்தானித்யாதி) வன்னியமறுத்திருப்பதொருகுடி-குறும்பரான சத்ருக்களைச் சேதித்திருப்பதொருகுடி. மிகையாம்படி-அதிகமாம்படி. ஒருமார்வெழுத்தாக்கிக்கொண்டிருப்பார்களென்றது - எல்லாரையுமடிமையாக்கிக்கொண்டிருப்பார்களென்றபடி. ஒருமார்வெழுத்தென்றது - மார்வெல்லாமோரெழுத்தென்றபடி. இவ்விடத்திலே - "[illegible]" (பத்யமங்குளிவிச்சேதஃஉரோவிந்யஸ்தமக்ஷரம் । தந்நாமக்ரஹணஞ்சைவதாஸ்யமேதச்சதுஷ்டயம்" என்கிறதநுசந்தேயம். ரக்ஷகரானவர்களென்றது-நம்பிமூத்தபிரானை. இவைகளெல்லாமதீதகாலங்களிலேயன்றே, அதுக்கிப்போது நோவுபடுகிறதென்னென்ன (அக்காலத்திலேயித்யாதி) அப்படி அதீதகாலாபதாநத்துக்கு நோவுபட்டார்களோவென்ன (அவர்களிலேயித்யாதி) இதுவென்றது - வக்ஷ்யமாணத்தை. பாட்டுக்குபாவம் (மாயாம்ருகத்தினித்யாதி) போனதுக்கு வயிறெரிகைக்கிவர்தாமப்படி பரிவரோவென்ன (திருநீலமணியாரித்யாதி)

ப்ராசங்கிகங்களை யருளிச்செய்து தலைக்கட்டினவநந்தரம், இத்திருவாய்மொழிக்கு மூன்றுநிர்வாஹமருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, முந்துறவித்திருவாய்மொழி ப்ரமேயங்களையெல்லாம் சேரப்பிடித்துக்கொண்டு ஆழ்வான் நிர்

வாஹத்தை யருளிச்செய்கிறார் (இவரவனுடையவித்யாதி) "கொப்பூழ்ச்செந்தாம ரைமேல்" இத்யாதியைப்பற்ற (ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களையுமென்றது) ஒன்னார் - சத்ருக்கள். "வதுவைவார்த்தையுள்" இத்யாதியைப்பற்ற (ஆஶ்ரிதரை வாழ்விக்கவுமித்யாதி) சிதிலரானவிவரென்றது - விரஹதசையி லநுசந்தாநமாகை யாலே பாதகமாக,சிதிலரானவரென்னுதல்; "நினைதொறும் சொல்லுந்தொறும்நெ ஞ்சிடிந்துகும்" என்றுபோக்யதையாலே யீடுபட்டு சிதிலரானவரென்னுதல். "நா கணைமிசைநம்பிரான்" இத்யாதியைப்பற்ற (சரணம்புகுகிறாரென்றது) "நின்றுநி ன்றுநினைகின்றேன்" இத்யாதியைப்பற்ற-ஆழ்வான்நிர்வாஹம். "என்கண்கட்கு த்திண்கொள்ள" இத்யாதியைப்பற்ற - எம்பார்நிர்வாஹம். "செய்துபோனமாயங் களும்" என்றத்தைப்பற்ற - பிள்ளான்நிர்வாஹம்.

(ஸம்ஸ்ப்ருஶ்யேத்யாதி) "ஸோऽப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேந பாணிநா। ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ஸப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே" (ஸோ ப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேநபாணிநா। ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்யசப்ரீத்யா ஸுகாடம்பரிஷஸ்வஜே) இதிபஞ்சமேம்ஶே. (தெரிந்துணர்வித்யாதி) பெரியதிருவ ந்தாதி எண்பத்திரண்டாம்பாட்டு. [தெரிந்துணர்வொன்றின்மையால்] "பகவத்விஷய ஏவ பரமோத்தேஶ்யம்" (பகவத்விஷயமேபரமோத்தேஶ்யம்) என்றிருக்க த்தக்க விஶதஜ்ஞாநமேகதேசமுமில்லாமையாலே. [தீவினையேன்] அநுபவத்தா லே யடிக்கழஞ்சுபெறக்கடவகாலத்தைப் பாழேபோக்குகைக்கீடான துஷ்கர்மத் தைப்பண்ணினநான். [கரந்துருவிலம்மானை] மறைத்தராக்ஷஸரூபத்தையுடையமா யாம்ருகத்தை. கரக்கை-மறைக்கை. உருவில்-ரூபத்தையுடைய. அம்மானை-அந்தமா னையென்றபடி. [அஞ்ஞான்று] பிராட்டி "பிடித்துத்தரவேணும்" என்றர்த்தித்த வக்காலத்திலே, [பின்தொடர்ந்த] பின்பற்றிப்போன. [ஆழியங்கையம்மானை] கை கேயிவரத்திலகப்படாத அருகாழிமோதிரத்தோடேகூடின அழகியதிருக்கையையு டைய சர்வேஶ்வரனை. [ஏத்தாதயர்த்து] இளையபெருமாளு முதவப்பெறுததனி மையிலேயுதவி மங்களாசாஸநம்பண்ணி ஸ்துதிக்கப்பெறுதே யறிவுகெட்டு [கீழ்நா ள்களெல்லாம்] கீழ்கழிந்தவநாதிகாலமெல்லாம். [வாளாவிருந்தொழிந்தேன்] வ்ய ர்த்தமேயிருந்துவிட்டேனித்யர்த்தঃ. (திருநீலமித்யாதி) சௌந்தர்ய சௌகுமார் யாதிசம்பத்தையுடைத்தாய் நீலரத்நம்போலேயிருக்கிற திருமேனியோடேகூட, "இவ்வடிவழகுக்கென்னதீங்குவருகிறதோ" என்றென்மநஸ்ஸானது ப்ரமிக்கும்ப டி சம்சாரத்திலேவருவாரோ இத்யர்த்தঃ. (தாயர்மகிழவித்யாதி) பெரியாழ்வார்திரு மொழி. பெற்றதாயான யசோதையு மவளோபாதி ஸ்நேஹிகளானவர்களும் ப்ரீத ராம்படியாகவும், கம்சாதிகளான சத்ருக்கள் நசிக்கும்படியாகவும் தளர்நடைநட ந்தவென்றபடி... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

## பத்தாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

பிறந்தவாறும்வளர்ந்தவாறும்பெரியபாரதங்கைசெய்தைவர்க்குத்
திறங்கள்காட்டியிட்டுச்செய்துபோனமாயங்களு
நிறந்தனூடுபுக்கெனதாவியைநின்றுநின்றுருக்கியுண்கின்றவிச்
சிறந்தவான்சுடரேயுன்னையென்றுகொல்சேர்வதுவே.

### ஆறாயிரப்படி.

அகர்மவஶ்யனையிருந்துவைத்து ஆஶ்ரித ஸம்ஶ்லேஷார்த்தமாக அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தாநத்தோடே கூடவந்தவதரித்ததும்; பூதநாதி ப்ரதிபக்ஷங்கள் மாயும்படியாகவும், நவநீதசௌர்யாதி திவ்யசேஷ்டிதங்களாலே அநுகூலர் வாழும்படியாகவும், வளர்ந்தபடியும்; பாண்டவர்களுக்காக அபரிச்சேத்யமான பாரதசேநையை யணிவகுத்தும், "ஆயுதமெடேன்" என்றாயுதமெடுத்தும், பகலை யிரவாக்கியும், தூத்யஸாரத்யாதிகளைப்பண்ணியும், இப்படிசெய்த சீர்மையறியாத தூர்த்தேசத்திலேயிராதே யெழுந்தருளின ஆஶ்சர்யங்களும்; விரஹவ்யஸநத்தாலேயற அவசந்நமான என்னுடைய வாத்மாவை மர்மத்திலே புக்கு விடாதேநின்று சிதிலமாக்கி முடியாநின்றது; அபரிச்சேத்யமான வழகையுடைய வுன்னைக் கிட்டுவதென்றோவென்று எம்பெருமானைக் குறித்துக் கூப்பிடுகிறார்.........................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், க்ருஷ்ணனுடைய அவதாராதி சேஷ்டிதங்களை ஸங்க்ரஹேண வருளிச்செய்கிறார்.

பிறந்த - "அஜாயமாந:," (அஜாயமாந:,) "நாராயணாத்," (நாராயணாத்,) "அஜோபிஸந்" (அஜோபிஸந்) என்கிறபடியே அகர்மவஶ்யனாய் வைத்து அஜஹத்ஸ்வபாவனாய் ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமாக இதர ஸஜாதீயனாய்ப்பிறந்த. ஆறும் - ப்ரகாரமும். வளர்ந்த - கைக்கீழே காற்கீழே விரோதிகளழியும்படியாகவும், ஆஶ்ரிதாபிமாநித்த த்ரவ்யமே தாரகமாம்படியாகவும் வளர்ந்த. ஆறும் - ப்ரகாரமும். பெரியபாரதம் - மஹாபாரதத்திலே. கைசெய்து - படையைக்கைவகுத்து. ஐவர்க்கு - பாண்டவர்களைவர்க்கும். திறங்கள் - விஜயோபாயப்ரகாரத்தை. காட்டியிட்டு - ப்ரதர்ஶிப்பித்து. செய்து - ஆஶ்ரிதர்க்குபகரித்தும், அநாஶ்ரிதரை யழியச்செய்தும் அவ்தாரகார்யம் சமைந்து. போன - * தன்னுடைச்சோதி யேறப்போன. மாயங்களும் - ஆஶ்சர்யப்ரகாரங்களும். நிறந்தன் - மர்மமான ஹ்ருதயப்ரதேசத்துக்கு. ஊடு - உள்ளே. புக்கு - ப்ரவேசித்து. எனது - என். ஆவியை-ஆத்மாவை. நின்றுநின்று - க்ஷணந்தோறும் நின்றுநின்று. உருக்கி - த்ரவத்ரவ்யமாக்கி. உண்கின்ற - க்ரஸியாநின்றன. இ - எனக்கு நித்யஸந்நிஹிதமாய், சிறந்த-அதி

ரூபமாய். வான் - அபரிச்சேத்யமான. சுடரே - தேஜஸ்ஸை யுடையவனே. இந்த ஸ்வபாவங்களை சிதிலனாகாமல் நின்றநுபவிக்கலாம்படி, உன்னை - உன்னை. என்று கொல் - என்றோ. சேர்வது - சேர்வது. ..........................................*

## சு - முதற்பாட்டு.

இத்திருவாய்மொழியில் ப்ரதிபாதிக்கிற அர்த்தத்தை சங்க்ரஹேண வருளிச்செய்யாநின்றுகொண்டு; உன்னுடைய அவதாராதிகளென்னை மர்மத்திலேதொட்டு சிதிலமாக்காநின்றன, இச்சைதில்யம் நீங்கி யுன்னைத்தரித்துநின்று நானநுசந்திப்ப தெப்போதென்கிறார்.

(பிறந்தவாறும்) மாதா பிதாக்களுக்குக் காற்கட்டறும்படியிறே பிறந்தது. தன்னைப் பெற்றவர்களுடைய பந்தத்தை யறுத்துக்கொண்டு வந்து பிறப்பாருமுண்டோ. "இவனிறே நமக்குக் காற்கட்டானான்" என்றிருந்தார்களவர்கள்; அது பொறுக்கமாட்டாமை, "உங்களுடையபந்தம் நான் பொறுக்கமாட்டேன்" என்றுவிட்டான். * தந்தைகாலில்விலங்கறவிறே வந்து தோன்றிற்று - பிறக்கிறபோதே மாதா பிதாக்கள் காலில் க்ரந்தியை சிதிலமாக்கிக்கொண்டு காணும்பிறந்தது. (பிறந்தவாறும்) பிள்ளாய் பிறக்கிறபோது மொருவிளக்கெரிந்தாலாகாதோ, தானே விளக்காகவிறே பிறந்தது. * ஆயர்குலத்தினில் தோன்றும்மணிவிளக்கிறே. (பிறந்தவாறும்) அகர்மவச்யனான தான் கர்மவச்யரோடொக்கப்பிறப்பது, பிறந்தா லாச்ரிதசம்ரக்ஷணமே தனக்கு ப்ரயோஜநமாயிருப்பது, அவர்களாபத்துப்படும் காலமே தனக்குப் பிறக்கைக்கும் காலமாவது, பிறவாநின்றால் தன்னைப்போர்யந்திலொன்றும்குறையாமற்பிறப்பது, அப்ராக்ருத சம்ஸ்தாநத்தை யிதர ஸஜாதீயமாக்காநிற்பது, தன்ஜந்மத்தை யநுசந்தித்தாருடைய ஜந்மங்கள்போம்படியாயிருப்பது, இவையெல்லாவற்றையும் நினைக்கிறது. "நமக்காக இவர்கள் பிணைபட்டுச் சிறையிருக்கும்படி யிவர்களுக் கிங்ஙனேபிறப்பதே" என்றீடுபடாநிற்பதானபடிகளையெல்லாம் நினைக்கிறது. (பிறந்தவாறும்) "ஆவிர்ப்பூதம்" என்கிறத்தைக்கொண்டு, தோற்றினவாறும் என்றுதொழிவானென்னென்னில்; சம்சாரிகள் பத்துமாசம் கர்ப்பவாசம்பண்ணுவர்களாகில் "ததஸ்ச த்வாதஸே மாஸே" (ததச்ச த்வாதஸேமாஸே) என்கிறபடியே பன்னிரண்டுமாசம் கர்ப்பவாசம்பண்ணுகையாலும், அவளுக்கு முலை சுரக்கையாலும், முலைபெருவிடி யிவன்றான் நோவுபடுகையாலும் தன்னைக்கட்டவு மடிக்கவுமாம்படி யெளியனாக்கிவைக்கையாலும்-பிறந்தவாறுமென்கிறார். பகல்கண்டகுழியிலே யிராவிழுவானைப்போலே, பருவம் முற்றினவள்விலே "எத்திறம்" என்று மோஹித்துவிழக்கடவ இவர் அதுக்குமவ்வருகேபோ யிழிகிறாரிறே கலக்கமிருக்கிறபடி. "எத்திறம்"என்றங்கே ஆறுமாசமும், "பிறந்தவாறும்" என்று இங்கேஆறுமாசமும்

மோஹித்துக்கிடந்தாரென்று ப்ரஸித்தமிறே. ஸ்ரீபரதாழ்வான் ராமவிஶ்லேஷத்தாலே மோஹித்துத் தறைப்பட்டுக்கிடக்க, தாய்மாரடங்கலும் சுற்றும்பார்த்து நிற்க, “[illegible]” (ஶத்ருக்நோநந்தரஸ்த்திதः) என்கிறபடியே - ஸ்ரீஶத்ருக்நாழ்வான் கிட்டவுங்கூடபயப்பட்டு ஸ்தப்தனாய் நின்றானிறே; அப்படியே; * நல்லார் நவில்குருகூரிறே, ஜகத்திலறிவுடையாரடங்கலும் திரண்டு இவர்படிகளைக்கண்டறிவுகெடும்படியிறே யிவர் கலங்கிக்கிடந்த கிடை. (வளர்ந்தவாறும்) வளர்ந்தபடியை யநுசந்தித்தால் பிறந்தவாற்றிலே கால்வாங்கி யிளைப்பாறவேண்டும்படியிறே யிருப்பது. பிறக்கிறபோது சிறைக்கூடத்திலே தான்பிறந்தால், வளருகிறபோது நாட்டாரோடொக்கவளரத்தான்பெற்றதோ. (வளர்ந்தவாறும்) பூதநாதிகளுயிர்மாளவும், யசோதாதிகளுடைய ஸ்நேஹம் வளரவுமிறே வளர்ந்தது. “தாயர்மகிழவொன்னார் தளரத்தளர்நடைநடந்து” என்கிறபடியே. * மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப்போய்ப்படிறுபலசெய்திப் பாடியெங்கும் திரியவிறே அவர்களுகந்திருப்பது. (வளர்ந்தவாறும்) இவன் கால் நெடுகநெடுக, ப்ரதிகூலருடலும் மாண்டது, அநுகூலருடலும் மாண்டது; “பொட்டத்துற்று” என்றும், “வெண்ணெய்விழுங்கிவெறுங்கலத்தைவெற்பிடையிட்டு” என்று மநுகூலருடலேயிறே மாண்டது. இப்படி ப்ரதிகூலர் மண்ணுண்ணவும், தான் நெய்யுண்ணவும், அநுகூலர் கண்ணுறுண்ணவுமிறே வளர்ந்தருளிற்று. (பெரியபாரதம்) “மஹாபாரதம்” என்றிறே ப்ரஸித்தி. (கைசெய்து) கையுமணியுமாக வருக்கைதொடக்கமான பூசலுள்ளதெல்லாம் நினைக்கிறது. (ஐவர்க்குத்திறங்கள்காட்டியிட்டு) அறிவுபிறப்பதற்கு முன்பு சத்தையே ப்ரதிகூலநிரசநத்துக்குடலாயிற்று, சஹாவஸ்தாநமில்லையிறே திமிரதேஜஸ்ஸுக்களுக்கு; பருவம் நிரம்பினபின்பு அநுகூலர்க்குக் கையாளானபடி. (திறங்கள்காட்டியிட்டு) தூதுபோயும், சாரத்யம்பண்ணியும், “ஆயுதமெடேன்” என்றாயுதமெடுத்தும், பகலை யிரவாக்கியும், எதிரிகளுயிர்நிலைகளைக் காட்டிக்கொடுக்கை தொடக்கமானவற்றையெல்லாம் சொல்லுகிறது. (செய்து) இப்படிசெய்து. (போனமாயங்களும்) ஆஶ்ரிதரக்ஷணத்துக்காக வந்து பிறந்து அவர்களுடைய ஆபத்துக்களைப்போக்கி யுபகரித்தால், “இதுநமக்காகச்செய்தானிறே” என்றிருக்கையன்றிக்கே, இவன்றன்னோடே யெதிரிடும்படியான சம்சாரத்திலேயிராதே, ஓரளவிலே யிங்குநின்றும்போன ஆஶ்சர்யசேஷ்டிதங்களும். [ [illegible] । [illegible] ] [க்ருத்வாபாராவதரணம் ப்ருதிவ்யாः ப்ருதுலோசநः । மோஹயித்வா ஜகத்ஸர்வம் கதஸ்ஸ்வம்ஸ்தாநமுத்தமம்] வந்து திருவவதாரம்பண்ணி, அநுகூலர் காரியங்களடையத் தலைக்கட்டி; ப்ரதிகூலரையடைய முடிகோலுக்கிரையாக்கி, அநுகூல

ளையடையக் கண்ணுலேவிழவிட்டு, உபயகோடியையும் நோவுபடுத்தி; இங்குநின்றும்போய்த் தப்பப்பெறுவதே!என்கிறது. [ ஸ்வம்ஸா ... ௭௪ ] [ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம்] இங்குள்ளாரடங்கலு மெதிரம்புகோக்கு மாபோலேயிறே அங்குள்ளாரடங்கலு மெதிரேற்கப்போனபடி. ( நிற ந்தனூடுபுக்கு ) தோல்புரையேபோமதன்று, நிறத்திலே - மர்மத்திலே, நலிகிறபடி. ( எனதாவியை ) அல்லாதாரடங்கலு மிவற்றைக்கேட்டுண் டுடுத்துக் காலம்போக்கித் திரியாநின்றார்களிறே. ( ஆவியைநின்றுநின் றுருக்கி ) * அச்சேத்யமுமா யதாஹ்யமுமாயிருக்கிற வாத்மாவையிடை விடாதே சிதிலமாக்காநின்றன. ( நின்றுநின்றுருக்கியுண்கின்ற) அதொ ருகால்செய்து போகச்செய்தேயும் இது உருவநின்று நலியா நின்றது. ( இச்சிறந்தவான்சுடரே ) தகுதியா யபரிச்சேத்யமான விவ்வழகையு டையவனே. வஸ்து பிறக்கப்பிறக்கவாயிற்றுத்தேஜஸ்ஸுஜ்ஜ்வலமாவது. ( இச்சிறந்த ) பூதகாலமாயிருக்கச்செய்தேயும், இவர்க்கிது ஸமகாலம் போலேயும் கண்ணுக்குவிஷயமாயிருக்கிறபடி. வான்சுடர் இங்கே வந்த பின்பு சிறந்ததென்றுமாம்.

பிறந்தவாற்றும், வளர்ந்தவாற்றலும், பெரியபாரதம் கைசெ ய்தைவர்க்குத் திறங்கள்காட்டி யிட்டுச் செய்துபோன மாயங்களாலும், நிறந்தனூடுபுக் கெனதாவியை நின்றுநின்றுருக்கியுண்கின்ற - இச்சிறந்த வான்சுடரே என்று, அவன்றனக்கு விசேஷணமாக்குதல்; உருக்கியுண் கின்றவென்று - குணபரமாக்குதல். அதாவது - பிறந்தவாறென்றுதொ டங்கி, மாயங்களுமுருக்கியுண்கின்றன வென்றபடி. இதுவே நிர்வஹித் துப்போருமது.

( உன்னையென்றுகொல்சேர்வதுவே ) நான் தரித்துநின் றநுசந் திக்கவல்லேனும்படி பண்ணியருளவேணு மென்கிறார். அன்றிக்கே, சே ருகையாகிறது - இரண்டிதலையும் சேருகையாய், நானநுசந்தித்து சிதில னுகை தவிர்ந்து உன்னைப் பரிமாறும்படி கிட்டப்பெறுவ தென்றென்கிறு ராகவுமாம்........................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. ( பிறந்தவாறுமித்யாதி ) "பிறந்தவாறும்" என்று தொட ங்கி, "உருக்கியுண்கின்ற; உன்னையென்றுகொல்சேர்வதுவே" என்கிறவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை ( இத்திருவாய்மொழியித்யாதி )

மேன்மைதோற்றவந்து பிறந்தானென்கிறார் ( மாதாபிதாக்களித்யாதி )மே ன்மைதோற்றவந்து பிறக்கையாலே யீடுபாட்டுக்குடலாக வருளிச்செய்கிறார் (தன் னைப்பெற்றவர்களித்யாதி ) இது- "பிறந்தவாறும்" என்கிறவருடைய ஹார்த்தபா வம். அதாவது - எல்லாரும் தங்களைப்பெற்றவர்களுக்குப் பாசத்தை யுண்டாக்குவ ர்களொழிய, பாசத்தை யறுத்துக்கொண்டு வந்து பிறப்பாருண்டோ வென்றபடி. "மாதாபிதாக்கள்" இதயாதி முந்தினவாக்யவிவரணம் ( இவனிறே யித்யாதிவா

"இச்சிறந்த" என்று-ப்ரத்யக்ஷமாகச்சொன்னதுக்குபாவம் (பூதகாலமாயித்யாதி) "வான்" என்றதுக்கும், "இ" என்றதுக்கு மர்த்தாந்தரமாதல், "வஸ்துபிறக்க" இத்யாதிவாக்யவிவரணமாதல் (வான்சுடரிங்கேயித்யாதி)

குணபரமானபோது, இச்சிறந்தவான்சுடரோ - பிறந்தவாறுமென்றுதொடங்கி,உருக்கியுண்கின்ற; ஆகையாலே, உன்னையென்றுகொல்சேர்வதுவேஇத்யந்வயః.

கீழ் - மாநஸமாகச்சேருகையையருளிச்செய்து, எம்பார் நிர்வாஹத்திலே, காயிகமாகச்சேருகையை யருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி)

நிறந்தனூடுபுக்கு - மர்மமானஹ்ருதய ப்ரதேஶங்களுக்குள்ளே புக்கென்றபடி. நிறம் - மர்மம். நின்றுநின்றுருக்கியுண்கின்ற - க்ஷணந்தோறுமிடைவிடாதே நின்று த்ரவத்ரவ்யமாக்கி க்ரஸியாநின்றன. நலியாநின்றதென்றபடி. ஆவி - ஆத்மா. "சிறந்தவான்சுடரோ" என்றவநந்தரம், தரித்துநின்றென்றுகூட்டிக்கொள்வது.

---

# இரண்டாம்பாட்டு.

---

வதுவைவார்த்தையுளேறுபாய்ந்ததுமாயமாவினைவாய்பிளந்தது
மதுவைவார்குழலார்குரவைபிணைந்தகுழகு
மதுவிதுவுதுவென்னலாவனவல்லவென்னையுன்செய்கைநைவிக்கு
முதுவையமுதல்வாவுன்னையென்றுதலைப்பெய்வனே.

## ஆறாயிரப்படி.

(வதுவை) விவாஹப்ரசங்கத்திலே ஏறுகளிலேபாய்ந்தபடியும், வஞ்சகமாய்வந்தகுதிரையை வாய்பிளந்தபடியும், மதுஸ்யந்தியான குழலையுடையவர்களோடே திருக்குரவையிலே கலந்தகலப்பும்; உன்செயலாகையாலே, எல்லாச்சேஷ்டிதங்களும், உன்குணப்ரஸங்கத்திலே நைகயும் ப்ரக்ருதியானவென்னை மிகவும் சிதிலமாக்காநின்றன. ப்ரளயத்திலழுந்தின ஜகத்தையுண்டாக்கினாப்போலே யென்னைதரிப்பித்து, உன்னையநுபவிக்கவல்லேனும்படிபண்ணியருளவேணுமென்கிறார்..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபிமதவிஷயத்தி லுன்னுடைய வ்யாபாரங்க ளென்னை சிதிலனாக்காநின்றதென்கிறார்.

வதுவைவார்த்தையுள் - வதுவைகல்யாணவார்த்தைபிறந்தவளவிலே. ஏறு- ஏறுகளை. பாய்ந்ததும் - மேல்விழுந்துகொன்றதுவும். மாயம் - அசுராவிஷ்டமாய் க்ருத்ரிமமான. மாவினை-கேசியாகிறகுதிரையை. கோபிமாரஞ்சாதபடி, வாய் - வாயை. பிளந்ததும்-பிளந்ததுவும். மதுவை - மதுவை. வார்-வாரவிடுகிற. குழலார்-குழலையுடையரானபெண்களுடனே. குரவை-குரவை. பிணைந்த-கோத்த. குழகும்-இனியவ்யாபாரங்களைப்பண்ணினதுவும். அது-அது. இது-இது. உது-உது. என்னலாவன-என்றுவிசேஷித்துச்சொல்லலாவன. அல்ல-அல்ல. என்னை-உன்னளவிலதிப்ரவணனானவென்னை. நிரதிசயபோக்யமான, உன்-உன். செய்கை-செயலானவை. நைவிக்கும்-சிதிலனாக்காநிற்கும். வையம்-ஜகத்துக்கு. முதுமுதல்வா -ப்ரதானகாரணபூதனானவனே. உன்னை-உன்னை. என்று-என்று. தலைப்பெய்வன்-கிட்டுவேன்.

அழிந்தஜகத்தையுண்டாக்கினநீ சிதிலனாகிறவென்னை ஸ்த்ரிரனாக்குவதென்றென்று கருத்து. வதுவை – விவாஹம்.........................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

ஏறடர்க்கைதொடக்கமான வுன்சேஷ்டிதங்க ளென்னைசிதிலமாக்காநின்றன, நான்தரித்து நின்றநுபவிக்கும்படி பண்ணவேணுமென்கிறார். இனி, அல்லாதவவதாரங்களையு மாராய்ந்தால் இத்தன்மையவாயிருக்குமிறே, ஆகையாலே அவ்வருகுபோகமாட்டார், அடியிழியமாட்டார், இனிவளர்ந்தவாறேறப்போமித்தனையிறே; "சீராற்பிறந்து" இத்யாதி. பிறந்தவாறவனேசெய்கையாலே யிவர்க்கங்குச் செய்யலாவதில்லை, இனி அநுகூலர்க்குக்கண்டு பரிகைக்கு விஷயமுள்ளது வளர்ந்தவாற்றிலேயிறே, அவ்வளர்ந்தவாறு தாணிருக்கிறபடிசொல்லுகிறார்.

(வதுவைவார்த்தையுள்) வதுவை-விவாஹம். (வார்த்தையுள்) "எருதுகளேழையும் நிரசித்தார்க்கிவளைக்கொடுக்கக்கடவோம்" என்றுபிறந்த ப்ரசித்தி. (ஏறுபாய்ந்ததும்) ஏறுகளின்மேல்விழுந்தபடிகளையும். இவர்க்கு ம்ருத்யுவின்வாயிலே விழுந்தாப்போலேயாயிற்றிருக்கிறது, பொய்கையிலேபாய்ந்தாப்போலே யிராநின்றதவனுக்கு. கருமாரிபாய்ந்தாலாகாதோ என்னும்படியிறே யவளுடையபோக்யதை. (மாயமாவினைவாய்பிளந்ததும்) கம்ஸப்ரேரிதமாய் க்ருத்ரிமவேஷங்கொண்டு வந்ததாயிற்று. க்ருத்ரிமமாகக் குதிரைவடிவைக்கொண்டு வாயையங்காந்துகொண்டோரசுரன்வந்துதோன்ற, சிறுபிள்ளைகள் த்வாரங்கண்டவிடத்திலே கைநீட்டும்வாசனையாலே யதின்வாயிலே கையைநீட்டினான்; அபூர்வதர்சநத்தாலே கைவிம்மிற்று, பூரித்தவாறே யிரண்டுகூறாய்விழுந்தான். ஸ்ரீநாரதபகவான் "[illegible]" (ஜகதஸ்தமிதம்) என்று வந்துவிழுந்தாப்போலே யிவர்க்கிப்போதிருக்கிறது. "[illegible]" (வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ரஸ்ஸோஸுரக்ருஷ்ணபாஹுநா । நிபபாதத்விதாபூதோவைத்யுதேநயதாத்ரும:) இத்தால் – ஸ்ரீப்ருந்தாவநத்துக்குவழி யிசங்கும்படி பெண்களுக்கு வன்னியமறுத்துக்கொடுத்தபடி. (மதுவைவாரித்யாதி) மதுஸ்யந்தியானகுழலையுடையவர்கள். மதுவைவார்குழலாரென்றது - மதுவார்குழலாரென்றபடி. சொற்பாடு. குரவைகோப்பிலே தன்னையுமொருவனுக்கித்தொடுத்தபடி. (குழறும்) அவர்களபிசந்தியைக்குலைத்து பக்நாபிமாநைகளாகப்பண்ணி, அவர்களோடொக்கத் தான்கலந்தபடி. அதாவது-வேற்றுளென்னவொண்ணாதபடி, இவர்களிலே யொருவனென்னலாம்படி புக்குநின்றானாயிற்று. (அதுவிதுவுதுவென்னலாவனவல்ல) அதுவாகவுமாம், இதுவாகவுமாம், உதுவாகவுமாம், எனக்கிதிலொரு நிர்ப்பந்தமில்லை. (என்னையுன்செய்கைநைவிக்கும்) அச்செயலாகவுமாம், இச்செயலாகவு

மாம், உச்செயலாகவுமாம், அதிலெனக்கொரு தாத்பர்யமில்லை; உன்னுடைய சேஷ்டிதங்களாகையும், நானுகையுமேயெனக்கு நோவுபடுகைக்குவேண்டுவது. " இத்தால்சொல்லிற்றாயிற்று - இப்பாட்டில் மூன்றாத்தம்சொல்லாநின்றது, அதாவது-அநுகூலசம்ஶ்லேஷமும், ப்ரதிகூலநிரசநமும், மத்யஸ்த்தரக்ஷணமுமானவிவற்றை-அதுவிதுவுது என்கிறது" என்னும்பிள்ளான்.

(முதுவையமுதல்வா) இவர் தம்மது மவ்வளவாகாதேதான். ப்ரளயங்கொண்ட ஜகத்தோபாதியாகாதே இவருமழிந்தபடி, இத்தோடொக்க விவனையுமடிதொட்டு முண்டாக்கவேண்டியிருக்கிறபடி. பழையதானபூமிக்குக்காரணமென்னுதல், பூமிக்குப்பழையகாரணமென்னுதல். (உன்னையென்றுதலைப்பெய்வனே) உன்னையநுசந்தித்து சிதிலனாகாதே, தரித்துநின்றநுசந்திக்கும்படி பண்ணவேணும். உன்னைவந்து கிட்டப்பெறுவதென்றோவென்றுமாம். தலைப்பெய்கை - கிட்டுகை.....................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு ( வதுவையித்யாதி ) " ஏறுபாய்ந்ததும் " இத்யாதிமேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை ( ஏறடர்க்கையித்யாதி ) பிறந்தவாற்றிலேயாதல் அவதாராந்தரங்களிலேயாதல்போகாதே, வளர்ந்தவாற்றிலேபோவானென்னென்ன (இனியல்லாதவித்யாதி) இத்தன்மையவாயிருக்கும் - இத்தஸ்வபாவத்தையுடைத்தாயிருக்கும். அதாவது-இப்படியே பரியவேண்டியிருக்குமென்றபடி. அவ்வருகு-அவதாராந்தரங்களில். அடியில்-பிறந்தவாற்றில். (அடியிலீழியமாட்டார்) மோஹிப்பிக்கையாலேயென்றுகருத்து. "அவதாராந்தரங்களு மித்தன்மையவாயிருக்கும்" என்றதுக்கு ப்ரமாணம் (சீராலித்யாதி) பெரியதிருவந்தாதி பதினாரும்பாட்டு. (சீராற்பிறந்து சிறப்பால்வளராது) சீர்மையோடேபிறந்து உபலாலநத்தோடே வளராதே. அதாவது - சக்ரவர்த்தி வசுதேவாதிகள் அஶ்வமேத மகாத்வரதம் முதலானவற்றை யநுஷ்டித்து, தத்பலமாகச் சீர்மையோடேவந்துபிறந்து, அவர்கள் ஸ்நேஹோத்தரமாக வுபலாலித்துவளர்க்க வளர்ந்தாப்போலேபிறந்து வளராதேயென்றபடி. (பேர்வாமனுகாக்கால்) பேரும் " ஸ்ரீபதி " என்றாப்போலன்றிக்கே, சிறுமைக்குவாசகமான வாமநனென்னும் திருநாமத்தையுடையயாகாதொழிந்தால். (மார்பாரப்புல்கிநீயுண்டுமிழ்ந்தபூமிநீரேற்பரிதே) நீயபிநிவேசத்தோற்ற மாரவாரவணைத்து வயிராரவுண்டு வெளிநாடுகாணவுமிழ்ந்த பூமியானது, நீரேற்றிரந்து வாங்கிக்கொள்ளக்கிடையாதோ. (பேராளா) ஜகத்ரக்ஷணத்தில் நிரவதிகவ்யாமோஹத்தையுடையவனே. (யாமறிய) நாங்கள் யதாவாகவறியும்படி. (நீ) சர்வஜ்ஞனநீ. (சூழ்ந்து சொல்லு) இத்தை நன்றாகவாராய்ந்தருளிச்செய்யவேணுமித்யர்த்தம். மோஹிப்பிக்கையாலே யடியிலீழியமாட்டாரொன்று - இழ்மையருளிச்செய்து, அங்ஙனன்றிக்கே,பிறந்தவாறு அவனேசெய்ததாகையாலே பரியவிஷயமில்லாமையாலு மடியிலீழியமாட்டாரென்கிறார் (பிறந்தவாறவனேயித்யாதி) (அவனே) என்கிற ஏவகாரத்தாலே-கர்மத்தை வ்யவச்சேதிக்கிறது. இங்குப்பரியத்தக்கதுண்டோவென்ன (இனியறுகூலர்க்கித்யாதி)

"ஏறு" என்று - ஜாத்யேகவசநம். " பாய்ந்ததும் " என்றதுக்குஹார்த்தபாவம் (இவர்க்கித்யாதிவாக்யத்வயம்) அதாவது - அவன்சௌகுமார்யத்தையு ம

வற்றின் க்ரௌர்யத்தையு மநுசந்திக்கையாலே ம்ருத்யுவின் வாயிலேவிழுந்தாப் போலேயிருந்ததிவருக்கு;அவனுக்கவளோட்டைச்சேர்த்திக்கு ஹேதுவாகையாலே, பொய்கையிலே பாய்ந்தாப்போலே சுகரூபமாய்த் தோற்றிற்றென்றபடி. சுகரூபமாய்த்தோற்றுகைக்கு ஹேதுவேதென்ன ( கருமாரியித்யாதி ) கருமாரிபாய்கையாவது - காமாக்ஷியினுடைய வாலயத்திற்குளத்தில் சங்குத்வயமத்யேவிழுகை.

மாயமாவினை-மாயமாவை. க்ருத்ரிமமானகுதிரையை. மா-குதிரை. அசுரன் குதிரையாய்வருகைக்கு ஹேதுவையருளிச்செய்கிறார் (கம்ஸேத்யாதி) இவனை நிரசிக்கையில் பாலக்ரீடைபோலே அநாயாஸேந நிரஸிக்கும்படியை யருளிச்செய்கிறார் (க்ருத்ரிமமாகவித்யாதி) "வ்யாதிதாஸ்யஃ" ( வ்யாதிதாஸ்யஃ ) என்றத்தைப்பற்ற ( வாயையங்காந்துகொண்டென்றது ) புத்திபூர்வகமாக நிரசிப்பாரிரண்டு கையாலே நிரசிக்கவேணுமே, அப்படிசொல்லாதே "க்ருஷ்ணபாஹுநா" (க்ருஷ்ணபாஹுநா) என்று ஏகவசநமாகச்சொல்லுகையாலே (அதின்வாயிலேகையை நீட்டினன்) என்கிறார். விம்மிற்று-பருத்தது. அவன் பட்டுப்போயிருக்க, "மாயமா" என்கிறதென்னென்ன ( ஸ்ரீநாரதேத்யாதி ) அப்படி க்ரூரமாயவந்ததோவென்ன (வ்யாதிதேத்யாதி) பஞ்சமேம்போ. கீழ்-நப்பின்னைக்குதவினபடிசொல்லிற்று; இங்கு - பெண்களுக்குதவினபடி சொல்லுகிறதென்கிறார் (இத்தாலித்யாதி) இசங்கும்படி - நடக்கும்படி. வன்னியம-குறும்பு. விரோதமென்றபடி.

"மதுவை" என்றதில், ஐகாரம்-அவ்யயம். சொற்பாடு-சொல். அதாவது-அக்ஷரஸங்க்யாபூரணமென்றபடி. "குழகும்" என்றதுக்கு-மேன்மைதோற்றுதபடி ஸஜாதீயனாய்க்கலந்தானென்கிறார் ( குரவைகோப்பிலேயித்யாதி ) அன்றிக்கே, விடவ்யாபாரத்தாலே பெண்கள்நெஞ்சில் மறத்தைப்போக்கி வசீகரித்துக்கலந்தானென்றர்த்தாந்தரம் (அவர்களபிசந்தியித்யாதி) அபிசந்தியாவது - ப்ரணயரோஷத்தால்வந்தநினைவு. முந்தினவர்த்தவிவரணம் (அதாவதித்யாதி) அதாவதென்றது-அவர்களோடொக்கத்தான் கலக்கையாவதென்றபடி. வேறுருள்-பரன். அர்த்தத்வயத்துக்கும், "குழகு" என்று - சாமர்த்யம். குழகு-விரகும், லீலாவ்யாபாரமும், பவ்யதையும்.

"அதுவிதுவுது" என்றதுக்கு - அல்பாநல்பமத்யமவ்யாபாரமாக வருளிச்செய்கிறார் (அதுவாகவுமாமித்யாதி) "அதுவாகவுமாம்" இத்யாதியின் விவரணம் (அச்செயலாகவுமாமித்யாதி)அர்த்தாந்தரம் (இத்தாலித்யாதி) இத்தாலென்றது-"அதுவிதுவுது" என்றவித்தாலென்றபடி. மத்யஸ்தரக்ஷணமுமென்றது - நப்பின்னையைப்போலே அந்தரங்கைகளுமன்றிக்கே, கேசியைப்போலே ப்ரதிகூலைகளுமன்றிக்கேயிருக்கிற மதுவை வார்குழலாருடைய ரக்ஷணத்தை. அதுவிதுவுது என்று விசேஷித்துச்சொல்லலாவன வல்லவென்று சப்தார்த்தம்.

"என்னையுன்செய்கைநைவிக்கும்" என்றவநந்தரம், "முதுவையமுதல்வா" என்று - காரணத்வம்சொன்னதுக்குபாவம் ( இவர்தம்மதுமித்யாதிவாக்யத்ரயம் ) பூர்வவிவரணம் (ப்ரளயேத்யாதிவாக்யத்வயம்) அடிதொட்டும்-அடியேதொடங்கி. சத்தையேதொடங்கியென்றபடி. "முது" என்றது - * வையத்துக்குவிசேஷணமாதல். * முதல்வனுக்கு விசேஷணமாதல்.

இத்திருவாய்மொழியில், கிட்டுகைக்கு வாசகங்களான சப்தங்களெல்லாம்-ஆழ்வான் நிர்வாஹத்தில், மாநஸாநுசந்தாநபரங்கள்; எம்பார்நிர்வாஹத்தில், காயிகமாகக் கிட்டுகையென்று கண்டுகொள்வது ......................................*

# மூன்றாம்பாட்டு

பெய்யும்பூங்குழற்பேய்முலையுண்ட பிள்ளைத்தேற்றமும்பேர்ந்தோர்சாடி
செய்யபாதமொன்றாற்செய்தநின்சிறுச்சேவகமு [றச்
நெய்யுண்வார்த்தையுளன்னைகோலகொள்ளநீயுன்றாமரைக்கண்கணீர்மல்
பையவேநிலையும்வந்தென்னெஞ்சையுருக்குங்களே. [கப்

## ஆறாயிரப்படி.

( பெய்யும்பூங்குழல் ) பூப்பெய்தகுழலையுடைய பூதனையுடைய முலையுண்ட பிள்ளைத்தனத்திலேயுண்டாயிருக்கிற ரஸஜ்ஞாநமும்; அது க்குமேலே அசுராவேசத்தாலே ஊருகிறதொருசகடத்தை சிவந்ததிருவடியொன்றாலே யுதைத்த சிறுமையிலுண்டான வாண்பிள்ளைத்தனமும்; நெய்யைக்களவுகண்டான் என்னும் வார்த்தாப்ரஸ்தாவத்திலே ஸ்நேஹிநியான தாயார்கையிலே யொருதுரும்பைக்கொள்ள, அத்யந்தஈந்தரனை நீ, உனக்குத்தகுதியாய்த் தாமரைப்பூப்போலேயிருக்கிற கண்களசத்திலே நீர்மல்கும்படி, " அடிபடுகிறது " என்றுபேகணித்து நின்றநிலையும் வந்தென்னெஞ்சை நீராக்காநின்றனவென்கிறார்..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்னுடைய பாலசேஷ்டிதங்களானவை யென்னெஞ்சையுருக்கப்பண்ணுகின்றனவென்கிறார்.

யசோதைவடிவுகொண்டொப்பித்துவருகைடாலே, பெய்யும் - வைத்த. பூ- பூவையுடைத்தான. குழல்-மயிர்முடியையுடைய. பேய்-பேயின். முலை - முலையை. உண்ட-உண்ட. பிள்ளை-பிள்ளைத்தனத்திலே. தேற்றமும் - வேறாமுலையையறிந்த தெளிவும். ஓர்-அசுராவிஷ்டமாயசலிபவந்ததொரு. சாடு-சகடம். பேர்ந்து-பேர்ந்துபோய். இற-முடியும்படியாக. செய்ய-சிவந்த, பாதம் திருவடி. ஒன்றால் - ஒன்றாலே. செய்த-செய்தருளின. நின்-உன்னுடைய. சிறுச்சேவகமும்-பாலபராக்ரமமும். நெய்-நெய். உண் - அமுதுசெய்த. வார்த்தையுள் - வார்த்தைபிறந்தவளவிலே. அன்னை-தாயானயசோதை. பரிவாலே, கையிலே, கோல்-கோலை. கொள்ள-கொள்ள. நீ-எல்லாரையுமுன்கோற்கீழே நடத்துமபடி சர்வசக்தியானநீ. உன் - உனக்கநுரூபமாய். தாமரை-தாமரைபோலேயிருக்கிற. கண்கள்-கண்களானவை. நீர் - நீர். மல்க-மல்கும்படி. பைய - பீதனாய்க்கொண்டொடுங்கிநிற்கும். நிலையும் - நிலையும். வந்து-முற்காலத்திலே செய்துபோனவை இன்றென்னளவும்வந்து. என் - என்னுடைய. நெஞ்சை - சபலமானநெஞ்சை. உருக்குங்கள்-உருக்காநின்றன...........*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

உன்பாலசேஷ்டிதங்களென்னை நலியாநின்றதென்கிறார்.

( பெய்யும்பூங்குழற்பேய்முலையுண்ட ) ப்ரதிகூலருடையப்ராணனு மாஶ்ரிதஸ்பர்ஶமுள்ள த்ரவ்யமுமே தாரகமாக வளர்ந்தானென்று- " வளர்ந்தவாறு " என்றுசொன்னவிடத்தை விவரிக்கிறதிங்கு. பிள்ளை

யைத்திருமஞ்சனஞ்செய்தொப்பித்துக் கண்வளரப்பண்ணிக்கடக்கநின்றாள் யசோதைப்பிராட்டி, அவ்வளவிலேவந்துகிட்டினாள்பூதனை. ( பெய்யும்பூங்குழல் ) - பின்னை என்றங்கேசொல்லுதல்; அன்றிக்கே, ( பெய்யும்பூங்குழல் ) - பேய் என்று பூதனையோடேகூட்டுதல். பிணக்கோலமாக வொப்பித்துவந்தாள்காணும். "பிள்ளையனுங்கவொண்ணாது" என்றுதாய்மாரெப்போது மொப்பித்தபடியே யிருப்பர்களாயிற்று, இவளுமப்படியேவந்தாளாயிற்று; * பெற்றதாய்போல்வந்த பேய்ச்சியிறே. வைத்தபூவையுடைய மயிர்முடியுடையபேய். (பேய்முலையுண்டபிள்ளைத்தேற்றமும்) ஐஸ்வர்யமானஜ்ஞாநமின்றிக்கே, "தாய்முலை" என்றும், "வேற்றுமுலை" என்று மறியும்தெளிவு. அத்யந்தசைசவத்திலும் பிள்ளைகள் முலைவாசியறிவர்களிறே. இவனும் "தாய்" என்றேநினைத்துண்டான்கிடீர். (பிள்ளைத்தேற்றமும்) பால்யத்தில் தெளிவிருக்கிறபடி. அதாவது - யசோதைப்பிராட்டி முலைகொடுக்க ப்ரீதியினாலேபண்ணும் முக்தஜல்பிதங்களை யிவள்பக்கலிலே பண்ணிற்றாயிற்று. "பாதகர்" என்றறியவுமாம், அறியாதிருக்கவுமாம், சத்ருக்கள்கிட்டினால் முடியக்கடவதானவஸ்து ஸ்வபாவமிருக்கிறபடி. (பேர்ந்து) அநுக்ருமேலே. (ஓர்சாடிற) " ப்ரதிகூலம் " என்று சங்கிக்கவுமொண்ணாதுகிடீர். பூதனையை, " இன்னாள் " என்றாராய்கைக்காகிலும் விஷயமுண்டு, இதராஸாதாரணமாகவைத்ததுகிடீர். யசோதையைக்கண்டவாறே "இவளார்" என்றாராய்ச்சிப்படுமிறே. (ஓர்சாடு) பாதகத்தில் கொடுமைக்கிந்நோடொப்பதில்லைகிடீர். (இற) முறிய. "தளர்ந்தும் முறிந்தும்" இத்யாதி. (செய்யபாதம்) சிவந்ததிருவடிகள். என்னுடையஜீவநத்தைக்கொண்டுகிடீர் விரோதியைப்போக்கிற்று. இவர்க்கு நீலகமாடியிலே கல்லிந்திறேகிடப்பது. (ஒன்றுல்) " இன்னதிருவடி " என்று நியதியில்லையிறே. கருவிசசெய்கிறானன்றே. ( செய்தநின்சிறுச்சேவகமும் ) கிரேசைமச்செய்யவடியிட்டபடியும். ராஜகுமாரனாய்ப்பிறந்து, பருவம்நிரம்பி, ஆயுதப்ரோமம்பண்ணி, வசிஷ்டாதிகளைப்பின்சென்று, விஸ்வாமித்ராதிகள்பக்கலிலே அஸ்த்ரலாபமுண்டாய், பின்பிறே தாடகாமாரீசசுபாஹுக்களை நிரசித்தது; அதெல்லாம் பருவம் நிரம்புவதற்குமுன்னே வாயாலும் காலாலுமாயிருக்கிறபடியிங்கு. வாயால் வலியார்க்குத்தாயாரும்வேண்டாவாயிற்றுக்காணும். இவனைப்போலே கால்கூடியாரில்லை, ஆகையிறே காலிலே கொடிகட்டிவைக்கிறது. "𑌧𑍍𑌵𑌜𑌾𑌰𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌵𑌜𑍍𑌰𑌲𑌾𑌞𑍍𑌛𑌨𑌂 । 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌕𑍍𑌰𑌮 𑌤𑍍𑌵𑌚𑍍𑌚𑌰𑌣𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌦𑍍𑌵𑌯𑌂" (த்வஜாரவிந்தாங்குசவஜ்ரலாஞ்சநம் । த்ரிவிக்ரமத்வச்சரணாம்புஜத்வயம்) என்கிறபடியே. அப்போதும் * அவனைனுள்ளத்தெண்மதியுங்கடந்தண்டமீதுபோயிற்றதும் கமிக்கத்திருவடிகளிறே. (நெய்யுணித்யாதி) பருவம்நிரம்புவதற்குமுன்பு தான் ப்ரதிகூலரை யஞ்சப்பண்ணுமாபோலே காணும் பருவம் நிரம்பநிரம்ப அநுகூலர்க்குத்தா னஞ்சும்படியும். (நெய்யுண்வார்த்தையுள் ) நெய்யைக்களவிட்டுக்கடக்கவைத்துப்போய் அந

ந்தரத்திலேவந்துபார்த்தாள், குறியழிந்துகிடக்கையாலே "நெய்களவு போயிற்று" என்றாள்; அவ்வளவிலே பையாக்க விழிக்கத்தொடங்கினான் (அன்னைகோல்கொள்ள) "மாதாவிறேயெடுத்தாள்" என்னும்விபாகமறிகிறிலன். அவள்வார்த்தையிறே [உந்தமடிகள்முனிவர்] வாரீர் பிள்ளாய், உங்கள்தமப்பனார் கேட்பராகிலும்மைப்பொடிவர்; [உன்னை நானென்கையிற்கோலால் நொந்திடமோதவுங்கில்லேன்] இதுதானிருக்கிறபடிகண்டீரோ; இத்தைக்கொண்டு இனிநீரொன்றும் செய்யாதபடி பண்ணிக்கொள்ளலாமிறே வல்லார்க்கு, நானதுக்குசக்தையாகிறிலேன். * தாயெடுத்த சிறுகோலுக்குளைந்தோடியிறே - "அச்சமுறுத்துகிறபடியிது, பட்டாலும்நோவாது" என்றறிகிறிலன். தமப்பனாரொடுத்தாராகிலும் சிறிதாறலாங்காணும், ஹிதகாமராகையாலே அதுப்ராப்தமிறே; உகப்பேபின்செல்லக்கடவவிவள்பொடிந்தால் பின்னைப்பொறுக்கப்போகாதிறே. இவள்தானிப்படி செய்வானென்னென்னில்; ஸ்நேஹமின்றிக்கேயொழிந்தால் இன்னுமொன்றுண்டோ கல்லும் தடியும் கொள்ளுகைக்கு. (நீயுன் தாமரைக்கண்கள்நீர்மல்க) வெறும்புறத்திலே யாலத்திவழிக்கவேண்டும்படி யிருக்கிறநீ, அதுக்குமேலே கண்களும் கோட்புக்கால் பொறுக்கப்போமோ. (கோட்புகுகையாவது - பாலசூதாதிக ளபிநவமாக பலவத்துக்களாகை.) (உன்தாமரைக்கண்கள்) "ராகவோர்ஹதிவைதேஹீம்" (ராகவோர்ஹதிவைதேஹீம்) என்கிறபடியே உனக்குத்தகுதியானகண். "தக்கதாமரைக்கண்" என்னக்கடவதிறே. (பையவேநிலையும்) "அடிக்க" என்று அவள்கோலையெடுத்தாள்; அவளைப்பார்த்துநின்று கண்ணநீரைவிழவிடாநிற்பது, உடம்புவெளுப்பதாய்ப்பேகணித்துநின்றநிலையும். அன்றிக்கே, அஞ்சி அவள்முகத்தைப்பார்த்து நிற்கச்செய்தே பின்பே கால்வாங்கக்கணிசித்துமாட்டாதொழிவது, ஊன்றநிற்கமாட்டாதொழிவதாய்த் தரையில்கால்பாவாதபடிபொய்க்க அடியிட்டுக்கொண்டுநின்ற நிலைகாணும். பைய-மெள்ள. (வந்தித்யாதி) அச்செயல்களென்னை நலியாநின்றன. உனக்கானால் தப்பியாகிலும்போகலாம், அதுவுமொண்ணுதபடி புக்கவிடம்புக்குவடிம்பிட்டுநலியாநின்றன. (பையவேநிலையும் வந்தென்னெஞ்சையுருக்கும்) என்னையோரடி போகவொட்டாதே காற்கட்டாநின்றதென்கிறார். (நெஞ்சையுருக்கும்) இவர்நெஞ்சிலேயடியிட்டபடி. (உருக்கும்) முதல்நெஞ்சையுருக்கவடியிட்டது....*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (பெய்யுமித்யாதி) "பெய்யும்பூங்குழல்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (உன்பாலசேஷ்டிதங்களித்யாதி)

பெய்யும்பூங்குழல் - வைத்தபூவையுடைத்தான மயிர்முடியையுடையவென்ற சப்தார்த்தம். "பெய்யும்பூங்குழல்" என்றத்தை - * பிள்ளைக்கு விசேஷணமாக்குவாராக ப்ரயோஜநங்காட்டுகிறார் (பிள்ளையையித்யாதி) இவளொப்பித்தவருகை

க்கு ஹேதுவேதென்ன (பிள்ளையழுங்கவித்யாதி) அனுக்கம்-பாலவ்யாதி. தாயாய்வ ந்ததுக்குப்ரமாணம் (பெற்றதாயித்யாதி) பாசுரஸ்யஸ்பஷ்டோர்த்தஃ. "உண்ட" என்றதுக்குபாவம் (இவனும்தாயித்யாதி) பிள்ளையானல் தேற்றமேதென்ன (பால்யத்திலித்யாதி) "தாய்" என்றே நினைத்துண்டானுகில், அவள்முடியக்கூடுமோவென்ன (பாதகரித்யாதி)

. "ஓர்" என்றதுக்கர்த்தம் (ப்ரதிகூலமென்றித்யாதி) இதுபூதனைக்குமொவ்வாதோவென்ன (பூதனையையித்யாதி) விஷயமென்றது - யோக்யதையென்றபடி. யோக்யதையெப்படியுண்டென்ன (யசோதையையித்யாதி) ஆராய்ச்சிப்படும்-விசாரிக்கப்படும். (பாதகத்தில்கொடுமைக்கு) இத்யாதி வாக்யாந்தரத்திலே, (ப்ரதிகூலமென்றுசங்கிக்க) இத்யாதிநாலுவாக்யங்களு மநுசந்திப்பது. "ஓர்சாடு" என்றது-அத்விதீயமானசாடென்றுவிவக்ஷித்து, அதுக்கத்விதீயத்வமேதென்ன ( பாதகத்திலித்யாதி ) முறித்ததுக்குப்ரமாணம் (தளர்ந்துமித்யாதி) "இற" என்றவநந்தரம், "செய்யபாதம்" என்கிறவருடையபாவம் (என்னுடையவித்யாதி) ரசோக்தி (இவர்க்கித்யாதி) நியதியில்லாமைக்குஹேது கருவியித்யாதி) அதாவது - "இதுநிரஸ்தமாகவேணும்" என்னும்கருவுதலாலே யுதைக்கில், வலத்திருவடியாலே யுதைக்கவேணும்; அங்ஙனன்றிக்கே, அனந்தலிலேயுதைக்கிறுகையாலே, ஏதேனுமொன்றமையுமென்றபடி. சிறுச்சேவகம் - பால்யத்தில்சௌர்யம். இவ்விரண்டையும் பால்யத்திலேசெய்கையாலே ராமாவதார வ்யாவ்ருத்தி (ராஜகுமாரனுயித்யாதி) இவ்விடத்திலே, வசிஷ்ட்டாதிகளைப்பின்சென்று அஸ்த்ரலாபமுண்டாய் தாடகையை; விச்வாமித்ராதிகள் பக்கலிலே அஸ்த்ரலாபமுண்டாய் மாரீசஸுபாஹுக்களை என்றங்வயித்துக்கொள்வது; விச்வாமித்ராஸ்த்ரப்ரதாநம் தாடகாநிரசநாநந்தரமாகையாலே. "வாயாலும்" என்றத்தை ரசோக்தியாலே விவரிக்கிறுர் (வாயால்வலியார்க்கித்யாதி) கொடி-த்வஜம். இதுக்குப்ரமாணம் (த்வஜாரவிந்தேத்யாதி) திருநெடுந்தாண்டகப்பாசுரத்தையுட்கொண்டு, "த்ரிவிக்ரம" என்றதுக்குபாவம் (அப்போதுமித்யாதி) அப்போதும்-அர்த்திவதாரசமயத்திலும். ( ஆவுணனுள்ளத்தித்யாதி ) மஹாபலியினுடைய ஹ்ருதயத்திலுண்டான மநோரதருபஞ்ஞாநத்தை யதிக்ரமித்து அண்டபித்திக்கு மவ்வருகேபோயித்யர்த்தஃ.

பையாக்க - பயந்தோற்ற. அன்னேகோல்கொண்ட வநந்தரத்திலே யிவன் கண்ணநீர்விழவிட்டது ப்ராதிகூல்யமென்கிறுர் (மாதாவிறேயித்யாதி) ப்ராதிகூல்யமென்கிறதென், அவளடியானேவென்ன (அவள்வார்த்தையித்யாதி) "உந்தமடிகள்" இத்யாதிக்கர்த்தம் (வாரீரித்யாதி, சக்தையாகிறிலேனென்னுமளவும்) மோத-அடிக்க. இது திருமொழி பத்தாம்பத்து நாலாந்திருமொழி எட்டாம்பாட்டு. தாய்கோலெடுத்தா லிவன்பயப்படுமோவென்ன; ப்ரமாணம் (தாயெடுத்தவித்யாதி) உளைந்தோடி-கடுபட்டோடி. பயப்பட்டோடியென்றபடி. எட்டாம்பத்து மூன்றாந்திருமொழி அஞ்சாம்பாட்டு, "தாயெடுத்த" இத்யாதி. "எடுத்த" என்றதுக்குபாவம் ( அச்சமித்யாதி ) "சிறுகோல்" என்றதுக்குபாவம் ( பட்டாலுமித்யாதி ) சிறுகோல் - வைங்கோல். "தாயெடுத்த" என்றதுக்கு வ்யாவர்த்யம் ( தமப்பனுரித்யாதி ) ரசோக்தி ( ஸ்நேஹமித்யாதி ) ஸ்நேஹம்-நெய். கோட்புகுதுகையாவது - ஹ்ருதமாக புஷ்டமாகை. அப்படி சகுதியாயிருக்குமோவென்ன (தக்கவித்யாதி) "பைய" என்றது - (பொய்க்க) என்றபடி. பொய்க்க-மெள்ள. தறையில் கால்பாவாதபடி மெள்ளவடியிட்டென்றபடி. இவ்விடத்திலே - "மௌஹூர்த்திகஸ்வயிக்ஷூதாமஸி" ( கோப்யாததேத்வயிக்ருதாகஸி ) இத்யாதி குந்திவசநமநுசந்தேயம்.

"உருக்குங்கள்" என்கிறபஹுவசநார்த்தம் (அச்செயல்களித்யாதி) "வந்து" என்றதுக்குபாவம் ( உனக்காளுவித்யாதி ) தப்பியாகிலும்போகலாமென்றது - யசோதை யபலையாகையாலே துடரமாட்டாளென்றபடி. சாடு (என்னையோரடியித்யாதி) காலானது நெஞ்சைக்கட்டாநின்றதென்று ஸ்வபாவார்த்தம்; நெஞ்சழிந்தால் தப்பப்போகாதிறேயென்றுத்வநி. வர்த்தமாநார்த்தம் (முதல்நெஞ்சையித்யாதி) க்ரமேணாந்வயஃ. "ராகவோ ஹ்ருதிவைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா" (ராகவோர்ஹ்ருதிவைதேஹீம்தஞ்சேயமஸிதேக்ஷணா) இதிஸுந்தரகாண்டே ஹநுமாந்............................................*

## நான்காம்பாட்டு.

கள்ளவேடத்தைக்கொண்டுபோய்ப்புரம்புக்கவாறுங்கலந்தசுரரை
யுள்ளம்பேதஞ்செய்திட்டுயிருண்டவுபாயங்களும்
வெள்ளநீர்ச்சடையானுநின்னிடைவேறலாமைவிளங்கநின்றதும்
முள்ளமுள்குடைந்தென்னுயிரையுருக்கியுண்ணுமே.

### ஆறாயிரப்படி.

(கள்ளவேடத்தை) கண்டாருடையநெஞ்சை யபஹரிக்கும்படியான வழகியவேஷத்தைக்கொண்டு த்ரிபுரத்திலேபுக்கபடியும், அஸுரரோடேசேர்ந்து வைதிகஸரணிகளைப்போக்கி அவர்களுக்கு ப்ராணஹாநிபண்ணினவிரகுகளும், கங்கையைத்தரித்தருத்ரன் த்வததீநனென்று ப்ரசித்தமாம்படி நின்றதுவும், அந்தஃகரணத்தை யுள்ளேபுக்குக் குடைந்தென்னுடைய்மாவைநீராக்கி முடியாநின்றனவென்கிறார்.........*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், த்ரிபுரவாசிகளான அசுரவர்க்கத்தை அந்தர்ப்பேதாதிகள் பண்ணிமுடித்தப்ரகாரமென்னுத்மாவை சிதிலமாக்காநின்றதென்கிறார்.

வேதைகவேத்யனுய்வைத்து, கள்ளவேடத்தை-வேதபாஹ்ய புத்தரூபமான க்ருத்ரிமவேஷத்தை. கொண்டு-கொண்டு. போய்-அழகாலும் பக்வதையாலுமொப்த புத்திபிறக்கும்படிபோய். புரம்-த்ரிபுரத்திலே. புக்க-புக்க. ஆறும்-ப்ரகாரமும். அசுரரை-அங்குத்தையசுரரை. கலந்து-உட்புகுந்துசெறிந்து. உள்ளம்பேதம்-சித்தபேதத்தை-செய்திட்டு-பண்ணி. அவர்களுக்கு பாஸ்யஞானருத்ரன்றன்னாலே, உயிர்-அவர்கள்ப்ராணனை. உண்ட-அபஹரித்த. உபாயங்களும்-விரகுகளும். வெள்ளம் - சம்ருத்தமான. நீர்-கங்காஜலத்தை. சடையானும்-ஜடையிலேயுடையருத்ரனும். நின்னிடை-உன்பக்கல். வேறலாமை - "விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்ய" ( விஷ்ணுராத்மபகவதோபவஸ்ய ) என்று சரீரசரீரிபாவத்தாலே அப்ருதக்ஸித்தப்ரகாரமானபடி. விளங்க-ப்ராமாணப்ரஸித்தமாக. நின்றதும்-நின்றதுவும். உள்ளம்-என்னெஞ்சுக்குள்ளே. உள் - ஜ்ஞாநவ்ருத்திகள்தோறும். குடைந்து - அவகாஹித்து. என் - என். உயிரை - ஆத்மாவை. உருக்கி - நீராகவுருக்கி. உண்ணும் - க்ரஸித்துவிடாநின்றன... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஈடு - நான்காம்பாட்டு.

பௌத்தாவதார வ்ருத்தாந்தம் மிகவுமென்னை நலியாநின்றதென்கிருர். அநுகூலவிஷயத்தில் களவுசொல்லிற்று - கீழ்ப்பாட்டில், ப்ரதிகூலவிஷயத்தில் களவுகண்டபடிசொல்லுகிறது - இப்பாட்டில்.

(கள்ளவேடத்தைக்கொண்டு) "[illegible]" (யதாஹிசோரஸ்ஸததாஹிபுத்த:) என்கிறபடியே, க்ருத்ரிமவேஷத்தைக்கொண்டு. "[illegible]" (வேதைப்ஸர்வைரஹமேவவேத்ய:) என்று வேதார்த்ததத்வஜ்ஞனவன், வேதாப்ராமாணிக வேஷத்தைக்கொண்டு. கண்டார்நெஞ்சுகளடங்கலுமபஹ்ருதமாம்படி, கறுத்துநெய்த்தவடிவும் வடிந்தகாதும் மிடுக்கினபுஸ்தகமுமாய் நின்றநிலையைக்காணும் நினைக்கிறது. "இவன்சொன்னதுக்கு மேற்படவர்த்தமில்லை" என்று, கேட்டார்நெஞ்சிலே தேறும்படியிறே வடிவையிட்டு மயக்கினபடி. (போய்) அதாவது - "காலுக்குட்பட்ட க்ஷுத்ரபதார்த்தங்கள் நோவுபடுகிறது" என்றும்பயந்தோற்றப் பொய்க்கவடியிட்டுக்கொண்டுபோனபடி. அவர்கள் தாங்கள் சாஸ்த்ரவிரோதமானவற்றை ப்ரவர்த்தியாநிற்கச்செய்தேயும், முகப்பில்நின்ருன்று போலேயிருக்க, "பரஹிம்ஸைபண்ணலாகாது, நிஷித்தத்ரவ்யசேவைபண்ணலாகாது, க்ருத்ரிமபாஷணம் பண்ணக்கடவதன்று, விஷயப்ராவண்யமாகாது" என்ருப்போலே, சிலசொல்லுவர்களாயிற்று, அவையெல்லாம் தோற்றும்படிக்கிடாகப்போனபடி. பெருமாள், "வநத்துக்கெழுந்தருள" என்று புறப்பட, ஜாபாலிகன் மீண்டு புகுருமபடிக்கட்டாகச சிலவற்றைச்சொல்ல, பெருமாள் சிவிட்கென்று செவியைப்புதைத்து, "வாராய், என்முன்னேநின்று தாமருசிருலேயும்படிக்கிடாக நாஸ்திகவாதம்பண்ணுவதே, உன்னைவெறுக்கிறேன், உன்னைக்கொண்டு கார்யங்கொண்ட ஐயுனையன்றோ வெறுப்பது" என்ன; "நாயன்றே, நீர் மீண்டெழுந்தருளித் திருவபிஷேகம்பண்ணியருளி ஸ்ரீபரதாழ்வான்கண்ணிலே கண்ணநீரைமாற்றியருளவாறே, நான் நாஸ்திகனைதவிர்ந்து ஆஸ்திகனும்படிபாரீர்" என்ன; அவ்வளவிலேயிறே [ [illegible] ] [ ஜாபாலிர்ப்ராஹ்மணோத்தம: ] என்ருர்களிறே, நாங்களும் மெல்லாம் நூலிட்டிருக்கையாலே, ப்ராஹ்மணனென்றுகொள்ளுமித்தனை; ப்ரஹ்மசம்பந்தி - ப்ராஹ்மண: இறே, ப்ராஹ்மணனுகிருன் - ப்ரஹ்மசம்பந்தியானவனிறே; அதுள்ளதிவனுக்கேயிறே, இவ்வளவிலே லோகாயதமதத்தை யுபந்யசித்தானொருவனிறே. (புரம்புக்கவாறும்) ஊரைக்கிட்டினபின்பு பண்ணினவியதிகளையெல்லாம் நினைக்கிறது. அதாவது - வைதஹிம்சையையும் சாமாந்யஹிம்சை போபாதியாக்கப்புகுகிறவனுகையாலே, பசும்புல்லும் சாவமிதியாதேகூசி யடியிட்டுப்புக்கபடி. (கலந்து)

இவர்களிலேயொருவனாய்ப்புக்கு நின்று இவ்வர்த்தத்தை யுபந்யஸித்தப டி. தன்வார்த்தையை விஸ்வஸிக்கைக்காக இவர்களோடே யொருநீரா ய்க்கலந்து பரிமாறினபடி. (அசுரரையுள்ளம்பேதம்செய்திட்டு) ஆசுரப் ரக்ருதிகளானவிவர்களுக்கு அவைதிகமதத்தை யுபந்யஸித்து வைதிகப்ர ரத்தையைப்போக்கினானாயிற்று. இவர்களுக்கு வைதிகப்ரத்தையுண்டோ வென்னில்; * அக்நிஹோத்ராப்ஸவேதாஸ்சராக்ஷஸாநாம் க்ருஹேக்ரு ஹேஇறே. எல்லார்க்கும் சிலவுண்டாகைதவிராதிறே. தர்மருசியுள்ளவை யுண்டாகிலும் குலைந்துபோம்படிமதிபேதங்களைப்பண்ணினானாயிற்று. (உயிருண்டவுபாயங்களும்) இவர்களுடைய வுயிரைப்போக்கின வுபாயங்க ளும். இவர்களுடைய வைதிகஸ்ரத்தையைபபோக்கி சவப்ராயராம்படி பண்ணி, நின்றொரு பிக்ஷுகனுக்குங்கூட மேல்விழலாம்படி யவர்களை யடியறுத்து, "நான்செய்தேன்" என்று கவிபாடுவித்துக்கொள்ளலாம்ப டிபண்ணினபடி. "அவன்செய்தான்" என்றுசொல்லாநிற்கசசெய்தே யு மிசசெயலொன்று மவன்றலையி லந்வயியாதபடி சொன்னபடிபாரீர். [illegible] [விஷ்ணுராத்மாபகவதோபவஸ்யாமித தேஜஸ: । தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஸம்ஸவிஷேஹேமஹேஸ்வர:] எ ன்கிறபடியேயிறே - சேதநனைக்கொண்டு கார்யங்கொண்டத்தோடு, அ சேதநத்தைகொண்டு கார்யங்கொண்டத்தோடுவாசியில்லை. ருத்ரன்ற ன்னோடு, அவன்கையில் வில்லோடுவாசியில்லையிவனுக்கு. காரணாவஸ்த் தையில் சிதசித்துக்களைகொண்டு காரயங்கொண்ட வோபாதியாயிற்று. முன்பு அவன்தானே செயவானைக்கொண் டெடுத்துப்பார்த்தானிறே; அதுமுடியாதொழிய, பின்பு இவனுள்ளீடாய் நிற்கையிறேசெய்து தலைக் கட்டவல்லனாயிற்று. பண்டொருராஜா, "ருத்ரதத்வமேபரதத்வம்" என்றெழுதி, "எழுத்திடுங்கதாருங்கோள்" என்ன, அப்படியலருமெழு தியெழுத்திடாநிற்கச்செய்தே; ஒருவர், "வாராய், நீயிவ்வோலைகெடா மேனோக்கிவைத்தாயிறே யிவனுடையபரத்வம் சாதிக்கலாவது; நீநினைக் கிற தேவதைக்குண்டான வுச்ச்ராயங்கள் 'சர்வேஸ்வரனாலே' என்று ப்ரமாணங்கள்சொல்லாநின்றன; ஆனபின்பு, இன்று, நீசொல்ல, நானெ ழுத்திட்டுப்போகிறேன்; நாளையொருவிவக்ஷிதன்தோன்றி 'இவனஜ்ஞனா யிருந்தானீ!' என்னக்கேட்பதில் இன்று நிநினைத்தத்தைசசெய்துகொள் ளமாட்டாயோ" என்றார். (உபாயங்களும்) அப்போதிருந்து சிந்தித்தவ ற்றையெல்லாம் நினைக்கிறது. (வெள்ளநீரித்யாதி) இதுக்காளவந்தாரரு ளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி - "ப்ரஹ்மருத்ரா கள் நடுவேநின்றதொரு முதல்களவுண்டு, அத்தைச்சொல்லுகிறது" எ ன்றாயிற்று. அதாவது-ருத்ரனையும் தன்னையும் சமமாகச்சொல்லலாம்ப டி த்ரிமூர்த்தி மத்யஸ்த்திதியைசசொல்லுகிறதென்று. இத்தையெம்பெ ருமானார்கேட்டருளி, "அழகிது, ஆகிலும் அத்தனையாம்தேடிப்போ

கவேணுமோ, இவன்றன்விஷயத்திலே முன்புபண்ணின வுபகாரத்துக் கோரளவுண்டோ, இது தானேயமையாதோ" என்றருளிச்செய்தார். (வெள்ளநீரித்யாதி) கங்காஜலத்தைத் தன்ஜடையி லேகதேசத்திலேதரித்த ப்ரபாவத்தையுடைய ருத்ரனுமுன்பக்கல் வேறல்லாதபடி தோற்றநின்றமையும். அதாகிறது - "சரீரபூதன்" என்னுமிடந்தோற்றநின்றபடி. இங்ஙன்சொல்லுகிறதென், ஐக்யமாகக்கொண்டாலோ – இத்தையென்னில்; அங்ஙன்கொள்ளுமன்று "விஷ்ணுராத்மா" (விஷ்ணுராத்மா) என்கிறப்ரமாணத்துக்கு விஷயமின்றிக்கே யொழியுமே. [நலந்திகழ்சடையான்முடிக்கொன்றைமலரும்நாரணன்பாதத்துழாயுங் கலந்திழிபுனலால்புகர்படுகங்கை] அவனுடைய சேஷத்வத்துக்கு மிவனுடையசேஷித்வத்துக்கும் ப்ரமாணமொருவெள்ளமென்கிறார்காணும். ருத்ரன்ஜடையில்கொன்றையும் சர்வேஶ்வரனடியில் திருத்துழாயுங் கூடிவந்திழிகிறபடி. (உள்ளமுள்குடைந்து) என்னந்தஃகரணத்தைப்புக்கவகாஹித்து, "அச்சேத்யோயமதாஹ்யோயம்" (அச்சேத்யோயமதாஹ்யோயம்) என்கிற ஆத்மாவைப்புக்கழித்து நோவுபடுத்தாநின்றது. ஜ்ஞாநப்ரஸரத்வாரமான மநஸ்ஸிலேபுகுந்தாத்மாவை நீராக்கிமுடியாநின்றன...........*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (கள்ளவேடத்தையித்யாதி) "கள்ளவேடத்தைக்கொண்டு" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (பௌத்தேத்யாதி) "குணாநுஸந்தாநம்ஸௌஶீல்யஜநகம்" (குணாநுஸந்தாநம்ஸௌஶீல்யஜநகம்) என்கிறப்ரகணத்திலே, தர்மசௌர்யம்பண்ணின பௌத்தாவதாரவ்ருத்தாந்தம் ஸௌஶீல்யஜநகமென்னக்கூடுமோவென்னில்; கீழிற்பாட்டிற்சொன்ன சௌர்யமாஶ்ரிதவிஷயத்திற்செய்ததாகையாலே குணமாய் ஸௌஶீல்யஜநகமானாப்போலே, இப்பாட்டிற்சொன்ன சௌர்யமு மாஶ்ரிதவிரோதிநிரசநத்துக்குறுப்பாகையாலே குணமாய் ஸௌஶீல்யஜநகமாகக்கூடுமென்றுவிவக்ஷித்து, கீழிற்பாட்டோடே யிப்பாட்டுக்கு சங்கதியருளிச்செய்கிறார் (அநுகூலவிஷயத்தி லித்யாதிவாக்யத்வயத்தாலே)

பௌத்தவேஷமென்னாதே, "கள்ளவேடம்" என்று விசேஷித்ததுக்குபாவம் (யதாஹீத்யாதி) "யதாஹி சோர ஸ்ஸ ததாஹி புத்த ஸ்ததாகதம் நாஸ்திகமத்ர வித்தி । தஸ்மாத்தி யஶ்ஶக்யதம: ப்ரஜாநாம் ந நாஸ்திகேநாபிமுகோ புதஸ்ஸ்யாத்" (யதாஹிசோரஸ்ஸததாஹிபுத்தஸ்ததாகதம்நாஸ்திகமத்ரவித்தி । தஸ்மாத்தியஶ்ஶக்யதமஃப்ரஜாநாம்நநாஸ்திகேநாபிமுகோபுதஸ்ஸ்யாத்) இத்யயோத்யாஶ்லோகத்தின் ஜாபாலிம்ப்ரதிராமஃ. "கொண்டு" என்கையாலே - தனக்குச்சேராதத்யாகண்டே ஜாபாலிம்ப்ரதிராமஃ. "கொண்டு" என்கையாலே - தனக்குச்சேராத த்தை யேறிட்டுக்கொண்டானென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (வேதைஶ்சேத்யாதி) "வேடம்" என்றதுக்குபாவம் (கண்டாரித்யாதி) "வேடம்" என்று-விக்ரஹஸௌந்தர்யத்தை யருளிச்செய்ததுக்குபாவம் (இவன்சொன்னதுக்கித்யாதி) விக்ரஹஸௌந்தர்யத்தாலே யவர்களைவிஶ்வஸிக்கும்படி மயக்குகைக்காக வீத்ருஶவேஷத்தை பரிக்ரஹித்தானென்றபடி. கள்ளவேடத்தைக்கொண்டு புரம்புக்கவாறு மென்னாதே, "போய்" என்று விசேஷித்ததுக்குபாவம் (காலுக்குட்பட்டவித்யாதி)

பொய்க்க-மெள்ள. அவர்கள் வைதிகஶ்ரத்தையைக்குலைக்கப்புகுகிறுணுகில், அஹிம்சாதிதர்மம் தோற்றப்போவானென்னென்ன ( அவர்களித்யாதி ) அவர்களென்றது-பௌத்தரை. அவைதிகமதஸ்த்தாபகாவதாரசேஷ்டித மிவையீபெடுத்தக்கூடுமோவென்ன; ஆஶ்ரிதவிரோதி நிரசநார்த்தமாகையாலே கூடுமென்னுமதுக்கு த்ருஷ்டாந்தத்வேந ஐதிஹ்யம் (பெருமாளித்யாதி) இவ்வாக்யத்தால் - "ப்ரதிகூலவிஷயத்தில் களவுகண்டபடி சொல்லுகிறது" என்றத்தை ஸ்த்திரீகரித்தபடி. சிலவற்றைச்சொல்லவென்றது - "ஸாது ராகவ மாபூத்தே புத்திரேவம் நிரர்த்திகா" ( ஸாதுராகவமாபூத்தே புத்திரேவம்நிரர்த்திகா ) இத்யாத்யநுசந்தேயம். செவியைப்புதைத்தென்றது - "அகார்யம் கார்யஸங்காஶ மபத்யம் பத்யஸம்மிதம்" ( அகார்யம்கார்யஸங்காஶமபத்யம்பத்யஸம்மிதம் ) இத்யாதியைப்பற்ற. ஐயனையன்றேவெறுப்பதென்றது - "நிந்தாம்யஹம் கர்ம பிதுঃ க்ருதம் தத் யஸ்த்வாமக்ருஹ்ணாத் விஷமஸ்த்தபுத்திம் । புத்த்யாநயைவம் விதயா சரந்தம் ஸுநாஸ்திகம் தர்மபதாதபேதம்" ( நிந்தாம்யஹம்கர்மபிதுঃ க்ருதம்தத்யஸ்த்வாமக்ருஹ்ணாத்விஷமஸ்த்தபுத்திம் । புத்த்யாநயைவம் விதயாசரந்தம் ஸுநாஸ்திகம்தர்மபதாதபேதம் ) என்றத்தைப்பற்ற. நாஸ்திகனுகைதவிர்ந்து ஆஸ்திகனும்படிபாரீரென்றது - "ந நாஸ்திகாநாம் வசநம் ப்ரவீம்யஹம் ந நாஸ்திகோஹம் ந ச நாஸ்தி கிஞ்சந । ஸமீக்ஷ்ய காலம் புநராஸ்திகோபவம் பவேய காலே புநரேவ நாஸ்திகঃ" ( நநாஸ்திகாநாம்வசநம்ப்ரவீம்யஹம்நநாஸ்திகோஹம் நசநாஸ்திகிஞ்சந । ஸமீக்ஷ்யகாலம்புநராஸ்திகோபவம் பவேயகாலேபுநரேவநாஸ்திகঃ ) இத்யாதியைப்பற்ற. "ஆஶ்வாஸயந்தம் பரதம் ஜாபாலிர் ப்ராஹ்மணோத்தமঃ । உவாச ராமம் தர்மஜ்ஞம் தர்மாபேதமிதம் வசঃ" ( ஆஶ்வாஸயந்தம்பரதம் ஜாபாலிர்ப்ராஹ்மணோத்தமঃ । உவாசராமம்தர்மஜ்ஞம் தர்மாபேதமிதம் வசঃ ) இத்யயோத்யாகாண்டேஷ்டமாததமே. எடுத்தஶ்லோகத்துக்கர்த்தம் (ராங்கனுமித்யாதி) இவனுக்குப்ராஹ்மசம்பந்தமேதென்ன (இவ்வளவிலேயித்யாதி) இவ்வளவிலேயென்றது - பெருமாள் "நாம் திரும்புவதில்லை, மீண்டுவருமளவும் ராஜ்யத்தைநோக்கிக்கொண்டிரும்" என்று ஸ்ரீபரதாழ்வானை யாஶ்வஸிப்பிக்கிறவளவிலேயென்றபடி. "புக்கவாறும்" என்றப்ரகாரமேதென்ன (ஊனக்கிட்டினவித்யாதி)

இவ்வர்த்தத்தையென்றது - ஜாபாலியுபந்யஸித்த பௌத்தமதத்தையென்றபடி. கலக்கவேண்டுவானென்னென்ன (தன்வார்த்தையையித்யாதி) வைதிகஶ்ரத்தையைக்குலைக்கைக்கடியென்னென்னில்; "அஸதாம் தர்ம ஸங்கல்பஸ்ஸதாம் ஸந்தாபகாரணம் । உபேக்ஷிதஸ்ய வ்யாக்ரஸ்ய பாரணம் பஶுமாரணம்" ( அஸதாம்தர்மஸங்கல்பஸ்ஸதாம்ஸந்தாபகாரணம் । உபேக்ஷிதஸ்யவ்யாக்ரஸ்யபாரணம்பசுமாரணம் ) என்றருளிச்செய்வர். "அக்நிஹோத்ராஶ்ச வேதாஶ்ச ராக்ஷஸாநாம் க்ருஹே க்ருஹே । தயா ஸத்யஞ்ச ஶௌசஞ்ச ராக்ஷஸாநாம் ந வித்யதே" ( அக்நிஹோத்ராஶ்சவேதாஶ்சராக்ஷஸாநாம்க்ருஹேக்ருஹே । தயாஸத்யஞ்சஶௌசஞ்சராக்ஷஸாநாம்நவித்யதே ) இவனேசம்ஹரித்தான், ருத்ரனன்றேசம்ஹரித்தவனென்ன ( இவர்களுடையவித்யாதி ) அடியறுத்தென்றது - பஸ்மாகிவைப்பண்ணியென்றபடி. (நின்றொன்றுபிக்ஷுகனுக்குங்கூட) இன்றுமென்று பேருமில்லாதபிக்ஷுகனுக்குங்கூடவித்யர்த்தঃ, வ்யாக்யாதாவின்போது (அவன்செய்தானித்யாதி)

"ருத்ரன்செய்தான்" என்று ப்ரமாணம்சொல்லாநிற்க, சர்வேஶ்வரன் த்ரிபுரதஹநம்பண்ணினானென்கிறதென்கொண்டென்ன; ப்ரமாணங்கொண்டென்கிறார் (விஷ்ணுராத்மேத்யாதி) "விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ꞉ । தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஶம்ஸவிஷேஹே மஹேஶ்வர꞉" (விஷ்ணுராத்மாபகவதோபவஸ்யாமிததேஜஸ꞉ । தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஶம்ஸவிஷேஹே மஹேஶ்வர꞉)' இதிமஹாபாரதே. சேதநனுகையாலே ருத்ரனுக்கு மிதிலங்வயமில்லையோவென்ன (சேதநனையித்யாதி) விவரணம் (ருத்ரன்றன்னுடைத்யாதி) சிதசித்விபாகமறக்காரியங்கொள்ளக்கண்டவிடமுண்டோவென்ன (காரணவஸ்த்தையித்யாதி) "தஸ்மாத்-ஸவிஷேஹே" (தஸ்மாத்-ஸவிஷேஹே) என்றதுக்கர்த்தம் (முன்பவனித்யாதி) "தஸ்மாத்" என்றதினர்த்த சாமர்த்யத்தாலே - முன்பெடுத்துப்பார்க்க, முடியாதொழிந்ததுசித்தம். "இவனந்தராத்மாவாய்நிற்கையாலே செய்தான்" என்றத்தால் பலிதமான ருத்ரோசச்ராயபகவததீநத்வத்துக்கைதிஹ்யம் ( பண்டொருராஜாவித்யாதி ) ஒருவனொறது-ஆழ்வானே. பஹுவசநார்த்தம் (அப்போதித்யாதி)

முதற்களவாவது - "மத்யே விரிஞ்சகிரிஶம்" (மத்யேவிரிஞ்சகிரிஶம்) என்கிறபடியே யவதரித்து, அவர்களோடே சஹபடிக்கலாம்படியிருக்கிற த்ரிமூர்த்திமத்யஸ்த்திதியை. முனபுபண்ணினவென்றது-த்ரிபுரதஹநசமயத்திலந்தராத்மாவாகை முதலானவை. எம்பெருமானர் நிர்வாஹத்திலே சப்தார்ததம் (கங்காஜலத்தையித்யாதி) ப்ரமாணாந்தரவிரோதமுங்காட்டுகிறா (நலந்திகழித்யாதி) (ஒருவெள்ளமென்றது) சாடு. கங்கையென்னுதல், பரவாஹம்போலே யநேகமென்னுதல். இதுக்கர்த்தம் (ருத்ரன்ஜடையிலித்யாதி) ( நலந்திகழித்யாதி ) பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து ஏழாந்திருமொழி இரண்டாம்பாட்டு, "சலம்பொதி" இத்யாதி. (நலந்திகழ) இத்யாதிக்கர்த்தம் - திருவடிகள்விளக்கின தீர்த்தத்தை தரித்துக்கொண்டிருக்கிற நன்மைவிளங்காநின்ற ஜடையையுடையனுன ருத்ரனுடைய சிரஸ்ஸில் கொன்றைப்பூவும், அவனுக்கு சரீரியும் சேஷியுமான நாராயணனுடைய திருவடிகளிற்றிருததுழாயுமான விரண்டோடுங்கலந் தாகாசத்தினின்றும் பூமியிலே விழுந்து ப்ரவஹிக்கிறஜலந்தா லொளியையுடைத்தாயிருந்துள்ள கங்கையென்றபடி. "உள்ளமுள்" என்றது - மநஸ்ஸுக்குள்ளென்றபடி .............. ...........*

## ஐந்தாம்பாட்டு.

உண்ணவானவர்கோனுக்காயரொருப்படுத்தவடிசிலுண்டதும்
வண்ணமால்வரையையெடுத்துமழைகாத்தது
மண்ணைமுன்படைத்துண்டுமிழ்ந்துகடந்திடந்துமணந்தமாயங்க
ளெண்ணுந்தோறுமென்னெஞ்செரிவாய்மெழுகொக்குநின்றே.

### ஆறாயிரப்படி.

(உண்ண) உண்ணவானவர்கோனுக்காய ரொருப்புடுத்தவடிசிலுண்டதும்; இந்த்ரன் க்ருத்தனய்வர்ஷிக்க, நாநாவர்ணமான பெரியமலையையெடுத்து மழைகாத்ததும; ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணினதுவு

ம், இப்படிசெய்தருளின வாஸ்சர்யங்களை யநுசந்திக்குந்தோறு மென்னுடையமநஸ்ஸு, நெருப்பிலேபுக்க மெழுகுபோலே யொருநாலேமுடியாதே நின்றுருகாநின்றதென்கிறார் ................................................

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிமாநுஷசேஷ்டிதங்களை யநுசந்திக்குந்தோறும் என்னெஞ்சு, அக்நிஸகாசத்தில் மெழுகுபோலே யாகாநின்றதென்கிறார்.

வானவர்கோனுக்கு-சபரிகரனானவிந்த்ரனுக்கு. உண்ண - புஜிக்கைக்காக. ஆயர்-பசுரக்ஷணதத்பரரான இடையர். ஒருப்படுத்த-சோத்யோகராய்ச்செய்த. அடிசில்-அடிசிலே. உண்டதும் - கோவர்த்தநரூபியாய்க்கொண்டமுதுசெய்ததும். வண்ணம்-தாதுக்களாலேநாநாவர்ணமாய். மால்-பெருத்திருக்கிற. வரையை - மலையை. எடுத்து-எடுத்து. மழை-ஆராதநபங்கத்தாலே க்ருத்தனானவிந்த்ரன் ப்ரவர்த்திப்பித்தமழையை. காத்ததும்-தடுத்ததும். இப்படிவிசேஷவிஷயமன்றியே, மண்ணை-பூம்யுபலக்ஷிதமானஜகத்தை. முன்-ப்ரதமத்திலே. படைத்து-ஸ்ருஷ்டித்து. உண்டு-ப்ரளயம்வந்தவாறே வயிற்றிலேவைத்துநோக்கி. உமிழ்ந்து-அநந்தரத்திலேயுமிழ்ந்து. கடந்து-அர்யாபிமாநம்தீரும்படியளந்து. இடந்து-அவாந்தரப்ரளயத்திலே வராஹரூபியாயிடந்து. மணந்த - ப்ரளயோத்த்ருதையான பூமியோடேசம்ஸ்லேஷித்த. மாயங்கள்-ஆஸ்சர்யகுணசேஷ்டிதங்களுமானவிவை. எண்ணுந்தோறும்-இத்தையநுசந்திக்குங்காலந்தோறும். என்-என். நெஞ்சு-நெஞ்சானது. நின்று - ஒருபடிப்பட. எரிவாய்-அக்நியிடத்தில். மெழுகொக்கும்-மெழுகுபோலே த்ரவியாநின்றது ...

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ஆஸ்ரிதவிஷயமாகவும் சர்வவிஷயமாகவும்பண்ணின சேஷ்டிதங்களை யநுசந்திக்குந்தோறு மென்மநஸ்ஸு மிகவுமழியாநின்றதென்கிறார்.

(உண்ணவித்யாதி) வானவர்கோனுக்கு - உண்ண - ஆயரொருப்படுத்தவடிசிலுண்டதும். தான்பிறந்துவளருகிறவூரிலே சிலர் வர்ஷார்த்தமாக விந்த்ரனுக்குச்சமைத்தஅடிசிலைத்தான் புகுந்துபுஜித்தவதுவும். "நாம்பிறந்துவளருகிறவூரிலே வேறேயுமோராஸ்ரயணீயவஸ்துவுண்டாகையாவதென்" என்று பொறாமையாலே; "வாரீகோள், இந்த்ரனென்கிறானவன், கண்டறியாதானொருவனே! நமக்குபகரிக்கப்புகுகிறான்; ஆனபின்பு, மேகங்களும்வந்து பணியும்படிக்கீடாய், புல்லுந்தண்ணீருமுடைத்தாய், பசுக்களுக்குமிடங்கொடுத்துநிற்கிற மலையன்றோ நமக்கெல்லாம்கடவது" என்றுசொல்ல, இடையராகையாலே சொல்லிற்றைக்கேட்பார்சிலரோ, இனி இவன்றானே சொன்னவைமறுக்கவொண்ணாதபடியாயிருக்குமே; "இம்மலையின்முன்னேயிடுங்கோள்" என்ன, அங்கே கொடுவந்துகுவித்தார்கள்; அத்தைத்தான் புக்கிருந்தமுதுசெய்தான், தனக்கசாதாரணராயிருப்பாருடைய த்ரவ்யத்தை வேறேசிலர்க்குக்கொடுக்கையாவது, மஹிஷீஸ்வேதத்தைப்பிறர்க்குக்கொடுத்தமாத்ரமிறே, அவன்தன் பரிகரத்தோடுங்கூட இதுகொண்டுதெருப்பதனுகவிருக்க, இத்தை

த்தான் கைக்கொண்டானாயிற்று. அவன்க்ரோதத்தாலே வர்ஷிப்பிக்கத் தொடங்கினான் (வண்ணமால்வரையித்யாதி) அடைகொண்டுபோழ்போக் குவாரொருவனன்றே. "நம்மபிமதம்பெற்றோமாகில் என்செய்தால்நல் லது" என்றுபொகட்டுப்போகாதே, நாநாவானதாதுக்களையுடைத்தா யொருவரால் கணிசிக்கவொண்ணாத பெரியமலையை, சுகுமாரமானகை யைக்கொண்டு ஏழுநாளொருபடியேதரித்து, ஒருபசுவின்மேலேயாதல் ஓரிடையன்மேலேயாதல் ஒருதுளிவிழாதபடிகாத்ததும். அவனைநிரவதி க்கலாயிருக்கச்செய்தேயும், "தேவப்ரக்ருதியானவிவனை நலிகிறதென், பசிக்ராஹத்தாலே செய்தானாகில் தானேகையோய்ந்துவிடுகிறான், அவ் வளவும் நம்ரக்ஷ்யவர்க்கத்தை நாம்கடகிட்டுநோக்குவோம்" என்று ஆ ந்ருஶம்ஸ்யங்கொண்டாடி விட்டான். "நம்விபூதியையிவன்நோக்கவல்ல ன், இவன்கண்ணுடையன்" என்றிறே யிவனைத்தா னிங்குத்தைக்கிட்ட் து, இப்படியிருக்கச்செய்தேயும் இவன்கண்ணறையர்செய்வதைச்செய் தான். (மண்ணையித்யாதி) "வேண்டா" என்றாலும் தேவதாந்தரபஜந ம்தவிராதாரோரூரளவன்றிககே, இருக்கிறஜகத்திலுள்ளார் விஷயத்திற் செய்யு மவற்றைசசொல்லுகிறது. அர்த்தித்வாதிநிரபேக்ஷமாக இவற் றையுண்டாக்கி, ப்ரளயாத்யாபத்துக்கள்வர இவைநோவுபடாதபடி வயி ற்றிலேவைத்துநோக்கி, "உள்ளேகிடந்துமறைந்துபோகவொண்ணாது" என்றுபார்த்து வெளிநாடுகாணப்புறப்படவிட்டு, பின்புமஹாபலிபோல் வாரபஹரிக்க எல்லைநடந்துமீட்டுககொடுத்து, பின்பவாந்தர ப்ரளயங் கொண்டபூமியை மஹாவராஹமாயெடுத்துக்கொண்டேறி, இவையெல் லாம் பிராட்டிப்படுக்கைபபற்றாகையாலே அவளுக்கு ப்ரியமாகச்செய் து அவளோடேசம்ப்ஶ்லேஷித்த ஆஶ்சர்யமானசேஷ்டிதங்களை. (மணந் த) சம்ப்ஶ்லேஷித்த. (எண்ணுந்தோறும்) அவனுடையரக்ஷணத்திலும் பரப்புண்டாகாதே யிவருடையபாரிப்பு. எண்ணமாட்டார், எண்ணிரு க்கமாட்டார், ரக்ஷணத்துக்கவன்சமைந்தாப்போலே காணுமழிகைக்கிவ ர்சமைந்தபடி. (என்னெஞ்சு) இத்தையநுசந்தித்தே நாட்டாருண்டுடு த்துக் காலம்போக்காநின்றார்களிறே. (எரிவாய்மெழுகொக்கும்) அக்நி சகாசத்தில் மெழுகுபோலேயுருகாநின்றது. (நின்றே) அதொருகாலேயு ருகுதல் கரிதல்செய்யுமிறே, இதுருகினபடியே யிராநின்றது..........*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (உண்ணவித்யாதி) "அடிசிலுண்டதும், மழைகாத்ததும்" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (ஆஶ்ரிதேத்யாதி)

"ஆயர் - வானவர்கோனுக்கு - உண்ண - ஒருப்படுத்த வடிசிலுண்டதும்" என்றந்வயிப்பது. சப்தார்த்தம் (தான்பிறந்தித்யாதி) இந்த்ரனுக்கிட்டத்தைத்தான் புஜிக்கைக்குஹேதுவேதென்ன (காம்பிறந்தித்யாதி) ஒருப்படுத்த-சோத்யோகராய் *த்தமைத்தவித்யர்த்தம். (எவன்) ஒருவனில்லையென்றுக்ஷேபத்திலே இதுக்குஹேது

(கண்டறியாதானென்றது) காணப்படாதவனென்றபடி. இவன்நாஸ்திகமாகச்சொன்னால் கேட்கிறதென்னென்ன; ஹேதுத்வயம் (இடையராகையாலேயித்யாதி, இனியிவன்றானித்யாதி) இந்த்ரனுக்கிடையரிடுகிறவித்தால் தனக்குஹாநியேது, "அவர்களிட்டாலிட்டுப்போகிறார்கள்" என்றிருக்கவொண்ணாதோவென்ன (தனக்கசாதாரணைத்யாதி) இந்த்ரனென்னாதே, "வானவர்கோன்" என்றதுக்குபாவம் (அவன்தன்பரிகரத்தோடேமித்யாதி)

மேலுக்கவதாரிகை (அவன்க்ரோதேத்யாதி) தன்கார்யமானால் "பட்டதுபடுகிறது" என்றிருக்கவொண்ணாதோவென்ன (அடைகொண்டித்யாதி) அடைகொண்டுபோம்போக்குவான் - "ரக்ஷிக்கிறோம்" என்றுகைக்கொண்டு கைவிடுவானென்றபடி; யத்வா, ஒருவன்க்ஷேத்ரத்தைவாங்கிப் பாழேபோக்குவானென்னுதல்; அடையென்று - இலட்டுகமாய், பக்ஷயவஸ்துவைக்கைக்கொண்டு கைவிடுவானென்னுதல். சப்தார்த்தம் (நாநாவானவித்யாதி) மலையெடுக்கசக்தனானவன் சாபராதனைநிரசிக்கலாகாதோவென்ன (அவனைநிரசிக்கலாயித்யாதி) பசிக்ராஹம்-பசிக்கோவம். கடகிட்டு - பரிசையையிட்டு. கடகு-பரிசை. ஆந்ருஸம்ஸ்யங்கொண்டாடுகைக்கிவன் செய்தவுபகாரமேதென்ன (நம்விபூதியித்யாதி) கண்-கண்ணும், தயையும், இதுசாடு. கண்ணறையர்-அந்தா:, க்ருபாரஹிதாஶ்ச.

"மாயங்கள்" என்றது - மாயங்களையென்றபடி.

எண்ணும்போதென்னாதே, "எண்ணுந்தோறும்" என்றதுக்கு பாவம் (அவனுடையவித்யாதி) அதாவது - ரக்ஷணத்துக்குறுப்பான வ்யாபார மநேகமானாப்போலே, அவற்றைப்பற்றிவருகிற விவர்பாரிப்பு மநேகமென்றபடி. பாவாந்தரமாதல், கீழ்வாக்யவிவரணமாதல் (எண்ணமாட்டாரித்யாதி) அதாவது - ஈடுபாட்டால் வந்தசைதில்யத்தாலே யநுசந்திக்கமாட்டார், அநுசந்தியாதபோது தரித்திருக்கமாட்டாமையாலே எண்ணாதிருக்கமாட்டாரென்றபடி. "என்" என்றதுக்குபாவம் (இத்தையித்யாதி) க்ரமேணாந்வய:........................................................*

---

# ஆறும் பாட்டு.

நின்றவாறுமிருந்தவாறுங்கிடந்தவாறுநினைப்பரியன
வொன்றலாவுருவாயருவாயநின்மாயங்க
ணின்றுநின்றுநினைகின்றேனுன்னையெங்ஙனநினைகிற்பன்பாவியேற்
கொன்றுநன்குரையாயுலகமுண்டவொண்சுடரே.

## ஆறாயிரப்படி.

(நின்றவாறும்) ராமக்ருஷ்ணவதாரங்களில் நின்றருளுகை தொடக்கமாயுண்டானசேஷ்டிதங்களையும், மற்றும்நினைக்கவரியவா யநேகப்ரகாரமாய் எனக்குத்தோற்றாநிருக்கிற வுன்னுடைய வாஸ்சர்யமான சேஷ்டிதங்களையும், நினைக்கும்படி நின்றுநின்றானாயாநின்றேன்; உன்னையெங்ஙனேநினைப்பன். ப்ரளயத்தில் ஜகத்துக்குவந்தவாபத்தைநீக்கி உஜ்ஜ்வலனானநீ, உன்னுடையகுணப்ரசங்கத்திலே சிதிலனாகைக்கீடான பாபத்

ுதைப்பண்ணின வென்னுடைய சைதில்யம்போய் நான்தரிப்பதொரு ந ல்விரகுசொல்லவேணுமென்கிறார்................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்த்தித்யாஸநசயநாதிவ்யாபாரங்களொருபடிப்பட நினைக்கலா யிருக்கிறதில்லை, நான் நினைக்கவல்லனும் ப்ரகாரமருளிச்செய்யவேணுமென்கிறார்.

திருவூரகம், திருப்பாடகம் திருவெஃகா இவற்றிலே, நின்றவாறும்-நின்றப டியும். இருந்தவாறும்-இருந்தபடியும். கிடந்தவாறும்-கிடந்தபடியும். அப்படி ஆஸ்ரி தஹ்ருதயங்களிலே “ திஷ்ட்டன் ” என்றும் “ ஆஸ்தே ” என்றும் “ ஸேதே ” என் றும் ப்ரமாணஸித்தமாம்படி வர்த்தித்தபடியாகவுமாம். நினைப்பு - நினைக்கைக்கு. அரியன-அரியவாயிராநின்றன. இப்படி, ஒன்று-ஒருபடி. அலா-அல்லாத. உருவாய்- ஆகாரத்தையுடையவனாய். அருவாய-எனக்கநுபவிக்கைக்கு உருத்தெரியாத. நின்- உன்னுடைய. மாயங்கள்-ஆஸ்சர்யசேஷ்டிதங்களானவற்றை. நின்றுநின்று-சிதில மானநெஞ்சை சைதில்யந்தோறும் நின்றுநின்றுவருத்தி. நினைகின்றேன்-முட்டநினை க்கப்பாராநின்றேன். உன்னை-சைதில்யாவஹசேஷ்டிதனானவுன்னை. எங்ஙனம்-எங் ஙனே. நினைகிற்பன்-ஒருபடிப்படநினைக்கவல்லேனாவேன். பாவியேற்கு- ஸ்த்திரசிந் தைபண்ணமாட்டாத பாபத்தையுடையேனானவெனக்கு. உலகம்-ப்ரளயாபத்திலே யழிகிறஜகத்தை. உண்ட-அமுதுசெய்துநோக்கி. ஒண்சுடரே - அத்யுஜ்ஜ்வலனானவ னே. சைதில்யார்ணவத்திலழுந்தாதபடி “ ஸ்திதோஸ்மி ” (ஸ்த்திதோஸ்மி) என் னும்படியாக,ஒன்று-அத்விதீயமாயிருப்பதொரு.நன்கு-விலக்ஷணோபாயம். உரையா ய்-அருளிச்செய்யவேணும்.

நின்றவாறு மிருந்தவாறும் கிடந்தவாறுமென்று - க்ருஷ்ணாவதாரத்திலே தொட்டிலுக்குள்ளே நின்றிருந்து கிடந்தபடியையுஞ்சொல்லுவர்...................*

## ஈடு - ஆறும்பாட்டு.

உன்சகலசேஷ்டிதங்களையுங்காண, விடாய்ப்பட்ட நான் நினைக் கவும் க்ஷமனாகிறிலேன்; ப்ரளயாபத்தில் ஜகத்தைரக்ஷித்தாப்போலே, அநுசந்திக்கவல்லேனும்படிபண்ணி யென்னைரக்ஷிக்கவேணுமென்கிறார்.

(நின்றவித்யாதி) இவரிவ்விஷயத்திற்படுகிறபாடெல்லாம் நமக்கி தரவிஷயங்களிலே அநுபவசித்தமிறே, இவ்விஷயத்திலின்றிக்கே யொ ழிகிறவித்தனை. வடக்குநின்றும் போரப்பாடவல்லராயிருப்பாரொருத்த ர் “பெருமாளைத்திருவடிதொழவேணும்” என்றுவர, ஆழ்வார் திருவர ங்கப்பெருமாளரையர் தீர்த்தத்தினன்றிராத் திருமாலையைப்பாடிச்சமை ந்து பெருமாளை மத்தகஜங்களையேத்துமாபோலேயேத்தி வசமாக்கிக்க ணிசங்கொண்டு, “ நாயன்றே, தேவர்திருவடிகளுக்குப்போரநல்லானொ ருத்தன் னொருநூற்றுக்காதமாறுண்டு தேவரை ‘திருவடிதொழவேணும்’ என்றுவருகிறது; இவனையழைத்துக்கொண்டு சம்பாவனைபண்ணியருள வேணும் ” என்ன, பெருமாளும் “அப்படியேசெய்கிறோம்” என்று தி ருவுள்ளமாய் அருளப்பாடிட்டு, திருப்புன்னைக்கீழ்நின்று மவர்நின்றவி

டத்தளவும்செல்ல நாலுகோல் தறைதிருக்கைத்தலத்திலே யெழுந்தரு ளி, விண்ணப்பஞ்செய்வார்களையெல்லா மருளப்பாடிட்டு, "வாரிகோ ள், இவன்வந்ததூரத்துக்கெல்லாம்போருமோ நாமிவனுக்குச்செய்தத ரம்" என்று திருவுள்ளமானார். இப்படியேயிறே நம்மிழவுகளும் திருவு ள்ளத்திலேபட்டவையெல்லா மாறும்படிக்கீடாக முகந்தந்தருளவல்லப டியும். ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவவண்ணத்தான் திருப்பரிவட்டங்களை அழ கிதாகவாட்டி எம்பெருமானார்க்குக்கொண்டுவந்துகாட்ட, போரத்ருப்த ராய் இவனையுங்கூடக்கொண்டு பெருமாள்பாடேபுக்கு, "நாயன்றே, இ வன்திருவரைக்கீடாம்படி யிவற்றைத்தொட்டபடி பார்த்தருளவேணும்" என்றுகாட்ட, கண்டுபோரவுகந்தருளி யெம்பெருமானாரை யருளப்பா டிட்டு, "இவனுக்காக, கம்சனுடைய ஈரங்கொல்லி நந்திறத்திற்பண்ணி னகுற்றம்பொறுத்தோம்" என்றுதிருவுள்ளமானார். (நின்றவாறுமித்யா தி) லங்காத்வாரத்திலேகையும் வில்லுமாய்நின்றபடியாதல், வாலிவதம் பண்ணிக் கையும்வில்லுமாய்நின்றபடியாதல்; [ ஐவஷ்டவுஅதிஷஜூஷ ஶஂயநஶுரஜீதஂஶஂஶா ][ அவஷ்டப்யசதிஷ்ட்டந்தம்ததர்ஶதநு ரூர்ஜிதம்-ஶஂபா] வாலிவதம்பண்ணிக் கையும்வில்லுமாய்க்கொண்டுவெ ன்றிபுனைந்துநின்றபெருமாளையும், அவரையிடுவித்துக்கொல்லுவித்ததம் பியாரையும், இருவரையுமநுவர்த்தித்து முடிசூடவிருக்கிற மஹாராஜ ரையுங்கண்டவிவள், "நமக்குசத்ருக்கள்" என்றிராதே, சுபஹ்ருதயை யானுளவர்பக்கல் சாங்கத்தாலே. இனித்தான் தண்ணீர்குடிக்கக்கல்லின ஏரியிலேகல்லைக்கட்டிக்கொண்டு விழுந்துமுடிந்துபோவாரைப்போலே, ஆசுரப்ரக்ருதியானவாறே முடிந்துபோனான்வாலி; இவர்செய்தகுற்றமு ண்டோவென்றிருந்தாள். அவர், தம்முயிர்நிலையிலே நலிந்தாரைவிட்டு வைப்பரோ. (இருந்தவாறும்) "உடஜொஸாஸீநஂ" ( உடஜோம மாஸீநம ) என்றிருந்தவிருப்பும். ( கிடந்தவாறும் ) "அஞ்ஜலிஂப்ராங்முக: க்ருத்வா ப்ரதிஶிஶ்யேமஹோததே:" (அஞ்சலிம்ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிஶிஶ்யேமஹோததே:) என்கிறபடியே, கடற்கரையிலே கிடந்தகி டையும். ப்ரதிசிஶ்யே என்கிறதிறே-ஒருகடலோடேயொருகடல் ஸ்பர் த்தித்துகிடந்தாப்போலே யிருக்கையாலே; "கருணையென்னுங்கடல்கரு ங்கடலைநோக்கிக்கிடந்ததே" என்றானிறே. அதாகிறது - பின்புவிடக்கட வதாகத்தொடுத்த அம்புமுன்புவிடமாட்டாமையில்லையிறே; அப்படிப் பட்ட அம்பிருக்க, தந்தோள்வலிகிடக்க, தாம்போராதார்முகங்காட்டா தேயிருக்கப் பொறுத்துக்கிடந்த கிடையைச்சொல்லுகிறது. நின்றுமிரு ந்தும்கிடந்துமென்று திரளச்சொல்லவமையுமாயிருக்க, நின்றவாறுமி ருந்தவாறும் கிடந்தவாறுமென்கிறாரிறே-தனித்தனியே யுளுக்கினபடி. அங்ஙனன்றிக்கே, கோவர்த்தநோத்தாரணம்பண்ணிநின்றநிலையாதல், தி ருக்குரவைக்கு முற்சாமமாகப் பெண்களோடே கழகமிருந்தவிருப்பாத ல், ஒரொருத்தர் மடிகளிலேசாய்ந்தபடியாதல். நின்றானில் "நிலையா

நின்றான்" என்பர்கள் - "நின்றவனிருத்தல்சாய்தல் செய்யிற்செய்வ தென்" என்று வயிறுபிடிக்கவேண்டும்படியிறே யிருப்பது; இருந்தாளுகில், "பிரானிருந்தமைகாட்டினீர்" என்னும்படியிருக்கும்; கிடந்தாளுகில், "கிடந்ததோர்கிடக்கை" என்பர்கள். "நிற்பதுமோர்வெற்பகத்திருப்பவிண்கிடப்பதும் நற்பெருந்திரைக்கடலுள்" என்கிறபடியே, திருமலையிலேநின்றபடியும், பரமபதத்திலேயிருந்தபடியும், திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபடியுமாகவுமாம். "நிற்பதுமிருப்பதுங்கிடப்பதுமென்னெஞ்சுளே" என்கிறபடியே, இவர்திருவுள்ளத்திலே * திகழுமணிக்குன்றமொன்றேயொத்துநின்றபடியும்; "செவ்வாய்முறுவலோடெனதுள்ளத்திருந்த வவ்வாயன்றியானறியேன்" என்னும்படியிருந்தபடியும்; "நின்றுமிருந்துங்கிடந்தும்" என்கிறபடியே, தந்திருவுள்ளத்திலேநின்றபடியு மிருந்தபடியும் கிடந்தபடியுமென்னுதல். அன்றிக்கே, திருவூரகத்திலே நின்றபடியும், திருப்பாடகத்திலேயிருந்தபடியும், திருவெஃகாவிலே கிடந்தபடியுமாதல். "நின்றவாறுமிருந்தவாறுங்கிடந்தவாறும்" என்றாழ்வார்பாடாநிற்க, "இவையெல்லாம்தொட்டிலிலே" என்றருளிச்செய்தாரெம்பெருமானார். தொட்டிற்பழுவைப் பிடித்துக்கொண்டு நிற்கும்படியும், தரித்துநிற்கமாட்டாமை விழுந்திருக்கும்படியும், அது தான் பொறுக்கமாட்டாமை சாய்ந்துகிடக்கும்படியுஞ் சொல்லுகிறது. அதவா, (நின்றவாறுமிருந்தவாறும்கிடந்தவாறும்) * போரார்வேற்கண்மடவாள்போந்தனையும் பொய்யுறங்கி, அவள்போனவாறே யெழுந்திருந்துநின்றவாறும்; அடியோசைப்பட்டவாறே வந்திருந்தபடியும், நிழலாடினவாறே முன்கிடந்ததானத்தேயோராதவன்போல் கிடந்தவாறுமென்றுமாம். (நினைப்பரியன) அதொருகால் செய்துபோகச்செய்தேயும் இவர்க்கின்றுங்கூட நினைக்கவுமரிதாயிராநின்றது. "இமையோர்தமக்கும்-செவ்வேநெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்" என்றாரிறேமுன்பே. (ஒன்றலாவுருவாய்) இவர்தமக்கொன்றே போருமாகாதே யுள்ளதனையும் நோவுபடுகைக்கு. ஒன்றல்லாத ப்ரகாரங்களையுடையவாய். (அருவாயநின்மாயங்கள்) கண்ணுக்கவிஷயமாயிருக்கிற வுன்னுடையவாஶ்சர்யமான சேஷ்டிதங்களை. ( நின்றுநின்றுநினைகின்றேன் ) நினைத்துத்தலைக்கட்டமாட்டார், நினையாதிருக்கமாட்டார். வருந்தியுன்னைநினைக்கப்புகுவன், நினைக்கமாட்டுகிறிலேன். அன்றிக்கே, நினைக்கைதான் தேட்டமாய் "நினைக்கலாவதொருவழியேதோ என்றாராயாநின்றேன். (உன்னையெங்ஙனம்நினைகிற்பன்) சர்வஜ்ஞனுமாய் சர்வசக்தியுமானநீ, நானுன்னைநினைக்கலாவதொரு வழியிட்டுத்தரவல்லையே.

[தொண்டெல்லாம் நின்னடியே தொழுதுய்யுமாகண்டு] சேஷவர்க்கமடங்கலும் - ஐஶ்வர்யார்த்திகள், ஆத்மப்ராப்திகாமர், பகவத்ப்ராப்திகாமர். இவரடங்கலும் சென்றுகிட்டித்தந்தாம் ப்ரயோஜநங்களைப்பெற்று மீளுகிறபடியைக்கண்டு, [தான்கணபுரந்தொழப்போயினாள்] நமக்கு

ம்கலந்து பரிமாறிமீளலாமென்றுபோனள்; [தான்] விஷயத்தையேபார்க்குமித்தனையோ, தந்தாண்மையும்பார்க்கவேண்டாவோ. ஒருப்ரயோஜநத்துக்காகப்போவார்க்கன்றே அதுகொண்டுமீளலாவது, தன்னையே ப்ரயோஜநமாகப்பற்றிப்போவார்க்கு மீளவிரகுண்டோ. இப்படியேயிறே பகவத்ப்ராவண்யமுடையார்படி. (பாவியேற்கு) என்னையொழிந்தாரடங்கலும் நினைப்பாரு மபிமதம்பெறுவாருமாய்க்கிடீர் செல்லுகிறது. " [illegible] " (ஸ்ம்ருதோயச்சதிஶோபநம்) என்கிறபடியேயிறே நாட்டங்கலும். ( ஒன்றுநன்குரையாய் ) அர்ஜுநனுக்குச் சொன்னப்போலே யெனக்குமொரு நல்வார்த்தை சொல்லவல்லையே. அவ்வளவாகாதே யிவர்தம்மதும். இனி " ப்ராப்திக்கும்விரோதிபோகைக்கும் கடவேன்நான் " என்றானிறே. அவ்வளவேயிறே வேண்டுவது, பின்புவருமவை தன்னடையேவருமவையிறே. ஸ்வஸ்வரூபஸித்தியிறே ப்ராப்யம், ப்ராப்திபலமான கைங்கர்யம்சொல்லவேண்டாவே, ப்ராப்தியளவுமிறே ப்ரமாணம்சொல்லுவது. அவ்வருகுள்ளது ப்ரமாணத்துக்குவிஷயமன்றே. அப்படியே " உனக்குநானேகடவேன் " என்றொரு வார்த்தைசொல்லவல்லையே. (உலகமுண்டவொண்சுடரே) உண்டியுடல்காட்டுமே. நினைக்கைகுற்றமாய்விட்டதோ. நினைவுங்கூடத்தேட்டமானால் நீயேசெய்து தலைக்கட்டவேண்டாவோ. இவை ஆபத்துங்கூடவறிவிக்கமாட்டாத சமயத்திலே நீயேயறிந்து வயிற்றிலேவைத்துநோக்கி, இவ்வுபகார மிவையறியாதொழிய, "இது உன்பேறு" என்னுமிடம் வடிவில் புகரிலேதோற்றவிருப்பானொருவனல்லையோ. (உலகமுண்டவொண்சுடரே) " உன்பேறாகாக்ஷித்தாய் " என்று மெய்யேயன்றே சொல்லுகிறது..........................................................................

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (நின்றவாறுமித்யாதி) பாட்டையெல்லாம்கடாக்ஷித் தவதாரிகை (உன்சகலேத்யாதி)

"நின்றவாறும்" இத்யாதியாலே - ப்ரத்யவஸ்த்தையிலு மிவரீடுபட்டிருப்போலே, நமக்கிவ்விஷயத்திலீடுபாடு காண்கிறோமில்லையேயென்ன (இவரிவ்விஷயத்திலித்யாதி) இவரீடுபடுவதாஶ்ரிதார்த்தமான செயலுக்காகையாலே, ப்ரசங்காத், அவனாஶ்ரிதார்த்தமாகச்செய்யும் செயலுக்கைதிஹ்யம் ( வடக்குநின்றமித்யாதி ) தீர்த்தத்தினன்றிரா - தீர்த்தவாரியினன்றிருந்தென்றபடி. பாடிச்சமைந்து-பாடிமுடித்து. கணிசங்கொண்டு-சபதங்கொண்டு. ஆறுண்டு-வழியுண்டு. வ்யாக்யாதாவினீடுபாடு (இப்படியேயித்யாதி) அநுகூலரானவரைப்போலே சாபராதரான நம்மையங்கீகரிக்கக்கூடுமோவென்ன; புருஷகாரபலத்தாலே கூடுமென்னுமதுக்கைதிஹ்யம் (ஒருநாளித்யாதி) அன்றிக்கே, "இவன்வர்த்தனாத்துக்கெல்லாம்போருமோ" என்கையாலே - ஆயாசங்கண்டிராங்குமென்று சித்தவத்கரித்து, அப்படி ஆயாசங்கண்டிராங்குமோவென்ன (ஒருநாளித்யாதி) என்னுதல். தொட்டப்படி-வெளுப்பித்தபடி.

த்விதீயார்த்தத்துக்குப்ரமாணம் (அவஷ்டப்யசேத்யாதி) "[illegible]" (அவஷ்டப்யசதிஷ்டட்டந்தம்ததர்மதநுரூர்ஜிதம் । ராமம்ராமாநுஜம்சைவபர்த்துப்சைவாநுஜம்ஸபா ) இதிகிஷ்கிந்தாகாண்டே. எடுத்தஸ்லோகத்துக்கர்த்தம் ( வாலிவதமித்யாதி ) அவனையிடுவித்துக்கொல்லுவிக்கையாவது-புருஷகாரபூதராயிருக்கை. சாங்கம் - பக்ஷபாதமும், வில்லும். கீழ் - கையும்வில்லுமானவழகைக்கண்டு சாங்கத்தாலே சுபஹ்ருதயையானுளென் றருளிச்செய்து, ஆஸ்ரிதபக்ஷபாதகுணாநுசந்தாநத்தாலே சுபஹ்ருதயையானுளென்று பாவாந்தரம் (இனித்தானித்யாதி) "[illegible]" (உடஜேராமமாஸீநம்ஜடாமண்டலதாரிணம் । க்ருஷ்ணாஜிநதரம்தந்துசீரவல்கலவாஸஸம் ) இதிசித்ரகூடே. "[illegible]" ( ததஸ்ஸாகரவேலாயாம்தர்ப்பாநாஸ்தீர்யராகவ:| அஞ்ஜலிம்ப்ராங்முக:க்ருத்வாப்ரதிஸிஸ்யேமஹோததே: ) இதியுத்தகாண்டே. அவனையும்கடலாகச்சொன்னவிடமுண்டோவென்ன (கருணையென்னு மித்யாதி) இந்தக்கம்பன்கவிக்கர்த்தம் (அதாகிறதித்யாதி) உளுக்கினபடி-ஈடுபட்டபடி. கழகம் - ஓலக்கம். தனித்தனியேயுளுக்கினபடியைக்காட்டுகிறார் (நின்றுளுகிலித்யாதி, கிடந்ததோர்கிடக்கையென்பர்களென்னுமளவும்) (நிலையார) என்றதுக்கிரண்டுபொருள் (நின்றவனித்யாதி) அதாவது - நின்றவனிருந்தாற்செய்வதென் என்றும், சாய்ந்தருளிச்செய்வதென்னென்று மிரண்டுபொருள். ( நிலையாரநின்றான் - நிலைபடியநின்றான், நிலைபொருந்தநின்றானென்றபடி. இந்தப்பாசுரம் திருமொழியில். "குலையார்ந்தபழுக்காயும்" என்கிறபாட்டிலே. இருந்தமை-இருந்தபடியை. இருப்பிலழகையென்றுகருத்து. (கிடந்ததோர்கிடக்கைகண்டு) திருமாலை இருபத்துமூன்றும்பாட்டு, "கங்கையில்" இத்யாதி. இதுக்கர்த்தம் - "ஒருக்கணித்தோமல்லாந்தோ கண்வளர்ந்தருளுகிறது" என்றுதெரியாதபடி யிருப்பதொரு கிடந்தகிடையழகைக்கண்டென்றபடி. ( நிற்பதுமோரித்யாதி ) அத்விதீயமானதிருமலையிலே நிற்பதுவும், விண்ணிலே-பரமபதத்திலேயிருப்பதும், நன்றாய்ப்பரப்பையுமலைகளையுமுடைய திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுவதுமென்றபடி. திருச்சந்தவிருத்தம், அறுபத்தஞ்சாம்பாட்டு. (திகழுமணிக்குன்றமொன்றேயொத்துநின்ற) விளங்காநிற்கிறதொருமாணிக்கமலைபோலே நின்றவென்றபடி. (செவ்வாயித்யாதி) சிவந்ததிருப்பவளத்தின் முறுவலோடேயென்னெஞ்சுக்குள்ளேயிருந்த அந்தவாகாரத்தையொழிய வேறோராகாரத்தை யறியேனென்றபடி. ( நின்றுமிருந்தும்கிடந்துமென்கிறபடியேயித்யாதி ) பெரியதிருவந்தாதி முப்பத்தஞ்சாம்பாட்டு. இந்தவாக்யத்தில், ( கிடந்தும் ) என்றதுவே யிவ்விடத்துக்குவேண்டுவது. ஆழ்வாரென்றது - ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையரென்றபடி. பழுவை-தொட்டிற்சட்டத்தை. (போரார்வேற்கணித்யாதி) சிறியதிருமடல். இதுக்கர்த்தம்-யுத்தோந்முகமான கூர்மையுடைய வேல்போன்ற கண்களையுடைய யசோதைப்பிராட்டிபோந்தனையும் பொய்யாகநித்ரைபண்ணி. ஆர்-கூர்மை. (முன்கிடந்ததானத்தே) முன்புகிடந்தஸ்த்தாநத்திலே. (ஓராதவன்போல்) அறியாதவன்போலென்றபடி. ஆக, "நின்றவாறும்" இத்யாதிக்கு ஏழுதாத்பர்யம். நினைக்கவுமரிதோவென்ன (இமையோரித்யாதி) நித்யசூரிகளுக்கும் நேரேநெஞ்சால் பரிச்சேதித்துநினைக்கவரிது, வெண்ணெயை யமுதுசெய்தானென்று சொல்லுகி

றவபக்ருஷ்டவசநமித்யர்த்த:. திருவிருத்தம் தொண்ணூற்றெட்டாம்பாட்டு, " ஆ ஞ்சாமுனிவரும் " இத்யாதி.

( நோவுபடுகைக்கு ) என்றவநந்தரத்திலே, அநேகமாஞல் சொல்லவேணு மோவென்று கூட்டிக்கொள்வது. உரு-ப்ரகாரம். மாயங்கள்-மாயங்களை. "நின்று நின்றுநினைகின்றேன்" இத்யாதிக்கிரண்டுபொருள் - நினைப்பரியனவொன்றலாவுரு வாயருவாயநின்மாயங்களான -நின்றவாறு மிருந்தவாறும் கிடந்தவாறுமானவிவ ற்றை-தரித்துநின்றநுசந்திக்கலாமோவென்று வருந்தியநுசந்திப்பன்; அவையெனக்கு சைதில்யத்தை விளைக்கையாலே யுன்னை யெங்ஙனேயநுசந்திக்கவல்லேன் ; என்னுலுன்குணங்களை தரித்துநின்றநுசந்திக்க முடியாதென்றொருபொருள். இத் தையருளிச்செய்கிறார் (நினைத்துத்தலைக்கட்டமாட்டாரித்யாதிநாலுவாக்யத்தாலே) நினைத்துத்தலைக்கட்டமாட்டாரென்றது - " நின்றுநின்றுநினைகின்றேன் " என்றது க்கர்த்தம். நினையாதிருக்கமாட்டாரென்றது - " உன்னையெங்ஙனம்நினைகிற்பன் " என்றதுக்கர்த்தம். இக்குணங்களீடுபடுத்துகையாலே நினைத்துமுடிக்கமாட்டார், அக்குணங்களையொழியச்செல்லாமையாலே நினையாதிருக்கமாட்டாரென்று (நினைத் துத்தலைக்கட்டமாட்டார்) இத்யாதிவாக்யத்வயத்துக்கும் தாத்பர்யம். இத்தைவிவ ரிக்கிறார் (வருந்தியித்யாதி) ஒன்றலாவுருவாயருவாயநின்மாயங்களான - நின் றவாறுமிருந்தவாறும் கிடந்தவாறும் சிதிலமாகப்பண்ணுமவை; ஆகையாலேநினைப் பரியன; " உன்னைதரித்துநின்றநுபவிக்குமுபாயமேது " என்றுபலகாலும் விசாரி யாநின்றேன், அதுநீயே நிச்சயித்தருளிச்செய்யுமத்தனைபோக்கி, நானெங்ஙனே நிச்சயிக்கப்புகுகிறேனென்றிரண்டாமர்த்தம். இத்தையருளிச்செய்கிறார் (அன்றிக் கேநினைக்கைதானித்யாதி) " உலகமுண்ட " என்கிறதிலே - " மேல்ப்ரளயம்வரப் போகிறது " என்றேறகவே விசாரித்துரக்ஷிக்கையாலே, சர்வஜ்ஞத்வம்தோன்று நின்றது; சிறியவயிற்றிலே பெரியலோகங்களையடக்குகையாலே, சர்வசக்தித்வந் தோற்றுநின்றது; அத்தைப்பற்ற (சர்வஜ்ஞனுமாய் சர்வசக்தியுமானநீயென்கிறார்) " நின்றுநின்றுநினைகின்றேன் " என்றதினிரண்டாமர்த்தத்துக்கு, " உன்னையெங்ங னம் நினைகிற்பன் " இத்யாதிக்கு - தரித்துநின்று நினைக்கும்படி சொல்லவேணுமெ ன்றபடி.

லோகத்தாரவனைநினைத்து கார்யங்கொள்ளாநிற்க, இவர்க்குநினைக்கைதேட் டமாவானென்னென்ன (தொண்டெல்லாமித்யாதி) இதுக்கர்த்தம் ( சேஷவர்க்கம டங்கலுமித்யாதி ) இத்தால்-ப்ரயோஜநாந்தரபரரானவர்களுக்கு ப்ரயோஜநார்த்த மாக நினைக்கலாம், அநந்யப்ரயோஜநர்க் கீடுபாட்டுக்குடலாகையாலே நினைக்கப் போகாதென்றபடி. கீழ்வாக்யவிவரணம் (ஒருப்ரயோஜநத்துக்காகவித்யாதி) (தொ ண்டெல்லாமித்யாதி) இப்பாசுரம் திருமொழி எட்டாம்பத்து இரண்டாந்திருமொ ழி எட்டாம்பாட்டு. (உய்யுமாகண்டு) உஜ்ஜீவிக்கும்படிகண்டு. அதாவது-தந்தாமபீ ஷ்டம்பெறக்கண்டென்றபடி. அர்ஜுநனுக்குச்சொன்னப்போலேயென்றது - அர்ஜு நனுக்கு " மாசுச: " என்றுசொன்னப்போலேயென்றபடி. ஆனால், அர்ஜுநனைப் போலே இவர்க்குசோகமுண்டோவென்ன ( அவ்வளவித்யாதி ) அவ்வளவாகாதே யென்றது - அவ்வளவன்றேவென்றபடி. அர்ஜுநனுக்குச்சொன்னதேதென்ன (இ னிப்ராப்திக்குமித்யாதி) இனியென்றது - அவன்சோகித்தவநந்தரமென்றபடி. சர மஶ்லோகத்தில் " மோக்ஷயிஷ்யாமி " (மோக்ஷயிஷ்யாமி) என்று-விரோதிநிவ்ரு த்தியன்றேசொல்லிற்று, ப்ராப்திசொல்லவில்லையே; ஆனபின்பு இவர்க்குமவ்வள வுபோருமோவென்ன; அநிஷ்டநிவ்ருத்தியைச்சொன்னால் - இஷ்டப்ராப்தியர்த்த

சித்தமாய்வருகையாலே சொல்லிற்றில்லையென்கிருர் ( அவ்வளவேயிறே யித்யாதி வாக்யத்வயத்தாலே ) அவ்வளவேயிறேவேண்டுவதென்றது - விரோதிபோமளவே யிறே வேண்டுவதென்றபடி. பின்புவருமவையேதென்ன ( ஸ்வஸ்வரூபேத்யாதி ) ப்ராப்யமென்றது - ப்ராப்தியென்றபடி. இத்தால் - ப்ராப்தியும் சரமஶ்லோகத்தி லர்த்தாதுக்தமென்றுகருத்து. ப்ராப்திமாத்ரகதநம்போருமோ, கைங்கர்யம்சொல்லவேண்டாவோவென்ன ( ப்ராப்திபலமானவித்யாதி ) அதாவது - ராகப்ராப்தமாகையாலே ப்ரீதிகாரிதமாய்த் தன்னடையேவருமென்றபடி. அபரிச்சிந்நத்வேந ப்ரமாணவிஷயமாகையாலும் சொல்லவேண்டாவென்று பரிஹாராந்தரம் (ப்ராப்தியளவுமிறே யித்யாதிவாக்யத்வயத்தாலே) "உலகமுண்டவொண்சுடரோ" லோகத்தையமுதுசெய் தத்யுஜ்ஜ்வலனானவனே யித்சப்தார்த்தஃ உலகமுண்டால் ஒண்சுடராகவேணுமோவென்ன ( உண்டியித்யாதி ) உண்டி - போஜநத்தை. "வவ-ஹாரா வஹ்ரா.திஹெஹாஜநஷ்" ( வபுராக்யாதிபோஜநம் ) என்னக்கடவதிறே. "உலகம்" என்றவசேதநசமாதிக்கு. "நின்றுநின்றுநினைகின்றேன்" என்றதின் முன்றினவர்த்தத்துக்குச்சேரபாவம் (நினைக்கையித்யாதி) அதாவது - நினைக்கமாட்டாதேயிருக்கிற லோகத்தைரக்ஷித்தாய், சேதநனானவாசிக்கு நினைக்கிறவெனனை ரக்ஷித்தாலாகாதோவென்றுகருத்து. "நின்றுநின்றுநினைகின்றேன்" என்றதின் த்விதீயார்த்தத்துக்குச்சேரபாவம் (நினைவுங்கூடவித்யாதி) "உலகமுண்டவொண்சுடரோ" என்றதுக்குசப்தார்த்தம் (இவையாபத்துங்கூடவித்யாதி) சாடுவுக்காக பதோபாதாநம்பண்ணியருளிச்செய்கிருர் (உன்பேருகவித்யாதி) மெய்-சரீரமும், சத்யமும்.

நினைப்பரியனவாய் - நின்றவாறுமிருந்தவாறும் கிடந்தவாறுமாய்க்கொண்டு - ஒன்றலாவுருவாயருவாய நின்மாயங்களை நின்றுநின்றுநினைகின்றேன், உன்னையெங்ஙனம் நினைகிற்பன், உலகமுண்டவொண்சுடரோ, பாவியேற்கொன்று நன்குரையாயித்யந்வயஃ. "ஆயாஸஸ்ஸ்மரணேகோஸ்ய ஸ்ம்ருதோயச்சதிஸோபநம்। பாபக்ஷயஸ்சபவதி ஸ்மரதாம்தமஹர்நிஸம்" ( ஆயாஸஸ்ஸ்மரணேகோஸ்ய ஸ்ம்ருதோயச்சதிஸோபநம் । பாபக்ஷயஸ்சபவதிஸ்மரதாம்தமஹர்நிஸம் ) இதிஸ்ரீ விஷ்ணுபுராணே அஸுரார்ப்பகான் ப்ரதிப்ரஹ்லாதஃ.................................*

---

# ஏழாம்பாட்டு.

---

ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறு முண்மையோடின்மையாய்வந்தென் கண்கொளாவகைநீகரந்தென்னைசெய்கின்றன
வெண்கொள்சிந்தையுணைகின்றே னென்கரியமாணிக்கமேயென்கண்கட் டிண்கொள்ளவொருநாளருளாயுன்றிருவுருவே. [குத்

## ஆறுயிரப்படி.

( ஒண்சுடர் ) ஆஶ்ரிதர்க்குமெய்யனாய்த்தோற்றியும், அநாஶ்ரிதர்க்குப்பொய்யனாய்க் கைவாராதேயிருக்கிறபடியையும், ஹ்ருதயத்திலே சந்நிஹிதனாய்வைத்தே யென்கண்ணுக்குக்காணவொண்ணாதபடி மறைந்தென்னை நலிகிறநலிவுகளையும் மநோரதிக்கிற மநோரதத்திலே சிதிலனாகா

நின்றேன். உன்வடிவழகை யெனக்கு புஜிக்கத்தந்தருளினநீ, நான் த்ருஷ்டமாகக் காணலாம்படி என்னுடையகண்களுக்கு உன்னுடைய திருவுருவை யொருநாளருளவேணுமென்கிறார்..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பாஹ்யசம்ஶ்லேஷம்பண்ணி நினைத்தபடி யநுபவிக்கப்பெறாதே மாநஸாநுபவமேயாய் க்லேசியாதபடி, என்கண்கள் ஸ்த்திராநுபவம்பண்ணும்படி யுன்வடிவைக்காட்டவேணுமென்கிறார்.

உண்மையோடு-என்னகவாயிலே ப்ரகாசித்துளனாகிறவாகாரத்தோடே. இன்மையாய் - புறவாயில்ப்ரகாசத்தினுடைய வில்லாமையையுடையனாய்க்கொண்டு. வந்து-வந்து. ஒண்-ஒள்ளிய. சுடரோடு-தேஜஸ்ஸோடேஸஹாவஸ்த்திதமான. இருளுமாய்-இருளென்னலாம்படி. நின்ற-நின்ற. ஆறும் - ப்ரகாரமும். அப்ப்ரகாரத்திலே, என்-என். கண்-கண். கொளாவகை-உன்னையநுபவியாதபடி. கரந்து - உள்ளே மறைந்துநின்று. நீ, என்னை-என்னை. செய்கின்றன-செய்கிறவிவற்றை. எண் - எண்ணவேணுமென்று. கொள்-கொள்ளுகிற. சிந்தையுள் - நெஞ்சோடே. நைகின்றேன்-சிதிலனாகாநின்றேன். என் - என்னுடைய இந்தசைதில்யத்துக்குஹேதுவாய். கரிய மாணிக்கமே-நீலரத்நம்போலேயிருக்கிற வடிவையுடையவனே. உன்-உன்னுடைய. திரு-ப்ராப்தமாய் போக்யமான. உரு-ரூபத்தை. காணவாசைப்பட்ட, என்-என். கண்கட்கு-கண்களுக்கு. திண்-திண்மையையுடைத்தாக. கொள்ள - காணும்படி. ஒருநாள்-ஒருகால். அருளாய்-அருளவேணும்.

கலந்தென்றுபாடமாய்-கலசியென்றுமாம்..............................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

மாநசாநுசந்தாநமேயாய் சிதிலனாய்ப்போகாமே, கண்ணாலேகண்டநுபவிக்கவல்லேனாம்படிபண்ணி யருளவேணுமென்கிறார்.

(உண்மையோடின்மையாய்வந்து - ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறும்) எனக்குண்மையோடே ஒண்சுடராய் நிற்கும் ஹார்த்தமாக; இன்மையோடிருளாயிருக்கும் பாஹ்யாபேக்ஷையில். அன்றிக்கே, ஆஶ்ரிதர்க்குத் தன்படிகளிலொன்றும் குறையாதபடிகாட்டிக்கொடுத்து, அவர்களுக்கு "இவ்வளவு" என்று பரிச்சேதிக்கலாம்படி ப்ரகாசித்து நின்றபடியும்; அநாஶ்ரிதர்க்குத் தன்படிகளிலொன்றும் தெரியாதபடிபண்ணி, அத்தாலே அவர்களுக்கு " இல்லை " என்னும்படி யிருளப்பண்ணிக்கொடுநின்றபடியும். ஆஶ்ரிதர்க்கொண்சுடரோடுண்மையாய்நின்றும், அநாஶ்ரிதர்க் கிருளோடின்மையாய்நின்றும். ( வந்தென்கண்கொளாவகைநீகரந்தென்னைச்செய்கின்றன) இவையெல்லாம்தவிர, என்பக்கல்பரிமாறுகிற வேறுபாடும். ஒண்சுடராதல் இருளாதல், இரண்டத்தொன்றாகப்பெற்றிலேன்; நடுவேநின்று க்லேசியாநின்றேன். முக்தர்க்குக்கூட்டல்லர், ஸம்சாரிகளுக்குக்கூட்டல்லர், அந்தரப்பட்டு நிற்கிறாரிறேயிவர்தாம். என்னெஞ்சிலேவந்துபுகுந்து என்கண்ணுக் கவிஷயமாம்படி மறையநின்று நீயென்னை நலிகிறவற்றையும், கண்கொளாவகை - கண்க்ரஹியாதபடி.

(எண்கொள்சிந்தையுணேகின்றேன்) பெற்றவம்சங்கொண்டு கார்யங்கொள்ளமாட்டுகிறிலேன். கைப்புகுந்ததுகொண்டு மேலுள்ளதுபெற விரகு பார்க்கமாட்டுகிறிலேன். எண்ணப்புக்கு, மநோரதமாத்ரத்திலே சிதிலனாகாநின்றேன்.

(என்கரியமாணிக்கமே) சக்ஷுர்விஷயமான பதார்த்தங்களைக் கொண்டு நான்காலம்போக்கமாட்டாமே, உன்வடிவின்சுவட்டை யறிவித்தாயே. (என்கரியமாணிக்கமே) "இவ்வடிவைப்பிரிந்தார்க்கு ஜீவிக்கவுமாம்" என்றுதோற்றியிருந்ததோ. (என்கண்கட்கு) இவற்றின்விடாயுனக்குத்தெரியுமிறே; "நான்பெற்றேன்" என்றுலு மாறியிராதவையன்றே. வேறொன்றிட்டு மறைக்கலாமவையன்றே. (திண்கொள்ள) "மாநசாநுபவத்தை ப்ரத்யக்ஷசமாநாகாரமாகப்பண்ணினோமே" என்று நீ சொல்லுமது எனக்குவார்த்தையன்றுகிடாய். (திண்கொள்ள) ஸ்வப்நாநுபவம்போலே மாநசாநுபவமாகவொண்ணாது, ப்ரத்யக்ஷிக்கவேணும். த்ருடமாக. இங்ஙன்செய்யப்போமோவென்னில், சிலர்க்கு சதாதர்ஸநயோக்யனாகாநின்றாயே (ஒருநாளருளாய்) ஒருநாளமையுமென்கிறாரல்லர், விடாயின்பெருமை சொல்லுகிறார்; தாபார்த்தன் "ஒருகால் நாக்குநனைக்கவமையும்" என்றாப்போலே. "கிட்டினால்பின்னைவிடும்படிசொல்லுகிறோம்" என்று. (உன்திருவுருவே) இதேதேனுமுன்னதோ! நோக்கிக்கொண்டு கிடக்கைக்கு, * நதேரூபம் - பக்தாநாமன்றே... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (ஒண்சுடரித்யாதி) "எண்கொள்சிந்தையுணேகின்றேன், என்கண்கட்குத்திண்கொள்ள" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (மாநசாநுசந்தாநமேயாயித்யாதி)

"உண்மையோடு - ஒண்சுடராய், இன்மையோடு - இருளாய்" என்றந்வயித்து, ஸ்வவிஷயமாகவருளிச்செய்கிறார் (எனக்கித்யாதியாலே) உண்மையோடொண்சுடரும், இன்மையோடே யிருளுமாகிறவிரண்டு மேகாஶ்ரயகதமாகக்கூடாமையாலே, அதுகூடுகைக்காக (ஹார்த்தமாக) என்றும். (பாஹ்யாபேக்ஷயில்) என்றுமருளிச்செய்தது. ஆஶ்ரிதர்க்குண்மையோடொண்சுடராய், அநாஶ்ரிதர்க் கின்மையோடிருளாயென்றந்வயித்து, ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயமாக யோஜநாந்தரம் (அன்றிக்கே யாஶ்ரிதர்க்குத் தன்படிகளித்யாதிவாக்யத்வயத்தாலே) தன்படிகளென்றது- சேஷித்வாதிகள். கீழே ஸ்வவிஷயத்திலே, (ஹார்த்தமாக) என்றும், (பாஹ்யாபேக்ஷயில்) என்றுமிவரருளிச்செய்கைக்கடி - "என்கண்கொளாவகை நீகரந்தென்னைச்செய்கின்றன" என்றுவிசதமாக வாழ்வாரருளிச்செய்தவிது. ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயமாகவே, கீழந்வயித்தபடியன்றிக்கே அந்வயபேதேந த்ருதீயதாத்பர்யமாதல், த்விதீயார்த்தவிவரணமாதல் (ஆஶ்ரிதர்க்கொண்சுடரோடித்யாதிவாக்யத்வயம்) ஒண்சுடர்-ஒள்ளியசுடர். அழகியசுடரொன்றபடி.

"ஒண்சுடர்" இத்யாதியின் த்விதீயார்த்தத்துக்குச்சேரவர்த்தம் (இவையெல்லாமித்யாதி) இவையெல்லாமென்றது - ஆஶ்ரிதவிஷயத்தில் ப்ரகாசிக்கையு மாநா

ஸ்ரீதர்க்கு ப்ரகாசியாமையுமென்றபடி. விவரணம் (ஒண்சுடராதலித்யாதிவாக்யத்வயம்) ஆஸ்ரிதர்-முக்தர். அநாஸ்ரிதர்-சம்சாரிகள். இத்தால்-ஆஸ்ரிதர்க்கு மநாஸ்ரிதர்க்கும் கூட்டல்லவென்றபடி. சப்தார்த்தம் (என்னெஞ்சிலேயித்யாதி) "ஒண்சுடரோடு" இத்யாதியில் ஸ்வவிஷயமான மூர்த்தினவர்த்தத்துக்கும், "என்கண்கொளாவகை நீகரந்தென்னைச்செய்கின்றன" என்றதுக்கு மர்த்தபேதமில்லாமையாலே, அநுவாதமாகக்கொள்ளுவது.

"நைகின்றேன்" என்றதுக்குபாவம் (பெற்றவம்சமித்யாதி) பெற்றவம்சமாவது-மாநசாநுபவம். காரியக்கொள்ளமாட்டுகிறிலேனென்றது - "இதுண்டாயிற்றே, மேலும் க்ரமத்திலேபெறுகிறோம்" என்றவ்வளவு மாறியிருக்கமாட்டுகிறிலேனென்றபடி. கீழ்வாக்யவிவரணம் ( கைப்புகுந்ததித்யாதி ) கைப்புகுந்ததென்றது-மாநசாநுபவத்தை. சப்தார்த்தம் (எண்ணப்புக்கித்யாதி) கீழே, ( நலிகிறவற்றையும் ) என்றதுக்கு - ( எண்ணப்புக்கு ) என்கிறவித்தோடே சம்பந்தம். எண்கொள்-எண்ணைக்கொள்ளுமளவில். எண்ணப்புக்கென்றபடி. சிந்தையுள் - மநோரதமாத்ரத்திலே இத்யர்த்தஃ.

"என்" என்றதுக்குபாவம் (சக்ஷுர்விஷயமானவித்யாதி) "கரியமாணிக்கம்" என்றதுக்குபாவம் (இவ்வடிவையித்யாதி) "என்கண்கட்கு" என்றதுக்குபாவம் (இவற்றினித்யாதிவாக்யத்வயம்) தெரியுமிறேயென்றது - ஹ்ருஷீகேசனுகையாலே தெரியுமிறேயென்றபடி. பெற்றேனென்றாலும் - பெற்றேனென்றுபாவித்தாலும், கண்களின்விடாயின் சரமாவதியாதல், மேலுக்கவதாரிகையாதல் (வேறொன்றிட்டித்யாதி) கீழ்வாக்யவிவரணம் (ஸ்வப்நாநுபவமித்யாதி) "ஒருநாள்" என்றதுக்கவதாரிகை (சிலர்க்கித்யாதி) சிலர்க்கென்றது - நித்யஸூரிகளுக்கென்றபடி. ஆதரமல்பமாய் ப்ரார்த்திக்கிறோரோவென்ன (ஒருநாளமையுமித்யாதி) விடும்படி-விட்டுப்போகிறபடி. "உன்" என்றதுக்கு பாவமாதல், பிரிநிலையேகாரமாக்கி பாவமாதல் (இதேதேனுமித்யாதி)

உண்மையோடின்மையாய்வந்து - ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறும், என்கண்கொளாவகை நீகரந்தென்னைச்செய்கின்றன எண்கொள்சிந்தையுள் நைகின்றேன்; என்கரியமாணிக்கமே, உன்திருவுருவு-என்கண்கட்குத் திண்கொள்ள வொருநாளருளாயித்யந்வயஃ................................................*

## எட்டாம்பாட்டு.

திருவுருவுகிடந்தவாறுங்கொப்பூழ்ச்செந்தாமரைமேற்றிசைமுகன்
கருவுள்வீற்றிருந்துபடைத்திட்டகருமங்களும்
பொருவிலுன்றனிநாயகமவைகேட்குந்தோறுமென்னெஞ்சநின்றுநெக்
கருவிசோருங்கண்ணீரென்செய்கேனடியேனே.

## ஆறுயிரப்படி.

(திருவுருவு) அழகியவடிவோடே ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியும், திருநாபிகமலத்திலே சதுர்முகனுகிற வசிஷ்டாநந்,

தினுள்ளே வீற்றிருந்து ஸ்ருஷ்டித்தக்ரமங்களும், ஒப்பின்றிக்கே விஸஜாதீயமான வுன்னுடையகுணசேஷ்டிதங்களைக் கேட்குந்தோறு மென்னெஞ்சம்நெகிழ்ந்து நிற்பதும்செய்து, கண்ணீரருவிபோலே சோராநின்றதென்கிருர்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்னுடைய சர்வாதிகத்வ ஸூசகமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களைக்கேட்குந்தோறெல்லாம் என்னெஞ்சுநெகிழ்ந்து கண்ணீர்சோராநின்றது, நானென்செய்வேனென்கிருர்.

காரணமான ஏகார்ணவஜலத்திலே, திரு-அழகிய. உருவு-திருமேனி. கிடந்தவாறும்-கண்வளர்ந்தபடியும். கொப்பூழ்-அந்தவடிவிற்கொப்பூழில். செம்-சிவந்த. தாமரைமேல்-தாமரையின்மேலேயுண்டான. திசைமுகன் - சதுர்முகனுகிற. கருவுள்-கருவுக்குள்ளே. வீற்று-அந்தராத்மாவானவேறுபாடுதோன்றும்படி. இருந்து-இருந்து. படைத்திட்ட - " அவன்ஸ்ருஷ்டிபண்ணினுன் " என்னும்படி நீஜகத்தைஸ்ருஷ்டித்த. கருமங்களும்-வ்யாபாரங்களுமாகிற. பொரு-எதிர். இல்-இல்லாத. உன்-உன்னுடைய. தனிநாயகம்-அத்விதீயநாயகத்வ ப்ரகாசகமான. அவை - அவற்றை. கேட்குந்தோறும்-ப்ரமாணமுகத்தாலேகேட்குந்தோறும். என்-என். நெஞ்சம்-நெஞ்சு. நின்று - ஒருபடிப்படநின்று. நெக்கு - கட்டுக்குலைந்துநெகிழ்ந்து. கண்ணீர்-கண்ணீரானது. அருவி-அருவிபோலே. சோரும்-விழாநின்றது. அடியேன் - நீயிட்ட வழக்காம்படி பரதந்த்ரனுனநான். என்-எத்தை. செய்கேன்-செய்வேன்.

சம்பந்தமுண்டாகையாலே விடமாட்டுகிறிலேன், சைதில்யம்பிறவாதபடியத்நிக்கமாட்டுகிறிலேன்...................................................*

## ஈ௫ - எட்டாம்பாட்டு.

உன்குணசேஷ்டிதாதிகளைக்கேட்ட கேட்டபோதுதோறும் சிதிலனுகாநின்றேன், என்செய்கேனென்கிருர்.

(திருவுருவுகிடந்தவாறும்) காந்திமிக்கவடிவோடேகூடக் கண்வளர்ந்தருளினபடியும், தர்ஸநீயமானவடிவோடே யேகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியும். ( கொப்பூழித்யாதி ) ஏகார்ணவத்திலே ஸ்ருஷ்ட்யுந்முகனுய்க் கண்வளர்ந்தருளிப் பின்பக்காலம் வந்தவாறேயெழுந்திருந்து இவற்றையெல்லாமுண்டாக்கினுன்,ப்ரஹ்மஸ்ருஷ்டியளவும்செல்ல அவ்வருகுள்ளதெல்லாம் தானேயுண்டாக்கிப்பின்பு. திருநாபியிலேயுண்டான தாமரைப்பூவில் ப்ரஹ்மாவினுடைய வுத்பத்திக்குத்தானுதாரமாய், பின்பவன்றன்னைத் தனக்காதாரமாகக்கொண்டு இவ்வருகுண்டான கார்யவர்க்கங்களை யடங்கலுமுண்டாக்கினபடியும். ( திசைமுகன்கருவுள்வீற்றிருந்து ) சதுர்முகனுகிற சரீரத்தையதிஷ்டித்துக்கொண்டுநின்று. " ஸ்ருஷ்டிம் ததஃகரிஷ்யாமி த்வாமாவிஸ்ய " (ஸ்ருஷ்டிம்ததஃகரிஷ்யா

மித்வாமாவிஶ்ய) என்கிறபடியே, "ஸ த்வ ஸர்வைஶ்வர்ய" (ஏ தைளத்வௌவிபுதஶ்ரேஷ்டடைள) "இன்ன ஆசநத்தையுடையனுய்க் கொண்டு" என்றுப்போலே. (வீற்றிருந்து) தன்னைஸ்வர்யத்தாலுள்ள மேன்மைதோன்றவிருந்தபடி, பொற்குப்பியில் மாணிக்கம்போலே. (அழகியதிருமேனியோடே கண்வளர்ந்தபடியும், அந்தவடிவில் கொப்பூழில் சிவந்ததாமரையின்மேலேயுண்டான சதுர்முகன் கருவுக்குள்ளே அந்தராத்மாவான வேறுபாடுதோன்றும்படியிருந்து) (படைத்திட்டகருமங்களும்) ஸ்ருஷ்டித்தவ்யாபாரங்களும். (பொருவிலித்யாதி) ஒப்பின்றிக்கே யத்விதீயமாய் ஐஶ்வர்யப்ரகாசகமான உன்குணசேஷ்டிதங்கள் கேட்குந்தோறு மென்னெஞ்சானது மலைநெகிழ்ந்தாப்போலே நெகிழ்ந்து, கண்ணீரருவியாய் ப்ரவஹியாநின்றது.

(என்செய்கேனடியேனே) பரதந்த்ரனானான் கார்யம்செய்து கொள்ளப்பார்த்திருக்கிறுயோ. வேறொன்றுலேபோதுயோக்கி தரித்திருக்கவோ, நானெத்தைச்செய்வேன் ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (திருவுருவித்யாதி) "தனிநாயகமவைகேட்குந்தோறுமென்னெஞ்சம்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (உன்குணசேஷ்டிதேத்யாதி)

திரு-காந்தி. (மிக்க) அர்த்தஸித்தம். உருவு-விக்ரஹம். விவரணம் (தர்ஶநீயமானவித்யாதி) மேலே "கொப்பூழ்" இத்யாதிக்குச்சேர (ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியு மென்றது)

கீழ்வாக்யவிவரணம் (ப்ரஹ்மஸ்ருஷ்டியளவுமித்யாதி) "கருவுள்வீற்றிருந்து" என்கையாலே - (அவன்றன்னைத்தனக்காதாரமாகக்கொண்டென்றது) அதிஷ்டித்ததுக்கு ப்ரமாணத்வயம் (ஸ்ருஷ்டிம்ததஃ, ஏதௌத்வௌஇத்யாதி) "ஸ்ருஷ்டிம் ததஃ கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே। ததஸ்ஸ்ருஜ்ய ஸ்வரூபோஹம மராதிவிபேததஃ" (ஸ்ருஷ்டிம்ததஃகரிஷ்யாமித்வாமாவிஶ்யப்ரஜாபதே। ததஸ்ஸ்ருஜ்யஸ்வரூபோஹமமராதிவிபேததஃ) இதிஸ்ரீவிஷ்ணுதர்மே. "ஏதௌ த்வௌ விபுதஶ்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜௌ ஸ்ம்ருதௌ। ததா தர்ஶிதபந்தாநௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ" (ஏதௌத்வௌவிபுதஶ்ரேஷ்டௌப்ரசாதக்ரோதஜௌஸ்ம்ருதௌ। ததாதர்ஶிதபந்தாநௌஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ) இதிநாராயணீயே நாமநிர்வசநாத்யாயே. "கருவுள்வீற்றிருந்து" என்றதுக்குபாவம் (இன்ன ஆசநத்தையித்யாதி) "வீற்றிருந்து" என்றதுக்கு - பரபாகத்தால்வந்த வழகாகபாவாந்தரம் (பொற்குப்பியிலித்யாதி) (பொற்குப்பியில்மாணிக்கம்போலே-தன்னைஶ்வர்யத்தாலுள்ள மேன்மைதோன்றவிருந்தபடி) என்றந்வயித்துக்கொண்டு ஏகதாத்பர்யமாகவுமாம்.

"தனிநாயகமவை" - ஐஶ்வர்யப்ரகாசகமான வந்தகுணசேஷ்டிதங்களையென்று சப்தார்த்தம். "நெக்கு" - நெகிழ்ந்து.

"அடியேன்-என்செய்கேன்" என்றுகூட்டிபாவம் (பரதந்த்ரனைவித்யாதி) "அருவிசோருங்கண்ணீர்-என்செய்கேன்" என்றுகூட்டிபாவம் (வேறொன்றுலேயித்யாதி) க்ரமேணுந்வயஃ...........................................*

# ஒன்பதாம்பாட்டு.

---

அடியைமூன்றையிரந்தவாறுமங்கேநின்றாழ்கடலுமண்ணும்விண்ணு
முடியவீரடியான்முடித்துக்கொண்டமுக்கியமு
நொடியுமாறவைகேட்குந்தோறுமென்னெஞ்சநின்றனக்கேகரைந்துகுங்
கொடியவல்வினையேனுன்னையென்றுகொல்கூடுவதே.

## ஆறாயிரப்படி.

(அடியை) மஹாபலிபக்கலிலே மூன்றடியையிரந்தபடியும், அங்நிலையிலேநின்றே யிரண்டடியாலே த்ரைலோக்யத்தையகப்படுத்திக்கொண்டு நீநினைத்தத்தைமுடித்துக்கொண்ட வேண்டப்பாடும், அவற்றைச் சொல்லக்கேட்குந்தோறு மென்னுடைய வந்த:கரண முன்னுடையப்ரஸ்தாவமாத்ரத்திலே கரைந்துகும். உன்னையநுசந்தித்தால் சிதிலனாகைக்கீடான மஹாபாபத்தைப்பண்ணின நான் உன்னை யென்று தரித்தநுபவிப்பதென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அர்த்தியாயிரந்து மபேக்ஷிதம் தலைக்கட்டிக்கொண்ட வுன்னுடைய வபதாநங்களைக் கேட்குந்தோறெல்லா மென்னெஞ்சுருகாநின்றது, ஸ்த்திரசித்தனாம்படி யுன்னைக்கூடுவதென்றென்கிறார்.

த்ரைலோக்யத்தையு மபேக்ஷியாதே, மூன்று-மூன்று. அடியை-அடியை. இரந்த - "தரவேணும்" என்று அவன்மறாதபடி அபேக்ஷித்த. ஆறும்-ப்ரகாரமும். அங்கு-அவனிசைந்து உதகம்பண்ணின யஜ்ஞவாடந்தன்னிலே. நின்றே-நின்றே. ஆழ்-அகாதமான. கடலும்-சமுத்ரங்களையும். மண்ணும் - சப்தத்வீபையானபூமியையும். விண்ணும்-ப்ரஹ்மலோகபர்யந்தமான ஆகாசத்தையும். ஈரடியால் - இரண்டடியாலே. முடிய-முடியும்படியாக. முடித்துக்கொண்ட-தன்னினைவுதலைக்கட்டிக்கொண்ட. முக்கியமும்-ப்ராதாந்யமுமாகிற. அவை-அவற்றை. நொடியும் - சொல்லும். ஆறு-ப்ரகாரம். கேட்குந்தோறும்-கேட்குந்தோறும். என்-என். நெஞ்சம் - நெஞ்சானது. நின்றனக்கே-அவாப்தசமஸ்தகாமனாய்வைத்து ஆஸ்ரிதார்த்தமாக அர்த்தியான உன்னுடைய சீலஸ்வரூபத்திலே. கரைந்து-கரைந்து. உகும்-ஒழுகிப்போகாநின்றது. வல் - ஒருப்ராயச்சித்தஸாத்யமன்றியே. கொடிய-அநுபவித்துக்கழிக்கவொண்ணாதே. வினையேன்-அநிஷ்டாவஹமான, ப்ரேமரூபமாயிருக்கிற பாபத்தையுடையேனான நான். உடைகுலைப்படாதபடி நிலைநின்றநுபவிக்கும்படியாக, உன்னை - உன்னை. என்றுகொல்-என்றோ. கூடுவது-கூடுவது.

நொடிதல்-சொல்லுதல்..........................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

த்ரைவிக்ரமாபதாநத்தை யநுசந்தித்து அத்தாலே சிதிலனாகிற நானுன்னைத்தரித்து நின்றநுபவிப்பதென்றென்கிறார்.

(அடியைமூன்றையிரந்தவாறும்) இவையபேக்ஷிக்கமாட்டாதவன்றும் இவற்றின் ஹிதசிந்தைபண்ணுமளவேயோ, இவையுண்டானாலு

ருள

ம் சிறியத்தைப்பெரியது நலியாதபடி நோக்குவானவனென்கிறது. (அடியைமூன்றையிரந்தவாறும்) நேராய்ப்போகாமே மூன்றையிரந்தபடி. இரண்டடியிரந்தானாகி லவனைச்சிறைசெய்பவிரகில்லையே. (அங்கேநின்று) கடக்கநாலடிபோனானாகில் " க்ருத்ரிமம்பண்ணினான் " என்று அவனுக்கு வழக்குப்பேசலாமிறே. (ஆழ்கடலித்யாதி) இவருடையநெஞ்சைக்கரைக்கவடியிடுகிறபடி. பூம்யந்தரிக்ஷாதிகளடங்கலு மிரண்டடியிலேயடங்கும்படிக்கீடாக அளந்து தலைக்கட்டிக்கொண்டபடியும். (முக்கியமும்) முக்யமும். வேண்டப்பாடும். அதாவது-ஆஸ்ரிதார்த்தமாகப்பண்ணினவஞ்சனையால் வந்தவேண்டப்பாடிருக்கிறபடி. அன்றியே, ஸ்வவ்யதிரிக்தங்களும் தன்திருவடிகளின்கீழே யகப்படுகையாலே வந்தவேண்டப்பாடும் (நொடியுமாறித்யாதி) நொடிதல்-சொல்லுதல். திருவுலகளந்தருளின வ்ருத்தாந்தத்தை வ்யாசாதிகள் சொல்லாநிற்பர்கள், அவர்கள் சொல்லும் ப்ரகாரங்களைக் கேட்குந்தோறும். நான்சொல்லவேண்டா. ( என்னெஞ்சம்நின்றனக்கேகரைந்துகும் ) மஹாபலியைப்போலே ஔதார்யம் கொண்டாடுகிறேனல்லேன், இந்த்ரனைப்போலே ராஜ்யமாளுகிறேனல்லேன், என்னுடையமநஸ்ஸான துன்பக்கலிலே சிதிலமாய் மங்காநின்றது.

( கொடியவல்வினையேன் ) " [Grantha text] " ( யந்நாமஸங்கீர்த்தநதோமஹாபயாத்விமோக்ஷமாப்நோதி ) என்கிறபடியே - திருநாமசங்கீர்த்தநம் மஹாபாதகங்களையும் போக்குமென்று சொல்லாநிற்க, அதுதானே சைதில்யஹேதுவாம்படி மஹாபாபத்தைப்பண்ணினேன். (உன்னையென்றுகொல்கூடுவதே) உன்னைநான் தரித்தநுபவிப்பதென்றோ-அநுபவிப்பவந்துகிட்டுவதென்றோ.*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (அடியையித்யாதி) " அடியைமூன்றை " இத்யாதிகளையும், " என்னெஞ்சம் நின்றனக்கேகரைந்துகும். உன்னையென்றுகொல்கூடுவது "என்கிறபதங்களையும் கடாக்ஷித்தவதாரிகை (த்ரைவிக்ரமேத்யாதி) அபதாநம் - வ்ருத்தமானசேஷ்டிதம்.

கீழ்ப்பாட்டோடேசங்கதி (இவையபேக்ஷிக்கவித்யாதி) நேராய் - சமமாய். இரண்டடியிரந்தால் நேராய்ப்போமோவென்ன (இரண்டடியிரந்தானாகிலித்யாதி)

ரசோக்தி (இவருடையவித்யாதி) " முடிய " - (அடங்கும்படி) " முடித்துக்கொண்ட " - (தலைக்கட்டிக்கொண்ட) வேண்டப்பாடு-பெருமை.

" அல்ல " என்பது - ( திருவுலகளந்தருளின வ்ருத்தாந்தத்தை ) "நொடியுமாறு" - (சொல்லும்ப்ராகாரங்களை) " கேட்கும் " என்றதுக்குபாவம் (நான்சொல்லவேண்டாவென்று) நான்சொல்லவேண்டாவென்றது - * என்னெஞ்சுகுகைக்கு நான்சொல்லவேண்டா, கேட்டமாத்திரத்திலேயுருகுமென்றபடி. " நின்றனக்கே " என்கிற வவதாரணார்த்தம் (மஹாபலியையித்யாதி)

* கரைந்துருகைக்குஹேது கொடியவல்வினையென்று விவக்ஷித்து, திருநாமஸ்ரவணத்தாலேயுருகுகை பாபபலமோவென்ன(யந்நாமேத்யாதி)"𑌯𑌨𑍍𑌨𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌤𑌨𑌤𑍋 𑌮𑌹𑌾𑌭𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌂 𑌨𑌰𑌃 । 𑌸 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌾𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌹𑌰𑍋 𑌨𑍃𑌕𑍇𑌸𑌰𑍀 𑌮𑌮𑌾𑌸𑍍𑌤𑍁 𑌮𑌙𑍍𑌗𑌲𑍍𑌯𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑌯𑍇 𑌹𑌰𑌿𑌃" (யந்நாமஸங்கீர்த்தநதோமஹாபயாத்விமோக்ஷமாப்நோதிநஸம்ஸயம்நர: । ஸஸர்வலோகார்த்திஹரோந்ருகேஸரீமமாஸ்து மங்கல்யவிவ்ருத்தயேஹரி: ) இதிஸ்ரீவிஷ்ணுதர்மேமங்கல்யஸ்தவே. க்ரமேணார்வய: ......................................................................*

## பத்தாம்பாட்டு.

கூடிநீரைக்கடைந்தவாறுமமுதந்தேவருண்ணவசுரரை
வீடும்வண்ணங்களேசெய்துபோனவித்தகமு
மூடுபுக்கெனதாவியையுருக்கியுண்டிடுகின்றநின்றன்னை
நாடும்வண்ணஞ்சொல்லாய்நச்சுநாகணையானே.

### ஆறாயிரப்படி.

(கூடிநீரை) அசுரர்களோடே கூடிநின்று கடலைக்கடைந்தருளினபடியும்; அதின்பலமான அம்ருதத்தை தேவர்கள்புஜிக்க, அசுரர்களைத்தைவிடும்படியாக ஒருவடிவைக்கொண்டுபோன விஸ்மயமுமுள்ளே புக்கென்னாத்மாவையுருக்கி முடிக்கிறன. திருவநந்தாழ்வானோடு நித்யசம்ஸ்லேஷம் பண்ணுமாபோலே நானுன்னை பூர்ணமாக தரித்துநின்றநுபவிக்கும் விரகுசொல்லவேணுமென்கிறார்.......................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமாகவருந்தொழில்செய்துபகரித்த அம்ருதமதநவ்ருத்தாந்தங்களானவை யென்னைசிதிலமாக்காநின்றன, உன்னை நிலைநின்றநுபவிக்கும்படி யருளிச்செய்யவேணுமென்கிறார்.

கூடி - தேவாசுரர்களிருவரோடுங்கூடிநின்று. நீரை - க்ஷீரார்ணவஜலத்தை. மத்தும் கயிறுமாதாரமும்முதலான சம்விதாநங்களைப்பண்ணி, கடைந்த-கடைந்த. ஆறும்-ப்ரகாரமும். அமுதம்-அங்குத்தோற்றினவம்ருதமானது. தேவர்-தேவர்கள். உண்ண-உண்ணும்படி. அசுரரை-அசுரர்களை. வீடும்-விடுவிக்கும். வண்ணங்கள் - ப்ரகாரங்களையுடையஸ்த்ரீவேஷபரிக்ரஹாதிகளை. செய்துபோன-பண்ணிப்போன. வித்தகமும்-விஸ்மயநீயாகாரமும். ஊடு-உள்ளே. புக்கு-புக்கு. எனது-என். ஆவியை-ஆத்மாவை. உருக்கி-நீர்ப்பண்டமாகவுருக்கி. உண்டிடுகின்ற-க்ரஸித்துவிடாநின்றன. நஞ்சு-அநுபவவிரோதிகளை யழியச்செய்யும் விஷத்தையுடையனான. நாகம்-திருவநந்தாழ்வானோடே. அணையானே- நித்யஸம்ஸ்லிஷ்டனானவனே. நின்றன்னை - உன்னை. நாடும்-நித்யாநுபவம்பண்ணும். வண்ணம்-ப்ரகாரம். சொல்லாய்-அருளிச்செய்யவேணும் ..................................................................*

### ஈடு-பத்தாம்பாட்டு.

சமுத்ரமதநவைசித்ர்யத்தை யநுசந்தித்து சிதிலனாகாநின்றேன், உன்னைதரித்துநின்றநுசந்திக்கவல்லேனாம்படி விரகுசொல்லவேணுமென்கிறார்.

(கூடிநீரைக்கடைந்தவாறும்) "நாம் சமவிபாகம்பண்ணி புஜிக்கக்கடவோம்" என்று அசுரர்களோடேகூடி சமுத்ரத்தைக்கடைந்தபடியும். கடைந்துபிடித்துக்காணு மிவருடைய ஆவியையுருக்கிற்று. (அமுதம்தேவருண்ணவித்யாதி) பலவேளையிலேவந்தவாறே ப்ரயோஜநரூபமான அம்ருதத்தை யநுகூலவர்க்கமான தேவஜாதியேபுஜித்து, ஆசுரப்ரக்ருதிகள் "அம்ருதத்தைநாய்க்கிடு" என்று அத்தைவிட்டு அவர்கள் பின்தொடரும்படிக்கிடாக தர்ஸநீயமான ஸ்த்ரீவடிவைக்கொண்டுபோன விஸ்மயநீயமான செயலும். "[Grantha] (மாயயாமோஹயித்வாதாந் விஷ்ணுஸ்ஸ்த்ரீரூபமாஸ்த்திதঃ) "வானவரைப்பெண்ணாகியமுதூட்டும் பெருமானார்." கடைந்தவாற்றாலும், வித்தகத்தாலும். (ஊடுபுக்கு) தோற்புரையேபோகாதே மர்மத்திலேபுக்கு. (எனதாவியை) "[Grantha]" (அச்சேத்யோயமதாஹ்யோயம்) என்கிற ஆத்மவஸ்துவை. (உருக்கியுண்டிடுகின்றநின்றன்னை) த்ரவத்ரவ்யமாக்கி, முடித்துவிடாதேயொழிகிற வுன்னை. "புருஷோத்தமனிப்படிசெய்வதே" என்று இக்குணப்ரசங்கத்திலே சிதிலனாகாநின்றேன், தரித்தநுபவிக்கும்படி நல்விரகுசொல்லவேணும். உம்மைதரிப்பிக்கப்போமோ நம்மாலென்ன; ஒருவன் பரமபோகியாய்நின்று தரித்து உன்னை யநுபவிக்கப்பண்ணிக் கொடுத்திலையோ; அப்படியேநானும் தரித்துன்னையநுபவிக்கும்படிபண்ணியருளவேணும்.

## ஜீயர்அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (கூடியித்யாதி) "கூடிநீரை" என்றுதொடங்கி "நின்றன்னை நாபெம்வண்ணம் சொல்லாய்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (சமுத்ரமதநேத்யாதி)

"கூடி" என்றவிடத்திலே - "[Grantha]" (ஸந்தாநமஸுரைக்ருத்வாயத்நவந்தோம்ருதேபவ) இத்யாத்யநுசந்தேயம். தேவர்களுக்கு மசுரர்களுக்கும் பரஸ்பரசங்கதி யின்றிக்கேயிருக்க, கூடுகையாவதென்னென்ன; கார்யார்த்தமாகக்கூடியென்கிறார் (நாமித்யாதி) நீரை - சமுத்ரத்தை. "நீர்" என்று - சமுத்ரத்துக்கும்பேர். சாடு (கடைந்துபிடித்தித்யாதி) கடைந்து வெண்ணெயைப்பிடித் தருக்கவேணுமென்று சாடுவுக் கர்த்தம்; சமுத்ரத்தைக்கடைந் தம்ருதத்தை யெடுத்த செயலாலே யிவருடைய ஆவியையுருக்கி - யென்று ப்ரக்ருதார்த்தம்.

ப்ரயோஜநரூபமான-சாராம்சமான. "வீடும்" என்றது - விடுமென்றபடி. ஸ்த்ரீவடிவைக்கொண்டதுக்கு ப்ரமாணம் (மாயயேத்யாதி) "[Grantha] । [Grantha]" (மாயயாமோஹயித்வாதாந் விஷ்ணுஸ்ஸ்த்ரீரூபமாஸ்த்திதঃ। தாநவேப்யஸ்ததாதாயதேவேப்யঃ ப்ரததௌபுநঃ) இதிப்ரதமேம்ஸேநவமே,

“உருக்கியுண்டிடுகின்ற - நின்றன்னை” என்று - அவனுக்கு விசேஷணம். வர்த்தமானநிர்த்தேசத்துக்கர்த்தம் (த்ரவத்ரவ்யமித்யாதி) உருக்கும் ப்ரகாரத்தைக்காட்டுகிறார் (புருஷோத்தமனித்யாதி) அதாவது - “நச்சுநாகணையான்” என்று-சர்வாதிகத்வம் சூசிதமாகையாலே, “புருஷோத்தமனிப்படி ஸ்த்ரீரூபத்தை பஜிப்பதே” என்று சிதிலனாகாநின்றேனென்றபடி.

நச்சுநாகணையானே, கூடிநீரைக்கடைந்தவாற்றாலும், அமுதமென்றுதொடங்கி, வித்தகத்தாலும் ஊடுபுக்கென்றுதொடங்சி, உண்டிடுகின்ற நின்றன்னைநாடும் வண்ணம் சொல்லாயித்யந்வய:......................................*

# பதினொன்றாம்பாட்டு.

நாகணைமிசைநம்பிரான்சரணேசரணமக்கென்றுநாடொறு
மேகசிந்தையனாய்க்குருகூர்ச்சடகோபன்மாற
னாகநூற்றவந்தாதியாயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லார்
மாகவைகுந்தத்துமகிழ்வெய்துவர்வைகலுமே.

## ஆறாயிரப்படி.

(நாகணைமிசை) சரணம்புக்காரை யெம்பெருமானுபேக்ஷிக்க நினைக்கிலு முபேக்ஷிக்கவொட்டாதே விஷயீகரிக்கப்பண்ணும் ஸ்வபாவனான திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்து, ஆஸ்ரிதவிஷயத்தி லுபகாரகனாயிருந்துள்ள வெம்பெருமானுடைய திருவடிகளே நமக்குசரணமென்று நாள்தோறு மிதொருமநோரதமேயுடையரான வாழ்வார், தாமுளராகைக்காக பகவத்குண ப்ரேரிதராய்க்கொண்டுசொன்ன வாயிரத்திலு மிப்பத்தும்கற்றார், ஸ்ரீவைகுண்டத்திலேபோ யெம்பெருமானை நித்யாநுபவம்பண்ணப்பெறுவ ரென்கிறார் ......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குபலமாக பரமபதத்தி லாநந்தப்ராப்தியையருளிச்செய்கிறார்.

நாகணைமிசை-திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின. நம் - நம்முடைய. பிரான்-ஸ்வாமியானவன். சரணே-திருவடிகளே. சரண்-உபாயம். நமக்கு-நமக்கு. என்று-என்று. நாடொறும்-என்றுமொக்க. ஏகசிந்தையனாய் - மநோரதத்தையுடையராய்க்கொண்டு. குருகூர்ச்சடகோபன்மாறன்-ஆழ்வார். ஆக-தாமுளராகைக்கு. நூற்ற-அருளிச்செய்த. அந்தாதி-அந்தாதியான. ஆயிரத்துள்-ஆயிரத்துள். ஓர்-அத்விதீயமான. இவை-இவை. பத்தும்-பத்தையும். வல்லார்-அப்யசிக்கவல்லவர்கள். மாகம்-பரமாகாசமான. வைகுந்தத்து-ஸ்ரீவைகுண்டத்திலே. வைகலும்-யாவதாத்மபாவியானகாலமெல்லாம். மகிழ்வெய்துவர்-ஆநந்தநிர்ப்பரராயிருக்கப்பெறுவர்கள்.

நூற்கை ௨ பண்ணுகை......................................................*

இது - ஆசிரியத்துறை.

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இப்பத்தும்கற்றார் பரமபதத்திலேபோய் நித்யாநுபவம்பண்ணப்பெறுவரென்கிறார்.

( நாகணையித்யாதி ) திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய சர்வேஶ்வரன்றிருவடிகளே நமக்குபாயம் என்று. அநந்தசாயித்வம்-சர்வாதிகவஸ்துவுக்கு லக்ஷணமாகையாலே, சர்வாதிகனே சரண்யனென்கிறது. (திருவநந்தாழ்வானுடைய புருஷகாரபாவம் சொல்லுகிறதென்றுமாம்.) இவனுடையவுபாயபாவத்தில் புருஷகாரமாகவல்லார் அவள் பரிகரத்திலுள்ளாராகாதே. படுக்கைகிடப்ப தந்தஃபுரத்திலேயிறே. ( நம்பிரான்) ஆஶ்ரிதவிஷயத்தி லுபகாரசீலனானவன். (சரணேசரண்—என்று) அவதாரணத்தாலே – உபாயநைரபேக்ஷ்யஞ்சொல்லுகிறது. சாம்சாரிகஸ்வபாவங்கள் மேலிட்டு விபரீதமே பலியாநின்றாலு மப்படியடிக்கழிவு செய்வாரொருவரல்லரேயிவர். இதொழிய வேறொன்றில் கால்தாழாதொழிகை – மஹாவிஶ்வாசமாகிறது. இத்தால் - ⁕ ஏகபதத்திலர்த்தம் சொல்லுகிறது ( நாடொறுமேகசிந்தையனாய் ) புறம்புண்டானசிந்தனை போய், இவ்விஷயத்திலே யேகாகாரமான மநோரதமுடையராய். அர்த்தார்ஜநம்பண்ணப்போவாரொரு சிராயைவிஶ்வசித்து நாலாண்டுபெதிற்றுண்டிழியாநின்றார்களிறே, பேற்றின்சீர்மையைப்பார்த்தா லவ்வளவாகிலும் வேண்டாவோ இவ்விஷயத்தில். சம்சாரஸ்வபாவத்தால் வ்யஸநபரம்பரைகள் வந்தாலும் வ்யவசாயங்குலையாமே போருமதிறே ஸ்வரூபமாவது. (குருகூர்ச்சடகோபன்மாறன்) அதுக்கெல்லாவற்றுக்கு மடியான பிறப்பிருக்கிறபடி. (ஆகநூற்றவந்தாதி) தாமுளராகைக்காகச்சொன்னவந்தாதி யாயிரத்திலு மிப்பத்தையு மப்யசிக்கவல்லார். ( மாகமித்யாதி ) மஹாகாசமென்று பேரையுடைய ஸ்ரீவைகுண்டத்திலே. (வைகலும் – மகிழ்வெய்துவர்) காலதத்த்வமுள்ளதனையும் நித்யாநுபவம்பண்ணப்பெறுவர். “ அநுசந்தாநத்துக்கு விச்சேதம்வாராதபடி பண்ணியருளவேணும்” என்று ப்ரார்த்திக்கவேண்டும்படியான சம்சாரத்தைவிட்டு, பகவதநுபவத்துக்கு விச்சேத மொருநாளுமில்லாத பரமபதத்திலே புக்கநுபவிக்கப்பெறுவர். மாவென்று-மஹத்தை. கம்என்று-ஆகாசம்.⁕

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (நாகணையித்யாதி) “இப்பத்தும் வல்லார்மாகவைகுந்தத்து” இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்பத்தும்கற்றாரித்யாதி ) சப்தார்த்தம் ( திருவநந்தாழ்வானித்யாதி ) அவனை யுபாயமாக ஸ்வீகரிக்கும்போது த்வயத்திற்போலேபுருஷகார புரஸ்ஸரமாகவேண்டாவோவென்ன; அதுவுமுண்டென்கிறார் (இவனுடையவித்யாதி) இத்தால் - திருவநந்தாழ்வானே புருஷகாரமென்றுகருத்து. இவன்பிராட்டிபரிகரமோவென்ன (படுக்கையித்யாதி) “ சரணே ” என்கிறவவதாரணத்துக்கிரண்டர்த்தம் - உபாயநைரபேக்ஷ்யமாதல், தம்முடைய மஹாவிஶ்வாஸமாதல், மு

ந்தினவர்த்தம் ( சரணௌசரணித்யாதி ) இரண்டாமர்த்தம் ( சாம்சாரிகேத்யாதி ) விவரணம் (இதொழியவித்யாதி)மூந்தினவர்த்தவிவரணம்(இத்தாலேகபதேத்யாதி)

இத்தனையருமையுண்டானால் "மித்ரபாவேந" (மித்ரபாவேந)என்றும், "தொழுது - என்னுமிதுமிகை" என்றும் - ப்ரபத்தியை சூசகமாகச்சொல்லுவானென்னென்ன (அர்த்தார்ஜநேத்யாதி) சிராய் - மரச்சக்கை. ஆத்தால்-கப்பலைச்சொல்லுகிறது. "ஈரொடாறுமேகசிந்தையனாய்" என்றத்தால்பலிதம் ( சம்சாரஸ்வபாவத்தாலித்யாதி ) இத்தால் - இது ஸ்வரூபமாகையாலே சாதநத்தி லந்வயியாதென்றபடி. "குருகூர்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (அநகெல்லாவற்றுக்குமித்யாதி)

"ஆக" - (தாமுளராகைக்காக) "நூற்ற" - (சொன்ன)

"மாகவைகுந்தம்" என்ற புநருக்திபரிஹாரம் (பேறையுடையவென்று) இத்திருவாய்மொழியின் ப்ரமேயாநுகுணமாக பலமருளிச்செய்கிறார் (அநுசந்தாநத்துக்கித்யாதி) "வைகலும்" என்றபதத்துக்குவாசகை (பகவதநுபவத்துக்கித்யாதி) வைகலும் - யாவத்காலமும். மகிழ்வெய்துவர் - ஆநந்தத்தையடைவர்களென்று சப்தார்த்தம் மகிழ்ச்சி - ஆநந்தம். எய்துகை-ப்ராபிக்கை............... ...............*



# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( பிறந்தவாறும். )

ப்ராதுர்பாவாதிவ்ருத்தைர்வ்ருஷகணதமநாத்பூதநாஶோஷணாத்யைர்மோஹார்த்தம்பௌத்தக்ருத்யைர்கிரிவரபஜநஸ்வீக்ருதேஸ்ஸ்தாநபேதை: । ஸ்வேச்சாஜ்ஞாநாதிஸாம்யஜ்வலிதஶயநாதிக்ஷணாத்யைஶ்ச ஸ்வஜ்யா: ஸ்வீயத்ராணைகஸக்தோநாதைஸ்ஸ்ஸ்ப்ரியதி ஹரிஸ்ஸ்வீயஹ்ருத்வேஷ்டதத்ஸமயோவே. (௫௮)

( ப்ராதுர்ப்பாவாதிவ்ருத்தை: ) பிறந்தவாறும் வளர்ந்தவாறும் - ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாய்வந்து பிறந்தொளித்துவளர்ந்தப்ரகாரங்களாலும் ; (வ்ருஷகணதமநாத்) வதுவைவார்த்தையுளேறுபாய்ந்ததும் - வ்ருஷபங்களேழையும் வருத்தமற மர்த்திக்கையாலும் ; (பூதநாஶோஷணாத்யை:) பெய்யும்பூங்குழலித்யாதி-பூதநாஶகடாசுர நிரஸநநவநீதசௌர்யாதிகளாலும்; (மோஹார்த்தம் பௌத்தக்ருத்யை:) கள்ளவேடத்தைக்கொண்டுபோயித்யாதி- அசுரமோஹநார்த்தமாக புத்தனாயவதரித்துப்பண்ணின க்ருத்ரிமவ்யாபாரங்களாலும்; (கிரிவரபஜநஸ்வீக்ருதே:) உண்ணவானவரித்யாதி - கோபவ்ருத்தர்கள் கோவர்த்தநத்தைப்பூஜிக்க, அந்தபூஜையைத்தானே ஸ்வீகரிக்கையாலும்; (ஸ்தாநபேதை:) நின்றவாறுமிருந்தவாறுமித்யாதி - திருமலையிலேநின்றபடியும், பரமபதத்திலேயிருந்தபடியும், திருப்பாற்கடலிலேகிடந்தபடியும்; அதவா, "அவஷ்டப்ய திஷ்டந்தம்" (அவஷ்டப்யசதிஷ்ட்டந்தம்) என்கிறபடியே வாலிவதாநந்தரம் நின்றபடியும், "உடஜேராமமாஸீநம்" (உடஜேராமமாஸீநம்) என்கிறபடியே பர்ணசாலையிலேயிருந்தபடியு

ம், "ப்ரதிஶய்யேமஹோததே꞉" (ப்ரதிஶிய்யேமஹோததே꞉) என்கிறபடியே கடற்கரையிலேகிடந்தபடியும்; அதவா, திருக்குரவையிலே ஸ்ரீகோபிமாரோடேநின்றபடியும், அவர்களோடேயிருந்தபடியும், அவர்கள்மடியிலே சாய்ந்தபடியும், ஏவம்ரூபவ்யாபாரங்களாலும்; (தேஜோத்வாந்தாதிபாவாத்) ஒண்சுடரோடிருளுமாயித்யாதி - ஆலோகாந்தகார பாவத்தாலும், ஆஶ்ரிதர்க்கு மெய்யனாகவு மநாஶ்ரிதர்க்குப்பொய்யனாகவு மிருக்கையாலும்; (ஜலநிதிஶயநாத்) திருவுருவுகிடந்தவாறும் - அழகியவடிவோடே ஏகார்ணவத்திலே சயிக்கையாலும்; (பிக்ஷணாத்யைஸ்த்ரிபத்யா꞉) அடியைமூன்றை யிரந்தவாறுமித்யாதி-வாமநரூபத்தைக்கொண்டு மஹாபலியினிடத்திலே மூன்றடியையிரந்தபடியாலும், அந்நிலையில்தானே த்ரிவிக்ரமனாய் த்ரைலோக்யத்தையு மிரண்டடியாலே யகப்படுத்திக்கொண்ட சாமர்த்யத்தாலும்; (பீயூஷஸ்பர்ஶநாத்யை꞉) கூடிநீரைக்கடைந்தவாறு மித்யாதி-தேவாசுரர்களோடேகூடிநின்று திருப்பாற்கடலைக்கடைந்தபடியாலும், அங்குண்டானவம்ருதத்தை தேவர்கள் புஜிக்க அசுரர்களவற்றைவிட்டுத் தன்வடிவழகைக்கண்டு பின்றொடரும்படிபோன விஸ்மயத்தாலும், எம்பெருமானாஶ்ரிதருடைய ஹ்ருதயத்தை சிதிலமாக்காநிற்கிறானென்று "பிறந்தவாறும்" என்கிறதசகத்திலே ஆழ்வார் ப்ரதிபாதித்தருளினாரென்கிறார்............................................ ......(௫௮)

இத்த²ம் காருண்யநிக்⁴ந꞉ ஸ்வவிரஹஜநம் ப்ரேமதீவ்ரம் ஸ்வஹாநம்,
யோகாநாம் ரக்ஷிதாரம் ஸ்ம்ருதிவிஷயஸஹம் ஸாவநாஶோவஶ்ய꞉ । தீநாநாம்
ஸத்³ய꞉ ஶரண்யம் ஸ்வரஸக்ருத நிஜப்ரேஷ்யதாவாத்³ அத்யந்த ப்ராப்தம் ஸக்தி
ஸம் ஶ்ரீவத்ஸாங்கம் ஸகலஶ்ரேயஸாமேகஹேதும். (௫௯)

இப்படி பஞ்சமசதகத்திலே பத்துதசகத்தாலும் ப்ரதிபாதிதங்களானவர்த்தங்களை சங்க்ரஹித்தருளுகிறார்.

நிரவதிககாருண்யத்தையுடையனுமாய், ஸ்வகீயஜநங்களாலே ஜகத்தில் ஆஶ்ரிதங்களையெல்லாம் சமிப்பிக்குமவனாய், ஆஶ்ரிதர்க்கத்யந்தப்ரேமத்தையுண்டாக்குமவனாய், ஜகத்ரக்ஷணஜாகரூகனுமாய், விஶ்லேஷசமயத்திலும் மறக்கவொண்ணாதபடி திவ்யாயுத திவ்யாபரண திவ்யாவயவங்களோடேகூட ஸ்ம்ருதிவிஷயனுமாய், அநுகரித்து தரிக்கைக்காக வஹம்புத்தியாலே யநுபாவ்யனுமாய், அசரணசரண்யனுமாய், ஆஶ்ரிதர்க்கு ஸ்வரஸமாக தாஸ்யரசத்தைப்பண்ணுமவனாய், அத்யந்தசந்நிஹிதனுமாய், அநுபவப்ரதிபந்தகமநஸ்ஸைதில்யவிரோதிசக்திப்ரதனுமான வெம்பெருமானை, சகலஶ்ரேயஸ்ஸுக்களுக்கும் ப்ரதாநோபாயமாக பஞ்சமசதகத்திலே யாழ்வார் ப்ரதிபாதித்தருளினாரென்கிறார் ....... ................................ (௫௯)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

பிறந்துலகங்காத்தளிக்கும்போருட்கண்ணாவுன்
சிறந்தகுணத்தாலுருகுஞ்சீலத் - திறந்தவிர்ந்து
சேர்ந்தநுபவிக்குநிலைசெய்யென்றசீர்மாறன்
வாய்ந்தபதத்தேமனமேவைகு. (௫௰)

(பிறந்துலகம்) இதில் - "அவதாரசேஷ்டிதங்களை தரித்துநின்றநுபவிக்கும் படி பண்ணவேணும்" என்றுபேசினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழ் - ஸ்த்தாநத்ரயத்திலும் தம்மபேக்ஷிதங்கிடையாமையாலே, "'அர்ச்சாஸ்த்தலங்களி லாஶ்ரிதர்நினைவுக்கீடாக ஆலோகாலாபாலிங்கநாதிகளான வநுபவவிசேஷங்களை யுபகரித்தருளக்கடவோமல்லோம்' என்று அவன் சங்கல்பித்தருளுகையாலேயாயிருக்கும் நம்மபிமதம் சித்தியாதொழிந்தது; அவன்சங்கல்பம் குலையும்படி அங்குநிர்ப்பந்திக்கக்கடவோமல்லோம், ஆஶ்ரிதர்நினைவறிந்து முகங்கொடுத்தநுபவிப்பித்த வவதாரத்திலேசெல்லுவோம்" என்று க்ருஷ்ணாவதாரத்திலே யநுபவிப்பதாகச்செல்ல; அதுவும் கைகழிந்து தாம் பிற்பாடராய் அத்தாலே நொந்து, "அவ்வவதாரகுணசேஷ்டிதங்களையாகிலு மநுசந்தித்துதரிப்போம்" என்றுபார்த்தவிடத்தில், அவையும் விஶ்லேஷதசையிலே யநுசந்திக்கையாலே சைதில்யத்தைவிளைக்க, நான்தரித்துநின் றுன்குணசேஷ்டிதங்களை யநுசந்திக்கவல்லேனாம்படிபண்ணி யருளவேணுமென்று சரணம்புகுகிற * பிறந்தவாற்றிலர்த்தத்தை "பிறந்துலகங்காத்தளிக்கும்" என்றருளிச்செய்கிறாரென்கை.

(பிறந்துலகங்காத்தளிக்கும்பேரருட்கண்ணா) * மண்ணின்பாரம்நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தபிறவியை "பிறந்தவாறும்" என்றீடுபடும்படி யவதரித்ததும், மற்றும் * கள்ளவேடத்தைக்கொண்டுபோய்ப்புரம்புக்கவாறும், * சிறாற்பிறந்துசிறைப்பால்வளராதே அன்றே பிறந்தன்றேவளர்ந்து * அடியை மூன்றையிரந்தவாறும், அம்ருதமதநார்த்தமாகவாவிர்ப்பவித்து * கூடிநீரைக்கடைந்தவாறும் என்றிப்படி பூபாரநிர்ஹரணார்த்தமாகவும் த்ரிபுரதஹநார்த்தமாகவும் த்ரைலோக்ய ஹரணார்த்தமாகவு மம்ருதமதநார்த்தமாகவு மவதரித்து ஜகத்தைரக்ஷித்து நோக்கிப்போரும் நிரவதிக க்ருபாவானானக்ருஷ்ணனே. கீழே, "நல்லருணம்பெருமான்" என்றாரிறே. இப்படி நிரவதிகதயாவானான (உன்சிறந்தகுணத்தாலுருகும் சீலத்திறந்தவிர்ந்து) உனக்கநுரூபமான கல்யாணகுணாநுசந்தாநத்தாலே த்ரவீபூதனும் ஸ்வபாவப்ரகாரம் நிவ்ருத்தமாய். (சேர்ந்தநுபவிக்கும்நிலைசெய்) உன்னைக்கிட்டியநுபவிக்கும்படியாக ஸ்த்தைர்யத்தைச்செய்தருளவேணும். அதாவது - "பிறந்தவாறு" என்று தொடங்கி, "நிறந்தனூடுபுக்கெனதாவியைநின்றுநின்றுருக்கியுண்கின்ற," "என்னையுன்செய்கைநைவிக்கும்," "பையவேநிலையும் வந்தென்னெஞ்சை யுருக்குங்களே," "வெள்ளநீர்ச்சடையானும்" என்றுதொடங்கி, "என்னுயிரையுருக்கியுண்ணுமே," "உண்ணவானவர்கோனுக்கு" என்றுதொடங்கி, "என்னெஞ்செரிவாய்மெழுகொக்குநின்றே," "த்ருஷ்டாந்தம்," (திஷ்ட்டாந்தம்,) "ஆஸீநம்," (ஆஸீநம்,) "ப்ரதிஶிஶ்யே," (ப்ரதிஶிஶ்யே,) என்னும்படி, "நின்றவாறும்" இத்யாதி, "நின்றுநின்றுநினைகின்றேனுன்னையெங்ஙனநினைகிற்பன்," "ஒண்சுடரோடு" என்றுதொடங்கி, "எண்கொள்சிந்தையுள்நைகின்றேன்," "திருவுருவு கிடந்தவாறும்" என்றுதொடங்கி, "என்னெஞ்சம்நின்றுநெக்கருவிசோருங்கண்ணீர்," "அடியைமூன்றையிரந்தவாறும்" என்றுதொடங்கி, "என்னெஞ்சம்நின்

றனக்கே கரைந்துகும்," "கூடிநீரைககடைந்தவாறும்" என்றுதொடங்கி, "ஊடுபு
க்கெனதாவியை யுருக்கியுண்டிடுகின்ற" எனறும்சொல்லப்படுகிற வினைநிவ்ருத்த
மாய்; "உன்னையென்றுகொல்சேர்வதுவே," "உன்னையெனறுதலைப்பெய்வனே,"
"பாவியேற்கொன்று நன்குரையாய்," "என்செய்கேனடியேனே" "கொடியவ
லவினையேனுன்னையென்றுகொல்கூடுவதே," "நினறன்னைநாடும் வண்ணம் சொல்
லாய நச்சுநாகணையானே" - நானெனறுதரித்துநின்றுன்னை யநுபவிக்கபெறுவே
னெனறவையென்கை, (சோநதநுபவிக்குநிலைசெய்யென்றசீமாறன்) "நாகணைமி
சைநம்பிரான்சரணேசரணமக்கு" என்று - தாமதரிதது நின்றநுபவிக்கும்பரகாரம்
பண்ணி யருளவேணுமென்றாதகிதத, ஜ்ஞாநாதிகுணங்களை யுடையரான வாழ்வா
ருடைய (வாய்நதபததததே) பரஸபர ஸதருஸமாய்ப்பொருநதியிருக்கிற திருவடிக
ளிலே. (மனமேவைகு) மநஸ்ஸேதஙகிபபோரு ஆவாககு * நாகணைமிசைநம்பிரா
ன சரணேசரணுறைபபோலே, உனக்கு மாழவாாதிருவடிகளே ப்ராப்தமெனறங்
கே - கிடபோரு (௫௦)

பெரியஜீயா திருவடிகளேசரணம்.

---

ஐந்தாமபததில பததாந திருவாயமொழி முற்றிறறு.

ஆக திருவாயமொழி - ௫௦.—பாட்டு - ௫௫௨

---

**ஐந்தாம்பத்து ஸமாப்தம்.**



